டாக்டர் பாபாசாகேப்

# அம்பேத்கர்:

## பேச்சும் எழுத்தும்

நூல் தொகுப்பு:

## தொகுதி 37



**டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்**

தோற்றம் : ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

''எனது சமூக சித்தாந்தம் மூன்று சொற்களில் அடங்கியுள்ளது என்று கூறலாம்; சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவையே அந்த மூன்று சொற்கள். எனினும் என் சித்தாந்தத்தை பிரெஞ்சுப் புரட்சியிலிருந்து நான் கடன் வாங்கிவிட்டதாக யாரும் எண்ண வேண்டாம். அது உண்மை அல்ல. எனது சித்தாந்தத்தின் ஆணிவேர் மதத்தில் வேரூன்றி யிருக்கிறதே தவிர அரசியல் விஞ்ஞானத்தில் அல்ல. எனது மாபெரும் குருவான புத்தரின் போதனைகளிலிருந்தே இவற்றை நான் பெற்றேன். புத்தரின் சித்தாந்தத்தில் சுதந்திரமும், சமத்துவமும் முக்கிய இடம்பெற்றுள்ளன; ஆனால் வரைமுறை யற்ற சுதந்திரம் சமத்துவத்தை அழித்து விடுகிறது; அதேபோல் பரிபூரண சமத்துவம் சுதந்திரத்துக்கு இடம் தருவதில்லை. சுதந்திரமும் சமத்துவமும் மீறப்படாதிருப்பதற்கான ஒரு பாதுகாப்பாகத்தான் அவரது தத்துவத்தில் சட்டம் இடம் பெற்றுள்ளது; ஆனால் அதேசமயம் சுதந்திரம் அல்லது சமத்துவம் மீறப்படாதிருப்பதற்கு சட்டம் ஓர் உத்தரவாதமாக இருக்கும் என்று அவர் நம்பவில்லை. சுதந்திரம் அல்லது சமத்துவம் மீறப்படாதிருப்பதற்கு சகோதரத்துவம்தான் ஒரே உண்மையான உத்தரவாதமாக இருக்க முடியும் என்று கூறி அவர் சகோதரத்துவத்துக்கு மிக உயர்ந்த, மிக உன்னதமான மதிப்பு தந்தார். சகோதரத்துவம் என்பது தோழமையின் மறு பெயராகும். இதற்கு இன்னொரு பெயரும் உண்டு. அதுதான் மதம் என்பது'' (பக்கம் 503).

- டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்

This Volume XXXVII in Tamil forms English Edition Volume 17 Part III of Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - Published by the Education Department, Government of Maharashtra, 1992.

**Dr. BABASAHEB AMBEDKAR**
**SPEECHES AND WRITINGS**



Year : August, 2005

Language : Tamil

Volume No. : 37

Price : Paperback - Rs. 40/-
Cloth bound - Rs. 135

Publishers : **Dr. AMBEDKAR FOUNDATION,**
Ministry of Social Justice and Empowerment,
Govt. of India,
15, Janpath, New Delhi - 110 001.

Distributors : **NEW CENTURY BOOK HOUSE (P) LTD.,**
41-B, SIDCO Industrial Estate,
Ambattur, Chennai - 600 098.

Printers : **PAVAI PRINTERS (P) LTD.,**
142, Jani Jan Khan Road,
Royapettah, Chennai - 600 014.
Ph: 28482441, 28482973.

This Volume XXXVII in Tamil forms English Edition Volume 17 Part III of **Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - Published by the Education Department, Government of Maharashtra,** 1992.

முதற் பதிப்பு : ஆகஸ்டு, 2005
பார்த்திப ஆண்டு, ஆடி-ஆவணி



**விலை : ரூ. 40/-**

**நூலகப் பதிப்பு : ரூ. 100/-**

வெளியீட்டாளர்:

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்
சமூக நீதி மற்றும் உரிமையளிப்பு அமைச்சகம்
இந்திய அரசு,
15, ஜன்பத் சாலை,
புதுடில்லி.

**விற்பனை நிலையம்:**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,
41B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை -98.

அச்சிட்டோர்:

பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,
142, ஜானி ஜான் கான் சாலை,
ராயப்பேட்டை, சென்னை - 600 014.
தொலைபேசி: 28482441, 28482973

# ஆலோசனைக் குழு

**மாண்புமிகு திருமதி மீராகுமார்**
*சமூக நீதி மற்றும் உரிமையளிப்புத்துறை அமைச்சர்,*
*இந்திய அரசு*

**திரு. எஸ்.கே. தாஸ்**
இயக்குநர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி

***நிர்வாக ஆசிரியர் (தமிழ்):***
***ரா. ரங்கசாமி (மாஜினி)***
சென்னை, தமிழ்நாடு

ஆங்கில நூல் வெளியீடு:

***கல்வித்துறை,***
***மகாராஷ்டிர மாநில அரசு, 1992***

ஆங்கில நூல் தொகுப்பாளர்:

***திரு. வஸந்த் மூன்***
*மும்பை*

தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்:

***திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)***

மொழிபெயர்ப்பாளர்கள்:

***முனைவர் அ. இளங்கோவன்***
***திரு. ஆர். பார்த்தசாரதி (கல்பனாதாசன்)***
***திரு. வி. சண்முகசுந்தரம்***
***திரு. எஸ். சோமசுந்தரம்***
***திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)***

ஒப்புநோக்கியோர்:

***திரு. ஏ.எஸ். மணி***

பிழைதிருத்த உதவி:

***திரு. வி. சண்முகசுந்தரம்***

# அணிந்துரை

டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கரின் பேச்சும் எழுத்தும் கொண்ட ஆங்கில நூலின் பதினேழாவது தொகுதியின் மூன்றாவது பாகத்தை தமிழில் 37-வது தொகுதியாக வெளியிடுவதில் மிகுந்த பெருமிதமும் மகிழ்ச்சியும் அடைகிறோம். இந்தத் தொகுதி பல வகைகளில் சிறப்புற்று விளங்குகிறது. இத்தொகுதியில் டாக்டர் அம்பேத்கர் சமுதாய முன்னேற்றத்துக்குப் பயன்மிக்க பல அரிய கருத்துகளை முன்வைக்கிறார். ஒரே நாடு, ஒரே அரசியலமைப்புச் சட்டம், ஒரே கதிப்போக்கு என்ற உணர்வால் மக்கள் உந்தப்பட்டு, ஊக்குவிக்கப்பட்டு, விழிப்புணர்வு கொண்டு, முன்னேற்றம் என்னும் ராஜபாட்டையில் அடியெடுத்து வைத்து, ஏறுநடை போட்டுச் செல்ல வேண்டும் என அவர் வலியுறுத்துகிறார். நாடும் வீடும் மக்களும் நல்வாழ்வு பெறுவதற்கு அரசிய லமைப்பு ரீதியான பாதுகாப்புகளையும் உத்தரவாதங்களையும் பெற வேண்டும் என்று அவர் விண்டுகாட்டுகிறார். இதன் பொருட்டு அயராது, சோராது, விழிப்போடு, உத்வேகத்தோடு போராட வேண்டும் என்று உள்ளங்கை நெல்லிக்கனியெனச் சுட்டிக் காட்டுகிறார். அதிகாரமும் நன்மதிப்பும் போராட்டத் தின் வாயிலாகவே கிட்டும் என்று எடுத்துரைக்கிறார். கௌதம புத்தர், ராமானுஜர் போன்ற மாமேதைகள் நடத்தி வந்துள்ள வீரஞ்செறிந்த அறப்போராட்டத்தை இவ்வகையில் உங்கள் நெஞ்சிலே நிலைக்க வையுங்கள் என்ற அறிவுறுத்துகிறார். நாம் போர்க்குணமிக்க இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை மறந்துவிடாதீர்கள் என்று சுட்டிக்காட்டுகிறார். அரிய, உயரிய கருத்துப் பெட்டகமாகத் திகழும் இத்தொகுதியை தமிழ் வாசகர்கள் மிகவும் பயனுள்ள ஒன்றாக ஏற்றுப் பயனடைவர் என்று நம்புகிறோம்.

(ஒப்பம்) **திருமதி மீராகுமார்**
இந்திய அரசு சமூக நீதி மற்றும்
உரிமையளிப்புத்துறை அமைச்சர்.

புதுடில்லி

## பதிப்புரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கில மொழியில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுதிகளை இந்தியிலும் தமிழ் உட்பட ஏனைய இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடும் பணியை இந்திய அரசின் நல அமைச்சகத்தைச் சேர்ந்த டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன் மேற்கொண்டு நிறைவேற்றி வருகிறது. இந்தப் பணி மக்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றிருப்பது மகிழ்ச்சி அளிப்பதாகும்.

டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசையில் 37வது தொகுதியை நாட்டு மக்களுக்கு அளிப்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம். உயர்ந்ததொரு லட்சியத்தை நோக்கி நம் நாடு செல்லும் பயணத்தில் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்கள் வழிகாட்டியாகவும் உறுதுணையாகவும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

ஆங்கில நூல்களைத் தமிழ் உட்பட இந்திய மொழிகளில் அளிப்பதில் முனைந்து பணியாற்றும் நிர்வாக ஆசிரியர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், ஒப்புநோக்குவோர், அச்சகத்தார் ஆகிய அனைவரும் நமது பாராட்டுதலுக்கு உரியவர்கள். இந்த அரிய பணியில் ஒத்துழைப்பு நல்கும் அனைவர்க்கும் நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

ஏனைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியையும் மக்கள் வரவேற்று ஆதரிப்பார்கள் என்று நம்புகின்றோம்.

**எஸ்.கே. தாஸ்**

புதுடில்லி.

**இயக்குநர்**

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

# தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர் உரை

டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கரின் பேச்சும் எழுத்தும் கொண்ட ஆங்கில தொகுதி 17 பாகம் III தமிழில் 37வது தொகுதியாக வெளியிடப்படுகிறது. பாரத ரத்னா டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஒரு சகலகலா வல்லவர்; பல அரிய திறமைகளின் பெட்டகமாகத் திகழ்ந்தவர்; சீரிய பண்புகளின் சுரங்கமாக விளங்கியவர்; நேரிய செயற்பாடுகளின் கருவூலமாக மிளிர்ந்தவர். சுருங்கச் சொன்னால் அவரை ஒரு நடமாடும் பல்கலைக் கழகம் என்ற கூறினால் அது மிகையாகாது. அவரது பேச்சும் எழுத்தும் கொண்ட இந்தத் தொகுப்புகள் இதற்கு அசைக்க மறுக்க முடியாத , ஆணித்தரமான சான்றுகளாகத் திகழ்கின்றன.

அவரது ஒவ்வொருத் தொகுப்பும் இந்த உண்மையை தெள்ளத் தெளிவாகப் புலப்படுத்துகிறது. ''டாக்டர் பி.ஆர். அம்பேத்கரும் அவரது அபேதவாத புரட்சியும்'' எனும் இந்தத் தொகுப்பை வாராது வந்த ஒரு வரப்பிரசாதம் எனலாம். அரசியல் சட்டரீதியான பாதுகாப்புகளையும் உத்தரவாதங் களையும் பெறுவதற்கு மக்கள் இணைந்து பிணைந்து துணிந்து போராட வேண்டும் என்று அவர் வலியுறுத்துகிறார். நாம் வீரதீர இனத்தைச் சேர்ந்தவர்கள் என்ற உண்மையை நினைவுப் படுத்தி, மேலும் மேலும் போராடுங்கள், வெற்றி கிட்டும் வரை அணுவளவும் பின்வாங்காதீர்கள் என்று உயரிய போதனையை நல்குகிறார். அதிகாரமும் செல்வாக்கும் போராட்டத்தின் மூலமே மக்களுக்குக் கிட்டும் என்று சிறந்த நிறைந்த அறிவுரையைப் பகர்கிறார். அதுமட்டுமல்ல, சமூக சீர்திருத்தத்துக்கு முன்னர் அரசியல் சீர்திருத்தம் நடைமுறைக்கு வந்தாக வேண்டும் என்ற ஒப்பற்ற உண்மையை இந்நூலைப் படிப்போர் உள்ளத்தில் பசுமரத்தாணி போல் பதியவைக்கிறார். ஆன்மீகப் பசியைவிட பொருளாயதப் பசியில் நாட்டம் கொள்ளுங்கள்; விதியை நம்பாதீர்கள், மாறாக உங்கள் மதியை நம்புங்கள் என்று மிக அற்புதமாக வலியுறுத்துகிறார். சுருங்கக் கூறினால் இந்தத் தொகுதி வாசகர்களின் சிந்தனையைப் பெரிதும் தூண்டி, அவர்களை முன்னேற்றப் பாதைக்கு இட்டுச் செல்கிறது என்பதில் அணுவள வும் ஐயமில்லை. ஆகவே, இதுவரை வெளிவந்துள்ள தொகுதி களுக்குப் பேராதரவு அளித்து வந்துள்ளதைப் போன்றே இந்தத் தொகுதியும் வாசகர்களால் பெரிதும் வரவேற்கப்படும் என்று நம்புகிறோம்.

**தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்**

# பொருளடக்கம்

## பின் இணைப்புகள்

# (1)

# மாபெரும் போராட்டம்

1927ஆம் ஆண்டு ஜனவரி முதல் தேதி, புத்தாண்டு நாள், கோரேகான் போர் நினைவகத்தில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் நடத்திய பேரணியுடன் தொடங்கியது.ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் முன்னணித் தலைவர்கள் இவ்விழாவில் கலந்து கொண்டனர்.

போர் நினைவகத்தில் நடைபெற்ற இவ்விழாவில் உரையாற்றிய டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், இவ்வகுப்புகளைச் சேர்ந்த நூற்றுக் கணக்கான வீரர்கள் கடந்த போரில் பிரிட்டிஷார் பக்கம் நின்று போராடியுள்ளார்களெனினும், நன்றி மறந்த பிரிட்டிஷார் இன்னும் போர்க்குணமற்ற இனத்தோர் என்றே ஒடுக்கப்பட்ட மக்களைக் குறிப்பிடுவதைக் கடிந்து பேசினார். மேல்சாதி இந்துக்கள் தம்மைத் தீண்டத் தகாதவர்களாயும், வெறுக்கத்தக்கவர்களாகவும் நடத்து வதால் தீண்டத்தகாதவர்களில் பலர் பிழைப்புக்கு வழியின்றிப் போர்ப்படைகளில் சேர்ந்தனர். எனவே, இவர்கள் போர்ப்படை களில் சேருவதைத் தடை செய்யும் அரசின் கொள்கையை எதிர்த்துப் போராடித் தடைநீக்கம் கோர வேண்டுமென்றும் அவர் கூறினார்.[1]

## கோரேகாவன் போர் நினைவகத்தின் முக்கியத்துவம்

கடந்த காலத்தில் தீண்டப்படாதவர்களும் போர்ப்படைகளில் சேர அனுமதி நிலவிய போது, அவர்கள் பிரிட்டிஷ் படைகளில் (குறிப்பாகப் பம்பாய்ப் படையில்) சேர்ந்து உள்நாட்டிலும், அயல்நாட்டுப் போர்களங்களிலும் தமது துணிவையும் வீரத்தையும் காட்டியது கண்டு பிரிட்டிஷ் படை அதிகாரி அவர்கள் மீது புகழ் மாரி பொழிந்த நிகழ்வுகளையும் அவர் எடுத்துரைத்தார்.

"பம்பாய்ப் படை அதிகாரிகள் மற்றும் சிப்பாய்களின் பற்று ணர்வை ஜெனரல் மால்கம் வெகுவாய்ப் புகழ்ந்து பாராட்டியுள்ளார். 1816இல், இயக்குநர் குழுமச் செயலருக்கு ஜெனரல் மால்கம் எழுதிய கடிதத்தில், பம்பாய்ப் படையில் இந்துக்கள், முஸ்லீம்கள், கிறித்த வர்கள், யூதர்கள் உள்ளிட்ட பல்வேறு சமயத்தவரும் பல்வேறு

1. கீர், ப. 69

இனத்தவர்களும் இடம் பெற்றிருந்தனர் என்பதைக் குறிப்பிட்டு, மராட்டியத்தைச் சேர்ந்த இந்துக்களில் இராசபுத்திரர்கள் போன்ற மேல் சாதியினரைவிட, பார்வாரிகளே (மகர்கள்) பெருவாரியான எண்ணிக்கையில் இடம்பெற்றிருந்தனர் என்பதையும் குறிப்பிட்டுள்ளார். இந்தப் பார்வாரிகள், பம்பாய் மாநிலத் தெற்குக் கடற்கரைப் பகுதிகளைச் சேர்ந்தவர்கள். கடுமையான நெடிய நடைப்பயணங்கள், உணவின் அளவு கணிசமாய்க் குறைக்கப் படல், மனிதர்கள், விலங்குகளிடையே நோய் மலிந்த சூழல் மற்றும் பணியாற்றல் ஆகிய கட்டங்களில் மகர் வீரர்கள் பணியாற்றிய திறம், மிகச் சிறப்பாய்ப் புகழ்ந்து பேசப்படுவதொன்றாகும். பகைவர்களைத் தாக்க முன்னேறுகையிலும், முற்றுகையிடப்பட்ட நிலைகளிலும், போர்க் கைதிகளாய்ப் பிடிப்பட்ட நிலைகளிலும், கோட்டைகளைத் தாக்கிக் கைப்பற்றுகையிலும், சாதுரியமான பின்வாங்கல்களின் போதும் அவர்கள் தமது படைத்தலைவர்களுடனும் உடன் தோழர்களுடனும் உறுதியாய் இணைந்து நின்று படைப்பிரிவின் பெருமிதத்தை ஒருபோதும் தாழ்த்தாது விளங்கினார்கள். கோரேகானில் பீமந்திக் கரையில் 1818ஆம் ஆண்டின் புத்தாண்டு நாளில் நிகழ்ந்த கடுமையான போர்க்களத்தில் மகர் வீரர்கள் காட்டிய திறம் அவர்களைப் புகழின் உச்சாணிக்கு இட்டுச் சென்றது. கிர்க்கியிலும் புனாவிலும் அமைந்திருந்த பிரிட்டிஷ் படைப் பாடிகளைத் தாக்கிக் கைப்பற்றும் நோக்கில் பேஷ்வா இரண்டாம் பாஜிராவ், 20,000 குதிரை வீரர்களையும் 8,000 காலாட் படையினரையும் கொண்ட பெரும்படைப் பிரிவு ஒன்றை அனுப்பியபோது எதிர்நின்று காக்க கேப்டன் எப்.எப். ஸ்டாவுண்டன் தலைமையில் அனுப்பப்பட்ட பிரிட்டிஷ் படையில் இருந்த படை வலிமையின் அளவு மிகச் சிறிதே; அப்படையில் பம்பாயின் உள்நாட்டுக் காலாட்படையின் முதலாம் அணியின் இரண்டாம் கிளையணியைச் சேர்ந்த 500 காலாட் படையினரும், புனாவைச் சேர்ந்த தற்காலிகக் குதிரைப்படையினர் 250 பேரும், ஆறு இராத்தல் பீரங்கிகள் இரண்டுடனும் சென்னை பீரங்கிப் படையைச் சேர்ந்த ஐரோப்பிய பீரங்கிப் படையினர் 24 பேரும் மட்டுமே இருந்தனர்.

புனா படைப் பாடியைக் காப்பதற்கென்று கேப்டன் ஸ்டான்டவுனின் தலைமையிலான இச்சிறுபடை, டிசம்பர் 31ஆம் நாள் மாலை சிறூரிலிருந்து விரைந்தனுப்பப்பட்டது. 27 கல் (சுமார் 45 கி.மீ.) தூரத்தையும் இடையறா நடைப் பயணத்தை இரவு முழுவதும்

மேற்கொண்டு, 1818 ஜனவரி முதல் நாள் காலை கோரேகாவனுக்கு வந்து சேர்ந்ததும், புகழ்பெற்ற மராத்தியக் குதிரைப் படையின் அச்சுறுத்தும் பேரணியை எதிர்கொண்டது. இச்சிறு படைமீது, மூன்று திசைகளி லிருந்தும் ஒவ்வொன்றும் 600 பேர் கொண்ட மூன்று காலாட்படைப் பிரிவுகள் ஏவப்பட்ட போது, கேப்டன் ஸ்டான்டவுனுக்குத் தற்காப்புப் போருக்குத் தாயாராவதற்கான அவகாசம் ஏதும் கிட்டவில்லை. புனாவில் தற்காலிகக் குதிரைப் படை வெகுதீரமாய்ப் போராடியும், கோரேகானிலிருந்த பிரிட்டிஷ் படை முற்றிலும் மராட்டியரின் குதிரை மற்றும் காலாட் படைகளால் சூழப்பட்டுவிட்டதுடன் ஆற்றை நோக்கிப் பின்வாங்குதற்கான வழியும் கூட அடைபட்டு விட்டது. தாக்கிய படை தமது முழுவலிமையுடன் முன்னேறி ஊரின் மையப்பகுதியைக் கைப்பற்றிக் கொண்டதுடன், பெயர்க்கவொண்ணா வலிய தளங்களையும் அமைத்துக் கொண்டார்கள். ஒவ்வொரு வீட்டையும், ஒவ்வொரு குழலையும், ஒவ்வொரு தெருவையும் கைப்பற்றக் கடுமையான ஆளுக்காள் போராட்டம் நடைபெற்றது; அதில் பிரிட்டிஷ் தரப்புக்குப் பலத்த சேதம் விளைந்தது. ஆனால் அவர்கள் போராட்டத்தைக் கைவிடவில்லை. இந்தியப் படை வீரர்கள், குறிப்பாக மகர்கள் மிக தீரத்துடன், சற்றும் சளைக்காமலும் பின்வாங்காமலும் போராடினர். கடைசி வீரன் இருக்கும் வரை கடைசித் துப்பாக்கிக் குண்டு இருக்கும் வரை போரிடுவோம் என்று கேப்டன் ஸ்டான்டவுன் ஊக்குவித்தார். மகர் வீரர்கள் கடுமையான இடுக்கண்களைப் பொருட்படுத்தாது உச்ச வீரத்துடன் போரிட்டனர். கதிரவன் மறையும் போது பிரிட்டிஷ் படை மிக நம்பிக்கை முறிந்த நிலைக்குத் தள்ளப்பட்டது. மராட்டியப் படை தனது தலைசிறந்த தளபதி கோகலேயின் தலைமையில் எல்லாப் புறங்களிலும் பிரிட்டிஷ் படையினர் மீது ஆதிக்கம் செலுத்தியது. நல்ல காலமாய் இரவின் வருகை பிரிட்டிஷ் படைக்குச் சிறிது தணிப்பு நல்கியது; மராட்டியர்களின் தாக்குதல் வேகம் சற்றுக் குறைந்து. இவ்வாறு கிடைத்த எதிர்பாராத வாய்ப்பு, போர் நிகழ்ச்சிகளின் போக்கை மாற்றியது. தமக்கு வெற்றிக்கனி நெருங்கிவிட்ட நிலையில் பேஷ்வாவின் படைகள் ஏன் போரை நிறுத்திவிட்டு, இரவு 9 மணியளவில் கோரேகாவனை விட்டு அகன்றனர் என்பது புரிய வில்லை. அதுவரை நிகழ்ந்த போரில் சென்னை பீரங்கிப் படையினர், பம்பாய் உள்நாட்டுக் காலாட்படை, இரண்டாம் பிரிவின் வீரர்கள் 50 பேர், பிரிட்டிஷ் அலுவலர்கள் மூன்று பேர் உயிர்துறந்தனர்.

கொல்லப்பட்ட பம்பாய் உள்நாட்டுக் காலாட்படை இரண்டாம் பிரிவு வீரர்கள் மகர்கள் எனப்படும் பார்வாரி வகுப்பினர் ('னாக்' என்ற பெயர் விகுதிகளிலிருந்து இதை அறியலாம்)*, 16 பேர் மராத்தியர்கள், 8 பேர் இராசபுத்திரர்கள், இருவர் முஸ்லீம்கள், ஓரிருவர் இந்திய யூதர்கள்.

மகர் வீரர்களின் செயல்பாட்டில் காணப்படும் வீரதீரமும், காவல் தறுகணும், கட்டுப்பாடுமிக்க மறமும், பற்றுமிக்க துணிவும் அவர்களுக்கு அழியாப் புகழை ஈட்டித்தந்தன.[1] "இப்போரில் மாபெரும் புகழ் ஈட்டியவர்கள், இந்திய வீரர்களா, பிரிட்டிஷ் வீரர்களா? எவர் திடமான உறுதியையும் வியத்தகு பற்றினையும் புலப்படுத்தியவர்கள் என்பதைத் தெளிதல் அரிது" என்று பதிவு செய்யப்பட்டுள்ளது [2] (இந்திய வீரர்களில் பலர் மகர்கள் என்பது குறிப்பிடத்தக்கது).

---

* உயிரிழந்த மகர்கள்

1. சோமனாக் கமலநாக் நாயக்,
2. இராம்னாக் ஏமனாக் நாயக்,
3. கோடானக் கோதேனாக்,
4. இராம்னாக் யேசனாக்,
5. போகனாக ஹர்னாக்,
6. அம்பானாக் கண்ணனாக்,
7. கண்ணாக் பாலனாக்,
8. பால்னாக் கோண்டனாக்,
9. ரூபனாக் லாகனாக்,
10. வேப்னாக் கிராம்னாக்,
11. விட்னாக் தாம்னாக்,
12. ராங்னாக் கண்ணனாக்,
13. வேப்னாக் ஹர்னாக்,
14. இராய்னாக் வான்னாக்,
15. கஜனாக் தர்மனாக்,
16. தியோனான் ஆன்னாக்,
17. கோபால்னாக் பால்னாக்,
18. ஹர்னாக் ஹிர்னாக்,
19. ஜேட்னாக் தாய்னாக்,
20. கன்னாக் லாக்னாக்

காயமடைந்த மகர்கள்

21. ஜனனாக் ஹிர்னாக்,
22. பாய்னாக் இரத்தன்னாக்,
23. இரத்தன்னாக் தான்னாக்.

(மூலம்: டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கரின் பாகிஸ்கிரிட் பார்டாட்டில் அக்ரலேக் (மராத்தி நூல்) பதிப்பாசிரியர் இரத்னாகர் கனவீர், ப. 247)

1. புனாவின் ரெசிடெண்டுக்கும், தக்காணப் படையின் தலைமைத் தளபதிக்கும், இந்தியத் தலைமை ஆளுநருக்கும், கிழக்கிந்தியக் கம்பெனியின் இயக்குநர் குழும அவைக்கும், பிரிகேடியர் ஜெனரல் லியோனில் ஸ்மித் அவர்கள் அனுப்பிய அறிக்கையிலிருந்து.

2. மேஜர் ஜே.டி. கொர்மான் "பம்பாய் நான்காம் படையின் இரண்டாம் பிரிவு வீரர்கள் குறித்த வரலாற்றுப் பதிவு" 1796 - 1933.

விரைவில் கோரேகாவன் களச் செயலின் பெரு முக்கியத்துவம் உணரப்பட்டது. கோரேகானில் முதல் குண்டு சுடப்பட்ட இடத்தில் 32 சதுர அடிப்பரப்பு கொண்ட கல்மேடையொன்றின் மீது 65 அடி உயர வீரக் கம்பம் ஒன்று நாட்டப்பட வேண்டும் என்று தீர்மானிக்கப் பட்டது.*

இந்நினைவுச் சின்னத்திற்கான அடிக்கல் 1821 மார்ச் 26ஆம் நாள் நாட்டப்பட்டது. இப்படையின் வீரத்தைப் போற்றும் வகையில் வெற்றித் தூண் நாட்டப்பட்டது. படைவீரர்கள் காட்டிய வீரத்தைப் பன்னெடுங் காலம் நினைவுறுத்தும் வகையில், "அந்த நாளின் புகழுக்குத் தமது பற்றையும் வீரத்தையும் காணிக்கை தந்தவர்களின்" நினைவைப் போற்றி அப்போரில் இறந்த, காயமுற்ற வீரர்களின் பெயர்களைக் கம்பத்தில் பொறிக்கவும் முடிவு செய்யப்பட்டது. "இந்தியத் தரைப் படைக்கு" என்று பொறிக்கப்பட்ட சிறப்புப் பதக்கம் 1851இல் வெளியிடப்பட்டது; அதன் பிடிகள் இரண்டில் 'கிர்க்கீ', 'கோரேகாவான்' எனும் களங்களின் பெயர்கள் பொறிக்கப்பட்டன.[1]

மகர்கள் இந்தியப் போர்ப் படைகளின் போர்க்களங்களில் தொடர்ந்து ஈடுபட்டு, தமது ஐயத்திற்கிடமிலா வீரத்தையும் உறுதியான கடமைப் பற்றையும் மெய்ப்பித்து வந்துள்ளனர். கத்தியவார் (1826), முல்தான், குஜராத் (1840), காந்தகர் (1880) போர்க்களங்களில் வீரப் போர்புரிந்து அழியாப் புகழ் ஈட்டினர். மேலும், பம்பாய்ப் படை முதலாம், இரண்டாம் ஆப்கானியப் போர்களிலும், மீயனி (1843) போரிலும் பாரசீகப் (1856 - 57) போரிலும் பங்கு பெற்றது.[2] பம்பாய்ப் படையின் வீரர்கள் 1860இல் சீனாவுக்கும்,

* லெப். ஜெனரல் எச்.இ. கேண்யான் "கோரோகுவான் போர் "ஐக்கியப் பணி நிறுவன இதழ், 1931.

1. கிழக்கிந்தியக் கம்பெனியின் படைகளுக்காக, பிரிட்டிஷார் வெளியிட்ட முதல் இந்தியப் பதக்கம் இதுவே.

2. முதலாம் பாரசீகப் போரின் போதுதான் இந்தியப் படைக்கான முதல் விக்டோரியா சிலுவை, பம்பாய் உள்நாட்டுக் காலாட்படையின் 20 ஆவது பிரிவு (120 ஆவது இராசபுத்திர துப்பாக்கிப் படை) யைச் சேர்ந்த கேப்டன் ஜே.ஏ. வுட் அவர்களுக்கு வழக்கப்பட்டது. அதே படையின் சுபேதார் மேஜர் முகமது ஷெரீப் வீரர் பீர்பட் ஆகியோர் பெயர்களும் கூட விக்டோரிய சிலுவைக்குப் பரிந்துரைக்கப்பட்டன வெனிலும் அவர் களுக்கு அளிக்கப்படவில்லை. இந்தியர்களுக்கும் அவ்விருது வழங்கலாம் என்பது 1911 -க்குப் பிறகுதான் நடைமுறைக்கு வந்தது.

1865இல் ஏடனுக்கும், 1867இல் அபிசீனியா (இன்றைய எதியோப்பியா) வுக்கும் சென்று போரிட்டுள்ளனர். தமது தலைமையில் பம்பாயின் 25ஆம் படை சிந்துப் போரில் ஈடுபட்டு சிந்துவை வெல்வதில் காட்டிய மாபெரும் பங்கை என்றென்றும் மறக்கவியலாத மக்தளாவின் தளபதி ஜெனரல் சர் சார்லஸ் நேப்பியர், "பம்பாய்ப் படையையே நான் பெரிதும் நேசிக்கிறேன். அதன் வீரர்களைப் பற்றி எண்ணும் போதெல்லாம் வியந்து பாராட்டாமலிருக்க முடியாது" என்று நெஞ்சாரப் புகழ்ந்துள்ளார். பம்பாய்ப் படையின் மகர் வீரர்கள் அண்மையிலும் செய்மையிலும் பல்வேறு இடங்களுக்குச் சென்று ஒவ்வொரு போர்க்களத்திலும் தங்கள் வீரத்தின் அழியாப் புகழ் முத்திரையைப் பதித்துள்ளனர். இரண்டாம் ஆப்கன் போரின் போது மகார் வீரர் ஒருவர் காட்டிய ஈடில்லா வீரச் சிறப்பு, கோரேகாவன் மகர்களுக்கே உரித்தான தறுகண் அழியாமை, தாங்கு உரம், தளர் வின்மை ஆகிய வீரப் பண்புகளை நினைவூட்டுவதாகும். படைவீரர் சோம்னாக் தன்னாக் வீரத்தின் உச்சாணி தரம் என்பதை மெய்ப்பித்து அழியாப் புகழ் பெற்றார். பம்பாய் வாட்பி சாலை நினைவுச் சின்னத்தில் பொறிக்கப்பட்டிருக்கும் அவரது புகழாரம், "ஆப்கானியப் போரின் போது. பம்பாயின் 19ஆம் காலாட்படையைச் சேர்ந்த மேஜர் சிட்னி ஜேம்ஸ் வாட்பியுடன் தனியார் படை வீரர்கள் இலாகி பக்ஸ், சொம்னாக், தன்னாக் ஆகியோர் புரிந்த அருந்திரப் போரை நினைவு கூரும் வகையில் இச்சாலைக்கு வாட்பி சாலை எனப் பெயர் இடப்பட்டுள்ளது. 1880 ஏப்ரல் 16இல், தப்ராய் நிலையைக் காக்க இம்மூவரும் காட்டிய தீரம் ஈடிணையில்லாதது. தமது நிலையைத் தாக்கப் பெரும்படையொன்று வந்து கொண்டிருக்கிறது என எச்சரிக்கை கிடைத்த போதும் கூட அவர்கள் தமது நிலையைக் கைவிட்டுப் பின்வாங்க மறுத்து விட்டனர்; நிலையைக் காப்பதற்காக முன்னூறு பேர் கொண்ட பகைவர் படையை எதிர்த்து அருந்திரம் காட்டி மூவரே பலமணி நேரம் போரிட்டனர்; பகைவீரர்கள் பலரைக் கொன்று குவித்தனர். இறுதியில் தமது குண்டுகளெல்லாம் தீர்ந்துவிட்ட நிலையில் பகைவர் அணிக்குள்ளேயே நுழைந்து போராடி உயிர்துறந்தனர். அவர்களது வீரப் புகழை நினைவுகூறும் வகையில் இச் செப்பேடு இங்கே படையினரால் பதிக்கப்படுகிறது."[1]

1818ஆம் ஆண்டுக்கு முன்னர் பேஷ்வாக்களின் ஆட்சியின் கீழ்

1. வி. இலாங்கர், "எப்போதும் படை முன்னணியில் - மகர் படையின் வரலாறு" பக். 12 - 15.

மகர் சாதியினரின் சமூக நிலை பற்றி விவரிக்கையில் டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் அவர்கள் கூறியதாவது: "மராட்டிய நாட்டில் பேஷ் வாக்களின் ஆட்சியில், இந்துக்கள் தெருவில் வரும்போது, தீண்டப்படாதவர் அத்தெருக்களில் நடமாடக் கூட அனுமதிக்கப் பட்டதில்லை; ஏனென்றால் அவர்களது நிழல் பட்டால் கூட இந்துக் களுக்குத் தீட்டு ஆகிவிடுமாம். இந்து ஒருவர் தவறாகக் கூடத் தம்மைத் தொட்டுத் தீட்டு ஏற்படுத்திக்கொள்ளவும் நேரக் கூடாதென்பதற் காகத் தீண்டப்படாத மக்கள் தமது மணிக்கட்டிலோ, கழுத்திலோ கருப்புச் சரடு அணிந்து தம்மை அடையாளம் காட்டிக் கொள்ள வேண்டும். பேஷவர் தலைநகரான புனாவின் தெருக்களில் தீண்டப் படாதவர்கள் வரும்போது தங்கள் இடுப்பில் ஒரு துடைப்பத்தைக் கட்டிக் கொண்டே வரவேண்டும்; தங்கள் காலடி பட்ட மண்ணெய்ப் பெருக்கி அப்புறப்படுத்திக் கொண்டே செல்ல வேண்டும்; ஏனெனில் அம்மண்மீது நடக்க நேரிட்டால் கூட இந்துக்களுக்குத் தீட்டு ஏற்பட்டு விடுமாம், மேலும் புனாவில் எங்கு சென்றாலும் தமது கழுத்தில் ஒரு மண்பாண்டத்தைக் கட்டிக் கொண்டுதான் செல்ல வேண்டும். எச்சில் துப்புவதெனில் அதில்தான் துப்ப வேண்டும் தெருவில் துப்பினால் அதன் மீது கால் பட நேரும் இந்துக்கள் தீட்டுக்குள்ளாவராம்"[1]

---

1. "பேச்சும் எழுத்தும்" தொகுதி 1 ப. 39.

# (2)

# ஒரு மனிதரின் மதிப்பு தெற்றத் தெளிவானது

இந்துக்களின் புனிதப் பயணத்தலங்களில் ஒன்று நாசிக்கின் அருகிலுள்ள திரையம்பாக். அங்கு மாபெரும் தூயர் (Great Saint) சொக்கமேலாவுக்கு ஆலயம் ஒன்றை எழுப்புதல் குறித்துக் கலந்து ஆலோசிப்பதற்காக, 1923, ஜனவரி 18ஆம் நாள் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் கூட்டம் ஒன்று நடத்தப்பட்டது. இக்கூட்டத்திற்குத் தலைமை வகிக்குமாறு குறிப்பாக டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அவர்கள் அழைக்கப்பட்டிருந்தார். திரு. பி.கே. கெய்க்வாடு, பாலராவ் புஞ்சஜி, நவசாஜி ஜாதவ் முதலியவர்கள் அக்கூட்டத்தில் உரையாற்றினர். மேலும் ஜல்கோவானிலிருந்து வந்திருந்த திரு. வடேகர், திரு. தோரட், திரு. சௌத்திரி ஆகியோரும் நாசிக்கிலிருந்து வந்திருந்த திரு. தத்தார் சாஸ்திரி, சுவராஜ்யா இதழாசிரியர் திரு. மராத்தே ஆகியோரும் உரையாற்றினர்.[1]

இக்கூட்டத்தில் நடைபெற்ற முழுமையான விவாதங்களுக்குப் பின்னர், ஆலயங்கள் கட்டுவதைவிட தீண்டாமை எனும் கறையை அடியோடு அகற்றுதலே தொய்விலாது உழைத்த தூயர்களுக்கு மெய்யான நினைவுச் சின்னமாய் விளங்கும் என்று தீர்மானிக்கப் பட்டது. இம்முடிவுக்கான காரணங்களில் முதலாவது டாக்டர் அம்பேத்கருடைய உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்திருக்கும் கருத்து, தனித்தனியான ஆலயங்கள் கூடாது என்பது. இரண்டாவது காரணம் ஆலயத்திற்குத் தேவைப்படும் நிதி ஒரு பெருஞ்சுமையாகும் என்பது. மூன்றாவது காரணம். டாக்டர் அம்பேத்கருக்கு உருவ வழிபாட்டை விடப் பயனுள்ள செயல்களிலேயே நம்பிக்கை மிகுந்திருந்தது ஆகும்.

டாக்டர் அம்பேத்கரின் கண்ணோட்டத்தின்படி, பகவத் தர்மத்தைச் சேர்ந்த மராட்டிய தூயர் கவிஞர்கள் (1300-1600)எவரும் ஒரு சாதியை விட மற்றொரு சாதி தாழ்ந்தது என்பதை அடிப்படை யாய்க் கொண்ட சாதி அமைப்பு முறைக்கெதிராக நேரடியான பிரச்சாரத்தில் ஈடுபடவில்லை; சமூகத்தில் நிலவிய சமத்துவ மின்மையையும் அநீதியையும் எதிர்த்துக் குரல் கொடுக்கவில்லை.

---

1. பாகிஷ்கிருத பாரத், 1928, பிப்ரவரி 3.

இத்தூயர்களின் முயற்சிகள் ஏதும் தனிமனிதப் பார்ப்பனர்களுக்கும் தனிமனித சூத்திரர்களுக்குமிடையே சமத்துவத்தை உருவாக்குவதில் ஈடுபடுத்தப்படவில்லை; மாறாகச் சிறந்த பக்திமான்கள் பார்ப்பன ராயினும், சூத்திரராயினும் சமமானவர்களே என்பதை நிறுவு வதிலேயே அவர்கள் வெற்றிகண்டனர். இறுதியாக டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் அவர்கள் தமது தலைமை உரையை நிகழ்த்தினார். அவரது உரையில் கூறியதாவது:

## ஒரு மனிதரின் சிறப்பு தெற்றத் தெளிவானது

இருப்பினும் சாதி அமைப்பை அழித்தொழிக்கும் நோக்கில் தூயர்களின் போராட்டத்தின் பயனாய்ச் சமூக விளைவு ஏதும் தோன்றவில்லை. தனிமனிதரொருவர் மதிப்பு தெற்றத் தெளிவானது தான்; அது பக்தி வேடம் பூணுவதால் கிடைப்பதல்ல. இக்கருத்தை நிலை நாட்டத் தூயர்கள் எவரும் போராடவில்லை. மாறாக ஒடுக்கப் பட்ட வகுப்பு மக்கள் மீது அது மிகத் தீங்கையே விளைவித்தது. ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் சொக்கமேலாவைப் போன்ற தகுதி நிலையை அடைந்தால்தான் அவர்கள் மதிக்கப்படுவார்கள் என்று கூறுவதற்குப் பார்ப்பனர்களுக்கு நொண்டிச்சாக்கு ஒன்றைத் தந்ததே அதன் உடன்விளைவாகும். பல்வேறு பக்தி இயக்கங்களைச் சார்ந்த பக்தர்களும் சாதிப்பாகு பாட்டுணர்வில் ஊறியவர்களேயாதலால், அவர்கள் தூயர்களின் சமத்துவம், நீதி, மனிதநேயம் ஆகியவை குறித்த கருத்துகளை ஒதுக்கித் தள்ளிவிட்டு, நம்ப வியலாத அற்புதங்களைக் குறித்து பெரிதும் மிகைப்படுத்தி வியந்து பேசுவதில் மட்டும் கவனம் செலுத்தினார்கள் என்று மேலும் அவர் குறிப்பிட்டார்.

இராமதாசரின் பக்தி மரபைப் பற்றிக் கூறுகையில், இவ்வியக்கத் தொண்டர்கள் தொடக்கத்திலிருந்தே ஆழமான சாதி வெறி காட்டி வந்தனர் என்றும், இயக்கத்தைத் தோற்றுவித்த இராமதாசரே கூடப் பார்ப்பனர்களே மேலானவர்கள் எனும் கருத்தில் ஊறியவர் என்றும் கூறினார். இப்புவியிலாகட்டும் மேலுலகிலாகட்டும் கடைகெட்ட பார்ப்பனர் ஒருவர் கூட பிறசாதி மனிதர் எவரையும் விட மேலா னவரே என்றும், பார்ப்பனர்கள் என்றால் கடவுளரே கூட வந்து தொண்டு செய்தற்கு உரிய தகுதியை உடையவர்கள் என்றும் இராம தாசர் கூறியுள்ளார் என்பதையும் சுட்டிக் காட்டினார்.[1]

---

1. கீர், பக். 109 - 110.

# (3)

# நாம் போராளி இனத்தவரே

பாரதிய பகிஷ்கிருத சமாஜ சேவக் சங்கத்தின் ஆதரவில் இரத்தினகிரி மாவட்ட பாகிஷ்கிருத பரிட்சத்தின் இரண்டாம் அமர்வு 1929, ஏப்ரல் 13 சனிக்கிழமை பிற்பகல் 4. 30 மணிக்கு சிப்லத்தில் டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் அவர்களின் தலைமையில் நடத்தப் பட்டது. 'சமதா' ஆசிரியர் தியோராவ் நாயக், எஸ்.என். சிவத்தர்கார், டி.வி. பிரதான், எஸ்.எஸ். குப்தே, பி.ஆர். கத்ரேக்கர் ஆகியோரும் மாநாட்டில் கலந்துகொண்டனர். ஆண்களும் பெண்களுமாகச் சுமார் எட்டாயிரம் பேர் மாநாட்டிற்கு வந்திருந்தனர்.[1]

மாநாட்டு சமயத்தில் நிலைமை மிகப் பதற்றமாகவே இருந்தது. மாநாட்டுப் பந்தல் அமைப்பதற்கு இடம் பெறுவதற்கே அரும்பாடுபட வேண்டியிருந்தது. மகத்தில் நடைபெற்றது போன்றே இங்கும் பூசல் வெடிக்கக் கூடும் எனும் அச்சம் பழமைவாத இந்துக்களிடையே நிலவியது. தீண்டப்படாத இந்து மக்கள் தமது கிணறுகளையெல்லாம் மாசுபடுத்திவிடுவார்களென்று, உயர்சாதி இந்துக்கள், பகைவர் படையெடுப்பை எதிர் நோக்கியது போன்றுத் தமது கிணறுகளையெல்லாம் பாதுகாப்பாக மூடிவைத்துக் கொண் டார்கள். டாக்டர் அம்பேத்கரும் அவரது உடன் தொண்டர்களும் சிப்லத்திலுள்ள தாக் மாளிகையில் இரண்டு நாள் தங்கியிருந்தனர். திரு. வினாயக ராவ் பார்வே, பி.ஜி. காட்டு, உள்ளூர் தலைவர்கள் இருவர் உள்ளிட்ட பலர் மாநாட்டுக்கு வந்திருந்தனர். ஓம் சுவாமி ராக்ஜி அவர்கள் பேராளர்களை (Delgates) வரவேற்று, உயர்சாதி இந்துக்களிடையே பரந்த மனப்பான்மையின் தேவை குறித்து வலியுறுத்தினார்.

மாநாட்டுத் தலைமையுரையில் டாக்டர் அம்பேத்கர் கூறியதாவது: "உங்கள் அடிமைத்தனத்தை நீங்களேதான் அழிக்க வேண்டும். ஒருவர் தமது தன்மதிப்பை இழந்து வாழ்தல் மிக இழிநிலையே. வாழ்க் கையின் உயிர்நாடி தன்மதிப்பே. தன்மதிப்போடு நிமிர்ந்து வாழ்தலில்

1. பாகிஷ்கிருத பாரத், 1929, மே, 3.

இன்னல்கள்வரின் அவற்றை வென்று வாழ வேண்டும். இடையறாத கடும் போராட்டங்களின் வாயிலாகவே, வலிமை, தன்னம்பிக்கை, பிறர்மதிப்பு ஆகியவற்றை ஒருவர் பெற முடியும்.

பின்னர் அவர் கொங்கணத்தில் நிலவும் கோத்தி எனும் நிலவுடைமை முறை பற்றிக் குறிப்பிட்டு, அது உழவர்களின் இரத்தத்தை உறிஞ்சும் கொடிய முறை என்பதால் அதை ஒழிப்பதற்குத் தம்மால் இயன்ற அளவு பாடுபடப் போவதாய்க் கூறினார். உங்களது நலனுக்காக எந்த இன்னலையும் ஏற்கத் தயாராயிருப்பதாய்க் கூறிய அவர், உங்களது துன்பங்களுக்கும் இழிவுகளுக்கும் காரணங்களை எடுத்துக்கூறி உங்களிடையே விழிப்புணர்வைத் தோற்றுவிப்பதற்காக நான் இங்கு வந்தால், எனது உயிருக்கு ஊறு விளையும் என்று அச்சுறுத்தப்பட்டேன். ஆனால் தன்மதிப்பு, மக்கள் வாழ்க்கையின் மேம்பாடு ஆகிய உயரிய குறிக்கோள்களுக்காக ஒருவர் தனது உயிரையும் இழக்கலாம். நாம் அடிமைகள் அல்லர்; போராளி இனத்தவரே. நாட்டுப்பற்றும் தன்மதிப்பும் இல்லாத வாழ்க்கையை வாழ்வது துணிவு மிக்க மாந்தருக்கு மானக்கேடாகும்" என்றும் கூறினார்.

உயர்சாதி இந்துக்கள், இந்து நிலக்கிழார்கள் ஆகியோரின் கொடூர அடக்குமுறையிலிருந்து மீள விரும்பினால், தீண்டப்படாத வர்கள் சில தொலைதூர நல்லிடங்களுக்குக் குடிபெயரலாம் என அவர்கருத்துத் தெரிவித்தார். சிந்து மாநிலத்திலும், இந்தூர் சமஸ்தா னத்திலும் அவர்களுக்குப் பயிர் நிலங்கள் பெற்றுத்தர முயல்வ தாகவும் கூறினார். அவர்களது அண்டையில் வாழ்ந்த முஸ்லீம்கள் எவ்வாறு ஆப்பிரிக்காவுக்குச் சென்று செல்வந்தர்களாய்க் கொங்க ணத்துக்குத் திரும்பிவந்துள்ளனர் என்பதை நோக்குமாறு கூறினார். சிந்து மாநிலத்தைப் பற்றிய கவனம் டாக்டர் அம்பேத்கருக்கு வரக் காரணம் அவர் பிற கவுன்சிலர்களுடன் சிந்து மாநிலத்துக்குச் சென்று, அங்கு சுக்கூர் அணையின் உதவியால் பாலை நிலத்தில் பல்லாயிரக் கணக்கான ஏக்கர் அளவுக்கு வளமான பயிர் நிலமாய் மாறியதைக் கண்டு வந்திருந்தமையாகத்தான் இருக்க வேண்டும். இந்தூர் மாமன்னருடன் அவர் ஏற்படுத்திக்கொண்ட புதிய தொடர்பு தான் அச்சமஸ்தானத்தில் தீண்டப்படாத மக்களுக்கு நிலம் பெற்றுத் தர முடியும் எனும் நம்பிக்கையை ஊட்டியிருக்க வேண்டும்.

வினாயகராவ் பார்வே அவர்கள் டாக்டர் அம்பேத்கரை இரவு உணவுக்கு அன்புடன் அழைத்தார். அவர் இத்தகைய பல சாதி விருந்துகளில் பார்ப்பனர்களுடன் கலந்து கொள்வதால் தீர்வு கிட்டிவிடும் என்பதற்காகவன்றி, இவ்விருந்துகளில் சமூகப் பழக்கமும் சமத்துவக் கோட்பாடும் புலப்படுவதால் இவற்றை வரவேற்பதாய்க் கூறி விருந்தில் கலந்து கொண்டார்.[1]

---

1. கீர். பக். 127 - 128.

## (4)

# சட்ட மன்றங்களுக்குச் சரியான மனிதர்களையே அனுப்புக

இரத்தினகிரி மாவட்ட உழவர்கள் மாநாடு 1929 ஏப்ரல் 14இல் சிப்லத்தில் நடைபெற்றது. பம்பாயிலிருந்து கலந்துகொண்ட விருந்தினர்களில், தியோராவ் நாயக், டி.வி. பிரதான், பி.ஆர். கட்ரேத்கர், சங்கர் ராவ் குப்தே, சங்கர் வாட்வாக்கர், சிவதார்க்கர், பாபா அதரேகர், கெய்க்வாடு, மோர் முதலானவர்கள் இருந்தனர். சிப்லத்திலிருந்து கலந்துகொண்டவர்களில், திரு. வினாயக ராவ் பார்வே, சதே, இராஜ் தக்ஷா, கான்சாகிப் தேசாய், பெண்டேக், சிவராம் ஜாதவ் ஆகியோர் முக்கியமானவர்கள். டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் அவர்கள் மாநாட்டுக்குத் தலைமை வகித்தார்.[1]

டாக்டர் அம்பேத்கார் தமது உரையில் மக்களுக்குக் கூறும் போது, அடிமட்டத்தில் இருக்கும் மக்களின் நலனுக்காகப் போராடுதலே தமது வாழ்க்கையின் குறிக்கோள் என்ற உறுதிப்பாட்டுக்குத் தாம் வந்திருப்பதாய்க் கூறினார். தாம் ஓர் ஏழைக் குடும்பத்திலிருந்து வந்தவர்தான் என்றும், பம்பாயில் மேம்பாட்டு அறக்கட்டளைச் சத்திரத்தில் ஏழை எளிய மக்களுடன் கலந்து வாழ்ந்து பழகியிருப்பதாகவும் கூறினார். மேலும் அவர் தொடர்ந்து, "உங்கள் குறைகளை நான் நன்கு அறிவேன். கோத்தி முறையினால் உங்கள் இரத்தம் உறிஞ்சப்படுகிறது. குத்தகை நிலமுறை அகற்றப்படவேண்டும். அம்முறை நீங்கினால் உங்களுக்கு அமைதியும் முன்னேற்றமும் கிட்டும். உங்களது இக்குறிக்கோளை அடைய நீங்கள் இடையறாத போராட்டத்தை நடத்திக்கொண்டு இருக்க வேண்டும். இன்னும் நாலைந்து ஆண்டுகளில் இந்தியாவுக்குத் தனது வருங்காலத்தைத் தானே முடிவு செய்து கொள்ளும் உரிமை கிட்டவிருக்கிறது. அச்சமயத்தில் சட்ட மன்றங்களுக்கு உங்கள் சார்பாளர்களாய்ச் சரியான மனிதர்களையே தேர்ந்தெடுத்து அனுப்புவதில் மிக விழிப்பாயிருக்க வேண்டும்; உங்கள் சார்பாளர்கள் கோத்தி முறையை ஒழிப்பதில் பற்றோடு போராடக் கூடியவர்களாயிருக்கவேண்டும்" என்று கூறினார்.[2]

---

1. பாகிஷ்கிருத பாரத், 1929 மே 3.
2. கீர், பக். 128 - 129.

# (5)

# ஒரே நாடு - ஒரே அரசியலமைப்புச் சட்டம் - ஒரே இலக்கு எனும் உணர்வுகளால் பிணைக்கப்பட்ட மக்கள்தான் விடுதலையின் சவால்களுக்கு அஞ்சார்

*சைமன் ஆணையத்தின் அறிக்கையின் எதிரொலியாக, வருங்காலச் செயல்திட்டத்தில் தீண்டப்படாத மக்களுக்கு வேண்டப்படும் உரிமைகள் யாவை என்பதை ஆய்ந்தறிந்து முடிவு செய்தல் அவசியமாகிறது. இந்தியாவின் வருங்கால அரசியலமைப்புச் சட்டம் வரைவதற்கான பொது நெறி முறைகளை வகுப்பதற்காக இலண்டனில் நடத்தப்படவிருக்கும் வட்ட மேசை மாநாட்டுக்கு தீண்டப்படாத மக்களின் சார்பாளர்களை நியமனம் செய்தற்குரிய தேவையும் எழுந்துள்ளது.*

*இந்தியாவின் எதிர்காலத்தை முடிவு செய்யும் எந்த அமைப்பிலும் ஏழு கோடி தீண்டப்படாத மக்களின் அரசியல் உரிமைகளைப் பாதுகாப்பதற்கு அவர்களுக்குப் போதிய சார்பாளர்கள் இருத்தல் மிக அவசியமே. இதற்காக தேசிய அளவில் மாநாடு ஒன்று கூட்டப்படுதலின் தேவையுணர்ந்து நாகபுரியில் அம்மாநாடு கூட்டப்பட்டது. இந்த வரலாற்றுச் சிறப்புமிக்க மாநாட்டை நடத்திய நாகபுரி மக்கள் பெருமைக்குரியவர்கள்.*

*இதற்கென உள்ளூர்த் தீண்டப்படாத மக்களின் தலைவர்கள் குறிப்பாக தசரத லட்சுமண் படில், இலட்சுமண ராவ் ஒகேல் எம்.எல்.சி., ஆகியோர் பம்பாய் சென்று டாக்டர் பி. ஆர் அம்பேத்கருடன் கலந்தாலோசித்து வந்தனர். நாகபுரியில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் மாநாட்டைத் தாங்கள் கூட்டவிருப்பதாகவும், மாநாட்டுக்கு டாக்டர் அம்பேத்கர் அவர்கள் தலைமை தாங்க வேண்டுமென்றும் அவர்கள் கேட்டுக் கொள்ள, டாக்டர் அம்பேத்கர் அதற்கு இசைந்து,*

மாநாட்டை 1930 ஆகஸ்டு 8, 9 தேதிகளில் நடத்துமாறு கேட்டுக் கொண்டார். திரு. டி. சி. சகாரே அவர்களைத் தலைவராகவும், திரு. தாசநத் இலட்சுமண் படில் அவர்களைத் துணைத்தலைவராகவும், திரு. விஷ்ராம்ஜி சவைத்துள் அவர்களைப் பொருளாளராகவும், திரு. எல். கே. ஒகேல் எம்.எல்.சி. (அம்ராவதி), திரு. ஹர்தாஸ் எல்.என். (காம்ப்டீ), திரு. பிகே பட்கார், (அம்ராவதி), திரு. சுகர்மோ ஜி. ரகாதே (வாட்கோவன்) மற்றும் நாகபுரி மதாவ் சமூகத் தலைவர் திரு. எச். டீ. பகடே ஆகியோரைச் செயலாளர்களாகவும் கொண்டு மாநாட்டு வரவேற்புக்குழு அமைக்கப்பட்டது.

மாநாட்டுச் செயலர் திரு. ஹர்தாஸ் எல். என். புனாவைச் சேர்ந்த திரு. சிவராம ஜன்ப காம்ளேவுக்கு, நாகபுரியில் நடக்கவிருக்கும் அனைத்திந்திய மாநாட்டுக்கு அழைப்பதற்குரிய விருந்தினர் பெயர் களையும் மாநாட்டுத் தலைவரையும் தெரிவிக்குமாறு கடிதம் எழுதியிருந்தார்.

**அக்கடிதம் வருமாறு:**

## அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் பேராயம்
## (All India Depressesd classes conference)

அலுவலகம் - விஷ்ராம் சபை
லாகத் கஞ்சு வட்டம் 15 / 10
நாகபுரி நகரம்
தேதி: 1930 பிப்ரவரி, 1

வரவேற்புக்குழு:

தலைவர் கே. ஜி. நந்தக வாலி
துணைத் தலைவர் டி. எல். படீல்
பொருளாளர் வி. எல். சாவாய்த்துல்
செயலர்கள் எல். கே. ஒகேல் எம். எல். சி.,
ஹர்தாஸ் எல். என், பி. கே. பத்கர்,
எச். டி . பேகடே.

பெறுநர்,

திரு. எஸ். என் கம்ப்ளே*

புனா.

அன்புடையீர்,

இந்தியாவுக்கான வருங்கால அரசியலமைப்புச் சட்டம் குறித்து விவாதிப்பதற்காக அடுத்த மாரிக் காலத்தில், இலண்டனில் வட்ட மேசை மாநாடு ஒன்று நடக்கவிருப்பதைத் தாங்கள் அறிவீர்கள். இந்த முக்கியமான கட்டத்தில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் உறுதியாய்த் திரண்டு தங்கள் வாழ்வுரிமைகளுக்காகத் தேவைப்படும் காப்புறுதிகள் யாவை என்பன குறித்து முடிவு செய்யும் அதிகாரமுள்ள அவையில் நிலை நாட்டுதல் அவசியம் என்பதைத் தாங்கள் ஏற்றுக்கொள்வீர்கள் என்பது உறுதி. முக்கியமான இச்சிக்கல் குறித்து நமது மக்களின் கவனம் உடனடியாக ஈர்க்கப்பட வேண்டும். எனவே, இது குறித்து விவாதிக்க இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலிருந்தும் நமது மக்களை ஒன்றுதிரட்ட, பம்பாய் எம். எல். சி. டாக்டர் அம்பேத்கர் M.A., Ph. D., D. Sc., பார் - அட் - லா அவர்களுடன் கலந்தாலோசித்து, சைமன் ஆணையத்தின் அறிக்கை வெளியானவுடன், நாகபுரியில் அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் மாநாடு ஒன்றை நடத்த முடிவு செய்துள்ளோம். தங்கள் இசைவை எதிர்நோக்கி வரவேற்புக் குழுவையும் அமைத்துள்ளோம்.

இம் மாநாட்டை நடத்துதல் குறித்தும், மாநாட்டுத் தலைவராய் யாரைக் கேட்டுக் கொள்ளலாம் என்பது குறித்தும் தங்கள் கருத்துக்களை வரும் பிப்ரவரி 25ஆம் நாளுக்குள் தெரிவித்தால் மிக நன்றியுடையவனாவேன்.

---

* சிவராம் ஜன்ப கம்ளே - இந்தியாவில் முதன் முதலாகத் தீண்டப்படாத மக்களின் மாநாட்டை நடத்திய சிறப்புக்குரிய, புனாவைச் சேர்ந்த தீண்டப்படாத மக்களின் தலைவர். அம்பேத்கர் காலத்துக்கு முன்னரே பிரபலமான தலைவர். 'சோமவன்ஷிய மித்ரா' எனும் புனா இதழின் ஆசிரியர். தீண்டப்படாத மக்களுக்குக் கல்வியறிவு அளித்து அவர்கள் வாழ்வை மேம்படுத்துமாறு 1910ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு வேண்டுகோள் விண்ணப்பம் அனுப்பியுள்ளார்.

முன்னதாகவே நன்றியுடன்,

தங்கள் உண்மையுள்ள,
ஹர்தாஸ் எல். என்.*
செயலர் A. L. D. C
C. C. நாகபுரி[1]

## சிவராம் ஜன்ப காம்ளே அவர்களின் பதில்

கமாதிபுரம், 5ஆம் தெரு
கேம்ப் புனா
பிப்ரவரி, 1930.

பெறுநர்,

செயலர்,
அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்புகள் பேராயம்,
நாகபுரி.

அன்புடையீர்,

தாங்கள் 1930, பிப்ரவரி 1ஆம் தேதியிட்டு அனுப்பிய அச்சிட்ட கடிதம் கிடைக்கப்பெற்றேன். விரையில், அனைத்திந்திய ஒடுக்கப் பட்ட வகுப்புகளின் பேராயத்தை நாகபுரியில் நடத்தவுள்ளீர்கள் என் பதைப் படித்து மிக மகிழ்ந்தேன்.

நடைபெறவுள்ள மாநாட்டின் தலைமைக்கு டாக்டர் அம்பேத்கர் அவர்களே ஏற்றவர் என்பதைத் தெரிவித்துக் கொள்வ துடன், இலண்டனில் நடைபெறவுள்ள வட்ட மேசை மாநாட்டுக்கு ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் சார்பாளராய் அவர் அனுப்பப்பட வேண்டுமென்றும் கருதுகிறேன்.

பல்லாண்டு காலமாய் சாதி இந்துக்களால் அடக்கி ஒடுக்கப் பட்டுத் தாழ்மையில் உழந்து வரும் நமது ஆறு கோடி உடன் பிறப்புகளை மேம்படுத்தும் தங்கள் முயற்சியில் தங்களுக்கு முழுமை யான வெற்றி கிட்டுவதற்கு எனது வாழ்த்துக்கள்.

---

* ஹர்தாஸ், எல்.என். - செயலர், அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் பேராயம், நாகபுரி. டாக்டர் அம்பேத்கரின் அருமந்த சீடர், தொண்டர், பாபு ஹர்தாஸ் எனப் பாசமுடன் மக்கள் போற்றும் விதர்ப்பப் பகுதி காம்ப்ட்டியைச் சேர்ந்த தலைவர்.

1. சர்வாதே, தொகுதி 1, பக். 83 - 84.

என்றென்றும்,
தங்கள் உண்மையுள்ள
சிவராம் ஜே. கம்ப்ளே[1]

மாநாட்டுச் செயலர் திரு. எல். என் ஹர்தாஸ் மாநாடு நடத்துதல் குறித்துச் சுற்றறிக்கை ஒன்றை அனுப்பினார். சுற்றறிக்கை வருமாறு:

## அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்புகள் பேராய அலுவலகம்

## விஷ்ராம் சபை, நாகபுரி நகரம்

தேதி : 1930, ஜூன், 20

சுற்றறிக்கை எண்: 5
பார்வை எண்:

அன்புடையீர்,

சைமன் ஆணையத்தின் அறிக்கை வரும் ஜூன் 24 ஆம் நாள் வெளியிடப்படும் என்று செய்தித்தாள்களில் வெளியான அறிக்கை களைப் பார்த்திருப்பீர்கள். எனவே மாநாட்டின் தேதியை இப்போது நம்மால் முடிவு செய்ய இயலுமாதலால், மாநில வரவேற்புக் குழு 24. 5. 1930ஆம் தேதி கூடி ஜூலை 12, 13 தேதிகளில் மாநாட்டை நடத்தலாம் என்று முடிவு செய்யதுள்ளது; நமது தலைவர்கள் (சைமன் ஆணைய) அறிக்கையைப் படித்தாய்ந்து தெளிவும் உறுதியும் கொண்ட கருத்துக்களுடன் மாநாட்டில் கலந்து கொள்வதற்குப் போதிய கால இடைவெளி தேவையென்று எண்ணியே இவ்வாறு முடிவு செய்தோம்.

ஆனால் டாக்டர் அம்பேத்கர் அவர்கள் மாநாட்டுத் தேதிகள் மாற்றப்பட வேண்டும் எனக் கேட்டுக் கொண்டுள்ளார். சைமன் ஆணைய அறிக்கையின் முதல் பகுதி இம்மாதம் (ஜூன்) பத்தாம் தேதி வெளியிடப்பட்டதெனினும் இது வரை அதன் படிகள் (Copies) கிடைக்கப் பெறவில்லை; 22ஆம் தேதிக்கு முன்னர் கிடைக்காதெனக்

1. சர்வதே, ப. 84.

கூறப்படுகிறது; 24ஆம் தேதி வெளியிடப்படவுள்ள இரண்டாம் பகுதியின் படிகள் கிடைப்பதிலும் இதே போன்ற தாமதம் ஏற்படலாம்; நாம் முன்னர் முடிவு செய்த நாட்களில் பேராயத்தை நடத்தினால் கலந்து கொள்ளும் பேராளர்கள் அறிக்கையை அரை குறையாய்ப் படித்துவிட்டோ, கண்ணாலும் பார்க்காமலோ கலந்து கொள்ள நேரிடும்; அத்தகைய நிலையில் மாநாட்டை நடத்தல் பயனற்ற முயற்சியாய் வீணாகும் என அச்சம் தெரிவித்தார். இத்தகைய நிலை நேரிடுவதைத் தவிர்க்கும் முன்னெச்சரிக்கையாய் மாநாட்டுத் தேதிகளைத் தள்ளிவைத்தல் தேவையாகிறது.

எனவே இதற்காக வரவேற்புக்குழு 20ஆம் தேதி கூடி பேராயத்தினை 1930 ஆகஸ்டு 8, 9 தேதிகளில் நடத்தலாம் என்று முடிவு செய்தது. இதனால் பொருள்நிரல் குழு (Subject Committe) கூடிடவும் போதிய காலம் கிட்டும். எனவே, டாக்டர் அம்பேத்கர் அவர்கள், நமது தலைவர்கள் அனைவரையும் ஆகஸ்டு 7ஆம் தேதியே, அதாவது மாநாட்டுக்கு முந்தைய நாளே நாகபுரிக்கு அழைக்குமாறு வரவேற்புக் குழுவுக்கு ஆலோசனை கூறினார். இந் நாட்கள் யாவும் விடுமுறை நாட்களே யாதலால் நமது தலைவர்கள் அமர்வுகளில் கலந்துகொள்ளல் எளிதாகும் என்பதில் ஐயமில்லை.

மாநில வரவேற்புக்குழு தமக்கு வந்த ஆலோசனைகளைக் கருத்தில் கொண்டு சமூக, கல்வி, இளைஞர், மகளிர் மாநாடுகளையும் இதே சமயம் நடத்துவதென்றும், இவற்றுக்குத் தலைமை தாங்க, முறையே உத்தரப் பிரதேச சட்டமன்ற மேலவை உறுப்பினரும் லக்னோ வழக்கறிஞருமான இராவ் சாகிப் இராம சரணா B. A., L. L. B., உதகமண்டலம் (சென்னை), இராவ் சாகிப் வி. ஐ. முனுசாமிப் பிள்ளை, வங்காள சட்ட மன்ற மேலவை உறுப்பினரும் கல்கத்தா வழக்கறிஞருமான திரு. எம். பி. முல்லிக், எம். ஏ., பி. எல்., புனாவைச் சேர்ந்த திருமதி குண்ணாபி கடேகர் ஆகியோரை அழைக்க வேண்டுமென்றும் முடிவு செய்தது. மேலும் இவ்வழைப்பை அவர்கள் நால்வரும் ஏற்றுக்கொண்டார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இம்மாநாடுகள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே வரவேற்புக் குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன என்பதையும் இம்மாநாடுகள் 10, 11 தேதிகளில் நடைபெறும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தியா முழுவதிலுமுள்ள ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் அனைவரும், பேராயத்துக்கும், அதையடுத்த மாநாடுகளுக்கும் தங்கள் பேராளர்களை அனுப்பி வெற்றி பெற நடத்துமாறு உளமார அக்கறையுடன் வேண்டுகிறோம். பேராளர்களின் பெயர்கள், தீர்மான வரைவுகள் ஆகியவற்றை, "செயலர், அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்புகள் பேராய அலுவலகம், விஷ்ராம் சபை, நாகபுரி நகரம்" எனும் முகவரிக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

என்றென்றும் தங்கள் உண்மையுள்ள,

ஹர்தாஸ் எல். என்

செயலர்!

நாகபுரி நகரம்,
20, ஜூன், 1930.

இவ்வறிக்கையில் பல்வேறு மாநாடுகளைக் குறித்தும் பின் வருமாறு தகவல்கள் தரப்பட்டிருந்தன:

## அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்புகள் பேராயம்

நாகபுரி (மத்திய மாநிலம்) நகரில் ஆரஞ்சுச் சந்தை கட்டடத்தில் 1930 ஆகஸ்டு 8, 9 தேதிகளில் காலை 8 . 00 மணி முதல் பிற்பகல் 2 . 00 மணிவரை:

டாக்டர் பி. ஆர். அம்பேத்கர், M.A., Ph. D., D. Sc., பார்-அட்- லா, M. L. C. பம்பாய் அவர்கள் தலைமையில் நடைபெறும்.

வரவேற்புக் குழு 7-8-1930இல் கூடும்.

## பேராயம் நடத்தப்படுவதன் நோக்கங்கள்

(1) இந்தியாவில் தற்போது நடந்து வரும் அரசியல் இயக்கங்கள் குறித்து ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் நோக்கைத் தெளிவுறுத்தல் (2) சைமன் ஆணையத்தின் பரிந்துரைகள் குறித்து ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் நோக்கைத் தெளிவுறுத்துதல் (3) நாட்டில் அவ்வப் போது எழும் சிக்கல்கள் குறித்து ஒடுக்கப்பட்ட வகுப்புகளின்

1. சர்வதே, பக். 99 - 100.

உணர்வுகளை வெளிப்படுத்துவதற்கு அனைத்திந்திய நிறுவனம் ஒன்றை உருவாக்குதல்.

## வரவேற்புக் குழு

*தலைவர்: டி. சி. சகாரே, நாகபுரி, துணைத்தலைவர்: டி. எல், பட்டீல், பேலா, பொருளாளர்: பி.எஸ். சவைத்துல், நாகபுரி செயலர்கள்: ஹர்தாஸ், எல்.என். காம்ப்டீ, எல். கே. ஒக்லே, எம். எல். சி., அமராவதி, பி. கே. வாட்கர் அமராவதி, எஸ். ஜி. ரகதே, வாட்கான், எச். டீ. பேகடே, நாகபுரி.*

*     *     *

## இராவ்சாகிப் இராம் சரணா, B.A., L.L.B.,

*வழக்கறிஞர் லக்னோ, எம். எல் சி (உ. பி)*

*அவர்களின் தலைமையில்*

## சமூக மாநாடு

*1930 ஆண்டு ஞாயிறு காலை 8. 00 மணிக்கு நடைபெறும்*

## வரவேற்புக் குழு

*தலைவர்: கிசான் பாகு பன்சோடே படீல், நாகபுரி, செயலர்கள்: டி. எம். நக்ரேர், நாகபுரி, எஸ். ஜி. ஜாதவ், எம். டி. கோட்காட்டே, நாகபுரி, என். யூ ஆத்தே, இராய்ப்பூர்.*

*     *     *

*இராவ் சாகிப் வி. ஐ முனிசாமிப் பிள்ளை எப். எம். யூ., எம். எல். சி. (சென்னை) உதகமண்டலம் அவர்கள் தலைமையில்*

## கல்வி மாநாடு

*1930 ஆகஸ்டு 10 ஞாயிறு பிற்பகல் 2. 00 மணிக்கு நடைபெறும்.*

## வரவேற்புக் குழு

*தலைவர்: ஜே. ஜி. சொனோனே, அமராவதி செயலர்கள்: சி.எம். சோம்குவார், நாகபுரி, பி.டி. மகேசர், யாவோத்மால், ஆர்.எஸ். காந்தாரே, அகோலா.*

*          *          *

## திரு. எம்.பி. மல்லிக், M. A., B. L.

*வழக்கறிஞர் கல்கத்தா, எம்.எல்.சி. (வங்காளம்) அவர்கள் தலைமையில்*

## இளைஞர் மாநாடு

*1930 - ஆகஸ்டு 11, திங்கள் காலை 8 . 00 மணிக்கு நடைபெறும்*

## வரவேற்புக் குழு

*தலைவர்: ஆர். எம். போர்க்கர், நாகபுரி.*

*செயலர்கள்: டி.பி. பார்சே, நாகபுரி, ஆர்.எம். மண்டேவதாரே, அகொலா, ஜி. ஜி. ஜியைனி, அஞ்சாங்கொன் பாரி,*

*          *          *

## மகளிர் மாநாடு

*திருமதி. குணாபாய் கடேகர், புனா, அவர்கள் தலைமையில், 1930 ஆகஸ்டு 11 திங்கள் கிழமை பிற்பகல் 2. 00 மணிக்கு நடைபெறும்*

## வரவேற்புக் குழு

*தலைவர்: திருமதி. செவந்தாபாய் ஒக்லே, அம்ரொலி.*

*செயலாளர்கள்: துல்சாபாய் பண்சோடே படீல், ஐய்பாய் சௌத்தரி, நாகபுரி, காஷிபாப் மந்தாவ்தாரே, அகோலா.*

## குறிப்பு: நிகழ்ச்சிநிரலில் மாற்றங்கள் இருப்பின் அவ்வப்போது வெளியிடப்படும்

*டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அவர்கள் தங்குவதற்காக ஆளுநர் மாளிகையை அடுத்திருந்த அப்துல்பாய் காகர் அவர்களின் மாளிகையில் இடவசதி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆனால் டாக்டர் அம்பேத்கர் அங்கு தங்க மறுத்து, ஏனைய தலைவர்கள் தங்குமிடத்திலேயே தங்கிக் கொண்டார்.*

*மாநாடு வியாங்கஷேன் தியேட்டர்* எனும் அரங்கில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. விருந்தினர்கள் தங்குவதற்கென்று பருத்திச் சந்தைக்கு அருகே மாபெரும் பந்தல் ஒன்று நிறுவப்பட்டிருந்தது. இந்த மாநாட்டுடன் சேர்த்தே சமூக, கல்வி, இளைஞர், மகளிர் மாநாடுகளும் நடைபெற்றன. சமூக மாநாட்டுக்கு திரு. பி. என். இராஜ் போஜ் அவர்கள் தலைமை வகித்தார்; திரு. தசரத் படீல் அவர்கள் வரவேற்புக் குழுவின் தலைவராய்ச் செயல்பட்டார். அமரவல்லியைச் சேர்ந்த திருமதி செவந்தா பாய் ஓக்லே அவர்கள் மகளிர் மாநாட்டின் வரவேற்புக் குழுத் தலைவராயிருந்தார்; நாகபுரியைச் சேர்ந்த திருமதி. துலசாபாய் பன் சோடே, திருமதி ஜய்பாய் சௌத்தரி ஆகியோருடன் அகோலாவைச் சேர்ந்த திருமதி. காஷிபாய் மண்டோதரே ஆகியோர் செயலர்களாய்ப் பணியாற்றினர். இளைஞர் மாநாட்டுக்கு லக்னோவைச் சேர்ந்த வழக்கறிஞர் சிவதாயாள் சிங் தலைமை வகித்தார்; இராக வேந்திர ராவ் போர்க்கர் அவர்கள் வரவேற்புக் குழுத் தலைவராய்ச் செயல்பட்டார்.*

## பேராயத்தின் முக்கியத்துவம்

*தீண்டப்படாத மக்களின் அரசியல் மேம்பாட்டுக்கு அனைத் திந்திய ஒடுக்கப்பட வகுப்புகளின் பேராயம் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த பங்கினை ஆற்றியுள்ளது. முதலாவதாக, இந்தியாவிலுள்ள தீண்டப்படாத வகுப்பு மக்கள் அனைவரையும் ஒரே பதாகையின் கீழ் ஒன்று திரட்டியது. இரண்டாவதாக, இப்பேராயத்தில்தான் முதன்முதலாகத் தீண்டப்படாத வகுப்புகளின் தலைவர்கள்*

---

* *பின்னாளில் அது ஷியாம் டாக்கீஸ் என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டது.*

அனைவரும் டாக்டர் அம்பேத்கரின் தலைமையை ஒருமனதாக ஏற்றுக்கொண்டு அனைத்திந்திய அளவில் தமது ஒன்றுபட்ட அரசியல் கோரிக்கைகளைக் கூட்டாக அறிவித்தனர். மூன்றாவதாக வட்டமேசை மாநாட்டில் தீண்டப்படாத மக்களின் சார்பாளராய்க் கலந்துகொள்ளுதற்குரிய தலைவராய் டாக்டர் அம்பேத்கரை அனைவரும் ஒருமித்த கருத்துடன் ஏற்றுக்கொண்டனர். நான்காவதாக, அனைத்திந்திய அளவில் தீண்டப்படாத மக்களின் இயக்கம் ஒன்று நிறுவப்பட்டது; இறுதியாகத் தீண்டப்படாத மக்களின் அரசியல் வாழ்க்கையில் ஒரு மைல் கல் நிலைநாட்டப்பட்டது.

சுருங்கக் கூறின், காலங்காலமாய் அடிப்படை மனித உரிமைகள் கூட மறுக்கப்பட்டு வந்த தீண்டப்படாத மக்களால், புறந்தள்ளப் பட்ட இந்தியர்களால் விடுதலைப் போராட்ட வரலாற்றின் முதல் பக்கம் எழுதப்பட்டது. மொத்தத்தில் இம்மாநாட்டில் பதின்மூன்று தீர்மானங்கள் ஒருமனதாய் நிறைவேற்றப்பட்டன.

## "ஒடுக்கப்பட்ட வகுப்புகள் பேராயத்தின் தீர்மானங்கள்

1930 ஆகஸ்டு 8ஆம் நாள் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், M.A., Ph. D., D. Sc., பார் அட்லா, பம்பாய் மாநிலச் சட்டமன்ற மேலவை உறுப்பினர், அவர்கள் தலைமையில் நாகபுரியில் கூடிய அனைத் திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்புகள் பேராயம் பின்வரும் தீர்மானங் களை நிறைவேற்றியது:

1. இந்திய தேசிய காங்கிரசின் நாட்டு விடுதலை குறித்த கருத்து இந்தியாவின் நலன்களுக்குப் பேரழிவும் தீங்கும் விளைவிக்கக் கூடியது என்று இப்பேராயம் அறிவிப்பதுடன், அக்கருத்துடன் எமக்குத் தொடர்பு கிடையாது என்று ஒதுங்கிக்கொள்கிறது. இந்தியாவின் இன்றைய நிலைமைக்கு டொமினியன் தகுதியே உகந்தது என இப்பேராயம் கருதுகிறது.

## உடனடியாக டொமினியன் தகுதி

2. டொமினியன் தகுதி எனும் குறிக்கோளை உடனடியாக எய்துவதற்கு இயலும் பொருட்டு நிர்வாக நோக்கில் உடனடியாக

மாற்றவியலாத விவகாரங்களைத் தவிர மற்றெல்லா வகையிலும் ஆட்சிப் பொறுப்புகள் மாற்றப்படுவதற்கு மறுப்பேதும் இல்லையென்றும், ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் நலன்களைக் காத்துப் பேணுதற்கு அரசியலமைப்புச் சட்டத்தில் பின்வரும் காப்புறுதிகள் செய்யப்பட வேண்டும் என்ற நிபந்தனையின் பேரிலேயே இவ்விசைவு வழங்கப்படுகிறது என்றும் இப்பேராயம் அறிவிக்கிறது:

(1) மத்திய, மாநில சட்டமன்றங்கள் அனைத்திலும் போதிய சார்பாண்மை (Representation).

(2) பொதுத்துறைப் பணிகளில் போதிய விகிதங்களில் பணியிட ஒதுக்கீடு.

(3) ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்குக் கல்வி, உள்ளாட்சி அமைப்பு உள்ளிட்ட உரிமைகளும், நலன்களும் புறக்கணிக்கப் படும் போது, அரசுத்துறைச் செயலருக்கு விண்ணப்பிக்கும் உரிமை; நாட்டின் வரவு செலவுத் திட்டத்திலோ, அல்லது பிற பொருண்மைகள் குறித்துச் சட்டமியற்றலிலோ சான்றுறுதி வழங்கும் அதிகாரம் அவருக்கே உண்டு என்பதும், அவரது சான்றுறுதி, இந்தியாவின் தற்காலிக அரசுகளை (மத்திய, மாநில) கட்டுப்படுத்தும் என்பதுமே இக்கோரிக்கைக்குக் காரணம்.

## மனிதத் தன்மையற்ற நடத்தை

4. பழைமைவாத வகுப்பு மக்கள் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களிடம் மனிதத் தன்மையற்று நடந்து வருவதில் சிறிதேனும் மாற்றம் காணப்படாமையாலும், ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு வருங்கால இந்திய அரசியல் சாசனத்தில் காப்புறுதிகள் எதையும் சேர்க்க இசைவேதும் தெரிவிக்க மறுத்து வருவதாலும், ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் நம்பிக்கையைப் பெறத்தவறி விட்டனர். இந்தியாவின் சமுதாய நிலைமையைக் கருத்தில் கொள்ளாமல் அனைத்துத் தரப்பு மக்களும் ஏற்றுக்கொள்ளத் தக்க அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்க இயலாதென்று ஒடுக்கப்பட்ட வகுப்புகள் நம்புகின்றன; தேவையான மாற்றங்களை ஒருவருக்கொருவர் அளிக்கும் ஒத்திசை வினாலன்றிக் கொண்டுவருதல் இயலாது. சட்ட மறுப்பு இயக்கம்

என்பது ஒரு சாராரின் கருத்துக்களை வலிந்துதிணிக்கும் முறையின் பாற்பட்டதாதலாலும், அமைதியான பேச்சுவார்த்தைகளுக்கான சூழலுக்கு அதில் இடமில்லையென்பதாலும், சட்டமறுப்பு இயக்கத் திற்கு இப்பேராயம் ஆதரவு தர இயலாது என்பதை அறிவித்து சட்டமறுப்பு இயக்கத்தில் கலந்துகொள்ள வேண்டாமென்று ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களைக் கேட்டுக் கொள்கிறது.

## வட்டமேசை மாநாட்டுக்கு ஏற்பு

5. இப்போதைய அரசியல் அமைப்புச் சிக்கலுக்குத் தீர்வுகாண மிகச் சிறந்த வழி வட்டமேசை மாநாடே என்பதை இப்பேராயம் ஏற்றுக் கொண்டு, இம்மாநாட்டில் கலந்து கொள்ளுமாறு ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு அறிவுறுத்துகிறது. இந்த (வட்ட மேசை) மாநாட்டுக்கு ஒடுக்கப்பட்ட வகுப்புகள் உட்பட எல்லாத் தரப்பு மக்களுக்கும் போதிய சார்பான்மை அளித்து, அழைத்து மாநாட்டை முழுமையும் வெற்றிகரமாய் நடத்துமாறு அரசைக் கேட்டுக்கொள்ள இப்பேராயம் இந்நல்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்கிறது.

6. நாட்டின் சட்ட மன்றங்களில் ஒடுக்கப்பட்ட வகுப்பு களுக்கு நியமன முறையில் சார்பான்மை வழங்கும் முறையை இப்பேராயம் எதிர்க்கிறது. ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு அவ்வகுப்பு மக்களே தேர்தலின் மூலம் சார்பாளர்களாயிருக்க வேண்டுமென்று பேராயம் கோருவதுடன், ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் சார்பாளர்கள் எவ்வகுப்பு மக்களிலிருந்தும் ஆளுநரின் சான்றுறுதிகொண்டு நியமிக்கப்படலாம் என்னும் சைமன் ஆணையத்தின் பரிந்துரையைப் இப்பேராயம் ஏற்க மறுக்கிறது.

## கூட்டு வாக்காளர் தொகுதி ஏற்பு

7. தனி வாக்காளர் தொகுதிகளே உகந்தவை என்று இப் பேராயம் நம்புகிறது. எனினும் வயது வந்தோர் வாக்குரிமையின் அடிப்படையில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்குப் போதிய சார்பான்மையுடன் கூடிய இட ஒதுக்கீடும் செய்யப்படுமெனில் கூட்டு வாக்களர் தொகுதி முறையையும்கூட இப்பேராயம் கொள்கை அளவில் ஏற்க ஆயத்தமாயுள்ளது.

8. ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் இன்னல்களோடு ஒப்பிடு கையில் சொற்ப அளவிலேயே சமூகப் பின்னடைவுகள் கொண்டுள்ள பிற சிறுபான்மை வகுப்புகளுக்கு மிகக் கணிசமான அளவில் சலுகைகள் தர முன்வந்துள்ள சைமன் ஆணையம் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் சார்பான்மைக் கோரிக்கையின் நியாயங்களைக் குறைத்து மதிப்பிட்டிருப்பது குறித்து இப்பேராயம் மிக வருத் தத்தைத் தெரிவித்துக்கொள்கிறது. எல்லா வகையான சிறுபான்மை மக்களையும் ஒரே மாதிரி நடத்துவதுடன் போதிய சார்பான்மை வேண்டும் எனும் கோரிக்கையையும் ஒரே மாதிரி சமத்துவத்துடன் நோக்க வேண்டுமென்ற கோட்பாட்டைப் பேராயம் வலியுறுத்து வதுடன், அந்தந்த சமூகங்களின் பின்னடைவு நிலைமைகளுக்கேற்ப, மக்கள் தொகைக்கேற்ற ஒதுக்கீட்டுடன் போதுமான உயர்ச்சியும் வழங்க வேண்டும் என்று கோருகிறது.

## மறைமுகச் சார்பான்மை

9. மாநிலச் சட்டமன்றப் பேரவைகளிலும், மேலவைகளிலும் மறைமுகத் தேர்தல்கள் வாயிலாய் ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்குச் சார்பான்மை வழங்கும் முறையை, ஒடுக்கப்பட்ட மக்களுக்குப் போதிய ஒதுக்கீடு என்னும் கோரிக்கை ஏற்கப்பட வேண்டும் எனும் நிபந்தனையுடன் இப்பேராயம் ஏற்றுக் கொள்கிறது.

10. சட்டமன்ற மேலவைகளில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு ஒதுக்கீடு செய்வதற்கான வழிவகை ஏதும் சைமன் ஆணையத்தின் அறிக்கையில் காணப்படாமைக்கு இப்பேராயம் வருத்தம் தெரிவிப்பதுடன், ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்குச் சட்டமன்ற மேலவைகளில் போதிய சார்பான்மை வழங்கப்பட வேண்டுமென்று கோருகிறது.

11. மாநிலங்களில் சட்டமன்றப் பேரவைகளை உருவாக்கு வதற்கான அமைப்புமுறை ஒன்றை சைமன் ஆணையம் தயாரித் துள்ளது என்பதை இப்பேராயம் உணருகிறது. ஆனால் ஆணை யத்தின் பரிந்துரை பேரவைகளைவிட மேலவைகளின் உருவாக்கத் திற்கே ஏற்றது என்று இப்பேராயம் கருதுகிறது. இந்தக் கண்ணோட் டத்திலும், மாநிலச் சட்டமன்றங்களின் அமைப்பும் முழுமையான மக்களாட்சி முறைக்கேற்ப மேம்படுத்தப்பட வேண்டியது அவசியம் என்னும் கண்ணோட்டத்திலும், இப்பேராயம் மாநிலச் சட்டமன்றப் பேரவைகளின் அமைப்புக்கான சைமன் ஆணையத்தின் பரிந்துரைகளைச் சட்டமன்ற மேலவைகளின் அமைப்பில் பின்பற்றலாமென்றும், சட்டமன்றப், பேரவைகளை அமைத்தல்

நேரடியான தேர்தல்களின் அடிப்படையில் இருக்க வேண்டும் என்றும் பரிந்துரைக்கிறது.

## சைமன் அறிக்கைக்குக் கண்டனம்

12. இந்தியாவின் போர்ப்படைகள் குறித்து சைமன் ஆணையம் செய்துள்ள முன்மொழிவுகளை இப்பேராயம் ஏற்கவில்லை. போர்ப் படைகளைப் பற்றிய விவாதம் வரம்புறுத்தப்பட்டுள்ள தெனினும், போர்ப்படைகள் இந்திய அரசின் கட்டுப்பாட்டிலிருந்து விலக்கப்படலாகாதென்று இப்பேராயம் கருதுகிறது.

13. ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கென்று அனைத்திந்திய அளவில் மைய நிறுவனம் ஒன்று தேவையென்பதில் உறுதியான நம்பிக்கையுறுகிறது. இதைக் கொண்டு பின்வரும் பணிகளைச் செயல்படுத்துவதற்காகக் குழுவொன்றைப் பேராயம் நியமிக்கிறது:-

(1) அனைத்திந்திய மைய நிறுவனத்திற்கான நிறுவன அமைப்புச் சட்ட திட்டங்களை உருவாக்கிப் பேராயத்தின் அடுத்த அமர்வில் முன்வைத்தல்;

(2) நாட்டின் இன்றைய அரசியல் நிலையின் விளைவாய் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் நலன் குறித்து அவ்வப்போது எழும் விவகாரங்கள் குறித்து, வரும் ஆண்டில் தேவையான செயல் பாடுகளை மேற்கொள்ள, பேராயத்தின் செயற்குழுவாய்ப் பணியாற்றல்.[1]

அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்புகள் பேராயத்தின் நாகபுரி அமர்வில் டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் அவர்கள் 1930, ஆகஸ்டு 8ஆம் நாள் தலைமை உரையாற்றினார். அவர் உரையாவது:

தாய்மார்களே, பெரியோர்களே,

இன்றைய உங்கள் கருத்தாய்வு நிகழ்வுக்குத் தலைமை வகிக்குமாறு என்னை அழைத்துப் பெருமைப்படுத்தியமைக்கு எனது

1. பம்பாய் கிரானிகள் 1930, ஆகஸ்டு 18.

நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். என்மீது நீங்கள் வைத்துள்ள இந்த நம்பிக்கையை நான் பெரிதும் மதிக்கிறேன்; அதே சமயம் என்மீது அன்பு கூர்ந்து நீங்கள் தந்திருக்கும் தகுதியையும் அதன் பொறுப்பையும் ஏற்றுச் செயல்படுதல், இயல்புக்கு மீறிய கடுமையான பொறுப்பு எனினும், இதனைத் தவிர்க்கக் கருதல் அறிவுடைமையன்று என்பதை உணர்ந்து இப்பொறுப்பை நான் ஏற்றுக்கொண்டுள்ளேன். நாட்டின் பொதுநன்மையை மேம்படுத்தும் நோக்கில் மக்கள் அனைவரும் ஒன்றுதிரண்டு பாடுபட முனையும் இந்தக் கட்டத்தில், பொதுவாழ்வில் ஈடுபட்டிருக்கும் மனிதர் ஒவ்வொருவரும், இதற்கான கடமைகளில் தமது பணிகளை ஈடுபடுத்தி உழைக்க வேண்டியது இன்றியமையாத கடமை என்பதை உணர்ந்தே என்பால் வேண்டப்படும் இப்பங்களிப்பைக் கடமையுணர்வுடன் நான் ஏற்றுக் கொண்டுள்ளேன். இப்பொறுப்பை நிறைவேற்றுவதில் உங்கள் அனைவரின் முழுமையான ஆதரவையும் உதவிகளையும் தயக்க மின்றி அளிப்பீர்கள் என்ற நம்பிக்கையிலேயே இதை நான் ஏற்றுக்கொண்டுள்ளேன். அத்துடன் இங்கு குழுமியுள்ள தலைவர்கள் அனைவரும் தங்களது பரந்த அனுபவத்தின் விளைவான கருத்துக்களை வழங்கி எனக்கு உதவ வேண்டுகிறேன்.

## 1. இந்தியத் தன்னாட்சியின் சிக்கல்

2. இந்திய அரசியல் வானில் இன்று பெருமளவில் எழுப்பப் பட்டு வரும் வினா, "ஒன்றுபட்ட தன்னாட்சியுடைய சமூகமாய் மாற இந்திய மக்களால் இயலுமா? என்பதுதான். இந்திய நாட்டுமக்களின் சிந்தையில் மட்டுமன்றி, பிரிட்டிஷ் பேரரசின் சிந்தையிலும் உலகின் ஏனைய பிற மக்களனைவரின் சிந்தையிலும் பெரிதும் கலக்கம் வினை வித்துக் கொண்டிருக்கும் இவ்வினாவைக் குறித்து ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் கண்ணோட்டம் என்ன என்பதை வரையறுப்ப தற்காக நாம் இங்கே கூடியுள்ளோம். இந்த நாட்டின் வருங்காலத்தைப் பற்றி எடுக்கப்படும் எந்த இறுதி முடிவிலும், இன்று நாம் எடுக்க விருக்கும் முடிவு பெரிய பங்கினை வகிக்கும். இந்திய விடுதலை எனும் குறிக்கோளை அடைதலை விரைவு படுத்ததுவதாகவோ, சீர்கேடு செய்வதாகவோ அமையக்கூடிய வல்லமை நாம் எடுக்க விருக்கும் முடிவுக்கு உண்டு. எனவே இந்த வினாவுக்கு விடை அளிக்கும் பொறுப்பில் நாம் ஏனோதானோ என்று அக்கறையின்றிச் செயல்பட இயலாதென்பதைத் தெளிவாய் உணர வேண்டும். நாம் எடுக்கும்

முடிவுகளின் நன்மை தீமைகள் குறித்து ஆழ்ந்த சிந்தனை செய்தே செயல்பட வேண்டும். நாம் எடுக்கும் முடிவு ஏனையோரின் முடிவு களினின்று மாறுபட்டிருக்குமோ என அஞ்ச வேண்டியதில்லை. ஆனால் நமது முடிவுகள் விடுதலையான சிந்தனை நேர்மையான நம்பிக்கை ஆகியவற்றின் அடிப்படையில் எடுக்கப்பட வேண்டு மென்பதில் கவனமாய் இருக்க வேண்டும்.

3. இந்தச் சிக்கலுக்கு இரண்டு பக்கங்கள் உண்டு என்பதை அறிவீர்கள். இந்திய மக்கள் தனித்தனிப்பான்மைகள் கொண்ட பெரும் எண்ணிக்கையிலான இனங்களைச் சேர்ந்தவர்க ளென்றும், அவர்கள் பின்பற்றும் பல்வேறு சமயங்களின் கோட்பாடுகள் பகைமை ரீதியில் வேறுபட்டும் முரண்பட்டும் விளங்குபவை யென்றும், பல்வேறு வகையான சடங்குகளைப் பின்பற்றுகிறார்கள் என்றும், பல்வேறு மொழிகளைப் பேசுகிறார்களென்றும் ஒற்றுமை யில்லாத பாரபட்சங்கள் பல கொண்டவர்கள் என்றும், முரண்படும் சமூக வழக்கங்கள் பல கொண்டவர்கள் என்றும், ஒன்றுக்கொன்று எதிரான பொருளியல் நலன்களைக் (Material Interests) கொண்ட வர்கள் என்றும் சுட்டிக்காட்டப்படுகிறது. இவ்வாறு பல்வேறு முரண்பாடுகளைக் கொண்டதொரு பெரும் மக்கள் திரள் எவ்வாறு தன்னாட்சி நடத்தும் சமூகமாய் விளங்க முடியும் என வினா எழுப்பப்படுகிறது. இவையெல்லாம் நடைமுறை உண்மைகள். இந்தியாவின் தன்னாட்சி மீது இந்த மெய்ம்மை நிலைகள் செலுத்தக் கூடிய தாக்கத்தைப் அறிவுடைய மனிதர் எவரும் புறக்கணித்து விட முடியாது. "இந்த நடைமுறை உண்மை நிலவரங்களை ஏற்றுக் கொண்டு அவற்றிலிருந்து நாம் என்ன முடிவுக்கு வர முடியும்?" என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். ஆனால் பெரியோர்களே, இதைப் பற்றிய உங்கள் முடிவான கருத்துக்களை நீங்கள் வெளியிடத் தொடங்கு முன்பு இவை போன்றே வேறு பல நடைமுறை உண்மை நிலைகள் சிலவற்றையும் உங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்பு கிறேன். லட்வியா, ருமேனியா, லிதுவேனியா, யுகோசுலோவேகியா, எஸ்தோனியா, செக்கோசுலோவேகியா ஆகிய நாடுகளின் நிலைமை குறித்து எண்ணிப் பாருங்கள். இவையெல்லாம் உலகெங்கும் தன்னாட்சிக் கோட்பாட்டை நிறுவுவதை நோக்கமாய்க் கூறிக் கொண்டு, 1914ஆம் ஆண்டில் தொடங்கி நடத்தப்பட்ட முதலாம் உலகப் பெரும் போரின் முடிவுக்குப் பின்னர் உருவாகிய புதிய நாடுகளாகும். புதியாய் அமைக்கப்பட்ட இந்நாடுகள் அனைத்தும்

விடுதலையும் இறைமையும் கொண்ட தன்னாட்சி நாடுகளாகும்; ஒவ்வொன்றும் தனது உள்நாட்டு, வெளிநாட்டு விவகாரங்களில் முழுமையாக இறைமை பெற்ற நாடுகளே. இந்த நாடுகளில் உள்நாட்டு சமூக நிலைமைகள் என்ன? அங்குள்ள நிலைமைகள் இந்திய நிலைமைகளைப் போன்றோ, அன்றி அதை விட சீர்கேடானவை என்பதை நீங்கள் அறிய வியப்படையலாம். லாட்வியாவில், லாட் மக்களுடன், ருசியர்கள், செருமானியர்கள், யூதர்கள் அன்றி மற்றும் பல்வேறு தேசிய இனத்தவரும் வாழ்கின்றனர். விதுவேனியாவில் விதுவேனியர்களுடன், யூதர்கள், போலந்தியர்கள், ருசியர்கள் ஆகியோருடன் வேறு பல சிறுபான்மையினரும் வாழ்கின்றனர். யுகோசுலோவேகியாவில் செர்பியர்கள், குரோசியர்கள், சுலோவே னியர்கள், ருமேனியர்கள், அங்கேரியர்கள், அல்பேனியர்கள், ஜெர்மானியர்கள், மேகயர்கள், விதுவேனியர்களுடன் மற்றும் பல இனத்தவரும் வாழ்கின்றனர். அங்கேரியில் மேயர்கள், செருமானி யர்கள், சுலேவியர்கள் ஆகியோர் வாழ்கின்றனர். மொழியால், இனத்தால் ஒன்றுக்கொன்று வேறுபட்டும் முரண்பட்டும் உள் நாட்டிலேயே போராடும் குழுக்கள் பலவற்றைக் கொண்டவை இந்நாடுகள். இத்தகைய பல்வகை வேறுபாட்டினை இணைக்கச் சமயப் பாலமும் கூட அங்கெல்லாம் கிடையாது. ரோமன் கத்தோலிக்கர்கள், கிரேக்க கத்தோலிக்கர்கள், செக்கோசுலவேகிய கத்தோலிக்கர்கள் போன்று கத்தோலிக்கர்களிலேயே நான்கைந்து பிரிவினர் இருப்பதுடன், எவாஞ்சலியர்கள், யூதர்கள், புரோடெஸ் டண்டுகள் ஆகியோருடன் வேறு பல சிறு சமயக் குழுக்களும் காணப்படுகின்றன. இவை குறித்து சற்று எண்ணிப் பாருங்கள். இந்நாடுகளில் நிலவும் பரந்து பிளவுபட்ட பல்வேறு பாகுபாட்டு நிலைமைகளை விடவா இந்திய நிலைமை திகைக்க வைப்பதாய் உள்ளது? இல்லையென நான் துணிந்து கூறுவேன். இந்தியாவைப் பற்றிய முடிவுக்கு நீங்கள் வருமுன்னர், இந்தப் பல்வேறு நாட்டு நிலைமைகளையும் சீர்தூக்கி ஆய்ந்து பார்த்துத் தன்னிச்சையானதும் நேர்மையானதுமோர் முடிவுக்கு வருமாறு வேண்டுகிறேன். ஆகவே பெரியோர்களே, இனம், சமயம், மொழி, பண்பாடு ஆகிய பல்வேறு வகையாலும் பாகுபாடுற்ற பல்வேறு வகை மக்களைக் கொண்ட லாட்வியா, விதுவேனியா, யுகோசுலேவியா, எஸ்தோனியா, செக்கோசுலவேகியா, அங்கேரி, ருமேனியா ஆகிய நாடுகளில் மக்கள் ஒன்றுபட்டுத் தமது நாட்டில் தன்னாட்சி சமூகங்களாய் விளங்க முடியும் போது இந்தியர்களால் ஏன் இயலாது என எண்ணிப்

பாருங்கள். இயலாதென்பதற்கான காரணங்கள் எதையும் என்னால் காண இயலவில்லை. அப்படிக் காரணங்கள் கூற இயலும் எனக் கருதும் நண்பர்கள் இருப்பின் அவர்கள் கூறும் காரணங்களைக் கேட்டறிய விரும்புகிறேன்.

4. இத்தகைய பன்முக வேறுபாட்டுக் கூறுகள் (Divergent Elements) அனைத்தையும் சீரான ஒரே கூறாக ஒன்றிணைத்த பின்னர்தான் தன்னாட்சி நிலையைப் பெறத்தக்க சமூகம் உருவாக முடியும் என்று கருதுவது, தன்னாட்சி முறையே வேற்றுமைக் கூறுகளை ஒன்று படுத்திப் பிணைக்கவல்ல ஆற்றல் கொண்டதென்பதை மறந்து குதிரைக்கு முன் வண்டியைப் பூட்டுதல் போன்ற எண்ணப் போக்காகும் என்று எனக்குத் தோன்றுகிறது. தமதெல்லைக்குள் ஒரே மொழியால், ஒரே சமயத்தால், ஒரே பண்பாட்டால் ஒன்றுபட்ட சீரான மக்கள் குழுமத்தைப் பெற்றிருத்தல் மிகச் சில நாடுகளுக்கே வாய்த்துள்ள அரியதோர் நிலையாகும். ஆனால் வரலாற்று, புவியியல், அரசியல் காரணங்களால் மொழியால், சமயத்தால் பண் பாட்டால் வேறுபடும் மக்கள் குழுக்களே பெரும்பாலான நாடுகளில் காணப்படுகின்றன; அங்கெல்லாம் இவ்வேறுபாடுகள் காலத்தால் ஒன்றோடொன்று கலப்புற்று உள்ளன. சீரான மக்கள் குழுமம் எனும் அளவுகோலை இம்மக்களின் பால் நீட்டியிருந்தால் அவர்க ளெல்லாம் இன்றைக்குத் தமது வாழ்க்கை வழியாக்கிக் கொண்டிருக்கும் தன்னாட்சி முறை எனும் திட்டத்தின்கீழ் வந்திருக்கவே முடியாது. மேலும் நன்கு சிந்தித்துப் பார்ப்போமெனில், தங்கள் பழைய நிலைகளில் உதிரிகளாய்ப் பிரிந்து வேறுபட்டிருந்த தனிக்குழுக்களை யெல்லாம் ஒன்றிப் பிணைப்பாக உருவாக்கப்பட்ட தன்னாட்சி அரசியலமைப்புச் சட்டமன்றோ ஜெர்மன் மக்களையெல்லாம் ஒன்றாய் இணைத்தது.1870ஆம் ஆண்டுக்கு முன்னர் பவேரியர்கள், பிரஷ்யர்கள், சாக்சானியர்கள் எனத் தனித்தனிக் குழுக்களாய், இனங்களாய், நாடுகளாய் இருந்த மக்களைப் பொதுஅரசின் கீழ்கொண்டு வராமல் ஒன்றி இணைத்திருக்க முடியுமா? பல் வகையாலும் வேறுபட்ட மக்களாய், ஒரு தேசிய இனமாய் ஒன்றி ணைப்பதற்கான ஒப்பற்ற கருவி பொது அரசாங்கம் ஒன்றுதான். இதை விளங்கிக் கொள்வதற்கு ஜெர்மனியைத்தான் எடுத்துக் காட்டாய்க் கூற வேண்டுமென்பதில்லை. இந்திய நாடே இதை மெய்ப்பிப்பதற்கானதோர் சிறந்த எடுத்துக்காட்டு அல்லவா? இத்துணை வேறுபாடுகளும் பாகுபாடுகளும் நிறைந்த இந்தியாவில்

நாம் ஒரே நாட்டினர் எனும் உணர்வு நிலவுகின்றது எனில், பிரிட்டிஷ் ஆட்சி தொடங்கியதிலிருந்து இப்பரப்பு முழுவதும் ஒரே பொது ஆட்சியின் கீழ் இருப்பதுதான் காரணம் என்பதை ஏற்கத்தான் வேண்டும். எனவே வரலாற்று நோக்கிலும், காரண காரியவியல் நோக்கிலும், மக்கள் நிலைமைகள், அவற்றில் நிலவும் வேறுபாடுகள் இந்தியா தன்னாட்சி பெறுவதற்குத் தடையாய் இருப்பதாய் எவரும் கருதவியலாது என்றே எனக்குத் தோன்றுகிறது. சொல்லப் போனால் இந்தியா ஒன்றுபட்ட நாடாக வேண்டும் என்பதே நமது குறிக்கோள் எனில் அதை எய்துதற்குரிய வலிமை வாய்ந்த கருவி தன்னாட்சி அரசே என்பதைத் துணிந்து கூறுவேன்.

## II பிரச்சினையின் தன்மைகள்

5. மக்களிடையேயும், நிலைமைகளிடையேயும் காணப்படும் வேறுபாடுகளால் எந்தப் பின்னடைவுகளும் கிடையாதா என்று நீங்கள் கேட்பீர்கள் என்பதில் ஐயமில்லை. தன்னாட்சி கொண்ட இந்தியாவுக்கான அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்குகையில் இவற்றையெல்லாம் நாம் கணக்கிலெடுத்துக் கொள்ளத் தேவையில்லையா? எடுத்துக்கொள்ளத்தான் வேண்டும் என்று சிறிதும் தயக்கமின்றிக் கூறுவேன். மக்களிடையேயும், நிலைமைகளிலும் இந்த வேறுபாடுகளையெல்லாம் புறக்கணித்துவிட்டு தன்னாட்சி இந்தியாவுக்கு வரம்புகளோ கட்டுப்பாடுகளோ ஏதும் இல்லாத அரசியலமைப்புச் சட்டம் உருவாக்கப்பட வேண்டுமென்று கூறுதல் இன்றைய சராசரி காங்கிரஸ் அரசியல்வாதிகளின் போக்காய்க் காணப்படுகிறது. நாட்டு சமுதாய நிலைமைகளைக் கருத்தில் கொள்ளாமல் உருவாக்கப்படும் அரசியலமைப்புச் சட்டத்தின் கீழ் அரசியல் அதிகார மையம் எவரிடம் இருக்கும் என்பதை ஆன்ற பெருமக்களாகிய நீங்கள் எண்ணிப் பார்க்க வேண்டும். சிறுபான்மை இன மக்களிடையே அது இருக்குமென்றா எண்ணுகிறீர்கள்? இந்திய சமுதாயத்தின் நடைமுறை நிலைமைகளைப் புறக்கணித்துவிட்டு அமைக்கப்படும் தன்னாட்சி அரசாங்கத்தில் அரசியல் அதிகாரத்தின் பிடிகள் யாவும் வசதி படைத்த, கல்வியில் ஓங்கிய முன்னணி சாதிகளைச் சேர்ந்த மேல்தட்டு மக்களின் கைகளில்தான் போய்ச் சேரும் என்பதை நான் மிகத் தெளிவாக உணர்ந்திருக்கிறேன். அதாவது, செல்வத்திலும், கல்வியிலும், சமூகத் தகுதியிலும், அரச

போகத்தில் திளைத்துக் கொண்டிருப்போர் கைகளில்தான் போய்ச் சேரும்.

அரசியலில் ஆகட்டும்; பிற துறைகளிலாகட்டும்; வல்லவர் களுக்கே வெற்றி என்பது தேற்றம். மேல்தட்டினருக்குக் கல்வியாலும் செல்வத்தாலும் பெற்ற வளங்கள் துணை நிற்கும். ஆனால் சிறு பான்மை, நலிவடைந்த சமூக மக்கள் மேல்தட்டு மக்களின் இந்த வொரு வளத்திற்கு எதிராக மட்டுமே போராட வேண்டியிருக்கு மென்று எண்ண வேண்டாம். செயல்பாட்டில் மிக நுட்பமான தாயினும் மெய்யான கூறும் மற்றொன்று உண்டு. அதுதான் அவர்களது நிலைத்த சமுதாயப் பிடிப்பு. இந்த உறுதியான பிடிப்பில் தகுதிக்கோ திறமைக்கோ சற்றும் இடமில்லை. இந்திய மக்கள் உறவு, கணப்பற்றுகளில் மிக்கவர்கள், தமது உறவோ கணமோ அல்லாத மனிதர்களிடையே அளவிறந்த பாரபட்ச உணர்வுகாட்டி ஒதுக்கும் பான்மை மிகுந்தவர்கள். பெரும்பான்மைச் சமூக மக்களிடையே இந்தப் பாகுபாட்டுணர்வு ஆழமாய் வேரூன்றிச் செயல்படும் நிலையில், சிறிய சமூகங்களைச் சேர்ந்த மக்களுக்கு இஃதொரு வன்மையான பின்னடைவாகவே விளங்கி அரசியல் அதிகாரம் எதையும் அவர்களுக்கு எட்டாக் கனியாக்கிவிடும்.

இந்த மனப்பான்மையின் செயல்விளைவு ஒடுக்கப்பட்ட மக்களுக்குப் பெருந்தீங்காகவே முடியும். சமய அடிப்படையில் அமைந்த இந்திய சாதி அமைப்பு ஏணிப்படிகளைப் போன்று வரிசையான பல தரநிலைகளைக் கொண்டதென்பதையும் ஏணியின் படிகளில் மேலே மேலே இருப்பவர்களுக்கு மிகுந்த மதிப்பும் கீழ்நிலையில் இருப்பவர்களுக்குப் பழிப்பும் மிகுந்து காணப்படும் நிலையையும் நீங்கள் யாவரும் நன்கறிவீர்கள். இந்தப் படியமைப்பு முறையின் விளைவாய்த் தாழ்ந்த படியில் உள்ள மக்கள் தமக்கு மேற்படிகளில் உள்ளவர்கள்பால் பயபக்தி காட்டி முன்னுரிமை காட்டுதலையும், தாழ்ந்த படிகளில் உள்ளவர்கள்பால் பழிப்பு காட்டிப் புறக்கணித்தலையும் வழக்கமாக்கி வைத்துள்ளது. இத்தகைய உளவியல் செயல்பாடு ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் அரசியல் அதிகாரம் பெறும் போராட்டத்திற்கு பேரழிவாய் முடிந்து விடும். இந்த நிலையில் தீண்டப்படாத மக்களுக்கு ஆதரவாய் ஒற்றை வாக்கு கூட அளிக்காமல், தீண்டப்படு மக்களே (Touchables) தீண்டப் படாத மக்களின் வாக்குகளில் பெரும்பகுதியைப் பெற்றுவிட முடியும்.

இவ்வாறாகத் தீண்டப்படாத மக்கள் தாங்கள் போராட்டத்தில் தோல்வியை அடைய நேருவதுடன், தம்மையறியாமலே தமது எதிரிகளின் வெற்றிக்குத் துணைபோகவும் நேரிடும். எனவே நடை முறைச் சமுதாய நிலைமைகளைப் புறக்கணிப்பதன் விளைவு, செல்வம், கல்வி, சமூக நிலை ஆகியவற்றால் மேம்பட்டு நிற்கும் மேல்சாதி மக்களிடம் அரசியல் அதிகாரம் முழுவதையும் அளித்து அவர்களை ஆளும் சாதியாய் ஏற்பதுதான் என்றால், நமது குறிக் கோளுக்கு ஏற்ற வழிமுறைகள் அனைத்தையும் பயன்படுத்தி அதைத் தடுப்பதே நமது கடமையாகும். நமக்கு மேல் ஆட்சி செய்பவர்கள் மாறுவது மட்டுமே நமக்கொன்றும் நிறைவு தந்துவிடாது. பிறிதொரு நாட்டை ஆளும் தகுதி எந்தவொரு நாட்டுக்கும் கிடையாது என்ற கருத்தில் காங்கிரசாருடன் நான் ஒன்றுபடுகிறேன். ஆனால் அதோடு நின்றுவிடாது; அதே நியாயத்தை மேலும் விரித்து, பிறிதொரு வகுப்பை ஆளும் தகுதி எந்தவொரு வகுப்புக்கும் கிடையாது எனும் கருத்தை அவர்களிடம் அடித்துக் கூறுவதில் தயக்கம் தேவையில்லை.

ஐரோப்பிய அதிகார வர்க்கம், இந்திய ஆளும் சாதியினர் எனும் இரு தரப்பினரையும் ஒப்புநோக்கில் - செல்வம், கல்வி, உயர் சமூகத் தகுதி ஆகியவற்றின் மேம்பாட்டால் பெற்ற வலிமையின் விளைவு களைத்தான் இங்கு குறிப்பிடுகிறேன் - இந்த இரு தரப்பாரில் இந்தியப் பொதுமக்களை யார் நன்கு ஆளமுடியும் என்ற வினாவுக்கு, நாட்டு மக்களின் வாழ்க்கையும் அவர்களது நிலைகள், பழக்கவழக்கங்கள், வாழ்க்கை முறை, சிந்தனைப் போக்கு, அவர்களது தேவைகள், முறையீடுகள் ஆகியவற்றை நன்கறிந்தவர்கள் என்ற முறையிலும், மக்கள் என்ன சிந்திக்கிறார்கள், எதை விரும்புகிறார்கள், எதில் அக்கறை கொள்கிறார்கள் என்பனவற்றை அறியவல்லவர்கள் என்ற முறையிலும் தாங்களே இந்திய அரசுப் பொறுப்பை மேற்கொள்ள மிகுதியான தகுதியுடையவர்கள் என்று இந்திய மேல்தட்டு சாதியினர் உரிமை கொண்டாடுகின்றனர்.

அவர்கள் கூற்று உண்மையாயிருக்கலாம். ஆனால் அம்மேல் தட்டு சாதியினர், தம்மீது சுமத்தப்படும், வகுப்புப் பாரபட்சம், கணப்பற்று, தமது உற்றார் உறவினர்களுக்கே நலம் செய்யும் மனப் பான்மை ஆகிய குற்றச்சாட்டுகளிலிருந்து தப்பிவிட முடியாது. பெரும்பாலான மக்களின் எதிர்காலத்தை முடிவு செய்யும் அதி காரங்களைப் பெறுவதற்கு அவர்கள் முற்றிலும் தகுதியற்றவர்கள் என்பதை இக்குற்றச்சாட்டுகள் உணர்த்துகின்றன. இன்னும்

ஒருபடி மேலே சென்று, பெரும்பாலான ஏழை எளிய மக்களுக்கும் இந்த உயர் வகுப்பாருக்குமிடையே நிலவும் பெருத்த இடைவெளி காரணமாக, எளிய மக்களின் தேவைகள், உணர்வுகள், விளைவுகள், குறிக் கோள்கள் ஆகியவற்றை இவர்கள் அறியவும் மாட்டாதவர்கள் என்றும் கூறலாம்; அதற்கும் மேலாக அவ்வெளிய மக்களின் எதிர்காலக் கனவுகளுக்கு இவர்கள் பகையாகவே விளங்குவர் என்பதும் உண்மை.

இதை நான் வலியுறுத்தி ஆணித்தரமாய்க் கூறுவதற்கு மற்றொரு அடிப்படைக் காரணம், மக்களாட்சியின் ஆணிவேர்க் கருத்தான சமத்துவத்தை ஏற்காத வகுப்பாரின் வசம் இந்தியத் தன்னாட்சி அரசை நம்பி ஒப்படைத்தல் இயலாது; ஆயிரக்கணக்கான ஆண்டு களாய்ப் பாகுபாட்டு உணர்வில் ஊறித் திளைத்துத் தாமே உயர்ந்த வர்கள் என்று வாழும் இவர்களது கையில் எளிய பொதுமக்களின் வாழ்வு நலன்கள் பாதுகாப்பாய் இருக்கவியலாது. ஒவ்வொரு தனித்தனி மனிதரின் மதிப்பையும் தனியே உணர்ந்து மதித்தல், ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு வாழ்க்கைதான் உண்டு என்பதை உணர்ந்து அவ்வாழ்க்கையில் அவன் தனது தகுதிகளுக்கேற்ப உச்ச கட்ட உயர்வை அடைய அனைத்து வாய்ப்புகளையும் அளித்தல் ஆகியவையே நிகழ்கால மக்களாட்சி அரசின் கோட்பாடுகளாகும். இந்திய மேல்தட்டு வகுப்பு மக்களின் சிந்தையிலோ செயல்களிலோ மெய்ப்பொருளியலிலோ இவ்வடிப்படைக் கோட்பாடுகள் கிஞ்சித்தும் இடம் பெறவில்லை.

மாறாக இக்கோட்பாடுகளுக்கு முரண்பட்ட வகையில், ஒவ்வொரு மனிதனுக்கும் உள்ள பல்வேறு பிறவிகளில் ஒரு கட்டமே இப் போதைய பிறவி என்றும், இப்பிறவியில் பெற்றிருக்கும் உயர்ச்சி, தாழ்ச்சிகள், முற்பிறவியில் செய்த வினைகளின் விளைவேயென்றும், இப்பிறவியில் எத்தகைய தகுதி, திறமை, பண்புகள் கொண்டிருந் தாலும் முற்பிறவியின் வினையால் கிடைக்கப் பெற்ற சமூகப் படித்தரநிலையில் எவ்வித மாற்றமும் அடைந்துவிட முடியா தென்றும் அவர்கள் கூறிவரும் மூடப் பழைமைகளுக்கும் மக்க ளாட்சியின் அடிப்படைகளுக்கும் தொடர்பு ஏதுமில்லை. அவர்கள் கருத்துப்படி பார்ப்பனராய்ப் பிறந்தவர் பார்ப்பனராகவே இருப்பர்; பறையராய்ப் பிறந்தோர் தொடர்ந்து பறையராகவே இருப்பர் என்பது வெற்றுப் பேச்சன்று. நடைமுறைச் செயல்பாட்டிலிருக்கும்

நம்பிக்கை. இத்தகைய மனப்பான்மை கொண்டவர்பால் அரசியல் அதிகாரத்தை விடுத்தல் கொலைகாரர் கையில் நாமே வாளை யெடுத்துக் கொடுப்பதற்கு ஒப்பாகும்.

6. இத்தகைய கண்ணோட்டத்தை வெளிப்படுத்தும் நாம் வகுப்பு வாதிகள் என்றும், நாட்டின் பகைவர்கள் என்றும் இரக்கமின்றிப் பழிதூற்றப்படுகிறோம். எந்தவொரு நாட்டிலும் அறிவாளி இன மக்களிடமே அரசியல் அதிகாரம் போய்ச் சேருதல் இயற்கை என்றும், திறமையான நிர்வாகத்துக்கு அதுவே .ஏற்ற முறை என்றும் காங்கிரசார் சலிப்பின்றிக் கூறி வருகிறார்கள். வரவிருக்கும் அரசியல் அதிகாரத்தை மேல்தட்டு சாதியினரிடமே விட்டுவிடலாம் என்று நம்மிடம் பரிந்துரைப்பவர்கள், சமூகமும் அரசியலும் ஒன்றுக் கொன்று தொடர்பில்லாத இரு வேறு மனித வாழ்க்கைக் கூறுகள் என்று எண்ணிக்கொண்டுள்ளார்கள் போலும். பெரியோர்களே, மனித நடத்தையைப் பற்றிய இத்தகையதொரு எந்திரமயமான சிந்தனைப் பள்ளத்தில் வீழ்ந்து விடாது விழிப்புடன் காத்துக் கொள்ள வேண்டுகிறேன்.

இப்படிப்பட்ட பிழையான கருத்தேற்றங்களிலிருந்து தப்பிச் சிந்தித்துப் பார்பீர்களாயின் மனிதர்கள் ஒன்றன் மீதொன்றாய் வரிசைகளிலும் வரிசை மாற்றியும் அடுக்கி வைக்கக் கூடிய பொம்மைகள் அல்லர் என்பதை உணரவியலும். வாக்களிக்க வேண்டி வரும் மனிதர் ஒருவர் தமது நலன்கள், கருத்துக்கள், மனப்பான்மை ஆகிவற்றைச் சட்டையைக் கழற்றுதல் போன்று அகற்றிவிட்டு வெறும் அரசியல்வாதியாக வருதல் இயலாத ஒன்று என உணர்வோம். அவன் தனது முற்றாளுமையுடன் வாழ்க்கையைப் பற்றிய சொந்தக் கண்ணோட்டத்துடன்தான் வருகிறான் என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். மேல்தட்டு மக்களின் திறமைகள் நாட்டின் பெருஞ்செல்வம் என்பதை ஏற்றுக் கொள்கிறோம். ஆனால் இந்தத் திறமைகள் மட்டுமே நாட்டின் விவகாரங்களில் மேலாண்மை செய்வதற்காக உரிமை எதையும் தந்துவிடவில்லை. அவர்களது நன்னடத்தையையும் இந்தத் திறமைகளை எப்படிப் பயன்படுத்தப் போகிறார்கள் என்பதையும் பொறுத்துத்தான் இந்த உரிமையைப் பெற முடியும். அந்த வகுப்பினர்க்கு நம்மை ஆளும் உரிமையைத் தரு முன்பு திறமையைவிடப் பயனைக் குறித்தே நோக்க வேண்டும்.

அடிசன் அவர்கள் கூறியதை இங்கு நினைவு கூர்வோம். "எப்படிப் பயன்படுத்தப் போகிறார்கள் என்பதில் கவனம் செலுத்தாது, நல்ல திறமைகள் இருக்கின்றன எனும் ஒரே காரணத்தால் அவற்றை (திறமைவாய்க்கப் பெறாதவர்கள்) மதித்துப் போற்றுவதைவிட மனித சமுதாயத்திற்குப் பெருந் தீங்கு ஏதும் இருக்க முடியாது. இயற்கைத் திறமைகளும் கலைகளில் தேர்ச்சியும் அவை அறவழியிலும் கண்ணியத் துடனும் பயன்படுத்தப்படுகையில் தான் மதிக்கப்பட வேண்டும். நம்முன் ஒருவர் உரையாடும் போது கூட, அவரது (உரையாடல்) திறமையைப் மெச்சிப் போற்றத் தொடங்கு முன்பு அவரது மனப்பான்மை குறித்து நேரடியாகவோ பிற வழியிலோ சரியான தகவல் அறிந்த பின்னரே செயல்பட வேண்டும். இல்லையேல் நியாயமாக நாம் அருவருத்து ஒதுக்கத்தக்க மனிதர்களின் அழகு, சொல்திறம் ஆகியவற்றில் மயங்கி அவர்களையேற்றிப் போற்றுவதில் முடியும்."

அரசியல் அதிகாரத்தைப் பெற்று அனுபவிக்கத் துடிக்கும் மேல் தட்டு வகுப்பு மக்களின் தன்மைகள், நடத்தை குறித்து ஏற்கெனவே விரிவாக விளக்கியுள்ளேன்; அதற்கு மேல் ஏதும் கூறத் தேவையில்லை. ஆனால் இன்றும் நமது நாட்டில் தொடரும் சில இழிவான அவலங்களுக்கு இந்த மேல்தட்டு மக்கள் பொறுப்பாயிருக்கும் நிலைமை குறித்து நான் வாய்மூடி மௌனமாய் இருந்து விடுதல் இயலாது. உலகின் வேறு எந்தப் பகுதியிலும் காணவியலாத தீண்டாமை என்னும் தீக் கொடுமையை இந்த நாட்டில்தான் ஐந்தாறு கோடி மக்கள் அனுபவித்து வருகிறார்கள். ஒவ்வொரு மனிதனுக்கும் கிடைக்க வேண்டிய எளிய உரிமைகள்கூட அவர்களுக்கு மறுக்கப் படுகின்றன.

நாகரிகம், பண்பாடு ஆகியவற்றின் பயன்கள் அவர்களுக்கு எட்டாக்கனியே. சமத்துவம் இன்மையால் மிக இழிந்த அவல நிலையில் அவர்கள் வாழ்கின்றனர். இத் தீண்டப்படாத மக்களை யன்றியும் இந்நாட்டில் பல்வேறு பழங்குடி மக்களும், மலைவாழ் மக்களும் நாடோடிகளைப் போல் அலைந்து கொண்டு காட்டு மிராண்டி நிலையில் வாழ்ந்துகொண்டு உள்ளனர்; அவர்கள் வாழ்க்கையில் நாகரிகம், பண்பாடு ஆகியவற்றின் நலன்களை அளிக்கும் முயற்சிகளை மேற்கொள்வார் எவருமிலர். ஆளும்

வகுப்பினர் கடந்த காலத்தில் எந்த அளவுக்குத் தொண்டு மனப் பான்மையும் பொறுப்புணர்வும் கொண்டிருந்தனர் என்பதைப் புலப்படுத்தும் சான்றுகள் இவை, வருங்காலத்தில் இவர்களது போக்கு முற்றிலும் மாறுபட்டிருக்கும் என்று நம்மை நம்பச் சொல்கிறார்கள். இதை நம்புமளவுக்கு நாம் ஏமாளியல்லர். இன்றைய சாத்தான்கள் ஒரே நாளில் தேவதைகளாய் மாறிவிடும் அற்புதங்க ளெல்லாம் எங்குமே நடை பெற்றுள்ளதாக நான் அறியேன்.

7. நாடு அரசியல் விடுதலை அடையும் வரை சமூகச் சிக்கலின் தீர்வுகள் காத்திருக்கலாமென்றும் நமக்குக் கூறப்படுகிறது. ஆனால் இந்தச் சிந்தனை வலைப் பின்னலில் அறிவார்ந்த மனிதர் எவரும் விழ்ந்து விட மாட்டார். புதிய களம் எதிலும் காலடி எடுத்து வைக்கு முன் அங்கே மறை குழி ஏதும் உளதா இல்லையா என்பதை உறுதி செய்துகொள்ள வேண்டும். தன்னகத்து ஒன்று உண்டாய் இருப்போர் இல்லாதவர்களைவிட வலிமை மிக்கவராய் விளங்குவர் என்பதை நாம் அனைவரும் அறிவோம்; அறிந்திருக்க வேண்டும். ஆற்றல் அதிகாரங்களைத் தம் வசம் கொண்டிருப்பவர்கள் அவற்றை இல்லாதவர்களுக்காகத் தாமாக ஒரு போதும் துறந்து விடுவதில்லை என்பதையும் நாமறிவோம்; அறிந்திருக்க வேண்டும் சமூகச் சிக்கலுக்கு உரிய தீர்வு காணப்பட்டால் தமது மேம்பாட்டு நலன்கள் பலவற்றை இழக்க வேண்டிய வகுப்பின் கைகளில் அரசியல் அதிகாரத்தைப் போகவிட்டுவிட்டோமெனில், அதற்குப்பின் இச்சிக்கலுக்கு நியாயமான தீர்வு தருவார்கள் என்று நாம் நம்பியிருக்க முடியாது; அப்படித் தீர்வு வேண்டின் அதிகார மேடையில் ஏற யாருக்குத் துணைநின்றீர்களோ அவர்களை அதனின்று நீக்க பெரும் புரட்சியொன்றில் ஈடுபட நீங்கள் தயாராய் இருந்தாலன்றி அது இயலாது.

எனவே பெரியோர்களே, மாபெரும் அரசியல் அறிஞர் எட்மண்ட் பர்க் கூறும் அறிவுரையையே நான் நினைவுறுத்த விரும்புகிறேன். “அளவுமிக்க பாதுகாப்பு உணர்வை மேற்கொண்டு அழிந்து போவதை விட, அக்கறை மிகுந்த ஐயப்பாடுகளை யெழுப்பிப் பிறர் பழிப்பதற்கு ஆளாவது மேலானது.” இவ்வறிவுரையின்படி சமூகச் சிக்கலுக்கான தீர்வு காண்பதற்குரிய வழிவகைகளை முன்னதாகவே அரசியல் இயந்திரத்தில் அமைப்பதுதான் நிலையான உறுதிப் பாட்டைத் தரும் வழியென்று நான் கருதுகிறேன். மாறாக அந்த

இயந்திரத்தைக் கட்டுப்பாடுகள் ஏதுமின்றிக் கைப்பற்ற எண்ணு வோரிடம் பறிகொடுத்துவிட்டு அவர்களது கருணையை எதிர் நோக்கி நிற்பது தும்பை விட்டு வாலைப்பிடிக்கும் முயற்சியாகும்.

## III ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கான பாதுகாப்புகள்

8. இப்போது நாம் ஒன்றைத் தெளிவாக்கிவிட வேண்டும். இந்தியாவுக்குத் தன்னாட்சி கிடைப்பதற்குச் சமூகக் காரணிகள் தடையாக மாட்டா என்பதை ஏற்றுக்கொள்கிறோம்; அதே சமயம் தன்னாட்சி அரசுக்கான அரசியலமைப்புச் சட்டம் வரையும்போது சிறிய, நலிவுற்ற சமூகங்களின் நலன்கள் ஒரு மூலையில் புறந்தள்ளி ஒதுக்கப்படாதவாறு தடைகளும், காப்புகளும் தேவை என்பதை நாம் மறந்துவிட இயலாதென வலியுறுத்துகிறோம். ஒடுக்கப்பட்ட வகுப்புகளைப் பொறுத்த மட்டில் இதை நாம் எவ்வாறு அடையப் போகிறோம் என்பது குறித்துத்தான் நான் அடுத்தபடியாக எடுத்துக் கொள்ள முனைகிறேன். இச்சிக்கலுக்குத் தீர்வு காணப்பட்டாக வேண்டும் எனும் தேவையை உணர்ந்து ஏற்றுக்கொள்வதுடன், அத்தீர்வு தன்னாட்சி அரசுக்காக உருவாக்கப்படும் அரசியலமைப்புச் சட்டத்தில் இடம்பெற வேண்டுமென்பதையும் ஒப்புக்கொள்ளும் இந்திய அரசியல் சிக்கல்களை ஆய்ந்தறிந்த மாணவர்களும் உண்டு.

இச்சிக்கலுக்குத் தீர்வு காணும் முயற்சியில் நான் எனது உரையில் முன்னர் குறிப்பிட்ட உலகப் போருக்குப் பின்னர் உருவான நாடுகள் எய்திய தீர்வுகளிலிருந்து பாடம் கற்றுக்கொள்ள வேண்டும் என்பதையும் இம்மாணவர்கள் ஒப்புக்கொள்கின்றனர். ஏனெனில் இந்தியாவில் இப்போது காணப்படும் நிலைகள் அந்நாடுகளில்தான் அச்சமயம் நிலவின. இந்நாடுகளில் எல்லாம் சிறுபான்மை மக்களின் நலன்களைப் பாதுகாக்கும் பொருட்டு அந்நாடுகளின் அரசிய லமைப்புச் சட்டங்களில், சிறுபான்மையினரின் அடிப்படை உரிமைகள் குறித்த சட்டப்பிரிவுகள் இடம் பெற்றுள்ளன. இவற்றைப் போன்ற தொரு அரசியலமைப்புச் சட்ட முறையே ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் நலன்களுக்குத் தக்க பாதுகாப்பு அளிக்க உரித்தான சிறந்த முறை என்று நேரு குழுவின் அறிக்கையும் ஏற்றுக்கொண்டுள்ளது.

இத்தகையதொரு திட்டத்தினால் ஏமாற்றப்படாமல் இருக்க நாம் விழிப்புடன் இருக்க வேண்டும் என நான் எச்சரிக்கை விடுக்க

வேண்டும். இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் அடிப்படை உரிமைகள் எனும் கூறுகளைப் புகுத்தி இந்த உரிமைகள் மூலம் தங்கள் நலன்களைப் பெரும்பான்மையோரிடமிருந்தும் ஆளும் வர்க்கத்தினரிடமிருந்தும் காத்துக்கொள்ள முடியும் என்பதில் அளவுக்கு மேல் நம்பிக்கை வைத்தல் இந்திய அரசியல்வாதிகளின் வழக்கமாகி விட்டது. நமது பாதுகாப்பிற்கு இத்தகைய திட்டம் போதுமென்று நிறைவடைந்து விடலாகாது. இத்தகைய (அடிப்படை உரிமை) அறிக்கைகள் வரவேற்கத்தக்கனவே யென்றாலும், இத்தகைய உரிமை அறிக்கைகள் எவ்வளவுதான் விரிவாகவும் தெளிவாகவும் முழுமையாகவும் ஆர்வமூட்டும் நடையிலும் எழுதப்பட்டிருந்தாலும், இவ்வறிக்கைகள் மட்டுமே அவ்வுரிமைகள் நமக்குக் கிட்டுவதை உறுதி செய்துவிட முடியாது. உரிமைகள் யாவை என வரை யறுப்பதால் மட்டும் உரிமைகளை நாம் பெற்றுவிட முடியாது; உரிமை மறுக்கப்பட்டால் குறை தீர்ப்புக்கான வழிமுறை எப்படி வரையறுக்கப்பட்டுள்ளது என்பதைப் பொறுத்தே உரிமைகள் கிடைக்கப் பெறும். நான் குறிப்பிட்ட, போருக்குப் பின் உருவான புதிய நாடுகளின் அரசியலமைப்புச் சட்டங்களில், சிறுபான்மை யினருக்கான அடிப்படை உரிமைகள் வரையறுக்கப்பட்டிருப் பதுடன், பெரும்பான்மையோர் அவ்வுரிமைகளை மீறினால் சிறு பான்மையோர் சர்வதேச சங்கத்தில் முறையீடு செய்யலாம் எனும் விதிமுறையும் இடம் பெற்றிருந்தது. இத்தகைய முறையீடுகளைப் பெற்று ஆவன செய்தற்கென்றே, சர்வதே சங்கம் குழுவொன்றை நியமித்திருந்தது. அடிப்படை உரிமைகள் மீறப் படுதற்கெதிராக நேரு குழு அறிக்கையில் இத்தகைய பாதுகாப்பு ஏதேனும் தெரிவிக்கப் பட்டுள்ளதா? முறையீடு செய்வதற்கான வழிவகை எதையும் என்னால் அதில் காண முடியவில்லை. எனவே நேரு குழுவின் அறிக்கையில் காணப்படும் வாக்குறுதி ஒரு மாயத் தோற்றமே.

9. நேரு குழுவின் அறிக்கையில் முறையீட்டுக்கான விதிமுறை ஏதும் சேர்க்கப்பட்டாலும் கூட அத்திட்டத்தை ஏற்க வேண்டாம் என்றே நான் அறிவுரை கூறுவேன். சர்வதேச சங்கத்திற்கோ, அரசப் பிரதி நிதிக்கோ, அரசுக்கோ முறையீடு செய்வதற்கான விதிமுறை இருத்தல் ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் போராட்டத்தில் கைகொடுக்கும் கூடுதல் ஆயுதமாய் அமையும் என்றாலும், அது பயனுள்ள ஆயுதமாய் விளங்கவியலாது. உங்கள் நலன்களைப் பாதுகாப்பதற்குச் சிறந்த உறுதிப்பாடு, கட்டுப்படுத்தும் அதிகாரம் உங்கள் கைகளுக்கு வரப்

பெறுவதுதான்; அப்போதுதான் வரம்பு மீறித் தவறு செய்பவர்களைத் தண்டிக்கும் ஆற்றலைப் பெறுவதுடன் தவறு நிகழும் முன்னரே தடுத்துக் காக்கும் வல்லமையும் கிடைக்கப் பெறும். ஆளுநரோ, அரசப் பிரதிநிதியோ, சர்வதேச சங்கமோ போன்ற மூன்றாம் தரப்பினர்கள் காப்பார்கள் என்பது நமது காப்பை ஒரு போதும் உறுதி செய்யாது.

நமது உரிமைகளைப் பாதுகாப்பதற்கான அதிகாரத்தைத் தம் வசம் கொண்டிருப்போர் அவற்றை முறையாகப் பயன்படுத்த முன் வரவில்லையெனில் அத்தகைய அதிகாரத்தால் நமக்கு என்ன பயன்? தன்னாட்சி இந்தியாவின் வருங்கால அரசாங்கத்தில் உரிய பங்கினை நாமும் பெறுவதொன்றே நமது நலன்களை உறுதியாய் காக்க வல்ல வழி முறையாகும்; சட்டமன்றங்களில் போதிய சார்பான்மை பெறுவதே இதற்கான ஒரே வழியாகும். இந்த வழியில் மட்டும்தான் அரசின் செயல்பாடுகளை நாம் அன்றாடம் கண்காணித்து நமது பாதுகாப்பையும் முன்னேற்றத்தையும் பேண முடியும். இத்துடன் கூடுதலான பாதுகாப்பும் உறுதிப்பாடுகளும் கிடைத்தால் பெற்றுக் கொள்ளுங்கள். அவை உங்கள் வில்லின் கூடுதல் நாண்களாக விளங்கலாம். ஆனால் சட்டமன்றங்களில் உரிய சார்பான்மை எனும் பாதுகாப்பை இழந்துவிட்டு அதற்கு மாற்றாக வேறெந்தச் சலுகை கிடைக்குமென்றாலும் அதை ஏற்றுக்கொள்ள வேண்டாம். போதிய சார்பான்மை வாயிலாய் உங்கள் நலன்களுக்கு உறுதிப்பாடு கிடைத் தாலன்றி நாட்டின் அரசியலமைப்புச் சட்ட மாற்றம் எதற்கும் இசைவை மறுப்பதற்கு உங்களுக்கு முழுமையான உரிமையுண்டு.

10. போதிய சார்பான்மை எனும் தொடர் இந்தியச் சிறு பான்மையினர் அனைவராலும் பேசப்படுகிறது. ஆனால் அளவு வாயிலாய் அது சரியாக வரையறுக்கப்படாமையால் தெளிவற்று, பூசற் காரணியாய் விளங்குகிறது. நமது கோரிக்கைக்குச் சரியான வடிவமளிக்க வேண்டுமெனில் அளவு வரையறையொன்றையும் நாம் தர வேண்டும். போதிய சார்பான்மை என்பது மக்கள் தொகை விகிதத்தில் இருக்க வேண்டுமென்று காங்கிரஸ் வட்டாரங்களில் ஒரு கொள்கை நிலவிவருகிறது. இந்த விகிதக் கொள்கை சிறுபான்மையின்பால் பெரும்பான்மையோர் காட்டும் பரிவற்ற பொருளற்ற வறட்டுக் கோட் பாடாகும். சிறுபான்மையினருக்குக் கிடைக்கும் அதிகாரம் அவர் களது உறுப்பினர்களையும் சமூகத் தகுதியையும் பொறுத்ததாகும். இச்சிறுபான்மைத் தொகையினரைக் கொண்டு தம்மைக் காத்துக் கொள்ளல் இயலாது என்றுதான், தமது பங்கீட்டை உயர்த்துமாறு

அவர்கள் கோருகின்றனர். அத்தகைய கூடுதலான சார்பான்மையின்றி, அரசியல் அதிகாரத்தைக் கையில் எடுத்துக்கொள்ளவிருக்கும் பெரும்பான்மையினர், வலிவான ஆதிக்கத்தைத் தாம் சமாளிக்க இயலாதென்று கருதுகின்றனர். இந்தக் கண்ணோட்டத்தில், சிறுபான்மையினரின் பாதுகாப்பை உறுதி செய்ய வேண்டுமெனில் மக்கள் தொகை விகிதத்தைவிடச் சற்றுக் கூடுதலான அளவில் அவர்களுக்குச் சார்பான்மை கிடைக்க வேண்டும். இது உண்மையாயின் சிறுபான்மையினருக்கு அவர்களது மக்கள் தொகைக்கு உரிய விகிதத்தில் மட்டுமே சார்பான்மை கொடுக்கப்படுமாயின் எந்த வகையில் அது அவர்களுக்குப் பாதுகாப்பைத் தர இயலும் எனும் வினாவை எழுப்புதல் நியாயமானதே அல்லவா? சிறுபான்மையினருக்குப் பாதுகாப்பு அளிப்பதாய்க் கூறுவதும், அவர்களுடைய மக்கள் தொகைக்கேற்ற அளவில்தான் சார்பான்மை பெறுவர் என்பதும் முரண்பட்ட எண்ணங்கள் என்றே கருதுகிறேன். சட்ட மன்றங்களில் சிறுபான்மையினருக்கு அவர்களது மக்கள் தொகை விகிதத்திற்கு ஏற்ற அளவிலேயே சார்பான்மை வரையறுக்கப்படுமாயின், சட்டமன்றமானது நாட்டில் நிலவும் சமூக நிலைமயை அப்படியே கொண்டுள்ள சிறு படிமமாகவே அமையும்; அந்த அமைப்பில் பெரும்பான்மையினர், சிறுபான்மையினர் வலிமை ஆகியவை புறத்தே சமூகத்தில் நிலவுகின்ற வலிமைகளின் அளவிலேயே இருக்கும். அதாவது, தற்போது நிலவுகின்ற நிலையில் மாற்றம் ஒரு சிறிதும் இராது. சமூகப் பிரிவினரிடையேயான அதிகாரப் பகிர்வு நிலை அப்படியே நீடிக்கும். ஆனால் அந்த அதிகாரப் பகிர்வுநிலையில் சிறுபான்மையினருக்கு வலிமை சேர்க்கும் வகையில் கூடுதல் பங்கீட்டுக்கு வழிவகுக்கும் சீர்திருத்தம் செய்யப்படுவதன் வாயிலாகவே சிறுபான்மையினரின் பாதுகாப்புக்கு உறுதியான வழி கிடைக்கும். இக்குறிக்கோளை எய்த வேண்டும் எனில் சிறுபான்மையினருக்கும் அவர்களது மக்கள் தொகை விகிதத்தை விடக் கூடுதலான சார்பான்மை கிடைப்பதற்கு வழிவகை செய்யப்பட வேண்டும்.

11. சார்பான்மை என்பது மதிப்பு உயர்ச்சியுடன் இருத்தல் அவசியம் என்பதைச் சிறுபான்மையோர் அனைவரும் ஏற்றுக் கொண்டாலும், அதைச் செயல்படுத்துதல் எவ்வாறு என்பதில் கருத்தொற்றுமை காணப்படவில்லை. சார்பான்மை உயர்ச்சி எதற்காக வேண்டப்படுகிறது; அதனால் எய்தப்படுவதென்ன என்பதைக் குறித்த சரியான புரிதல் இன்மையே காரணம் என எனக்குத் தோன்றுகிறது.

நான் முன்னர் தந்த விளக்கங்களிலிருந்து, வலுவற்றவர் கரங்களுக்கு வலிவூட்டவே கூடுதல் சார்பான்மை என்பது தெளிவு. தங்களைக் காத்துக்கொள்ளப் போதிய வலிமை இல்லாத சிறுபான்மையோருக்கே இத்தகைய வலிவூட்டல் தேவை. எனவே, கூட்டப்பட வேண்டிய வலிமை எவ்வளவு என்பது கரம் எந்த அளவுக்கு வலிவு குன்றி யிருக்கிறது என்பதையே சாரும் என்பது தெளிவு. கரம் நீளம் மிகக் குறைந்ததாயின் அக்கரத்தில் நீண்ட ஆயுதமும், நீளமிக்க கரங்களில் நீளம் குறைந்த ஆயுதமும் தரப்பட்டால்தான் சமநிலை நிலவும். மற்றொரு வகையில் கூறுவதெனில் சார்பான்மை உணர்ச்சி எல்லாச் சிறு பான்மையினருக்கும் ஒரே அளவில் இருக்கலாகாது என்பதும், அவரவர்க்குத் தற்போதுள்ள சமூகத் தகுதி நிலையையும் கருத்தில் கொண்டே முடிவு செய்யப்பட வேண்டும் என்பதும் புலனாகும். சமூகத்தில் மிகத் தாழ்வான தகுதி நிலையுடைய சிறுபான்மை யினருக்கு மிகுதியான சார்பான்மை உயர்ச்சி (weightage) யும் மிக உயர்ந்த தகுதிநிலை கொண்ட சிறுபான்மையோர்க்கு, மிகக் குறைவான உயர்ச்சியே போதுமென்பதும் பெறப்படும். ஆனால் சமூகத்தின் தற்போதைய நிலவரம் என்னவெனில், எந்தச் சிறு பான்மையோர் மிகுதியான வளங்கள், வசதிகளைப் பெற்று சமூகத்தில் உயர்நிலைத் தகுதியில் உள்ளனரோ அவர்கள் சார் பான்மையிலும் பெரும் பகுதியைக் கைப்பற்றிக்கொண்டு மேலாதிக்கம் செலுத்திவருகின்றனர். முடி வெட்டப்பட்ட ஆட்டுக்குத்தான் குளிர் காற்றிலிந்து மிகுந்த பாதுகாப்பு தேவை என்பதன் அடிப்படையில் தான் சார்பான்மையில் உயர்ச்சி பெறற்குரிய சிறுபான்மையினர் யார் என்பதையும் யாருக்கு எவ்வளவு உயர்ச்சி என்பதையும் பற்றி முடிவெடுக்க வேண்டும். இதற்கு மாறாக, இக்கோட்பாட்டைத் திரித்து முடிவெடுத்தால் பாதிக்கப்படும் சிறுபான்மையினருக்கு மட்டுமின்றி இந் நாட்டுக்கும் அது தீங்காகவே முடியும்.

12. சிறுபான்மையினர் சார்பான்மைக்கு உயர்ச்சியளிப்ப தெனும் கோட்பாட்டைச் சரியாக எவ்வாறு செயல்படுத்த வேண்டும் என்பதைக் குறித்து இதுவரை நான் ஒரு கோடி காட்டினேன். உயர்ச்சியின் சரியான அளவை நிர்ணயிப்பது எவ்வாறு எனும் வினாக்குத் தீர்வு இன்னும் எஞ்சியுள்ளது. இந்த அளவு சூழ்நிலைக் கேற்ப அவ்வப்போது மாறுதலுக்குரியது என்பதைக் குறிப்பிடு வதுடன், அதைக் கணக்கிடுவதற்கான பொது அடிப்படைக் கோட் பாட்டைத் தருதல் மட்டுமே என்னால் இயலும். முதலாவதாக, மக்கள்

தொகை விகிதம் எந்த வரம்புக்கு மேல் இருந்தால் சார்பான்மை உயர்ச்சி தேவை என்பதைக் குறித்து இந்நாட்டிலுள்ள பெரும் பான்மையோர் சிறுபான்மையோருக்கிடையே ஒருமித்த கருத்து உருவாக வேண்டும். பின்னர், குறிப்பிட்டதொரு சிறுபான்மை இனத்த வர்க்கான சார்பான்மை அளவை நிர்ணயிக்கையில் அவ்வினத் தவரின் 1) சமூக நிலை 2) பொருளாதார வலிமை 3) கல்வி நிலைமை ஆகியவற்றை மதிப்பிட்டு அவற்றுக்கு எதிர்விகிதப் பொருத்தத்தில் உயர்ச்சி இருக்குமாறு சார்பான்மையின் அளவு முடிவு செய்யப்பட வேண்டும். இதனைச் சரியாய் நிறைவேற்றினால் சிறுபான்மைக் குழுக்களும், சிறுபான்மையினரும் உடன்பாட்டுக்கு வரவியலும்; அத்தகைய உடன்பாடு நியாமானதாகவும், சமநீதி வழங்குவதாயும் எந்தவொரு தரப்பினருக்கும் மனக்குறை விளைவிக்காத தாயும் அமையும்.

13. அடுத்து நமது கவனத்தை ஈர்க்கும் வினா, வாக்குரிமை யையும், வாக்காளர் தொகுதிகளையும் குறித்ததாகும். ஆன்றோர் பெருமக்களே, இவற்றைக் குறித்த நமது கோரிக்கை எவ்வாறு அமைய வேண்டும்? வாக்காளர் தொகுதிகளின் அமைப்பில் இரண்டு மாற்று வழிகள் உள்ளன. ஒன்று தனியான தொகுதிகளின் ஒதுக்கீடு; மற்றது கூட்டுத் தொகுதிகளில் இட ஒதுக்கீடு; இதில் எதைத் தேர்வு செய்வது என்பதைக் குறித்து ஒடுக்கப்பட்ட வகுப்புகளிடையே கருத்து வேற்றுமை நிலவுகிறது என்பதை நான் நன்கறிவேன். ஒடுக்கப்பட்ட வகுப்புகளில் பெரும்பான்மையோர் தனித்த வாக்காளர் தொகுதி களே வேண்டும் என்று கருதுகின்றனர். கூட்டுத் தொகுதிகளில் இட ஒதுக்கீடு செய்யப்பட்டால், வாக்களிக்கும் பெரும்பான்மை வகுப்பினர், ஒடுக்கப்பட்ட வகுப்பு வேட்பாளர்களில், தங்கள் விருப்புவெறுப்புகளுக்குப் பணிந்து தங்கள் நலன்களுக்கு ஆதரவாய் நடக்கக்கூடிய வேட்பாளருக்கே வாக்களிப்பார்கள் என்னும் அச்சமே காரணம். இத்தகைய அச்சத்திற்கு ஆதாரம் இல்லையென்று என்னால் கூறவியலாது. ஆனால் இதைப் போக்குவதற்கான வழிமுறை தனித் தொகுதிக் கோரிக்கையன்று; மாறாக நமது வாக்குரிமை வலிமையை முடிந்தவரை அதிகரிப்பதும், வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை கோருவதும் ஆகும். இதன் வாயிலாய் நமது வாக்காளர்களைத் தேர்ந்தெடுக்கும் விவகாரத்தில் பெரும்பான்மை இனத்தவரின் செல்வாக்கைக் கணிசமாய்க் குறைக்கவியலும், வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை

கோருதல் மிக முக்கியமென்று கருதுகிறேன். அவ்வாறு வயது வந்ததோர் வாக்குரிமை ஏற்கப்படுமாயின், கூட்டுத் தொகுதி முறையில், ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கு இட ஒதுக்கீடு அளிக்கும் திட்டத்திற்கு நாம் மறுப்பு தெரிவிக்க வேண்டியதில்லை.

14. இது தொடர்பாக முக்கியமானதோர் கருத்தை நான் கூறியாக வேண்டும். இந்த நாடு சாதி சமயங்களால் பிளவுபட்டிருப்பதால் சிறுபான்மை மக்களுக்குப் போதுமான பாதுகாப்பு அரசியலமைப்புச் சட்டத்தால் உறுதி செய்யப்படுவதன் வாயிலாகவன்றி இந்நாடு தன்னாட்சி சமூக நிலைக்குத் தகுதியுடையதாகாது எனும் நிலைப் பாடு இன்றைய நிலைக்கு ஏற்புடையதாயிருப்பினும், சாதிகளாகவும், பிற, சிறு குழுக்களாகவும் பற்பல துண்டுகளாய்ப் பகுக்கப் பட்டிருக்கும் இந்தியா ஒன்றுபட்ட நாடாக வேண்டும் என்பதே நமது அறுதிக் குறிக்கோள் என்பதைச் சிறுபான்மையினர் மறந்து விடலாகாது. இக்குறிக்கோளைத் தமது முதல் நோக்கமாய்க் கொள்ளாத சிறுபான்மையினர் எவரும் தமக்குத் தனியுரிமைகளும் சலுகைகளும் கோருதல் முறையன்று. எனவே சிறுபான்மையினர் அனைவரும் தமது, பாதுகாப்பு உரிமைகளைக் கோரும் போது இந்த இறுதி இலக்குடன் அவை முரண்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்பது புலனாக வேண்டும். உங்கள் பின்னடைவுகளால் நீங்கள் இன்னல் அடைகிறீர்கள் என்பது மெய்தான் என்பதால் நீங்கள் பாதுகாப்புகளைக் கோரலாம்; ஆனால் அந்தப் பாதுகாப்புகள் இடைவெளிகளை இணைக்கும் பாலமாய் விளங்க வேண்டுமே யன்றி இந்த ஏற்றத்தாழ்வுகள் என்றென்றும் தொடர்வதற்குரிய காரணி களாய் இருந்துவிடக் கூடாது. சிறுபான்மையினர் கோரும் பாது காப்புகளைத் தர இணங்குதல் என்பது பெரும்பான்மையினரின் கடமை என்பதிலும் ஐயத்திற்கிடமில்லை. அவ்வாறே அனைத்து மக்களுக்குமிடையே ஒருமைப்பாடு உருவாவதற்குத் தடையா யிருக்கும் பாதுகாப்புகள் எவற்றையும் கோராதிருத்தல் சிறுபான்மை யினரது கடமையாகும். இந்தக் கண்ணோட்டத்துடன் சிந்தித்தால் தனித்த வாக்காளர் தொகுதிகளை விட இட ஒதுக்கீட்டுடன் கூடிய கூட்டுத் தொகுதிகளே உகந்தவை என்பதை உணரலாம். இம் முறைதான் இன்றைய நிலைமைகளுக்குத் தீர்வாகவும் எதிர்காலக் குறிக்கோள்களுக்குத் துணையாகவும் உதவ வல்லது.

15. ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் பாதுகாப்பு நோக்கில் கவனிக்கப்பட வேண்டிய மற்றொரு கூறும் உண்டு. பொது (அரசு)ப்

பணிகளில் அவர்களுக்கான வேலை வாய்ப்புகளைப் பற்றியது அது. சட்டமியற்றும் அதிகாரத்தைவிட, அதைச் செயல்படுத்தும் அதிகாரம் முக்கியத்துவத்தில் குறைந்ததல்ல. சட்டமியற்றுவோரின் உணர்வுகளை நிர்வாகிகளின், திரிபு தாளங்கள் வெற்றாக்கி விடவோ சிதைக்கவோ இயலும். ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் அரசு நிர்வாகக் கட்டுப்பாட்டிலும் உரிய பங்கு பெறவேண்டும் என்பதற்கு இது மட்டுமே காரணமன்று. வேலைப் பளு மிகுதியினாலோ, பிற சூழ்நிலைகளினாலோ எல்லாவற்றையும் தெள்ளத்தெளிவாய்ச் சட்டத்திலேயே வரையறுத்துவிட இயலாது; எனவே நிர்வாகத் துறைகளின் தலைமையிடம் கணிசமான அளவில் எச்ச அதிகாரங்கள் விட்டு விடப்படுதல் தவிர்க்க இயலாதது. இந்த எச்ச அதிகாரங்கள் எந்த அளவுக்கு விருப்புவெறுப்பு, ஒருதலைப்பான்மை ஆகியவையின்றிப் பயன்படுத்தப்படுகின்றன என்பதையொட்டித்தான் சமுதாய நலம் மேம்பட இயலும். அரசுத்துறை பெரும்பாலும் ஒரேயொரு வகுப்பாரால் நடத்தப்பட்டு வரும் இந்தியா போன்ற நாட்டில் ஒரு குறிப்பிட்ட வகுப்பின் மேலாதிக்கத்தை வலுப்படுத்த இந்த ஏராளமான எச்ச அதிகாரங்கள் தவறாய்ப் பயன்படுத்தப்படும் அபாயம் உண்டு. இதைத் தடுப்பதற்கு உறுதியான ஒரே வழி அரசுப் பணிகளில் ஒடுக்கப்பட்ட வகுப்புகள் உட்பட அனைத்து சாதி, சமய மக்களும் பங்கு பெறுதலே என்பதை நாம் வலியுறுத்த வேண்டும். எனவே அரசுப் பணிகளில் குறிப்பிட்டதொரு சதவீதம் ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கு ஒதுக்கப்பட வேண்டுமென நாம் கோர வேண்டும்; இதை நிறைவேற்றுதல் ஒன்றும் கடினமல்ல; அரசியலமைப்புச் சட்டத்தில் ஒருவித முறை இயற்றி இதை உறுதி செய்யலாம். வருங்கால அமைச்சரவைகளில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களும் இடம் பெறுவார்கள் என உறுதிப்பாடு இருப்பின் இத்தகைய பாதுகாப்பு வேண்டாமென்று கூட விட்டு விடலாம்; ஆனால் ஒடுக்கப்பட்ட வகுப்புகள் எப்போதும் சிறுபான்மையினராகவே இருப்பார்களாதலின், இதற்கு வாய்ப்பு கிடையாது. எனவே இத்தகைய பாதுகாப்பு தேவையென்று நீங்கள் வலியுறுத்துதல் அவசியமாகிறது.

## IV ஒடுக்கப்பட்ட வகுப்புகளும் சைமன் ஆணையமும்

16. தன்னாட்சி இந்தியாவில் அரசியலமைப்புச் சட்டத்தில் நமக்கு என்னென்ன வகையான பாதுகாப்புகள் அவசியம் தேவை

என்று நான் கருதுவனவற்றை உங்கள் கவனத்திற்குக் கொண்டு வந்துள்ளேன். இப்போது நமது நலன்களுக்காக சைமன் ஆணையம் தந்துள்ள பரிந்துரைகள் யாவை என்பதில் நமது கவனத்தைத் திருப்புவோம். ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்குக்கான அரசிய லமைப்புச் சட்டப் பாதுகாப்புகளில் சைமன் ஆணையம் பரிவோடு கவனம் செலுத்தியுள்ளது என்பதில் ஐயம் இல்லை. ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் தற்போதைய நிலையைக் குறித்த உண்மையான தோர் படப்பிடிப்பைத் தர சைமன் ஆணையம் முயன்று உள்ளது; ஆனால் அப்படப்பிடிப்பு முழுமையானதாய் இல்லை. பள்ளிக்கூடம், கிணறு தொடர்பான இடர்ப்பாடுகளை மட்டுமே அவர்கள் குறிப் பிட்டுள்ளனர். ஆனால் இந்த எளிய வகுப்பு மக்கள் படும் எண்ணற்ற துன்பங்களில் அவை ஒரு மிகச் சிறு துணுக்களவே ஆகும். இருந்த போதிலும் ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கு அரசியல் அமைப்புச் சட்டப் பாதுகாப்பின் இன்றியமையாமையை மான்ட்போர்டு அறிக்கையை விட சைமன் ஆணைய அறிக்கை மிக மெய்யாக உணர்ந்துள்ளது. ஆனால் நமது கோரிக்கைகளின் தன்மையையும் அவற்றின் நியாய வலிமையையும் உணர்ந்துள்ள பாங்கில் இரண்டு அறிக்கைகளுமே நமக்கு மிக ஏமாற்றத்தைத்தான் அளிக்கின்றன என்பதை மிக வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

17. தற்போது, ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கு, நியமனத்தின் வாயிலாகத்தான் சார்பான்மை கிடைத்து வருகிறது என்பதை அறிவீர்கள். இந்த நியமன முறைச் சார்பான்மையால் விளைந்துள்ள தீங்குகள் என்னென்ன என்பதைத் தற்போது மேலவைகளில் உங்கள் சார்பாளராய் இடம்பெற நேர்ந்துள்ள எங்களைப் போன்றவர்கள் கூறமுடியும். சைமன் ஆணையத்தின் முன்னர் நமது மக்கள் அளித்துள்ள வாக்குமூலங்கள் நியமன முறையை வன்மையாய்க் கண்டித்துள்ளன என்பதை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த முறையினால், நமது மக்களில் சிறந்தவர்களை நாம் தேர்ந் தெடுப்பது தடுக்கப்படுவதுடன், நியமிக்கப்பட்ட நமது சார்பாளர் களையும் சுயேச்சையாய்ச் செயல்படவிடாமல் முடக்குகிறது. இந்தப் பழுதான முறையை சைமன் ஆணையம் கைவிட மறுத்து, தகுதியான வேட்பாளர்கள் தேர்தல் வாயிலாய்க் கிடைக்கவில்லையேல் ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் சார்பாளர்களை ஆளுநர் நியமிக்கலாம் எனும் பரிந்துரையைக் கெட்டியாய்ப் பற்றிக் கொண்டுள்ளது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். இது மட்டு

மன்று; சைமன் ஆணையம் இதற்கும் ஒரு படிகீழே சென்று சட்ட மன்றங்களில் ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் சார்பாளராய், அவ் வகுப்புகளைச் சாராதவர்களையும் ஆளுநர்கள் நியமிக்கலாம் என்று மிக விரும்பத்தகாத பரிந்துரையையும் தந்துள்ளது. இவையெல்லாம் நமது உடனடிக் கவனத்தை இப்போது செலுத்த வேண்டப்படாத ஒதுக்க நடவடிக்கைகள் (Reserve measures). ஆனால் எனது கருத்துப் படி, சைமன் ஆணையத்தின் முதன்மையான முன்மொழிதலே (Propasal) ஏற்கத் தகுதியில்லாதொன்றாகும். அதாவது, ஒடுக்கப்பட்ட மக்களுக்குக் கூட்டுத் தொகுதிகளில் இட ஒதுக்கீடு எனும் முறையில் சட்ட மன்றங்களில் சார்பான்மை தரப்படும் என்று அம்முன் மொழிவு கூறுகிறது. ஆணையம் இத்துடன் நின்றிருந்தால் இப் பரிந்துரை நமது இன்றைய நிலையை மேம்படுத்துவதில் பெருத்த முன்னேற்றம் என்று இதை நாம் வரவேற்றிருக்கலாம். ஆனால் இப்பரிந்துரையுடன் கூடவே, தேர்தலில் நிற்கத் தகுதியுடையவர் என்று மாநில ஆளுநரால் சான்றுறுதி வழங்கப்படாத ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் எவரும் தேர்தலில் போட்டியிட அனுமதிக்கப் பட மாட்டார்கள் என்றொரு நிபந்தனையையும் ஆணையம் இணைத் துள்ளது. பெயருக்குத் தேர்தல் முறையென்பது கூறப்பட்டாலும் இந்த நிபந்தனையோடு சேர்த்துப் பார்க்கையில் இது இன்றைய நியமன முறையின் மறுவடிவம்தான் என்பது தெளிவாதலால் நமக்கு ஏற்புடையது அல்ல; இதில் நாம் தேர்ந்தெடுப்பதற்கென ஒன்று மில்லை. மேலும் ஒரு தொகுதியில் ஒரு வேட்பாளருக்கு மட்டுமே ஆளுநர் சான்றுறுதியளிக்க முடிவு செய்கிறார் எனில், அத் தொகுதியில் தேர்தல் என்பது ஆளுநரின் நியமனமாய்த்தான் முடியுமே யன்றித் தேர்தலாய் இராது என்பது யாவர்க்கும் தெள்ளத் தெளிவாய் விளங்கும் எளிய உண்மை. சான்றுறுதி வழங்கப்படும் முறை, எந்த அடிப்படையில் அது வழங்கப்படும் என்பன எதுவும் தெளிவாக்கப்படவில்லை. ஆணையம் கூறுவதெல்லாம், "ஒடுக்கப் பட்ட வகுப்பு சங்கங்களுடன் கலந்தாலோசித்தோ, அல்லது தமக்குச் சரியென்று தோன்றுவதையொட்டியோ ஆளுநர் சான்றுறுதி வழங்கலாம்" என்பது மட்டுமே. இரு வழிகளில் எது பின்பற்றப் படுமாயினும் அதற்கு நாம் இசைவு தர வேண்டுவதில்லை. சங்கங் களுடன் கலந்தாலோசித்தல் என்னும் முறை பின்பற்றப்படுமாயின், பெரும்பாலான ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு ஏற்பில்லாத, ஆனால் தமக்கு உகந்த வேட்பாளர்களுக்கு ஆதரவு தெரிவிப்ப தற்காக எண்ணற்ற போலிச் சங்கங்கள் உருவாவதில்தான் இது போய் நிற்கும்.

மாற்று வழியென்பது இது மாம்லதார்கள், தாசில்தார்கள் போன்ற ஆட்சியாளர்களின் தன்னிச்சை அதிகாரப் போக்கிலேயே முடியும். ஏனென்றால் ஆளுநர் இத்தகைய அலுவலர்களின் அறிக்கையைக் கொண்டுதான் சான்றுறுதி குறித்து முடிவு எடுக்க வேண்டியிருக்கும். மாம்லதார்கள், தாசில்தார்கள் போன்றோர் எத்தகைய அலுவலர்கள் என்பதை நீங்கள் நன்கறிவீர்கள்; அவர்கள் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின்பாலும், அவர்களது அறிவுடைய மக்கள்பாலும் எத்தகைய மனப்பான்மை கொண்டவர்கள் என்பது யாவரும் அறிவோம். எனவே எத்தகைய மனிதர்களுக்குச் சான்றுறுதி தர அவர்கள் பரிந்துரைப்பார்கள் என்பதை நீங்களே எண்ணிப் பாருங்கள்.

18. ஆணையம் பரிந்துரைத்துள்ளவாறு, ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் சார்பாளர்களுக்கு மட்டும் தனித்த சான்றுறுதி தேவையென்பதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. தகுதியில்லாதவர்கள் தடுத்து நிறுத்தப்பட வேண்டும் என்பதுதான் இதன் நோக்கம் என்றால், பிற எல்லா வகையான வகுப்பு மக்களின் சார்பான்மை குறித்தும் இதே நிலைதான் எடுக்கப்பட வேண்டும் என்பது உறுதி. தகுதியின்மை என்பது ஆங்கில மொழியறிவும் பேச்சாற்றலும் இல்லாமையைக் குறிப்பது என்றால், பம்பாய்ச் சட்டமன்ற மேலவையில் ஆங்கிலமே அறியாத பார்ப்பனரல்லாத உறுப்பினர்களும், எண்ணற்ற சிந்து முஸ்லீம் உறுப்பினர்களும் இடம் பெற்றிருந்தனர் என்பதை நாம் சுட்டிக்காட்ட முடியும். அவர்கள் ஒரு போதும் உரையாற்றியதில்லை; வாய் திறந்து ஒரு கேள்வி கூடக் கேட்டதில்லை. பிற மாநிலச் சட்டமன்ற மேலவைகளில் ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் சார்பாளராய் இருந்திருக்கும் உங்களில் பலரும் இத்தகைய பேசா மாந்தர்கள் பலரைக் கண்டிருப்பீர்கள் என்பது உறுதி. இவர்களுக்கெல்லாம் சான்றுறுதி தேவைப்படாதபோது ஒடுக்கப்பட்ட வகுப்புகளைச் சேர்ந்த சார்பாளர்களுக்கு மட்டும் அது தேவைப்படுவதேன் என்பதை நம்மால் புரிந்துகொள்ள முடியவில்லை. எனவே நாம் சைமன் ஆணையத்தின் பரிந்துரையை ஒட்டுமொத்தமாய் ஒதுக்கித் தள்ளி, நமது சார்பாளர்களை எவ்வித நிபந்தனையோ தடையோ இன்றி நாமே தேர்ந்தெடுக்கும் உரிமையையே கோர வேண்டும். நமது நலன்கள் என்ன என்பதை முடிவு செய்பவர்கள் நாமாகவே இருக்க வேண்டுமேயன்றி அதை முடிவு செய்யும் அதிகாரத்தை ஆளுநர் எடுத்துக்கொள்ள நாம் அனுமதிக்கலாகாது.

19. மத்திய சட்டமன்றத்தின் அமைப்பு குறித்த சைமன் ஆணையத்தின் பரிந்துரை குறித்து நீங்கள் எவ்வாறு உணருகிறீர்கள் என நானறியேன். இப்போதைய நடைமுறையில் சட்டமன்றப் பேரவைக்கும் மேலவைக்கும் நேரடியான தேர்தல் முறையே நிலவுகின்றது. மத்திய மேலவையின் இப்போதைய அமைப்பே தொடர வேண்டும் என்று சைமன் ஆணையம் பரிந்துரைத்துள்ளது; ஆனால் பேரவை உறுப்பினர்கள், விகிதமுறு (Proportional) சார்பான்மையின்படி மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களால் மறைமுகத் தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்று பரிந்துரைத்துள்ளது. மறைமுகத் தேர்தல்களை நான் ஒருபோதும் ஆதரிப்பதில்லை; எனவே சைமன் குழுவின் பம்பாய் மாநில உறுப்பினர் என்ற முறையில் நான் மறுப்பு நிகழ்ச்சிக் குறிப்பு (Minute of dissent) எழுதியனுப்பி எனது வன்மையான கண்டனத்தைத் தெரிவித்துள்ளேன். சைமன் ஆணையத்தின் பரிந்துரையாய் வரும் இந்த அமைப்பில் சில நன்மைகளும் உண்டு; சில தீமைகளும் உண்டு. முதலாவதாக, சிறுபான்மையினரின் சார்பான்மைக்கு கூட்டுத் தொகுதிகளா, தனித் தொகுதிகளா என்ற சிக்கலை அது தவிர்க்கிறது. இரண்டாவதாக மாநில மேலவைக்கு ஒன்றும், பேரவைக்கு ஒன்றுமான இரட்டை வாக்குரிமை முறையின் தீங்குகளை அது தவிர்க்கிறது. மூன்றாவதாகப் பேரவையை எளிதில் சமாளிக்கக் கூடிய அவையாய் அது ஆக்குகிறது. அதன் தீமைகளில் முதலாவது, பொதுமக்களுக்கும் அரசுக்கும் இடையிலான பிணைப்பை அது வலிமை குன்றச் செய்து நாடு முற்றிலும் ஒன்று எனும் கண்ணோட்டத்தை மக்களின் பார்வையிலிருந்து அகற்றித் தேசிய ஒருமைப்பாட்டின் வளர்ச்சி வேகத்தைக் குன்றச் செய்கிறது. பரிந்துரைகளின் நன்மை மிகுதியா தீமை மிகுதியா என்பது எப்படியிருப்பினும் சைமன் ஆணையம் மத்தியச் சட்டமன்றத்தைக் குறித்த பரிந்துரை ஏற்கப்பட வேண்டும். ஆனால் அது எந்த அவைக்குப் பொருத்தமானது; பேரவைக்கா, மேலவைக்கா என்பதுதான் நாம் தீர்வு காணவேண்டிய கேள்வி; பரிந்துரை இரண்டு அவைகளுக்கும் ஒருசேரப் பொருந்தாது என்பது தெளிவு. மறைமுகத்தேர்தல் முறையின் மிகப்பெரும் பலவீனம் என்பது, அது தனது முதல் பயன்பாட்டிலேயே வலியிழந்துவிடுதல்தான். வாக்காளர்களுக்கும் வேட்பாளர்களுக்குமிடையே பெருத்த இடைவெளி நிலவுகையில் ஏதாவது ஒரு வகையில் சார்பான்மையைத் தொடங்கி வைக்க உறுதியாக வழிவகை தருகிறது என்பதொன்றே இதன் முக்கியப் பயன். ஆனால் வாக்காளரிடமிருந்து வேட்பாளர் இரண்டு

படி தள்ளி நிற்கும் சூழ்நிலையில், வாக்காளரின் சார்பாண்மை ஊடகம் என்ற தகுதியை வேட்பாளரிடமிருந்து அகற்றி அது தன் பயனை இழக்கிறது. மத்திய சட்டமன்றத்தை இரட்டை அவை கொண்டதாய் நிறுவ முடிவு செய்தோமெனில் பேரவையை நிறுவ மறைமுகத் தேர்வுமுறை பின்பற்றப்படுவோமெனில் மேலவையை நிறுவ, உற்ற வழிகள் ஏதுமின்றி வெற்றுநிலை உருவாக நேர்கிறது. எனவே அவை அமைப்பில், மாநிலங்கள் அவை, ஒரு மறுபரிசீலனை என்ற நோக்கில் கருதினால், மிகப் பயனற்ற, முறையான அமைப் பொழுங்கற்ற அவைபாய்க் குன்றிவிடுகிறது; தனது பணிகளைச் சரிவரச் செய்ய இயலா நிலைக்குத் தள்ளப்படுகிறது. எனது இக் கண்ணோட்டம் சரியெனில், மத்தியச் சட்டமன்றப் பேரவைகளுக்கு நேரடித் தேர்தலும், மேலவைகளுக்கு மறைமுகத் தேர்தலும் நடத்தப்பட வேண்டும்; மறைமுகத் தேர்தலில் மாநிலப் பேரவை உறுப்பினர்கள் வாக்காளர் தொகுதியாவர். மாநிலங்கள் அவையை அமைக்க இதுவே மிக உகந்த முறையாகும். எந்த அடிப்படை இறுதியில் தேர்ந்தெடுக்கப்படுமென்னும், மத்திய சட்டமன்றப் பேரவையில் ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கு உரிய சார்பாண்மை வழங்க மறைமுகத் தேர்தல் முறையே மிக எளிதான முறையாகும். இது கண்டனம் தெரிவிப்பதற்குரித்தான முறையன்று. நமது நலன்களுக்குப் பாதுகாப்பு எனும் நோக்கில், நியமன முறையோடு ஒப்பிடுகையில் இம்மறைமுகத் தேர்தல் முறை மிகப் பெரிய முன்னேற்றமேயாகும்.

20. மாநிலச் சட்டமன்றங்கள் தற்போது அமைந்துள்ள நிலையில் சிறுபான்மை வகுப்பினரின் சார்பாளர்கள் மிகக் குறைந்த அளவிலேயே அவற்றில் இடம் பெற்றுள்ளனர். 1919இல் ‘சௌத் பரோ குழு’ இந்த விவகாரத்தில் அவர்களுக்கு மிகுந்த அநீதி விளை வித்துள்ளது. எனவே, இந்திய அரசே கூட குழு பரிந்துரைத்திருந்த அற்பமான பங்கீட்டைச் சிறிது கூட்டலாம் என்று பரிந்துரைத்தது. அவர்களுக்கு இழைக்கப்பட்ட இத்தீங்கு அச்சமயம் சரிசெய்யப் படாமலேயே இருந்தது. 1923இல் நியமிக்கப்பட்ட ‘முடிமன் குழு’, ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கு மேலவைகளில் அளிக்கப்பட்டிருக்கும் ஒதுக்கீடு எத்துணை சொற்பமானது என்பதைச் சுட்டிக்காட்டி அதனைக் கணிசமாய் அதிகரிக்க வேண்டுமென்று பரிந்துரைத்தது. ஆனால் அங்கொன்றும் இங்கொன்றுமாய்ச் சிறுசிறு மாற்றங்கள் செய்யப்பட்டனவே யன்றிக் குறை களைவதற்கு உருப்படியான செயல்பாடு ஏதும் மேற்கொள்ளப்படவில்லை. வலிவற்ற நிலையி

லிருந்த ஒடுக்கப்பட்ட வகுப்புகளிடம், உங்கள் ஆதரவுக்கு அதிகார வட்டங்களின் துணையை நாடுங்கள் என்று கூறப்பட்டது. ஆனால் அதிகார வர்க்கமோ தம்மைத் தவிரப் பிறர் எவரிடமும் பரிவு கொண்டவர்கள் அல்லர் என்பதையும், தமது நலன்களின் மேம் பாட்டு நோக்கில்தான் அவர்களது நட்பும் உதவியும் அளிக்கப்படும் என்பதும் அநுபவம் நமக்கு அளித்துள்ள பாடம். கடந்த பத்தாண்டு களில் அதிகார வட்டங்கள் ஒடுக்கப்பட்ட மக்களிடமிருந்து பெற்றதை விட அவர்களுக்கு அளித்தது மிக மிகக் குறைவு என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். நடந்தது ஒருபுறம் இருக்க, அதிகார வட்டத்தின் நம்பகமற்ற ஆதரவை இனியும் நம்பியிராமல், ஏனைய சிறுபான்மை வகுப்பினரைப் போன்றே தமக்கும் அரசியல மைப்புச் சட்டம் வாயிலாய்ப் போதிய சார்பான்மை வேண்டுமென்று ஒடுக்கப்பட்ட வகுப்பினர்கள் எதிர்பார்த்தல் நியாயமேயன்றோ? மாநிலச் சட்டமன்றங்களில் ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கு ஒதுக்கலாம் என்று சைமன் ஆணையம் பரிந்துரைத்துள்ள சார் பான்மை ஒதுக்கீடுதான் எவ்வளவு? (ஒடுக்கப்பட்ட வகுப்பு களுக்காக) மாநிலத்தின் மொத்த இடங்களின் எண்ணிக்கையில் அவர்களது மக்கள் தொகை விகிதத்தில் முக்கால் பங்கு விகித அளவிலான எண்ணிக்கையில் இடங்கள் ஒதுக்கப் படலாம் என்று பரிந்துரைக் கப்பட்டுள்ளதாய்க் கூறுகின்றனர். இந்த அளவை மனதில் கொண்டு ஏனைய இந்தியச் சிறுபான்மையினருக்கு சைமன் ஆணையம் பரிந் துரைத்துள்ள சார்பான்மையின் அளவினை நோக்குவோம். முகமதியச் சிறுபான்மையினர், லக்னோ உடன்பாட்டின்படித் தாங்கள் ஏற்கனவே பெற்றிருந்த (மக்கள் தொகை விகிதத்தை விட) மிகவும் கூடுதலான சார்பான்மையைத் தக்கவைத்துக் கொள்ளலாம் என்று, காங்கிரசின் கடுமையான எதிர்ப்பையும் பொருட்படுத்தாது பரிந்துரைக்கப்பட்டுள்ளது. இந்தியக் கிறித்தவர்கள், ஆங்கிலோ இந்தியர்கள் ஐரோப்பியர் ஆகியோருக்கும் அவர்களது மக்கள் தொகையை ஒட்டிய, மக்கள் தொகை விகிதத்தை விட மிகக் கூடுதலான அளவில் சார்பான்மையை ஆணையம் பரிந்துரைத் துள்ளது. இது பெரும் ஊழல் அல்லவா? கடுமையான பின்னடைவு களுடன் இன்னல்கள் பல எதிர்கொள்ளும் சமூகத்தினருக்கு (பிறரைப் போன்ற) தாராளம் காட்டவில்லையென்றாலும், நியாயமான அளவிலாவது சார்பான்மை தரப்பட வேண்டாமா? இதோடு ஒப்பிடுகையில், இந்திய மத்தியக் குழு ஓரளவு நியாய உணர்வுடன், ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கு, அவர்களது மக்கள் தொகை

விகிதத்திற்கேற்ற அளவில் சார்பான்மை தரப்படலாம் என்று அளித்த பரிந்துரையை ஏற்றுச் செயல்பட்டிருந்தாலாவது, ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்குக் குறைந்த அளவு நீதியாவது கிடைத்திருக்கும், அல்லவா? ஒவ்வொரு சிறுபான்மையினரும் பெறும் நீதியில் அவர்களுக்குப் பங்கில்லையா?

21. தொடக்கத்திலிருந்தே மத்திய சட்ட மன்றங்கள் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு வாயிலடைபட்ட மன்றங்களாகவேயிருந்து வந்துள்ளன. 1921இல் மக்கள் ஆதரவின் அடிப்படையில் இவை திருத்தியமைக்கப்பட்ட போதும் கூட ஒடுக்கப்பட்ட மக்களுக்கு இவை அண்ட முடியாத நிலையிலேயே தொடர்ந்தன. 1926இல் தான் சிறிதளவு ஒண்ட இடம் என்பது போன்று 150 உறுப்பினர்கள் கொண்ட மத்திய சட்டமன்றப் பேரவையில் ஒரேயொரு இடம் மட்டும் ஒதுக்கப்பட்டது; மாநிலங்கள் அவையிலோ அதுவும் கிடையாது. இந்த நிலையில்தான் மத்தியச் சட்டமன்றத்தில் ஒடுக்கப் பட்ட வகுப்புகளுக்கு ஓரளவு இடம் ஒதுக்கும் நோக்கில் சைமன் ஆணையம் பரிந்துரைக்க முற்பட்டுள்ளது. சைமன் ஆணையத்தின் பரிந்துரை கூட மையப் பேரவைக்குத்தானே யன்றி மாநிலங்க ளவைக்குக் கிடையாது. நமது கோரிக்கைகள் குறித்து நம்மைப் பிச்சைக்காரர்களைப் போன்று கருதி நமக்கு மிக அற்ப சொற்பமான பரிந்துரையே செய்துள்ள போதிலும் அதற்காக சைமன் ஆணை யத்துக்கு நன்றி கூறுவோம். சைமன் ஆணையம் தனது பணியைத் தொடங்குவதற்கு முன்னர், இங்கு ஒடுக்கப்பட்ட மக்களின் நிலை குறித்து மதிப்பீடு செய்ய முனைந்த இந்திய அரசு, ஒடுக்கப்பட் வகுப்புகளின் மக்கள் தொகை, மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் கண்டுள்ளதை விட உண்மையில் மிகவும் குறைவானதுதான் என்று காட்ட எத்தனை பெருமுயற்சிகளையெல்லாம் மேற்கொண்டது என்பதை நீங்கள் யாவரும் நினைவில் வைத்திருப் பீர்கள். அப்படிப் பட்ட மிகக் குறைவான மதிப்பீட்டிலும் கூட இந்திய மக்கள் தொகையில் ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் மக்கள் தொகை 20 % தான் என்று சைமன் ஆணையம் எடுத்துக் கொண்டது. அதன் பின்னரும் ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கு மத்திய சட்டமன்றப் பேரவையில் சைமன் ஆணையம் பரிந்துரைத்துள்ள சார்பான்மை 8% இடங்கள் தான்; மாநிலங்கள் அவைக்கோ ஒன்றுமே கிடையாது.

22. சைமன் ஆணையம் நமது தேவைகளையும் கோரிக்கை களையும் திட்டமிட்டே குறைவாக மதிப்பீடு செய்திருப்பதற்கான

காரணத்தை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. சைமன் ஆணையம் நம்பால் நியாயமாக மட்டுமின்றி ஓரளவு பரிவுடனும் நடந்து கொள்ளும் என நாம் ஒவ்வொருவரும் எதிர்பார்த்திருந்தோம். இப்படி ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள்பால் பரிவு காட்டப்பட வேண்டும் என்று எதிர்பார்ப்பதற்குப் போதிய காரணங்கள் இல்லாமலில்லை. அரசியலமைப்புச் சட்ட உருவாக்கத்தில் எவ்வாறு ஒரு சமூகம் மட்டும் மிகுதியான விசுவாசம் காட்டி மிகுதியான சலுகைகளைப் பெற்றுக்கொள்ள முடிகிறதென்று எனக்கு விளங்கவில்லை. அப்படியே மிகுதியான சலுகைகளைப் பெறுவதற்கு விசுவாசம்தான் அளவுகோல் என்றால், ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் விசுவாசமோ எல்லையற்றது என்பதை அறிவோம். அவர்கள் பிரிட்டிஷாரைக் கொள்கை நோக்கில் மட்டுமின்றி, மெய்யான பற்றுடனும் நேசிப்பவர்கள். ஆனால் அவர்கள் தங்களது பாழ்பட்டுத் தாழ்ந்த நிலையைக் காட்டித்தான் தாங்கள் பரிவுடன் கருதப்படவேண்டுமென்று கோருகின்றனர் (விசுவாசத்தைக் காரணம் காட்டியல்ல). ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களைப் போன்று தாழ்வுற்றுச் செயலற்ற அவலநிலையில் இந்தியாவின் வேறு எந்தச் சிறுபான்மை இனமும் துன்பநிலையில் இல்லை. அவர்களது இன்னல்கள் மிகப் பல; மிகத் தனித் தன்மை வாய்ந்தவை என்பதன் காரணமாகவே இந்தியா, தம்மவர் ஆட்சி (Home Rule) நிலைக்குத் தகுதியற்றது என்று கருதப்பட்டது. இவ்வளவு தூரம் கொடுமைகள் இழைக்கப்பட்டு வந்த சமூகம்தான் மிகுந்த பரிவுடன் நடத்தப்படுதற்குரியது என்பதை நாணயம் வாய்ந்தோர் ஏற்பது உறுதி. சைமன் ஆணையம் அவர்கள்பால் பரிவேதும் காட்டவில்லை என்பது மட்டுமின்றி அவர்களுக்குக் குறைந்தபட்ச நீதியைக் கூட வழங்கத் தவறியுள்ளது. சைமன் ஆணையத்தை நியமிக்க வேண்டும் எனும் தீர்மானத்தைப் பாராளுமன்றத்தில் முன் மொழியும் போது பிரிக்கன்ஹெட் பிரபு அவர்கள் வெளிப்படுத்திய நல்லுணர்வுகள் என்னவாயின என்று கேட்கத் தோன்றுகிறது அல்லவா? ஒடுக்கப்பட்ட வகுப்புகள் என்பது சிறப்பானதோர் பொறுப்புக் கட்டளை என்றும், அதைப் பேணிக் காப்பதற்கு உறுதியான வழிவகை ஏதும் செய்யாமல் பிரிட்டிஷார் அதைப் பிறர் கையில் ஒப்படைக்க இயலாதென்றும் அப்போது அவர் கூறினார். பரிவார்ந்த அவ்வுணர்வுகளை சைமன் ஆணையத்தின் பரிந்துரைகள் நிறைவு செய்துள்ளதாய் எடுத்துக்கொள்ள முடியுமா? எனவே பெரியோர்களே, மற்ற மக்கள் நம்மை எவ்வாறு நடத்துகிறார்கள் என்பதில் நாம் விழிப்புணர்வோடு இருக்க வேண்டும். தீய வாய்ப்பால் நாம் அடைந்து வரும் பல்வேறு

இன்னல்களையும் பிரிட்டிஷார் விரிவாய் விளம்பரப்படுத்துதல் அவற்றை நீக்கும் நோக்கத்தில் அல்ல; இந்தியாவின் அரசியல் முன்னேற்றத்தை மட்டுப்படுத்துதற்கான சாக்குபோக்குகளாய் அவற்றைப் பயன்படுத்திக் கொள்வதற்காகத்தான் என்று நாம் ஐயமுற வேண்டியுள்ளது. எனவே, இனி நமது தலைவர்களின் கடமை, பிரிட்டிஷார் இதுவரை நமக்காக என்ன செய்திருக்கிறார்கள் என்பதில் மிக்க கவனம் செலுத்துவதை விட்டுவிட்டு, நமது எதிர் காலம் எவ்வாறு அமையவுள்ளது என்பதில் மிகுந்த அக்கறை செலுத்தி அதற்கேற்ப நமது செயல்பாடுகளை எவருக்கும் அஞ்சாது திட்டமிடுதலே என்று நான் கருதுகிறேன்; மேலும், நம்பால் தாராளமான பரிவுடன் நடந்து கொள்ளாவிடினும் நமது குறிப்பான நிலைகளுக்கேற்ப உரிய நியாயமான வகையிலாவது நாம் நடத்தப்பட வேண்டுமென்பதையும் வலியுறுத்த வேண்டும்.

## V. ஒடுக்கப்பட்ட வகுப்புகளும் தன்னாட்சியும்

23. தன்னாட்சி பெறும் இந்தியாவின் வருங்கால அரசிய லமைப்புச் சட்டத்தில் நாம் பெற்றாக வேண்டிய பாதுகாப்புகளையும் உறுதிப்பாடுகளையும் குறித்து நான் கூற வேண்டிய அனைத்தையும் கூறி முடித்துவிட்டேன் என்று கருதுகிறேன். ஆனால் அத்துடன் இம்மாநாடு கருத்தில் கொள்ளவேண்டிய பொருண்மைகள் யாவும் முடிவடைந்து விடவில்லை. நாட்டின் தற்போதைய அரசியல் போராட்டம் குறித்த தனது கருத்தை இம்மாநாடு தெளிவுறுத்தா விடின், அதன் நோக்கம் முழுமையாய் நிறைவு பெற்றதென ஒரு போதும் கூறவியலாது. 1928ஆம் ஆண்டு டிசம்பரில் நடைபெற்ற இந்திய தேசிய காங்கிரசின் கல்கத்தா மாநாட்டில், 1929 டிசம்பர் இறுதிக்குள், இந்தியாவில் டொமினியன் ஆட்சிமுறை நிறுவப்பட வேண்டுமென்றும், தவறினால் டொமினியன் தகுதிக்குப் பதிலாக முழுமையான விடுதலைக்குப் போராடவிருப்பதாகவும், பிரிட்டிஷ் பாராளுமன்றத்திற்கு இறுதி எச்சரிக்கை விடுப்பது போன்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டதை நினைவு கூர வேண்டுகிறேன். காங்கிரஸ் விடுத்த இந்த இறுதி எச்சரிக்கைக்குக் கிடைத்த பயன், இந்தியாவுக்கு டொமினியன் தகுதி வழங்குவதுதான் பிரிட்டிஷாரின் இந்தியக் கொள்கையின் நோக்கம் என்று வைசிராயிடம் இருந்து அறிவிப்பொன்று கிடைக்கப்பெற்றதுதான். டொமினியன் தகுதி என்பதை-ஒரு இலக்காக அன்றி உடனடி நிகழ்வாக எதிர்பார்த்த

காங்கிரசார் இவ்வறிவிப்பால் மனநிறைவு பெறவில்லை. எனவே 1929 டிசம்பரில் காங்கிரசார் கூடி, நாட்டு விடுதலையே இந்தியாவின் குறிக்கோள் என்று தீர்மானம் நிறைவேற்றினர். இந்திய தேசிய காங்கிரசின் அரசியல் குறிக்கோள் குறித்து உங்கள் பார்வை என்ன என்பதை அறிவித்தல் உங்கள் கடமை. விடுதலைக் கோரிக்கையை நமது எண்ணத்தில் இருந்து நாம் நீக்கியே விடலாம். இப்போதைய நிலையில் அது நடைமுறைக்கு ஒவ்வாதது என்பதுடன் பேரழி வாகவும் அமைந்துவிடக் கூடும் என்பது என் கருத்து. ஒரே நாடு, ஒரே அரசியலமைப்புச் சட்டம், ஒரே எதிர்காலம் எனும் உணர்வுகளால் ஒன்றிப் பிணைக்கப்பட்ட மக்கள்தாம் விடுதலை என்னும் சவாலை ஏற்றுச் செயல்படத் தக்கவர்கள். இத்தகைய நிலையில் இருந்து நமது நாடு வெகு தொலைவில் உள்ளது என்பதை எவரும் மறுக்கவியலாது. எனவே முழு விடுதலை என்பதிலுள்ள ஆபத்தைத் தவிர்த்து விடுதலை நிலையை அளிக்கும் டொமினியன் தகுதியே இப்போதைக்கு உகந்த, மேலான குறிக்கோளாகும். முழுவிடுதலை எனும் குறிக்கோளின் பயன் குறித்து காங்கிரசாருக்கே இன்னும் சில கடுமையான ஐயங்கள் தீராத நிலையிலிருப்பதால், அக்குறிகோளுக்கு நமது ஆதரவை நாம் மறுக்க வேண்டும்.

24. ஆனால் மக்களால் மக்களுக்காக நடத்தப்படும் மக்களின் ஆட்சியான தன்னாட்சியையொத்த டொமினியன் தகுதி குறித்து நாம் என்ன கூற வேண்டும்? இதைக் குறித்து யாதொரு முடிவும் எடுப்பதற்கு முன்னர் நீங்கள் உண்மையில் நன்கு சிந்தித்து பார்க்க வேண்டும். இந்தியாவுக்கு பிரிட்டிஷாரின் ஆட்சி ஓர் நற்பேறாகவே வாய்த்தது என்பதில் ஐயத்திற்கிடமில்லை. இந்த அரிய தொடர்பு நமக்குக் கிட்டி யிராவிட்டால், இந்தியாவில் அறிவார்ந்த விழிப்புணர்வு இத்தகைய அளவிலும் வேகத்திலும் நிகழ்ந்திருக்காது. விடுதலை, சமத்துவம், சகோதரத்துவம் முதலான குறிக்கோள்களோடு கூடிய ஐரோப்பிய நாகரிகத்தின் தொடர்பு இல்லாமல், இங்கு நிலவுகின்ற சமுதாய அற நெறிகள் எனக் கூறப்படும் பல்வேறு இழிந்த வழக்க மரபுகளைக் குறித்த அவமான உணர்வு கூட நமக்குத் தோன்றியிருக்க வாய்ப் பின்றிப் போயிருக்கலாம். இந்த இரு நாகரிகங்களுக்கு இடையிலான உயிர்ப்புள்ள தொடர்புதான், இரு நாகரிக நிலைகளின் ஒப்பீட்டு நோக்கில், இங்கு நிலவுகின்ற சமுதாய வழக்கங்கள் பலவற்றை மறு மதிப்பீடு செய்யவும், அதன் விளைவாய் அவற்றுள் பலவற்றைச் சமூகக் கேடுகள் என்று உணரவும் உதவியாய் அமைந்தது. வேறெந்தக்

காரணியையும் விட, இது ஒன்றுதான் நமது நாட்டை மறுமலர்ச்சிப் பாதையில் செலுத்த உதவியுள்ளது. பிரிட்டிஷார் இங்கு வேரூன்றி யிராவிடில், ஒரே அரசுமுறை, ஒரே சட்டமுறை எனும் மாபெரும் நன்மையை இந்தியா அடைந்திருக்க முடியாது. இவையிரண்டும் நாட்டின் நலத்திற்கு வலிமை வாய்ந்த கருவிகளாகும். குறிப்பாக இந்திய நாட்டிற்கு இவற்றின் மதிப்பு அளவிட முடியாதது. இவையே இந்திய மண்ணில் இந்திய தேசியம் வேரூன்றியதற்கான நிலையை உருவாக்கி உதவின; அவை ஆழமாக ஊடுருவி, நிலையான ஆட்சி அமைப்பிற்கான அடித்தளத்தை உருவாக்கின. இவை மட்டுமின்றி நாணய முறை, சாலைகள், கால்வாய்கள் இருப்புப் பாதைகள், அஞ்சல் துறை முதலான நவீன நாகரிகத்தின் சாதனங்களை இந்நாட்டுக்குத் தரத் தவறிவிட்டார்களென்றும் அவர்களைக் குறை கூற இயலாது.

25. இவையனைத்தும் உண்மையே. ஆனால் இதற்கு நாம் கொடுத்த விலை என்ன? பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இந்திய இனத்தையே சிறுகடித்து முடக்க வைக்கும் முயற்சி தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதில் ஐயமில்லை. காலஞ் சென்ற திரு. கோகலே அவர்கள் கூறியுள்ளவாறு, "நமது வாழ்நாள் முழுவதும் நாம் தாழ்மையான சூழ்நிலையிலேயே வாழ்ந்து கொண்டிருக்க வேண்டியுள்ளது. நம்மில் மிக உயர்ந்தவர்கள் கூட வளைந்து குனிய நேரிடுகிறது". தன்னாட்சி சமூகங்களில் இயல்பாய்க் காணமுடிகின்ற மேலேற முன்னேறும் உந்துதலை (Impulsc) இந்தியர் எவராலும் உணர முடிவதில்லை. நாட்டுக்குத் தன்னாட்சி வேண்டு மெனும் கோரிக்கைக்கு ஆதரவாக, மேலாதிக்க வகுப்பினர் வைக்கும் அறவியல் வாதங்களை நாம் ஏற்றுப் போற்றவியலாது என்பதுடன் அவை நமக்கு வெறும் வேடிக்கையாகவே தோன்றலாம்; அவை சாத்தான் வேதம் ஓதுவதைப் போன்ற தன்மையுடையவையே. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு நாம் கொடுத்த விலையோ நமது வளங்களோடு ஒப்பிடுகையில் மிக மகத்தானது. உலகிலேயே மிக விலையுயர்ந்த அரசு எனில் அது இதுவே. இந்த வாதம் ஒருவேளை உங்களுக்கு ஏற்பற்றதாய் இருக்கலாம். இந்த நாட்டில் சட்டத்தையும் ஒழுங்கையும் பேணிக் காப்பதற்காக எந்த விலையையும் கொடுக்கலா மென்று உங்களுக்குத் தோன்றலாம். ஆனால் நீங்கள் ஒப்புக்கொள்ள மறுக்கவியலாத காரணம் (விலை) ஒன்றுண்டு; அது இந்திய மக்களின் வறுமை நிலையாகும். உலகத்தின் எந்தவொரு பகுதியிலாவது இந்திய

மக்களின் வறுமைக்கு ஒப்பான வறுமை நிலையைக் காண முடியுமா? இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி அசைக்கமுடியாமல் நிறுவப்பட்டு விட்ட 19ஆம் நூற்றாண்டின் முதல் கால் நூற்றாண்டில் மட்டும் ஐந்து முறை பஞ்சம் விளைந்து, அதனால் 1,000,000 மக்கள் இறந்து பட்டனர். அதன் இரண்டாம் கால் நூற்றாண்டில் இரண்டு பஞ்சங்களில் 400,000 மக்கள் மடிந்துவிட்டனர். மூன்றாம் கால் நூற்றாண்டில் ஆறு பஞ்சங்களால் 5,000,000 மக்கள் மாண்டு விட்டதை நமது பதிவுகள் எடுத்துரைக்கின்றன. அந்நூற்றாண்டின் இறுதிக் கால்பகுதியில் நாம் காண்பது என்ன? பதினெட்டு பஞ்சங்களும் அவற்றின் விளைவாய் 15,000,000 முதல் 26,000,000 வரையிலான மக்கள் மடிந்திருக்கக் கூடும் எனும் மதிப்பீடும்தான். மேலும் பல மக்கள் (6,000,000க்கு மேலாக) அரசு தந்த அற்பப் பிச்சைகளால் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு நடமாடியவர்கள், இக்கணக்கில் சேர்க்கப்படவில்லை. பெரியோர்களே, இவற்றுக்கெல்லாம் காரணம் என்னவென்று நீங்கள் கருதுகிறீர்கள்? தெளிவாகக் கூறுவதெனில், பிரிட்டிஷ் அரசாங்கம் இங்கு திட்ட மிட்டுக் கடைபிடித்த கொள்கைகள்தாம் காரணம். இந்த நாட்டில் தொழிலையும் வணிகத்தையும் வளர வொட்டாமல் நசுக்கியொடுக்குவதே பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தொடர்ந்த கொள்கையாய் இருந்துவந்தது. இது வெறும் ஊகத்தின் அடிப்படையில் எழுப்பப்படும் குற்றச்சாட்டு அன்று. இந்தியா எப்போதுமே பிரிட்டிஷ் பண்டங்களுக்குத் திறந்த சந்தையாகத்தான் விளங்க வேண்டும் என்பது பிரிட்டிஷாரால் வெளிப்படையாக அறிவிக்கப்பட்ட கொள்கையாகும். இந்தியாவை நெடுங் காலத்திற்கு ஏழ்மைப் பூமியாய் ஆழ்த்தி வைத்திருந்தது இந்தக் கொள்கைதான். இவ்வாறு திட்டமிட்டு ஏழ்மையுறுத்தப்பட்ட நிலையில் மிகவும் அதிகமான துன்பங்கள் சுமத்தப்பட்ட மக்கள் யார்? வேளாண் தொழிலாளர்களில் பாதிப் பேருக்கு மேல், ஓர் அரை யாண்டு இறுதியிலிருந்து மறு அரையாண்டு இறுதிவரை முழு உணவு என்றால் என்ன என்பதையே அறிந்திராதவர்கள் என்று கூறப் படுகிறது; இவர்களில் மிகப் பெரும் பகுதியினர் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களே என்பதைத் துணிந்து கூறுவேன். அவர்களது மிக மோசமான ஏழ்மை நிலையே அவர்களை எளிதில் பஞ்சங்களுக்குப் பலியாக்கி விடும். பஞ்சங்களில் பலியானவர்களில் பெரும்பாலோர் இம்மக்களே. இவர்கள் உங்கள் மக்களெனில், இவர்கள் நலனில் உங்களுக்கு அக்கறை இருக்குமெனில், நெஞ்சைப் பிளக்கும் இவ்வுண்மை களின்பால் நீங்கள் கண் மூடியிருந்துவிட முடியாது. இவற்றை

யெல்லாம் மறந்துவிட்டு, மேம்பட்ட சாலைகளைத் தந்தார்கள்; அறிவியல் அடிப்படையில் கால்வாய் வெட்டினார்கள்; இருப்புப் பாதை அமைத்தார்கள்; மலிவான அஞ்சல் முறை ஏற்படுத்தினார்கள்; மின்னல் வேகத் தந்தி முறை தந்தார்கள்; நாணயத்தை நிலைப்புறுத்தி னார்கள்; எடைகள், அளவீடுகளை முறைப்படுத்தினார்கள்; இறையியல், புவியியல், வானவியல், மருத்துவம் முதலிய துறைகளில் கருத்துக்களை நன்கு திருத்தினார்கள்; நாட்டுப் பூசல்களை ஒழித்தார்கள் என்றெல்லாம் ஆட்சியாளர்களின் புகழ்பாடிக் கொண்டே இருந்துவிட முடியாது. சட்டம் ஒழுங்கைப் பேணி நிலைநிறுத்துதல் பாராட்டற்குரியது தான்; ஆனால் பெரியோர்களே சட்டம் ஒழுங்கு மட்டுமே ஒடுக்கப்பட்ட மக்கள் உட்பட நாட்டு மக்கள் அனைவரின் வாழ்க்கைக்குப் போதாது; இதைவிடத் தேவை யானது உணவேயன்றோ? மாற்ற வொண்ணாத வாழ்க்கை நியதிக் கேற்ப, நாட்டின் பொருளாதார வளத்தை மேம்படுத்தி அதன் வாயிலாய் தங்கள் பொருளியல் வாழ்வையும் வளம் ஊட்டி மேம் படுத்தவல்ல அரசாங்கமே தேவையென்ற கோரிக்கையை ஒடுக்கப் பட்ட வகுப்பு மக்களும் முன்வைக்கத் தூண்டுகிறது. மக்களின் வறுமை நிலைக்கு உற்பத்திக் குறைவே காரணம் என்றும் அதற்குக் காரணம் ஏற்றத் தாழ்வுகளுடன் செல்வ வளம் பகிர்ந்து கொள்ளப் பட்டிருப்பதலல்லவா என்றும் உங்களில் சிலர் வினவக்கூடும். இந் நாட்டு ஏழைமக்கள் பெரும்பாலோர் அரும்பாடுபட்டுச் சம்பாதிக்கும் அற்பக் கூலித் தொகைகளில் இந்நாட்டு நிலக்கிழார்களும் முதலாளி களும் கொத்திப் பிடுங்கும் கொள்ளைகளோடு ஒப்பிடுகையில், இந்நாட்டு மக்களால் ஆங்கிலேயருக்கு அனுப்பப்படும் ஆண்டுக் கப்பம் மிகச் சிறிதே என்பதை ஏற்றுக் கொள்பவர்களில் நான் முதல் வரிசையில் இருப்பேன். ஆனால், நிலக்கிழார்கள், முதலாளிகள் ஆகியோரின் கடும் பிடியிலிருந்து பிரிட்டிஷ் அரசாங்கம் உங்களை விடுவிக்குமென்று நீங்கள் எதிர்பார்ப்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. பேராசிரியர் டைசி கூறுவது போன்று, எந்தவொரு வலிமைமிக்க அரசாங்கமும் கூட இரு கடுமையான வரம்புகளால் கட்டுண்டிருக்கும் என்பதை மறக்கலாகாது. முதலாவதாக ஆட்சியமைப்பில் இடம் பிடித்துள்ளோர் யார் என்பதை யொட்டி அவர்களது பான்மை, நலன்கள், நோக்கங்கள் ஆகியவற்றையொட்டி அக வரம்புகள், பிரிட்டிஷ் அரசு இந்திய சமூகத்தில் செயல்படும் சக்திகளுக்குப் பரிவுகாட்டாமல் அவர்களுடைய குறிக்கோள்கள்,

கல்வி தன்னாட்சி ஆகியவற்றுக்கு எதிராக இருக்கிறது எனில், இச்சலுகைகளைத் தர அவர்களால் இயலாது என்பது காரணமன்று; இவை அவ்வாட்சியின் தன்மை, குறிக்கோள், நலன் ஆகியவற்றுக்கு எதிராக இருப்பதே காரணம். ஆட்சிக்குத் தடையாயிருக்கும் இரண்டாவது வரம்பு புற எதிர்ப்பே. இந்திய சமூகத்தை அழித்துத் தின்னும் சமூகக் கேடுகளை அகற்ற வேண்டுவதன் அவசியத்தை அரசு உணராமலாயிருக்கிறது? நிலக்கிழார்கள் ஏழை மக்களைக் கசக்கிப் பிழிவதை இந்திய அரசு அறியாமலா இருக்கிறது? முதலாளிகள் தொழிலாளர்களுக்கு வாழ்க்கைக்கான கூலியும், ஒழுங்கான பணிச் சூழலையும் அளிக்கவில்லை என்பது அரசுக்குத் தெரியாதா என்ன? தெரிந்தும் இத்தீமைகள் எதையும் அகற்றுவதற்கு அரசு துணியவில்லையே ஏன்? இதற்கான சட்ட அதிகாரம் அரசிடம் இல்லையா? காரணம் அதுவல்ல. நாட்டின் சமூக வாழ்வில் தற்போது நிலவும் சமூக, பொருளியல் நெறிமுறைகளில் குறுக்கிட்டு மாற்றங்களை விளைவிக்க முற்பட்டால் அதற்குக் கடுமையான சமுதாய எதிர்ப்பு கிளம்பும் என்று அரசு அஞ்சுவதே மெய்யான காரணம். இப்படிப் பட்டதொரு அரசாங்கத்தால் யாருக்கு என்ன நன்மை? இப்படி இரு வகைப் பின்னடைவுகளால் கட்டுண்ட அரசுக்கு மக்களுக்கு நலம் செய்யும் பணிகளில் ஈடுபடல் அரிதேயாம். இந்நாட்டு மக்களின் நலனில் முழுமையான அக்கறை கொண்டுள்ள மக்களின் கையில் அதிகாரம் கிடைக்கும் அரசொன்றே நமக்கு வேண்டுவதாகும். எந்தக் கட்டத்தில் கீழ்ப்படிதல் நின்று, எதிர்ப்பு தொடங்கும் என்பதை அறிந்து மக்களுக்குத் தேவைப்படும் சமூகப் பொருளாதாரச் சீர்திருத்தங்களை அவற்றின் அவசரத் தேவையுணர்ந்து அஞ்சாமல் செயல்படுத்தும் உறுதி வாய்ந்தவர்கள் கையில் அதிகாரம் கிடைக்கும் அரசே நமது தேவை. இத்தகைய தொரு செயல்பாட்டு நிலையை பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் இருந்து நாம் ஒருபோதும் எதிர்பார்க்க இயலாது. இதைச் செயலாற்ற வல்லது, மக்களுக்காக, மக்களால் நடத்தப்படும் மக்களின் அரசே என்பது உறுதி. அத்தகைய அரசு தன்னாட்சி அரசு ஒன்றுதான்.

26. உங்கள் குறுகிய கண்ணோட்டத்திலேயே கூட இச்சிக்கலைக் குறித்து எண்ணிப்பாருங்கள். பிரிட்டிஷார் ஆட்சிக்குமுன்னர் தீண்டாமையால் நீங்கள் அருவருக்கத்தக்க இழிநிலையில் இருந் தீர்கள். தீண்டாமையை அகற்ற பிரிட்டிஷ் அரசு ஏதேனும்

செய்துள்ளதா? பிரிட்டிஷார் வருமுன் கிணறுகளிலிருந்து நீர் எடுக்க உங்களுக்கு உரிமையில்லை. பிரிட்டிஷ் அரசு கிணறுகளை அணுக உங்களுக்கு உரிமை பெற்றுத் தந்துள்ளதா? பிரிட்டிஷார் வருமுன் ஆலயங்களில் நுழைய உங்களுக்கு அனுமதி கிடையாது. இப்போது நீங்கள் நுழைய முடியுமா? பிரிட்டிஷார் வருமுன் காவல் துறைப் பணியில் சேர உங்களுக்கு அனுமதி கிடையாது. பிரிட்டிஷார் வருகைக்கு முன் போர்ப்படைகளில் சேர்ந்து பணியாற்ற உங்களுக்கு அனுமதி கிடையாது. பிரிட்டிஷ் அரசு இப்போது உங்களைச் சேர்த்துக் கொள்கிறதா? பிரிட்டிஷார் வருகைக்கு முன் போர்ப் படைகளில் சேர்ந்து பணியாற்ற உங்களுக்கு அனுமதி கிடையாது. இப்போது அப்பணிகள் உங்களுக்குத் திறந்து விடப்பட்டுள்ளனவா? பெரியோர்களே, இந்த வினாக்களில் எதற்குமே ஆம் என்று நீங்கள் பதில் கூற இயலாது. ஒரு நாட்டின் மீது இவ்வளவு நீண்ட காலம் வலிமை மிகு அதிகாரம் செலுத்துவோர் சில நன்மைகளையாவது செய்திருக்க வேண்டும். ஆனால் உங்கள் நிலை குறித்து அடிப்படைக் கவனம் கூடச் செலுத்தப்படவில்லை என்பது உறுதி. ஒரு சீனத் தொழிலாளியிடம் புதிய மேலங்கி தைப்பதற்காகத் துணியும், அளவுக்காக பழைய மேலங்கி ஒன்றும் கொடுக்கப்பட்ட போது, அவன் பழைய மேலங்கியில் இருந்ததைப் போன்றே புதிய மேலங்கி யிலும் கிழிசல்களும் ஒட்டுகளும் இருக்குமாறு தைத்துத் தந்தான் என்று ஒரு கதை சொல்லப்படுவதுண்டு. அவனைப் போன்றுதான் பிரிட்டிஷ் அரசாங்கமும் அவர்கள் வரும்போது எத்தகைய சமூக அமைப்பு இருந்ததோ அதில் சிறிதும் மாற்றமின்றி அத்தனை குறைகளுடனும் மாற்றமின்றியிருக்குமாறு பார்த்துக் கொள்கின்றனர். உங்கள் இன்னல்கள் யாவும் ஆறாத புண்களாய் அப்படியே தொடர் கின்றனவேயன்றி அவற்றிலிருந்து இளைப்பாறுதல் ஏதும் கிடைக்க வில்லை. பிரிட்டிஷ் அரசு என்னதான் நல்லெண்ணப் போக்குடன் செயல்படக் கருதினாலும், உங்கள் துயர்களைத் துடைப்பது என்பதில் அவர்கள் ஆற்றலற்றவர்களாகவே செயல்படுவார்கள். அரசியல் அதிகாரம் உங்கள் கைகளில் வந்தாலன்றி உங்களால் இத்துயரங்களுக்கு முடிவு காண முடியாது; உங்களைத் தவிர பிறர் எவராலும் உங்கள் துயர்களைக் களைய முடியாது. பிரிட்டிஷ் அரசாங்கம் இன்றுள்ள நிலையிலேயே தொடர்ந்து நீடிக்கும் வரை அரசியல் அதிகாரத்தில் உங்களுக்குப் பங்கேதும் கிடைக்காது. தன்னாட்சி அரசியலமைப்புச் சட்டத்தின் மூலமாகத்தான் உங்கள்

கைகளில் அரசியல் அதிகாரம் கிடைப்பதற்குச் சிறிதேனும் வாய்ப்பு உண்டு. அத்தைய அதிகாரம் கிடைக்கப்பெறாமல் உங்கள் மக்களுக்கான விடுதலையை நீங்கள் எய்தி விட இயலாது. உங்களில் பெரும் பாலோருக்குத் தன்னாட்சி என்பது ஒரு சூனியமான மாயத் தோற்ற மாகவே தோன்றலாம். அவ்வாறு தோன்றுவதே அதன் இயல் பெனலாம். முந்தைய நாட்களில் நமது நாட்டு மக்களே நம்மீது செலுத்திய வன்கொடுமைகள், ஒடுக்குமுறைகள், அநீதிகள் குறித்த கசப்பான நினைவுகள் உங்கள் மனதில் தோன்றி, தன்னாட்சி அளிக்கப்பட்டு விட்டால் இக்கொடுமைகளெல்லாம் மீண்டும் தலைதூக்குமேயென்ற அச்சம் கூட உருவாகலாம். ஆனால் பழையனவற்றை ஒரு கணம் மறந்து விட்டு வருங்காலத் தன் னாட்சியைப் பற்றி எண்ணிப் பார்த்தால், அது நீங்களும் பங்குபெற்று ஆட்சி செலுத்தக் கூடியதோர் அரசாங்க முறையே என்பதையும் அது மாயத்தோற்றமன்று என்பதையும் உணர முடியும். மற்றெல்லா வகையிலும் சமநிலை எய்தும் போது இந்நாட்டின் அரசியல் இறை யாண்மையாளர்களாய் திகழ நல்வாய்ப்பைக் காண்பீர்கள். பழைமையை எண்ணித் தயங்க வேண்டாம். நீங்கள் முடிவெடுப்பதில் பிறரது ஆசைகாட்டலுக்கோ அச்சுறுத்தலுக்கோ ஆளாக வேண்டிய தில்லை. உங்களது உகந்த நலன்கள் யாவை என்பதை எண்ணிப் பார்த்தீர்களாயின் தன்னாட்சியையே நீங்கள் தேர்ந்தெடுப்பீர்கள் என்பது உறுதி.

27. இந்தக் கண்ணோட்டத்தை நீங்கள் ஏற்றுக்கொள்வீர்கள் எனில், வருங்கால இந்திய அரசு குறித்த சைமன் ஆணையத்தின் பரிந்துரைகளுக்கு நீங்கள் இசைவு அளிக்க மாட்டீர்கள். ஆணை யத்தின் அறிக்கை குறித்த விரிவான ஆய்வினை இப்போது மேற் கொள்ள நான் முனையவில்லை. அதை மேற்கொள்ள இப்போது நேரமில்லை. இந்நாட்டு அரசாங்கத்தில் எந்த அளவுக்குப் பொறுப்பு காட்டப்படும் என்பது பற்றிய ஆணையத்தின் நோக்கு குறித்து மட்டும் உங்கள் கவனத்தை ஈர்க்க விரும்புகிறேன். மைய அரசைப் பொறுத்த மட்டில் இன்றைய நிலையைப் போன்றே புதிய அமைப்பிலும் அது பொறுப்பற்றதாகவே இருக்கும். ஆனால் மாநிலங்களில் அரசுகளைச் சட்டமன்றங்களுக்குப் பொறுப்பாக்க முயற்சி செய்யப்பட்டு உள்ளது. ஆனால் இது முழுமையானது அல்ல. மாநில ஆளுநர் தமது அவசரகால அதிகாரத்தைப் பயன்படுத்தி

மாநிலச் சட்ட மன்றத்திற்குப் பொறுப்பில்லாத எவரையும் ஆட்சி யாளராக்கலாம்; எந்தவொரு துறையின் பொறுப்பையும் தாமே எடுத்துக் கொள்ளலாம். பெரியோர்களே சைமன் ஆணையத்தின் திட்டம் குறித்து ஒரேயொரு கருத்தை மட்டும் முன்வைக்க விரும்பு கிறேன். இச்சிக்கலை அணுகுவதற்கு இரண்டு வழிகள் இருப்பதாய் எனக்குத் தோன்றுகிறது. ஒன்று இந்தியாவின் மைய, மாநிலச் சட்ட மன்றங்களுக்கு ஆட்சியாளர்கள் மீது எந்த அளவுக்கு அதிகாரம் கொடுக்கலாம் எனும் நோக்கு. இரண்டாவது, இந்தியாவின் மைய, மாநிலச் சட்ட மன்றங்களில் வரம்புக்குட்படாமல் எந்த அளவுக்கு அதிகாரங்களை ஆட்சியாளர்கள் தக்கவைத்துக்கொள்ள அனுமதிக் கலாம் எனும் நோக்கு. இவ்விரண்டில் முதலாவது அணுகுமுறையை சைமன் ஆணையம் கடைப்பிடித்திருப்பதாய்த் தோன்றுகிறது. சட்டமன்றங்கள் என்பன எல்லாத் தரப்பினர்களின் நலன்களின் சார்பாய் விளங்குவனவாதலின், முதலாவது அணுகுமுறைக்கு மாறாக, இரண்டாவது அணுகுமுறையே சரியானதாயிருந்திருக்கும் என்று கருதுகிறேன். இது சரியெனில், இன்றைய நிலையில் இயலாத சில விதிவிலக்குகளைத் தவிர்த்து ஏனைய விவகாரங்கள் அனைத்திலும் ஆட்சியாளர்களைச் சட்டமன்றத்திற்குப் பொறுப்பு வாய்ந்தவர் களாய் ஆக்குவதே சரியான முடிவாகும். மாநில ஆட்சியாளர்களைச் சட்டமன்றங்களுக்கு முற்றிலும் பொறுப்பானவர்களாய் ஆக்கா திருப்பதற்குச் சரியான காரணம் ஏதும் இருப்பதாய்த் தோன்றவில்லை. மேலும், ராணுவம், வெளிநாட்டு உறவு தவிரப் பிற பொருள்கள் குறித்து மைய அரசையும் சட்டமன்றத்திற்குப் பொறுப்பாக்குவதில் இடர்ப்பாடு ஏதும் இருப்பதாய் எனக்குத் தோன்றவில்லை.

28. டில்லி என்பது இன்னும் எட்டாத் தொலைவிலேயே இருப்பதால் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் மாகாணங்களில் பொறுப்பு என்பதில் மட்டுமே கவனம் செலுத்தவேண்டும் என நம்மில் ஒருசிலர் கருத்து தெரிவிக்கக் கூடும். அவர்களுக்கு நான் கூற விரும்புவது இதுதான்: மாகாண ஆட்சியாளருக்காயினும், மைய ஆட்சியாளருக் காயினும் பொறுப்பு என்பது குறித்து நமது கருத்தை முடிவு செய்வதில் இரண்டு கூறுகளை நமது மனதில் கொள்ள வேண்டும். முதலில், ஒடுக்கப்பட்ட வகுப்பினர் உட்பட நாட்டு மக்கள் அனைவரின் நலனும் மாகாண ஆட்சியாளரைவிட, மைய ஆட்சி

யாளர்களைத்தான் மிக நெருக்கமாகவும் மிக விரிவாகவும் சார்ந்துள்ளது என்பது. எனவே இந்த நாட்டு மக்களின் முன்னேற்றமும் வள வாழ்வும், மைய அரசு இயந்திரம் எந்த அளவுக்குச் செம்மையாய்ச் செயல்படுகிறது என்பதைச் சார்ந்தே அமையும். அது எந்த அளவுக்கு நன்கு செயல்படும் என்பது அது எந்த அளவுக்குச் சட்டமன்றத்துடன் இசைவாக இயங்குகிறது என்பதனை ஒட்டியே அமையும். எனவே நீதி நெறியிலும், பொருளியல் நிலைமையிலும் விரைவான முன்னேற்றங்களை எய்துவதில் அக்கறை கொண்டுள்ள எவரும் மைய அரசின் பொறுப்பு குறித்து அக்கறை காட்டாமலிருக்க முடியாது. மற்றொரு கூறைக் கருதிப் பார்த்தாலும் நமது சிந்தனை இதே திசையில்தான் அமைய முடியும். சட்டம், ஒழுங்கை நிலைநாட்டுவதில் மாகாண அரசுகள் மைய அரசின் முகவர் எனும் நிலையிலிருந்துதான் எப்போதும் செயல்படப் போகின்றன. அவையிரண்டும் சீரான ஒத்தியக்கத்தில் செயல்பட வேண்டுமெனில் இரண்டுமே ஒரே ஊற்றுக் கண்ணிலிருந்துதான் தமது அதிகார மூலத்தைப் பெற வேண்டும். மையச் சட்டமன்றத்திற்குப் பொறுப்பின்றி பிரிட்டிஷ் உள்துறைச் செயலரின் அமைச்சரின் (ஆணைகளை) மேற்கொண்டு செயல்படும் மைய அரசின் ஆணைகளை மாகாண அரசு எவ்வாறு ஏற்றுக்கொள்ள முடியும்; இதனால் இரு அரசுகளுக்குமிடையே கடுமையான பூசல்கள் தோன்ற வாய்ப்பு உண்டாகும். இத்தகைய பூசல்களால், அவசர காலங்களில் நாட்டு நிர்வாகமே செயலற்று நிற்கும் நிலைக்குப் போய்விடக்கூடும். எனவே, நீங்கள் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் மைய ஆட்சியாளர்களுக்கு ஓரளவேனும் பொறுப்பு உருவாக்காமல், மாகாண ஆட்சியாளர்களுக்கு மட்டும் பொறுப்பு உருவாக்குதல் என்பது இயலாத செயலாகும்.

## VI. ஒடுக்கப்பட்ட வகுப்புகளும் சட்ட மறுப்பு இயக்கமும்

29. பெரியோர்களே! பாதுகாப்புகளுடன் கூடிய டொமினியன் தகுதி என்ற இலக்கை ஏற்றுக்கொள்ள நாம் முடிவு செய்தாலும், அதற்காக, கடந்த மார்ச்சில் காந்தியடிகள் இந்நாட்டில் தொடங்கிய சட்டமறுப்பு இயக்கத்தில் நாமும் சேர்ந்தாக வேண்டுமா? என்ற வினாவை அடுத்து நோக்குவோம். நமது நிலைப்பாட்டைத்

தெளிவாக எடுத்துரைத்திட வேண்டிய வினா இது. இவ்வியக்கம் அரசியலமைப்புச் சட்டத்திற்கு முரணானது என்று நிதான உணர்வுடையோர் அனைவருமே கண்டனம் தெரிவித்திருப்பதை யாவரும் அறிவீர்கள். ஆனால் இந்த வாதம் என்னை ஈர்க்கவில்லை என்பதை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும். நமது ஆலய நுழைவு இயக்கம் அரசியலமைப்புச் சட்டத்திற்கெதிரானது எனப் பழைமையாளர்கள் கூறினால், அதற்கு நீங்கள் கூறும் பதிலென்ன? நேரடிச் செயல் பாட்டைக் கைவிட்டு, பழைமையாளர்களுக்கு மனுச் செய்தல், நீதிமன்றத்தில் வழக்கு தொடர்தல், சட்டத்தைத் திருத்தியமைக்க முயலுதல் போன்ற செயல்களிலா இறங்குவீர்கள்? பழையமை யாளர்களுக்கு எதிரான போராட்டத்தில், உங்கள் அற்ப சொற்ப வளங்களில் வரம்புகேற்ற போராட்டங்களோடு நின்று விடுவீர்களா? ஏற்றுக்கொள்ளப்பட்ட அரசியலமைப்புச் சட்டமென்று ஒன்று இருந்தால்தானே அரசியலமைப்புச் சட்ட முறைகளில் தீர்வுகாண முடியுமென்பதை நீங்கள் வலியுறுத்திக் கேட்க மாட்டீர்களா? ஆனால் அத்தகைய அரசியலமைப்புச் சட்டம் எதுவும் இல்லாத நிலையில், அரசியலமைப்புச் சட்ட முறைகளில் போராடுதல் எனும் பல்லவிக்குச் செவிசாய்க்க எவரும் முன்வர மாட்டார்கள். இத்தகைய கண்ணோட்டம், பிரிட்டிஷாரின் சிந்தனைக்குக் கூடப் புதியதன்று. சொல்லப் போனால், அல்ஸ்டர் இயக்கம் என்பது ஒரு சட்ட மறுப்பு இயக்கம் அல்லவா? மிகச் சிறந்த பிரிட்டிஷ் அரசியல்வாதிகள் அதை ஆதரித்து இயக்கத்தில் கலந்து கொள்ளவில்லையா? எனவே சட்ட மறுப்பு இயக்கம் சரியா தவறா என்பதல்ல இங்கு கேள்வி. நமது நலன்களின் பாதுகாப்புக்கு அது ஏற்றதும் உகந்ததும்தானா என்பது தான் நமது கேள்வி. சட்டமறுப்பு இயக்கத்தில் நாம் கலந்து கொள்வதை நான் எதிர்ப்பதற்கு அது இப்போது நமக்கு அறவே உகந்தவாறு இல்லை என்பதுதான். பிரிட்டிஷ் பேரரசின் பேராதிக்கப் போக்கின் தீமைகள் அனைத்தையும் கணக்கில் எடுத்துக்கொண்டு நோக்கினாலும், அந்த ஆட்சியில்தான் இந்திய மக்களின் மேம் பாட்டுக்குக் கொஞ்சமாவது வழியிருப்பதைக் காணலாம். இத்தகைய கருத்து கொள்வதில் நான் தனியன் அல்லன். நிறுவப்பட்ட அரசுக்கு எதிராகச் சட்டத்தை மீறுதல் தமது கடமை என அறிவிக்கும் காந்தியடிகள் கூட (தமக்கு ஏற்புடைய போதில்) இத்தகைய கருத்து கொண்டிருந்தவரே (இந்திய மக்களின் முன்னேற்றம்). பிரிட்டிஷ் அரசுக்கு வெறும் கருத்தார்வம் மட்டுமன்று; அதற்கானதொரு உண்மையான முயற்சி 1920இல்

தொடங்கப்பட்டு கருத்தார்வத்தைச் செயலுருவாக்கும் பாங்கில் மாகாண அளவில் பொறுப்பரசாங்கம் நிறுவ முயற்சி மேற்கொள்ளப்பட்டு இது படிப்படியாய் வளர்ச்சி யுற்று தன்னாட்சியெனும் இலக்கை நோக்கி முன்னேற வழி வகுப்ப தாகுமென்றும் கூறப்பட்டது. குறிக்கோளை எய்துவதற்கான முன்னேற்றம் மிகக் குறைவான வேகத்தில் இருக்கலாம். எய்தப் பட்டுள்ள முன்னேற்றம் இலக்கோடு ஒப்பிட மிகச் சிறியதாகவும் இருக்கலாம். ஆனால் இக்கொள்கையில் பின்வாங்கி விட்டதாய்க் குறை கூறமுடியுமா? அவ்வாறு பின்வாங்கியிருந்தால் சட்ட மறுப்பு இயக்கம் ஏற்றதே என்று கருதலாம். ஆனால் அது மெய்யன்று; மாறாக டொமினியன் தகுதியே குறிக்கோள் என மீண்டும் ஐயத்திற் கிட மில்லாதவாறு வைசிராய் அறிக்கை மூலம் தெரிவிக்கப்பட்டிருப் பதுடன், அக்குறிக்கோளை நாம் விரைந்து அடைவதற்கான வழி வகைகளைக் கலந்தாலோசிப்பதற்காக இந்தியர்கள் கலந்து கொள்ளும் வட்டமேசை மாநாடு ஒன்றை நடத்தவும் அரசு முன் வந்துள்ளது. உடனடியாக டொமினியன் தகுதி வேண்டுமென்று கோருவோர்களின் கண்ணோட்டத்தில், இவ்வறிவிப்பில் சில குறைகள் காணப்படுவது மெய்தான். ஆனால் வட்டமேசை மாநாடே வேண்டாமென்று காங்கிரஸ் புறக்கணிப்பதற்கு அது போதுமான காரணமன்று. வைசிராயுடனோ, பிரிட்டிஷ் அமைச்சரவையுடனோ, போரிட்டும் கருத்து வேறுபாடு கொண்டும் முரணுருவதற்கான காரணம் ஏதாவது ஒன்றைத் தேடிக் கொண்டேயிருத்தல் தேவையற்ற வீண் வேலையாகும். டொமினியன் தகுதி வேண்டும் என்று இந்தியர்கள் அனைவரும் ஒன்றுபட்ட குரலில் உரத்து ஒலித்தால், அது பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் மீது போதிய தாக்கத்தை ஏற்படுத்தத் தவறாது. எவ்வாறாயினும் வட்டமேசை மாநாட்டைக் காங்கிரஸ் ஏற்றுக் கொண்டிருந்தால் எவ்வித இழப்பும் நேரிட்டிராது. வட்டமேசை மாநாடு தோல்வியுற்றால், சட்ட மறுப்பு இயக்கம் ஓராண்டு தள்ளிப் போகுமெனினும் அது காங்கிரசுக்கு நேர்முக மதிப்பு தருவதாய் அமையும். எவ்வாறெனில் சரியாகவோ தவறாகவோ (பிரிட்டிஷாரிடம்) நம்பிக்கை கொண்டிருக்கும் சிறுசிறு உதிரிக் குழுக்களின் கண்களைத் திறப்பதாய் அது அமையும். எனவே இவையனைத்தையும்ஒருங்கே எண்ணிப் பார்க்கையில் இந்தக் கட்டத்தில் வட்ட மேசை மாநாட்டில் கலந்துகொண்டு அமைதியான பேச்சுவார்த்தைகளால் தீர்வு காண்பதை விடுத்து சட்டமறுப்பு

இயக்கம் தொடங்கியதன் வாயிலாய் காங்கிரஸ் பெரும் பிழை யொன்றைச் செய்துள்ளதென்பதைக் கூறியாக வேண்டும்.

30. சட்டமறுப்பு இயக்கத்தை நான் ஆதரிக்காததற்கு மற்றொரு காரணமும் உண்டு. நமது நலன்களின் காப்புக்கும் உறுதிப்பாட்டுக்கும் அது உகந்த வழியென்று நான் கருதவில்லை. சட்ட மறுப்பு இயக்கம் என்பது மாபெரும் மக்கள் திரள் இயக்கம். இவ்வியக்கத்தின் அடிப்படை பலவந்தமே. மேலும் அஃதொரு அதிரடிச் செயல்பாடு. போதுமான பெருமளவில் நடத்தப்பட்டால் அது புரட்சியாகவே வெடிக்கக் கூடியது. புரட்சி என்றால் இரத்தப் புரட்சியாயினும் இரத்தம் சிந்தாப் புரட்சியாயினும் பலனில் பெருத்த வேறுபாடு இராது. இது, எதை எய்துவோம் என்பது உறுதியில்லாத குழப்பங்களையும் பேரழிவையும் விளைவிக்கும் ஆபத்து நிறைந்த முறையாகும். பிரெஞ்சுப் புரட்சியின் எடுத்துக்காட்டு நமக்குப் பாடமாயிருக்கிறது. மக்களாட்சியை நிறுவுவதற்காக என்று தொடங்கப்பட்ட அப் புரட்சியின் விளைவு குழு வல்லாட்சியை நிறுவியதுதான். பல சமயங்களில் புரட்சிகள் தவிர்க்க முடியாதவை. ஆனால் புரட்சியையும், மெய்யான சமூக மாற்றத்தையும் ஒப்பிட, இரண்டுக்குமிடையே பெருத்த வேறுபாடுகள் பல இருப்பதை நாம் மறந்து விடலாகாது. போரின் வெற்றிகள் எவ்வாறு ஒரு நாட்டிடமிருந்து மற்றொரு நாட்டுக்கோ ஓர் இனத்திடமிருந்து மற்றோர் இனத்துக்கோ அதிகார மாற்றம் விளைவிக்கின்றனவோ, அவ்வாறே புரட்சிகளும் ஒரு தரப்பினரிடமிருந்து பிறிதொரு தரப்பினருக்கு அதிகார மாற்றம் விளைவிக்கின்றன. இப்படிப்பட்ட வெற்று மாற்றங்களால் நாம் மன நிறைவு அடைந்துவிட இயலாது. சமுதாயத்தில் இயங்கிக் கொண்டிருக்கும் பல்வேறு வித சக்தி களிடையே மெய்யான சமூக மாற்றத்தை விளைவிக்கும் வகையில் அதிகாரப் பகிர்வுடன் கூடிய அதிகார மாற்றமே நாம் வேண்டத்தக்கது. இந்த நிகழ்வு பல விட்டுக் கொடுத்தல்களின் அடிப்படையில் செயலாக வேண்டிய ஒன்று. இத்தகைய விட்டுக் கொடுத்தல்களின் தேவையை உணர்ந்து செயல் படுத்துவதன் வாயிலாகவே ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் வளமான எதிர்காலத்திற்கு வழிபிறக்கும். இந்தியாவின் இன்றைய தேவை அரசாங்கம் ஒன்று அமைப்பது அன்று; விடுதலை கிடைக்கப் பெறுவதும் அன்று; விடுதலை கொண்ட அரசு அமைப்பதுதான். பர்க்கின் சொற்களில் கூறுவதெனில், "அரசாங்கம் ஒன்றை அமைப்பதற்குப் பெருத்த மதிநுட்பம் தேவையில்லை. அதிகார

மையம் எதுவென நிர்ணயித்து ஏனையோரை அதற்குக் கீழ்ப்படியக் கற்பித்தால் போதும்; பணி முடிந்து விடும். விடுதலை அளிப்பது என்பதோ அதனினும் எளிது. அதற்கு நாம் வழிகாட்ட வேண்டு மென்பதில்லை; கடிவாளங்களிலிருந்து நமது கையை விலக்கிக் கொண்டால் போதும். ஆனால் சுதந்திரமான அரசு அமைப்பதற்கு, அதாவது, சுதந்திரம், கட்டுப்பாடு என்னும் எதிரெதிரான கூறுகளை இணக்கமான அளவில் ஒன்றிணைத்துப் பதப்படுத்திடும் இப்பணிக்கு மிகுந்த சிந்தனையும் ஆழ்ந்த மதிநுட்பமும் தேவைப்படும்." அதாவது, இனிய இணக்கமான விட்டுக் கொடுத்தல்களின் வாயிலாய் எய்தக் கூடிய இலக்கை நாம் சட்ட மறுப்பு இயக்கம் போன்ற அதிரடி முறையின் வாயிலாக அடைதல் இயலாது.

31. எனவே, பெரியோர்களே, சட்டமறுப்பு இயக்கத்தில் ஒடுக்கப் பட்ட வகுப்புகள் கலந்து கொள்ளலாகாது என்று கருதுதற்கான காரணங்களை நான் உங்கள் முன் வைத்துள்ளேன். வட்ட மேசை மாநாடு வழங்கும் அமைதியான பேச்சு வார்த்தைகள் வாயிலாகவே அவர்கள் இலக்கை நோக்கி முன்னேறலாம். ஒடுக்கப்பட்ட வகுப்பு களுக்குப் போதுமான அளவில் சார்பான்மை எனும் கோரிக்கையை வட்டமேசை மாநாட்டில் தகுதியும் நாணயமும் வாய்ந்த நம்புதற்குரிய சார்பாளர்கள் மூலம் வலியுறுத்திப் பெறுதலே அவர் முன்பு உள்ள உகந்த வழியாகும்.

## VII ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் நிறுவன அமைப்பு

32. ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் ஒன்று பிரிட்டிஷ் அரசின் பக்கமோ அல்லது இந்திய தேசிய காங்கிரசின் பக்கமோ அணி சேர வேண்டுமேயன்றி, இரண்டுங்கெட்ட நடுநிலைப் போக்கைத் தொடர்ந்து கடைப்பிடித்து வருவதால் பெருத்த இழப்புக்குத்தான் உள்ளாக நேரிடும் என்று எனது நண்பர்கள் பலர் எச்சரித்து வருகின்றனர். இந்தச் சிக்கல் குறித்துப் பலமுறை மீண்டும் மீண்டும் சிந்தித்து, இவ்விரு சாராரிடமும் இருந்து விலகிச் சுயேச்சையாய்ச் செயல்படுவதுதான் ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் பாதுகாப்புக்கு உற்ற வழி எனும் உறுதியான முடிவுக்கு வந்துள்ளேன். ஆனால் காங்கிர சுடன் சேருவதனால் நாம் எவ்வாறு நமது தீர்வை நெருங்க முடியும் என்பது எனக்குப் புரியவில்லை. காங்கிரஸ் தீண்டாமையை ஏற்றுக்

கொள்ளவில்லை என்றும், அது ஒன்றுதான் மக்கள் வலிமைமிக்க இயக்கம் என்றும் கூறப்படுகிறது. காந்தியடிகளின் ஆதரவுடன், தீண்டாமைக்குக் கண்டனம் தெரிவித்து காங்கிரஸ் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது என்பது மெய்தான். ஆனால் அத்தீர்மானத் திற்குச் செயல்வடிவு தர காங்கிரஸ் என்ன செய்துள்ளது? தனது திட்டங்களைச் செயலாக்கும் நோக்கில் கட்சி உறுப்பினர்கள் கதரணிய வேண்டுமென விதி வகுத்துள்ளது காங்கிரஸ். ஆனால், கட்சி உறுப்பினர்கள் தீண்டாமையைக் கைவிட வேண்டுமென்று காங்கிரஸ் ஏன் விதி வகுக்கவில்லை? அப்படியொரு விதி வகுத்தால் அதைச் செயல்படுத்தல் எளிதுதானே. அத்தகைய விதியை நிறை வேற்றத் தீண்டப்படும் உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் தமது வீட்டில் பணியாளராகவோ மாணவராகவோ தீண்டப்படாதவர் ஒருவருக்கு இடந்தருவதன் வாயிலாக இவ்விதியை எளிதில் செயல் படுத்தலாமே. தீண்டாமையை அகற்றுவதற்குக் காந்தியடிகள் மேற்கொண்ட முயற்சிதான் என்ன? அவருக்கிருக்கும் அளவுகடந்த ஆதரவையும் தனிப்பட்ட செல்வாக்கையும் செல்வ வலிமையையும் எண்ணிப்பார்க்கையில், அவர் சிறிதளவு முயற்சி எடுத்தால் கூட மிகுந்த பலன் கிடைக்குமல்லவா? அவர் தமது இராட்டை நூற்பவர் களுக்கு நிதி திரட்டுவதற்காக ஒவ்வோர் ஆண்டும் பயணம் மேற் கொள்கிறார். ஆனால் தீண்டாமைக்கெதிராகப் போராடுவதாய் என்றாவது அவர் பயணம் தொடங்கியிருக்கிறாரா? இராட்டைக்காக அவர் செய்யும் செலவில் நூறில் ஒரு பங்கு கூட இந்நோக்கத்திற்காக அவர் செலவு செய்ததில்லை. இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கு மிடையே ஒற்றுமையை உருவாக்குவதற்காக காந்தியடிகள் மூன்று வாரம் உண்ணாநோன்பு காத்ததை நாமறிவோம். தீண்டப்படு வோர்க்கும் தீண்டப்படாதோர்க்குமிடையே சற்றுப் பரிவான உணர்வுகள் நிலவுறுதற்காக அவர் ஒரேயொரு நாளாவது உண்ணா நோன்பில் இருந்ததுண்டா? இவையெல்லாம் நடைபெற்றிருந்தால் காங்கிரசின் இலக்கை நாமும் ஏற்றுக் கொண்டிருக்கலாம். ஆனால் தீண்டாமை எனும் இழிவை அகற்றுவதற்குக் காங்கிரார் உண்மையான முயற்சிகள் எடுத்தார்கள் என்பதற்கான சான்று எதுவும் இல்லை என்பது மட்டுமன்றி, தீண்டாமைக்கெதிராய் இருப்பதாய்க் காங்கிரசார் விளம்பரம் தேடிக் கொள்கிறார்களேயன்றி இது குறித்துச் செயல்பாட்டிலிறங்க அவர்களுக்கு விருப்பமேதும் இல்லை என்று மனம் வெறுத்த நிலையில், சிரத்தானந்த அடிகளார் காங்கிரசை

விட்டே விலக நேர்ந்தது என்பதையும் கண்கூடாய்க் கண்டுள்ளோம். காங்கிரசாரின் உண்மையான திறத்தை அதன் தீர்மானங்கள் வாயிலாய்க் காண விரும்புவோர், அது பொதுமக்கள் நலன் நாடும் கட்சியென்பதைத் தயக்கத்துடன்தான் ஏற்பர். அதன் பொருளாதாரத் தீர்மானங்கள் மேம்பட்ட, நடுத்தர மக்களின் நலன்களைத்தான் எதிரொலிக்கின்றன. அதன் வணிகம் குறித்த தீர்மானங்கள் உற்பத்தி யாளர்கள், வணிகர்களின் நலன்களில்தான் அக்கறை செலுத்து கின்றனவேயன்றி, உழைப்பாளி மக்கள்பால் கவனம் செலுத்துவது இல்லை. ஒரு ஷில்லிங்கு 6 பென்னி கூலியை ஒரு ஷில்லிங் 4 பென்னி கூலியாய்க் குறைப்பதற்கு ஆதரவு தரும் இயக்கம் ஒன்று பொது மக்கள் நல இயக்கம் என்று தன்னைக் கூறிக் கொள்ளும் தகுதியை இழந்து விடும். சட்ட மறுப்பு இயக்கத்தில் உப்பு வரி எதிர்ப்பைச் சேர்த்துக் கொள்வதால் அதற்குப் புதிய முகம் கிடைத்துவிடாது. உப்பு வரிக்கு எதிராகக் குரல் கொடுத்தல் அரசியல் போராட்டத் திற்குக் கைகொடுக்கும் துணையே. ஆனால் தின்றால்தான் தெரியும் உணவின் தரம் என்பதற்கேற்ப, உப்பு வரி எதிர்ப்பின் மெய்யான நோக்கம் ஏழைமக்கள் நலன் என்பதை மெய்ப்பிக்க அந்த வரிக்கு மாற்றாகப் பொதுமக்களைப் பாதிக்காத செல்வர்கள் மீது மட்டும் சுமத்தப்படும் வேறொரு வரியை ஏற்றுக்கொள்ள அவர்கள் தயாரா யிருக்க வேண்டும். அவர்களது நோக்கத்தின் மெய்ம்மையைக் காலம்தான் நமக்குக் காட்ட வேண்டும். ஆனால் உண்மையான சோதனைஸ்ய எதிர்கொள்ள நேரிடின் காங்கிரசார் தமது வகுப்பின் பக்கம் நிற்பரேயன்றிப் பொதுமக்களுக்கு ஆதரவாய் நிற்க மாட்டார்கள் என்பதில் எனக்கு ஐயமில்லை. காங்கிரசார் சந்தர்ப்ப வாதிகளாய், பொதுமக்களுக்கு எதிராகவே நிற்பார்கள் என்பது வெளிப்படை. ஏனெனில் அதுவொரு தேசிய இயக்கமேயன்றி அரசியல் கட்சியல்ல. அதன் கொள்கைகளும் திட்டங்களும் அவ்வியலாகத்தான் காட்சியளிக்கின்றன. பல்வேறு தரப்பட்டோரின் நலன்களுக்கும் ஆதாரவாயிருப்பதாய் ஓர் இயக்கம் அறிவிக்கு மெனில், அதில் சில தரப்பாரின் நலன்களுக்குப் பெயரளவில்தான் ஆதரவு இருக்குமென்பதும், இரு தரப்பாரிடையே பூசல் என வரும்போது வலிமை குன்றிய தரப்பினர் கைவிடப்படுவர் என்பதும் தெள்ளத் தெளிவானவையே. நமது நலன்களுக்கு எதிரான வகுப்பு களின் ஆதரவோடு செயல்பட்டு வரும் காங்கிரஸ் தமது ஆதர வாளர்களுக்குச் சினமூட்டும் வகையில் நமது கோரிக்கைகளுக்கு

ஆதரவாய்த் துணை நிற்கும் என்று நாம் எவ்வாறு எதிர் பார்க்க இயலும்?

33. நமது மக்களில் காங்கிரசுக்கு ஆதரவாய்த் தொண்டு செய்வதில் ஆர்வம் காட்டும் சில தரப்பினர், தன்னாட்சி எனும் இலக்கில் வெற்றி கண்ட பிறகு, தமது தொண்டுகளுக்குப் பரிசாகக் காங்கிரஸ் தீண்டாமையை ஒழித்துவிடும் என்று நம்புகின்றனர். இப்போது நாம் காங்கிரசுக்குச் செல்லவில்லையெனில், வெற்றிக்குப் பின் கடுமையாய் ஒடுக்கப்படுவோம் என்றும் இவர்கள் அஞ்சு கின்றனர். இவ்வாறு நன்றியை எதிர்நோக்கிச் செய்யப்படும் தொண்டு களுக்குப் பரிசேதும் தரப்படுவதில்லை என்பதை நான் கூற வேண்டிய தில்லை. ஆனால் இப்போது நான் உங்களுக்கு மிக ஈடுபாட்டோடு கூற விரும்புவது என்னவெனில், காங்கிரசுக்காக நாம் இப்போது எவ்வளவுதான் பாடுபட்டுத் தொண்டாற்றினாலும், தன்னாட்சியின் வெற்றிக்குப் பின்னர், காங்கிரஸ் எங்கேயென்று தேடித்தேடிச் சோர்வடையத்தான் நேரிடும். பிறகு நாம் நமது சொந்த வளங்களை நம்பித்தான் நிற்க வேண்டியிருக்கும். தன்னாட்சி எனும் தனது குறிக்கோள் நிறைவேறிய பின்னர் காங்கிரஸ் கற்பூரமாய்க் காற்றில் கரைந்து மறைந்து விடும். பின்னர் நாம் எதிர்கொள்ளப் போவது பல்வேறு வகை விருப்புவெறுப்புகளும், போட்டி பொறாமைகளும் நிறைந்த மக்கள் திரள் எனும் பெருவிலங்கினையே (ஹாமில்டனின் உவமேயம்). எந்த காந்தியடிகளின் பொறுப்பில் நமது இன்னல்களை நீக்கும் பணியை ஒப்படைத்துவிட அறிவுறுத்தப்படுகிறோமோ, அந்தக் காந்தியடிகளே, இந்தியச் சராசரி மக்களை விட மிகுந்த வாழ் நாட்பேறு பெற்று நம்மிடையே வாழ்ந்து வந்தாலும், நம்மை யெல்லாம் பாதுகாக்கும் திறனற்றவராகவே அப்போது இருப்பார்.

34. நான் எடுத்துரைத்த எனது கண்ணோட்டம் சரியாயிருக்கு மெனில் நமது பாதையை நமக்காக நாமேதான் தேர்ந்தெடுத்துச் செயல் வடிவம் அளிக்க வேண்டும் என்பது புலப்படும். இத்தகைய தனிப் பாதையில் நடைபோடத் தயக்கம் காட்டுபவர்களின் அச்ச உணர்வை என்னால் புரிந்து கொள்ள முடியும். காங்கிரசாரிடமிருந்தும் அரசினரிடமிருந்தும் தனித்து விலகியிருப்பதில் மிக ஆபத் திருப்பதாய் அவர்கள் நம்புகிறார்கள். இது நமது வலிவின்மையை ஒப்புக் கொள்வதாகும் என்பதை ஏற்றுக் கொள்கிறேன். ஒடுக்கப்

பட்ட வகுப்பு மக்கள் அதிகார வலிமையின் துணை ஏதுமின்றிச் சுயேச்சையாய்ச் செயல்படுதல் என்பது மகிழ்ச்சி கொள்ளத்தக்க நிலை அல்ல. ஆனால் அரசாங்கத்தையோ, காங்கிரசையோ சார்ந்து நிற்பதால் நாம் பெறப்போகும் பலன்கள் என்னவென நான் கேட்க விரும்புகிறேன். வலிமை வாய்ந்த தரப்பார் நம்மைப் பற்றி அக்கறை காட்டுகிறார்களா இல்லையா என்பதைப் பொருட்படுத்தாமல், அவர்கள் உவக்கும் படியாக நடந்து கொள்வோம் என்பது தன் மானமற்ற பிச்சைக்காரர்களின் நெறி என்பதுடன் தன்மானமுள்ள மக்கள் எவரும் ஏற்க விரும்பாத கேவலமான சரணாகதியுமாகும். ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களை இப்போது எதிர்கொள்ளும் சிக்கலாவது, தாம் எவ்வாறு வலிமையான சக்தியாய்த் திரண் டெழுந்து எல்லா நிலைகளிலும் நமது நலன்களையும் கருத்து களையும் அனைவருக்கும் எட்டச் செய்வது என்பதே. ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் இயக்கம் இரண்டு கடும் பின்னடைவுகளினால் தத்தளிப்பதாய்த் தோன்றுகிறது. முதலாவதாக ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் ஒன்றுபட்ட பொதுக்கருத்து என்பதாக ஏதும் இல்லை. இரண்டாவதாக, ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் அனைவரும் முழுமையாய் அணிதிரண்டு ஒன்றுபட்ட செயல்பாட்டில் இறங்கு தற்கான வழிவகை எதுவும் இல்லாமை. நமது குறைப்பாடு களெல்லாம் நெடுங்காலமாய்க் களையப்படாமல் இருப்பதற்கான முக்கிய காரணம், நமது துன்பங்களைத் வெளிப்படுத்த வேண்டு மெனும் உணர்வு கூட இல்லாமல் நெடுங்காலமாய் நாம் ஊமை களாகவே இருந்து பழகிவிட்டதுதான். நமது நிலைமைக்காக நாம் அரசாங்கத்தையோ, சீர்திருத்தவாதிகளையோ, நியாயமாய்க் குற்றம் சாட்ட முடியாது. இவ்வாறு குரல் எழுப்பா நிலையில் நம்மை நாமே இருத்திக் கொண்டமை காரணமாய் நமது தேவைகள் குறித்த தெளிவான வழிநெறியோ வலுவான ஆதரவோ கிடைக்காத நிலைக்குக் காரணமாய் இருந்துள்ளோம் என்பதை ஒப்புக் கொள்ளத் தான் வேண்டும். நமது கூட்டங்களில் நாம் நிறைவேற்றுகின்ற தீர்மானங்களோ, அரசாங்கத்திற்கு நாம் விடுக்கும் வேண்டு கோள்களோ, நமது சார்பில் நாம் எழுப்பும் கோரிக்கைகளோ, இவை எதுவுமே, ஏனைய பிற சமூகங்களின் கோரிக்கைகள் அதிகாரத் திலுள்ளவர்களின் கவனத்தை ஈர்ப்பது போன்று, ஈர்க்கவில்லை என்பதற்கான காரணங்களை உன்னிப்புடன் சிந்தித்திருக்கிறேன். நாம் இன்னும் மாகாண அளவிலேயே செயல்பட்டுக் கொண்டிருப்பதால்

தான் நாம் வலிவற்று இருக்கிறோம் என்பதை உணர்ந்தேன். எந்தவொரு மாகாணத்திலேனும் நாம் முன்வைக்கும் கோரிக்கைகளுக்கு, அது மத்திய நிறுவனம் ஒன்றால் வைக்கப்பட்டிருந்தால் கிடைக்கக் கூடிய அளவுக்குப் பிற மாகாணங்களிலிருந்து ஆதரவு கிடைப்பதில்லை. ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கு, அவர்களது கருத்துக்களுக்குக் குரலாகவும், ஒன்றுபட்ட செயல்பாட்டுக்கு உற்ற கருவியாகவும் செயல்படக்கூடிய அனைத்திந்திய அமைப்பு ஒன்றை உருவாக்குவதற்கு இதுவே உகந்த தருணம் என்று தோன்றுகிறது. "அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் சங்கம்" என்பதோர் அமைப்பு, கடந்த இரண்டு மூன்று ஆண்டுகளாய் இயங்கி வருகிறது. ஆனால் இந்தச் சங்கத்திற்கு அலுவலர்கள் உண்டே தவிர உறுப்பினர்கள் கிடையா தென்பது யாவருமறிந்த உண்மை. சங்கத்தின் மாகாணக் கிளைகளின் நிலைமையும் இதுதான். இத்தகைய போலி, மாயத் தோற்ற சங்கத் தினால் ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கு சேவை எதுவும் செய்திட இயலாது. உங்களுக்கென்று உயிர்ப்புள்ளதாய் ஓர் அமைப்பு தேவை; அது நாடு முழுமையும் தழுவிய அளவில், உண்மையான சமூகத் தொண்டர்கள் அனைவரையும் பல்வேறு கிளை அமைப்புகளின் வாயிலாய் ஒன்றுதிரட்டி இணைப்பதாகவும் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் உண்மையான உணர்வுகளை எடுத்துரைப்பதாகவும் இருக்க வேண்டும். நான் விளக்கியவாறு அமையக் கூடிய நிறுவனம் ஒன்றுக்கான அமைப்புச் சட்ட விதிகளை உருவாக்க இக்கூட்டத்தில் சிறிய குழு ஒன்றை நியமிப்பீர்களாயின் அஃதொரு பெருஞ் சேவையாய் அமையும். இது ஒரு பெரும் தீர்மானமாகும்; தாமதமின்றி அது நிறைவேற்றப்பட வேண்டும்.

## VII. ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் மேம்பாடு

35. பெரியோர்களே, நாம் அரசியல் அதிகாரம் பெற வேண்டுவதன் அவசியம் குறித்துத் தேவைக்குமேல் மிகுதியாகவே வலியுறுத்தியுள்ளேன். ஆனால், ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் கேடுகளுக்கெல்லாம் அரசியல் அதிகாரம் மட்டுமே தீர்வாகிவிடாது என்பதையும் கூறியாக வேண்டும். அவர்களின் விடுதலை என்பது சமூக மேம்பாட்டில்தான் உள்ளது. ஒடுக்கப்பட்ட வகுப்புகளிடமிருந்து தீய பழக்கங்கள் அறவே ஒழிக்கப்பட வேண்டும். தீய வழிகளில் வாழ்வதிலிருந்து மேம்பாடு தேவை. நட்புக்கும் மதிப்புக்கும் தகுந்தவர்களாய்

நாம் ஆகும் வகையில் வாழ்க்கை முறைகளில் மாற்றம் தேவை. கல்வி பெறுதல் கட்டாயமான தேவை. எழுதப் படிக்கப் பேசத் தெரிந்து கொள்ளல் மட்டும் போதாது; நம்மில் பலர் கல்வியின் உச்ச நிலைகளை அடைந்து, அதன் வழி தங்கள் சமூகம் முழுவதையுமே தங்களோடு உயர்த்தி பொதுமதிப்பிலும் உயர்ச்சி பெறப் பாடுபட வேண்டும். தங்கள் அவலநிலையிலேயே மன நிறைவுகொண்டு வாழும் போக்கை வலிந்து மாற்றி மன நிறைவு காணாப் போக்குதான் தனது மேம்பாட்டுக்கு ஊற்றுக்கண் என்பது உணர்த்தப்பட வேண்டும். கடைசியாக, ஆனால் முக்கியத்துவத்தில் குன்றாத தேவை, ஒடுக்கப்பட்ட வகுப்புகள் அச்சங்களை அறவே உதறி மற்றெல்லா ரையும் போன்று சமமான மனித உரிமைகளைக் கோரிப் பெற்று வாழத் தக்கவகையில் ஊக்கமும் ஆற்றலும் அளிக்கப்பட வேண்டும். அரசியல் அதிகாரத்தைப் பெறுவதால் மட்டும் இந்த விளைவுகள் கிட்டி விடாது. நமது குறிக் கோளுக்கான வழிதான் அது என உணர வேண்டும். ஒடுக்கப்பட்ட வகுப்பினரில் சிலர் சட்டமன்ற உறுப்பினர் களாவதால் மட்டுமே, அவ்வகுப்புகளுக்கு விடுதலை கிட்டிவிடு மென்னும் மூட நம்பிக்கை அகல வேண்டுமென்பதற்காகவே இதை நான் வலியுறுத்துகிறேன். இவை அனைத்தும்தான் சமுதாய மேம் பாடாகும். இவை அனைத்தும், திரு கோகலே அவர்கள் அமைத்த ‘இந்திய சமுதாயத் தொண்டர் சங்கம்’ போன்றோ, காலஞ்சென்ற லாலா லஜபதிராய் அமைத்த ‘மக்கள் தொண்டர்களின் சங்கம்’ போன்றோ அமைக்கப்படும் தொண்டு நிறுவனங்களின் வழியாக நிறைவேற்றப்பட வேண்டும்.

## முடிவுரை

36. பெரியோர்களே, மிக நீண்ட உரையின் மூலம் உங்களை வருத்தியதற்கு வருந்துகிறேன். சுருக்கங் சொல்லல் நல்ல குறிக் கோள்தான். எனினும், அரசியலில் அதிகம் புழங்கியிராத மக்கள் முதன்முதலாக ஒன்றுதிரண்டு தங்கள் எதிர்காலத்தை நிர்ணயிக்கும் முடிவுகளைச் செய்ய வேண்டிய கட்டத்தில் சிக்கலின் பரிமாணங்கள் அனைத்தையும் தெளிவுறுத்துவதன் தேவை கருதியே உரை நீண்டு விட்டது. என்னால் முடிந்த அளவுக்கு வழி காட்ட வேண்டும் எனும் ஆவலே நீண்ட உரைக்கு என்னை உந்தியது. இது நமது இறுதிக் கூட்டமாய் அமையாமல், மாபெரும் இயக்கம் ஒன்றின் தொடக்கமாய்

அமைந்து, நமது மக்களின் மேம்பட்ட உயர்ச்சிக்கு வழியமைப்ப தாகவும், நமது நாட்டில் மனிதர்கள் யாவரும் எல்லா வகையிலும் அரசியல், சமுதாயவியல், பொருளியல் யாவற்றிலும் அனைவருக்கும் ஒரே வகையான மதிப்பு எனும் நிலையில் அமையும் சமுதாயத்தை நிறுவவும் இது ஒரு தொடக்கமாய் அமையுமென நம்புகிறேன்.

நீங்கள் எனக்களித்துள்ள பெருமைக்கும், எனது மிக நீண்ட உரையைச் செவிமடுத்த உங்கள் பொறுமைக்கும் மீண்டும் நன்றி கூறி அமைகிறேன்."[1]

---

1. அச்சிட்டு வெளியிட்ட நிறுவனம்; பாரத் பூஷன் அச்சகம், காமத்திபுரா 3ஆவது சந்து, பம்பாய் - 8.

# (6)

# அரசியலமைப்புச் சட்டப் பாதுகாப்பையும் உறுதிப்பாட்டையும் பெறுக

*பம்பாய் நகரமன்ற அரங்கில் கடந்த வாரக் கடைசியில், பம்பாய் மாநில ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் கூட்டம் ஒன்று டாக்டர் பி. ஜி. சோலங்கி அவர்கள் தலைமையில் நடைபெற்றது; குஜராத்தியர்களும் மராத்தியர்களுமாக ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் பெருந்திரளாய்க் கலந்து கொண்டனர்.* அண்மையில் நாகபுரியில் நடைபெற்ற ஒடுக்கப்பட்ட வகுப்புகள் பேராயத்தில் உருவாக்கப்பட்ட கோரிக்கைகளை விளக்குதலே கூட்டத்தின் நோக்கமாகும். பேராயத்திற்குத் தலைமை வகித்த டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அவர்களே இக்கூட்டத்தின் முக்கிய பேச்சாளர்.*

*ஒடுக்கப்பட்ட வகுப்புமக்களுக்கு அரசியலமைப்புச் சட்டத்தின் வாயிலாய்ப் பாதுகாப்பும் உறுதிப்பாடும் பெற வேண்டிய அவசியத்தை விரிவாய் விளக்கிப் பேசிய டாக்டர் அம்பேத்கர் சட்ட மீறல் இயக்கத்தில் கலந்துகொள்ள வேண்டாமென்று ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களைக் கேட்டுக் கொண்டார்.*[1]

---

** இக்கூட்டத்தின் தேதி குறிப்பிடப்படவில்லை - பதிப்பாசிரியர்கள்.*

*1. டைம்ஸ் ஆப் இந்தியா, 1930, செப்டெம்பர் 2.*

(7)

# இப்போதைவிட அதிகமாகப் போராடுங்கள் நன்கு இணைந்து செயல்படுங்கள்

ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் ஆன்மிக நிறுவனமான சந்த்சமாஜ சங்கத்தின் 36ஆவது ஆண்டுவிழா 1930 செப்டெம்பர் 27ஆம் நாள் வியாழக்கிழமை புனாவில் கொண்டாடப்பட்டது. அச்சமயம் முன்னதாகவே பிறிதொரு நிகழ்ச்சிக்கு ஒப்புதல் தந்திருந் தமையால், டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அவர்கள் அந்நிகழ்ச்சியில் கலந்து கொள்ள இயலாமையால், சிவாஜி மராத்தா உயர்நிலைப் பள்ளி முதல்வர் திரு. பி.ஜி. ஜகதாப் அவர்கள் விழாவுக்குத் தலைமை தாங்கினார்.

அவையினரிடையே உரையாற்றுகையில், புனா மாவட்ட ஒடுக்கப்பட்ட மக்கள் மேம்பாட்டுச் சங்கச் செயலர் திரு. கே.ஜி. பதாதே அவர்கள் சங்கத்தின் சுருக்கமான வரலாற்றை எடுத்துரைத்தார். குறிப்பாக, சமூக சமத்துவம் எனும் கோட்பாட்டை ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களிடையே பரவலாக எடுத்துச்செல்லும் பணியைக் குறித்து விளக்கினார். சந்த் சமாஜ சங்கம் என்பது ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களையும் ஏனைய பிற மக்களையும் இணைக்கும் அறவியல் பாலமாய்ச் செயல்பட்டு வந்தி ருப்பதைக் குறித்து விவரித்தார். அவர் டாக்டர் அம்பேத்கார், சுபேதார் காட்டே ஆகியோரின் பணிகளைச் சிறப்பித்துப் புகழ் மாலை சூட்டியதுடன், ஒடுக்கப்பட்ட வகுப்பு களின் சார்பாளராய் பம்பாய் சட்டமன்ற மேலவைக்குத் திரு. காட்டே அவர்கள் நியமனம் செய்யப்பட்டால் ஒடுக்கப்பட்ட மக்களுக்கு நலம் பயக்கும் எனக் கூறினார்.

இக்கூட்டத்தில் தாமதமாய் வந்து தலைமையேற்ற டாக்டர் அம்பேத்கர் அவர்களுக்கு, உரையாற்ற எழுகையில் மகிழ்ச்சியாரா வாரம் நிறைந்த வரவேற்பு அளிக்கப்பட்டது. அவர் தமது உரையில் தமது தனிப்பட்ட செயல்பாடுகள் மட்டுமே ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு முழுமையான துயர்துடைப்பு நல்கப் போதியன அல்ல

என்று குறிப்பிட்டு, ஒடுக்கப்பட்ட மக்கள் தங்களை நிறுவன அளவில் நன்கு அமைத்துக் கொண்டு முன்னிலும் தீவிரமாய்ப் போராட வேண்டும் என்று கூறினார். மேலும் அவர், ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் அவலங்களை வட்ட மேசை மாநாட்டில் பிரிட்டிஷ் அரசுக்குத் தெளிவுறுத்தி அவர்களுக்கு முடிந்த அளவுக்கு உரிமை களைப் பெற்றுத்தர இயன்ற பெருமுயற்சிகளை தாம் மேற்கொள்ள விருப்பதாய்க் கூறினார்.[1]

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா, 1930, செப்டெம்பர் 29.

# (8)

# . . . . . இல்லையேல் மேல் சாதி இந்துக்கள் அதிகாரம் பெற்றுச் சிறுபான்மையினரை ஆளுவர்

*1930 அக்டோபர் 2, வியாழன் மாலை, பம்பாய் பரேலில் தாமோதர் தாக்கர்சே அரங்கிற்கு வெளியே உள்ள மைதானத்தில் பம்பாய் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் ஆடவரும் பெண்டிருமாகச் சுமார் பத்தாயிரம் பேர், ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் சார்பாளராய் வட்டமேசை மாநாட்டில் கலந்துகொள்ள இரண்டு நாளில், சனிக் கிழமை அன்று இலண்டனுக்குப் பயணம் தொடங்கவிருந்த டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அவர்களை வாழ்த்தி வழியனுப்பும் நிகழ்ச்சியில் கலந்து கொண்டனர். பெரும் உற்சாகம் நிலவிய அக்கூட்டத்திற்கு டாக்டர் பி.ஜி. சோலங்கி அவர்கள் தலைமை வகித்தார்.*

*தொடக்கத்தில் தலைவர் அவர்கள், ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு டாக்டர் அம்பேத்கர் அவர்கள் ஆற்றிய பல்வேறு தொண்டுகளைப் பற்றிக் குறிப்பிட்டு, வட்டமேசை மாநாட்டில் ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் சார்பாளராய்க் கலந்துகொள்ளத் தகுதிவாய்ந்த சிறந்த மனிதர் ஒருவர் எனில் அவர் டாக்டர் அம்பேத்கர்தான் என உரைத்தார். அவர் டாக்டர் அம்பேத்கர் அவர்களுக்கு இனிய பயணமும் ஏற்றுக் கொண்ட குறிக்கோளில் வெற்றியும் வாய்க்க வாழ்த்துக்களைத் தெரிவித்தார்.*

*மக்கள் சார்பில் டாக்டர் அம்பேத்கர் அவர்களுக்கு நல்வாழ்த்து தெரிவிக்கும் வரவேற்புப் பட்டயம் ஒன்றை திரு. சிவதார்க்கர் வாசித்தளித்தார்.*

*இக்கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் அவர்கள் மிக விரிவாய் உரையாற்றினார். ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் சமூக, அரசியல் நல மேம்பாடுகள் குறித்த விழிப்புணர்வில் தொய்வு ஏற்படாதவாறு தொடர்ந்து பிரச்சாரம் செய்து வருதலின் தேவை பற்றி வலியுறுத்தினார். ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் தலைவர்கள் அவர்களது நின்று*

போன பழைய இதழை, 'ஜனதா' (மக்கள்) என்ற பெயரில் மீண்டும் தொடங்கி நடத்த முடிவு செய்துள்ளார்கள் என்பதை அறிவித்தார்.

தமது இலண்டன் பயணத்தைப் பற்றிக் குறிப்பிட்டு, வட்ட மேசை மாநாட்டுக்குச் சென்று' கலந்து கொள்வதால் பயன் ஏதும் இல்லையென்று மக்களிடையே காங்கிரசார் கூறிவருவதைச் சுட்டிக் காட்டினார்; ஆனால் வட்ட மேசை மாநாட்டில் கலந்து கொள்வதால் பயன் கிடைக்கும் என்றும், ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு இதன் விளைவாய்ப் பல நன்மைகள் கிடைத்தல் உறுதி என்று தாம் நம்பு வதாகவும் கூறி ஊக்க மளித்தார். பம்பாய் மாநிலத்தில் காங்கிரஸ் காரர்கள் கடைப்பிடிக்கும் முறைகளால் நாட்டுக்கு எவ்வித நலனும் விளையாததுடன் ஆயிரக்கணக்கான ஏழை உழைப்பாளிடையே வேலையில்லாத் திண்டாட்டத்தை விளைவிக்கவும் அவை காரண மாயிருப்பதால் அவற்றோடு தம்மைத் தொடர்புப்படுத்திக் கொள்ள விரும்பவில்லையென்று கூறினார்.

உடனடியாகவே, தாமும் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களும் இந் நாட்டுக்குத் தன்னாட்சி வேண்டும் என்பதில் காங்கிரஸ்காரார் களுக்குச் சற்றும் சளைக்காத அளவில் அக்கறை கொண்டிருப்பதாய்க் கூறி, புதிய அரசியலமைப்புச் சட்டத்தின் கீழ் தங்களுக்கும் பிற சிறுபான்மையினருக்கும் நியாயமான பங்கு வேண்டும் என்று கோருவதில்தான் வேறுபாடு என்றும் கூறினார். காங்கிரஸ்காரர்கள் விரும்புவதைப் போன்று, பிரிட்டிஷ்காரர்கள் இப்போதைய நிர்வாக முறையை அப்படியே அடிப்படையாய்க் கொண்ட அரசியல் அமைப்புச் சட்டத்துடன் ஆட்சியை ஒப்படைத்து விட்டு அகலுவார் களாயின், அதன் விளைவு மேல்சாதி இந்துக்கள் ஆட்சியதி காரத்தைக் கைப்பற்றிக் கொண்டு, பிற சிறுபான்மையினரை அடக்கியாளுவதில்தான் முடியும். இதற்குத்தான் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் எதிர்ப்பு தெரிவிக்கிறார்கள். வளர்ச்சியுற்ற மேல்சாதி வகுப்புகளின் மனப்பான்மை காரணமாக வட்டமேசை மாநாடு தோல்வியடைந்தால் அதற்கு முழுக்காரணம் காங்கிரசும் மேல்சாதி இந்துக்களுமே ஆவர் என்று அவர் கூறினார். வட்ட மேசை மாநாடு வெற்றிகரமாய் நடைபெற வேண்டுமென்று விரும்பினால், சிறு பான்மையினரின் உரிமைக் கோரிக்கைகளையும் கருத்தில் கொள்ள வேண்டும் என்பதை மாநாட்டில் கலந்து கொள்ளும் இந்துச் சார்பாளர்கள் கவனத்தில் கொள்வார்கள் என்று நம்பிக்கை தெரிவித்தார்.

டாக்டர் அம்பேத்கர் மேலும் தொடர்ந்து பேசுகையில், தமது எண்ணத்திலுள்ள மற்றொரு நோக்கத்திற்காக இங்கிலாந்தில் மேலும் சிறிது காலம் தங்கப் போவதாய்க் குறிப்பிட்டார். ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் இரண்டு முக்கிய முறையீடுகள், காவல்துறையிலும், போர்ப்படைகளிலும் அவர்கள் சேரத் தடைவிதிக்கப்பட்டிருந் தமையே. இக்குறைபாடுகளைப் போர் அலுவலகத்திலும், பிரிட்டிஷ் அமைச்சரவையிலும் முறையிட்டுத் தடைநீக்கம் பெறுதற்கு முயல விருப்பதாய்க் கூறினார். மேலும் அவர், ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு ஆதரவாய்ப் பிரச்சாரம் செய்யும் பொருட்டு, ருசியா, ஜெர்மனி, அமெரிக்கா, ஜப்பான் ஆகிய நாடுகளுக்கும் பயணம் செய்ய விருப்பதாய்க் கூறினார். இந்த நாடுகளில் இங்கிலாந்துக்கு எதிராகக் காங்கிரசார் தொடர்ந்து பிரசாரத்தில் ஈடுபட்டு வருவதைத் தாம் அறிந்திருப்பதாய்க் கூறிய அவர், இந்த நாட்டு மக்களிடையே இந்தியாவில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் அவல நிலைகளைத் தெளிவுறுத்தி, ஒடுக்கப்பட்ட மக்களுக்கு ஆதரவாய் அவர்களது பரிவைத் திரட்டும் முயற்சி முற்றிலும் நியாயமானதே என்றும் அவர் கூறினார்.

மற்றும் திரு. கெலுஸ்கார், திரு. நாயக் ஆகியோரும் கூட்டத்தில் உரையாற்றினர்.[1]

இக்கூட்டத்தில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஆற்றிய உரையின் மேலும் பல பொருண்மைக் கூறுகள் இடம் பெற்றிருந்தன, அவை கீர் இன் நூலில் இடம் பெற்றுள்ளன. அவை கீழே தரப்படுகின்றன.

- பதிப்பாசிரியர்கள்

தமக்களிக்கப்பட்ட வரவேற்புக்குப் பதிலளித்துப் பேசிய டாக்டர் அம்பேத்கர், தமது சாதனைகள் ஒரு சிறிதளவு என்றாலும் அவை தமது எண்ணற்ற உடன் பணிவோர், தொண்டர்கள் தமக் களித்த ஒத்துழைப்பின் துணை கொண்டுதான் சாதிக்கப்பட்டுள்ளன என்று குறிப்பிட்டார். சட்ட மன்ற மேலவையில் டாக்டர் சோலங்கி ஆற்றி வரும் பணிகளையும் மெய்ப்பற்றுடன் அவர் செய்து வரும் உதவிகளையும் குறித்துப் புகழ்ந்து உரைத்த டாக்டர் அம்பேத்கர், திரு. தியோராவ் நாயக் அவர்கள் தமது வலது கரம் போன்றவர் என

1. டைம்ஸ் ஆப் இந்தியா, 1930, ஆக்டோபர் 3.

வருணித்து, தாம் இல்லாத போது இயக்கத்தைச் சரியான பாதையில் அவர் நடத்திச் செல்வார் என்றும் கூறினார். தமது இயக்கத்திற்குப் பெருமளவில் பொருட் செலவு செய்துள்ள திரு. சங்கர ராவ், எஸ். பார்சா அவர்களுக்குத் தமது உளமார்ந்த நன்றியையும் தெரிவித்தார்.

வட்டமேசை மாநாடு பற்றிக் குறிப்பிட்டுப் பேசுகையில், டாக்டர் அம்பேத்கர், ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் நலன் குறித்த கண்ணோட்டத்தில், அம்மாநாட்டில் உறுதியான நன்மைகள் கிட்டும் என்று கூறினார். தம்மைப் பொறுத்தமட்டில், "எனது மக்களின் நியாயமான கோரிக்கைகளை வலியுறுத்தப் போவதுடன், நாட்டின் தன்னாட்சிக் கோரிக்கைக்கு ஆதரவாகவே நிற்பேன்" என்றும் கூறினார். இறுதியாக அவர், முடிந்தால் அவர்களது சிக்கலை சர்வதேச சங்கத்திலும் எடுத்துரைக்க முயல்வதாய் உறுதி கூறினார். அவரது உரையை முடிக்கையில் உட்பூசல்கள் எதிலும் ஈடுபட லாகாது என்று தமது மக்களுக்கும் தொண்டர்களுக்கும் எச்சரிக்கை செய்தார். தலைமைப் பதவிகளில் பேராசை கொண்டு செயல்படுதல், அவர்களது வலிமையைச் சிதைத்து அவர்களது நிலைமையை மேலும் நலிவடையைச் செய்வதுடன், அவர்களது குறிக்கோள் களையும் பாழ்ப்படுத்தி விடும் என்று கூறினார்.[1]

---

1. கீர், ப.145.

# (9)

# போராட்டத்தின் வழி அதிகாரமும் பெருமிதமும் உங்களுக்குக் கிடைக்கும்

*வட்டமேசை மாநாட்டின் இரண்டாம் அமர்வில், தீண்டப்படாத வகுப்பினரின் சார்பாளராய் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அவர்கள் கலந்துகொள்ள விருந்தார். 1931 ஆகஸ்டு 15ஆம் நாள் அவர் இலண்டனுக்குப் புறப்படவிருந்தார். புறப்படுவதற்கு முந்தைய நாள், 1931 ஆகஸ்டு 14ஆம் நாள் சர். கவாஸ்ஜி ஜஹாங்கீர் அரங்கில் அவருக்கு வழியனுப்பு விழா ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. டாக்டர் பி.ஜி. சோலங்கி அவர்கள் தலைமை வகித்தார். டாக்டர் அம்பேத்கர் அவர்கள் இரவு 8 மணிக்கு மகளிர் கூட்டத்திலும் இரவு 10 மணிக்கு ஆடவர் கூட்டத்திலுமாகத் தனித்தனியே இரண்டு உரைகள் நிகழ்த்தினார்.*[1]

*ஒடுக்கப்பட்ட வகுப்பு மகளிர் கூட்டத்தில், டாக்டர் அம்பேத்கர் கிளர்ச்சியூட்டும் உரையொன்றை ஆற்றினார். அவர் பேசுகையில், "உங்கள் அடிமைத்தனத்திலிருந்து அக்குவேர், ஆணிவேருடன் முழுமையாய் விடுதலை பெற நீங்கள் உறுதிபூண்டு அதற்காக இன்னல்கள் இடர்கள் எவை வரினும் எதிர்கொள்ளத் துணிவீர் களாயின், நான் நிறைவேற்ற முயன்று கொண்டிருக்கும் இக்கடும் பணியின் பேரும் புகழும் உங்களையே சாரும்" என்று கூறினார்.*

*அடுத்து அதே அரங்கில் ஒடுக்கப்பட்ட வகுப்பு ஆடவரிடையே அவர் உரையாற்றினார். தமது உருக்கமான உரையில், அவர்களது எல்லையற்ற அன்பே தமக்குப் பெரும் ஊக்குவிப்பாய் இருப்பதாய்க் கூறினார். வட்டமேசை மாநாட்டைப் பற்றிக் கூறுகையில், "நூற்று இருபத்தைந்து பேர் கலந்து கொள்ளும் இம்மாநாட்டில் நாங்கள் இருவர்தான் கலந்து கொள்கிறோம்; ஆனால் உங்கள் நலனுக்காக விண்ணையும் மண்ணையும் அசைப்பது போல் தீவிரமாய்ப் போராடுவோம். காந்தியடிகளுடன் இன்று பிற்பகல் உரையாடல்*

---

*1. 'ஜனதா', 1931, ஆகஸ்டு 17.*

ஒன்று நடத்தினேன். இப்போதைக்கு உங்கள் நலன் மேம்பட அவர் எதையும் செய்யப் போவதில்லை. நமது உரிமைகளுக்காக நாம் நமது சொந்தக் கால்களில் நின்றுதான் போராட வேண்டும். எனவே உங்கள் ஆற்றலனைத்தையும் திரட்டித் தொடர்ந்து போராடுங்கள். போராட்டத்தின் வாயிலாகவே அதிகாரமும் பெருமிதமும் உங்களை வந்தடையும்.[1]

---

1. கீர், ப. 168.

# (10)

# வருங்கால இந்து சந்ததிகள் எனது தொண்டைப் பாராட்டுவார்கள்

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அவர்கள் வட்டமேசை மாநாட்டிலிருந்து திரும்பி வருதற்கு முந்தைய நாள். பம்பாய் பலார்டு துறையில் செய்யப்பட்டிருந்த ஏற்பாடுகள் குறித்து அரசின் அறிவிப்பு வருமாறு:

"மௌலானா சௌகத் அலியும், டாக்டர் அம்பேத்கரும் 1932, ஜனவரி 29இல், 'எஸ்.எஸ், மூல்த்தான்' எனும் கலத்தில் வந்தடைகின்றனர்".

## H.I. கோட்டங்களின் கண்காணிப்பாளர் அறிவிப்பு

1. பம்பாய் ஒடுக்கப்பட்ட வகுப்புகள் நிறுவனத்தின் செயலருக்கு அனுப்பப்பட்ட கடிதத்தின் நகல், தங்கள் தகவலுக்காக அனுப்பப் படுகிறது. அதிலிருந்து, டாக்டர் அம்பேத்கரும், மௌலானா சௌகத் அலியும் பலார்டு துறையில் வந்து இறங்கும் தருணத்தில் ஒடுக்கப் பட்ட வகுப்புகளுக்கும், கிலாபத் குழுவுக்கும் என்னென்ன சலுகைகள் தரப்பட்டுள்ளன என்பதை அதில் கண்டு அறியலாம்.

2. துறைத்தள மேலாளர் அலுவலகத்தின் இம்மாதம் 27ஆம் தேதியிட்ட குறிப்பாணையின் நகல் தங்களுக்கு ஏற்கெனவே நேரடியாய் அனுப்பப்பட்டுள்ளது. அதில் தாங்கள் கவனம் செலுத்தி, அதில் கண்டுள்ளவாறு ஏற்பாடுகள் அனைத்தையும் செய்ய வேண்டும். அதிகாலை 5.00 மணிக்குப் பச்சைவாயில் திறந்து விடப்படும் என்று ஒடுக்கப்பட்ட வகுப்புகள் செயலரிடமும், கிலாபத் குழுவின் செயலரிடமும் ஒப்புக்கொண்டுள்ளோம். காந்தியடிகள் வந்திறங்கிய போது எவ்வாறு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தனவோ, அவ்வாறே இப்போதும் ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டும். ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் தொண்டர்கள் நுழைவாயிலில் இருந்து பச்சை வாயில் அரங்கு வரை சாலை மருங்கில் அணி வகுத்து நிற்க அனுமதிக்கப்பட வேண்டும். தேவைப்பட்டால், இயல்பான போக்குவரத்து நடமாட்டத் திற்குத் தடை விளைவதைத் தவிர்க்க, ஆங்காங்கு தொண்டர்களை நிறுத்தக் கண்காணிப்பாளர் ஏற்பாடு செய்ய வேண்டும். படகு

கட்டப்பட்டு, நடைவழி அனுமதிக்கப்படுவதற்கு முன்னர், தள மேடைக்கு எவரையும் அனுமதிக்கலாகாது; கப்பலுக்கு அனுமதிச் சீட்டு வைத்திருப்பவர்களைத் தவிரப் பிறர் எவரையும் சுங்கத்துறை அரங்கினுள் அனுமதிக்கலாகாது.

3. இப்படகு வழியாக வந்து இறங்கும் வட்டமேசை மாநாட்டு உறுப்பினர்களுக்கு எதிராக காங்கிரசார் ஆர்ப்பாட்டம் செய்யக் கூடும். இந்நிலையைச் சமாளிக்கத் தேவையான ஏற்பாடுகளைக் 'A' கோட்டக் கண்காணிப்பாளர் செய்ய வேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் பலார்டு துறை வளாகத்தில் எதிர்ப்பு ஆர்ப்பாட்டம் ஏதும் அனுமதிக்கப்படலாகாது.

4. மோலில் போக்குவரத்தை ஒழுங்குபடுத்துதற்காக, 'T' கோட்டத்திலிருந்து காவல்துறையினர் இருவர் அனுப்பப்படுவர். மோட்டார் வாகனங்கள் வழக்கம் போல் நிறுத்தப்படலாம்.

5. எதிர்ப்பு ஆர்ப்பாட்டக்காரர்கள் சிவப்பு வாயில் வழியாய் வர மாட்டார்கள் என்று எண்ணுவதற்கில்லை. எனவே அப்பகுதியில் பலத்த பாதுகாப்பிற்கு ஏற்பாடு செய்யப்பட வேண்டும்.

6. அரங்கிற்கு வருவோர்க்கான அனுமதிச்சீட்டின் நகல் இத்துடன் இணைத்து அனுப்பப்பட்டுள்ளது.

7. மௌலானா சௌகத் அலியும் டாக்டர் அம்பேத்கரும் காலை 7.15 மணியிலிருந்து 1.30 மணிக்குள் இறங்க ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது. 8.30 மணிக்குள் பலார்டுதுறையை விட்டு அனைவரும் அகல வேண்டும் என்று இரு சங்கங்களின் செயலர்களுக்கும் தெரிவிக்கப்பட்டுள்ளது. வாக்குரிமைக் குழு உறுப்பினர்கள் காலை 8.30 மணிக்கும், 9.00 மணிக்கும் இடையே பலார்டு துறையிலிருந்து அரசு விருந்து மனைக்குச் செல்வார்கள். சிவப்பு வாயில் வழியாக அவர்கள் துறைத்தளத்திலிருந்து அரசுவிருந்து மனைக்குச் செல்வார்கள்.

8. எஸ்.எஸ் மூல்டான் கலம் அதிகாலை 4.00 மணிக்கு பலார்டு துறைக்கு வந்து சேரலாம். அஞ்சல் வண்டிகள் கூலித் தொழிலாளர்கள், அஞ்சல்துறைப் பணியாளர் ஆகியோர் அனுமதிக்கப்படுவதற்கு வாய்ப்பாக, படகு வருதற்கு ஒரு மணி நேரம் முன்னதாகவே பச்சை வாயிலைத் திறந்து வைத்தல் துறைமுகம் பொறுப்புக் கழகத்தின்

நெடுநாட் பழக்கம்; ஆனால் இச்சமயத்தில் அது பின்பற்றப்படாது. அஞ்சலகப் பணியாளர் முதலியோர் பலார்டு துறைக்குப் பச்சை வாயில் வழியாய் அனுமதிக்கப்படுவர். இதன் பொருட்டு சிவப்பு வாயிலிலும் பலார்டு துறையிலும் கூடுதல் பணியாளர்கள் நியமிக்க வேண்டியிருக்கலாம்.

நகல்: துணை
அதிகாரி அலுவலர்

ஒப்பம்
காவல் துறை துணை ஆணையர்
துறைமுகம்,[1]

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் 1932 ஜனவரி 4, ஞாயிற்றுக்கிழமை இலண்டன் திரும்பினார். அவர் இலண்டலிருந்து புறப்பட்டு, வழியில் மார்சேல்சில் ஜனவரி 15ஆம் நாள் தங்கிவிட்டு 1932 ஜனவரி 29ஆம் நாள் பம்பாய் வந்தடைந்தார். அவர் பயணம் செய்த கப்பலில் பிரிட்டிஷ் பிரதமர் நியமித்த வாக்குரிமைக் குழுவின் பிரிட்டிஷ் உறுப்பினர்களும்(டாக்டர் அம்பேத்கரும் அக்குழுவினர் உறுப்பினர் தான்) பயணம் செய்தனர். வழக்கம் போல் டாக்டர் அம்பேத்கர் (விலைக்கு) வாங்கின யாவற்றையும் அவரே கொண்டுவந்திருந்தார். அவை இருபத்து நான்கு பெட்டிகள் நிறையப் புதிய புத்தகங்களே.

டாக்டர் அம்பேத்கர் காலை ஆறு மணிக்குக் கரையிறங்கு வதாயிருந்தது. அதிகாலையிலிருந்தே அவரைப் பின்பற்றுவோரும் மதிப்போரும் கொண்ட திரளான கூட்டம் ஒன்று அவரது வருகையை எதிர்நோக்கிக் காத்திருந்தது. திரு. பி. பாலு, கஜ்ரோல்கர் உள்ளிட்டு ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் தலைவர்கள் சிலர், அரசியலில் தாங்கள் காந்தியடிகளின்பால் சார்ந்து நிற்போராய் இருந்தபோதிலும், அம்பேத்கரைத் தளத்திலேயே சந்தித்து வரவேற்று மாலை அணிவித்தனர்.

டாக்டர் அம்பேத்கரும், அவருடனே பயணம் செய்துவந்த மௌலானா சௌகத் அலியும் மோல் நிலையத்தில் இறங்கினர். முஸ்லீம் தலைவரும், ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் தலைவரும் அங்கே உற்சாகம் பொங்க வரவேற்கப்பட்டனர். முஸ்லீம் மக்களும் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களும் பெருந்திரளாய்க் கூடியிருந்த அக்கூட்டத்தில் பேசிய முஸ்லீம் தலைவர், ஒவ்வொரு மனிதருக்கும்

1. கோப்பு எண் 3447 / H / III - 32 - 37.

தமது குறிக்கோளில் திசைப் பிறழ்ச்சியற்ற நம்பிக்கை தேவையென்று கூறி, தமது கொள்கைக்காக டாக்டர் அம்பேத்கர் துணிவுடன் போராடியதைப் பாராட்டினார். சௌகத் அலியும், டாக்டர் அம்பேத்கரும் ஊர்வலமாய் அழைத்துச் செல்லப்பட்டனர்; அவ்வூர் வலம் பைகுலாவில் முடிவுற்றது.

ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கு டாக்டர் அம்பேத்கர் இப்போது வலிமை, நம்பிக்கை, பேரார்வம் ஆகியவற்றின் சின்னமாய் உருவெடுத்துள்ளார். அவரை விஞ்சியவர் இருக்க முடியாது என்பது மெய்ப்பிக்கப்பட்டுள்ளது. அவர் ஒடுக்கப்பட்ட வகுப்புகளை ஒரு புதிய ஊழிக்கு நடத்தி வந்துள்ளார். ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் மாண்டு போன உயிரணுக்களெல்லாம் இன்று புதிய ஆற்றலும், புதிய இரத்தமும், புதிய ஊக்கமும் பெற்று விளங்குகின்றன. இந்த ஆற்றல், தொலைநோக்கு, மனஉணர்வு ஆகியவைகளைத் துணைகொண்டு இடையூறுகளையும் ஆபத்துகளையும் கடக்கவியலும்.

அன்று மாலை பம்பாய் பரேலில் நடைபெற்ற பொதுமக்கள் கூட்டத்தில் நூற்றுப் பதினான்கு நிறுவனங்களின் சார்பில் டாக்டர் அம்பேத்கர் அவர்களுக்கு வரவேற்புப் பட்டயம் ஒன்று வாசித்து அளிக்கப்பட்டது"[1] அதன் வாசகம் கீழே தரப்படுகிறது:

டாக்டர் பி. ஆர் அம்பேத்கர்,
M. A. Ph.D., D.Sc., பார் அட்லா, M.L.C.,
வட்டமேசை மாநாட்டில் இந்தியச் சார்பாளர்.

அவர்களுக்கு வாசித்தளிக்கப்படும் வரவேற்புப்பட்டயம்.

அன்பார்ந்த ஐயா, அடியில் பெயர் கொடுக்கப்பட்டுள்ள நிறுவனங்களைச் சார்ந்த நாங்கள், ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் சார்பில் கடல் கடந்து சென்று வட்டமேசை மாநாட்டில் எங்களது நியாயமான உரிமைகளுக்கும் தகுதிகளுக்கும் ஆதரவாய் அயராது போராடித் திரும்பியுள்ள, எம்மனைவராலும் ஏற்றுக் கொள்ளப் பட்ட தலைவராகிய, தங்களுக்கு மனமார்ந்த வரவேற்பு அளிக்கும் வாய்ப்பைப் பெற்றதை மிகப் பெருமையாகவும் கௌரவமாகவும் எண்ணிப் பெருமிதமடைகிறோம். தகுதியிலும், நடத்தப்படுவதிலும் எங்களுக்குச் சமத்துவ உரிமை வேண்டுமென்னும் கோரிக்கைகளை

1. கீர், ப. 193.

நீங்கள் மிக ஆணித்தரமாக நிறுவியுள்ளீர்கள். எங்களுக்காக இத்தகைய துணிவு மிக்க போராட்டத்தைத் தாங்கள் நடத்தியிராவிட்டால் எங்கள் உரிமைக் கோரிக்கைகள் முற்றுமாய்ப் புறக்கணிக்கப்பட்டுப் போயிருக்குமோ என்றும் அஞ்சுகிறோம். எங்கள் உரிமைகளைக் காப்பதற்கு, மானிட ஆற்றலால் என்ன சாதிக்க முடியுமோ அத் துணையும் செய்துள்ளீர்கள். தங்கள் இலண்டன் பயண வெற்றியின் விளைவாக மிக நெருங்கிய வருங்காலத்தில் நாங்களெல்லாம் ஏனைய பெருஞ் சமுதாய மக்களுக்குச் சமமாகத் தலைநிமிர்ந்து வாழ்வோம் என்பது உறுதி.

வட்டமேசை மாநாட்டில் எங்களது சார்பாளராய் தங்களைத் தவிரச் சிறந்த அறிஞர் எவரையும் இந்த அரசு தேர்ந்தெடுத்திருக்க வியலாது என்பதை இங்கே பதிவாக்க அனுமதி வேண்டுகிறோம். இராவ் பகதூர் (இரட்டைமலை) சீனிவாசன் அவர்களோடு இணைந்து தாங்கள் ஆற்றிய பணியாலும், இலண்டனிலும் வேறு பிற இடங்களிலும் தாங்கள் ஆற்றிய ஆற்றல் மிகு உரைகளாலும், ஒடுக்கப் பட்ட வகுப்பு மக்கள் மிகப் பரந்த சிறுபான்மையினர் என்பதையும் அவர்களுக்கென்று தனித்த சார்பான்மையின்றி அவர்களது நலன் களுக்கு ஒருபோதும் பாதுகாப்பு கிட்டாதென்பதையும் தாங்கள் உலகனைத்திற்கும் உணர்த்தி நிறுவியுள்ளீர்கள். எங்கள்பால் வாயளவில் பரிவுகாட்டும் காங்கிரஸ் தலைவர்கள் உண்மையில் நழுவல் பேர்வழிகளேயென்று ஐயத்திற்கு இடமின்றி நிறுவிய பெருமையும் தங்களைச் சாரும். ஐயா, தாங்கள் வட்ட மேசை மாநாட்டில் ஆற்றிய அரும் பணியைத் தங்களுக்கேயுரிய சிறப்பான வகையில் விரைவில் தொடங்கப்படவுள்ள வாக்குரிமைக் குழுவிலும் தொடர்ந்து ஆற்றி எங்கள் குறிக்கோள்களுக்காகப் பாடுபட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறோம். தங்கள் உடன் பிறப்புகளாகிய எங்களுக்குத் தகுதியிலும், நடத்தப்படுவதிலும் முழுமையான சமத்துவ உரிமை தேவையென்னும் இலக்குக்குக் குறைவான எதிலும் மனநிறைவு அடைந்துவிட வேண்டாமென்று தங்களை இங்கே வேண்டிக்கொள்வது மிகப் பொருத்தமாயிருக்கு மென்று கருதுகிறோம். வாக்குரிமைக் குழுவின் பணியிலும், இந்த நாட்டின் அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்குதல் தொடர்பான பணிகள் எல்லாவற்றிலும், எங்கள் குறிக்கோளின் வெற்றிக்காகத் தங்களால் முடிந்ததனைத்தையும் செய்வீர்கள் என்று முழுமையாக நம்புகிறோம்.

நீண்ட நெடுங்காலமாகவே அடக்கியொடுக்கப்பட்டும், அச்சுறுத்தப்பட்டும், சுரண்டப்பட்டும் வந்துள்ள எங்கள் அனைவருக்கும், பொதுவாழ்க்கையெனும் வானில் புத்தொளியாய்த் தாங்கள் உதயமான நாளே எங்களுக்குப் பொன்னெழுத்துக்களால் எழுதப்பட வேண்டிய நாளாகும். எங்களுக்கு இயல்பான மனித உரிமைகளைப் பெற்றுத்தருவதற்காக, மகாதிலும் நாசிக்கிலும், இன்னும் பிறபல இடங்களிலும் நடத்திய இயக்கங்களின் மூலம், எங்களது உரிமைகளின்பால் எங்களுக்கு விழிப்புணர்வு ஊட்டி, எங்கள் அச்சங்களையெல்லாம் குழிதோண்டிப் புதைக்க எங்களுக்கு உந்து சக்தியாய் விளங்கினீர்கள். எமது சமூகத்திற்குப் பொறுப்புணர்வும், இன்று எய்தியிருக்கும் கண்ணோட்டமும், நாடெங்கிலும் ஒன்று திரண்டு எமது உரிமைகளை வலியுறுத்திக்கோரும் துணிவும், தங்கள் உழைப்பும் வழிகாட்டு நெறியும் தந்த பயனே என்று உரைத்தல் உயர்வு நவிர்ச்சி ஆகாது; ஆதரவும், நட்புமற்ற இச்சமுதாயத்திற்காகத் தாங்கள் செய்து வரும் மகத்தான தியாகங்களையும் நாங்கள் நன்கு அறிவோம்.

அரசியலிலும் பிற துறைகளிலும் எங்கள் நலன்கள் யாவும் தங்கள் கரங்களில் பாதுகாப்பாயிருக்கும் எனும் எங்கள் நம்பிக்கையை மீண்டும் உரைக்க வேண்டியதில்லை. ஒடுக்கப்பட்ட எமது சமுதாயத்திற்கு விடிவு அளிக்கக்கூடிய ஒரே வழியான அரசியல் அதிகாரத்தைப் பெறும் பாதையில் எங்களை வழிநடத்தி வெற்றி ஈட்டித்தரவல்ல, எங்கள் நம்பிக்கைக்குரிய தலைவர் தாங்கள் ஒருவரே என்று தங்கள் வழிகாட்டலை எதிர்நோக்கி நிற்கிறோம்.

என்னென்றும் தங்கள் உண்மையான,
கீழ்வரும் சங்கங்களின் உறுப்பினர்கள்:

1. சமூக சமத்துவப்படை (பம்பாய் மாநிலம்)
2. நண்பர்கள் ஒன்றியம், பெலிஸ்லே சாலை
3. சோம்வன்ஷிய அபல்விருத்த சேவா மண்டல்
4. பகிஷ்கிரித் சேவா மண்டல்
5. மகாராட்டிர பல்வீர் சிக்ஷான் பிரசாரக் மண்டல்
6. பகிஷ்கிருத ஹிச்சிந்தாய் சேவா மண்டல்
7. தென்னிந்திய ஆதிதிராவிட மகாஜன சபை
8. மஹிளா மண்டல், பம்பாய்
9. மகார் சமாஜ சேவா சங்கம்

10. சாத்ரா மாவட்ட யுவக் சங்கம்
11. நாகர் மாவட்ட பகிஷ்கிருத சேவா சங்கம்
12. யுவங் சங் சமாஜிக் ஜல்சா
13. டிராம்வே கம்பெனிப் பட்டறை ஒடுக்கப்பட்ட வகுப்புகள் சங்கம்
14. நவரஸ் சிகரட் கம்பெனி ஒடுக்கப்பட்ட வகுப்புகள்
15. பகிஷ்கிருத மஹிளா சேவா மண்டல்
16. பாரா சௌல் சேவா சங்கம்
17. இரத்தினகிரி மாவட்ட சமூக சமத்துவ சங்கம்
18. குஜராத் ஒடுக்கப்பட்ட வகுப்புகள் சங்கம்
19. புனா மாவட்ட பகிஷ்கிருதி சங்கம்
20. புனா மாவட்ட தலித் சங்கம்
21. சதாரா மாவட்ட சமூக சமத்துவப்படை
22. பகிஷ்கிருதி ஒடுக்கப்பட்ட வகுப்புகள் CC சங்கம்
23. பகிஷ்கிருதி ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் நவயுக சங்கம்
24. பௌவாலட்டி கூட்டுறவு மண்டல்
25. தோபிதலா சோமவன்ஷய மண்டல்
26. தோபிதலா சோமவன்ஷிய மஹிளாமண்டல்
27. 'F' தொகுதி பகிஷ்கிருத சேவா மண்டல், பம்பாய்
28. டாடா நூற்பாலை சாவ்ல்ஸ் மகர் பஞ்ச்
29. கொங்கன் பிராந்திக் சேம்பர் பரிஷத்
30. பொராஸ்சாலை சிமெண்ட் சாவ்ல்ஸ் பஞ்ச்
31. மழகோவாள் கதா பஞ்ச்
32. ஜோனாதோர் சாவ்ல்ஸ் பஞ்ச்
33. பாயத்யாச்சி சாவ்ல்ஸ் பஞ்ச்
34. பொராஸ் சாலை ஒடுக்கப்பட்ட வகுப்புகள் குடியிருப்பு பிளாக்குகள் 1 - 3
35. நவிதார் சாவ்ல்ஸ் பஞ்ச்
36. சோம்வன்ஷிய நிராஷ்ரித சிக்ஷான் வர்தக் சமாஜ்
37. சோலப்பூர் மாவட்ட மகார் சேவா சங்கம்
38. சதாரா மாவட்ட வைதே தாலுகா பஞ்ச்
39. பகிஷ்கிருத கூட்டுறவு சங்கம்
40. பி. டி. டி பிளாக் எண் 7 இல் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் குடியிருப்பு

41. மகாராட்டிரிய புராதன் மகார் உன்னாதி சங்கம்
42. சதாரா மாவட்ட ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சங்கம்
43. குலாபாவாடி பஞ்ச் மண்டலி
*44 பந்தரா சமாஜ் சங்கம்
45. பாரதீய தருண்யுவக் சங்க பகிஷ்கிரிட்
46. சிறீசோம்வன்ஷிய மண்டலி
47. நைகோவன் சாவ்ல் நவசாகா கும்வோர் பஞ்ச்
48. பகிஷ்கிருத ஹித்வர்தக் சமாஜ்
49. பிம்பரீ சாயத் நாசிக் தாலுகா ஜல்சா, காம்ப்பூ
50. ரோஹிதாஸ் தியான்தேவ் சமாஜ்
51. சர்மகார் மஹிளா மண்டல்
52. சர்மகார் சுதாரக் மண்டல்
53. மகார் இளைஞர் சங்கம், வின்ச்சூர்
54. நைகோவன் சமூக சமத்துவ சங்கம்
55. பகிஷ்கிருத பஜன் சமாஜ், வடலா
56. சந்தன் வாடி மகிலா மண்டல்
57. சந்தன்வாடி ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சங்கம்
58. சோலாப்பூர் மாவட்ட கால்மலே தாலுக்கா, ஹிர்த்வாதிக் சமாஜ்
59. சாத்ரா மாவட்ட பல்வீர் சைனிக் தள்
60. தாணா மாவட்ட ஒடுக்கப்பட்ட வகுப்புகள் சங்கம்
61. பந்த்தரா காட்வாடி வருதே மண்டல்
62. நாசிக் யுவக் சங்
63. நைகோவான் பி.டி.டி. பிளாக் குடியிருப்போர் சங்கம்
64. பி அண்டு சி. ஐ ரயில்வே ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சங்கம்
65. நாசிக் மாவட்ட மத்யா வார்தி மண்டல்
66. பாரதிய சமாஜ் சேவா மண்டல்
67. மத்யவர்தி சமதா சைனிக்தள்
68. இரவான் கோவான் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சங்கம்
69. அட்பட் ஒடுக்கப்பட்ட வகுப்பின் சங்கம்
70. குலாபா மாவட்ட ஒடுக்கப்பட்ட வகுப்புகள் சங்கம்
71. டிராம்வே கூட்டுறவு சங்க சாவ்ல் குடியிருப்போர் சங்கம்

* 'பண்டாரி' யாக இருக்கலாம் - பதிப்பாசிரியர்கள்.

72. சமுதாய சமத்துவ சங்கம்
73. ஐங்கிரா பகிஷ்கிருத பிரஜா சிரோல் மண்டல்
74. தாதர் மஹிளா மண்டல்
75. நவயுவக் மண்டல், அகமதாபாத்
76. தார்வார் மாவட்ட ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சங்கம்
77. பெல்கோவன் மாவட்ட ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சங்கம்
78. கர்வார் மாவட்ட ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சங்கம்
79. மெக்வால் சு.தாரக் சமாஜ்
80. குஜராத் தலித் சுதாரக் மண்டல்
81. சாத்ரா மாவட்ட தருண்சேவா மண்டல்
82. ரோகிதாஸ் தருண் மண்டல், தாணா
83. சோம்வன்ஷிய சன்மார்க்க தரிசன சங், கல்யாண்
84. தாணா மாவட்ட சர்மகார் அய்க்கேரு மண்டல், மாணிக்கபூர்
85. காமதிபுரா 13ஆம் சந்து பஜன் சமாஜ்
86. பீரார் ஆஷ்பிரிசிய சமாஜ் சுதாரக் சேவா மண்டல், பீரார்
87. சுபா பர்கானா சத்திரிய யுவக் சங்கம்
88. சதார் மாவட்ட வந்தார் மானார் சங்கம்
89. பி. பி. டி பகிஷ்கிருதத் தொழிலாளர் நவயுவக்
90. கர்னாடக மச்சிஞர் சங்கம்
91. கர்னாடக ஒடுக்கப்பட்ட வகுப்பு இளைஞர் சங்கம்
92. ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சங்கம், ஹுப்ளி
93. சித்ரபஜார் போரி சாவ்ல் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சங்கம்
94. ரோகே தாலுகா மகார் சங்கம்
95. காமதிபுர இலாயத் தெரு மகார்சங்கம்
96. அகரிபாத நகராட்சி சாவ்ல் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் குடியிருப்போர் சங்கம்
97. பந்தரா சானி ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சங்கம், போகரா
98. பந்தரா பாலி பகிஷ்கிருத சமாஜம்
99. மகார் இந்தியப் படை அலுவலர் சங்கம்
100. மகீம் கில்லா ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சங்கம்
101. ரதீகா தாக்கா பஞ்ச மண்டல்
102. பி. ஐ. டி. பொய்பாவடி சாவ்ல் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சங்கம்

103. பண்வெல் ஓய்வூதியக்கார மகார் பஞ்ச்
104. கிலெளன் சிகரட் கம்பெனிகளின் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் மண்டல்
105. நானா சாவ்க் மகார் சங்கம்
106. அனைத்திந்திய தீண்டப்படாதோர் சங்கம், புனா
107. தட்சிண மகாராட்டிர சத்யப் பிரசார மண்டல், கோலாப்பூர்
109. மதாங் தியானோதய சமாஜம், பம்பாய்
110. ஆஷ்பிரிஷியோனாட்டி மண்டல், நாசிக் சாலை
111. ஆலய நுழைவு சத்தியாக்கிரக மண்டல், நாசிக்
112. பகிஷ்கிருத ஹிட்சிந்தாக் சேவா மண்டல், நாசிக்சாலை
113. சிற்சாகு சந்திரபதி உணவகம், நாசிக்
114. ஆஷ்பிரிய தருண் சமதா சமாஜம், சித்ர பஜார்[1]

அவரது மக்கள் காட்டிய மட்டிலா அன்பிலும் நன்றியுணர்விலும் நெகிழ்ந்து போய்விட்ட டாக்டர் பி.ஆர் அம்பேத்கர், சங்கடமுற்று ஒரு கணம் பேச்சும் அசைவும் இன்றி நின்றார். பின்னர் அம்மாபெரும் அவையின் முன்னர், தம்மால் ஆற்ற முடிந்த பணிகள் யாவும் தொண்டர்களின் ஒத்துழைப்பு, நமது மக்களின் தொய்விலாத ஆதரவு ஆகியவற்றின் கூட்டுப்பயனே எனக் கூறினார். மாபெரும் குறிக்கோளை நோக்கிய பயணத்தின் வெற்றியோ தோல்வியோ எதுவும் தனிப்பட்டதொரு தலைவரால் மட்டும் விளைந்துவிடக் கூடியதன்று என்று கூறினார்.

மேலும் அவர், "நான் காந்தியடிகளை எதிர்ப்பதால், காங்கிரஸ் காரர்கள் என்னை துரோகி என்று வருணிக்கிறார்கள். ஆனால் இக்குற்றச்சாட்டால் நான் கலக்கமுறவில்லை. அது ஆதாரமாற்ற பொய்யும் கெட்டெண்ணமும் கலந்த குற்றச்சாட்டு. ஆனால் உங்கள் தளைகளையறுக்கும் முயற்சிக்கு எதிராக வன்முறை எதிர்ப்பைக் காந்தியடிகளே தூண்டிவிட்டுள்ளார் என்பது உலகத்தையே அதிர்ச்சிக்குள்ளாக்கிய செய்தி. வட்டமேசை மாநாட்டு வரலாற்றைக் கற்கும் போது இந்துக்களின் வருங்காலத் தலைமுறையினர் எனது தொண்டுகளைப் பாராட்டுவார்கள் என்பதில் ஐயமில்லை." எனக் கூறினார். மேலும் அவர் இலண்டனில் காந்தியடிகளை நான்கைந்து முறை சந்தித்ததையும், காந்தியடிகள் இரகசியமாய் சென்று ஆகாகானைச் சந்தித்ததையும், அச்சமயத்தில் தமது கையில் புனித

1. ஹாத் தோல், பக். 29 - 33.

குரானின் நகல் ஒன்றைத் தம்முடன் கொண்டு சென்று, ஒடுக்கப்பட்ட வகுப்புகளுக்கு ஆகாகான் தரும் ஆதரவை விலக்கிக் கொள்ளுவதாய்க் குரான் மீது ஆணையிட்டு உறுதி கேட்டார் என்பதையும், அவ்வேண்டுகோளை ஆகாகான் மறுத்துவிட்டதையும் அவர் எடுத்துரைத்தார்.* கடைசியாகத் தம்மைக் கடவுளாக்க வேண்டாம் என்றும், எவரையும் கடவுளாக்குவதைத் தாம் வெறுப்பதாகவும் கூறினார். கூட்டத்தின் முடிவில் அச்சமயம் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டிருந்த நாசிக் வீரர்களை அவர் கௌரவித்தார்.[1]

அவைக்கு நன்றி தெரிவித்துப் பேசுகையில் டாக்டர் அம்பேத்கர், ஏழு கோடி தீண்டப்படாத மக்களின் ஒருமித்த ஆதரவு தமக்குக் கிடைத்திராவிட்டால், வட்டமேசை மாநாட்டில் ஒடுக்கப்பட்ட வகுப்புகளின் கோரிக்கைகளை உறுதியாய் எடுத்துரைத்திருக்க இயலாது என்று கூறினார். ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் சில பிரிவினருக்கும் தமக்குமிடையே நிலவும் கருத்து வேற்றுமைகளைக் குறிப்பிட்டுப் பேசுகையில், ஒடுக்கப்பட்ட வகுப்பினரில், குறிப்பிட்ட எந்தச் சில பிரிவுகளுக்கு ஆதரவாகவும் தாம் சாய்ந்து நிற்கவில்லை என்று உறுதி கூறினார். மாறாக ஒடுக்கப்பட்ட சமுதாயம் முழுவதன் நலன்களையும் பாதுகாப்பதற்குரியதான எந்தவொரு திட்டத்தையும் தாம் ஏற்றுக்கொள்ளத் தயாராய் இருப்பதாய்க் கூறினார். சிறுபான்மையோர் சிக்கல்களைக் கையாளுவதில் காந்தியடிகளின் மனப்பான்மை குறித்து அவர் குறை கூறினார். ஒடுக்கப்பட்ட வகுப்புகளோடு ஒரு பக்கம் பேச்சுவார்த்தை நடத்திக் கொண்டே, மறுபக்கம் முகமதியர்களுடன் காந்தியடிகள் இரகசிய பேரங்களில் ஈடுபட்டு வந்திருப்பதாகவும் அவர் குற்றம் சாட்டினார். எந்தவொரு தனிப்பட்ட தலைவரிடமும் நம்பிக்கை வைப்பதை விடத் தங்கள் சொந்த வலிமையின் மீதே நம்பிக்கை வைக்குமாறு, அவையில் இருந்த மக்களை அவர் கேட்டுக்கொண்டார். கடைசியாக, நாசிக் ஆலய நுழைவு அறப்போர் குறித்துப் பாராட்டு தெரிவித்தார்."[2]

---

* 'ஜனதா' 1932, ஜனவரி, 30.

1. கீர், பக். 193 - 94

2. பம்பாய் நகர் எஸ். பி. 1932 - ஜனவரி 30.

# (11)

# கௌதம புத்தர், இராமனுசர் ஆகியோரின் போராட்டங்களை உங்கள் பார்வையில் இருத்துங்கள்

*1932இல், வாக்குரிமைக்குழு உறுப்பினர் என்ற முறையில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், சென்னைக்கு வருகை புரிந்தார். பிப்ரவரி 28ஆம் தேதியன்று சென்னையில் அவருக்கு, ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் 10,000 பேர் கலந்துகொண்ட வண்ணமிகு வரவேற்பு அளிக்கப்பட்டது. வரவேற்பு நிகழ்ச்சியில் முஸ்லீம்கள், கிறித்தவர்கள், மற்றும் பிற பார்ப்பனரல்லாத மக்களும் கலந்துகொண்டனர், போர்ப் படைஞரின் ஒடுக்கப்பட்ட பிரிவுத் தலைவரே நிகழ்ச்சிக்குத் தலைமை வகித்தார். ஒடுக்கப்பட்ட படைப்பணியாளர் சங்கம், சென்னை மாகாண ஒடுக்கப்பட்ட வகுப்பினர் கூட்டமைப்பு, ஆதிதிராவிட மலையாளிகள் சபை, ஆதி ஆந்திர மகாசபை, அருந்ததியர் மகாசபை உள்ளிட்ட பெரும்பாலான தென்னிந்திய ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் இயக்கச் சார்பாளர்கள் வரவேற்பில் கலந்து கொண்டனர். கேரள ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் சங்கமும், தொழிலாளர் ஒன்றியமும் ஒருமனதாய் டாக்டர் அம்பேத்கர் அவர்களுக்கு வரவேற்ப றிக்கை வாசித்து அளித்தனர்.*

*இக்கூட்டத்தில் தனித் தொகுதிக் கோரிக்கையிலிருந்து கூட்டுத் தொகுதி ஒதுக்கீட்டுக்கு இராஜா அவர்கள் பல்டியடித்ததை டாக்டர் அம்பேத்கர் அம்பலப்படுத்தினார். அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட மக்கள் பேராயத்தின் காம்ப்டீ அமர்வுக்கு முன்னர் இராஜா எந்த இசைவையும்செய்திருக்கவேண்டியதில்லையென அவர் கூறினார். ஒடுக்கப் பட்ட மக்கள் கவர்ச்சியான வாக்குறுதிப் பசப்பல்களில் மயங்கி விடாமல் தாங்களே அரசியல் அதிகாரத்தைப் பெற முனைய வேண்டு மென்றும், தங்கள் இன்னல்களை அனுபவித்து அறிந்த தலைவர்கள் பால் மட்டுமே நம்பிக்கை வைக்க வேண்டுமென்றும் கூறினார். தீண்டாமை எனும் கறையை அகற்றிடப் பாடுபட்ட கௌதமபுத்தர், இராமானுசர் போன்ற தலைவர்களுக்கு நிகழ்ந்த இடர்ப்பாடுகளை அவர்கள் எப்போதும் தங்கள் நினைவில் இருத்துமாறும் கூறினார்.[1]*

---

*1. கீர், ப. 196.*

# (12)

# தீண்டப்படாத வகுப்பு மக்களுக்கு அரசியல் அதிகாரம் கட்டாயம் தேவை

*அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் பேராயத்தின் இரண்டாம் அமர்வைக் 'காம்ட்டீ'யில் நடத்துவதென்று டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் முடிவெடுத்தார். வரவேற்புக் குழுத் தலைவர் எல்.என். ஹர்துஸ் அவர்கள் அமர்வின் முக்கியத்துவம் குறித்துக் கீழ்வருமாறு சுற்றறிக்கையொன்றை வெளியிட்டார். - ஆசிரியர்கள்*

*'அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் பேராயத்'தின் இரண்டாம் அமர்வு அடுத்த ஏப்ரல் மாதம் 24, 25 தேதிகளில் காம்ப்டீயில் நடைபெறவுள்ளதென்பதை நன்கறிவீர்கள்.*

*இவ்வமர்வின் முக்கியத்துவம் மிகப்பெரியதாகும். அமர்வில் கீழ்க்காணும் இரு பிரச்சனைகள் கலந்தாய்வில் இடம் பெறவுள்ளன:*

*1. ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் சார்பாளர்களும் கலந்து கொண்டு உருவாக்கப்பட்ட சிறுபான்மையோர் குறித்த ஒப்பந்தம்.*

*2. ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் பெயரால் பேசவும் எழுதவும் பொறுப்பு மேற்கொள்ளும் புதிய, மைய அமைப்பு ஒன்றை நிறுவுதல்.*

*சிறுபான்மையோர் குறித்த ஒப்பந்தமானது புதிய அரசியல் சாசனத்தின் கீழ் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் பெறுதற்குரிய அரசியல் உரிமைகளை உள்ளடக்கியுள்ளது. வட்டமேசை மாநாட்டில் பெரும்பான்மைச் சமூகத்தின் சார்பாளர்கள் அதை ஏற்றுக் கொள்ள வில்லை. ஆனால் சிறுபான்மையோர் குறித்த ஒப்பந்தத்திற்கு ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் சார்பாளர்கள் தங்கள் முழு ஆதரவையும் நல்கினர். ஆனால் பின்னாளில் இந்திய ஒடுக்கப்பட்ட மக்களுக்காகப் பாடுபடும் அமைப்புகள் எனத் தம்மை அறிமுகம் செய்து கொள்ளும் சில அமைப்புகள், இந்து மகாசபையோடு இணக்கம் கண்டு சிறுபான்மையோர் ஒப்பந்தத்தை மறுதலித் துள்ளன. எனவே, ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் சார்பாளர்கள்*

ஒன்று கூடி, சிறுபான்மையோர் ஒப்பந்தத்தின் பல கூறுகளையும் கூர்ந்து ஆய்ந்து உறுதியான இறுதி முடிவு எடுத்தல் இன்றியமையாத தாகின்றது. வட்டமேசை மாநாட்டில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் சார்பாளர்களாய்க் கலந்துகொண்ட டாக்டர் பிஆர். அம்பேத்கரும், இராவ்பகதூர் ஆர். சீனிவாசனும் அமர்வில் கலந்துகொண்டு சிறுபான்மையோர் ஒப்பந்தம் உருவான சூழ்நிலையையும், அவ்வொப் பந்தத்தின் பல்வேறு கூறுகளையும் விளக்குவார்கள்.

மேலும் இராவ்பகதூர் எம்.சி. ராஜா, திரு. ஜி.ஏ. கவைட்டோ ஆகியோரும் அமர்வுக்கு அழைக்கப்படவுள்ளனர்; சிறுபான்மையோர் ஒப்பந்தம் குறித்து அமர்வில் தீர்மானம் ஏதும் நிறைவேற்றுதற்கு முன்பாக, தங்கள் கருத்துக்களைத் தெரிவிக்க அவர்களுக்கும் வாய்ப்பளிக்க ஏதுவாய் இது அமையும்.

அமர்வின் இரண்டாம் நோக்கமும் ஈடான முக்கியத்துவம் வாய்ந்த தேயாகும். அரசியல் விவகாரங்களில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் பொதுக் கருத்துக்களை திரித்துக் கூறும் முயற்சிகள் குறித்து நன்கறிவோமாதலால் இதன் தேவையை மேலும் விரித்துக் கூற வேண்டுவதில்லை. புதிய மத்திய அமைப்பு ஒன்று நிறுவப்பட்டு ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் முதன்மை இயக்கமாய் ஏற்கப்பட்டா லன்றி இத்தகைய கீழறுப்பு இடையூறுகளைத் தடுத்து நிறுத்தல் இயலாது.

அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் சங்கம் எனக் கூறிக் கொள்ளும் அமைப்பின் சதித் தந்திரங்கள், இவ்வமர்வை நடத்துவதற்கான தேவையை உணர்த்துகின்றன. புதிய அரசியலமைப்புச் சட்டத்தில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்குத் தேவை தனித் தொகுதிகள் ஒதுக்கீடா அல்லது கூட்டுத்தொகுதிகளா என்பது குறித்தும் தொகுதிகளின் எண்ணிக்கை குறித்தும் தெளிவான முடிவுகள் ஏதுமின்மையால், அவை பற்றி முடிவு செய்வதற்காக, சங்கத்தின் செயற்குழுக் கூட்டம் பிப்ரவரி 21, 22 தேதிகளில் டில்லியில் நடத்தப்படும் என்று அச்சங்கம் செய்தித்தாள்களில் அறிவித் திருந்தது. அக்கூட்டத்தில் தீர்மானித்தவாறு ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் அமைப்புகளின் தலைவர்களின் மாநாட்டை நாகபுரியில் கூட்டி இது குறித்து இறுதி முடிவு எடுக்கத் தீர்மானிக்கப்பட்டிருப்

பதாகவும் அறிவிக்கப்பட்டிருந்தது. உறுதியான முடிவு ஏதும் எடுப்பதற்கு முன்பாகத் தலைவர்களின் மாநாடு ஒன்று கூட்டப்படும் என்று நம்பியிருந்தோம். ஆனால் அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட மக்கள் சங்கம் அத்தகைய மாநாடு கூட்டாததற்குக் காரணம் அவர்களுக்கே வெளிச்சம். இத்தகைய சூழ்நிலையில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் பொதுக்கருத்தைத் திரட்டுதலும், மாற்றாரின் சதித் திட்டங்களை முறியடித்து மக்கள் தங்களுடைய உயிர்நிலையான விவகாரங்களில் பொதுக் கருத்தை வெளிப்படுத்த வகைசெய்தலும் தேவையாகிறது.

எனவே இந்த அமர்வின் முக்கியத்துவம் கருதி நீங்கள் தவறாமல் இதில் கலந்து கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

ஹர்தாஸ் எல்.என்

வரவேற்புக்குழுத் தலைவர்[1]

டாக்டர் பிஆர் அம்பேத்கர் அவர்கள், 1932, மே 4ஆம் நாளன்று சிம்லாவிலிருந்து பம்பாய் திரும்பினார். உடனடியாகவே, 1932 மே 6ஆம் நாளன்று அவர் நாகபுரிக்கு அருகில், காம்ப்டீயில் நடக்கவிருந்த அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் பேராயத்தில் கலந்து கொள்வதற்காகக் கல்கத்தா மெயிலில் புறப்பட்டுச் சென்றார். அவரது வழியில் இரவு நெடுகிலும், காசராவிலிருந்து நாகபுரி வரை அனைத்துப் புகைவண்டி நிலையங்களிலும் தீண்டப்படாத மக்கள் பெருங் கூட்டமாய்த் திரண்டு அவரை உற்சாகமாய் வாழ்த்தி வழியனுப் பினார்கள்.

1932 மே 7ஆம் நாள் காலை ஒன்பது மணியளவில் புகைவண்டி நாகபுரி நிலையத்தை அடைந்த போது "டாக்டர் அம்பேத்கர் நீடூழி வாழ்க" எனும் முழக்கம் நிலையம் முற்றிலும் எதிரொலித்தது. அங்கே அமைக்கப்பட்ட பந்தலில் 5,000 பேர் திரண்ட கூட்டம் அவருக்கு உற்சாகமான வரவேற்பை நல்கியது. மேடையில் திரு. துலாராம் சகாரே, எம்.எல்.சி. அவர்கள் டாக்டர் அம்பேத்கருக்கும் ஏனைய தலைவர்களுக்கும் வரவேற்பு அளித்தார். அமைதியையும்

1. 'ஜனதா' 1932, ஏப்ரல், 1.

ஒழுங்கையும் பேணும் பொருட்டு நகர நீதிபதியும், காவல் துறை கண்காணிப்பு அலுவலரும் புகைவண்டி நிலையத்திற்கு வந்திருந்தனர்.

பேராய நிகழுவுக்காக அலங்காரங்களுடன் அமைக்கப் பட்டிருந்த மாபெரும் பந்தலில் 15,000 பேர் கலந்து கொள்வதற்கேற்ற இடவசதி செய்யப்பட்டிருந்தது. மேடையில் மாபெரும் உரைமாடம் அமைக்கப் பட்டிருந்தது. உயிர்நாடியான முக்கிய முடிவெடுக்கும் நோக்கத்துடன், நாட்டின் நான்கு மூலைகளிலிருந்தும், ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் தலைவர்கள் பெரும்பாலோர் திரண்டிருந் தமையால் மிகுந்த உற்சாகமும் பதற்றமும் ஒருங்கே இணைந்த சூழ்நிலை அங்கு நிலவியது. ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் தலைவர் களில் மிகப் பலர், தமது வறிய நிலையையும் மீறி அங்கே வந்து சேர்ந்தது வியப்பூட்டும் வண்ணம் இருந்தது. டாக்டர் மூஞ்சே ஒப்பந்தத்தின் ஆதரவாளர்கள் நிரம்பிய களமென்றும் கருதப்பட்ட இடத்தில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் பேராயம் கூட்டப் பட்டிருந்தது, குறிப்பிடத்தக்கதோர் சிறப்புக்கூறு. ராஜா - மூஞ்சே ஒப்பந்தத்தின் ஆதரவாளர்கள் நிரம்பிய களம் என்றும் கருதப்பட்ட இடத்தில் ஒடுக்கப்பட்ட மக்களின் பேராயம் கூட்டப்பட்டிருந்தது, குறிப்பிடத்தக்கதோர் சிறப்புக் கூறு. ராஜா - மூஞ்சே ஒப்பந்தம் அறிவிக்கப்பட்டதும் உடனடியாக ஆவேசமுற்ற டாக்டர் அம்பேத்கர் அவர்கள் அனைத்திந்திய ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் சங்கத்தின் பொதுச்செயலர் கவாய் அவர்களுக்கு எழுதிய கடிதத்தில், உங்கள் நிறுவனமும் கூட்டுத் தொகுதி முறையையும் இட ஒதுக்கீட்டையும் ஆதரிக்குமெனில் நமக்கிடையே பிளவும் உட் போராட்டமும் தவிர்க்கவியலாதவை என்று எச்சரிக்கை விடுத்ததும், இத்தகைய அச்சுறுத்தலுக்கு எதிர்ப்பாக, கவாய் அவர்கள் லோதியன் பிரபுவுக்கு மறுப்புக் கடிதம் எழுதியதும் நினைவு கூரத்தக்கது.

பேராயத்தில் செயல்முறைகள் மே 7ஆம் நாள் மாலை தொடங்கின. சிறுபான்மையோர் ஒப்பந்தத்தின்படியான தனித் தொகுதிக் கோரிக்கைக்கு ஆதரவு தெரிவித்தும் ராஜா - மூஞ்சே ஒப்பந்தத்திற்கு எதிர்ப்பு தெரிவித்தும், பேராயம் வெற்றியுடன் நடைபெற வாழ்த்து தெரிவித்தும் இருநூறு செய்திகள் வந்திருந்தன; அவை மேடையில் வாசிக்கப்பட்டன. புத்த மகாசபையின் பொதுச் செயலாளர் அனுப்பியிருந்த வாழ்த்துச் செய்தியில் மாநாட்டிற்குத்

தமது நல்வழ்த்துக்களைத் தெரிவித்ததுடன், புத்த சமயத்தைத் தழுவுமாறு ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு வேண்டுகோள் விடுத்திருந்தார். இச்சமயத்தில் டாக்டர் அம்பேத்கரின் கட்சி சிறப்பான நிறுவன அமைப்பையும் கட்டுப்பாட்டையும் எய்தி யிருந்தது. ஆனால் ராஜ்போஜ் அவர்களுக்கும் அவரது ஆதரவாளர் களுக்கும் அத்தகைய கட்டுக்கோப்பான ஆதரவு கிட்டவில்லை.

பேராயத் தலைவர் ஹரிதாஸ் எல்.என்., அவர்கள் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் பேராயத்தின் வரலாற்றைத் துருவிக் காட்டி, ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களிடையே ஒற்றுமையுணர்வு நிலவ வேண்டிய அவசியத்தை வலியுறுத்திக் கூறியதாவது: "தனி வாக்காளர் தொகுதியுடன் நாம் கரை சேருவோம்; அல்லது மூழ்கி மடிவோம்". திரு. முனுசாமிப் பிள்ளையவர்கள் தமது இரண்டு மணிநேர உரையில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் எதிர்பார்ப்புகளை வரையறுத்து, அரசாங்கத்தின் செயல் முறையில், குறிப்பாகப் போதிய எண்ணிக்கையில் சார்பாளர்களைச் சேர்த்துக் கொள்ளாமை குறித்தும் அதிருப்தி தெரிவித்து, ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களைச் சேர்ந்தவர்களில் மேலும் இரண்டு சார்பாளர்களை யாவது அழைக்குமாறு அரசுக்கு வேண்டுகோள் விடுத்தார்.

மறுநாள் பேராயத்தின் பொது அமர்வு தொடங்கியது. ஒடுக்கப் பட்ட வகுப்பு மக்கள் பேராயம் இவ்வமர்வில் பன்னிரண்டு தீர்மானங் களை நிறைவேற்றியது. சிறுபான்மையோர் ஒப்பந்தம் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் குறைந்தபட்ச, மேலும் குறைத்துக் கொள்ள வியலாத கோரிக்கைகளையே உள்ளடக்கிக் கொண்டுள்ளது என்பதே பேரவை யின் தீர ஆய்ந்த முடிவு என்று பேரவை அறிவித்தது. ராஜா - மூஞ்சே ஒப்பந்தத்தைப் பேராயம் மறுத்துப் புறந்தள்ளியதுடன், ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு அவ்வொப்பந்தம் தீங்கு விளைவிக்கக் கூடியது என்றும் உரைத்தது. மாநாட்டுச் சார்பாளர்கள் பலர், வட்ட மேசை மாநாட்டில் டாக்டர் அம்பேத்கரும், இராவ்பகதூர் சீனிவாசன் அவர்களும் ஆற்றிய அரும்பணிகளைச் சிறப்பாய்ப் பாராட்டி உரையாற்றினார்கள்.[1]*

---

1. பம்பாய் கிராணிகிள், 1935, அக்டோபர் 16.

* சமய மாற்றம் குறித்த தமது கட்டுரைகளை காந்தியடிகள் நூலாய் வெளியிட்டுள்ளார். பின்னிணைப்பில் காண்க.

மாநாட்டில் உரையாற்றிய டாக்டர் அம்பேத்கர் அவர்கள் கூறியதாவது:

"தீண்டப்படாத மக்களின் கரங்களில், அரசியல் கடிவாளம் கிடைக்க வேண்டுவது மிகவும் தேவையாகும். முதலாவதாக, நாமனை வரும் ஒன்றுபட்டு, அரசியல் தகுதி நிலையை அடைய வேண்டும். அரசியலதிகாரத்தின் கட்டுப்பாடு தீண்டப்படாத மக்களின் வசம் கிட்டும்வரை இந்தியாவில் தீண்டாமை ஒழிப்பு என்பது எய்த முடியாத கனவேயாகும்."

> "ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் பேராயம், டாக்டர் அம்பேத்கரையும், சிறுபான்மையோர் ஒப்பந்தத்தையும் முழுமையாக ஆதரித்துப் பின்பற்றுவதாக உரைக்கும் அறிக்கையுடன் முடிவடைந்தது"[1]

---

1. பம்பாய் கிரானிகிள், 1935, அக்டோபர் 16.

## (13)

# எனது சரியான இலக்கிலிருந்து ஓர் அங்குலம் கூடப் பின்வாங்க மாட்டேன்

*புனா, ஏப்ரல் 28, 1932*

புனாவைத் தலைநகராய்க் கொண்டியங்கும் அனைத்திந்திய தீண்டாமை எதிர்ப்பு சங்கத்தின் அழைப்பினை ஏற்று, வட்டமேசை மாநாட்டில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் சார்பாளர் என்ற முறையிலும், வாக்குரிமைக் குழுவின் சார்பாளர் என்ற முறையிலும், வாக்குரிமைக் குழுவின் தற்போதைய உறுப்பினர் என்ற முறையிலும், அம்பேத்கர் ஆற்றிய பணிகளுக்குச் சங்கத்தின் பாராட்டு நிகழ்ச்சியில் கலந்துகொள்ள அவர் மே மாதத் தொடக்கத்தில் வருகை புரியவுள்ளார்.

அதே சமயம் புனா மாவட்ட ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சங்கத்தின் பாராட்டுரையும் அவருக்கு வழங்கப்படவுள்ளது.

உள்ளூர் வரவேற்புக் குழு, சுபேதார் ஆர்.எஸ். காட்கேயின் தலைமையில் நிகழ்ச்சிக்கான முன்னேற்பாடுகளைச் செய்து வருகிறது.[1]

காம்ப்டீ பேராயத்தையடுத்து, டாக்டர் அம்பேத்கர் அவர்கள் புனா, சோலப்பூர், நிப்பானி ஆகிய இடங்களுக்குச் சென்று ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களிடையே உரையாற்றினார். இவற்றுள் புனாவில் நடந்த கூட்டம் முக்கியமானதாகும். அங்கு மாபெரும் ஊர்வலம் ஒன்றில் அவர் அழைத்துச் செல்லப்பட்டார். பழைமைக் கெதிரான முழக்கங்களுடன் அம்மாபெரும் ஊர்வலம் அகல்யா ஆசிரமத்தைச் சேர்ந்த திறந்தவெளி மைதானத்தையடைந்தது. அங்கு அவருக்கு, ஏ.எல். லத்தே அவர்களின் தலைமையில் வரவேற்புப் பட்டயம் ஒன்று வழங்கப்பட்டது.*

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா, 1932, ஏப்ரல், 30.

* "புனா மாவட்ட ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின்" சார்பாக வழங்கப்பட்ட அப்பட்டயத்தில் 322 ஆடவர்கள், 42 பெண்கள் ஆகியோரின் பெயர்கள் அச்சிடப்பட்டிருந்தன.

லண்டனில் பிரிட்டிஷ் அரசியல்வாதிகளும், உயர்நிலை அலுவர்களும் டாக்டர் அம்பேத்கர் அவர்கள் இந்தியப் புரட்சிக் கட்சியைச் சேர்ந்தவரா என்பதை எவ்வாறு இரகசியமாக விசாரித்தார்கள் என்பதை லத்தே அவர்கள் அங்கு குழுமியிருந்த அவையோர்க்கு விவரித்துரைத்தார். இந்திய தேசியப் பத்திரிகையாளர்கள் என அழைத்துக் கொள்வோர், டாக்டர் அம்பேத்கர் போன்ற மாபெரும் மக்கள் தலைவரை துரோகி எனச் சித்தரிக்க முயன்ற இழிநிலையைக் கண்டித்தும் லத்தே அவர்கள் உரையாற்றினார். லத்தே அவர்கள் மேலும் கோல்காப்பூர் கலைக் கல்லூரியின் முதல்வர் பதவியைத் தாம் டாக்டர் அம்பேத்கருக்கு அளிக்க முன்வந்ததையும், மற்றொரு சமயம் டாக்டர் அம்பேத்கரின் வழக்கறிஞர் தொழிலில் எந்த அளவு வெற்றி கிட்டியுள்ளதென்பதை விசாரித்ததையும் நினைவு கூர்ந்தார். டாக்டர் அம்பேத்கர் அவர்கள், ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களை மனிதர் என்ற நிலைக்கு உயர்த்துதல் ஒன்றே வாழ்க்கையில் தாம் அடைய விரும்பும் வெற்றி எனப் பதில் கூறியதையும் லத்தே குறிப்பிட்டார். தாழ்ச்சியுள்ள நிலையிலிருக்கும் மக்களின் துயர் துடைப்புப் பணியில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டுள்ள டாக்டர் அம்பேத்கரின் தொண்டு இந்திய நாட்டு மக்களுக்கு மட்டுமின்றி உலக சமுதயாத்திற்கே பெருங்கொடையாகும் என்று லத்தே அவர்கள் முடிக்கையில் குறிப்பிட்டார்.

வரவேற்புக்கு ஏற்புரையாக டாக்டர் அம்பேத்கர் பேசுகையில் குறிப்பிட்டதாவது:

"தற்போது இந்தியாவில் இந்து மக்களால் பெரிதும் வெறுக்கப்படும் நபர் நான்தான். நான் துரோகி யென்றும், இந்துக்களின் பகைவன் என்றும் பழிக்கப்படுகிறேன். மேலும் இந்து சமயத்தை அழிக்க வந்தவனென்றும் இந்திய நாட்டின் மாபெரும் பகைவன் என்றும் தூற்றப் படுகிறேன். ஆனால், இந்த ஆரவாரங்கள் எல்லாம் அடங்கிய பின்னர் அமைதியாகவும் விருப்பு வெறுப்பின்றியும் வட்டமேசை மாநாட்டு நிகழ்வுகளை நோக்கும் வருங்கால வரலாற்றாசிரியர்களும், வருங்கால இந்து சமுதாயமும், நாட்டுக்கு நான் ஆற்றிய தொண்டு குறித்துப் பாராட்டியே கூறுவார்கள் என்பதை உறுதியாக நம்புங்கள். அவ்வாறு அவர்கள் பாராட்டத் தவறினாலும் அவர்களது புறக்கணிப்பை நான் பொருட்படுத்தப் போவதில்லை. ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் எனது பணியில் உறுதியான நம்பிக்கை வைத்து, எனது குறிக்கோள்களை ஒருங்கே

இணைந்து பின்பற்றுவார்கள் எனில் அதுவே எனக்கு முழுமையான நிறைவு தரும் என்று கூறினார்."

தாம் பிறந்து வளர்ந்த சமுதாய மக்களின் தாழ்ச்சி நிலையைப் போக்கும் பணியில் உயிர் துறப்பதே தமது சூள் என்றும் அவர் வலியுறுத்தினார். எனது சரியான இந்தக் குறிக்கோளிலிருந்து தாம் ஓர் அங்குலம் கூடப் பின்வாங்கப் போவதில்லையென்றும் மாற்றாரின் கடுமையான, பழிப்பு நிறைந்த தூற்றல்கள் எவற்றையும் தாம் பொருட் படுத்தப் போவதில்லையென்றும் அவர் மேலும் கூறினார்.[1]

இவையன்றியும், டாக்டர் அம்பேத்கரின் உரையில் கூடுதலான பரிமாணங்களும் பல இடம் பெற்றிருந்தன. அவை பம்பாய் கிரானிகில் இதழில் வெளியிடப்பட்டிருந்தன. அப்பரிமாணங்களின் தொகுப்பு கீழே தரப்படுகிறது:- பதிப்பாசிரியர்கள்.

தமது பதிலுரையில் டாக்டர் அம்பேத்கர் அவர்கள், ஆலயங் களோ, கிணறுகளோ, சமபந்தி விருந்துகளோ தேவையில்லை என்றும், மாறாக, அரசுப்பணிகள், உணவு, உடை, கல்வியுடன் ஏனைய வாய்ப்புகளையே தாம் கோருவதாகவும் கூறினார்.

சாதி அமைப்புகள் மட்டுமின்றிக் கல்வியில் 'குணபீடம்' போன்ற வேற்றுமை அமைப்புகளும் நிலவுதலைச் சுட்டிக்காட்டி, இவற்றைக் களையும் வண்ணம் அரசியல் சீர்திருத்தங்கள் தேவை யென்றும் கூறினார். இக்காரணம் பற்றியே, சமுதாயச் சீர்திருத் தத்திற்கும் முன்பாக அரசியல் சீர்திருத்தம் தேவையென்று தாம் கருத்து மாற்றம் அடைந்திருப்பதாய்க் குறிப்பிட்டார்.

ராவ்பகதூர் ராஜா, கவாய் போன்ற தலைவர்கள் கூட்டுத் தொகுதிகளைப் பரிந்துரைத்தாலும், இக்காரணத்திற்காகவே தற் போதைக்கேனும் தனித் தொகுதிகள் தேவை எனத் தாம் வலியு றுத்துவதாகவும் அவர் குறிப்பிட்டார்.[2]

---

1. கீர், பக். 201 - 202
2. பம்பாய் கிரானிக்கள், 1932, மே, 23.

# (14)

# சமூக சீர்திருத்தத்திற்கு முன்னதாக அரசியல் சீர்திருத்தம் தேவை

*தெற்குப் பிரிவின் (தென் மராட்டியத்தின்) பல்வேறு பகுதிகளைத் சேர்ந்த ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் 1932, மே, 24இல் பெல்காமில் டாக்டர் பிஆர். அம்பேத்கர் அவர்களுக்குக் கூட்டு வரவேற்பு ஒன்று அளித்தனர்* கூட்டத்திற்குத் தலைமை வகித்த திவான் பகதூர் லத்தே அவர்கள், விருந்தினரை உள்ளத்தில் ஆழ்ந்த பற்றுமிக்க தேசியவாதி என அறிமுகப்படுத்தினார். வரவேற்பில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் நலனுக்காக டாக்டர் அம்பேத்கர் ஆற்றிவரும் பணிகள் சிறப்பித்துப் பாரட்டப்பட்டன. வரவேற்புப் பட்டயத்துடன் 500 ரூபாய் பணமுடிப்பும் டாக்டர் அம்பேத்கருக்கு வழங்கப் பட்டன.*

*டாக்டர் அம்பேத்கர் தமது ஏற்புரையில் சமூக சீர்திருத்தத்திற்கு முன்னதாக அரசியல் சீர்திருத்தம் தேவையென்றும், அரசியல் அதிகாரத்தின் வாயிலாக அன்றி, ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களும் அவர்களது நிலையும் மேம்பட இயலாதென்றும் கூறினார். ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் நலன்களுக்காக, மட்டுமே பாடு படுவது ஒருவகையில் தன்னலம்தான் என்றாலும், நாடு அம் மக்களுக்கு இழைத்து வந்த அநீதியின் பரிமாணத்தை எண்ணும் போது இத் தன்னலமும் நியாயமானதே என்று கூறலாமென்றார்.*

*டாக்டர் அம்பேத்கர் நேற்றிரவு சோலப்பூருக்குப் புறப்பட்டுச் சென்றார்.*[1]

---

** இந்நிகழ்ச்சி பெல்காம் மாவட்டம் நிபானியில் 22 - 5 - 1932இல் ஏற்பாடு செய்யப்பட்டதாக 1932, ஜூன் 22ஆம் தேதியில் வந்த ஜனதா நாளேடு தெரிவிக்கிறது.*

*1. டைம்ஸ் ஆப் இந்தியா, 1932, மே, 26.*

# (15)

# ஆன்மிக நலனைவிடப் பொருளியல் நலனில் கூடுதலான அக்கறை காட்டுங்கள்

*புனா ஒப்பந்தத்திற்குப் பிறகு தீண்டப்படாத மக்கள் அனைவரும் டாக்டர் அம்பேத்கரின் உரையைச் செவிமடுப்பதற்கான வாய்ப்பை ஆவலுடன் எதிர்நோக்கியிருந்தனர். இச்சூழ்நிலையில், பம்பாய் வோர்லியைச் சேர்ந்த இளைஞர்கள் பொதுக்கூட்டம் ஒன்றுக்கு ஏற்பாடு செய்தனர். இக்கூட்டம், 1932 செப்டெம்பர் 28 புதன் கிழமையன்று வோர்லியில் பி.டி.டி. சௌலாவுக்குச் சொந்த மான திறந்தவெளி மைதானத்தில் நடைபெற்றது. திரு. தியோராவ் நாயக் அவர்கள் கூட்டத்திற்குத் தலைமை ஏற்றார்.*[1]

*தமது சொந்தப் பாதையில், நாசிக்கில் கோயில் நுழைவு இயக்கத்தை வெகு மும்முரமாய்த் தொடங்கியிருந்த டாக்டர் அம்பேத்கர், தமது இயக்கமெனும் கப்பலின் சுக்கானைத் திடீரென விரைந்து இயக்கித் திசை மாற்றம் செய்கின்றார். அதாவது, அவரைச் சார்ந்த மக்கள் அனைவரை யும் அரசியல் அதிகாரத்தைப் பெறுவதில் தங்கள் ஆற்றல் முழுவதையும் ஈடுபடுத்திப் போராடுமாறு வலி யுறுத்துகிறார். கூட்டத்தில் பேசும் போது அவர் கூறியதாவது:*

"கோயில் நுழைவு இயக்கத்தின் நோக்கம் நல்லதுதான். ஆனால் நீங்கள் இனி உங்கள் ஆன்மிக நலனைவிடப் பொருளியல் நலனில் தான் மிகுந்த அக்கறை செலுத்த வேண்டும். பணப்பற்றாக் குறையால் உண்ண உணவோ, உடுக்க உடைகளோ, உங்கள் குழந்தைகளுக்குக் கல்வியளிக்கும் வாய்ப்போ, மருத்துவ உதவிகளோ போதிய அளவில் கிடைப்பதில்லை. எனவே இனி நீங்கள் அரசியல் ஆதாயங்களை ஈட்டுவதில் கவனம் செலுத்தி, உங்கள் வலிமையைப் பெருக்கி

---

1. 1932, அக்டோபர் 8ஆம் நாளைய 'ஜனதா' இதழ்

வாழ்க்கையில் பொருளியல் முன்னேற்றம் அடையப் போராட வேண்டும்."

இந்தக் கூட்டத்தில்தான் அவர் இயக்கத்தின் தலைமை அலுவலகத்திற்கெனக் கட்டடம் ஒன்று கட்டுதற்கு நிதியுதவ வேண்டுமென்று தீவிரமான வேண்டுகோளை முன்வைத்தார்.[1]

---

1. கீர், பக். 217 - 218.

# (16)

# உங்கள் கைகளுக்குக் கிடைக்கவுள்ள அதிகாரத்தைப் பயன்படுத்திச் செயல்படுக

*1932 அக்டோபர் 9ஆம் நாள் இரவு 10.30 மணிக்கு பம்பாய் பெலாசிஸ் சாலையை யொட்டிய, குடியிருப்பு மேம்பாட்டு அறக் கட்டளை மைதானத்தில் கூட்டம் ஒன்றில் டாக்டர் அம்பேத்கர் உரையாற்றினார். சமூக சேவை சங்கத்தில் முக்கியத் தொண்டர்களில் ஒருவரான திரு. பாபுசாகேப் சகாராத்திர பூதே அவர்கள் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். திரு எஸ்.என். சிவதார்க்கர் அவர்களும் கூட்டத்தில் கலந்துகொண்டார்.*[1]

*மறுமை வாழ்வில் பெறப்போகும் அறியாத மாயச் சுகங்களின் மயக்கத்தையூட்டி, இம்மை வாழ்வில் இன்னல் நிறைந்த கடுமையான வாழ்க்கை எவ்வாறு தமது மக்கள் மீது சுமத்தப்பட்டு வருகிறது என்பதைத் தமது உரையில் டாக்டர் அம்பேத்கர் விரிவாய் வருணித்து, இவ்வுலக நடைமுறை வாழ்வில் பொருளியல் நலன்களை நாடுவதி லிருந்து எவ்வாறு அவர்களது கவனம் திசை திருப்பப்படுகிறது என்ப தையும் விவரித்தார்.*

*அவர் தமது உருக்கமான உரையில், "மக்கள் தமது பொருளியல் தேவைகளைப் புறக்கணித்து, பொருள் வளத்தை எய்துதற்குரிய அறிவுத் துறைகளில் அக்கறையின்றி வாழ்ந்து வந்தமையால்தான், நமது நாடு பிற்பட்ட நிலையில் தேங்கி நிற்க நேர்ந்துள்ளது" என்று கூறினார். மேலும், "உங்கள் கழுத்தில் துளசி மாலை தொங்குவதால், கடன்காரர்களின் பிடியிலிருந்து தப்பிவிட மாட்டீர்கள். இராம பக்திப் பாடல்களைப் பாடுவதால் உங்கள் வீட்டு வாடகை குறைந்து விடாது; ஆண்டுதோறும் பந்தர்ப்பூர் யாத்திரை செல்வதால் ஒவ்வொரு மாதமும் சம்பளம் கிடைத்து விடாது. இவ்வாறு சமுதாயத்தின் பெரும்பகுதி பயனற்ற வாழ்க்கை ரகசியங்களிலும், மூட நம்பிக்கை களிலும், தியானங்களிலும் மூழ்கிக் கிடப்பதால், சாதுரியமுள்ள*

---

1. 'ஜனதா' 1932, மே, 15.

திறமைசாலிகள் சிலர் பிறர் வாய்ப்புகளையெல்லாம் கவர்ந்து தன்னலத் திட்டங்களை நிறைவேற்றி வருகின்றனர்." என்றுரைத்தார். முடிவாக, அவர் குறிப்பிடுவதாவது: "உங்கள் வசம் கிடைக்கவுள்ள அரசியல் அதிகாரம் சிறிதாயினும் அதைப் பயன்படுத்தி முன்னேறு மாறு வேண்டுகிறேன். அக்கறை யின்றி விட்டுவிட்டீர்களெனில், உங்கள் இன்னல்களுக்கு முடிவு இராது. எந்த அடிமைத்தனத்தி லிருந்து மீள முனைகிறோமோ அதே அடிமைத்தனத்தில் மீண்டும் ஆழ்ந்து விடுவீர்களோ என அஞ்சுகிறேன். நமது தற்போதைய விழிப்புணர்வு அற்பாயுளில் முடிந்து விடுமோ?" என வினவி முடித்தார்.[1]

---

1. கீர், ப. 213.

# (17)

## அடிமை சிந்தையைத் துறந்திடுக

*1932 அக்டோபர் 28இல் ருஷி சமாஜம், சர் கவாஸ்ஜி ஜஹாங்கீர் அரங்கில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அவர்களுக்கு வரவேற்புப் பட்டயம் ஒன்றை அளித்தது. தீண்டப்படாத சமூகத் தலைவர் டாக்டர் பி.ஜி. சோலங்கி அவர்கள் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். சமதா சைனிக் தொண்டர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டதுடன் ஏற்பாடுகள் அனைத்தையும் கவனித்துக் கொண்டனர்.*[1]

கோயில் நுழைவு இயக்கத்திலும், சமபந்தி விருந்துகளிலும் தம்மை இழந்து விட வேண்டாம் என்று தமது மக்களை டாக்டர் அம்பேத்கர் எச்சரித்தார். இவைகளால் வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளுக்குத் தீர்வு கிட்டாது என்று உரைத்தார். "உங்கள் துன்பங் களெல்லாம் பிறப்பிலேயே தீர்மானிக்கப்பட்டுவிட்டவை எனும் மூட நம்பிக்கையிலிருந்து எவ்வளவு விரைவில் விடுபடுகிறீர்களோ அவ்வளவுக்கு நல்லது; உங்கள் வறுமை, பிறவிப் பயன் என்றும், தவிர்க்க முடியாத விதி என்றும் எண்ணுதல் முற்றிலும் பிழையாகும். இத்தகைய அடிமைச் சிந்தனைகளை உடனடியாகக் கைவிட வேண்டும்" என்றும் அவர் மேலும் கூறினார்.[2]

---

*1. 'ஜனதா' 1932, நவம்பர், 5.*
*2. கீர், ப. 219.*

# (18)

# விதியை நம்பாதீர்; உங்கள் வலிமையை நம்புங்கள்

*1933, பிப்ரவரி 18 சனிக்கிழமையன்று, தானே மாவட்ட மாநாடு கசராவில் நடைபெற்றது. டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அவர்கள் மாநாட்டுக்குத் தலைமை வகித்தார். திரு. சிவதார்க்கர், திவாகர் பகரே, கணபத்வா ஜாதவ் எனும் மட்கேபுவா ஆகியோர் அவருடன் மாநாட்டிற்கு வந்திருந்தனர். திரு. பி.கே. கெய்க்வாடு, கே.பி. ஜாதவ், லிம்பாஜி பாலேராவ், ரோக்தே ஆகியோர், நாசிக்கிலிருந்து வந்து மாநாட்டில் கலந்து கொண்டனர். திரு. சங்கர் நாத் பாக்வே அவர்கள் மாநாட்டின் வரவேற்புக் குழுத் தலைவராய்ப் பொறுப்பேற்றிருந்தார்.*[1]

*டாக்டர் அம்பேத்கர் அவர்கள் கோயில் நுழைவுச் சட்டவரைவு குறித்த தமது அறிக்கையை விடுத்தபின், காலங்காலமாய்த் தமது மக்களை உயிராக்கமற்ற பேடிகளாகவும், வலிவற்றவர்களாகவும் இருத்திவரும் ஆன்மிக மாயைகள், மூடநம்பிக்கைகள் ஆகியவற்றுக் கெதிரான பிரசாரத்தை விரிவாய்த் தொடங்கினார். கடவுள் வழிபாட்டைவிட உணவே மேலானது என்று அவர்கள் மனதில் ஆழமாய்ப் பதியுமாறு உரைத்தார். இக்கூட்டத்தில் தீண்டப்படாத மக்களுக்கு அவர் அறிவுறுத்தியதாவது: "இந்து சமயத்தில் நமக்குச் சமத்துவம் தேவை. நால் வருண முறை வேரோடு துடைத்தெறியப் படவேண்டும். உயர்சாதி மக்களுக்கே உரிமைகள் யாவுமென்றும், தாழ்சாதி மக்களுக்கு வறுமையே கதியென்றும் இருக்கும் நிலை முடிவுக்கு வரவேண்டும். பிரிட்டிஷாரின் அரசு அன்னிய அரசு; எனவே தற்போதைக்கு நமது நிலையில் மிகுந்த முன்னேற்றத்தை எதிர்நோக்குவதற்கில்லை. ஆனால் உங்களுக்குள் பிளவுகளை அனுமதிக்காதீர்கள். அது அழிவுக்கே வழிவகுக்கும். உங்கள் நிலையையும் உங்களைச் சூழ்ந்துள்ள பிறர் நிலைகளையும் உங்கள் கண்களாலேயே நோக்கி ஆராய்ந்து பாருங்கள். நீங்கள் பெற விருக்கும் அரசியல் தகுதி, மகத்திலும், நாசிக்கிலும் நீங்கள் நடத்திய*

---

*1. 'ஜனதா' 1933, பிப்ரவரி, 25.*

போராட்டங்களுக்குக் கிடைத்த வெற்றியே என்பதை மறந்து விட வேண்டாம். நாசிக் சத்தியாக்கிரகம் பற்றிய செய்திகள் நாள்தோறும் இலண்டனில் டைம்ஸ் நாளேட்டில் வெளிவந்தமையால் இதில் பிரிட்டிஷார்கள் ஈடுபாடு பெற்றுப் பாடம் கற்றுக்கொண்டனர் எனக் கூறினார்.

அவர் மேலும் கூறியதாவது: "உங்கள் இழப்புகள், மாற்றாரின் வெற்றி களாகும். உங்கள் தாழ்ச்சிகளில் மாற்றார் பெருமிதம் கொள்கின்றனர். உங்களுடைய வறுமை, பற்றாக்குறை, வீழ்ச்சிகள், அவலங்கள் எல்லாம் முற்பிறவியில் நீங்கள் செய்த தீவினைகள் எவற்றாலும் விளைந்தனவல்ல. மாறாக உங்களுக்கு மேலே ஆதிக்கம் செலுத்தும் வகுப்பினரது வல்லாண்மையாலும் சதியினாலுமே அவை விளைந்தன என்பதை உணருங்கள். உங்களிடையே நிலம் இல்லை யெனில் பிறர் அதைப் பறித்துக் கொண்டதே காரணம்; உங்களுக்குப் பதவிகள் கிடைக்கவில்லையென்றால் மற்றவர்கள் அவற்றைத் தம்மகப்படுத்திக்கொண்டதே காரணம். எனவே, விதியை நம்பாதீர்கள்; உங்கள் வலிமையையே நம்புங்கள்" என்று அவர் வலியுறுத்தினார்.[1]

---

1. கீர், ப. 233.

# (19)

# பாடுபடுவோரே உயர்வடைவர்

1933, பிப்ரவரி இறுதி வாரத்தில் பம்பாய் மாழ்கோவானில் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. இக்கூட்டத்தில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் உரையாற்றிய போது கூறியதாவது:

"திலகருக்கு ஒரு முறை நிகழ்ந்ததோர் சூழ்நிலையில் நான் தற்போது உள்ளேன். அதாவது எந்த அளவுக்கு மாற்றார்கள் என்னைப் பழித்துச் சபிக்கிறார்களோ, அந்த அளவுக்கு எனது மக்களுக்காக நான் ஆற்றும் தொண்டு சரியான பாதையில் இருப்ப தாய்க் கொள்கிறேன். கடந்த ஈராயிரம் ஆண்டுகளில் தீண்டாமையை ஒழிக்க இத்தகைய பெருமுயற்சிகள் ஏதும் மேற்கொள்ளப் படவில்லை. ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் ஆதரவின்றி, விடுதலைக் கோரிக்கையும், இந்துக்களின் நல மேம்பாடும் நிறை வேறுதல் அரிது என்பதைத் தீண்டப்படாத மக்கள் உறுதியாய் உணர்ந்துள்ளார்கள். இந்துக்கள் தற்போது உங்களுக்கு நன்மை நாட முனைவது அறவுணர்வாலோ கருணையாலோ அன்று. அவர்கள் நலனைப் பேணவே இதில் அவர்கள் முனைந்துள்ளனர். நமது இயக்கத்தின் குறிக்கோள் நம்மீது இழைக்கப்படும் வல்லாண்மை, அநீதி, பொய் மரபுகள் ஆகியவற்றுக்கெதிராய்ப் போராடி, நம்மை நெடுங்காலமாய் அடிமைப்படுத்தி, ஆதிக்கம் செலுத்தி வரும் உயர்வகுப்பாரின் சலுகைகளை அகற்றி நமது தளைகளை அறுத்தலேயாகும். நமது இடையறாத போராட்டத்தின் விளை வாகவே நமது குறிக்கோள் ஏற்பு பெறத் தொடங்கியுள்ளது.

"அழுகிய புலால் உண்ணுவதைக் கைவிடுங்கள் என்றால், பின் எதை உண்ணுவதென்று என்னிடம் கேட்கிறார்கள். பதிலுக்குக் கற்புள்ள பெண்ணொருத்தியை எடுத்துக்காட்டாய் எண்ணிப் பாருங்கள் என்று நான் கூறுகிறேன். அவள் பலவகை இன்னல் களுக்காளானாலும் மேம்பாட்டுக்காக வேசையொருத்தியின் வழியில் சென்றுவிடமாட்டாள். தன்மதிப்பாக அவள் இன்னல்களை ஏற்பாள். நீங்களும் இவ்வுலகில் தன்மதிப்போடு வாழக்கற்றுக் கொள்ளுங்கள். வாழ்க்கையில் எதையாவது சாதிக்க வேண்டும் எனும்

ஆர்வத்தை உங்கள் குறிக்கோளாய்க் கொள்ளுங்கள். பாடுபடுவோரே உயர்வடைவர். நம்மால் வாழ்க்கையில் உயர முடியாது என்று சிலர் தவறாக எண்ணிக் கொண்டுள்ளீர்கள். ஏலாமைக் காலம் முடிவுக்கு வந்துவிட்டதென்பதை உணருங்கள். புதிய யுகம் பிறந்து விட்டது. இந்நாட்டின் அரசியலிலும் சட்டமன்றத்திலும் இடம் பெற்று உங்கள் இலக்குகள் நனவாக்குதல் இயலும் என்பதை உணருங்கள்"[1]

---

1. கீர், பக் 233 - 234.

# (20)

# கடவுளையோ மகான்களையோ சார்ந்திருக்க வேண்டாம்

*பம்பாய் சாந்தர்ஸ்த் சாலையருகில், ஜி.ஐ.பி. இருப்புப்பாதைப் பணியாளர் குடியிருப்பில், 1933, மார்ச் 4, சனிக்கிழமை இரவு 9.30 மணிக்கு தீண்டப்படாத மக்களின் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. கூட்டத்திற்குத் தலைமையேற்குமாறு திரு. ஆ.டி. கவாலி பி.ஏ., எல்.எல்.பி. அவர்களின் பெயரைத் திரு. புஞ்சாஜி ஜாதோவ் அவர்கள் முன்மொழிய, திரு. கார்தக் அவர்கள் வழிமொழிந்தார். 85 பேர் கையொப்பமிட்ட வரவேற்புப் பட்டயத்தை டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அவர்களுக்கு வழங்குவதற்காக இக்கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இதற்கெனப் பெரும்பந்தல் ஒன்று நாட்டப்பட்டிருந்தது; பந்தல் நிரம்ப மக்கள் கூடியிருந்தனர். திரு. சிவதார்க்கர், நாயக், சகாராஸ்ட்திர பூதே, திவாகர் பகாரே, உப்ஷியாம், கமலகாந்த சித்ரே மேஷராம் முதலான சிறப்புமிக்க முன்னணித்தலைவர்கள் பலர் இக்கூட்டத்தில் கலந்து கொண்டனர்.[1]*

*டாக்டர் அம்பேத்கரைச் சிறப்பிக்கும் பட்டயத்தை திவாகர் பாக்ரே அவர்கள் வழங்கினார்.*

*டாக்டர் அம்பேத்கரின் ஏற்புரை வருமாறு:*

*“குழுமியுள்ள பெருமக்களே, பெருமாட்டிகளே,*

*நீங்கள் எனக்களித்த பட்டயத்திற்கு நன்றி. இப்பட்டயம் முழுதிலும் எனது பணிகளையும் பண்புகளையும் பற்றிய உயர்வு நவிற்சிகள் பல நிறைந்துள்ளன. எளிய மனிதனாகிய என்னைக் கடவுளாக்க முற்படுகிறீர்கள் என்பதையே இது உணர்த்துகிறது. இத்தகைய தலைமை வழிபாட்டு எண்ணங்களை நீங்கள் முளையிலேயே கிள்ளியெறியத் தவறுவீர்களாயின், அது உங்கள் அழிவுக்கே வழி வகுக்கும். இவ்வாறு தனிமனிதன் ஒருவனைக்*

---

*1. ‘ஜனதா’ 1933, மார்ச், 11.*

கடவுளாக்கும் உங்கள் முயற்சி, உங்கள் பாதுகாப்புக்கும், விடுதலைக்கும் தனிமனிதர் ஒருவரையே நீங்கள் சார்ந்து நிற்க முனைவதையே காட்டுகிறது. இதன் விளைவாய் நீங்கள் உங்களது கடமைகளில் கவனமின்றிச் சார்ந்து வாழும் பழக்கத்திலேயே மீண்டும் அமிழ்ந்து விடுவீர்கள். இத்தகைய எண்ணப்போக்குகளுக்கு இரையாவீர்களாயின், தேசிய நீரோட்டத்தில் உங்கள் நிலை மரக் கட்டைகளின் நிலைக்கொப்பாகவே இருக்கும். உங்கள் போராட்டங்கள் பயனின்றி நின்றுபோகும்.''

அவர் மேலும் தொடர்கிறார்:

"புதிய யுகம் உங்களுக்களித்துள்ள அரசியல் உரிமைகளை மதிக்கத் தவறாதீர்கள். நம்மால் இயலாதென்ற உணர்வில் நீங்கள் இருந்ததால்தான் நமது வகுப்பு மக்களைப் பிறர் ஏறி மிதித்து அடிமைப்படுத்திக் கொண்டிருந்தனர். தலைமை வழிபாடு, மனிதனைக் கடவுளாக்குதல், கடமை மறத்தல் ஆகிய போக்குகளினாலேயே இந்து சமூகம் சீரழிந்து நமது நாடே தாழ்ச்சி நிலையடையக் காரண மாயிருந்தது என்பதை உறுதிபடக் கூறுவேன். பிற நாடுகளில், நாடு தழுவிய பேரழிவை எதிர்கொள்ள நேருகையில், மக்கள் அனைவரும் பாகுபாடின்றி ஒன்றுதிரண்டு பேரழிவைப் புறம் கண்டு, இடர் விலக்கி அமைதியையும் மேம்பாட்டையும் எய்தி வந்துள்ளனர். ஆனால் நமது சமயமோ, மனிதர் செயலால் ஆவதொன்றும் இல்லையென்று நமது செவி நோக முழங்கி வந்துள்ளது. மனிதன் கட்டை போன்று செயலற்றவனென்றும், நேரும் துன்பங்களிலிருந்து கடவுள் ஒருவரே காக்க வல்லவர் என்றும், தேவையான போது கடவுள் வந்து காப்பாற்றுவார் என்றும் நமக்குக் கூறப்பட்டு வருகிறது. விளைவு என்ன? நாட்டுக்குப் பேரிடர் விளையும் போதெல்லாம், ஒன்றுபட்டு அதை நீக்கப் பாடுபடாமல், கடவுள் அவதாரம் எடுத்து வந்து உதவுவார் என வாளாயிருக்கப் பழகிவிட்டோம்*

உங்கள் அடிமைத்தனத்தை நீங்களாகவேதான் அகற்ற வேண்டும். அதை அகற்றுவதற்காகக் கடவுளையோ அன்றி ஓர் மகானையோ நம்பியிருக்க வேண்டாம். உங்கள் விடுதலை என்பது அரசியல் அதிகாரத்தைப் பெறுவதனால் இயலுமேயன்றிப் புனிதப் பயணங்களினாலோ, உண்ணாநோன்புகளினாலோ அன்று. உங்கள்

* 'ஜனதா' 1933, மார்ச், 11.

அடிமைத்தளையினின்றும் வறுமையிலிருந்தும் சமய நூல் பக்தியினால் விடுபட இயலாது. இவற்றையெல்லாம் உங்கள் முன்னோர்கள் தலைமுறை தலைமுறைகளாய் கடைப்பிடித்து வந்தும், உங்கள் இரங்கத்தக்க அவல நிலையில் இம்மியளவும் முன்னேற்றம் கிட்டவில்லை. உங்கள் முன்னோர்களைப் போன்றே நீங்களும் கந்தைகளைத்தான் உடுத்துகிறீர்கள்; அவர்களைப் போன்றே எச்சசொச்சங்களைத்தான் உண்டு வாழ்கிறீர்கள்; அவர்களைப் போன்றே இழிந்த சேரிகளிலும், தொழுவங்களிலும் வாழ்ந்து மடிகின்றீர்கள்; அவர்களைப் போன்றே நீங்களும் எளிதில் நோய்வாய்ப்படுகின்றீர்கள்; கோழிகளைப் போன்றே மிகுதியான இறப்பு வீதம் உங்களிடை நிலவுகின்றது. உங்களது சமயப் பட்டினிகள், சிக்கன வாழ்வு, தவ நோன்புகள் எவையும் உங்களைப் பசிக் கொடுமையிலிருந்து விடுவிக்கவில்லை."

முடிவாக அவர் கூறியதாவது:

"உங்களுக்குத் தேவையான உணவு, உடை, உறைவிடம், கல்வி, மருத்துவம், வாழ்க்கைக்குத் தேவையான பொருள் ஈட்டத்தக்க வழிவகைகள் ஆகியவற்றை அமைத்துத் தருதலே சட்டமன்றங்களின் கடமையாகும். சட்டமியற்றலும், அதைச் செயற்படுத்தலும் உங்கள் இசைவு, உதவி கருத்துகளைப் பெற்றே நடத்தப் பெறல் வேண்டும். சுருங்கக்கூறின் உலகியல் இன்ப நலன்களின் அமைவகமே சட்டமாகும். எனவே சட்டமியற்றும் அதிகாரத்தை நீங்கள் கைப்பற்ற வேண்டும். மேலும், உண்ணா நோன்பு, வழிபாடு, தவம் முதலான மாயைகளிலிருந்து சட்டமியற்றும் அதிகாரத்தைக் கைப்பற்றும் பணியில் உங்கள் கவனத்தைச் செலுத்துதல் உங்கள் கடமையாகும். அதில்தான் உங்கள் விடுதலைக்கான வழிவகை கிட்டும். நாம் எண்ணிக்கையில் பெரும்பான்மையோராய் இருந்தால் மட்டும் போதாது என்பதை மறவாதீர்கள். எப்போதும் விழிப்புணர்வோடு, நற்கல்வி பெற்றுத் தன்மதிப்புடன் வலிமையாய் விளங்கினால்தான் வெற்றி எய்தவும், அதைத் தக்கவைத்துக் கொள்ளவும் இயலும்."[1]

---

1. கீர், பக். 234 - 35.

# (21)

# நாட்டுக்காக முடிந்தவரை அதிகாரத்தைக் கைப்பற்ற முனைவேன்

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அவர்கள் லண்டனுக்குப் புறப் பட்டுக் கொண்டிருந்த தருணத்தில் புனாவைச் சேர்ந்த ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் 1933, ஏப்ரல் 23ஆம் நாளன்று பம்பாய் தாமோதர் அரங்கில் வரவேற்புப் பட்டயம் ஒன்று வழங்கினர். 8,000 முதல் 10,000 வரை எண்ணிக்கையில் மக்கள் கூட்டம் திரண்டிருந்தது. ராய்பகதூர் எஸ்.கே. போலே அவர்கள் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். நாசிக் மாவட்டத்தின் சார்பில் திரு. பி.எல். லோகாண்டே பட்டயத்தை வாசித்து டாக்டர் அம்பேத்கருக்கு அளித்தார்; புனா மாவட்டத்தின் சார்பில் திரு. அரிபாபு அனுமந்த ரோக்தே அவர்கள் பட்டயம் வாசித்து அளித்தார். இச்சமயத்தில் பல்வேறு மாவட்டக் குழுக்களும் தாங்கள் திரட்டிய நன்கொடைத் தொகைகளை டாக்டர் அம்பேத்கர் அவர்களிடம் ஒப்படைத்தன.[1]

கூட்டத்தில் உரையாற்றுகையில் டாக்டர் அம்பேத்கர், வட்ட மேசை மாநாட்டின் இரண்டாம் அமர்வின் போது தாம் செயலற்ற சிக்கல் நிலையில் இருந்ததாய்க் குறிப்பிட்டார். ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு இம்மியளவும் உரிமை தரத் தயாராய் இல்லாத காந்தியடிகளுடன் சேர்ந்துகொண்டு பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் நட்பு முறிவை விளைவித்துக் கொள்ளத் தம்மால் இயலவில்லை என்று கூறினார். ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் உரிமைப் போராட்டம் வெற்றிக்கட்டத்தை நெருங்கும் நிலையை எய்தியிருப்பதால், நாட்டுக்காக எவ்வளவு அதிகாரத்தைக் கோரிப் பெற இயலுமோ அந்த அளவுக்குப் பெறுவதில் முனைப்பு காட்டப் போவதாய்ச் சூளுரைத்தார். கூட்டத்தின் முடிவில், தமக்கு விடை கொடுத்து வழியனுப்புதற்காக பாலர்டு துறைக்கு வரும் வழக்கத்தைக் கைவிடுமாறு தமது மக்களுக்கு அவர் வேண்டுகோள் விடுத்தார். இவ்வாறு வருதலின் மூலம் அவர்கள் தமது ஒருநாள் ஊதியத்தை இழத்தல் தேவையற்றது என்றும் அவர் கூறினார்.[2]

---

1. 'ஜனதா' 1933, ஏப்ரல், 29.
2. கீர், ப. 238.

# (22)

# உங்கள் நலன்களின் மேம்பாட்டுக்குப் பணியாற்றும் மனிதரை அடையாளம் காண்க

கொலாபா மாவட்ட உழவர்கள் மாநாட்டின் மூன்றாம் அமர்வு 1934, டிசம்பர் 16ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமையில் அலிபெய்க் தாலுகாவில் சாரி எனுமிடத்தில், டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அவர்களின் தலைமையில் நடைபெற்றது. மாநாட்டிற்கான தொடக்க ஏற்பாடுகள் அனைத்தையும் உழவர்கள் தாங்களாகவே செய்திருந் தார்கள். தலைவருக்கும் சிறப்பு விருந்தினர்களுக்கும் மைய மேடை ஒன்றுடன் விசாலமான பந்தல் ஒன்று நிர்மாணிக்கப்பட்டிருந்தது. மாநாட்டு அரங்கு கொடிகளாலும் தோரணங்களாலும் எழிலுற அலங்கரிக்கப்பட்டிருந்தது. 'உழவர்கள் வெல்க', 'உழவர்களே ஒன்றுபடுங்கள்' என்பன போன்ற முழக்கங்கள் எழுதப் பட்ட துணிப் பதாகைகள் பந்தலில் ஆங்காங்கே தொங்கவிடப்பட்டிருந்தன. சாரல், ரேவாஸ், ஹசிவ்ரே, நாரிங்கி போன்ற பகுதிகளிலிருந்து வந்திருந்த உழவர்கள் டாக்டர் அம்பேத்கர் அவர்களுக்கு மாலையணிவித்துச் சிறப்பித்தனர்.

மாநாட்டு அமர்வு, பிற்பகல் 2 மணிக்குத் தொடங்கியது. மாவட்ட மெங்கிருந்தும் 6,000 உழவர்கள் மாநாட்டில் திரண்டி ருந்தனர். மாநாட்டுக்கு வந்திருந்தவர்களில், பம்பாய் எஸ்.எஸ். சங்கத்தைச் சேர்ந்த திரு. ஜி.என். சகாஸ்ட்ர பூதே, படேல் உயர்நிலைப் பள்ளி முதல்வர் திரு. எம்.வி. தோண்டே, இந்தியப் பணியாளர் கழகத்தைச் சேர்ந்த திரு. எஸ்.வி. பருலேக்கர், திரு. கே.வி. சித்ரே, மராத்தா இதழாசிரியர் திரு. டி.வி. பர்வதே, திரு. எஸ்.ஜி. திப்னிஸ். திரு. சி. ஜிதேஷ்பாண்டே, திரு. என்.எம். தேஷ்பாண்டே, சுபேதார் சாவத்கார், போர் பிரஜா பரீசித்தைச் சேர்ந்த தாமுண்ணா போத்தினிசும் பிற தோழர்களும், பெசாரி நிலக்கிழார் திரு. சர்தேசர் பாரியா ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். காவல்துறைத் துணை ஆய்வாளர் மாமல்லத்தார் அலிபெய்க்கும் பிற அரசு அலுவலர்களும் மாநாட்டுக்கு வருகை தந்திருந்தனர்.

வரவேற்புக் குழுத் தலைவர் திரு. என்.என். படீல் பேராளர்களை வரவேற்றுப் பேசினார்.

## டாக்டர் அம்பேத்கரின் உரை

டாக்டர் அம்பேத்கர் அவர்கள் பேச எழுந்த போது உற்சாகமான வரவேற்பு முழக்கம் எழுந்தது.

அவர் பேசியதாவது:

"இன்றைய தினம் நீங்கள், உங்கள் குறைபாடுகளை நீக்குதற்கான வழிவகைகளில் உங்கள் கவனத்தை முனையப்படுத்த வேண்டும். இன்றைய நிலையில் 'சேத்காரி' எனும் சொல் தவறான பொருளில் பயன்படுத்தப்பட்டு வருகிறது; ஏராளமான நிலத்தை உடையோராய், உடலுழைப்பேதும் இன்றியே பயனெல்லாம் அடையும் பெருநிலக் கிழார்களையும், தமக்கெனச் சிறு துண்டு நிலமும் சொந்தமின்றி, தங்கள் உணவுக்காக அன்றாடம் பாடுபடும் கூலி உழவுத் தொழிலாளர் களையும் ஒருங்கே சேர்த்து இந்தவொரு சொல்லால் சுட்டி வருகின்றனர். இந்த இரு வகை வர்க்கங்களும் பெரிதும் வேறு பட்டவை என்பதுடன் ஒன்றுக்கொன்று முரண்பட்டவையும் ஆகும். இந்த இரு சாராரையும் சேர்ந்து ஒரே சொல்லால் சுட்டுவது பெரும் பிழை என்பதால், முதலில் 'சேத்காரி' என்ற சொல் யாரைச் சுட்டுகிறது என்பது தெளிவாக வரையறுக்கப்பட வேண்டும் என்று கருதுகிறேன்.

இன்று இங்கே அவையோரின் மத்தியில், குறிப்பாய் சூரியைச் சேர்ந்த மக்களின் சிந்தையில் மேலோங்கி நிற்கும் எண்ணம் யாது என முதலில் வினவ முற்படுகிறேன். கடந்த இரண்டாண்டுகளாய்ச் சூரியைச் சேர்ந்த குத்தகை உழவர்களுக்கும், சவக்கார்களுக்கும் நிலக்கிழார்களுக்கும் எதிராக மேற்கொண்டுள்ள வேலை நிறுத்தத்தைத்தான் இங்கு குறிப்பிடுகின்றேன். இந்த வேலை நிறுத்தத்தின் நியாய நியதிகளுக்குள் செல்லாமல் நான் இங்குக் குறிப்பிட விரும்பும் கருத்து இத்தகைய பூசல்களெல்லாம் இரு தரப்புச் சார்பாளர்களுடன் அரசுச் சார்பாளர்களும் சேர்த்து அமைக்கப் படும் சட்டபூர்வ அதிகாரம் கொண்ட சமரசத் தீர்வுக் குழுக்களால் தீர்வுகாணப்பட வேண்டும் என்பது தான். இத்தயை சமரசத் தீர்வுக்

குழுக்களின் தீர்ப்பு இரு தரப்பினரையும் கட்டுப்படுத்த வல்லதா யிருக்க வேண்டும். இத்தகைய சூழலில் ஏன் அரசு தலையிட்டு சமரசத்தீர்வுக் குழுவொன்றை நியமிக்கவில்லை என்பதற்கான காரணம் புரியவில்லை.

கோத்தி முறை என்று பரவலாய் அழைக்கப்படும் திட்டத்தால், மாகாணத்தின் இந்தப் பகுதியில் பல்வேறு குறைபாடுகளுக்கு இடமுண்டாகியுள்ளது என்பதை நான் நன்கறிவேன். இக்கோட்டாக் களின் பிடியில், அவர்களது தன்னிச்சைப் போக்குகளினாலெல்லாம், குத்தகை உழவர்கள் அடையும் சொல்லொணா இன்னல்களை யெல்லாம் நன்கறிவேன். குத்தகை உழவரை நிலக்கிழார் தனது இச்சைக்கேற்ப எப்போது வேண்டுமானாலும் வெளியேற்றலாம் என்ற நிலையால், நிலையான வருவாயை எதிர்நோக்க இயலாது குத்தகைய உழவர்களின் வாழ்க்கை அவலமுறுகிறது. இத்தகைய அப்பட்டமான அநீதிக்கிடையில்தான் உழவர்கள் பாடுபட்டு உழைத்துக் கொண்டுள்ளனர். காரணம் ஏதுமின்றி உழவரை நிலத்தி லிருந்து வெளியேற்றக் கோட்டிகளுக்குள்ள உரிமையால், ஆண்டுக் கணக்காய்ப் பாடுபட்டுப் பண்படுத்திய நிலத்தில் தனது உழைப்பின் பயனை அடையமுடியாமல் உழவர்களைத் தவிக்கவிடுகிறது. கோட்டிகளின் இத்தகைய தன்னிச்சையுரிமை சட்டமியற்றி நீக்கப் படுவதுடன், வெளியேற்றப்படும் குத்தகை உழவருக்குத் தகுதியான ஈட்டுத்தொகை வழங்கக் கட்டாயப்படுத்தவும் சட்டமியற்றப்பட வேண்டும். இந்த அநீதியின் உச்சக் கட்டம் பூசல் எழும்போது குத்தகை உழவரைத் தனது விருப்பத்திற்குப் பணிய வைக்கவோ அன்றி வெளியேற்றவோ நிலக்கிழார்கள் விரும்பும் போதெல்லாம் உழவர் களின் வீட்டை இடித்துத் தள்ளுவதாய் அச்சுறுத்தும் நிலைக்குச் சென்றுவிடுகிறது. இத்தகைய அப்பட்டமான கொடுமை தொடர்ந்து நீடிக்க அனுமதிக்கப்படுவது ஏன் என்று எனக்குப் புரியவில்லை. இத்தகைய மனித நேயமற்ற, அநீதிக்கு அரசாங்கமும் உடந்தையா யுள்ளது எனும் கடுமையான குற்றச்சாட்டு மெய்யேயென்று தோன்றுகிறது. பம்பாயில் ஆலை முதலாளிகள் தொழிலாளர் களுக்குக் கட்டிக் கொடுத்திருக்கும் குடியிருப்புகளின் நிலையை எடுத்துக்காட்டாய் எண்ணிப்பாருங்கள். வேலைநிறுத்தப் போராட் டங்களின் போதெல்லாம், வேலையை இழந்து விடுவோமோ என்ற அச்சத்துடன் குடியிருப்பை விட்டு வெளியேற்றப்படுவோம் எனும் அச்சமும் சேர்ந்து போராட்டத்தின் கூர்மையில் பாதியைக் குறைத்து

விடுகிறது. இத்தகைய அவலம் இனியும் தொடரக் கூடாது; இதைப் பற்றிய நமது உணர்வுகளை வெளிப்படுத்தும் வடிகால் வாய்ப்பாக இம்மாநாடு வழிவகையொன்றைக் காண வேண்டும்.

இத்தகைய குறைகளைக் களைவதற்கு உற்ற வழிமுறையான செயலதிகாரம் பெற்ற சட்டம் இயற்றப்படுதலே என்று நான் சற்றுமுன் கூறியதை மறந்து விடவேண்டாம். உங்கள் குறைகளைக் களைந்து கொள்வதற்கு வேலைநிறுத்தம் ஒன்று மட்டுமே நம்பக மான வழியென்று இருந்து விடலாகாது. பாதிக்கப்பட்டவர்கள் வேலைநிறுத்தம் செய்வதற்கான உரிமையை நான் ஒருபோதும் மறுக்கவில்லை. ஆனால், ஒவ்வொரு பூசலுக்கும், நினைத்தவுடன் பயன்படுத்தக் கூடிய ஆயுதமன்று வேலை நிறுத்தம். இத்தகையதொரு சட்டத்தை நிறைவேற்றுவிப்பது எப்படி எனும் வினாவிற்கு நீங்கள் தான் தீர்வு காண வேண்டும். சட்டமன்றங்களில் உங்கள் சொந்தச் சார்பாளர்கள் இடம் பெற்றால் அன்றி, உங்களால் இதைச் சாதிக்க இயலாது. உங்கள் நலன்களின் மேம்பாட்டுக்காகவே எப்போதும் உழைப்பவர்கள் யார் என்பதை நீங்கள் அடையாளம் கண்டுகொள்ள வேண்டும். உங்கள் சார்பாளார்களை நீங்கள் தேர்ந்தெடுக்கும் கட்டத்தில், காங்கிரஸ் தலைவர்கள்தான் உங்கள் நலன்களுக்காகப் போராடக் கூடியவர்கள் எனும் பொய் மயக்கத்திலிருந்து விடுபட்டு நீங்கள் செயல்பட வேண்டும். இன்றைய நிலையில் காங்கிரஸ் இயக்கத்தில் ஏதாவதொன்று எஞ்சியிருக்கிறது என்றால் அது பிரிட்டிஷ் எதிர்ப்பு என்பதொன்று மட்டுமே".

உழவர்களின் மேம்பாடு குறித்த சில தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்ட பின்னர், தலைவர் அவர்கள் மாநாட்டுக்கு நன்றி தெரிவித்து முடிவுரையாற்றினார்.[1]

---

1. பம்பாய் கிரானிக்கல், 1934, டிசம்பர், 22.

# (23)

# தீண்டப்படாத இந்துவாய்ப் பிறந்தது என் அவலம்; ஆனால் இந்துவாய் இறக்க மாட்டேன்

*பத்தாண்டு கால இடையறாத சமூகப் போராட்டத்தின் பின்னணியில் இன்றைய அரசியல், சமூக நிலைமைகளை மீள்பார்வை செய்யும் நோக்கில் டாக்டர் பி.ஆர் அம்பேத்கர் அவர்கள் ஒடுக்கப் பட்ட வகுப்பு மக்களின் மாநாடு ஒன்றை 1935, டிசம்பர் 13, ஞாயிற்றுக் கிழமையன்று, நாசிக் மாவட்டம் இயோஹவில் நடத்தத் தீர்மானித்தார்.*

*1935, அக்டோபர் 12 சனிக்கிழமையன்று காலை 11 மணிக்கு டாக்டர் அம்பேத்கர் நாசிக்கை அடைந்த போது, அவர் பெரும் உற்சாகத்துடன் வரவேற்கப்பட்டு பெரும் ஊர்வலத்துடன் நகரத் திற்கு அழைத்துச் செல்லப்பட்டார். நாசிக் நகரில் ஓர் நூலகத்தை அவர் திறந்து வைத்தார்.*

*இந்நிகழ்ச்சியில் அவர் பேசியதாவது:*

*"தன்னுதவியில் நீங்கள் நம்பிக்கை கொண்டுள்ளீர்கள். உங்கள் மேம்பாட்டுக்காக உங்கள் சொந்தக்காலில் நின்று நீங்கள் போராட வேண்டும். பேரிடர் ஏதும் நிகழ்ந்து நான் இறக்க நேரிட்டாலும் எனக்குப் பின்னர் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்திச் செல்ல இயலவேண்டும்."*

*இர்விவார் பேட்டை ஹீராலால் சந்தில் இரவு 9 மணிக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பல சாதி விருந்தில், காங்கிரஸ் காரர்களில் தேஷ்பாண்டே ஒருவர் மட்டுமே கலந்துகொண்டார்.*

*1935 அக்டோபர் 13 ஞாயிறன்று டாக்டர் அம்பேத்கர் விஞ்சூர் சென்றிருந்தபோது, அங்கு வரவேற்கப்பட்டார். அவ்வாறே அவர் இயோலா செல்லுகையில் வழியில் கிராம மக்கள் அவருக்கு வரவேற் பளித்தனர்.*

இயோலா நகராட்சி மன்றம் காலையில் அவருக்கு வரவேற்புப் பட்டயம் வழங்கியது. நன்றி தெரிவித்து டாக்டர் அம்பேத்கர் உரையாற்றுகையில் கூறியதாவது:

"நெடுநாளாய்த் தொடர்ந்து வரும் நமது போராட்டங்களுக்குப் பின்னரும், தீண்டப்படாத மக்கள் குறித்த அவர்களது மனப் பான்மையில் மாற்றமேதுமில்லையென்றும், நம்மிடம் அவர்கள் நேயத்தோடு நடந்துகொள்ளப் போவதில்லையென்றும் முடிவுக்கு வந்துள்ளோம். எனவே நாம் இந்துக்களிடமிருந்து விலகி, தன் னுதவி, தன் மேம்பாட்டுக்கான போராட்டம் இவற்றிலேயே நம்பிக்கை வைப்பது என முடிவுசெய்துள்ளோம்."[1]

1935 அக்டோபர் 13 இரவு 10 மணிக்கு இயோலாவின் மாநாடு கூடியது. ஐதராபாத் சமஸ்தானம் மத்திய மாநிலம் ஆகியவற்றின் சார்பாளர்களுடன் பல்வேறு வகையாண கருத்தோட்டங்கள் கொண்ட தீண்டப்படாத மக்கள் 10,000 பேர் அளவுக்கு மாநாட்டில் கலந்து கொண்டனர். மாநாட்டின் வரவேற்புக் குழுத்தலைவர் அம்ரித்ராவ் ரங்காம்பே அவர்கள் தங்கள் எதிர்காலம் குறித்துத் திட்டமிடுதலில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் காட்டும் ஈடு பாட்டையும் பேரார்வத்தையும் குறித்துத் தமது மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண்டு வரவேற்புரையில், "சீரழிவுற்ற இந்து சமயத்தில் ஒரு வகுப்பினர் என்ற வகையில் பார்ப்பனர்கள் மட்டுமே நலன் பெற்று வருதலால், அதைப் பார்ப்பனீயம் என்று கூறுவதே முற்றிலும் பொருந்தும்" எனக் கூறினார்.

ஒன்றரை மணி நேரத்துக்கு மேல் நீண்ட, உணர்வு நிறைவுரையில் டாக்டர் அம்பேத்கர் அவர்கள், பொருளாதாரம், சமூகம், கல்வி, அரசியல் உள்ளிட்ட அனைத்துத் துறைகளிலும், ஒடுக்கப்பட்ட மக்களின் தற்போதைய அவலநிலையை எடுத்துரைத்து, இந்து சமயமென்னும் ஒரே அமைப்பின் கீழ் வரும் தங்களுக்கும், குறைந்த பட்ச மனித உரிமை களாவது கிடைக்க வேண்டுமென்பதற்கான போராட்டத்தில் அவர்கள் செய்த மகத்தான தியாகங்களைச் சுட்டிக்காட்டினார். குறிப்பாக களாரம் கோயில் நுழைவு இயக்கத்தின்

1. கியார்மோடே, பகுதி 6, பக். 84 - 85.

போது கடந்த ஐந்தாண்டுகளில் எவ்வாறு அவர்கள் மனிதத் தன்மையின்றி நடத்தப்பட்டனர் என்பதையும், எளிய உரிமை களையும் இந்து சமுதாயத்தில் சமத்துவ நிலையையும் அடைவதற் கான அவர்களது போராட்டத்திற்குப் பயன் ஏதும் விளையாமை யையும் அவர் குறிப்பிட்டார். இக்குறிக்கோள்களை அடைவதற்காக செலவிடப் பட்ட பணம், காலம், மேற்கொண்ட உழைப்பு ஆகியவை அனைத்தும் விரயமானது குறித்து அவர் நொந்த உள்ளத்துடன் வருந்தியுரைத்தார்.

எனவே, இந்த விவகாரத்தில் தீர்க்கமானதோர் முடிவு எடுப்பதற் கான காலகட்டம் வந்துவிட்டதென அவர் உரைத்தார். அவர்கள் அனுபவித்து வரும் தாழ்ச்சிகளும், அவர்களை எதிர்கொள்ளும் இயலாமைகளும் அவர்கள் இந்து சமூகத்தில் உறுப்பினர்களாய் இருப்பதன் விளைவே எனக் கூறினார். அவர்கள் இந்து சமயத்தைத் துறந்து, தங்களுக்குச் சம தகுதியும், பாதுகாப்பான நிலையும் தந்து தங்களைக் கண்ணியத்துடன் நடத்தும் பிறிதொரு சமயத்தில் சேருதல் நன்றல்லவா என வினாவினார்.

பின்னர் அவர் தமது குரலை உயர்த்தி, இந்து சமயத்துடனான தொடர்புகளை அறுத்துக்கொண்டு தங்களுக்கு அமைதியையும் தன் மதிப்பையும் பிறிதொரு மதத்தில் நாடுமாறு கூறியதுடன், புதிய சமயத்தைத் தேர்ந்தெடுக்கும்போது சமத்துவ நிலை, சமத்துவ நடத்து முறை, சமத்துவ வாய்ப்புகள் ஆகியவற்றுக்குத் தங்குதடையற்ற உறுதி யுண்டா என்பதை விழிப்புடன் ஆய்ந்து நோக்க வேண்டுமென்றும் கூறினார்.

தம்மைப் பற்றி, தமது தனி முடிவைப் பற்றிக் கூறுகையில் அவர் ஏதோ தீவாய்ப்பால் தாம் ஒரு தீண்டப்படாத இந்துவாய்ப் பிறந்து விட்டதாகவும், அதைத் தடுத்தல் தனது ஆற்றலில் இருக்கவில்லை யென்றும் அதனால் பல இன்னல்களையும் இழிவுகளையும் எதிர் கொள்ள நேர்ந்ததாகவும் கூறி, "ஆனால் நான் ஓர் இந்துவாகவே இறக்க மாட்டேன் என்பது மிக உறுதி" என்றும் இடியாய் முழங்கினார்.

பின்னர் அவர் வன்கொடுமை மேல்சாதி இந்துக்களுக் கெதிராகக் கடந்த ஐந்தாண்டு காலப் போராட்டம் பயனற்றதே எனக்

குறிப்பிட்டு காளாராம் கோயில் சத்தியாக்கிரகத்தை உடனடியாக நிறுத்துமாறு மக்களைக் கேட்டுக் கொண்டார். அவர்களது முயற்சிகளையெல்லாம் தோற்கடித்த இந்துக்கள் இந்நிலைக்கு வருந்துவதாகவோ திருந்துவதாகவோ தோன்றவில்லையென்றும் குறிப்பிட்டார். இந்து சமயத்தைவிட்டு நிரந்தரமாய் வெளியேறிவிடத் தீர்மானித்துவிட்டதைப் புறவுலகுக்குப் புலப்படுத்தும் வகையில் இனியனைவரும் நடந்துகொள்ள வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். சுதந்திர மனிதர்களுக்கான வாழ்க்கை வழியைத் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொண்டதை யுணர்த்துமாறும் வேண்டினார்.

அதற்கேற்பவே, முழுமையான விவாதத்தின் பின்னர், இந்து சமுதாயத்தில் தங்களுக்குச் சமத்துவ நிலை வேண்டும் எனும் கோரிக்கைக்கு மேல்சாதி இந்துக்கள் வேண்டுமென்றே பாராமுகம் காட்டி வரும் நிலையைக் கருத்தில் கொண்டு, தீண்டப்படாத மக்கள் இந்து சமயத்தில் சமத்துவ நிலை பெற வேண்டுமென்று பத்தாண்டுகளாக நடத்திவரும் போராட்டத்தின் மூலம், இரு தரப்பாருடைய நிலையையும் மேம்படுத்தி வலிவூட்டும் நம்பிக்கையைக் கைவிட்டு விடுமாறு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. மேலும், இந்து சமயத்தின் ஏனைய பிரிவினருக்கு இணையான சமத்துவ நிலையையும் கௌரவமான வாழ்க்கையையும் பெறமுடியு மென்னும் பயனற்ற முயற்சிகளில் தங்கள் ஆற்றலைச் சிதறடிக்க வேண்டாம் என்றும் கேட்டுக்கொண்டது.[1]

டாக்டர் அம்பேத்கர் அவர்கள், தமது துணைத் தலைவர் களுடன் இயோலாவிலிருந்து நாசிக் சென்று தங்கினார். அவரது தங்கலின்போது மெகவால் எனப்படும் துப்புரவாளர் அமைப்பு அவர்களுக்குத் தேனீர் விருந்தும் இரவு விருந்தும் 1935 அக்டோபர் 15, 16 தேதிகளில் வழங்கியது.[2]

இந்து சமயத்தைத் துறந்து பிறிதொரு சமயத்தைத் தழுவவிருப்ப தென்று டாக்டர் அம்பேத்கர் தெரிவித்த செய்தி உலகளாவிய

1. கீர், பக். 252 - 253.
2. கியார்மோடே, பகுதி 6, ப. 86.

வட்டத்தில் விரிந்து பரவியது. இந்து சமூகத்தின் மீது சீறிப் பாய்ந்த சூறைக்காற்றாய் அது விளங்கியது. இந்துக்களை நடுக்குறுத்தும் இடியெனவும் அது விளங்கியது. இந்து சமூகத்தின் பல்வேறு பிரிவினரிடையே ஓர் ஆரவாரத்தையும் இவ்வறிவிப்பானது தோற்று வித்தது. இது குறித்து இந்து சமூகத்தின் பல்வேறு பிரிவினரின் எதிரொலிப்புகள் கீழே தரப்படுகின்றன.

- பதிப்பாசிரியர்கள்

ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் இந்தத் தீர்மானமானது பிடிவாதமும் இரக்கமற்ற மனமும் கொண்ட பழமைவாத இந்துக்கள் பால் பாதிப்பு எதையும் விளைவிக்கவில்லை. தேங்கி அழுகும் நிலையில் ஆழ்ந்துவிட்ட அவர்கள் தங்கள் சிந்தனைத் திறனையும் தொலை நோக்கையும் இழந்துநின்றனர். கல்வியறிவற்ற பார்ப்பன ரல்லாத இந்துக்கள், சமய விவகாரங்களில் பார்ப்பனர்கள்தான் முடிவெடுக்க வேண்டும் என்று கருதினார்கள். இயோலாத் தீர் மானத்தைக் கேட்டு, பழமைவாத இந்துக்கள் பெரு மகிழ்ச்சியடைந்து நிம்மதிப் பெருமூச்சு விட்டனர். கோயில் நுழைவு சத்தியாக் கிரகத்தினால் ஐந்தாண்டுகளாக அலைக்களிப்புக்குள்ளாகி இருந்த நாசிக் மாவட்டப் பழமை வாத இந்துக்கள், இந்து சமயத்தை விட்டு விலகுவதென்னும் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் தீர்மானத்தினால் பெருமகிழ்ச்சியே அடைந்தனர். தீண்டப்படாத மக்களின் இப் புதிய தீர்மானத்தைக் காரணம் காட்டி, நாசிக் தேர்த் திருவிழாவுக்கு விதிக்கப்பட்டிருந்த தடையை நீக்குமாறு மாவட்ட ஆட்சி யாளருக்கு அவர்கள் விண்ணப்பம் கொடுத்தனர். ஆனால் விவரமறிந்த, அரசியல் நோக்குடன் சிந்திக்கும் மக்களின் கருத்து நாடு முழுவதிலும் தீண்டப்படாத மக்களின் தீர்மானத்துக்கு எதிராகவே இருந்தது.

சிந்தி இந்து ஒருவர், இந்து சமயத்திலிருந்து டாக்டர் அம்பேத்கர் விலகினால் அவரைக் கொலைசெய்து விடுவதாக அச்சுறுத்தி இரத்தக் கடிதம் ஒன்றை அனுப்பினார்."[1]

---

* 'விவாத விருத்தா', 1935, நவம்பர் 3.

1. கீர், பக் .256 - 258.

# டாக்டர் அம்பேத்கரின் இயோலா உரை குறித்து காந்தியடிகளின் கருத்து

வார்தா,
அக்டோபர் 15

டாக்டர் அம்பேத்கரின் உரைகுறித்து அசோசியேட்டட் செய்தி நிறுவனப் பத்திரிக்கையாளர்களுக்குக் காந்தியடிகள் நேர்காணலின் போது கூறியதாவது:

டாக்டர் அம்பேத்கர் அவ்வாறு பேசியிருப்பார் என்று நம்ப முடியவில்லை. மாறாக, அத்தைகைய உரையை ஆற்றியிருந்து, அம்மாநாடும் இந்து சமயத்திலிருந்து முற்றாக விலகிச் சமத்துவத்தை உறுதிசெய்யும் பிறிதொரு சமயத்தில் இணைவதாய்த் தீர்மானம் இயற்றியிருந்தால், இவை இரண்டையுமே தீயவாய்ப்பான நிகழ்வு களாகவே நான் கருதுவேன். குறிப்பாக, ஏதோ இரண்டொரு அபூர்வ நிகழ்வுகளைத் தவிர்த்து நோக்கினால் தீண்டாமை என்பது அறவே அகலும் நிலையை எட்டியிருப்பதை உணர முடியும்.

கவிதா போன்ற இன்ன பிற கிராமங்களில் நடைபெற்றவை போன்ற அட்டூழியங்கள் உயர்ந்த ஆன்மாவும், உயர்கல்வியும் கொண்ட டாக்டர் அம்பேத்கர் போன்றவர்களுக்குச் சினமூட்டும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது.

ஆனால் நமது விருப்பம் போல் மாற்றிக்கொள்வதற்கு சமயம் ஒன்றும் வீடோ, ஆடையோ அல்ல. அஃது ஒருவரின் உடலை விடவும் ஆளுமையுடனும் பின்னிப் பிணைந்திருப்பதாகும். சமயம் என்பது மனிதரைப் படைத்தோனிடம் தொடர்புறுத்தும் தளை யாகும்; உடல் மாய்ந்து அழிந்தாலும் இறப்புக்குப் பின்னரும் ஒருவரைத் தொடர்வது அவரது சமயமே.

டாக்டர் அம்பேத்கருக்குக் கடவுள் நம்பிக்கையிருந்தால், அவர் தமது முன்னோர்களின் சமயத்தில் இப்போது இருக்கும் நம்புதற் கிலாத பக்தர்களின் நடத்தையையும், தமது சினத்தையும் ஒருபுறம் ஒதுக்கி வைத்துவிட்டு, சமயத்தில் உயர் தகுதிகளை மட்டும் எண்ணிப்பார்த்து விட்டுப் பின்னர் நிதானமாக முடிவு எடுக்கலாம்.

*"கடைசியாக, இந்நாட்டிலிருக்கும் கோடிக்கணக்கான எளிய, கல்வி யறிவில்லாத அரிசனங்கள், தங்கள் வாழ்வின் நன்மை தீமைகள் யாவும் உயர் சாதி இந்துக்களின் நன்மை தீமைகளோடுதான் இறுகப் பின்னிப்பிணைந்து இருப்பதை நினைத்துப் பார்ப்பார்களாயின், அம்பேத்கரோ, அவரது தொண்டர்களோ தங்கள் தீர்மானத்தின் படிச் சமயம் மாறுவார்களெனில் அதனால் அவர்கள் எதிர்பார்க்கும் விளைவு ஏதும் நிகழாது என்று உறுதி கூறுவேன்."*

**A. P.**

## காந்தியடிகளின் கருத்து குறித்து டாக்டர் அம்பேத்கரின் நோக்கு:

*பம்பாய்,*
*அக்டோபர், 15*

*தமது நாசிக் உரை குறித்த காந்தியடிகளின் கருத்துக்களை அசோசியேட்டட் செய்தி நிறுவனப் பத்திரிக்கையாளர்கள் டாக்டர் அம்பேத்கரிடம் காட்டியபோது டாக்டர் அம்பேத்கர் பின்வருமாறு அறிவித்தார்:*

*"நாங்கள் எந்த சமயத்தில் இணையப்போகிறோம் என்பது குறித்து முடிவு ஏதும் எடுக்கவில்லை; எந்தெந்த வழிமுறைகளைக் கடைபிடிக்கப் போகிறோம் என்பதையும் முடிவு செய்யவில்லை; ஆனால் நாங்கள் தீர்க்கமாய்க் கலந்து ஆலோசித்து உறுதியாக முடிவு செய்திருப்பது ஒன்றுதான்; அதாவது இந்து சமயத்தினால் எங்களுக்கு நலன் ஏதும் கிடையாது என்பதே".*

*மேலும் அவர் கூறினார்:*

*"சமத்துவமின்மை என்பதே இந்து சமயத்தின் அடித்தளமாகும்; ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் ஒருபோதும் மனிதராய் வாழ முடியாத*

---

*1. பம்பாய் கிராணிக்கள், 1935, அக்டோபர், 16.*

** சம்ய மாற்றம் குறித்த தமது கட்டுரைகளைக் காந்தியடிகள் நூலாய் வெளியிட்டுள்ளார். பின்னிணைப்பில் காண்க.*

வகையில் அதன் அறநெறி முறைகள் அமைந்துள்ளன. கவிதா கிராமத்திலோ அன்றிப் பிற இடங்களில் சிலவற்றிலோ ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் மீது இழைக்கப்பட்ட கொடுமைகள் கண்டு சினமடைந்தோ, ஆத்திர அவசரத்திலோ, நாங்கள் இவ்வாறு முடிவெடுத்திருப்பதாய் யாரும் கருத வேண்டாம். இஃது ஆழமாய்த் தீரக் கலந்தாலோசித்து எடுக்கப்பட்ட முடிவு. மனிதருக்கு சமயம் தேவை என்பதில் நான் காந்தியுடன் ஒன்றுபடுகிறேன், ஆனால் அது முன்னோர்களின் சமயமாயிருக்க வேண்டுமென்பதை மறுக்கிறேன். ஒருவனது நன்னடைத்தைக்கான நெறிமுறைகளைக் காட்டி, அவனது முன்னேற்றத்தையும் நல வாழ்க்கையையும் ஊக்குவிக்காத நிலையில் முன்னோரின் சமயம் இருக்குமெனில் அதை ஏற்கத் தேவையில்லை".

எப்போதும் சமயம் மாற அவர் எண்ணியிருக்கிறார் என்றும், தனியராய்ச் சமயம் மாறுவாறா அல்லது பெருங் கூட்டமாய் சமயம் மாறுவார்களா என்று வினவப்பட்ட போது, டாக்டர் அம்பேத்கர் கூறியதாவது:

"சமயம் மாறுவது என்று நான் முடிவெடுத்து விட்டேன். பெரும்பாலோர் என்னுடன் சேராவிடினும் அக்கறையில்லை. ஒவ்வொருவரும் அவரவரே முடிவு செய்ய வேண்டும். நன்மை என்று எண்ணினால் அவர்கள் என்னைப் பின்பற்றுவர், மாறாக எண்ணினால் எனது எடுத்துக்காட்டைப் பிறர் பின்பற்ற மாட்டார்கள். ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் தமது பாதையைத் தாமே தேர்ந்தெடுக்க விட்டு விடுங்கள் என்பதே காந்தியடிகளுக்கு எனது அறிவுரை. கவிதா நிகழ்ச்சி நாட்டின் எங்கோ ஓர் மூலையில் நடந்த அரிய நிகழ்ச்சி அல்ல; இந்துக்களின் முன்னோர் அமைத்த சமய நெறியின் அடிப்படையே அதுதான்".[1]

---

1. பம்பாய் கிரானிக்கள், 1935, அக்டோபர், 16.

# (24)

# எனது திறமும் சிறப்பும் பொறுமையான உழைப்பு, அறிவாற்றல் ஆகியவற்றின் பயனே

*1935, டிசம்பர் 8 ஞாயிற்றுக்கிழமை, பம்பாய் பொராஸ் சாலையில் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அவர்கள் இயோலா மாநாட்டில் சமய மாற்றம் குறித்து அறிக்கை விடுத்ததற்குப் பின்னர் பம்பாயில் நடத்தப்பட்ட முதல் கூட்டம் இதுவே. சுமார் 10,000 தீண்டப்படாத மக்களுடன் 50 - 75 முஸ்லீம்களும் சில கிறித்தவர்களும் கூட்டத்தில் கலந்து கொண்டனர். டாக்டர் சோலங்கி கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். திரு. தேவராவ் நாயக்கின் அறிமுக உரையையடுத்து, திரு சுர்பா திப்னிஸ் உரை யாற்றினார். திரு தோண்டே, பாபு சாகேப் சகாராஸ்ட்ரபூதே ஆகியோரும் வந்திருந்தனர்.[1]*

டாக்டர் அம்பேத்கர் அவர்கள், விரைவில் தாம் நடத்தக் கருதி இருக்கும் மகர்களின் மாநாட்டில் சமய மாற்றம் குறித்து முதல் முடிவு எடுக்கப்படும் என்று கூறினார். பெரும்பாலும் டாக்டர் அம்பேத்கரைத் தாக்கியும், சிறுபான்மையோர் அவரது முடிவை ஆதரித்தும் பத்திரிகைகளில் கடிதங்கள் குவிந்து கொண்டிருக் கின்றன. அக்கடிதங்கள் குவியல் ஒன்றில், இந்து சமயத்தை விட்டு அகன்றால் டாக்டர் அம்பேத்கர் அடையாளம் இன்றி வெற்றாளாய் ஆகிவிடுவார் என்று அரைவேக்காட்டு சமூகச் சீர்திருத்தவாதி யொருவர் பொழிந்து தள்ளியிருந்த கடிதமும் ஒன்று இருந்தது. டாக்டர் அம்பேத்கரின் சிறப்பே அவர் தீண்டப்படாதவர் என்பதில்தான் என அவர் எழுதியிருந்தார். டாக்டர் அம்பேத்கர் தமக்கு இயல்பான அழுத்தமான பதிலில், தமது திறமும் சிறப்பும் பொறுமையான உழைப்பு, அறிவாற்றல் ஆகியவற்றின் பயனே என்று கூறி, தாம் இந்து சமயத்தை விட்டு விலகிய பின்னரும், இலக்கியம், அரசியல் ஆகிய துறைகளில் மேம்பட்டு நிற்போர்களுக்கிடையே,

---

1. 'ஜனதா' 1935, டிசம்பர், 15.

அவர்கள் பார்ப் பனரோ, பார்ப்பனரல்லாதவரோ எவரேயாயினும் அவர்களுக்கு மத்தியிலும் தமது தனித்தன்மை விளங்கச் சிறந்து நிற்க முடியும் என்று கூறினார். மேலும் அவர் "எந்தவொரு சமயத்திலாவது, தமது அடித்தட்டு மக்களுக்கு வள மேம்பாடு கிடைக்கும் என்றால் அந்தச் சமயத்தில் சேர்ந்து தனிப்பட்ட சிறப்பு ஏதுமில்லா வெற்றாளாய்த் தாம் இருக்க இருக்க வேண்டுமெனினும் அதைத் தயங்காமல் ஏற்க முனைவேன்" என்று கூறினார்.[1]

---

1. கீர், ப. 260.

# (25)

# எங்கு சென்றாலும் நமது நலன்களுக்காகப் போராட வேண்டியுள்ளது

மதமாற்றம் குறித்து இயோலாவில் வெளியிடப்பட்ட அறிக்கை இந்துக்களிடையே அதைக் குறித்த கருத்துக்களின் அலை ஒன்றையே உருவாக்கியுள்ளது. தீண்டப்படாத இந்து மக்களிடையே இவ் வறிக்கைக்கு ஆதரவு பெருகிவருகிறது. இவ்வறிக்கைக்கு ஆதரவு தெரிவிப்பதற்காக, 1936 ஜனவரி 11, 12 தேதிகளில் புனாவில், மராட்டிய மாநில தீண்டப்படாத சமுதாய இளைஞர்களின் மாநாடு ஏற்பாடு செய்யப் பட்டது. சென்னை மாநிலத்தின புகழ்பெற்ற தலைவர் பேரா. என். சிவராஜ் மாநாட்டிற்குத் தலைமை வகித்தார். ஆண்களும் பெண்களுமாகச் சுமார் பத்தாயிரம் பேர் இம்மாநாட்டில் கலந்து கொண்டனர். பிற இந்துக்களும், முஸ்லீம்களும், சீக்கியர்களும் கூட இம்மாநாட்டிற்கு வந்திருந்தனர்.[1]

பேரா. சிவராஜ் தமது தலைமை உரையில், ஒடுக்கப்பட்ட மக்கள் தீண்டாமையிலிருந்து விடுபடுவதற்கான ஒரே வழி, இந்து சமயத்திலிருந்து விலகுதலே; இதற்காக நாம் ஏற் கெனவே நிலவிவரும் வேறு சமயங்கள் ஒன்றில் சேர வேண்டு மென்பதில்லை. புதிய சமயம் ஒன்றைத் தொடங்கலாம்; அல்லது ஆரியர்கள் இந்நாட்டிற்கு வந்து சமயத்தையும் இழிவழக்குகள் பலவற்றையும் பரப்புதற்குப் பன்னெடுங் காலத்திற்கு முன்பாகவே இங்கு திராவிடர்கள் பின்பற்றி வந்த சமயத்தைப் புதுப்பிக்கலாம் என்று கூறினார்.

டாக்டர் சோலங்கியை அடுத்து டாக்டர் அம்பேத்கர் உரையாற்றினார். டாக்டர் அம்பேத்கர் தமது உரையில் சமய மாற்றத்தின் மூலம் தற்போதைய நரகத்திலிருந்து சமத்துவம் என்னும் சொர்க்கத்தை அடைந்து விடமுடியும் என்று தவறான நம்பிக்கை கொள்ள வேண்டா மென்று மக்களுக்கு எச்சரிக்கை விடுத்தார். வேறு

---

1. 1936, பிப்ரவரி, 8, 15 தேதிகளில் ஜனதா நாளிதழ் செய்திகள்.

எந்தப் புதிய சமயத்திற்கு மாறினாலும் தமது விடுதலைக்காகவும், சம உரிமைக்காகவும் அவர்கள் தொடர்ந்து போராட வேண்டியிருக்கும் என்றும் அவர் கூறினார். அவர் மேலும், "கிறித்தவமோ, இஸ்லாமோ, சீக்கியமோ அன்றிப் பிற எந்த மதத்திற்கோ நாம் மாறினாலும் நமது நலன்களைப் பெற நாம் தொடர்ந்து போராடியே தீரவேண்டும் எனும் உண்மையை நாமனைவரும் நன்கறிவோம். இஸ்லாத்தில் சேருவதன் மூலம் நாமனைவரும் நவாபுகள் ஆகிவிடுவோமென்றோ கிருத்துவத்தில் சேருவதன் மூலம் நாமனைவரும் போப்பாண்டவராகி விட முடியுமென்றோ கனவு காண்பது அறிவீனம். எங்கு சென்றாலும் நம்மைப் போராட்டமே அங்கும் எதிர் நோக்கியுள்ளது" என்று கூறினார். மேலும், இது வெறும் உணவுப் பிரச்சினையன்று என்பதால், இந்து சமயத்திற்குள் இருந்துகொண்டே சமத்துவத்திற்கான போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தி வெற்றி காண்பதற்கான சமரச வழி ஒருபோதும் நிறைவு பெறாது என்றும் கூறினார். நமது போராட்டத்தின் பின்னணியில் தெளிவான உயரிய இலக்கு உள்ளதென்பது இன்று ஐயத்திற்கிடமின்றித் தெளிவாகியுள்ளது; இல்லையெனில் பணம் கொடுத்து நம்மை மாற்றும் முயற்சிகள் தோன்றியிருக்க மாட்டாது - நிஜாம் அவர்கள் ஏழு கோடி ரூபாய் தர முன்வருவதாய் முரண்பட்ட தகவல்கள் தெரிவிக்கின்றன.* இறைவன் செயலன்றி இத்தகைய நிகழ்ச்சிகள் நடைபெறாதென்றும் அவர் மேலும் கூறினார். காந்தியடிகள் தொடங்கிய அரிசன நிதியைப் பற்றிக் குறிப்பிட்டு, தீண்டப்படாத மக்களைத் தொடர்ந்து இந்துக்களின் பிடியில் அடிமைகளாய் வைத்திருத்தலே அதன் நோக்கம் என்று கூறினார். மேல் சாதி இந்துக்கள் ஆதரித்தாலும் இடையூறு செய்தாலும் பொருட்படுத்தாமல் சமயம் மாறுவதான தமது நோக்கத்தில் உறுதியாய் நிற்க முடிவு செய்திருப்பதாய்த் தெரிவித்தார். கடவுளையே தம்முன் கொணர்ந்து நிறுத்தித் தமது முடிவை மாற்றிக்கொள்ளத் தூண்ட முற்பட்டாலும் இந்து சமயத்திலிருந்து வெளியேறும் முடிவைத் தாம் மாற்றிக்கொள்ளப் போவதில்லை என்றும் அவர் உறுதிகூறினார்.[1]

---

* தோண்டே, எம். வி. , 'ஜனதா' 1951 ஏப்ரல் 14 நாளிதழ்.

1. கீர், பக். 261 - 263.

# (26)

# இந்து சமயத்தைத் துறக்கத் தீர்மானித்துவிட்டார்

*1936ஆம் ஆண்டு மார்ச்சு இறுதியில், லாகூரைச் சேர்ந்த. ஜாட் - பாட் - தோடக் மண்டல் தமது மாநாட்டை மே மாத மத்திக்கு ஒத்தி வைப்பதாக டாக்டர் அம்பேத்கருக்குத் தெரிவித்தது. இந்து மதத்தை வெறுப்பதாய் அறிவித்துள்ள டாக்டர் அம்பேத்கர் போன்ற தலைவர் ஒருவரைத் தமது இயக்கத்தின் தலைவராய் மண்டல் தேர்ந்தெடுத்ததை எதிர்த்துப் பஞ்சாப் பத்திரிகைத் துறையிலும் பழைமைவாத மக்களிடையிலும் கிளர்ச்சி நிலவியது. இதன் விளைவாக, பாய்பிர மானந்து, டாக்டர் நராங், மகாத்மா ஹான்ஸ் ராஜ், ராஜா நரேந்திரநாத் போன்ற உறுதி வாய்ந்த தலைவர்கள் கூடி மண்டலுடன் தமக்குத் தொடர்பு இல்லையென்று ஒதுங்கிக்கொள்ள நேர்ந்தது. நிலைமையை டாக்டர் அம்பேத்கர் அவர்களுக்குச் சரியாக விளக்கும் பொருட்டு, சாந்தராம் அவர்களை வழிகாட்டியாய்க் கொண்ட மண்டல், அரிபகவான் அவர்களை பம்பாய்க்கு அனுப்பியது. அவர் ஏப்ரல் 9ஆம் தேதி பம்பாய் சென்று டாக்டர் அம்பேத்கர் அவர்களைச் சந்தித்து அப்போது அவர் தயாராய் வைத்திருந்த தலைமை உரையின் பகுதியை வாங்கிகொண்டு திரும்பினார்.*

*டாக்டர் பி.ஆர். அம்பேத்கரும் ஏப்ரல் 13,14 தேதிகளில் நடைபெற விருந்த சீக்கிய மிஷன் மாநாட்டில் கலந்து கொள்வதற்காக 1936 ஏப்ரல் 10ஆம் தேதி அமிர்தசரசுக்குப் புறப்பட்டுச் சென்று விட்டார். பஞ்சாப், கேரளா, உ.பி, ம. பி மாநிலங்களைச் சேர்ந்த சீக்கியர்களும் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களும் சீக்கியர் மாநாட்டில் பெருந்திரளாய்க் கலந்து கொண்டனர். ஓய்வுபெற்ற மாவட்ட நீதிபதி சர்தார் பகதூர் ஹுக்கும் சிங் மாநாட்டிற்குத் தலைமை வகித்தார்; வசாக்கா சிங் அவர்கள் மாநாட்டு வரவேற்புக் குழுவின் தலைவராய் இருந்தார். மாநாட்டுத் தலைவரும், வரவேற்புக் குழுத் தலைவரும் தங்கள் உரையில் தீவிரமான மிஷனரிப் பணிகள் வாயிலாய் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் நிலையை மேம்படுத்தலின் தேவை குறித்து வலியுறுத்தினர்.*

மாநாட்டில் உரையாற்றிய டாக்டர் அம்பேத்கர் அவர்கள் சீக்கியர்களிடையே நிலவும் சமத்துவக் கோட்பாட்டைப் பாராட்டி, தாம் இந்து சமயத்திலிருந்து விலகுவதாய்த் தீர்மானித்துவிட்ட போதிலும், எங்கு சேர்வதென முடிவு செய்யவில்லை எனக் குறிப்பிட்டார்.

மாநாட்டில் பேசிய மற்றொரு சொற்பொழிவாளர், சர் ஜோகேந்திர சிங் அவர்கள் செயலார்வப் பணியின் தேவையை வலியுறுத்தி, இந் நோக்கத்திற்காக அறக்கட்டளையொன்று நிறுவவேண்டிய அவசியத்தையும் வலியுறுத்தி நிதியுதவுமாறு வேண்டுகோள் விடுத்தார். கேரளத்திலுள்ள திய்யா சமூகத்தினரைச் சேர்ந்த ஐந்து முக்கிய ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் டாக்டர் குட்டீர் அவர்கள் தலைமையிலும், மற்றும் உபி., ம. பி. மாநிலங்களைச் சேர்ந்த ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் ஐம்பது பேரும் சீக்கிய மதத்தில் சேர்ந்தது, இம்மாநாட்டின் சிறப்புக் கூறாகும்.[1]

---

1. கீர், ப. 267.

# (27)

# வெற்றிக்காக நான் எனது மனச்சான்றைத் துறந்து விட முடியாது

*"1936, மே முதல் தேதியன்று காலை டாக்டர். பி. ஆர். அம்பேத்கர் அவர்கள் வார்தா வந்தடைந்த போது, ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் அவரை மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்றனர். டாக்டர் அம்பேத்கர் வார்தாவில் தங்கியிருந்த போது முன்னெச்சரிக்கையான பாதுகாப்புச் செயல்பாடுகள் யாவற்றையும் 'நிர்ப்பய தருண் சங்கம்' முழுமையாய்க் கவனித்துக் கொண்டது. டாக்டர் அம்பேத்கர் அவர்கள் நால்வடிக்கும் சென்று பார்வையிட்டார். முற்பகல் 11. 30 மணியளவில், ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் தலைவர்களான புருசோத்தம கார்படே, சங்கர் ராவ் சோனாவானே, கோமாஜி தெம்பாரே ஆகியோர் டாக்டர் அம்பேத்கரைச் சந்தித்துச் சமய மாற்றம் குறித்துக் கருத்துரையாடினர். அவர்களிடம் ஐயந் திரிபறத் தெளிவான பாங்கில் டாக்டர் அம்பேத்கர் அவர்கள் தெரிவித்த கருத்துக்கள் வருமாறு:*

*"நான் இதுவரை எவரிடமும் இஸ்லாத்திற்கோ, கிறித்து வத்திற்கோ ஆதரவு தேடவில்லை. வேறு எவரேனும் தனது சொந்தப் பொறுப்பில் இஸ்லாத்திற்கோ அன்றிப் பிற சமயமொன்றுக்கோ ஆதரவு தேடுவா ராயின் அவர் ஏமாற்றப்படுவது உறுதி என்பதையும், அதற்கு நான் பொறுப்பாக மாட்டேன் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். சமய மாற்றம் குறித்து நான் அறிக்கை விடுத்தது மெய்தான்; ஆனால் இது வரை குறிப்பிட்ட எந்தவொரு சமயத்திலும் சேருமாறு நான் எவருக்கும் கூறியதில்லை. அதுவரை நாமனைவரும் சமயமாற்றத்தின் தேவை குறித்துத் தொடர்ந்து பிரசாரம் செய்து வருதல் அவசியம்; அதே சமயம் எந்தவொரு குறிப்பிட்ட சமயத் திற்காவும் பிரசாரம் செய்தலாகாது. நான் எப்போது அறிவிக் கின்றேனோ அப்போதுதான் நாம் ஏழு கோடி மக்களும் ஒட்டு மொத்தமாக சமய மாற்றம் செய்துகொள்ள வேண்டும்."*

டாக்டர் அம்பேத்கர் பின்னர் பல்வேறு தீண்டப்படாத சமூகத் தலைவர்களுடனும் தனிப்பட்ட முறையில் உரையாடினார்.[1]

டாக்டர் அம்பேத்கரின் வார்தா நிகழ்ச்சிகள் குறித்து, கீர் அவர்களின் தொகுப்புரை வருமாறு:

இந்தக் காலகட்டத்தில் டாக்டர் அம்பேத்கரின் செயல்பாடு களால் காந்திய வட்டமும் கலக்கமடைந்தது. எனவே சேத் வால்ச்சந்து ஹீராசந்து அவர்கள் காந்தியடிகளைச் சந்திக்குமாறு டாக்டர் அம்பேத்கர் அவர்களை வற்புறுத்தினார். வால்ச்சந்துடன் டாக்டர் அம்பேத்கர் முதலில் வார்தாவிலும், அடுத்து சேகோவனிலும்* காந்தியடிகளைச் சந்தித்தார், ஆனால் சிக்கலின் தீர்வு குறித்துக் கருத்தொற்றுமை உருவாகவில்லை. இந்தியாவிலிருந்தும் இலண்டனி லிருந்தும் அம்பேத்கர் மீது பல்வேறு தாக்கங்கள் செயல்படுவதால் அம்பேத்கர் விடுக்கும் அச்சுறுத்தல்களே பூசல் பெரிதாய் உரு வெடுத்துள்ளதற்குக் காரணம் என்று காந்தியடிகள் தவறாய்க் கருதியிருந்தார்**

சேகோவனிலிருந்து திரும்பும் வழியில் வார்தா நிலையத்தில் டாக்டர் அம்பேத்கரை ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் உற்சாகத் துடன் வரவேற்றனர்.

காந்தியை ஆதரிக்கும் கோடீசுவரர்களான வால்சந்து ஹீராசந்தும், ஜம்னாலால் பஜாஜும், டாக்டர் அம்பேத்கரிடம், அவர் ஏன் காந்திய இயக்கத்தில் சேர்ந்து கொண்டு அங்கு குவிந்திருக்கும் வரம்பற்ற வளங்களை ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் மேம்பாட்டுக் காகப் பயன்படுத்திக் கொள்ளக்கூடாது என வினவினர். காந்தி யடிகளுடன் பலமுனைகளில் தாம் கருத்து வேறுபாடுவதாய் அவர்களிடம் டாக்டர் அம்பேத்கர் கூறினார். இதைக் கேட்ட அவர்கள், நேருவைப் போன்றே காந்தியுடன் தமக்குள்ள

1. 'அன்றாட மகாராஷ்ட்டிரா' நாக்பூர் நாளிதழ் தேதி 1936, மே 6 மீட்டச்சு: கொசேர், ப. 296.

* பின்னாளில் சேவாகிராமம் என அழைக்கப்படலாயிற்று.

** எம். கே. காந்தி "சர்தார் வல்லபாய் படேலுக்குக்கு எழுதிய கடிதங்கள்" ப. 115.

வேறுபாடுகளை ஒருபுறம் ஒதுக்கிவைத்துவிட்டு காந்தியுடன் இணைந்து செயல்படலாமே என்று சுட்டிக்காட்டினார்கள். பதிலுக்கு டாக்டர் அம்பேத்கர், நேருவின் எடுத்துக்காட்டு தமக்குப் பொருந்தாது என்றும், வெற்றிக்காகத் தமது மனச் சான்றைத் துறக்கத் தம்மால் இயலாதென்றும் கூறினார்.

டாக்டர் அம்பேத்கரை வரவேற்க ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் பெருந்திரளாய்க் கூடியிருந்ததைக் கண்ட அந்தக் கோடீசுவரர்கள், அரிசன முன்னேற்றத்காகத் தாம் பெருமளவில் பணம் செலவு செய்த போதிலும் அவர்கள் தம்மிடம் முறையாக நடந்து கொள்ளவில்லை யென்று குறை கூறினார்கள். டாக்டர் அம்பேத்கர் தமக்கும் அவர் களுக்கிடையிலான வேறுபாடு தாய்க்கும் தாதிக்கும் இடையிலான வேறுபாட்டைப் போன்றது என்று கூறினார்.[1]"

---

1. கீர், பக். 268 - 269.

# (28)

# உங்கள் மேம்பாட்டுக்கும் முன்னேற்றத்திற்கும் சமய மாற்றம் அவசியமே

தாணா மாவட்டத்தின் கிழக்கு, தெற்குப் பகுதிகளைச் சேர்ந்த தீண்டப்படாதவர்களின் பெரும் மாநாடு ஒன்று 1936 மே 17 ஞாயிற்றுக் கிழமையன்று கல்யாண் எனும் இடத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. சமய மாற்றம் குறித்த அறிவிப்பை வெளிப்படையாய்த் தெரிவிப்பதற்காக டாக்டர் அம்பேத்கர் அவர்களின் தலைமையில் இம்மாநாடு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. டாக்டர் அம்பேத்கர் அவர்களை வரவேற்பதற்காக, நூறு, நூற்றைம்பது கிராமங்களைச் சேர்ந்த தீண்டப்படாத மக்கள், புகைவண்டி நிலையத்தில் திரண்டிருந்தார்கள். அவர் கல்யாண் புகை வண்டி நிலையத்தைப் பிற்பகல் 3 மணிக்கு வந்தடைந்த போது, பல்வேறு தலைவர்களும் அவரை வாழ்த்தி வரவேற்றனர்.

புகை வண்டி நிலையத்திற்கு வெளியே, "அம்பேத்கர் ஜிந்தா பாத், தோடேதின் மே பீம்ராஜ்" எனப் பெருங்குரலில் பெருவாரியான மக்கள் முழங்கினர். ஊர்வலத்தில் சுமார் நான்காயிரம் தீண்டப்படாத மக்கள் கலந்துகொண்டனர். பாண்டு வாத்தியங்களும், பல்வேறு காட்சிகளும் ஊர்வலத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. தீண்டப்படாத, வாயற்ற மக்களாய் கருதப்பட்டு வந்த அம்மக்களிடையே அன்பும் தன்மதிப்பும் மேலோங்கிக் காணப்பட்டன.

தீண்டப்படாத மக்களுக்குச் சமய மாற்றத்தையன்றி மாற்று வழியேதும் கிடையாது என்பதை டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் விளக்கினார்.

- பதிப்பாசிரியர்கள்

சமய மாற்றம் குறித்த எனது கருத்துக்களைக் கேட்பதற்காக நீங்களெல்லாம் இங்கே கூடியிருக்கின்றீர்கள். எனவே, அப்பொருளைக்

குறித்து விரிவான விளக்கம் அளித்தல் அவசியம் என்று நான் கருதுகிறேன்.

"நாம் ஏன் சமயம் மாற வேண்டும்?" எனும் வினாவைச் சிலர் அடிக்கடி எழுப்பி வருகின்றனர். "நாம் ஏன் சமயம் மாறக்கூடாது?" என்று எதிர் வினா எழுப்பத்தான் எனக்கு உந்துதல் தோன்றுகிறது.

சமய மாற்றம் ஏன் தேவை என்பதைச் சுட்டும் வகையில் எனது வாழ்க்கை நிகழ்ச்சிகள் சிலவற்றை உங்கள்முன் எடுத்துரைக்க விரும்புகிறேன். சமய மாற்றம் எனும் பாதையை நான் ஏன் தேர்ந்தேடுத்தேன் என்பதை உங்களுக்கு எளிதில் உணர்த்த அது உதவும். மேலும் உங்களில் பலர் வாழ்க்கையிலும் அத்தகைய நிகழ்ச்சிகள் நடந்திருக்கும் என்பது உறுதி.

நான்கைந்து நிகழ்ச்சிகள் எனது உள்ளத்தில் ஆழமான வடுக்களை விளைவித்துள்ளன; இந்து சமயத்தைத் துறந்து வேறு ஏதாவது சமயத்திற்கு மாற வேண்டும் என்ற ஆழமான உணர்வை அவை தோற்றுவித்தன. அவற்றுள் இரண்டு மூன்று நிகழ்ச்சிகளை இன்று உங்களிடையே எடுத்துரைக்க விரும்புகிறேன்.

இந்தூர் மாவட்டம் மோப் எனும் ஊரில் எனது தந்தை போர்ப்படையில் பணியாற்றிக் கொண்டிருந்தபோது நான் பிறந்தேன். அப்போது எனது தந்தை சுபேதாராக இருந்தார். படை வீரர்கள் குடியிருப்பில் நாங்கள் அப்போது வசித்து வந்தோமாதலால் எங்களுக்கு வெளியுலகத் தொடர்பு அவ்வளவாகக் கிடையாது. தீண்டாமையை அச்சமயத்தில் நான் அறிந்திலேன். எனது தந்தை பணியிலிருந்து ஓய்வு பெற்று ஓய்வூதியத்தில் வாழத் தொடங்கிய போது நாங்கள் சாதாராவுக்குக் குடிபெயர்ந்தோம். எனக்கு ஐந்து வயதான போது எனது தாய் காலமாகிவிட்டார். சாதாரா மாவட்டம் கோரேகானில் பஞ்சம் தலைவிரித்தாடியபோது அதை சமாளிக்க அரசு தொடங்கிய பஞ்ச நிவாரணப் பணித் திட்டத்தில் எனது தந்தைக்கு வேலை கிடைத்தது. அங்கு குளம் வெட்டும் பணி தொடங்கப்பட்டு, குளம் வெட்டும் தொழிலாளர்களுக்கு ஊதியம் வழங்குகின்ற பணியில் எனது தந்தை சேர்ந்திருந்தார். கோரேகான் தொழிலாளர் குடியிருப்பில் எனது தந்தை தங்க நேர்ந்ததால் நாங்கள், குழந்தைகள் நால்வரும், சாதாராவில் தனித்துவிடப்பட்டோம். அங்கு

நாங்கள் நாலைந்து ஆண்டுகள் சோறு சாப்பிட்டு மட்டுமே வாழ்ந்து கொண்டிருந்தோம். சாதாராவிற்கு வந்த பின்னர்தான் தீண்டாமை என்பதை நாங்கள் அனுபவிக்கத் தொடங்கினோம். எனக்கு முதல் தாக்கமாய் அமைந்தது நாவிதர் எவரும் எங்களுக்கு முடி வெட்ட வராமையே. இது எங்களை மிகப் பாதித்தது. இப்போதும் வாழ்ந்து கொண்டிருக்கும் எனது அக்காதான் வீட்டுக்கு எதிரேயிருந்த திட்டு ஒன்றில் என்னை அமர்த்தி எனக்கு முடிவெட்டிவிடுவார். ஊரில் ஏராளமான நாவிதர்கள் இருந்தும் ஏன் ஒருவரும் எனக்கு முடி வெட்ட முன்வரவில்லை யென்பது எனக்குப் புரியாத புதிராகவே இருந்தது.

இரண்டாவது நிகழ்ச்சியும் இதே காலகட்டத்தில் நிகழ்ந்தது தான். எனது தந்தை கோரேகானில் இருந்த போது எங்களுக்கு அடிக்கடி கடிதம் எழுதுவார். ஒரு கடிதத்தில் எங்களைக் கோரேகானுக்கு வருமாறு அழைத்திருந்தார். நான் அதுவரை புகைவண்டியையே பார்த்ததில்லையாகையால், கோரேகானுக்குப் புகை வண்டியில் செல்லப்போகிறோம் எனும் எண்ணம் எங்களுக்குக் குதூகலமூட்டியது. எங்களுக்குத் தந்தை அனுப்பிய பணத்தில் புதிய ஆடைகள் தைத்து அணிந்து கொண்டு எனது அண்ணன், அக்கா மகள், நான் ஆகிய மூவரும் கோரேகானுக்குக் கிளம்பினோம்.

எங்கள் வருகை குறித்துத் தந்தைக்கு ஓர் கடிதம் எழுதியிருந்தோம். ஆனால் எங்கள் பணியாளின் கவனக்குறைவாலோ பிழையாலோ அக்கடிதம் போய்ச் சேரவில்லை. இதையறியாமல், எனது தந்தை புகை வண்டி நிலையத்திற்கு உறுதியாய் வண்டியனுப்பியிருப்பார் என்று நம்பிக்கொண்டு போனோம். வண்டியிலிருந்து இறங்கியதும் பணியாளர் எவருமே தென்படாமையால் நாங்கள் மிக அல்லலுற்றோம்.

விரைவில் பிற பயணிகள் யாவரும் புறப்பட்டுச் செல்ல பயணியர் மேடையில் நாங்கள் மட்டும் தனித்து நின்றோம். இவ்வாறு முக்கால் மணி நேரம் பயனின்றிக் காத்துக் கொண்டிருந்தோம். நிலைய அதிகாரி நாங்கள் யாரைக் காணப்போகிறோம்; எங்கள் சாதி என்ன; நாங்கள் எங்கு செல்ல விரும்புகிறோம் என்றெல்லாம் விசாரித்தார். நாங்கள் மகர் சாதியைச் சேர்ந்தவர்கள் என்று அவரிடம் கூறினோம். இதைக் கேட்டதுமே அவர் அதிர்ச்சியடைந்து ஐந்து எட்டுகள் பின்வாங்கினார். முதலில் எங்கள் நல்லாடைகளைப் பார்த்து நாங்கள் வசதியானதோர் குடும்பத்துப் பிள்ளைகள் என எண்ணிக் கொண்டார் போலும். எனினும் எங்களுக்காகக் கட்டை வண்டி

ஒன்று ஏற்பாடு செய்வதாய் உறுதியளித்தார். ஆனால் நாங்கள் மகர் சாதியைச் சேர்ந்தவர்கள் என்பதால் வண்டிக்காரன் எவனும் எங்களுக்காக வண்டியோட்ட முன்வரவில்லை. மாலை நேரம் 6 அல்லது 7 மணியை நெருங்கிக்கொண்டிருந்தது. இறுதியில் வண்டிக் காரன் ஒருவன் தனது வண்டியில் நாங்கள் பயணம் செய்வதற்கு இணங்கினான். ஆனால் எங்களுக்காக அவன் வண்டியோட்ட மாட்டானென்று தொடக்கத்திலேயே தெளிவாகக் கூறி விட்டான்.

நாங்கள் ஏற்கெனவே படைவீரர் பகுதியில் வாழ்ந்து வந்தவர்கள். ஆதலால் வண்டியோட்டுதல் எனக்கொன்றும் சிரமமாய்த் தோன்ற வில்லை. எனவே, நாங்கள் வண்டியோட்ட ஒப்புக் கொண்டதும் அவன் தனது வண்டியைக் கொண்டு வர நாங்கள் அதில் ஏறிக் கொண்டு கோரேகானுக்குப் புறப்பட்டோம்.

ஊருக்கு வெளிப்புறத்தை அடைந்ததும் ஓர் ஓடை தென் பட்டது. அதை விட்டால் வேறெங்கும் தண்ணீர் கிடைக்காது என்று கூறிய வண்டிக்காரன் அங்கேயே எங்கள் உணவை முடித்துக் கொள்ளுமாறு கூறினான். அவ்வாறே நாங்கள் வண்டியை விட்டிறங்கி எங்கள் உணவை சாப்பிட்டு முடித்தோம். ஓடை நீர் கலங்கலாயும் சாணி கலந்தும் இருந்தது. இதற்கிடையில் வண்டிக்காரன் வேறோ ரிடத்துக்குச் சென்று தனது உணவை முடித்துக்கொண்டு வந்து சேர்ந்தான்.

மாலை இருட்டு மேலும் கறுக்கத் தொடங்கியதால் வண்டிக் காரனும் வண்டியில் ஏறி எங்களுக்கருகே அமர்ந்துகொண்டான். விரைவில் நன்கு இருட்டிவிட்டது; பல மைல் தூரத்திற்கு மினுக்கும் விளக்குகளோ மனித நடமாட்டமோ ஏதுமில்லை. அச்சம், இருள், தனிமை காரணமாக நாங்கள் அழத் தொடங்கினோம். நள்ளிரவும் கடந்து விட்டமையால் நாங்கள் மிக அச்சமடைந்தோம். எங்கள் அச்சத்தின் உச்சமாக நாங்கள் கோரேகானுக்குப் போய்ச் சேரவே மாட்டோமென்று கருதலானோம். நக்கா எனப்படும் சுங்கச் சாவடியை நெருங்கியவுடன் நாங்கள் வண்டியிலிருந்து குதித்து விட்டோம். சுங்க வசூல்காரரிடம் எங்களுக்கு அக்கம் பக்கத்தில் உணவு ஏதாவது கிடைக்குமா என்று விசாரித்தோம். எனக்குப் பாரசீக மொழி நன்கு தெரியுமாதலால், எவ்வித சிரமமும் இன்றி அவருடன் பாரசீக மொழியில் பேசினேன். அவர் மிகவும் கறாராய்ப் பேசி அங்கிருந்த குன்றுகளைச் சுட்டிக்காட்டினார். எப்படியோ ஓடைக் கரையில் அந்த இரவைக் கழித்துவிட்டு மீண்டும் அதிகாலையில்

எங்கள் கோரேகான் பயணத்தைத் தொடங்கினோம். இறுதியில் ஒருவாறாக அன்று பிற்பகல் முற்றிலும் கழித்து அரையுயிராய்க் கோரேகான் சென்றடைந்தோம்.

மூன்றாம் நிகழ்ச்சி நான் பரோடா சமஸ்தானத்தில் பணியாற்றிய காலத்தைச் சேர்ந்தது. நான் பரோடா சமஸ்தானம் அளித்திருந்த உதவித் தொகை கொண்டு வெளிநாடு சென்று கல்வி பெற்று வந்திருந்தேன். எனவே, இங்கிலாந்திலிருந்து திரும்பிய பின்னர், ஒப்பந்தத்தின்படி பரோடா தர்பாரில் பணியாற்றுவதற்காக வந்து சேர்ந்தேன். ஆனால் நான் வசிப்பதற்கு பரோடாவில் வீடு ஏதும் கிடைக்கவில்லை. பரோடா நகரத்திலிருந்து இந்துக்களோ முஸ்லீம்களோ எவருமே எனக்கு வீடு வாடகைக்குத் தர முன்வரவில்லை. எந்தப் பகுதியிலும் எனக்கு வீடு கிடைக்காததால் நான் பார்சிகளின் தர்ம சாலையொன்றில் இடம் பெறத் தீர்மானித்தேன். நான் அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் தங்கியிருந்த காலத்தில் அழகிய நிறம் பெற்றுத் திரும்பியிருந்தேன். எனவே அடல்ஜி சரப்ஜி என்ற பார்சி பெயரைச் சொல்லிக்கொண்டு தர்மசாலையில் வசிக்கத் தொடங்கினேன். பார்சி மேலாளர் இரண்டு ரூபாய் மாத வாடகைக்கு எனக்கு அறை தரச் சம்மதித்தார். விரைவிலேயே, மேதகு பரோடா மன்னர் கெய்க்வாடு அவர்கள் மகர் பையன் ஒருவனைத் தமது தர்பாரில் பணிக்கு அமர்த்தியுள்ளார் எனும் செய்தி பரவவே, தொடர்ந்து நான் பொய்யான பெயரில் பார்சி தர்ம சாலையில் வசித்து வரும் ரகசியமும் வெளியாகி விட்டது.

நான் அங்கு சேர்ந்த மறுநாளே காலை உணவருந்தி விட்டுப் பணிக்குச் செல்லப்புறப்பட்டுக் கொண்டிருந்தபோது, பதினைந்திருபது பேர் கொண்ட, குண்டாந்தடியேந்திய பார்சிகளின் கூட்டம் ஒன்று என்னைச் சூழ்ந்துகொண்டு நான் யாரென்பதைக் கூறாவிடில் என்னைக் கொன்றுவிடுவதாய் மிரட்டினர். நான் ஒரு இந்து என்று கூறிய பதில் அவர்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை. சினமடைந்த அக்கும்பல் என்னைப் பலவாறு வசைபொழிந்து உடனடியாய் அறையைக் காலி செய்யக் கோரினர். எட்டு மணி நேரம் அனுமதி தருமாறு நான் பணிவுடன் கேட்டுக்கொண்டேன். அன்று முழுதும் எங்கு தேடியும் எனக்கு ஒண்ட ஓர் இடமும் கிடைக்கவில்லை. எனது நண்பர்களை அணுகினேன்; அவர்களும் ஏதேதோ சாக்குபோக்குச் சொல்லி எனக்கு இடமளிக்க இயலா நிலையைத் தெரிவித்தனர்.

ஏமாற்றமும் சோர்வும் என்னைச் சூழ, 'இனியென்ன செய்வது?' என்ற வினா எழுந்தது. என்னால் முடிவு ஏதும் எடுக்க இயலவில்லை. சோர்வும் விரக்தியும் மேலிட ஓரிடத்தில் அமைதியாக அமர்ந்து கண்ணீர் விட்டு அழுதேன். வீடு கிடைக்கும் என்ற நம்பிக்கையை அறவே இழந்து, வேலையை விட்டு நீங்குதலன்றி வேறு வழியேதும் இல்லாமையால், பணி துறப்புக் கடிதத்தைக் கொடுத்துவிட்டு அன்றிரவே பம்பாய்க்குப் புகைவண்டி ஏறினேன்.

எனது வாழ்க்கையில் நான் சந்தித்த இத்தகைய கொடுமையான நிகழ்ச்சிகளையும் இன்னல்களையும் உங்களில் பலரது வாழ்க்கை யிலும் சந்தித்திருப்பீர்கள். இவ்வாறு மனித நேயமற்ற, மதிக்காத, மனிதராகவே உங்களை நடத்ததும் ஒரு சமூகத்தில் வாழ்வதில் என்ன பொருள் இருக்கிறது என்று நான் உங்களை வினவ விரும்புகிறேன். மாறாக அவர்களோ உங்களை இழித்தும் பழித்தும் நடத்துவதுடன் உங்களுக்குத் தீங்கிழைக்கும் வாய்ப்புகள் எதையும் தவற விடுவதில்லை. சிறிதேனும் தன்மதிப்பும் கண்ணியமும் உள்ள மனிதரெவரும் இத்தகைய பேய் மதம் ஒன்றில் தொடர்ந்து வாழ மனம் ஒப்ப மாட்டார்கள். அடிமைப் பிழைப்பை நடத்தி வாழ விரும்பும் இழிஞர்கள் மட்டுமே இம்மதத்தில் தொடர்ந்து வாழமுடியும்.

எனது தந்தையும் முன்னோர்களும் பக்தியில் சிறந்த இந்துக்களா யிருந்தும், இந்து சமயம் சுமத்திய கட்டுப்பாடுகளால், அவர்களால் கல்வியேதும் பெற இயலாமற் போயிற்று, ஆயுதம் ஏந்தவும் அம்மதம் அவர்களை அனுமதிக்கவில்லை. இந்து சமயத்தின்கீழ் சொத்து ஏதும் சேர்ப்பதும் அவர்களால் இயலாததாகும். இந்து சமயத்தில் பற்றோடு வாழ்ந்த எனது தந்தையால் இவை எதையும் பெற இயலவில்லை.

நான் சமஸ்கிருதம் கற்க விரும்பினேன். ஆனால் பாழும் இந்து சமயம் சுமத்திய கட்டுப்பாடுகளால், அதுவும் இயலாது போயிற்று. ஆனால் இப்போதோ கல்வி, சொத்து இவை பெறவும், ஆயுதம் ஏந்தவும் வாய்ப்பு பெற்றுள்ளேன்.

உங்கள் முன்னோர்களை எல்லாம் இழிவுறுத்திக் கேவலமான வாழ்க்கையில் அவர்களையிருத்தி, அவர்கள் மீது பல சிறுமைகளைச் சுமத்தி வறுமையிலும் அறியாமையிலும் அவர்களை ஆழ்த்திய பொல்லாப் புன்மைச் சமயத்தின் பிடியில் இனியும் நீங்கள் தொடர்ந்து

இருக்கத்தான் வேண்டுமா? உங்கள் முன்னோர்களைப் போன்றே நீங்களும் தாழ்ச்சியும், இழிவும், வறுமையும், சிறுமையும் நிறைந்த வாழ்க்கையையேற்க இசைந்தாலும் தொடர்ந்து வெறுக்கப்பட்டே வருவீர்கள். உங்களை மதிக்கவோ, உங்களுக்கு உதவவோ எவரும் முன்வர மாட்டார்கள்.

இத்தகைய காரணங்களால் சமயமாற்றம் என்பது இப்போது, நமக்கு முக்கியமான தேவையாகிறது. நீங்கள் இந்து சமயத்திலேயே தொடர்ந்து இருக்க விரும்பினால், அடிமை நிலைக்கு மேல் சற்றும் உயர முடியாது. தனிப்பட்ட முறையில் எனக்கேதும் தடைகளில்லை. தீண்டப்படாதவனாகவே தொடர்ந்து இருக்க நான் இணங்கினால், இந்து ஒருவர் அடையக் கூடிய எந்த நிலையையும் நானும் அடைதல் கூடும். நான் இந்துவாகவே இருப்பினும், இல்லையெனினும் பெரிதாக ஒன்றும் மாற்றமிராது. உயர்நீதிமன்ற நடுவராகவோ, சட்டமன்ற உறுப்பினராகவோ, ஏன் ஓர் அமைச்ச ராகவோ கூட நான் ஆக முடியும். ஆனால், உங்கள் அனைவரின் மேம்பாட்டிற்காகவும் முன்னேற்றத்திற்காவும்தான் சமய மாற்றம் மிகவும் தேவையென்று எனக்குத் தோன்றுகிறது.

இழிவும் தாழ்ச்சியும் மிக்க இந்த வாழ்க்கையிலிருந்து நீங்கள் விடுபட்டுப் பொன்னொளிர் வாழ்க்கையை அமைத்துக்கொள்ள வேண்டின் சமய மாற்றம் என்பது தவிர்க்கவியலாத் தேவையாகும். இதனால் உங்கள் நிலையை உயர்த்திக்கொள்ள உறுதுணையும் ஒத்து ழைப்பும் நல்கும் நண்பர்களும் ஆதரவாளர்களும் உங்களுக்குக் கிடைப்பார்கள் என்று நம்புகிறேன். உங்கள் வாழ்க்கை நிலையை மேம்படுத்த நான் சமய மாற்றத்தைத் தொடங்கியாக வேண்டும். இதில் எனது தனி நலன் குறித்தோ முன்னேற்றம் குறித்தோ ஒரு சிறிதும் கவலை கொள்ளவில்லை. இன்றைய காலகட்டத்தில் எனது செயல்பாடுகளின் நோக்கம் முற்றிலும் உங்கள் மேம்பாடும் நலன் களும் மட்டுமே.

நீங்கள் என்னைக் கடவுள் போன்று நம்பிக்கையோடு எதிர் நோக்குகிறீர்கள்; ஆனால் நானோ கடவுள் அல்லன். நானும் உங்களைப் போன்றதோர் மானிடன்தான். நான் எவ்வாறு உதவ வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்களோ, அத்தகைய உதவியை உங்களுக்கு நல்கத் தயாராயிருக்கிறேன். இன்றைய, நம்பிக்கையற்ற,

இழிநிலையிலிருந்து உங்களை விடுவிக்க வேண்டும் என்று உறுதி பூண்டுள்ளேன். எனது தனிப்பட்ட நலன்கள் எதற்காகவும் நான் இந்தச் செயல்பாட்டை மேற்கொள்ளவில்லை. உங்கள் மேம்பாட்டுக் காகவும் உங்கள் வாழ்க்கையை பயனுள்ளதாகவும், பொருளுள்ள தாகவும் மாற்றுதற்பொருட்டு நான் தொடர்ந்து போராடிக் கொண்டு தான் இருப்பேன். நீங்களும் உங்கள் பொறுப்பையுணர்ந்து, நான் காட்டும் பாதையைப் பின்பற்ற வேண்டும். நீங்கள் என்னைச் சிரத்தை யுடன் பின்பற்றினால் உங்கள் குறிக்கோளை அடைவதொன்றும் அரிதன்று.[1]

---

1. மராத்தி இதழ் 'ஜனதா'வில்,1936, மே 23ஆம் தேதி வெளியிடப்பட்ட உரையின் மொழிபெயர்ப்பு.

# (29)

# விடுதலைக்கு என்ன வழி?

*1935 அக்டோபர் 13ஆம் நாள் மகாராஷ்டிர மாநிலத்தில் உள்ள நாசிக் மாவட்டத்தில் இயோலாவில் டாக்டர் அம்பேத்கர் ஒரு பிரகடனம் செய்தார். "நான் ஓர் இந்துவாக சாகப் போவதில்லை என்று உங்களுக்கு உறுதி மொழி தருகிறேன்." இந்தப் பிரகடனத்தின் பின்னணியில் அவர் பம்பாய் தாதரில் 1936 மே 30 - 31 தேதிகளில் ஒரு மாநாட்டைக் கூட்டினார்; தமது மத மாற்ற இயக்கத்துக்குத் தம்முடைய மக்கள் எந்த அளவு ஆதரவு தருகிறார்கள் என்பதை அறியும் ஒரே நோக்கத்தோடு இந்த மாநாட்டைக் கூட்டினார். இதில் 35,000 தீண்டத்தகாத மகர்கள் கலந்துக் கொண்டார்கள்.*

*மாநாட்டு பந்தலில் கீழ்க்கண்ட முழக்கங்கள் மக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டு இருந்தன.*

- *மதம் என்பது மனிதனுக்காக; மனிதன் மதத்திற்காக அல்ல.*
- *உங்களுக்கு மனிதத் தன்மை வர வேண்டுமானால் நீங்கள் மதம் மாறுங்கள்.*
- *அமைப்பு ரீதியாகத் திரள வேண்டுமானால் மதம் மாறுங்கள்.*
- *வலிமை பெற வேண்டுமானால் மதம் மாறுங்கள்.*
- *விடுதலை பெற வேண்டுமானால் மதம் மாறுங்கள்.*
- *உங்கள் குடும்ப வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக விளங்க வேண்டுமானால் மதம் மாறுங்கள்.*
- *உங்களை மனிதர்களாக நடத்தாத ஒரு மதத்தில் நீங்கள் ஏன் நீடிக்க வேண்டும்?*

- கோயில்களுக்குள் நுழைய உங்களுக்கு அனுமதி மறுக்கும் ஒரு மதத்தில் நீங்கள் ஏன் நீடிக்க வேண்டும்?

- உங்களை தண்ணீர் குடிக்க அனுமதிக்காத ஒரு மதத்தில் நீங்கள் ஏன் நீடிக்க வேண்டும்?

- உங்களுக்குக் கல்வி மறுக்கும் மதத்தில் நீங்கள் ஏன் நீடிக்க வேண்டும்?

- ஒவ்வொரு கட்டத்திலும் உங்களை அவமதிக்கும் ஒரு மதத்தில் நீங்கள் ஏன் நீடிக்க வேண்டும்?

- உங்கள் வேலை வாய்ப்புக்குத் தடையாக நிற்கும் ஒரு மதத்தில் நீங்கள் ஏன் நீடிக்க வேண்டும்?

- மனிதனுக்கு மனிதன் சரியான உறவுகள் கொள்வதைத் தடுக்கின்ற மதம் மதமே அல்ல; அது அடக்கு முறையின் அடையாளம்.

- மனித குலத்தை ஒரு சீராக மதிப்பதை மத விரோதமாகக் கருதும் மதம் மதமே அல்ல. அது ஒரு மன நோய்.

- புனிதமற்ற விலங்குகளைத் தொடுவதை அனுமதிக்கும் ஒரு மதம் அதே சமயம் மனிதனுக்கு மனிதன் தொடுதல் கூடாது என்று தடுக்குமானால் அது மதம் அல்ல; மடமை.

- ஒரு வகுப்புக்குக் கல்வி உரிமை இல்லை என்றும், அவ்வகுப்பு செல்வம் சேர்க்கக் கூடாது என்றும், ஆயுதம் ஏந்தக் கூடாது என்றும் தடை செய்யும் ஒரு மதம் மதமே அல்ல. மனித வாழ்வையே கேலிக் கூத்தாக்கும் ஒரு மார்க்கம்.

- கல்வி அறிவற்றவன் அதே நிலையில் இருக்க வேண்டுமென்றும் ஏழை ஏழையாகவே நீடிக்க

வேண்டுமென்றும் வலியுறுத்துகின்ற மதம் மதமே அல்ல; அது ஒரு தண்டனை.

❖ கடவுள் எங்கும் உள்ளார் என்று உபதேசம் செய்து விட்டு, சக மனிதர்களை விலங்குகளை விடவும் கீழ்த்தரமாக நடத்துபவர்கள் வேடதாரிகள். அவர்களோடு நட்புறவே வைத்துக் கொள்ள வேண்டாம்.

❖ எறும்புகளுக்குச் சர்க்கரை போடுபவர்கள் மனிதர் களைத் தண்ணீர் குடிக்காத வண்ணம் தடுத்து, அவர்களை உயிர்க் கொலை செய்கிறார்கள் என்றால் அவர்கள் வேடதாரிகள்; அவர்களுடன் நட்டுபுறவு வைத்துக் கொள்ள வேண்டாம்.

அந்த மாநாட்டில் திரு. ஸ்டான்லி ஜோன்ஸ் என்னும் ஐரோப்பியப் பாதிரியும், திரு. பி. ஜே. ஜாதவ் என்பவரும் சிறப்பு விருந்தினர்களாக அழைக்கப்பட்டார்கள். அங்கே பல சீக்கிய, முஸ்லீம் தலைவர்களும் மத குருக்களும் தங்கியிருந்தார்கள். இந்த மதமாற்றத்தில் தங்கள் மதங்களை நேரடியாகவோ, மறைமுக மாகவோ குறிப்பிடுகிறார்களா என்பதைத் தெரிந்து கொள்ளவே, அவர்கள் அங்கு வந்திருந்தார்கள். இயோலா தீர்மானத்தை எப்படிச் செயல்படுத்துவது என்பதற்கான வழிமுறைகளை அறியும் நோக்கத் தோடு மாநாடு கூட்டப்பட்டது. திரு. டி. டோலாஸ் பிரதிநிதிகளை வரவேற்றார். ஐதராபாத்தைச் சேர்ந்த ஒடுக்கப்பட்டோர் தலைவர் திரு. வி.எஸ். வெங்கட் ராவ் மாநாட்டிற்குத் தலைமை வகித்தார்.

1936 மே 31 அன்று டாக்டர் அம்பேத்கர் மராத்தி மொழியில் மிக விரிவாகச் சொற்பொழிவு ஆற்றினார். அவர் ஆற்றிய சொற்பொழிவு தயாரிக்கபட்ட சொற்பொழிவு .

-ஆசிரியர்கள்

அவர் பேசினார்:

சீமாட்டிகளே, சீமான்களே,

நான் அண்மையில் பிரகடனம் செய்த மதமாற்றத்தைப் பற்றி சிந்திக்க வேண்டுமென்றுதான் இந்த மாநாடு கூட்டப்பட்டுள்ளது

என்பது இப்போது உங்களுக்குத் தெரிந்திருக்கும். இந்த மாநாட்டின் பொருள் எனக்கு மிகவும் நெருக்கமானது. அது மட்டுமல்ல, உங்கள் எதிர்காலம் முழுக்க முழுக்க இந்தப் பொருளையே சார்ந்திருக்கிறது. இந்தப் பிரச்சினையின் தீவிரத்தை நீங்கள் தெளிவாகப் புரிந்து கொண்டு விட்டீர்கள் என்று சொல்வதில் எனக்கு எந்தவிதத் தயக்கமும் இல்லை. இல்லாவிட்டால் இப்படிப் பெருந்திரளாக நீங்கள் இங்கே கூடி இருக்க மாட்டீர்கள். எனக்கு முன் ஒரு மக்கள் வெள்ளத்தை பார்ப்பதில் நான் மகிழ்ச்சி அடைகின்றேன்.

## மதமாற்றத்தின் தேவை

மத மாற்றப் பிரகடனம் செய்ததிலிருந்து நமது ஆட்கள் பல்வேறு இடங்களில் பல பொதுக்கூட்டங்களை நடத்தியிருக் கிறார்கள். பார்வைகளையும், எண்ணங்களையும் உங்களிடம் பரிமாறிக் கொண்டிருக்கிறார்கள்; எல்லாவற்றையும் நீங்கள் அறிவீர்கள் என்று நம்புகிறேன். ஆனால் இன்று வரை மதமாற்றப் பிரச்சினை பற்றி விவாதிக்கவும் தீர்மானம் செய்யவும் நமக்கு வாய்ப்புகள் கிடைக்கவில்லை. அத்தகைய வாய்ப்புக்காக நான் ஏங்கிக் கொண்டிருந்தேன். இந்த மதமாற்ற இயக்கம் வெற்றியடைய வேண்டு மானால் இதற்காக முன்கூட்டியே திட்டமிடுதல் மிகமிக அவசிய மாகிறது. மதமாற்றம் என்பது சிறுபிள்ளை விளையாட்டல்ல. இது ஒரு பொழுதுபோக்கும் அல்ல. இதன் நோக்கம் மனித வாழ்வை வெற்றிகரமாக்குவதே. ஒரு படகுக்காரன் பயணம் தொடங்கு முன்னால் எல்லா முன்னோற்பாடுகளையும் எப்படிச் செய்து கொள் கிறானோ, அவ்வாறே நாமும் நமக்குரிய முன்னேற்பாடுகளைச் செய்து கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் மறு கரையை அடைய நம்மால் முடியவே முடியாது. படகில் சரக்குகளை ஏற்றுவதற்கு முன்னால் அந்தப் படகுக்காரன் எத்தனை பயணிகள் படகில் ஏறப் போகிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்கிறான். நானும் அதே நிலையில்தான் இருக்கிறேன். உறுதியான உண்மைகளைத் தெரிந்து கொள்ளாமல் நான் முன் அடி எடுத்துவைக்க முடியாது. எத்தனை பேர் இந்து மதத்தை விட்டு நீங்கத் தயாராக இருக்கிறார்கள் என்பது தெரியாமல் மதமாற்ற ஏற்பாடுகளை நான் ஆரம்பிக்க முடியாது. பம்பாயில் சில தொழிலாளர்கள் முன்பு நான் பேசினேன். ஒரு மாநாட்டில் சந்திக்காவிட்டால் பொதுமக்கள் கருத்தைப் பற்றி ஒரு முடிவுக்கு வர என்னால் முடியாது. இப்படிச் சொன்னதும் அவர்கள்

மாநாடு கூட்டும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்கள். அதற்கான செலவுகள், உழைப்பு பற்றியெல்லாம் அவர்கள் கவலைப் படவில்லை. அவர்கள் பட்ட இன்னல்களைப் பற்றி நமது மதிப்பிற்குரிய தலைவரும், இந்த மாநாட்டின் வரவேற்புக் குழுத் தலைவருமான திரு. ரேவ்ஜி டாக்டுஜி டோவாஸ் தம்முடைய சொற்பொழிவில் விவரித்து விட்டார். வரவேற்புக் குழுவிற்கு நான் மிகமிகக் கடமை பட்டிருக்கிறேன். கடினமான முயற்சிகளுக்குப் பிறகுதான் இந்த மாநாடு கூட்டப் பட்டிருக்கிறது.

## மகர்களுக்காக ஒரு தனி மாநாடு ஏன்?

மகர்களுக்காக மட்டுமே ஏன் இப்படி ஒரு மாநாட்டைக் கூட்ட வேண்டுமென்று சிலர் கேள்வி எழுப்பலாம். மதமாற்றப் பிரகடனம் எல்லாவிதமான தீண்டத்தகாதவர்களையும் பாதிக்கும். அப்படி இருக்கும் போது தீண்டத்தகாத எல்லா வகுப்பினர்களுக்குமான ஒரு பொது மாநாட்டை ஏன் கூட்டியிருக்கக் கூடாது? பிரச்சினைகள் மீது விவாதத்தை ஆரம்பிப்பதற்கு முன்பு இந்தக் கேள்விகளுக்கு பதில் சொல்வது என் கடமையென்று கருதுகிறேன்.

ஒன்று, இந்த மாநாட்டின் மூலம் அரசிடம் இருந்து எந்தப் பாதுகாப்பையும் நாம் கோரவில்லை. அதே போல் இந்துக்களிட மிருந்து எந்தச் சமூக உரிமைகளையும் நாம் கோரவில்லை. நம் வாழ்வின் உயர்வுக்கு நாம் என்ன செய்ய வேண்டும்? நம் எதிர்கால வாழ்வுக்கான பாதையை நாம் எப்படி வடிவமைத்து கொள்ளப் போகிறோம் என்பதே இந்த மாநாட்டின் முன் உள்ள கேள்வி. இதற்கான தீர்வுகளை அந்தந்த வகுப்புகள் தனித்தனியாகத்தான் கண்டாக வேண்டும். ஏன் தீண்டத்தகாதவர்களுக்கான ஒரு பொது மாநாட்டைக் கூட்டவில்லை என்பதற்கு இதுவும் ஒரு காரணம்.

இன்னொரு காரணமும் உண்டு - மதமாற்றப் பிரகடனம் நடந்து 10 மாதங்கள் ஆயிற்று. இந்தக் கால இடைவெளியில் பொது மக்களிடம் ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்த போதுமான முயற்சிகள் செய்யப்பட்டுள்ளன. பொதுமக்கள் எண்ணத்தை அறியும் தருணம் வந்துவிட்டதாகவே நான் உணர்கிறேன். என் கருத்துப்படி இப்படி ஒவ்வொரு வகுப்புக்கும் தனித்தனியான கூட்டங்கள் கூட்டுவதுதான் பொதுமக்கள் கருத்தை அறியும் எளிமையான வழி. மத மாற்றத்தை

நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டுமென்றால் பொதுமக்கள் கருத்தை அறிய வேண்டியது மிக அவசியம். இப்படித் தனித்தனியே வகுப்பு வாரியாக மாநாடு நடத்திப் பொதுமக்கள் கருத்தை அறிவது ஒரு பொது மாநாட்டின் மூலம் அறிவதை விட லகுவாக இருக்கும். அப்படி அறியப்படும் கருத்தும் பிரதிநிதித்துவம் வாய்ந்ததாக இருக்கும்; நம்பிக்கைக்குரியதாகவும் இருக்கும். மாறாகப் பொது மாநாடு அப்படிப்பட்ட தெளிவான கருத்துகளைப் பெற வழிவகுக்கும் என்று சொல்ல முடியாது. இதுவே மகர்களுக்கான தனி மாநாடு கூட்டக் காரணம். பிற வகுப்புகளை இதில் சேர்க்காததால் அவர்களுக்கு எதுவும் இழப்பில்லை. அவர்களுக்கு மதம் மாற விருப்பம் இல்லையே; எனவே இந்த மாநாட்டில் தங்களையும் சேர்க்கவில்லையே என்று அவர்கள் வருந்த நியாயமில்லை. அவர்கள் மதத்தை விட்டு நீங்க முடிவு செய்திருந்தால், இந்த மாநாட்டில் கலந்துகொள்ள முடியாமல் போன காரணத்தினால் அவர்கள் தங்கள் முடிவை மாற்றிக்கொள்ள போவதில்லை. மகர்களைப் போலவே தீண்டத்தகாத மற்ற மதத்தைச் சார்ந்தவர்களும் தங்கள் தங்கள் மாநாடுகளைக் கூட்டவும், எண்ணங்களைப் பரிமாறிக் கொள்ளவும் எந்தத் தடையும் இல்லை. அப்படி கூட்டுங்கள் என்றுதான் நான் சொல்லுவேன். என் திறமைக்கேற்ற அளவில் என்னாலான உதவிகளும் செய்வேன். இந்த அளவு அறிமுகம் போதும் என்று நினைக்கிறேன். இனி மையப் பொருள்பற்றி விவாதிக்கலாம்.

ஒரு சாதாரண மனிதனுக்கு இந்த மதமாற்றம் என்னும் விஷயம் மிகமிக முக்கியமானது. ஆனால் அவர்களைப் புரிந்துகொள்வது மிகவும் கடினம். இந்த விஷயத்தில் அவர்களைத் திருப்தி செய்வது அத்தனை எளிதல்ல; ஆகவே, உங்கள் எல்லோருக்கும் திருப்தி ஏற்படாவிட்டால் மதமாற்றம் என்பதை நடைமுறைக்குக் கொண்டு வருவது மிகமிக கடினமானது. எனவே, என்னால் இயன்றவரை எளிமையாக இந்தப் பொருள் பற்றி உங்களுக்கு விளக்குகிறேன்.

## மத மாற்றத்தின் ஸ்தூலமான அம்சம்

மதமாற்றத்தை இரண்டு அம்சங்களில் அணுக வேண்டும். ஒன்று - சமூக அணுகுமுறை மற்றும் மத அணுகுமுறை; ஸ்தூலமான மற்றும் ஆன்மீகமான அணுகுமுறை. எப்படி இருந்தாலும் முதலில் தீண்டாமையின்

இயல்பையும் அது நடைமுறையில் எப்படிக் கடைபிடிக்கப் படுகிறது என்பதையும் நாம் புரிந்துகொள்ள வேண்டும்; இந்த புரிதல் இல்லாமல் மதமாற்றப் பிரகடனத்தின் உண்மையான பொருளை உங்களால் உணரமுடியாது. இதற்கான சரியான புரிதல் ஏற்பட வேண்டு மானால் உங்களுக்கு எதிராக இழைக்கப்பட்ட அநீதிகளின் வரலாற்றை நீங்கள் மறுபடியும் சிந்தித்துச் சீர்தூக்கிப் பார்த்துக் கொள்ள வேண்டும். உங்கள் பிள்ளைகளை அரசுப் பள்ளிகளில் சேர்க்கும் உரிமை கோரியதற்காக உங்களை ஜாதி இந்துக்கள் அடித்து நொறுக்கி இருக்கலாம். பொதுக் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்கும் உரிமை கோரிய போது அதே நிலை உங்களுக்கு ஏற்பட்டிருக்கலாம். கல்யாண மாப்பிள்ளை குதிரையின் மீது ஊர்வலம் போகும் போது உரிமையை நீங்கள் கோரிய போதும் அதே கதி நேர்ந்திருக்கலாம். இவை வெகுசாதாரணமாக நடந்து கொண்டிருக் கின்றன. உங்கள் கண்முன் அத்தகைய சம்பவங்கள் நடந்ததைப் பார்த்திருப்பீர்கள். இப்படிப்பட்ட அட்டூழியங்களை ஜாதி இந்துக்கள் உங்கள் மீது நடத்த எத்தனையோ காரணம் இருந்திருக் கலாம்; அவற்றையெல்லாம் வெளியிட்டால் இந்து அல்லாத பிற பொது மக்கள் வியப்பில் ஆழ்ந்து போவார்கள். தரமுள்ள துணி மணிகளை அணிந்து கொண்டதற்காக உங்களை அடித்துத் துன்புறுத் தியிருக்கிறார்கள். செம்பு போன்ற உலோகப் பாத்திரங்களைப் பயன் படுத்தியதற்காகவும் நீங்கள் சாட்டையடி வாங்கியிருக்கிறீர்கள். தம்முடைய நிலத்தில் பயிற் செய்ததற்காக தீண்டத்தகாதவர்களின் வீடுகளையே எரித்துச் சாம்பலாக்கியிருக்கிறார்கள். பூணூல் அணிந் தமைக்காகவும் அவர்களுக்கு அடி விழுந்திருக்கிறது. இறந்த விலங்கு களைக் தூக்கிச் செல்ல மறுத்ததற்கும் அவற்றின் பிணத்தை உண்ண மறுத்ததற்கும், காலணிகளுடன், கிராம வீதி வழியாக நடந்ததற்கும், ஜாதி இந்துக்களைக் கண்டபோது உடல் வணங்கித் தொழாமல் போனதற்கும், மல ஜலம் கழிக்க வயல்வெளிக்குச் செல்லும்போது செப்புக் குவளையில் நீர் கொண்டு போனதற்கும், இப்படி எல்லா வற்றிற்கும் அவர்களுக்குக் கடுந்தண்டனை விதிக்கப்பட்டது. அண்மையில் ஒரு விருந்தில் சப்பாத்தி பரிமாறியதற்காகவும் அவர்களை அடித்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட தண்டனைகளின் அனுபவத்தை உங்களில் பலர் கேள்விபட்டிருக்கக்கூடும். அடி உதை தர முடியாது என்னும் பட்சத்தில், 'தள்ளி வைத்தல்' என்னும் கொடுமையான தண்டனையும் தரப்பட்டது. உங்களது அன்றாட வாழக்கையை இப்படிச் சகிக்கமுடியாத வண்ணம் சிதைத்தார்கள்.

உங்களுக்கு வேலைக்காரர்கள் கிடைக்காத வண்ணம் தடுத்தார்கள். உங்கள் ஆடு மாடுகள் மேய்ச்சலுக்குப் போவதிலும் இடையூறு செய்தார்கள். ஏன் உங்களுடைய ஆட்கள் சில கிராமங்களுக்குள் நுழைவதையே நிறுத்தி வைத்தார்கள். என்பதெல்லாம் உங்களுக்குத் தெரியும். ஏன் இப்படியெல்லாம் நடக்க வேண்டும் என்று உங்களில் சிலபேருக்குத்தான் புரிந்திருக்கும். இந்தக் கொடுங்கோன்மையின் மூல காரணம் என்ன, இதன் வேர் எங்கே ஓடிக் கொண்டிருக்கிறது? என்பதை அறிவது மிகமிக முக்கியம்.

## இது ஒரு வர்க்கப் போராட்டம்

மேலே கூறிய நிகழ்வுகளுக்கும் தனிமனிதர்களுடைய நல்ல குணங்களுக்கும், தீய குணங்களுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. பகைமை கொண்ட இரு பிரிவுகளுக்கு இடையிலான மோதல் என்றும் இந்நிகழ்வுகளை எடுத்துக்கொள்ள முடியாது. தீண்டாமைப் பிரச்சினை ஒரு வர்க்கப் போராட்டம். ஜாதி இந்துக்களுக்கும், தீண்டத் தகாதவர்களுக்கும் இடையிலான போராட்டம். இதனால் ஒரு மனிதன் இன்னொரு மனிதனுக்கெதிராக அநீதி இழைக்கிறான் என்று பொருள் கொள்ள முடியாது. மாறாக ஒரு வர்க்கம் இன்னொரு வர்க்கத்திற்கு அநீதி இழைக்கிறது என்பதே இதன் பொருள். இந்த வர்க்கப் போராட்டம் சமூகத் தரத்தோடு தொடர்புடையது. அதாவது ஒரு வர்க்கம் இன்னொரு வர்க்கத்துடன் எப்படிப்பட்ட தொடர்புகளை வைத்துக் கொள்ள வேண்டும் என்பதே இந்தப் போராட்டத்தின் குணாம்சம். நீங்கள் மற்றவர்களைப் போல் சமமாக நடத்தப்பட வேண்டும் என்று கேட்டாலே போதும். இந்தப் போராட்டம் தொடங்கிவிடும். இல்லாவிட்டால் சப்பாத்தி பரிமாறுவது, தரமுள்ள துணிமணிகளை அணிந்துகொள்வது, பூணூல் தரித்துக்கொள்வது, உலோகக் குவளையில் தண்ணீர் மொண்டு பருகுவது, மாப்பிள்ளை குதிரைச் சவாரி செய்வது போன்ற அற்பக் காரணங்களுக்காகவா ஒரு போராட்டம் நடக்க முடியும்? இந்த நிகழ்வுகளை நீங்கள் உங்கள் பணத்தைச் செலவிட்டு செய்கிறீர்கள். இதில் ஜாதி இந்துக்கள் எரிச்சல் அடைவதற்கு என்ன இருக்கிறது? அவர்களது கோபத்திற்குக் காரணம் மிகமிக எளிமை யானது. நீங்கள் அவர்களுக்குச் சமமாக நடக்க முயல்கிறீர்கள். உங்கள் சமத்துவம் அவர்களுக்கு அவமானமாகத் தோன்றுகிறது. அவர்கள் பார்வையில் நீங்கள் தரம் குறைந்தவர்கள்; அசுத்தமானவர்கள்;

நீங்கள் கீழ்மட்டத்தில்தான் இருந்தாக வேண்டும்; அப்போதுதான் உங்களை அவர்கள் வாழ விடுவார்கள். நீங்கள் எல்லை மீறினால் போராட்டம்தான். மேலே கூறிய எடுத்துக்காட்டுகளிலிருந்து இன்னொரு உண்மையும் புலப்படுகிறது. தீண்டாமை என்பது தற்காலிகமானதல்ல; அது நிரந்தரமானது. இன்னும் நேரடியாகச் சொன்னால் ஜாதி இந்துக்களுக்கும் தீண்டத்தகாதவர்களுக்குமான போராட்டம் ஒரு நிலையான நடைமுறை விதி; அது தெய்வீகமானது. ஏனென்றால் தீண்டாமையை அனுமதிக்கும் மதம் உங்களை அடிமட்டத்தில் வைத்திருக்கிறது. மதம் தெய்வீகமானது; அதே போல் தீண்டாமையும் தெய்வீகமானது; நிரந்தரமானது. இப்படித்தான் ஜாதி இந்துக்கள் நினைக்கிறார்கள். காலம் அல்லது சூழலுக்கேற்ப எந்த மாற்றமும் இதில் சாத்தியமில்லை. சமூக ஏணியின் கடைசிப் படியில் நீங்கள் நிற்கிறீர்கள். இதே படியில்தான் நீங்கள் நிரந்தரமாக இருந்தாகவேண்டும். இதன் பொருள் இந்துக்களுக்கும் தீண்டத் தகாதவர்களுக்குமான போராட்டம், எக்காலத்துக்கும் நீடிக்கும் என்பதுதான். இந்தப் போராட்டத்திலிருந்து நீங்கள் எப்படி மீளப் போகிறீர்கள்? எப்படி உயிர் வாழப்போகிறீர்கள்? என்பதுதான் மையமான கேள்வி. இந்தச் சிந்தனை உங்களுக்கு ஏற்படாவிட்டால் உங்களுக்கு விடுதலையே இல்லை. இந்துக்களின் ஆணையை ஏற்று அவற்றிற்கு அடிபணிந்து வாழ ஆசைப்படுவோரும் சரி; அடிமை களாகவே இருக்க வேண்டுமென்று விரும்புவோரும் சரி; இந்தப் பிரச்சினை பற்றி சிந்திக்க வேண்டிய அவசியமே இல்லை. ஆனால் சுயமரியாதையோடும் சமத்துவத்தோடும் வாழவிரும்புவர்கள் இது பற்றிச் சிந்தத்ததாக வேண்டும். இந்தப் போராட்டத்திலிருந்து மீண்டு நாம் எப்படி வாழ முடியும்? இந்தக் கேள்விக்கு பதில் தருவது என்னைப் பொறுத்தவரை கடினமான விஷயமில்லை. எந்தப் போராட்டத்திலும் வலிமை மிகுந்தவன் வெற்றியடைவான் என்பதை இங்கே கூடியிருக்கும் நீங்கள் எல்லோரும் ஒப்புக்கொண்டீர்கள். வலிமை இல்லாதவன் வெற்றியை எதிர்பார்க்க முடியாது என்று அநுபவங்களால் நிரூபிக்கப்பட்ட பாடம். இதை விளக்க மேலும் எடுத்துக்காட்டுகள் தேவையில்லை.

## ஆற்றலை முதலில் அடையுங்கள்

இப்பொழுது நீங்கள் அணுகவேண்டிய கேள்வி இதுதான்- இந்தப் போராட்டத்திற்குப் பிறகு நிலைத்திருக்கும் அளவு

உங்களிடம் ஆற்றல் இருக்கிறதா? மனிதரிடம் மூன்று வகையான ஆற்றல்கள் இருக்கின்றன. (1) மனித ஆற்றல், 2. செல்வம், 3. அறிவாற்றல். இம்மூன்றில் உங்களிடம் எந்த ஆற்றல் இருக்கிறது? மனித ஆற்றலைப் பொறுத்தவரை ஒன்று தெளிவாக வேண்டும். நீங்கள் சிறுபான்மையினர். பம்பாய் மாகாணத்தின் மொத்த மக்கள் தொகையில் தீண்டத்தகாதவர்கள் 8 இல் ஒரு பங்கு தான். அந்த 8 இல் ஒரு பங்குதான் அமைப்பு ரீதியாகத் திரளாதவர்கள். பல பிரிவுகளாக சிதறிக் கிடப்பவர்கள். இக்காரணங்களால் இந்தக் குறைந்த அளவு மக்கள் தொகையை வைத்துக் கொண்டு நமக்காக ஒரு வாழிடத்தை வென்றெடுக்க நாம் போராட முடியாது. நம்மிடம் பணபலமும் இல்லை. மனித ஆற்றலாவது ஏதோ கொஞ்சம் இருக்கிறது. செல்வம் என்பது அறவே இல்லை. உங்களுக்கு வணிகம் இல்லை, தொழில் இல்லை. பணியில்லை, நிலமுமில்லை. உயர் ஜாதிகள் தூக்கி வீசுகிற ரொட்டித்துண்டுகளையே நீங்கள் வாழ ஆதாரமாக நம்பியிருக் கிறீர்கள். உங்களுக்கு உணவில்லை, ஆடைகள் இல்லை உங்களிடம் செல்வத்தின் வலிமை எப்படியிருக்க முடியும்? அநீதி இழைக்கப் பட்டால் அவற்றிற்கு பரிகாரம் தேட நீதிமன்றங்களை அணுகும் வலிமைகூட உங்களுக்கு இல்லை; மன வலிமை என்பது இன்னும் மோசம்; நூற்றாண்டுகளாக நீங்கள் உயர் ஜாதிகளுக்குத் தொண்டு புரிந்தது மட்டுமில்லாமல் அவர்கள் இழைக்கும் அவமானங்களையும் அவர்களது கொடுங்கோன்மையையும் எத்தகைய முணுமுணுப்பும், புகாரும் இல்லாமலேயே சகித்துக் கொண்டீர்கள். அதனால் பதிலுக்கு பதில் கூறுதல் எதிர்த்துக் கலகம் செய்தல் என்னும் உணர்வுகளே உங்களுக்கு இல்லாமல் போய்விட்டது. தன்னம்பிக்கை, மனத் திட்பம், லட்சியம் எல்லாம் உங்களிடமிருந்து அடியோடு மறைந்து விடும். ஆதலால் நீங்கள் உதவியற்ற நிலைக்கு ஆளாகி விட்டீர்கள். வலிமை குன்றி விட்டீர்கள். சோகை பிடித்தவர்களாகி விட்டீர்கள். பெரும் தோல்வி மனப்பான்மையும், விரக்தியுமே உங்களது சூழல் என்று ஆகிவிட்டது. நீங்களும் எதாவது செய்ய முடியும் என்பதற்குரிய லேசான ஒரு கருத்துக் கீற்றும் உங்கள் உள்ளங்களில் தோன்றவில்லை.

## நீங்கள் மட்டுமே நசுக்கப்படுவது ஏன்?

நான் விவரித்தவை உண்மையென்றால் அந்த விவரிப்பின் முடிவான தீர்மானத்துக்கும் நீங்கள் வந்தாக வேண்டும். உங்கள் வலிமை ஒன்றை மட்டுமே நீங்கள் நம்பினால் இந்த அடக்கு முறையை எதிர்கொள்ள எப்போதும் உங்களால் முடியாது. நீங்கள் மட்டுமே சிறுபான்மையல்ல. முஸ்லீம்களும் சிறுபான்மைதான். மகர் - மாங்

ஜாதிகளைப்போலவே முஸ்லீம்களுக்கும் கிராமத்தில் சில வீடுகளே இருக்கின்றன. ஆனால் முஸ்லீம்களுக்குத் தொல்லை தர எவருக்கும் துணிவு வராது. நீங்கள் மட்டும் எப்போதும் கொடுங்கோன்மைக்குப் பலியாகிறீர்கள். இது ஏன்? ஒரு கிராமத்தில் முஸ்லீம்கள் இரண்டே இரண்டு வீடுகளில்தான் வசிக்கிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். அவர்களைக் காயப்படுத்த யாருக்காவது துணிவு இருக்கிறதா? பத்து வீடுகளை வைத்திருக்கும் உங்களை முழு கிராமமும் சேர்ந்து கொண்டு வாட்டி வதைக்கிறார்களே! இது ஏன்? இது ஒரு நிலையான கேள்வி. இதற்கு ஒரு சரியான பதிலைக் கண்டறிய வேண்டும். என் கருத்தில் ஒரே ஒரு பதில்தான் இருக்கிறது. இந்திய முஸ்லீம் மக்கள் தொகையின் பலம் என்னவென்றால் அந்த இரண்டு வீட்டு முஸ்லீம் களுக்குப் பின்னால் இந்திய முஸ்லீம் சமுதாயமே திரண்டு நிற்கிறது. அதனால் அவர்கள் மீது கை வைக்க அனைவருக்கும் அச்சம். அந்த இரண்டு வீட்டு முஸ்லீம்கள் அச்சமில்லாமல் சுதந்திரத்தோடு வாழ் கிறார்கள். எந்த இந்துவாவது அவர்கள் மீது ஆக்கரமிப்புச் செய்ய முற்பட்டால் பஞ்சாப் முதல் மதராஸ் வரை பரவியுள்ள எல்லா முஸ்லீம்களும் அவர்களின் பாதுகாப்புக்காகப் புறப்படுவார்கள். ஆனால் உங்களுக்கு ஆதரவாக உங்களைக் காப்பாற்ற உங்களுக்கு நிதி உதவி வழங்க எவரும் தயாரில்லை. எந்த அரசு அலுவலகமும் உங்களுக்கு ஆதரவுக் கரம் நீட்டப் போவதில்லை என்று இந்துக் களுக்குத் தெரியும். தாசில்தாரும், காவல் அதிகாரியும், ஜாதி இந்துக் களுக்கும் உங்களுக்கும் மோதல் என்றால் எல்லா அதிகாரிகளும் அவர்களுடைய சொந்த ஜாதியைச் சேர்ந்தவர்களுக்குத்தான் விசுவாச மாக இருப்பார்களே ஒழிய தங்கள் கடமைகள் மீது அவர்கள் அக்கறை காட்டப் போவதில்லை. இந்துக்கள் உங்களுக்கு எதிராக அத்தனை கொடுங்கோன்மையையும் கையாளுவதற்குக் காரணம் நீங்கள் ஆதரவு அற்றவர்கள் என்பதுதான் - இந்த விவாதத்தில் இரண்டு உண்மைகள் நிறுவப்படுகின்றன.

1. வலிமையில்லாமல் கொடுங்கோன்மையை எதிர்க்க உங்களால் முடியாது. 2. கொடுங்கோன்மையை எதிர்கொள்ள போதுமான வலிமை உங்களுக்கு இல்லை. இந்த இரண்டு உண்மைகளை அடுத்து மூன்றாவது உண்மை தானே புலப்படுகிறது. கொடுங்கோன்மையை எதிர் கொள்வதற்கான வலிமையை நீங்கள் வெளியிலிருந்துதான் பெற்றாக வேண்டும். இதை எப்படிப் பெறப் போகிறீர்கள் என்பது கேள்வி. விருப்பு வெறுப்பு இல்லாமல் இது பற்றி நீங்கள் சிந்திக்க வேண்டும்.

## வெளியிலிருந்துதான் வலிமை கிடைக்க வேண்டும்

ஜாதி வெறியும் மத வெறியும் மக்கள் மனத்திலும் ஒழுக்கத்திலும் ஒரு விசித்திரமான விளைவை ஏற்படுத்தியிருக்கிறது. வறுமை, மக்களின் துயரம் இவற்றைப் பற்றி எவருக்கும் இந்நாட்டில் கவலையில்லை. அப்படிக் கவலைப்படுகிறவர்களும் இவற்றை நீக்க எந்த முயற்சியும் செய்வதாகத் தெரியவில்லை. அதனால் சொந்த ஜாதி, சொந்த மதத்தைச் சேர்ந்தவர்களின் வறுமை, துன்பம் ஆகியவற்றிற்கு எதிராக அவர்களுக்கு உதவுவதற்கு மக்கள் தயார். இது ஒரு வக்கிரமான மனித ஒழுக்கம். இதுதான் இந்நாட்டில் காணப்படும் ஒழுக்கம். கிராமங்களில் இந்துக்களின் கைகளில் தீண்டத்தகாதவர்கள் அவதிப்படும்போது மற்ற மதங்களைச் சேர்ந்தவர்கள் நன்றாக வாழத்தான் செய்கிறார்கள். தீண்டத்தகாதவர்களுக்கு இழைக்கப் படும் அநீதிகள், அடக்குமுறைகள் நியாயமற்றவை என்று எவரும் உணர்ந்த தாகத் தெரியவில்லை என்றுச் சொல்ல முடியாது. உணரத்தான் செய்கிறார்கள். ஆனாலும் உதவி செய்ய முன்வருவதில்லை. இதற்குக் காரணம் என்ன? அவர்கள் ஏன் உங்களுக்கு உதவி செய்யவில்லை என்று கேட்டால் அது எங்கள் வேலை இல்லை என்பார்கள். எங்கள் மதத்தைச் சேராதவர்களின் பிரச்சினைகளில் குறுக்கிட எங்களுக்கு உரிமையில்லை என்பார்கள். நீங்கள் அவர்கள் மதத்தைச் சேர்ந்தவர் களாக இருந்தால் இதை அனுமதித்திருக்க மாட்டோம் என்பார்கள். இதன் மூலம் உங்களுக்கு ஒன்று தெரிய வேண்டும். இன்னொரு சமூகத்துடன் நெருங்கிய உறவுகளை நிறுவாவிட்டால் - இன்னொரு மதத்தில் சேராவிட்டால் நீங்கள் வெளியிலிருந்து ஆதரவையும் வலிமையையும் பெற முடியாது. நீங்கள் இப்போது இருக்கும் மதத்திலிருந்து விலக வேண்டும். இன்னொரு மதத்தில் சேர வேண்டும். இன்னொரு சமூகத்தில் சேர வேண்டும். அப்படி இல்லை யேல் அந்த சமூகத்தின் வலிமையை நீங்கள் பெறமுடியாது. வலிமை யில்லாத பட்சத்தில் உங்கள் எதிர்காலத் தலைமுறையும் உங்களைப் போலவே அனுதாபத்திற்குரிய சூழலில்தான் வாழ்ந்தாக வேண்டும்.

## மத மாற்றத்தின் ஆன்மிகக் கூறுகள்

உலகியல் அடிப்படையிலான பயன்களுக்காக மதமாற்றத்தின் அவசியம் பற்றி விவாதித்தோம். இனி ஆன்மிகப் பயன் பற்றிப் பார்ப்போம். மதம் ஏன் இருக்கிறது? அது ஏன் அவசியமாகிறது?

இந்தப் பிரச்சினையை நாம் புரிந்துகொள்ள வேண்டும். மதம் என்றால் என்ன என்று பலர் பல விதமாக விளக்கம் சொல்லியிருக்கிறார்கள். அவற்றுள் ஒரே ஒரு விளக்கம்தான் பொருள் புரிந்தாகவும் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவும் இருக்கிறது. மக்கள் மீது எது ஆளுமை செலுத்துகிறதோ, அதுவே மதம் - இதுதான் மதம் என்பதற்கு உண்மையான விளக்கம். இது என்னுடைய விளக்க மில்லை; சனாதன இந்தக்களின் தலைவரான திலகர் தந்த விளக்கம். ஆகவே புதிதாக ஒரு விளக்கம் தருகிறேன் என்று யாரும் எண்ணிவிட வேண்டாம். திலகரின் விளக்கத்தை வாதத்திற்காக மட்டுமே நான் ஏற்றுக்கொண்டதாக நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். சமுதா யத்தை நிர்வகிப்பதற்காகச் சில விதிகளை அதன் மீது திணிக்கிறோம். அது மதம். மதத்தைப் பற்றிய என்னுடைய கருதுகோளும் அதுவே தான். இந்த விளக்கம் எதார்த்த அடிப்படையிலும் தர்க்க அடிப்படை யிலும் சரியாகவே இருக்கிறது. ஆனால் சமூகத்தை ஆளும் அந்த விதிகளின் இயல்புகள் என்னவென்று தெளிவாக்க இந்த விளக்கம் முயலவில்லை. அவ்விதிகளின் இயல்பு எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும் என்னும் கேள்விக்கு இதில் பதிலில்லை. மதம் என்றால் என்ன? என்ற கேள்விக்கு விதிகளின் இயல்பு பற்றிய இந்தக் கேள்வி முக்கியமானது. எது - மதம் - எது மதமில்லை என்பது மதத்திற்கு தரப் பட்ட விளக்கத்தைப் பொறுத்து அமைவதில்லை. மாறாக, சமுதாயத்தின் மீது ஆளுமை செலுத்தும் விதிகளின் இயல்புக்கு என்ன நோக்கமோ, அதை அடிப்படையாக வைத்து இந்தப் பிரச்சினையை அலசும் போது இன்னொரு பிரச்சினையும் எழுகிறது. மனிதனுக்கும், சமுதாயத்திற்குமான உறவு என்ன? நவீன சமூகத் தத்துவாசிரியர்கள் இந்தக் கேள்விக்கு மூன்று விதத்தில் பதில் தந்தார்கள். தனிமனித மகிழ்ச்சியைப் பெற்றுத் தருவதே சமுதாயத்தின் இலக்கு என்பது சிலர் கருத்து. இன்னும் சிலர், மனிதனின் இயல்பான பண்புகள், ஆற்றல்கள் ஆகியவற்றின் வளர்ச்சிக்காகவே சமுதாயம் நிலைத்திருக்கிறது. அவன் தன்னைத்தானே வளர்த்துக்கொள்ள அது உதவுகிறது என்றார்கள் வேறுசிலர். இப்படித் தனிமனிதனுக்கு முக்கியத்துவம் தராமல் லட்சியபூர்வமான சமுதாயத்தைப் படைப்பதே நோக்க மென்று சொன்னார்கள். இந்து மதத்தின் கருதுகோள் மேலே கூறிய கருத்திலிருந்து முற்றிலும் மாறுபடுகிறது. இந்து மதத்தில் தனி மனிதருக்கு இடமில்லை. அதன் அடிப்படைக் கருதுகோள் வர்க்கம் சார்ந்தது. ஒரு தனி மனிதன் இன்னொரு தனிமனிதருடன் எப்படி உறவாட வேண்டுமென்று இந்துமதம் கற்பிக்க முயலவில்லை;

தனிமனிதனை ஏற்காத எந்த மதத்தையும் நான் ஏற்பதற்கில்லை. ஒரு தனிமனிதனுக்குச் சமுதாயம் என்பது தேவைதான். ஆனால் சமூக நலன் மட்டுமே ஒரு மதத்தின் லட்சிய எல்லையாக இருக்க முடியாது. தனிமனிதன் நலனும் முன்னேற்றமும் மதத்தின் முக்கிய நோக்கங்களாக இருந்தே தீர வேண்டும் என்பதே என் கொள்கை. தனிமனிதன் என்பவன் சமுதாயத்தின் அம்சம்தான். ஆனால் அவனுக்கும் சமுதாயத்துக்குமான தொடர்பு உடலுக்கும், உறுப்புகளுக்கும் இடையிலான தொடர்பு, வண்டிக்கும் சக்கரங்களுக்கும் இடையிலான தொடர்பு போன்றதோ ஆகாது.

## சமுதாயமும் தனிமனிதனும்

ஒரு சொட்டு நீர் கடலில் விழும்போது அது கடலுடன் ஐக்கியமாகிறது. அதுபோல் சமுதாயத்தில் வாழ்கிற மனிதர்கள் சமுதாயத்தில் ஐக்கியமாவதில்லை. மனித வாழ்க்கை சுதந்திரமானது. அவன் சமுதாயத்திற்கு தொண்டு புரிவதற்காக மட்டுமே பிறக்கவில்லை. சுய மேம்பாடும் அவனுடைய நோக்கமாகும். இதனால்தான் வளர்ச்சி பெற்ற நாடுகளில் ஒருவன் இன்னொருவனை அடிமை கொள்ளலாகாது என்னும் கருத்தோட்டம் நிலவுகிறது. தனி மனிதனுக்கு முக்கியத்துவம் தராத மதத்தை நான் ஏற்கமாட்டேன். இந்து மதம் தனிமனித முக்கியத்துவத்தை ஏற்பதில்லை. எனவே, அதை நான் ஏற்பதற்கில்லை. ஒரு வர்க்கம் மட்டுமே அறிவை ஈட்டமுடியும். இன்னொரு வர்க்கம் ஆயுதம் மட்டும்தான் பயன்படுத்த முடியும். மூன்றாம் வர்க்கம் வணிகம் செய்ய வேண்டும். நான்காம் வர்க்கம் முதல் மூன்று வர்க்கங்களுக்கும் ஏவல் செய்ய வேண்டும் என்று விதிக்கும் ஒரு மதத்தை நான் ஏற்பதற்கில்லை. ஒவ்வொருவருக்கும் அறிவு தேவை, ஆயுதம் தேவை, பணம் தேவை; சிலருக்கு மட்டுமே கல்வி தந்து மற்றவர்களை இருளில் வீழ்த்தும் நோக்கம்கொண்ட மதம் மதமே அல்ல. மக்களை மன அளவில் அடிமைத் தனத்தில் ஆழ்த்துகின்ற மதத்தை சதி என்றுதான் சொல்ல வேண்டும். ஒரு வர்க்கம் ஆயுதம் வைத்திருக்கலாம் என்றும், இன்னொன்று அதைத் தொடவே கூடாது என்றும் சொல்லுகிற மதம் அந்த இன்னொரு வர்க்கத்தை மீளாத அடிமைநிலையில் வைத்திருக்கும் ஒரு தந்திரமே தவிர வேறில்லை என்பேன். சொத்து சேர்க்கும் பாதையை ஒரு வர்க்கத்திற்கு மட்டுமே திறந்துவிடுவது, பிறரின் அன்றாடத் தேவைகளுக்குக் கூட முன்கூறிய வர்க்கத்தைச் சார்ந்திருக்க வேண்டும்

என்று சொல்லுகிற மதம் மதமே அல்ல. அது ஒரு ஏதேச்சதிகாரம். இதைத்தான் இந்து மதம் சதுர்வர்ணம் என்கிறது. சதுர்வர்ணத்தின் மீது என் கருத்துகளை நான் தெளிவாகத் தெரிவித்திருக்கிறேன். இந்து மதம் உங்களுக்குப் பயன் அளிக்க கூடியதா? என்பதை நீங்களே எண்ணிப்பார்த்துக் கொள்ளுங்கள். மதம் என்பதன் அடிப்படை நோக்கம் தனிமனிதனின் ஆன்மிக வளர்ச்சிகான சூழலை உருவாக்குவதுதான். இதை ஏற்றுக்கொண்டால் இந்து மதத்தின் மூலம் உங்கள் ஆன்மிகம் ஒருபோதும் மேம்பாடு அடையாது என்பது தெளிவாகிறது. தனிமனிதனை உயர்த்துவதற்கு மூன்று காரணிகள் வேண்டும். அவை: 1. அனுதாபம், 2. சமத்துவம், 3. சுதந்திரம். இந்து மதத்தில் இவற்றில் ஏதேனும் ஒன்றாவது உண்டா? உங்கள் அநுபவத்தை வைத்துப் பதில் சொல்லுங்கள்.

## இந்து மதத்தில் உங்கள்மீது அனுதாபம் உண்டா?

அனுதாபம் இந்து மதத்தில் அறவேயில்லை. நீங்கள் எங்கு சென்றாலும் உங்களை எவரும் அனுதாபத்தோடு பார்ப்பதில்லை. இந்த விஷயத்தில் உங்கள் அனைவருக்குமே அனுபவம் உண்டு. உங்களை இந்துக்கள் எப்போதும் சகோதரத்துவத்துடன் நடத்திய தில்லை. அயல் நாட்டுக்காரர்களைவிடக் கேவலமாகத்தான் நடத்தி யிருக்கிறார்கள். இந்துக்களும் தீண்டத்தாகதவர்களும் பக்கம் பக்கமாக வாழ்க்கின்ற ஒரு கிராமத்தில் இரு சாராரையும் சகோதரர்கள் என்று யாராவது சொல்கி றார்களா? ஏதோ எதிரெதிர் முகாம்களில் முட்டிமோதிக் கொள்வதற்காகத் தயார் நிலையில் இருக்கும் இரு படைகள் என்றுதானே சொல்லுகிறார்கள். இந்துக் களுக்கு எள்ளளவும் உங்கள் மீது நேசமில்லை. முஸ்லீம்கள் மீதாவது அவர்களுக்கு ஓரளவு நேசம் உண்டு. உங்களை விட முஸ்லீம்களை அவர்கள் நெருக்கமாக வைத்திருக்கிறார்கள். இந்துக்களும் முஸ்லீம் களும் உள்ளூர் குழுக்களிலும், சட்டமன்றங்களிலும், வணிகத்திலும் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளுகிறார்கள். ஜாதி இந்துக்கள் அத்தகைய அநுதாபத்தை உங்கள் மீது காட்டியதாக ஒரு சான்று தர முடியுமா? அவர்களுடைய மனங்களில் உங்கள் மீது வெறுப்பைத் தான் வளர்த்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த வெறுப்பால் எத்தகைய பயங்கர விளைவுகள் ஏற்பட்டுள்ளன? நீதி கேட்டு நீதிமன்றம் போகிறவர்களையும் உதவி கேட்டு காவல் நிலையத்தை அணுகு பவர்களையும் கேட்டுப் பாருங்கள். அவர்கள் கதை கதையாகச்

சொல்வார்கள். நீதி மன்றத்தில் உங்களுக்கு நியாயம் கிடைக்கும் என்றோ, காவல் நிலையத்தில் சரியாக நடந்து கொள்ளுவார்கள் என்றோ நீங்கள் நம்புகிறீர்களா? இல்லையென்றால் உங்கள் மீது வெறுப்பை வளர்த்துக் கொள்வதற்கான காரணம்தான் என்ன? இந்துக்களுக்கு உங்கள் மீது அநுதாபம் இல்லை. தங்களிடம் உள்ள அதிகாரத்தை அவர்கள் சரியாகப் பயன்படுத்த மாட்டார்கள் என்பதும் உங்களுக்குத் தெரியும். இத்தகைய வெறுப்புக்கு இடையில் வாழ்வதில் என்ன பயன்?

## இந்து மதத்தில் உங்களுக்கு சமத்துவம் உண்டா?

இப்படி ஒரு கேள்வியைக் கேட்கவே கூடாது. தீண்டாமை என்றாலே சமத்துவமின்மை என்றுதான் பொருள். தீண்டாமையை உலகில் வேறு எங்கும் பார்க்க முடியாது. உலக வரலாற்றில் இத்தகைய ஏற்றத்தாழ்வு எந்தக் காலத்திலும் இருந்ததில்லை. இதனால் உயர்வு மனப்பான்மையும் தாழ்வு மனப்பான்மையும் ஏற்பட்டு ஒருவர் மகளை இன்னொருவருக்குத் திருமணம் செய்வது ஒருவர் இன்னொருவருடன் நன்றாக அமர்ந்து உண்ணுவது கூட முடியாத செயலாகிறது. இந்து மதத்தில் இவை சர்வ சாதாரணம். ஒருவன் இன்னொரு மனிதனைத் தீண்டக் கூடாது என்று தள்ளி வைக்கும் கீழ்த்தரமான மரபு இந்து மதத்தையும் இந்து சமுதாயத்தையும் தவிர வேறு எங்காவது இருக்கிறதா? ஒரு மனிதனை இன்னொருவன் தீண்டுவதால் அவன் அசுத்தமாகிப் போகிறான் என்றும், அந்த தீண்டுதலால், தண்ணீருக்குக் கூட தீட்டு வந்து விடுகிறது என்றும், அவன் கடவுளைத் தொழவும் அருகதை அற்றவன் என்றும் இங்கு நிலவுகிற மரபு மனித சமுதாயத்தில் வேறு எங்காவது உண்டா? தீண்டத் தகாகதவர்களையும் தொழுநோயாளியையும் ஒரே மாதிரிதானே நடத்துகிறார்கள்? தொழுநோயாளியைப் பற்றிய நினைப்பே மக்களுக்கு அருவருப்பைத் தருகிறது. என்றாலும் அவன் மீது மக்களுக்கு இரக்கம் உண்டு. உங்களைப் பொறுத்தவரை அருவருப்பும் வெறுப்பும் மட்டுமே உண்டு. ஆகவே தொழு நோயாளியை விடவும் கீழான நிலையில் நீங்கள் இருக்கிறீர்கள். இன்னும் கூட, உண்ணா நோன்பை முடிக்கிற ஒருவர் மகர் என்கிற வார்த்தையை யாராவது உச்சரிக்கக் கேட்டுவிட்டால் போதும் அடுத்த நொடியே உணவைத் கையால் தொடுவதில்லை. அந்த அளவு உங்கள் உடலுக்கும், உங்கள் சொற்களுக்கும் கேவலமான பொருள்

கூறப்படுகிறது. இந்து மதத்தில் தோன்றிய களங்கம் என்று தீண்டா மையை சிலர் வர்ணிக்கிறார்கள். இந்தக் கூற்றில் அர்த்தமேயில்லை. எந்த இந்துவும் இந்த மதத்தில் இப்படி ஒரு களங்கம் இருப்பதாக நினைப்பதில்லை. பெரும்பான்மை இந்துக்கள் உங்களைத்தான் களங்கம் என்று கருதுகிறார்கள். நீங்கள் அசுத்தமானவர்கள் என்று தான் கருதுகிறார்கள். இந்நிலை உங்களுக்கு வரக் காரணம் என்ன? இந்துக்களாக நீடிப்பதால்தான் இந்நிலை உங்கள் மீது திணிக்கப் பட்டிருக்கிறது. உங்கள் சமூகத்தில் இருந்து பலர் முஸ்லீம் மதத்திற்குப் போய்விட்டார்கள். அவர்களைத் தீண்டத்தகாதவர்கள் என்றோ, தங்களுக்குச் சம அந்தஸ்தில் இல்லாதவர்கள் என்றோ இந்துக்கள் கருதுவதில்லை; கிறிஸ்துவ மதத்திற்கு மாறியவர்கள் நிலையும் அதுதான். திருவாங்கூரில் அண்மையில் நிகழ்ந்த ஒரு சம்பவம் இங்கே குறிப்பிடத்தக்கது. 'தீயா' என்று அங்கே அழைக்கப் படுகிற தீண்டத்தகாதவர்கள் குறிப்பிட்ட சில தெருக்களில் கூடச் செல்லக்கூடாது என்று ஒரு விதி இருந்தது. சில தினங்களுக்கு முன் அவர்களில் சிலர் சீக்கிய மதத்தைத் தழுவினார்கள். உடனே அவர்கள் மீதிருந்த தடை நீக்கப்பட்டது. இதிலிருந்து என்ன தெரிகிறது? நீங்கள் தீண்டத்தகாகதவர்களாகவும் சரிசமம் அற்றவர்களாகவும் கருதப் படுவது நீங்கள் இந்துவாக இருக்கும் போதுதான்.

இப்படியொரு சமத்துவமின்மை, அநீதி நிலவுகிறது. சில இந்துக்கள் தீண்டதகாதவர்களைத் தேற்ற முயல்கிறார்கள். நீங்கள் படிப்பாளியாகுங்கள்; சுத்தமாக இருங்கள்; அப்போது உங்களைத் தொடுவார்கள்; சமமாக நடத்துவார்கள் - என்கிறார்கள். படித்த, பணமுள்ள, சுத்தமான மகரும் படிக்காத ஏழ்மையான அசுத்தமான மகரைப் போலவே மோசமாகத்தான் நடத்தப்படுகிறார்கள் என்பது உங்களுக்கும் தெரியும். இன்னொன்று, படிப்பும் சொத்தும், நல்ல ஆபரணங்களும் ஆடைகளும் பெற முடியாத ஒருவன் சமத்துவத்தை மட்டும் எங்கிருந்து பெறுவான்? அறிவு, சொத்து, துணிமணிகள் என்பவை ஒருவனுக்குப் புற அடையாளங்கள்; இவற்றிற்கும், சமத்துவத்திற்கும் முடிச்சுப் போடக்கூடாது என்பதுதான் கிறித்துவத் திலும் இஸ்லாமிலும் கற்பிக்கப்படுகிற கோட்பாடு. காரணம் அந்த மதங்கள் மனித நேயத்தை அடிப்படையாக கொண்டவை. மனிதனை மனிதன் மதிக்க வேண்டும்; அவமரியாதை செய்தல் கூடாது; எல்லோரையும் சரிசமமாக நடத்த வேண்டும் என்றுதான் அந்த மதங்கள் போதிக்கின்றன. இத்தகைய போதனைகள் இந்து மதத்தில்

அறவே இல்லை. மனித நேயத்தையே வலியுறுத்தாத ஒரு மதத்தால் என்ன பயன்? அதில் நீடிப்பதில்தான் என்ன நன்மை? இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல முற்படும் சில இந்துக்கள் உப நிஷதங்களை மேற்கோள் காட்டுகிறார்கள். கடவுள் எல்லோரி டத்திலும் நீக்கமற நிறைந்து இருக்கிறார் என்று உபநிஷதம் சொல்கிறது என்கிறார்கள். இந்த இடத்தில் ஒன்றைக் கூறிவிட வேண்டும். மதமும் விஞ்ஞானமும் இரண்டு வேறுபட்ட விஷயங்கள். ஒரு கோட்பாடு விஞ்ஞான கோட்பாடா? அல்லது மதக் கோட்பாடா? என்பதை ஆராய வேண்டும். கடவுள் எல்லோரிடத்திலும் நீக்கமற நிறைந்திருக்கிறார் என்பது விஞ்ஞானக் கோட்பாடு; மதக் கோட்பாடு அல்ல. ஏனென்றால் மதம் என்பது நேரிடையான மனித நடத்தையைச் சார்ந்தது. அவ்வாறே கடவுள் எங்கும் இருக்கிறார் என்பதும் விஞ்ஞானக் கோட்பாடுதான். மதக் கோட்பாடு அல்ல. இந்துக்கள் மேலே கூறிய கோட்பாடுகளின்படி நடப்பதில்லை. அதற்கு மாறாக எங்கும் நிறைந்துள்ளார் என்பது தத்துவக் கோட்பாடு அல்ல - அது இந்து மதத்தின் கோட்பாடு என்று இந்துக்கள் வலியுறுத்தினால் நான் அவர்களுக்கு மிகச் சுலபமாகப் பதில் சொல்லுவேன் - இந்துக் களிடையே நிலவுகிற இழிநிலை உலகில் வேறு எங்குமே கிடையாது. சொல்லும், செயலும் இரண்டு துருவங்கள் அளவு முரண்படுகிற மிகக் கொடுமையானவர்கள் இந்துக்கள். அவர்கள் நாவில் ராம நாமமும் கட்கத்தில் கூரிய வாளும் இருக்கின்றன. அவர்கள் முனிவர்களைப் போல்பேசுகிறார்கள். கசாப்புகாரர்களைப் போல் நடந்து கொள்கிறார்கள். கடவுள் எங்கும் இருக்கிறார் என்று சொல்லிவிட்டு சக மனிதனை விலங்குகளை விடக் கேவலமாக நடத்துகின்ற வேடதாரிகளின் நட்பு உங்களுக்கு வேண்டாம். எறும்புகளுக்கு ஒரு பக்கம் சர்க்கரை போடுவது, இன்னொரு பக்கம் சக மனிதர்களுக்கு குடிநீர் உரிமையை மறுப்பது, அவர்களைக் கொலையும் செய்வது என்று வாழும் வேட தாரிகளுடன் எந்த உறவும் வைத்துக்கொள்ளாதீர்கள். அவர்கள் உறவால் என்னென்ன தீய விளைவுகள் ஏற்பட்டுள்ளன என்பதை உங்களால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை. உங்களுக்கு மரியாதையில்லை; சமூகத் தகுதியில்லை; இந்துக்கள் மட்டுமே உங்களை மதிப்பதில்லை என்று சொல்வதற்கில்லை; முஸ்லீம்களும் கிறித்தவர்களும் கூட அப்படித்தான். அவர்களும் உங்களைப் பொறுத்தவரை அதே தீண்டாமையைக் கடைப்பிடிக்கிறார்கள். எனவே நாம் இந்துக்கள் கண்களுக்கு மட்டுமன்றி எல்லோர் கண்களுக்கும் இந்தியா முழுமையிலும் கீழினும் கீழான நிலையில்

இருக்கிறோம். இத்தகைய வெட்கங் கெட்ட சூழலில் இருந்து நீங்க வேண்டுமானால் உங்கள் மீது சுமத்தப்பட்ட களங்கத்தைத் துடைத் தெறிய வேண்டுமானால் வாழ்வை கவுரமுள்ளதாக மாற்றிக் கொள்ள வேண்டுமானால் அதற்கு ஒரே வழிதான் உண்டு. இந்து மதத்தையும், இந்து சமுதாயத்தையும் தொலைத்து தலை முழுகுவதுதான் அந்த வழி.

## இந்து மதத்தில் உங்களுக்குச் சுதந்திரம் உண்டா?

பிற குடிமக்களைப் போலவே வணிகம் செய்யும் உரிமையைச் சட்டம் உங்களுக்கு உறுதி செய்திருக்கிறது என்று சிலர் சொல்லு கிறார்கள். அவ்வாறே தனிமனிதச் சுதந்திரமும் உண்டு என்கிறார்கள். நீங்கள் ஆழமாகச் சிந்திக்க வேண்டும். அவர்கள் சொல்லுவதில் ஏதேனும் அர்த்தம் இருகிறதா? மூதாதைகள் செய்த தொழிலைத்தான் செய்ய வேண்டும் என்று விதித்திருக்கிற சமுதாயத்தில் வணிகம் செய்யும் உரிமை உண்டு என்றால் அதில் ஏதாவது பொருள் இருக்கிறதா? சொத்து சேர்ப்பதற்கான எல்லா வழிகளையும் அடைத்துவிட்டு உங்கள் சொத்தை நீங்கள் அநுபவியுங்கள் என்றும், உங்கள் பணத்தை யாரும் தொட மாட்டார்கள் என்றும் சொல்லுவதில் என்ன பயன்? பிறப்பிலேயே நீங்கள் களங்கம் உள்ளவர்கள் என்று கற்பித்துவிட்டு எந்தப் பணிக்கும் தகுதி அற்றவர்கள் என்றும் விதித்துவிட்டு உங்களுக்கு வேலை செய்யும் உரிமை உண்டு என்று சொல்வதில்தான் என்ன பயன்? ஆக இந்த உரிமைகள் எல்லாம் உங்களைப் பார்த்து சிரிப்பதாக எனக்குத் தோன்றுகிறது. சட்டம் பல்வேறு உரிமைகளை உறுதி செய்யலாம். ஆனால் சமுதாயம் அனுமதித்தால்தானே நீங்கள் அவற்றை அனுபவிக்க முடியும்? தீண்டத்தகாதவர்களுக்குக் கவுரமான துணிமணிகளை அணிந்து கொள்ளும் உரிமையைச் சட்டம் வழங்கியிருக்கிறது. இந்த உரிமையால் என்ன பயன்? அப்படி அணிந்துக்கொள்ள இந்துக்கள் அவர்களை அனுமதிப்பதில்லை. உலோகக் குவளையில் தண்ணீர் மொள்ளவும், உலோகப் பாத்திரங்களில் சமைக்கவும், பரிமாறவும், கூரைகளை ஓடுகளால் வேய்ந்து கொள்ளவும் சட்டம் அனுமதிக்கிறது. ஆனால் சமுதாயம் அனுமதிப்பதில்லை. வெறும் உரிமைகளால் என்ன பயன்? இப்படிப் பல்வேறு உரிமை மீறல்களை அடுக்கிகொண்டே போகலாம். சமுதாயத்தால் அனுமதிக்கப்பட்ட உரிமைதான் உண்மையான உரிமை. சட்ட அனுமதியுண்டு. சமுதாய அனுமதியில்லை என்றால்

அது உரிமையே அல்ல. தீண்டத்தகாகதவர்களுக்குச் சட்டம் உறுதி செய்திருப்பதை விட அதிகபட்சமான சமூக விடுதலை தேவைப் படுகிறது. அது இல்லாவிட்டால் சட்ட ரீதியான சுதந்திரத்தால் எந்தப் பயனும் இல்லை. உங்களுக்குப் பௌதிக சுதந்திரம் இருக்கிறதல்லவா, எங்கு வேண்டுமானாலும் போகலாம்; என்ன வேண்டுமானாலும் பேசலாம்; அவை சட்டம் விதித்திருக்கிற கட்டுப்பாடுகளை மீறாத அளவில் சரி என்று சிலர் சொல்லுகிறார்கள்; இந்தச் சுதந்திரத்தால் தான் என்ன பயன்? மனிதனுக்கு உடல் மட்டுமில்லை; உள்ளமும் உண்டு. பௌதிக விடுதலை என்றால் என்ன? சுதந்திர எண்ணம், சுதந்திரச் செயல் இவையே பௌதிக விடுதலை, ஒரு கைதியின் விலங்குகளை அகற்றி அவனை விடுதலை செய்து விடுகிறார்கள்; இதன் உள்ளர்த்தம் என்ன? அவன் விருப்பப்படிப் எதையும் செய்யலாம் என்பதுதானே? உடல் திறன் அளவுக்குத் தகுந்தபடி அவன் செயல்படலாம், என்பதுதானே? மனத்திற்கு விடுதலை இல்லை யென்றால் இந்த உடல் விடுதலையால் அவனுக்கு என்ன பயன்? மன் விடுதலைதான் உண்மையானது. மன விடுதலையற்றவன் விலங்குகளால் பிணிக்கப்படாத நிலையிலும் ஓர் அடிமைதான். அவனது மனம் சுதந்திரமாக இல்லையென்றால் அவன் சிறைவாசம் புரியா விட்டாலும் கைதிதான். மன விடுதலையில்லாதவன் உயிரோடு உலவினாலும் பிணம்தான். மன விடுதலை அல்லது சிந்தனைச் சுதந்திரம் ஒருவனது இருப்புக்குச் சான்றாகத் திகழ்கிறது. ஒருவனது சிந்தனைச் சுதந்திரத்தின் சுடர் அணைக்கப்பட்டுவிட்டது என்றும் அல்லது அவனது மனம் விடுதலையாகி விட்டது என்றும் எப்படித் தெரிந்துக் கொள்வது? சுய உணர்வோடு தன்னுடைய உரிமைகள், பொறுப்புகள், கடமைகள் ஆகியவற்றை எவன் உணர்கிறானோ சூழ்நிலை அடிமையாக எவன் இல்லையோ, சூழலைத் தனக்கேற்ற முறையில் மாற்றிக்கொள்ள எப்போது முனைகிறானோ, அவனையே நாம் சுதந்திமானவன் என்கிறோம். பழக்கங்கள், மரபுகள், சம்பிர தாயங்கள், போதனைகள் போன்றவை அவனது முன்னோர் களிடமிருந்து வந்தவை என்பதற்காக அவற்றின் அடிமையாக மாறி விடாதவன் எவனோ அவனே சுதந்திரமான மனிதன் சரணாகதி அடையாதவன் எவனோ - எதனையும் காரண காரிய அறிவுடன் பரிசோதித்து தெரிந்துக்கொள்பவன் எவனோ அவனே சுதந்திர மனிதன் என்பேன். தன் உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ளவும், பொதுமக்கள் விமர்சனங்களுக்கு அஞ்சாமல் இருக்கவும் பிறரது கைப்பாவை ஆகாத வண்ணம் அறிவும் சுயமரியாதையும் உள்ள

ஒருவனையே நான் சுதந்திரமான மனிதன் என்பேன். பிறர் ஏவலுக்குத் தகுந்தபடி தனது வாழ்வை அமைத்துக் கொள்ளாமல் எத்தகைய வாழ்வை நடத்த வேண்டும் என்று விரும்புகிறானோ அது பற்றி தன்னுடைய சொந்த தர்க்க நியாயங்களுக்கு உட்பட்ட முறையில் அவற்றின் மீது தன் வாழ்க்கை முறையை அமைத்துக் கொள்ப வனையே நான் சுதந்திரமானவன் என்பேன். தனக்குதானே எஜமான் எவனோ அவனே சுதந்திர மனிதன்.

மேலே கூறியவற்றின் பின்னணியில் நீங்கள் சுதந்திரமானவன் தானா? உங்கள் நோக்கங்களை நீங்களே நிறைவேற்றிக் கொள்ளும் சுதந்திரம் உண்டா? உங்களுக்கு உரிமையில்லை என்பது மட்டுமல்ல அடிமையை விடவும் கேவலமான நிலையில் நீங்கள் இருக்கிறீர்கள். உங்கள் அடிமைத் தனத்திற்கு ஈடு இணையேயில்லை. இந்து மதத்தில் யாருக்குமே பேச்சு உரிமையை இழந்துவிடத் தயாராக இருக்க வேண்டும். வேதங்களின்படி நடக்க வேண்டும்; வேதங்கள் ஒரு நடத்தையை அனுமதிக்கவில்லை என்றால் ஸ்மிருதிகள் என்ன சொல்கின்றன என்று பார்க்க வேண்டும்; அவற்றிலும் தெளிவு ஏற்படாவிட்டால் மகான்கள் எடுத்துக் கொடுத்த பாதையைப் பின்பற்ற வேண்டும். இந்து மதத்தில் உணர்வு, தர்க்கம், சிந்தனை ஆகிய எதற்கும் இடம் கிடையாது; ஓர் இந்து வேதங்களுக்கோ, ஸ்மிருதி களுக்கோ, மகான்களுக்கோ; அடிமையாக இருக்கவேண்டும். தன்னுடைய சொந்த தர்க்கத்தை அவன் பயன்படுத்தக்கூடாது. இந்து மதத்தின் அங்கமாக இருக்கும் வரை உங்களுக்குச் சிந்தனை உரிமையே கிடையாது. இந்துமதம் உங்களை மட்டுமே சிந்தனை அடிமைத்தனத்தில் தள்ளிவிடவில்லை. பிற வகுப்பினரைக் கூட அப்படித்தான் சிந்தனைச் சுதந்திரம் அற்றவர்களாக ஆக்கி வைத்திருக்கிறது என்று சிலர் வாதம் செய்வது உண்மைதான். எல்லா இந்துக்களுமே சிந்தனை அடிமைத்தனத்தில்தான் ஆழ்ந்து போய்க் கிடக்கின்றனர். இதை வைத்து எல்லோர் துன்பங்களும் ஒரே மாதிரியானவை என்று முடிவு செய்ய முடியாது. இந்தச் சிந்தனை அடிமைத்தனம் ஜாதி இந்துக்களைப் பொறுத்தவரை அவர்களுக்கு உலகாய்த மகிழ்ச்சிக்கு இடையூறாக இருந்ததில்லை. வேதங்கள், ஸ்மிருதிகள், மகான்கள் என்னும் மூன்று அதிகாரிகளுக்கு எல்லா ஜாதி இந்துக்களும் அடிமைகளே. ஆனாலும் இந்துச் சமூக அமைப்பில் அவர்களுக்கு ஓர் உயர்ந்த பீடம் அளிக்கப்பட்டுள்ளது. பிறர் மீது அவர்கள் ஆளுமை செய்ய முடியும். உயர் ஜாதிகளின் நலன்

மற்றும் முன்னேற்றத்திற்காக ஜாதி இந்துக்களே உற்பத்தி செய்துக் கொண்ட மதம்தான் இந்துமதம். அவர்கள் மதம் என்று அழைக்கும் ஓர் அமைப்பில் உங்களுக்கு ஓர் அடிமைப் பாத்திரத்தைத்தான் கொடுத்திருக்கிறார்கள். அடிமை எண்ணத்திலிருந்து நீங்கள் தப்பித்து விடாமல், இருக்க எல்லா விதமான முன்னேற்பாடுகளையும் மத அமைப்பிலேயே செய்து வைத்திருக்கிறார்கள். எனவே இந்தச் சிந்தனை அடிமைத்தனத்தை உதறிவிட்டு வெளியே வருவது மிகமிக அவசியமாகிறது. இப்படி இந்தச்சிறையை உடைத்துகொண்டு வெளியே வரும் அவசியம் பிற இந்துக்களுக்கு இல்லை. இப்படித்தான் இந்துமதம் உங்கள் முன்னேற்றத்தை இரண்டு விதத்தில் சிதைத்து விட்டது. உங்கள் சிந்தனைச் சுதந்திரத்தைப் பறித்து உங்களை அடிமையாக்கி விட்டது; புற உலகிலும் உங்களுக்கு அடிமை நிலையே வழங்கப்படுகிறது. எனவே விடுதலை தேவை என்றால் நீங்கள் மதம் மாறுவதைத்தவிர வேறு வழியில்லை.

## தீண்டத்தகாதோர் அமைப்புகளும் மத மாற்றமும்

தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தின் மீது ஒரு விமர்சனம் வைக்கப் பட்டுள்ளது. தீண்டத்தகாதோர் மத்தியிலும் பல உட்பிரிவுகள் அல்லது ஜாதிகள் இருக்கின்றன; அவற்றைச் சேர்ந்தவர்கள் தத்தம் விவகாரங்களில் ஜாதியத்தைக் கடைபிடிக்கிறார்கள். ஆக அவர்களும் ஒரு வகையில் தீண்டாமையை கடைபிடிக்கிறார்கள் என்பது விமர்சனம்; சான்றாக மகர்களும் மாங்குகளும் ஒரே இடத்தில் ஒன்றாக அமர்ந்து உண்ணுவதில்லை. இந்த இரண்டு ஜாதிகளும் மலம் அள்ளுவோரைத் தொடுவதில்லை. இப்படி இருக்கும்போது உயர் ஜாதிகள் தீண்டாமையை அனுசரிக்கக் கூடாது என்று எப்படி எதிர்ப் பார்க்க முடியும் என்னும் கேள்வி அடிக்கடி கேட்கப்படும் கேள்வி. முதலில் உங்களுக்குள் இருக்கும் ஜாதி அமைப்பை உடையுங்கள். பிறகு நால்வர்ண ஜாதி அமைப்பினால் ஏற்படும் குறைகளைத் தீர்த்துக் கொள்ள எங்களிடம் வாருங்கள் என்கிறார்கள். இந்த விமர்சனத்தில் உண்மை இருப்பதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். அதே சமயம் ஒட்டுமொத்தமான தீண்டாமைக்கு இது சமாதானமாக அமைய முடியாது. தீண்டத் தகாகதவர்களுக்குள்ளும் ஜாதிகள் உண்டு. அவர் களிடையே ஜாதியும் உண்டு, தீண்டாமையும் உண்டு. அமைப்பு அடிப்படையில் நிகழும் இந்தக் குற்றங்களுக்கு அவர்கள் பொறுப் பல்ல. ஜாதியும் தீண்டாமையும் அவர்களால் அவர்களிடம்

தோன்றியவை அல்ல. உயர் ஜாதி இந்துக்களிடமிருந்து தோன்றியவை. இவற்றை நடைமுறையில் கொண்டு வந்தவர்கள் ஜாதி இந்துக்கள். எனவே, இந்த ஜாதியத் தீண்டாமை என்னும் மரபுக்கும் பொறுப்பு அவர்களே, தீண்டத்தகாதவர்கள் அல்ல. எனவே தீண்டத்தகாத தவர்களிடையே நிலவும் இந்தக் கொடுமையான உள் ஜாதியத்திற்கு அதைக் கற்பித்தவர்களே பொறுப்பேற்க வேண்டுமே தவிர கற்றுக் கொண்டவர்கள் அல்ல- முன்னே கூறிய விமர்சனத்திற்கு இப்படி ஒரு பதில் உண்டு. மேலோட்டமாகப் பார்க்கும் போது இந்தப் பதில் சரியானதுதான் என்று தோன்றுகிறது. ஆனால் இந்தப் பதில் எனக்கு திருப்திகரமாக இல்லை. ஜாதியும் தீண்டாமையும் நமக்குள் வேர் பிடித்ததற்கு நாம் காரணமில்லை. என்றாலும் கூட. இத்தகைய விஷ வேர்களை நாம் கண்டிக்காமல் இருப்பதும் தொடர்ந்து அனுசரித்து வருவதும் சரியில்லை. ஜாதி, தீண்டாமை இரண்டையும் வேரறுப் பதில் நமக்கும் பங்குண்டு பொறுப்புண்டு. இந்தப் பொறுப்பை நாம் எல்லோரும் உணர்த்திருக்கிறோம் என்பதில் எனக்கு மகிழ்ச்சி. மகர்களிடையே ஜாதியத்துக்காக எந்தத் தலைவரும் வாதாடு வதில்லை. இந்த விஷயத்தில் மகர் சமூகத்துப் படித்த அறிவாளிகளின் விமர்சனத்தை ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். மகர் சமூகத்துப் படித்த வர்க்கம் ஜாதி ஒழிப்பில் முனைப்புக் காட்டுவது அப்போதுதான் தெரியவரும். இந்தப் படித்த மகர்கள் மட்டும்தான் ஜாதி ஒழிப்பில் ஆர்வம் காட்டுகின்றார்கள் என்று சொல்ல முடியாது. படித்த மகர்கள் மட்டுமல்ல படிக்காத மகர்களும் ஜாதி ஒழிப்பில் முன்னணியில் நிற்கிறார்கள். இதையும், நாம் நிருபிக்க முடியும். இன்றைய தினம் மகர்-மாங்க் ஜாதிகள் ஒன்றாக அமர்ந்து உண்ணுவதை எந்த மகரும் எதிர்ப்பதில்லை. இதில் எனக்கு முழுத்திருப்தி. மகர்கள் ஜாதி ஒழிப்பில் ஒரு குறிப்பிட்ட எல்லையைக் கடந்து விட்டார்கள். அதற்காக அவர்களுக்கு மனமார்ந்த பாராட்டுகள். ஜாதியையும் தீண்டாமையையும் எத்தகைய முயற்சிகள் மூலம் அழித்து ஒழிப்பதில் வெற்றி பெற முடியும் என்று நீங்கள் எண்ணிப் பார்ப்பது உண்டா? வெறும் சேர்ந்துண்ணல் அல்லது இங்கொன்றும் அங்கொன்றுமாக கலப்புத் திருமணங்கள் மூலம் மட்டுமே ஜாதியத்தை ஒழித்து விட முடியாது. ஜாதியம் என்னும் நோயின்மூல வேர்கள் இந்து மதப் போதனைகள் தான். ஜாதி என்பது ஒரு மனநிலை; அது ஒரு மன நோய். நாம் வாழும் இந்து மதத்தில் நாம் ஜாதியத்தைக் கடைப்பிடிக்கிறோம்; தீண்டாமையை அனுசரிக் கிறோம். ஏன் இந்து மதம். நம்மை அப்படிச் செய்ய வைக்கிறது? ஒரு கசப்பான பொருளை

இனிப்பாக மாற்ற முடியும். உப்பு கரிப்பதையும் மாற்ற முடியும். ஆனால் நஞ்சை அமிர்தமாக மாற்றமுடியாது. இந்து மதத்தில் இருந்து கொண்டே ஜாதிகளை ஒழிப்பேன் என்பது நஞ்சை அமிர்த மாக்குவது போலத்தான்.

சுருக்கமாகச் சொன்னால் ஒரு மனிதனை இன்னொருவன் இழிவாக நடத்த வேண்டும் என்று கற்பிக்கும் மதத்தில் நாம் இருக்கும் வரை ஜாதி அடிப்படையிலான பிரிவினை உணர்ச்சி, பாரபட்ச உணர்வு நம் இதயத்திலிருந்து அறவே அகற்றப்பட முடியாது. தீண்டத்தகாதவர்களிடையே ஜாதியமும் தீண்டாமையும் ஒழிக்கப் பட வேண்டுமானால் மத மாற்றம் ஒன்றுதான் மாற்று மருந்து.

## பெயர் மாற்றமும் மத மாற்றமும்

மத மாற்றத்திற்கு ஆதரவான வாதங்களை நான் இதுவரையில் உங்கள் முன் வைத்தேன். இது உங்கள் சிந்தனையைத் தூண்டும் என்று நம்புகிறேன். இந்த விவாதம் ஆழமானது என்று கருதுவோருக்கும் இதே சிந்தனை நாட்டத்தை இன்னும் எளிய மொழியில் விவரிக்க விரும்புகிறேன். மத மாற்றத்தில் அப்படியென்ன புதுமை இருக்கிறது? ஜாதி இந்துக்களோடு நீங்கள் கொள்ளும் சமூக உறவுகள் எத்தகையவை? இந்துக்களிடமிருந்து முஸ்லீம்களும், கிறிஸ்தவர் களும் எப்படிப் பிரிந்து வாழ்கிறார்களோ, அப்படித்தான் நீங்களும் பிரிந்து வாழ்கிறீர்கள். முஸ்லீம்களோடும் கிறிஸ்துவர்களோடும் சேர்ந்துண்ணல், கலப்பு மணம் புரிதல் ஆகியவற்றை இந்துக்கள் வைத்துக் கொள்வதில்லை. உங்களோடும் அப்படித்தான். நீங்களும் இந்துக்களும் இரண்டு தனித்தனிப் பிரிவுகளாகவே வாழ்கிறீர்கள். எனவே மதமாற்றத்தால் ஒரு சமூகம் இரண்டாகப் பிரிந்து விட்டது என்று எவரும் சொல்லப்போவதில்லை. இன்று எப்படி இருக்கிறீர் களோ, அதே போல்தான் மத மாற்றத்திற்குப் பின்பும் இருக்கப் போகிறீர்கள். இந்த மதமாற்றத்தால் எந்தப் புதுமையும் ஏற்பட்டுவிட போவதில்லை, அப்படியிருக்கும்போது மதமாற்றம் என்றாலே சிலர் அஞ்சுவதை என்னால் புரிந்துகொள்ள முடிவதில்லை. மத மாற்றத்தின் முக்கியத்துவம் உங்களுக்குப் புரியாமல் இருக்கலாம். பெயர் மாற்றத்தின் முக்கியத்துவம் நிச்சயம் புரிந்திருக்கும். யாரேனும் ஒருவரை நீங்கள் யார் என்னவென்று கேட்டால் அரிஜன் என்கிறீர்கள். மகர் என்று யாருமே சொல்வதில்லை. சூழல்களின்

அவசியத்தால்தான் நாம் பெயர் மாற்றம் செய்து கொள்கிறோம். பெயர் மாற்றத்திற்கான காரணம் மிகமிக எளிமையானது. ஒருவன் தீண்டத்தக்கவனா, இல்லையா, என்பது அவனுடைய ஜாதி மூலம் தெரிய வருகிறது. ஜாதி தெரியா விட்டால் அது தெரியப் போவதில்லை தீண்டத்தகாதவன் என்று தெரியாத பட்சத்தில் அவன் மீது வெறுப்புத் தோன்றப் போவதில்லை. இன்னின்ன ஜாதிகளைச் சேர்ந்தவர்கள் என்பது தெரியாமல் பயணம் செய்கிறபோது ஜாதி இந்துக்களும் தீண்டத்தகாகதவர்களோடு நட்போடுதான் பழகு வார்கள். ஜாதி தெரிந்துவிட்டால் அந்த நட்பு மாறிவிடும். முதலில் அவர்கள் வெற்றிலை பாக்கு, பீடி சிகரெட், பழங்கள் ஆகியவற்றைப் பரிமாறிக் கொண்டிருப்பார்கள். தாம் பேசிக் கொண்டிருக்கும் மனிதன் தீண்டத்தகாகதவன் என்று தெரிந்து விட்டால் அந்தக் கணமே ஜாதி இந்துவின் மனத்தில் வெறுப்பு உற்பத்தியாகத் தொடங்குகிறது. முதலில் அவனுக்குக் கோபம் வரும். தொடக்கத்தில் தோன்றிய தற்காலிக நட்பு இறுதியில் வசைச் சொற்களிலும் கை கலப்பிலும் முடியும். நிச்சயம் உங்களுக்கும் இத்தகைய அநுபவங்கள் நேர்ந்திருக்கும். ஏன் நேர்ந்தது என்னும் உண்மையும் தெரிந்திருக்கும். உங்கள் ஜாதியைக் குறிக்கும் பெயர்கள் கூட அசுத்தமானவை என்று கருதப்படுகின்றன. அவற்றை உச்சரிக்கும் போதே ஜாதி இந்துக் களுக்கு வாந்தி வருவது போன்ற ஒரு வேதனை. இதனால் பிறரை ஏமாற்ற மகர் என்று சொல்வதற்குப் பதிலாக சொக்கமேளா என்று சொல்லுகிறீர்கள். ஆனால் மக்கள் ஏமாறுவது இல்லை. சொக்கமேளா என்றாலும் சரி அரிஜன் என்றாலும் சரி நீங்கள் யாரென்று அவர்களுக்குத் தெரியும். ஆகவே பெயர் மாற்றம் அவசியமானது என்பதை உங்கள் பழக்கத்தின் மூலமாக நீங்கள் நிரூபித்து விட்டீர்கள். பெயர் மாற்றத்திற்கான தேவையை நீங்கள் உணரும்போது மத மாற்றத்திற்கான தேவைக்கு எப்படித் தடை சொல்ல முடியும்? மத மாற்றம் பெயர் மாற்றம் போன்றதுதான். மத மாற்றத்தின் போதே பெயர் மாற்றமும் நடந்து விடுகிறது. அது உங்களுக்கு நன்மையாகவும் இருக்கிறது. முஸ்லீம், கிறித்துவர், புத்த மதத்தினர், சீக்கியர் என்பது மத மாற்றம் மட்டுமல்ல பெயர் மாற்றமும் கூட. இதுதான் உண்மையான பெயர் மாற்றம். நீங்கள் மேற்கொள்ளப் போகும் புதிய பெயரில் எந்தவித இழிவும் இருக்காது. இந்தப் பெயர் மாற்றம் ஒரு மகத்தான மாற்றம். புதிய பெயரின் மூலப் பெயர்களை யாரும் கண்டறியப் போவதில்லை. சொக்கமேளா - அரிஜன் என்ற பெயர் மாற்றங்களில் அர்த்தமே இல்லை. உங்கள் பழைய

பெயருக்குள்ள அதே இழிவு இந்தப் பெயர்களுக்கும் உண்டு. அதே வெறுப்பு இவற்றின் மீதும் காட்டப்படும். இந்து மதத்தில் இருக்கும் வரை இப்படிப் பெயர் மாறிக் கொண்டே இருக்க வேண்டியதுதான். நான் இந்து என்று சொல்லிக் கொள்வதில் எந்தக் கோணத்திலும் முழுமை இல்லை. இந்து என்று ஒருவர் இருப்பதாக எவருமே ஏற்பதேயில்லை, எனவே மகர் என்று உங்களை நீங்கள் அழைத்துக் கொள்வதில் எந்தப் பயனும் இல்லை. மகர் என்று உங்களை நீங்கள் அழைத்துக் கொள்வதால் எவரும் உங்களை நெருங்கப் போவதில்லை. இன்று ஒரு பெயரும் நாளை ஒரு பெயருமாக, கடிகாரத்தின் ஊசல் போல் வாழ்வதில் என்ன லாபம்! ஆகவே மத மாற்றத்தின் மூலம் உங்கள் பெயரையும் நிரந்தரமாக மாற்றிக் கொள்ளுங்கள்.

## எதிரிகளின் பங்கு

மத மாற்ற இயக்கம் தொடங்கியதிலிருந்தே பல எதிர்ப்புகள். அந்த எதிர்ப்புகளில் ஏதேனும் உண்மை இருக்கிறதா என்று பரிசோதிப்போம். மத அடிப்படையில் வாழ்வதாகப் பாசாங்கு செய்யும் சில இந்துக்கள் உங்களுக்கு உபதேசம் செய்கிறார்கள். மதம் என்பது பொழுது போக்கு அல்ல. உடை மாற்றுவதுபோல் மதத்தை மாற்ற முடியாது. நீங்கள் இந்து மதத்திலிருந்து விலகி வேறு மதத்திற்குப் போக இருக்கிறீர்கள். இந்து மதத்தில் நீடிக்காத உங்கள் முன்னோர்கள் எல்லோரும் முட்டாள்களா? என்றெல்லாம் அறிவாளிகள் என்று தம்மை நினைத்துக் கொள்ளும் சிலர் கேட்பார்கள். அவர்கள் கேள்வியில் எந்த அர்த்தமும் இல்லை. முன்னோர்கள் மதம் என்பதற்காக அதிலேயே நீடிக்க வேண்டும் என்று நினைப்பது மடமை. அறிவாளிகள் அந்த செயல்பாட்டை ஏற்க மாட்டார்கள். முன்னோர் மதங்களிலிருந்து மாறக் கூடாது என்று வாதிடுவோர்கள் சரித்திரம் படித்தவர்கள் அல்ல; பழைய ஆரிய மதத்திற்கு வேத மதம் என்று பெயர். அதற்கு மூன்று குணாம்சங்கள் உண்டு. 1. மாட்டு இறைச்சி உண்ணுதல், 2. மது அருந்துதல், 3. கேளிக்கைகளில் ஈடுபடுதல். இம்மூன்றும் அன்றைய மரபுகள். இந்திய மக்கள் பல்லாயிரம் பேர் இப்படித்தான் வாழ்ந்தார்கள். சில பிராமணர்கள் இன்றும் கூட அந்த வாழ்க்கைக்குத் திரும்பி போக முடியாதா என்று கனவு காண்கிறார்கள். பழைய மதக் கொள்கைகளையே பின்பற்ற வேண்டும் என்றால் ஏன் இந்திய மக்கள் ஒரு காலத்தில் இந்து மதத்திலிருந்து புத்த மதத்திற்கு மாறினார்கள்? ஏன்

ஜைன மதத்திற்கு மாறினார்கள்? நம் முன்னோர்கள் பழைய இந்து மதத்தில் இருந்தார்கள் என்பது உண்மைதான். ஆனால் அப்படி இருக்கவே விரும்பினார்கள் என்பதை என்னால் ஒப்புக் கொள்ள முடியாது. நால் வர்ண அமைப்பு நீண்டகாலம் இந்நாட்டில் நீடிந்துள்ளது. இவ்வமைப்பில் பிராமணர்கள் மட்டுமே கல்வி கற்க முடியும். சத்திரியர்கள் மட்டுமே போரிட முடியும், வைசியர்கள் மட்டுமே பொருளீட்ட முடியும், சூத்திரர்கள் மட்டுமே ஏவல் செய்ய முடியும் இதுதான் அன்றைய விதி. சூத்திரர்களுக்குக் கல்வியில்லை, சொத்தில்லை, போர்க்கருவிகளும் இல்லை. இப்படி உங்கள் முன்னோர்கள் வறுமையிலும் பாதுகாப்பற்ற சுழலிலும் வளரும்படி கட்டாயப்படுத்தப்பட வில்லை, இவற்றைத் தன்னிச்சையாக ஏற்றுக் கொண்டு வாழ்ந்தார்கள் என்று எந்த புத்தியுள்ள மனிதனும் சொல்ல மாட்டான். அதே சமயம் உங்கள் முன்னோர்களால் இந்த மதத்தை எதிர்த்துக் கிளர்ச்சி செய்யவும் முடியவில்லை. அப்படி முடிந் திருந்தால் அவர்கள் மதத்தைத் தனிச்சையாக ஏற்றுக் கொண்டவர்கள் என்பதை நாம் நம்பமுடியும்; அன்றிருந்த சூழலை ஆராயும்போது கட்டாயத்தின் பெயரிலேயே நமது முன்னோர்கள் இந்துக்களாக இருந்தார்கள் என்பது தெரிகிறது. ஆக இந்து மதம் நம் முன்னோர் களின் மதம் அல்ல; மாறாக அவர்கள் மீது திணிக்கப்பட்ட அடக்கு முறை; இந்த அடக்குமுறையை எதிர்த்துக் கிளர்ச்சிசெய்ய அவர் களிடமும் எந்தச் சாதனங்களும் இல்லை. ஆகவே அவர்கள் கட்டா யத்தின் காரணமாக அடிமைகளாக வாழ்ந்தார்கள். அவர்களைக் குற்றம் சொல்வதில் பயனில்லை. அவர்கள் அநுதாபத்திற்குரிய வர்கள். இன்றைய தலைமுறை மீது எந்த விதமான அடிமைத் தனத்தையும் புகுத்த முடியாது. இவர்களுக்கு எல்லா சுதந்திரங்களும் உள்ளன. இந்தச் சுதந்திரச் சுழலிலும் கூட தங்களை தாங்களே விடுவித்துக் கொள்ளாவிட்டால் இவர்களை என்னவென்று சொல்வது? கேவலமானவர்கள், அடிமைகள், சார்ந்து வாழவே பிறந்தவர்கள் என்றுதான் இவர்களை குறித்து வருந்த வேண்டும்.

## மனிதனுக்கும் விலங்குக்கும் உள்ள வேறுபாடு

முன்னோர் வழியாக வந்தது என்பதற்காக இந்து மதத்தில் விடாப்பிடியாக நீடிப்பது மடையர்களுக்குதான் பொருத்தமாக இருக்கும். எந்த அறிவாளியும் அப்படியொரு வாதத்தை முன் வைக்க மாட்டான். இந்த வாதம் விலங்குகளுக்குப் பொருந்தும்.

மனிதர்களுக்கு அல்ல. மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் என்ன வித்தியாசம்? மனிதன் முன்னேறுவான், விலங்கால் முன்னேற முடியாது. மாற்றம் இல்லாமல் நமது முன்னேற்றம் சாத்தியமில்லை. மத மாற்றம் என்பது ஒருவகை மாற்றம்தான், மத மாற்றம் இல்லாமல் முன்னேற்றம் இல்லையென்றால் மத மாற்றமும் மிகமிக அவசிய மாகிறது. முன்னேறும் மனிதனுக்கு முன்னோர் மதம் என்பது ஒரு தடைக்கல்லே அல்ல.

மதமாற்றத்திற்கு எதிராக இன்னொரு வாதமும் உண்டு. மத மாற்றம் என்பது ஒரு தப்பித்தல் மார்க்கம் என்பதுதான் அது. இன்று சில இந்துக்கள் இந்து மதத்தைச் சீர்திருத்துவது தகாத வாதம் என்று கிளம்பியிருக்கிறார்கள். இச்சீர்த்திருத்தத்தினால் தீண்டாமையும், ஜாதியும் ஒழிந்து விடும் என்று அவர்கள் அறைகூவுகிறார்கள். எனவே இந்தக் கட்டத்தில் மத மாற்றம் சரியில்லை என்கிறார்கள். இந்து சமூக சீர்திருத்தவாதிகளிடம் எப்படிப்பட்ட கருத்துகள் நிலவினாலும் சரி, எனக்கு அவர்களை நினைத்தால் கசப்பு உணர்ச்சிதான் ஏற்படுகிறது. அவர்களோடு எனக்கு அநுபவங்கள் உண்டு. அவற்றின் அடிப் படையில் இந்த அரைகுறை அறிவாளிகள் மீது எனக்கு வெறுப்பு தான் மேலிடுகிறது. இப்படிப்பட்டவர்கள் தங்கள் ஜாதியிலேயே வாழ்ந்து தங்கள் ஜாதிக்குள்ளேயே திருமணம் செய்து, தங்கள் ஜாதியிலேயே செத்தும் போகிறவர்கள். பொய் முழக்கங்களைச் சொல்லி மக்களை முட்டாள் ஆக்குகிறார்கள். தீண்டத்தகாதவர்கள் எங்களை நம்ப மறுத்ததினால் தங்கள் எதிர் ஜாதிகளை மீறிக் காட்டு கிறோம் என்று இவர்கள் பொய் முழக்கம் செய்கிறார்கள். இவர்களது முழக்கங்களைக் கேட்கும்போது நீக்ரோக்கள் விடுதலைக்காக அமெரிக்க வெள்ளையர்கள் செய்த முயற்சிகள் நினைவுக்கு வருகிறது. பல ஆண்டுகளுக்கு முன்பு அமெரிக்க நீக்ரோக்கள் இந்தியத் தீண்டத் தகாதோர் போலவேதான் வாழ்ந்தார்கள். வித்தியாசம் என்ன வென்றால் நீக்ரோவின் அடிமைத்தனம் அங்கே சட்டத்தால் விதிக்கப் பட்டது. இங்கோ அது மதத்தால் உருவானது: சில அமெரிக்க சீர்திருத்தவாதிகள் நீக்ரோ. அடிமைத்தனத்தை ஒழிக்க முயற்சி செய்தார்கள். அவர்களோடு இந்துச் சமூக சீர்திருத்தவாதிகளை ஒப்பிட முடியுமா? வெள்ளை அமெரிக்க சீர்திருத்தவாதிகள் தமது சொந்தபந்தங்களுடன் சேர்ந்து கொண்டு நீக்ரோ விடுதலைக்காகப் போர் புரிந்தார்கள். அடிமை முறையை ஆதரித்த காரணத்தால் தங்கள் இனத்தைச் சார்ந்த வெள்ளையர்களையே ஆயிரக்கணக்கில் கொன்று

குவித்தார்கள். ரத்தத்தைச் சிந்தித் தியாகம் புரிந்தார்கள். வரலாற்றுப் பக்கங்களில் இந்த நிகழ்வினைப் படிக்கும்போது அவர்களையும் இந்திய சீர்திருத்தவாதிகளையும் எந்த விதத்திலும் ஒப்பிடமுடியாது என்பது புரியும். அவர்கள் எங்கே? இவர்கள் எங்கே? இந்துச் சீர்திருத்த வாதிகளை அதாவது தீண்டத்தகாதவர்களின் மீட்பவர்களைப் பார்த்து ஒரு கேள்வி கேட்க வேண்டும். வெள்ளையர்கள் அடிமைத் தனத்தை ஒழிக்க அமெரிக்காவில் தங்கள் சொந்தச் சகோதரர்களை எதிர்த்தே போரிட்டார்களே, அதே போல் இங்கே உங்கள் இந்துச் சகோதரர்களுடன் ஓர் உள்நாட்டுப் போர் நடத்த நீங்கள் தயாரா? தயார் இல்லை என்றால் சீர்திருத்தம் என்று வாய்கிழியப் பேசுவதில் என்ன பயன்? தீண்டத்தகாதவர் பிரச்சினைக்காகப் போராடிய இந்துக்கள் மகாத்மா காந்தியைத்தான் மகத்தான தலைவராகக் கொண்டிருக்கிறார்கள். எந்த அளவு மகாத்மா போக முடியும்? பிரிட்டிஷ் அரசாங்கத்தை எதிர்த்து அகிம்சைப் போரைத் தலைமை தாங்கி நடத்தும் அவர் தீண்டத்தகாதோரை நசுக்கும் ஜாதி இந்துக் களின் உணர்வைக் காயப்படுத்துவதற்குக் கூடத் தயாரில்லையே. அவர்களுக்கு எதிராக ஓர் அறப்போர் நடத்தவும் தயாரில்லையே. சட்ட ரீதியான நடவடிக்கை எடுக்கக்கூட அவர் முன் வரவில்லையே. எனவே இத்தகைய சீர்திருத்த வாதிகளால் எந்தப் பயனும் கிட்டப் போவதில்லை.

## தீண்டத்தகுந்தோரே தவறுக்குப் பொறுப்பாளிகள்

தீண்டத்தகாதோர் நடத்தும் பொதுக் கூட்டங்களில் சில இந்துக்கள் பங்கேற்று ஜாதி இந்துக்களைக் கடுமையாகக் கண்டிக் கிறார்கள். சிலர் தீண்டத்தகாதோருக்கு அந்த மேடையில் இருந்த படியே அறிவுரை சொல்கிறார்கள். சகோதரர்களே, தூய்மையாக வாழுங்கள். கல்வி கற்றுக் கொள்ளுங்கள், நீங்கள் உங்களையே சார்ந்திருங்கள் என்றெல்லாம் பேசுகிறார்கள். உண்மையில் ஜாதி இந்துக்களே இந்த அவல நிலைக்குப் பொறுப்பேற்க வேண்டும். அவர்களே தவறு செய்தவர்கள். தவறு செய்த ஜாதி இந்துக்களை ஒன்றாகத் திரட்டி அவர்களைத் தண்டிக்க யாரும் தயாரில்லை. சிலர் இந்துக்களோடு சேர்ந்துக்கொண்டு இந்து மதத்தில் இருந்தபடியே உங்கள் போராட்டத்தைத் தொடருங்கள் என்று உபதேசம் செய்கிறார்கள். அவர்களுக்கு வரலாற்றிலிருந்து சில எடுத்துக் காட்டுகள், காண்பிக்க விரும்புகிறேன். சென்ற உலகப் போரின் போது

ஓர் அமெரிக்கச் சிப்பாய்க்கும் ஆங்கிலச் சிப்பாய்க்கும் நடந்த உரையாடலை நான் படித்திருக்கிறேன். இந்த நேரத்தில் அந்த உரையாடல் மிகப் பொருத்தமாகத் தெரிகிறது. போர் எவ்வளவு நாள் நீடிக்கும் என்று அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். அமெரிக்கன் கேட்ட கேள்விக்கு ஆங்கிலேயன் மிகவும் பெருமையாகப் பதில் சொன்னான்: "கடைசி பிரஞ்சுக்காரன் கொல்லப்படும் வரை நாம் போரிடுவோம்." அதே போல்தான் தீண்டத்தகாதோர் விடுதலைக்காக இறுதி மூச்சு வரை போராடுவோம் என்று இந்து சமூகச் சீர்திருத்த வாதிகள் பேசுகிறார்கள். அதாவது, கடைசி தீண்டத்தகாதவன் இறக்கும் வரை போராடப் போகிறார்கள். அவர்களுடைய பிரகடனத்தை இப்படித்தான் நான் பொருள் கொள்கிறேன். பிறரை அழிப்பதற்காகவே ஒரு போர் என்றால் அந்தப் போரில் நாம் வெற்றி பெறவே முடியாது. போரில் நாமே சாகப் போகிறோம் என்றால் தவறான இடத்தில் இருந்துக்கொண்டு அப்படிப் போராடுவதில் பயன் என்ன? இந்துச் சமூகத்தைச் சீர்திருத்துவது நமது நோக்கமல்ல. அந்த வேலை நம்முடைய வேலையுமல்ல. நமது நோக்கம் நமது விடுதலை மட்டுமே. மற்றவை நமக்குத் தொடர்பில்லாதவை மதமாற்றத்தின் மூலம் விடுதலை பெற முடியும் என்னும்போது இந்து சமூகத்தைத் திருத்தும் பொறுப்பு நமக்கு ஏன்? நமது சக்தி, நமது சொத்து முதலியவற்றை அந்த மேடையில் நாம் ஏன் தியாகம் செய்ய வேண்டும்? நமது மைய நோக்கம் இந்து சீர்திருத்தம் என்று தவறாகப் புரிந்து கொள்ளக் கூடாது. நமது நோக்கம் தீண்டத்தகாதோரின் சமூக விடுதலை. மதமாற்றமல்லாமல் வேறு வழிகளில் இதனை வென்று எடுக்க முடியாது. தீண்டத்தகாதோருக்கு சமத்துவம் தேவை. இதுவும் நமது இயக்கத்தின் நோக்கம்தான். இந்தச் சமத்துவத்தை இந்து மதத்தில் நீடிப்பதன் மூலம் தான் பெறமுடியும் என்பதில்லை. எனக்குத் தெரிந்தவரை சமத்துவத்தை இரண்டு வழிகளில் அடையமுடியும். ஒரு வழி இந்துவாக இருந்து கொண்டே அதை வென்றெடுப்பது. -இரண்டு - மத மாற்றம். இந்துவாக இருந்துக் கொண்டே சமத்துவம் பெற வேண்டுமானல் நாம் சுத்தமானவர்களாக ஆனால் மட்டும் போதாது. சேர்ந்துண்ணல், கலப்பு மணம், ஆகியவையும் நடைபெற வேண்டும். இதன் பொருள் நால்வர்ணம் ஒழிக்கப்படவேண்டும். பிராமண மதத்தை வேரோடு சாய்க்க வேண்டும். இது நடக்கக் கூடிய காரியமா? நடக்க முடியாது என்னும் போது இந்து மதத்தில் இருந்துக் கொண்டே சமத்துவத்தை எதிர்பார்க்க முடியுமா? உங்கள் முயற்சிகளில் நீங்கள் வெற்றி பெற முடியுமா? இதைவிட மதமாற்றப்

பாதை சுலபமானது. இந்தச் சமூகம் முஸ்லீம்களைச் சமமாக நடத்துகிறது. கிறிஸ்துவர்களையும் அப்படியே நடத்துகிறது. சமூக சமத்துவம் மதமாற்றத்தின் மூலம் சுலபமாக பெறப்படும். இந்தச் சுலபமான வழியை ஏற்பதற்கு என்ன தயக்கம்? மத மாற்றத்தால் இரு சாராருக்கும் மகிழ்ச்சியே ஏற்படும். நீங்கள் இந்துவாக இருக்கும் வரை அசுத்தம் செய்கிறீர்கள் என்னும் குற்றச்சாட்டிலிருந்து மீள்வதற்காகப் போராட வேண்டியிருக்கும். குடிநீர், உணவு, கலப்பு மணம், ஆகியவற்றிற்காகவும் போராட வேண்டியிருக்கும். இந்த மோதல் நீடிக்கும் வரை நீங்களும் இந்துக்களும் ஒருவருக்கொருவர் பரம்பரை பகைவர்களாகவே இருப்பீர்கள். மதம் மாறினால் இந்த மோதல் களுக்கான அடிப்படை வேர்கள் அடியோடு மறைந்து போகும். அவர்கள் கோயில்களுக்குள் நீங்கள் நுழைய வேண்டிய தேவையும் இல்லை. அதற்காகப் போராட வேண்டிய அவசியமும் இல்லை. சேர்ந்துண்ணல், கலப்பு மணம் ஆகிய சமூக உரிமைகளுக்காகப் போரட வேண்டிய கட்டாயமும் இல்லை. இந்த மோதல்கள் நின்று விடும்போது உங்களுக்கிடையில் அன்பும், நட்பும், உருவாகும். இந்துக்களுக்குள் இன்று நிலவும் உறவுகளையும் கிறிஸ்தவர்கள் முஸ்லீம்கள் ஆகியவர்களோடு இந்துக்களின் உறவுகளையும் ஒப்பிட்டுப் பாருங்கள் உங்களைப் போலவே கிறிஸ்தவர்களையும் முஸ்லீம்களையும் இந்துக்கள் தமது கோவில்களுக்குள் அனுமதிப்ப தில்லை. அவர்களிடையே சேர்ந்துண்ணல், கலப்பு மணம், ஆகியவையும் இல்லை. இருந்தபோதும் அந்த இரு மதத்தாருக்கும் இந்துக்களுக்கும் இடையே நேசமும் அன்பும் இருக்கத்தான் செய்கின்றன. இந்த வேறுபாட்டிற்குக் காரணம் என்ன? நீங்கள் இந்து மதத்தில் இருக்கும் வரை உங்கள் சமூக, மத உரிமைகளுக்காக இந்து சமூகத்துடன் போராட வேண்டியிருக்கிறது. இந்து மதத்திலிருந்து வெளியேறிவிட்ட காரணத்தால் முஸ்லீம்களுக்கும், கிறிஸ்தவர் களுக்கும் இந்தப் போராட்டத்தின் அவசியமும் போய்விட்டது. இந்துச் சமூகத்தில் எந்த சமூக உரிமையும் அவர்களுக்கும் இல்லை தான். அதாவது சேர்ந்துண்ணல், கலப்பு மணம் போன்றவை; அதற்காக இந்துக்கள் அவர்களைத் தாழ்வாகவும் நடத்துதில்லை எனவே மதமாற்றத்தின் மூலம் சமத்துவம் வென்றெடுக்கப்படும் எனலாம். இந்துக்களுக்கும், தீண்டத்தகாதோருக்கும் இடையிலான நட்பும், நேசமும் பாதுகாக்கப்படும், அப்படி இருக்கும்போது இந்த எளிய மகிழ்ச்சிகரமான வழியின் மூலம் சமத்துவம் பெறுவதில் நீங்கள் ஏன் தயக்கம் காட்ட வேண்டும்? பிரச்சினையை இந்தக்

கோணத்தில் அணுகுங்கள். மதமாற்றமே விடுதலைப் பாதைக்கான சரியான வழி. அதுவே இறுதியில் சமத்துவத்தை நமக்கு ஈட்டித் தருவது. சமத்துவம் என்பது தப்பி ஓடும் பாதை ஆகாது. கோழையின் பாதையும் ஆகாது. மாறாக அது அறிவாளிகளின் மார்க்கம்.

மத மாற்றத்திற்கெதிராக இன்னொரு வாதமும் வைக்கப் பட்டிருக்கிறது. ஜாதி அமைப்பில் விரக்தி அடைந்து போய், மத மாற்றம் செய்து கொள்வது வீண்முயற்சி என்று சில இந்துக்கள் சொல்கிறார்கள். நீங்கள் எங்கே சென்றாலும் அங்கேயும் ஜாதி பயம் இருக்கிறது. என்பது அவர்களுடைய வாதம். இஸ்லாமிலும்., கிறிஸ்தவத்திலும் ஜாதியம் இருக்கிறது என்கிறார்கள். துர்பாக்கிய வசமாக இந்நாட்டில் மற்ற மதங்களிலும் ஜாதி அமைப்பு ஊடுருவி விட்டது உண்மைதான். இந்த மாபெரும் பாவத்தை அணுஅணுவாக வளர்த்தவர்கள் இந்துக்களே. ஜாதியம் முதன்முதலில் இந்து மதத்தில் தான் தோன்றியது. பிறகு பிற மதங்களையும் தொற்றியது. இஸ்லாமிலும் கிறிஸ்தவத்திலும் ஜாதிகள் இருப்பது உண்மை யானாலும் அவற்றை இந்து மத ஜாதியத்தோடு ஒப்பிடுவது சரியில்லை. இரண்டுக்கும் பெருத்த வேறுபாடு உண்டு. கிறிஸ்தவத் திலோ, இஸ்லாமிலோ அவர்களது சமூக அமைப்பின் தலையான அம்சமாக ஜாதியம் இருக்கிறது என்று எவரும் வாதிட முடியாது. நீங்கள் யார் என்று ஒரு முஸ்லீமை கேட்டால் நான் ஒரு முஸ்லீம் என்று பதில் வரும். அதே கேள்விக்கு நான் ஒரு கிறித்துவன் என்று கிறித்துவத்தில் பதில் வரும். அவர்களுக்கு அதுவே போதும். அதற்குள் எந்த ஜாதி என்று யாரும் கேட்பதில்லை. அதே கேள்வி இந்துவைக் கேட்டால் இந்து என்னும் பதிலுடன் எவரும் திருப்தி அடைந்து விடுவதில்லை. எந்த ஜாதியென்று அடுத்த கேள்வி கிளம்பும். இதற்குப் பதில் சொல்லாமல் ஒருவனுடைய சமூகத் தகுதியைத் தெரிந்து கொள்ளவோ தெரிவிக்கவோ முடியாது. இதிலிருந்து தெரிவது என்ன வென்றால் இந்து மதத்தில் ஜாதியத்திற்கு அதிக பட்ச முக்கியத்துவம் உண்டு. மற்ற இரு மதங்களிலும் அப்படியில்லை. இன்னொரு வேறுபாடும் உண்டு. இந்துக்கள் அனுசரிக்கும் ஜாதி அமைப்பு முறை இந்து மதத்தின் அடிப்படையாக உள்ளது. பிற மதங்களில் அப்படி இல்லை. ஜாதி அமைப்பை நான் கைவிடப் போகிறேன் என்று ஓர் இந்து அறிவிக்க முடியாது. அவனுடைய மதம் அதை ஏற்றுக் கொள்ளாது. ஆனால் இஸ்லாமிலும், கிறித்துவத்திலும் ஜாதி ஒழிப்பு இயக்கங்களை

ஏற்படுத்தினால் மதம் அதற்கு தடைசொல்லாது. இந்துக்கள் தமது மதத்தை ஒழித்தால் ஒழிய ஜாதியை ஒழிக்க முடியாது. ஜாதியை ஒழிக்க இஸ்லாமிலும், கிறித்துவத்திலும் மத ஒழிப்பு தேவையில்லை. மாறாக அந்த மதங்கள் அத்தகைய இயக்கங்களைப் பெருமளவுக்கு ஆதரிக்கும். ஆகவே வாதத்திற்காகக் கூட இப்படியெல்லாம் ஜாதிகள் எல்லா இடத்திலும், எல்லா மதத்திலும் இருக்கின்றன என்றும் இந்துவாக இருப்பதே சிறந்தது என்றும் சொல்ல முடியாது. ஜாதி அமைப்பு முறை பயனற்றது என்று சொல்லும் போது அந்த அமைப்புக்குப் பலம் இல்லாத இன்னொரு சமூகத்தை ஏற்பதுதான் சரியான பாதை. அந்த இன்னொரு அமைப்பில் மிக எளிய முறையில் ஜாதிகளை ஒழித்து விடலாம் என்னும் போது அதுவே சரியான பாதை.

மத மாற்றத்தால் என்ன நடத்துவிடப் போகிறது என்று சில இந்துக்கள் கேட்கிறார்கள். அதைவிட உங்கள் நிதிநிலையையும் கல்வி தகுதியையும் வளர்த்துக் கொள்ளுங்கள் என்கிறார்கள். இந்த அறிவுரையால் நம்மில் சிலர் குழப்பம் அடையலாம். திகைத்து நிற்கலாம்; ஆகவே அந்த வாதத்தை இங்கு விவாதத்திற்கு எடுத்துக் கொள்ள வேண்டியது அவசியம் என்று கருதுகிறேன். ஒன்று உங்கள் நிதி நிலைமையும், கல்வி சூழலையும் யார் முன்னேற்றம் அடைய செய்யப் போகிறார்கள்? அவற்றை நீங்களே வளர்த்துக்கொள்ள வேண்டுமா? அல்லது இந்த வாதத்தை வைப்பவர்கள் உங்களிடம் அந்தத் தகுதிகளை வளர்க்கப் போகிறார்களா? உங்களுக்கு உபதேசிப் பவர்கள் உதட்டளவில் அல்லாமல் வேறு எந்த உருப்படியான காரியத்தையும் செய்யப் போவதில்லை. அவர்கள் பக்கம் இருந்து எந்த முயற்சியும் இந்தத் திசையை நோக்கி நடைபெறபோவதில்லை. மாறாக ஒவ்வொரு இந்துவும் தமது சொந்த ஜாதியின் பொருளாதார நிலைமையை வளர்த்துக் கொள்வதிலேயே குறியாக இருக்கிறான். அவனுடைய பார்வை சொந்த ஜாதிப் பார்வையாகக் குறுகிப் போயிருக்கிறது. பிராமணப் பெண்களுக்கு மகப்பேறு விடுதிகள், பிராமண மாணவர்களுக்கு உபகாரச் சம்பளங்கள் பிராமண ஜாதியைச் சேர்ந்த வேலையில்லாதோருக்கு வேலைகள் இவற்றை நிறுவுவதிலேயே பிராமணர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். பிராமண ஜாதிகளில் ஒன்றான சரஸ்வதத் பிராமணர்கள் இதையே செய்து கொண்டிருக்கிறார்கள். காயஸ்தர்களும், மராட்டியர்களும் இதே வேலையில் இருக்கிறார்கள். ஆக அவனவன் தன்னுடைய ஜாதி

களுக்காக இருக்கிறான். புரவலரே இல்லாத ஜாதிகள் கடவுளின் கருணைக்காகக் காத்திருக்கின்றன. நீங்கள் நீங்களாகத்தான் எழுந்திருக்க வேண்டும். உங்களுக்கு உதவ யாரும் முன்வரப் போவதில்லை. இன்றைய சமூகத்தின் நிலை இதுதான். இந்தச் சூழலில் அவர்களுடைய அறிவுரையைக் கேட்பதால் பயன் என்ன? உங்களைத் திசை திருப்பி உங்களுடைய நேரத்தை வீணடிப்பதே அவர்களின் நோக்கம். உங்களை நீங்கள் முன்னேற்றிக் கொள்ள வேண்டுமானால் இத்தகைய வதந்திகளை நம்பாதீர்கள். இந்த வதந்திக்காரர்கள் உங்களுக்கு உபதேசம் செய்ய எந்த உரிமையும் இல்லை. இதுபோதும் என்றாலும் நான் இத்துடன் நிறுத்துவதாக இல்லை. மேலும் சில பதில்கள் சொல்லவே விரும்புகிறேன்.

மத மாற்றத்தால் மட்டும் என்ன நேர்ந்துவிடப் போகிறது என்று அறிவில்லாமல் கேட்கும் கேள்வி எனக்கு வியப்பூட்டுகிறது. இந்தியாவில் இருந்து சீக்கியர்களாகவும் முஸ்லீம்களாகவும் கிறிஸ்தவர்களாகவும் உள்ளவர்களில் பெரும்பான்மையினர் முன்னாள் இந்துக்களே. அதிலும் பெரும்பான்மை சூத்திரர்களும் தீண்டத்தாகதவர்களும்தான். இந்து மதத்தை விட்டு நீங்கி சீக்கியத்திற்கும் கிறிஸ்தவத்திற்கும் போனவர்கள் எந்த முன்னேற்றமும் அடையவில்லை என்றா இவர்கள் சொல்ல வருகிறார்கள். மதமாற்றம் அப்படி மாறியவர்களுடைய சூழலில் முன்னேற்றத்தைக் கொண்டு வந்திருக்கும் போது தீண்டத்தகா தோருக்கு மட்டும் அப்படிப்பட்ட முன்னேற்றம் ஏற்படப் போவ தில்லை என்பதா இவர்களுடைய கருத்து? அவர்களே சிந்திக்கட்டும். மதமாற்றத்தால் ஒன்றுமே நேரப் போவதில்லை என்பதில் இன்னொரு பொருள் மதம் என்பதே அர்த்தமற்றது என்பதாகும். மதமே அர்த்தமற்றதாக போகும்போது இந்து மதத்தில் தீண்டத் தகாதவர் நீடிக்க வேண்டும். என்று ஏன் வாதிட வேண்டும் எனக்கு புரியவில்லை அவர்கள் கருத்துப்படி மதத்தில் எந்த உள்ளார்ந்த பொருளும் இல்லை என்றால் விலகப் போகிற மதம் குறித்தும்-சேரப் போகிற மதம் குறித்தும் அவர்கள் ஏன் வீணாக வாதிட வேண்டும்? மதமாற்றத்தால் என்ன நேர்ந்துவிடப் போகிறது என்பவர்கள் இன்னொரு கேள்வியையும் சந்திக்க வேண்டும். சுய ஆட்சியால் என்ன நேர்ந்துவிடப்போகிறது? சுய ஆட்சி கிடைத்தால் நிதி மற்றும் கல்வி முன்னேற்றம் கிட்டும் என்று தீண்டத்தகாதோரைப் போலவே இந்திய மக்கள் எல்லோருமே நினைக்கிறார்கள். ஆக சுயாட்சியால்

நாடு முழுமைக்கும் பலன் உண்டு. என்னும் போது மதமாற்றத்தால் நிச்சயம் தீண்டத்தகாதோர்க்குப் பலன் உண்டு. இந்தப் பிரச்சினை பற்றி ஆழ்ந்து சிந்திப்போர் இந்தியாவுக்கு சுய ஆட்சி அவசியம் என்பது போல் தீண்டத்தகாதோருக்கு மதமாற்றமும் அவசியம் என்பதை ஏற்றுக்கொள்வார்கள். மதமாற்றம், சுயாட்சி இரண்டின் இறுதி நோக்கமும் ஒன்றுதான். அவற்றில் எள்ளளவும் வேறுபாடு இல்லை, விடுதலை என்பதே இரண்டுக்கும் இலக்கு, மனித குலத்தின் மறுவாழ்வுக்கு விடுதலை அவசியம் என்றால் முழுச்சுதந்திரத்தை பெற்றுத் தரவல்ல மதமாற்றம் தீண்டத்தகாதோருக்கு அவசிய மற்றதாக இருக்க முடியாது.

## முன்னேற்றமா? மத மாற்றமா? எது முதலில்

பொருளாதார முன்னேற்றமா? மதமாற்றமா? எதை முதலில் தொடங்குவது என்று ஆராய்வது அவசியமாகிறது. பொருளாதார முன்னேற்றம்தான் முதலில் என்பதை நான் ஏற்பதில்லை. இப்படிப்பட்ட கேள்வியே வறட்டுத்தனமானது. அரசின் முன்னேற்றமா சமூக முன்னேற்றமா என்று கேட்பதைப் போன்றது தான் இது. ஒரு சமுதாயத்தின் முன்னேற்றம் அல்லது வளர்ச்சிக்கே பல வழிகள் கையாளப்படுகின்றன. இந்த வழிகள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு முக்கியத்துவம் உண்டு. இவற்றின் முன்னுரிமை முக்கியத்துவத்தை கண்டுபிடிப்பதற்கான அளவுகோல் எதுவும் இல்லை. அப்படித்தான் கண்டுபிடிக்க வேண்டும் என்று வலியுறுத்து வோருக்கு என் பதில் மத மாற்றமே பொருளாதார முன்னேற்றத்தை விட முதலில் மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கை என்பதுதான். தீண்டத்தகாதோர் என்னும் களங்கத்தை சுமந்து கொண்டு எப்படி நீங்கள் பொருளாதார முன்னேற்றத்தை அடைய முடியும்? நீங்கள் ஒரு கடை வைக்கிறீர்கள் கடையின் சொந்தக்காரர் ஒரு தீண்டத்தகாதவர் என்பது பிறருக்குத் தெரிகிறது. அப்படியிருக்கும்போது ஒரு தீண்டத்தகாதவன் கடையில் பொருள் வாங்க யாராவது முன் வருவார்களா? ஒருவன் ஒரு வேலைக்கு விண்ணப்பம் போடுகிறான். அந்த விண்ணப்பதாரன் தீண்டத்தகாதவன் என்று தெரிகிறது. அந்த விண்ணப்பதாரனுக்கு வேலை கிடைக்காது. ஒரு நிலம் விற்பனைக்கு வருகிறது. உங்களில் ஒருவர் அதை வாங்க முன் வர வேண்டும். வாங்குபவர் தீண்டத்தகாதவர் என்று தெரிந்தால் விற்பவர் விற்க முன் வரமாட்டார். பொருளாதார முன்னேற்றத்திற்கு நீங்கள் எந்த முயற்சி

எடுத்தாலும் சரி தீண்டாமை காரணமாக அந்த முயற்சி தோல்வியைத் தான் சந்திக்கும். தீண்டாமை முன்னேற்ற பாதைக்கு ஒரு நிரந்தரமான தடைக்கல். அதை அகற்றினால் ஒழிய உங்கள் பாதை எளிதாக இருக்காது. மத மாற்றமல்லாமல் வேறு எந்த வழியிலும் அந்த தடைக்கல்லை அகற்ற முடியாது. உங்களில் சில இளைஞர்கள் கல்வி கற்க முயல்கிறார்கள்; எல்லா இடத்திலும் அதற்காக நிதி கேட்க நிற்கிறார்கள் பணத் தேவை காரணமாக அவர்கள் தீண்டத் தகாதோராக நீடிக்கிறார்கள். அப்படி நீடிப்பதன் மூலம் சிறிது முன்னேற்றமும் காண்கிறார்கள். இந்த இளைஞர்களை நான் கேட்கிறேன். படிப்பு முடிந்து தகுதியான வேலை உங்களுக்கு கிடைக்காவிட்டால் அந்தக் கல்வியை வைத்துக் கொண்டு என்ன செய்வீர்கள்? நம்மில் பெரும்பான்மை படித்த மக்கள் இன்று வேலை இல்லாமல் நிற்கிறார்கள்; என்னைப் பொறுத்தவரை இந்த வேலையின்மைக்குத் தீண்டாமை மட்டுமே காரணமாகும். தீண்டாமை காரணமாக உங்கள் தகுதிகளை யாரும் மதிப்பதில்லை. உங்கள் திறமைகளுக்கு எந்த வாய்ப்பும் கிடைப்பதில்லை. தீண்டாமை காரணமாக ராணுவத்தில் இருந்து கூட நீங்கள் வேலை நீக்கம் செய்யப்படுகிறீர்கள். காவல் துறையிலும் உங்களுக்கு வேலை கிடைப்பதில்லை. ஏன்? ஒரு பியூன் வேலைகூட உங்களால் பெற முடியவில்லை. தீண்டத் தகாதவர் என்பதாலேயே உங்களுக்குப் பதவி உயர்வும் கிடைப்பதில்லை. தீண்டாமை என்பது ஒரு சாபம். அதன் காரணமாக நீங்கள் பழிக்கப்படுகிறீர்கள். உங்கள் தகுதிகள் குப்பையில் வீசப்பட்டு விடுகின்றன. இந்தச் சூழலில் இதற்கு மேலும் எந்தத் தகுதிகளை நீங்கள் வளர்த்துக் கொள்ள போகிறீர்கள்? அப்படியே வளர்த்துக் கொண்டாலும் அதனால் என்ன பயன்? கல்வித் தகுதிகளால் உங்கள் தகுதிகள் மதிக்கப்பட வேண்டும் என்று உண்மையாகவே நீங்கள் விரும்பினால் உங்கள் கல்வி உங்களுக்குப் பயன்படவேண்டும். செல்வாதார முன்னேற்றத்திற்கான கதவுகள் உங்களுக்காகத் திறக்கப்பட வேண்டும். தீண்டாமை விலங்குகளை நீங்கள் தகர்த்தெறிய வேண்டும்.

## மத மாற்றம் குறித்த ஐயப்பாடுகள்

மத மாற்றத்தின் விமர்சகர்கள் முன்வைத்த வாதங்களை நாம் இதுவரை அலசிக் கொண்டிருந்தோம். மத மாற்றத்தின் அநுதாபி களும் சில ஐயங்களைக் கிளப்புகிறார்கள். அவற்றுக்கு விளக்கம்

சொல்வது முக்கியம். ஒன்று கிராம ஊழியரின் பரம்பரை உரிமை களின் கதி என்னவாகும் என்று சில மகர்கள் - கவலைப் படுகிறார்கள்- நீங்கள் மதம் மாறினால் கிராம ஊழியர் என்னும் தகுதியில் நீங்கள் செய்யும் ஊழியங்களை இழந்து விடுவீர்கள் என்று மகர்கள் ஜாதி இந்துக்களால் அச்சுறுத்தப்படுகிறார்கள். கிராம ஊழியர் முறை நீக்கப்படுவது பற்றி எனக்குக் கொஞ்சம் கூட கவலையில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள். கடந்த 10 ஆண்டுகளாக இந்தக் கிராம ஊழியத்தால் மகர்கள் எத்தனை சோகமான தலைவிதியைச் சுமக்க வேண்டிருக்கிறது. என்று நான் வாதாடிருக்கிறேன். அந்த ஊழியம் ஒழிக்கப் பட்டால் விடுதலைப் பாதை உங்களுக்காகத் திறந்து விடப்படுகிறது என்று பொருள். கிராம ஊழிய உரிமை தேவை என்று உங்களில் சிலர் நினைக்கலாம். மத மாற்றத்தால் அதற்கொன்றும் கேடு வந்து விடாது என்று நான் உறுதி சொல்கிறேன். கிராம ஊழியம் பற்றிய 1850ஆம் ஆண்டுச் சட்டத்தை எடுத்துக் கொள்வோம். அது என்ன சொல்கிறது? மதமாற்றத்தில் சொத்து வாரிசு உரிமை பாதிக்கப் படுவதில்லை என்றுதான் சட்டம் சொல்கிறது. இந்தச் சட்ட விளக்கம் போதாது என்று கருதுபவர்கள் நகர் மாவட்டத்தின் சூழல்களை அலசிப் பார்க்கலாம். அந்த மாவட்டத்தில் மகர் வகுப்பைச் சேர்ந்த பலர் கிறிஸ்துவர் மதத்தில் சேர்ந்து விட்டார்கள். ஒரே குடும்பத்தில் சிலர் கிறிஸ்துவர்கள், சிலர் மகர்கள் என்னும் நிலையுண்டு. இப்படி கிறிஸ்துவ மதத்திற்கு மாறியவர்களுக்கும் கிராம ஊழிய உரிமை மறுக்கப்படவில்லை. நகர் மாவட்ட மகர்கள் இந்த உண்மையை உறுதி செய்வார்கள். எனவே, மத மாற்றத்தால் ஊழிய உரிமை பறி போகுமென்று எவரும் அஞ்சத் தேவையில்லை.

இரண்டாவது சந்தேகம் அரசியல் உரிமை பற்றி. நாம் மதம் மாறினால் நம்முடைய பாதுகாப்பு அரண்கள் என்னாகும் என்று சிலர் அஞ்சுகிறார்கள். தீண்டத்தகாதோருக்கு எத்தகைய அரசியல் அரண்கள் கிடைத்துள்ளன என்பது எனக்குத் தெரியாமல் இல்லை. இந்த உரிமைகளைப் பெறுவதற்காக என்னைப் போல் இன்னல் அனுபவித்தவரும், முயற்சி எடுத்தவரும் எவரும் இல்லை. இருப்பினும் வெறும் அரசியல் உரிமைகள் மீதே சார்ந்திருப்பது சரியில்லை என்னும், நிரந்தரமானவை என்னும் முத்திரை குத்தப்பட்டும் இந்த அரசியல் அரண்கள் நம் கைக்கு வரவில்லை. அவை ஒரு காலத்தில் மறைந்துதான் போகும். பிரிட்டிஷ் அரசு அளித்த வகுப்பு வாரி

ஆணைப்படி நமக்கு வழங்கப்பட்ட அரசியல் அரண்களின் ஆயுள் 20 வருடம்தான். புனா ஒப்பந்தத்தில் அப்படி எந்தக் கால எல்லையும் வரையறுக்கப்பட வில்லை. ஆனாலும் அவை நிரந்தரமானவை என்று எவரும் சொல்ல முடியாது. இந்த அரண்கள் நீக்கப்பட்டால் என்ன நேரும் என்பதை இவற்றையே சார்ந்திருப்போர் சிந்திக்க வேண்டும். நமது அரசியல் உரிமைகள் பறிபோகும் காலத்தில் நமது சமூக பலத்தையே நாம் சார்ந்திருக்கவேண்டும். முன்பே சொன்னது போல் இந்த சமூக பலம் நம்மிடம் மிகவும் குறைவு. மத மாற்றத்தின் மூலம் அல்லாமல் இந்த பலத்தை நாம் வென்றெடுக்க முடியாது. நிகழ் காலத்தைப் பற்றிக் கொண்டு, கால காலத்திற்கும் நமக்கு நன்மை விளைவிப்பவற்றைத் தற்காலிக நன்மைக்காக விட்டுக் கொடுக்கும் மார்க்கம் உங்களை இன்னல்களுக்கே இட்டுச் செல்லும். இந்தச் சூழலில் எது நிலையான நன்மை தரும் என்று சிந்திக்க வேண்டும். மதமாற்றம் நிலையான இன்பத்தை பெற்றுத்தரும். மதம் மாறினால் அரசியல் உரிமைகள் மாறிப் போகும் என்றாலும் நாம் தயங்கக் கூடாது. மத மாற்றத்தால் அரசியல் அரண்களுக்கு பெரிதாக தீமை ஒன்றும் நேர்ந்துவிடாது. மதமாற்றத்தால் அரசியல் அரண்கள் குலைந்து விடும் என்னும் வாதத்தை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. நீங்கள் எங்கே சென்றாலும் உங்கள் அரசியல் உரிமைகளும் அரண்களும் உங்களைத் தொடரும் என்பதில் சந்தேகமேயில்லை. நீங்கள் முஸ்லீம்களாக மாறினால் முஸ்லீம் களுக்கு உள்ள அரசியல் உரிமைகள் உங்களுக்குக் கிடைக்கும். அப்படியே கிறிஸ்துவர்களாக மாறினால் கிறிஸ்தவர்களின் அரசியல் உரிமைகள் கிடைக்கும். சீக்கியர்களாக மாறினாலும் அப்படித்தான். அரசியல் உரிமைகள் மக்கள் தொகை அடிப்படையிலானது. எந்தச் சமுதாயத்தில் மக்கள் தொகை அதிகரிக்கிறதோ அதன் அரசியல் அரண்களும் அதற்கேற்ப அதிகரிக்கும். நாம் இந்துச் சமுதாய்த்தை விட்டு நீங்கினால், நமக்கு ஒதுக்கப்பட்ட 15 இடங்கள் இந்துக்களுக்குத் திரும்பப் போய்விடும் என்று தவறாக புரிந்துக் கொள்ள வேண்டாம். நாம் முஸ்லீம்களாக மாறினால் முஸ்லீம்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங்களின் அளவு மேலும் 15 அதிகரிக்கும்; கிறிஸ்தவர்களாக மாறினாலும் அதே அளவு அதிகரிக்கும். சுருங்கச் சொன்னால் நாம் எங்கே சென்றாலும் நமது அரசியல் உரிமைகள் நம்மைத் தொடரும். எனவே யாரும் அஞ்சத் தேவையில்லை. மாறாக, நாம் இந்துக் களாகவே இருக்கிறோம். மதம் மாறவில்லை என்றால் நமது

உரிமைகள் பாதுகாப்பாகவா இருக்கப் போகின்றன? தீண்டாமைத் தடைச் சட்டம் ஒன்றைக் கொண்டு வந்து தீண்டாமையைக் கடை பிடிப்போரைத் தண்டிப்பதையும் நடைமுறையாக்குகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். நாங்கள் அதைத் தடுத்துவிட்டோம். இந்தச் சட்டத்தின் முன் நீங்கள் எல்லாம் தீண்டத்தகாதோர் அல்லர் என்று உங்களிடம் சொல்வதாக வைத்துக் கொள்வோம். அதன் உள்ளர்த்தம் என்ன? மற்ற பின்தங்கிய ஜாதிகள் போலவே நீங்களும் ஏழைகள், நீங்களும் பின்தங்கியவர்கள். மற்ற பின்தங்கிய ஜாதிகளுக்கு எந்த அரசியல் அரசாணையும் நாங்கள் உருவாக்கித் தரவில்லை. உங்களுக்கு மட்டும் அவற்றின் தேவையென்ன என்று உங்களை இந்துக்கள் கேட்கக்கூடும். அதற்கு நீங்கள் எப்படிப் பதிலளிப்பீர்கள்? இந்தக் கேள்விகளுக்குக் கிறிஸ்தவர்களும், முஸ்லீம்களும் எளிதாகப் பதில் சொல்லி விடுவார்கள். எங்களுக்கு அரசாங்கம் அரசியல் அரண் தந்திருப்பதற்குக் காரணம் நாங்கள் ஏழைகள், கல்வியறிவு இல்லாத வர்கள், பின்தங்கியவர்கள் - என்பதால் - எங்கள் மதம் வேறு, எங்கள் சமுதாயம் வேறு என்று அவர்கள் பதில் சொல்வார்கள். அதன் உள்ளர்த்தம் என்ன? எங்கள் மதம் வேறாக இருக்கும்வரை எங்களுக்குரிய அரசியல் உரிமைகளை நீங்கள் தந்தாக வேண்டும் என்பதுதான் அதன் அர்த்தம். ஆகவே இந்து மதத்தில் குறைத்த பட்சம். இந்துச் சமூகத்தில் வாழ்பவர்கள் உங்கள் சமூகம் வேறு, அரசியல் அரண்களுக்கான உரிமைகளுக்கு நீங்கள் பாத்தியதை உள்ளவர்கள் என்னும் நிலைப்பாட்டை நீங்கள் எடுக்க முடியாது. என்றைக்கு நீங்கள் விடுதலையாகிறீர்களோ மதமாற்றத்தின் வாயிலாக இந்து சமுதாயத்தின் அடிமைகள் என்னும் நிலையிலிருந்து சுதந்திரம் அடைகிறீர்களோ அந்த நாளில் மேலே சொன்ன நிலைப்பாட்டை நீங்கள் எடுக்க முடியும். அத்தகைய சுதந்திர நிலைப்பாட்டை எடுத்து அரசியல் அரண்களை, அரசியல் கோரிக்கைகளைக் கோராமல் போனால் உங்கள் அரசியல் உரிமைகளுக்குப் பாதுகாப்பு இல்லை. எனவே மதமாற்றம் என்பது அரசியல் அரண்களை பலப்படுத்திக் கொள்வதற்கான ஒரு பாதை. ஒரு போதும் அது அரசியல்அரண் தடை ஆகாது என்று புரியும்.

இந்து மதத்தில் நீடித்தால் உங்கள் அரசியல் அரண்களை நீங்கள் இழந்து விடுகிறீர்கள். அந்த அரண்கள் தேவையென்றால் நீங்கள் மதம்

மாறுங்கள் மதமாற்றத்தால் நிரந்தரமாக அரசியல் அரண்கள் உங்களுக்கு கிடைக்கும்.

## முடிவுரை

என்னைப் பொறுத்தவரை நான் முடிவெடுத்து விட்டேன். நான் மதம் மாறப்போவது நிச்சயம், அதன் நோக்கம், உலகாயத லாபங்கள் என்ன? தீண்டத்தகாதவராக இருந்துக் கொண்டே எல்லாவற்றையும் நான் அடைகிறேன். என் மத மாற்றத்திற்கான நோக்கம் முழுக்க முழுக்க ஆன்மீகமானது. இந்து மதம் என்னுடைய வர்க்கத்திற்கு ஒத்து வரவில்லை. என்னுடைய சுயமரியாதைக்கு ஏற்றதாக இல்லை. உங்களைப் பொறுத்த வரை மத மாற்றத்தால் ஆன்மீகப் பயனும் உண்டு. லௌகீக பயனும் உண்டு. லௌகீக பயன்களுக்காக மதமாற்றம் என்றாலே சிலர் கேலி செய்யலாம். சிலர் சிரிக்கலாம் அப்படிக் கேலி செய்பவர்களும், சிரிப்பவரும் முட்டாள்கள். இறப்புக்குப் பிறகு என்ன நடக்கப் போகிறது, ஆன்மாவுக்கு என்ன விளையப் போகிறது, என்ன விளையாமலா போகும் என்பன போன்ற போதனைகள் பணக்காரர்களுக்கு வேண்டுமானால் பயன் அளிக்கலாம். அத்தகைய மதத்தை பற்றி அவர்கள் ஓய்வாக உட்கார்ந்து சிந்திக்கலாம். அல்லது களிப்பில் மூழ்கலாம். வாழ் நாளிலேயே எல்லா இன்பங்களும் நுகர்பவர்கள் அப்படிப்பட்ட மதம்தான் உண்மையான மதம் என்று நினைப்பது இயல்பானது. மரணத்திற்கு பிறகும் மகிழ்ச்சிகள் உண்டு என்று போதிக்கும் மதம் அவர்களுக்கு உவப்பாகத்தான் இருக்கும். ஆனால் நீங்கள் அந்த மதத்தில் இருப்பதனால் மண்ணுக்கும் கேடாய் மதிக்கப்படுகிறீர்கள். உணவு, உடை போன்ற அடிப்படைத் தேவைகள் கூட மறுக்கப் படுகிறீர்கள். மனிதர்களாகவே நீங்கள் நடத்தப்படுவதில்லை. இந் நிலையில் இருக்கும் நீங்கள் மதத்தை உலகியல் பார்வையோடு அணுகாமல் உங்கள் கண்களை மூடிக்கொண்டு வானத்தையா பார்த்துக் கொண்டு இருக்க முடியும்? பணக்காரர்களுக்கும் சோம்பேறிகளுக்கும் உரிய வேதாந்தத்தால் ஏழைகளாகிய உங்களுக்கு என்ன பயன்?

## மதம் என்பது மனிதனுக்காகவே

மனிதன் மதத்திற்காக அல்ல; மதம் மனிதனுக்காக மனிதனால் ஏற்கப்பட வேண்டுமானால் மதம் மாறுங்கள். அமைப்பு ரீதியாகத் திரள வேண்டுமானால் மதம் மாறுங்கள், வலிமை பெற வேண்டு மானால் மதம் மாறுங்கள். சமத்துவம் கிடைக்க வேண்டுமானால் மதம் மாறுங்கள். விடுதலையடைய வேண்டுமானால் மதம் மாறுங்கள். உங்கள் குடும்ப வாழ்க்கை மகிழ்ச்சிகரகமாக இருக்க வேண்டுமானால் மதம் மாறுங்கள்.

உங்களை மனிதர்களாகவே நடத்தாத அந்த மதத்தில் ஏன் இன்னும் இருக்க வேண்டும்? உங்களைக் கல்வி கற்க அனுமதிக்காத மதத்தில் நீங்கள் ஏன் இருக்கவேண்டும்? உங்களுக்குத் தண்ணீரை மறுக்கும் மதத்தில் ஏன் இருக்கவேண்டும்? உங்களைக் கோவிலுக்குள் நுழைய அனுமதி மறுக்கும் மதத்தில் ஏன் இருக்க வேண்டும்? உங்களுக்கு வேலை வாய்ப்பை வழங்க மறுக்கும் ஒவ்வொரு சட்டத்திலும் உங்களை அவமதிக்கும் மதத்தில் ஏன் இருக்க வேண்டும்? மனிதனுக்கு மனிதன் நேர் வழியிலான தொடர்புகள் கொள்வதைத் தடுக்கும் மதம் மதமேயல்ல. அது அடக்கு முறையின் வடிவம். மனித உயிருக்குக் கூட கவுரவம் தராத மதம் மதமே அல்ல. அது ஒரு மனநோய்; விலங்குகள் தொடுவதை அனுமதிக்கும் மதம் மனிதன் தொடுவதை அனுமதிக்க மறுத்தால் அது, மதம் அல்ல, அது கேலிக் கூத்து. ஒரு வகுப்புக்குக் கல்வியுரிமை மறுத்து, அதற்குச் சொத்துரிமை மறுத்து, ஆயுதம் வைத்திருக்கும் உரிமை மறுத்து நிற்கும் ஒரு மதம் மதமே அல்ல. அது மனித உயிர்களின் வாழ்வை ஏளனத் திற்கு இடமாக்கும் ஒரு கொடுமை. கல்வியறிவு இல்லாதவர்கள், செல்வாதாரம் இல்லாதவர்கள் அப்படியே நீடிக்க வேண்டும் என்று கட்டாயப் படுத்தும் மதம் மதமேயல்ல, அது ஒரு தண்டனை.

என் அறிவுக்கு எட்டிய வரை மதமாற்றத்தால் நேரக்கூடிய எல்லாச் சிக்கல்களையும் அலசி விட்டேன். விளக்கி விட்டேன்; இந்த ஆராய்ச்சி மிகவும் நீண்டதாக இருக்கலாம். இத்தகைய விளக்கமான ஆராய்ச்சி தேவையென்று நான் முதலிலேயே முடிவு செய்து விட்டேன். மதமாற்றத்தின் எதிரிகள் என்னென்ன வாதங்கள் வைப்பார்களோ அவற்றிற்குப் பதில் அளிக்க வேண்டியது என்

கடமை. என் கருத்துப்படி மத மாற்றப் பிரகடனத்தின் முக்கியத் துவத்தை உணராமல் யாரும் மதம் மாறக் கூடாது. அதனால்தான் எல்லாவித ஐயங்களுக்கும் தீர்வாக அமையும் இந்தப் பிரச்சினையை இத்தனை விரிவாக அலசினேன். என் கருத்துகளை நீங்கள் எவ்வளவு தூரம் ஏற்பீர்கள் என்று எனக்குத் தெரியாது. ஆனாலும் அவற்றை ஆழ்ந்து சிந்திப்பீர்கள். என்னும் நம்பிக்கை எனக்கு உண்டு. பொது மக்களைத் திருப்தி செய்வதன் மூலம் அவர்களது செல்வாக்கைப் பெறுவது ஒரு சாதாரண மனிதனுக்கு நன்மை தரலாம். ஒரு தலைவன் அந்த வழியைப் பின்பற்ற முடியாது. மக்களுக்கு எது நல்லது, எது கெட்டது என்பதை அறிந்து அச்சப்படாமல் ஆதரவைப் பற்றிக் கவலைப்படாமல் அதைச் சொல்பவனே தலைவன் என்பது என் கருத்து. நீங்கள் விரும்பாவிட்டாலும் சரி. உங்களுக்கு நல்லது எதுவோ அதைச் சொல்வதே என் கடமை. நான் என் கடமையைச் செய்தாக வேண்டும். இதோ இப்போது அதைச் செய்து விடுகிறேன். முடிவு உங்கள் கையில்! உங்கள் பொறுப்பை நீங்கள்தான் சுமக்க வேண்டும். இந்த மதமாற்றத்தை நான் இரண்டு பகுதிகளாகப் பிரித்துக் கொண்டேன். இந்து மதத்தை விட்டு வெளியேறுவதா, இல்லை நீடிப்பதா என்பது அதன் முதல் பகுதி; இந்து மதத்தைக் கைவிட வேண்டுமானால் எந்த மதத்தைத் தேர்ந்தெடுப்பீர்கள் அல்லது ஒரு புதிய மதத்தை உருவாக்குவீர்களா என்பது இரண்டாம் பகுதி; இன்று முதல் பகுதி பற்றி முடிவு செய்தாக வேண்டும். அதை முடிவு செய்யாமல் இரண்டாம் பகுதிக்குப் போக முடியாது. அப்படிப் போவது வீண் முயற்சி. எனவே நீங்கள் முதல் பகுதியை முடிவு செய்ய வேண்டும். இன்னொரு வாய்ப்பை இந்த விஷயத்தில் என்னால் உங்களுக்கு வழங்க முடியாது. உங்கள் முடிவைப் பொறுத்தது - எனது எதிர்காலத்திட்டத்தை நான் தீட்டுவதாக இருக்கிறேன். மத மாற்றத்திற்கு எதிராக நீங்கள் முடிவு செய்தால் இந்தப் பிரச்சினைக்கு நிரந்தரமாக விடை கொடுத்து விடுவேன். அதற்குப் பிறகு நான் என்ன செய்ய வேண்டுமோ? அதை செய்து கொள்வேன். மத மாற்றத்திற்கு ஆதரவாக முடிவு செய்தால், அந்த மதமாற்றம் அமைப்பு ரீதியாக பெருந்திரளாக இருக்கும் என்று நீங்கள் உறுதியளிக்க வேண்டும். மத மாற்றத்திற்கு ஆதரவாக முடிவு செய்திருந்தால் தங்களின் விருப்பத்திற்கு ஏற்றபடி சேரப்போகிற மதத்தை நிர்ணயம் செய்து கொள்ளும் முயற்சிகளுக்கு குறுக்கீடு செய்ய மாட்டேன். இந்த விஷயத்தில் நீங்கள் எல்லோரும் என்னுடன் ஈடுபட வேண்டும். எந்த

மதத்தை நான் ஏற்பதாக இருந்தாலும் அதற்கான முயற்சிகளில் விசுவாசமாக ஈடுபடுவேன். அந்த மதத்தில் மக்களின் நன்மைக்காக உழைக்கவும் நான் தயாராக இருக்கிறேன். நான் சொல்கிறேன் என்பதற்காக உணர்ச்சி வயப்பட்டு என்னை நீங்கள் பின்பற்றிவிடக் கூடாது. உங்கள் அறிவுக்கு அது ஏற்றது என்றால் மட்டுமே நீங்கள் சம்மதம் சொல்லலாம்; என்னோடு நீங்கள் ஒன்றுபடாவிட்டாலும் நான் அதற்காக வருந்தப் போவதில்லை. இத்துடன் பொறுப்பு தீர்ந்தது. என்றுதான் நினைப்பேன். நீங்கள் இங்கு எடுக்கும் முடிவு உங்கள் எதிர்காலத் தலைமுறைக்கு நல்ல பாதையைத் திறந்து விடும். விடுதலை பெறுவது என்று நீங்கள் முடிவு எடுத்தால் உங்கள் வருங்கால சந்ததிகளும் விடுதலை பெறும். அடிமையாக இருக்க முடிவு எடுத்தால் உங்கள் எதிர்காலப் பரம்பரையும் அடிமை தனத்திலேயே மூழ்க்கிடக்கும். எனவே உங்கள் பொறுப்புத்தான் மிக மிகச் சிக்கலானது. மிக மிக கடினமானது.

## உங்களுக்கு நீங்களே விளக்காக இருங்கள்

இந்த மாநாட்டில் உங்களுக்கு என்ன செய்தி தருவது என்று சிந்தித்து கொண்டிருக்கும் போது எனது மகா பரிநிர்வாணத்திற்கு முன்னதாக நமது பிக்குகள் சங்கத்தில் மகான் புத்தர் கொடுத்த செய்தி நினைவுக்கு வந்தது. மகா பரிநிர்வாண சுத்தத்தில் இந்தச் செய்தி மேற்கோள் காட்டப்படுகிறது. அப்போதுதான் நோய்வாய்ப்பட்டு மீண்டிருந்த பகவான் புத்தர் மரத்தின் அடியிலுள்ள தமது இருக்கையில் இளைப்பாறிக் கொண்டிருந்தார். அவரது மதிப்பிற் குரிய சீடர் ஆனந்தர் புத்தரிடம் சென்றார். அவரை வணங்கி விட்டு அவரிடம் சொன்னார்: "பிரபுவே நோய்வாய்ப்பட்ட போதும் ஆரோக்கியமாக இருந்தபோதும் தங்களைப் பார்த்திருக்கிறேன். ஆனால் இப்போது நீங்கள் அனுபவித்த நோய் என்னை மிகவும் பாதித்துவிட்டது. உலோகம் போல் என் உடல் கணக்கிறது. உள்ளத்தில் அமைதி இல்லை. தம்மத்தில் என் மனத்தை நிலை நிறுத்த முடியவில்லை. ஆனால் சங்கத்திற்கு சேதி சொல்லாமல் தாங்கள் பரிநிப்பனம் அடையமாட்டீர்கள் என்பதால் ஒரு வித ஆறுதலோ மனநிறைவோ ஏற்படுகின்றது." அதற்குப் பகவான் இப்படிப் பதிலளித்தார்: "ஆனந்தா சங்கம் என்னிடமிருந்து என்ன எதிர்ப் பார்கிறது. ஒளிவு மறைவு இல்லாமல் திறந்த மனத்துடன் நான்

தம்மத்தில் பிரச்சாரம் செய்துவிட்டேன்; சில ஆசியர்களை போல் தத்தகதர் எதையும் ஒளிக்க வில்லை; மறைக்கவில்லை. இனி பிக்கு சங்கத்திற்குச் சொல்வதற்கு தத்தகதரிடம் என்ன இருக்கிறது. எனவே சூரியன் தனக்குத்தானே ஒளி தந்து கொள்வது போல் நீ உனக்குள்ளே சுடர் விடுவாயாக! பூமியைப் போல் பிறரிடம் இருந்து வரும் ஒளியை நீ சார்ந்திருக்கக்கூடாது. உண்மையாக இரு. உண்மையில் மட்டுமே நீ புகலிடம் தேட வேண்டும் எவரிடமும் சரணாகதி அடையாதே."

புத்தரின் சொற்களில்தான் நானும் அடைக்கலம் அடைகிறேன். உங்களுக்கு நீங்களே வழிகாட்டியாக இருங்கள். உங்களது தர்க்கத்தில் தான் நீங்கள் புகலிடம் தேட வேண்டும். பிறரது சொற்களுக்குச் செவி சாய்க்காதீர்கள். பிறருக்கு உடன்பட்டு விடாதீர்கள். உண்மையாய் இருங்கள். உண்மையில் மட்டுமே புகலிடம் தேடுங்கள். எதற்கும் அடிமைப்பட்டு விடாதீர்கள். பகவான் புத்தரின் இந்தச் செய்தியை நீங்கள் இந்தக் கணத்தில் நினைவில் நிறுத்தினால் போதும். உங்கள் முடிவு தவறாக இருக்காது என்பது நிச்சயம்.[1]"

---

1. 'ஜனதா' 1936, ஜூன், 27.

# (30)

# மகர்களுக்கும் மாங்குகளுக்கும் இடையே எந்த வித்தியாசமும் இருக்காது

## தேர்தலில் தமது கட்சியோடு இணைந்தால் இட ஒதுக்கீடு உறுதி - டாக்டர் அம்பேத்கர் வாக்குறுதி தந்தார்

*தாதரில் நைகாம் என்னும் இடத்தில் ஜூன் 2ஆம் தேதி செவ்வாய்க் கிழமை பம்பாய் மாகாண மாங்குகள் மாநாடு கூட்டப்பட்டது. அதில் அந்த ஜாதியைச் சேர்ந்த 5000 உறுப்பினர்களும் மாவட்டங்களிலிருந்து பிரதிநிதிகளும் கலந்துக் கொண்டார்கள்.*

*அதில் ஒரு மனதாக நிறைவேற்றப்பட்ட தீர்மானம். சொல்வது என்னவென்றால் விடுதலை மற்றும் சமத்துவம் அடைதலுக்கு மதமாற்றம் மட்டுமே ஒரே தீர்வு என்பது மாங்க் இனத்தின் தீர்மானம். டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் மீது முழு நம்பிக்கை உண்டு என்றும், அவரைப் பெருந்திரளாக பின்பற்றி மதம் மாறத் தயார் என்றும் அந்த தீர்மானம் பிரகடனம் செய்தது. மாங்க் சமூகத்தின் மேம்பாடு நோக்கிய வேறு சில தீர்மானங்களும் மாநாட்டில் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டன.*

*சிறப்பு அழைப்பின் பேரில் மாநாட்டில் கலந்துக் கொண்ட டாக்டர். அம்பேத்கர் ஏறக்குறைய ஒரு மணி நேரம் சொற்பொழிவு ஆற்றினார். மாங்க் சமூகம் மதமாற்றம் குறித்து முடிவெடுத்தப் பிறகுதான் தமது சொற்பொழிவை வைத்துக் கொள்வது என்று முடிவு செய்திருந்தார் அவர். பேச்சின் தொடக்கத்திலேயே அதை அவர் குறிப்பிட்டார். ஏன் என்றால் மாங்க் சமூகம் எடுக்கப் போகும் முடிவில் எந்த வித ஆதிக்கமும் செலுத்தக் கூடாது என்பதே தமது நோக்கம் என்றும் அவர் சுட்டிக் காட்டினார். ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் இடையேயும் இந்த ஜாதி என்னும் தீய சக்தி காணப் படுவதையும் அவர் சுட்டிக்காட்டினார்.*

## இந்து மதமே குற்றவாளி

ஒடுக்கப்பட்ட மக்கள் மத்தியிலும் உள்வட்ட ஜாதி உணர்வுகள் இருப்பது உண்மை; ஆனால் அதற்கு அவர்கள் பொறுப்பல்ல; இந்து மதம் அதற்குக் காரணம்; மாங்க் சமூகம் ஜாதி அமைப்பின் தீய விளைவுகளில் இருந்து நீங்க வேண்டுமானால் அவர்கள் தமது மதத்திலிருந்து வெளியேற வேண்டியது அவசியம். பம்பாய் மாகாணத்தில் ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் பெரும்பான்மை மக்கள் மகர் இனத்தை சேர்ந்தவர்கள். மகர் இனத்தில் உட்பிரிவில் ஒன்று மாங்க் இனம். மாங்க்குகளும் மகர்களைப் போலவே மத மாற்றத்திற்கு உட்பட்டால் மகர் மாங்க் என்னும் வேற்றுமை கலைந்தெரியப்பட்டு விடும். ஒடுக்கப்பட்ட மக்களுக்கு ஒதுக்கப்பட்ட 15 இடங்களில் மகர்களுக்கு உரிய உள் ஒதுக்கீடு நிச்சயம் உண்டு என்று டாக்டர் அம்பேத்கர் பேசினார்.

முடிவுரை சொல்லும் போது மதமாற்றம் என்னும் தீர்வு ஒன்றே ஒரு மாபெரும் திட்டம் என்றும் அதனால் காலகாலமாகக் கீழ்நிலையில் அமிழ்த்தி வைக்கப்பட்டுள்ள மக்கள் உயர்ந்து மேல் எழுவார்கள் என்றும் டாக்டர் அம்பேத்கர் கூறினார்![1]

---

1. பம்பாய் கிராணிக்கள், 1936, ஜூன், 5.

# (31)

# உங்களது அவமானகரமான பணியை நீங்கள் விட்டொழிக்க வேண்டும்.

*1930 - 31 ஜூன் 16 செவ்வாய் இரவு பம்பாய் தாமோதர் தாக்கர்சே ஹால் பொதுக்கூட்டத்தில் டாக்டர். அம்பேத்கர் பேசினார். அதில் ஒடுக்கப்பட்ட வர்க்கத்தின் சில பிரிவுகளில் உள்ள தீய பழக்கங்களையும் சடங்குகளையும் விட்டொழிக்க வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார்.*

*தேவதாசி, போட்ராஜே, பூட்டே, அராதி, ஜோக்தினி ஆகிய சமூகங்களைச் சேர்ந்த ஆணும் பெண்ணும் பெருந்திரளாக அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டார்கள். இயோலாவில் ஆரம்பிக்கப் பட்ட வெகுஜன மதமாற்றத்திற்கு ஆதரவு தெரிவிப்பதற்காக அந்தக் கூட்டம் நடைபெற்றது.*

*பல பேச்சாளர்களுக்குப் பிறகு அம்பேத்கர் பேசினார். மத மாற்றம் சமூக விடுதலைக்கு ஒரு அடிக்கல் என்று அதன் தேவையை வலியுறுத்திய அவர் காமதிபுரத்திலிருந்து வந்திருக்கும் பெண்களுக்காக குறிப்பாக ஒரு வேண்டுகோள் விடுத்தார்.*

*டாக்டர் அம்பேத்கர் கூறியதாவது:*

"எங்களோடு மதம் மாறுகிறீர்களோ இல்லையோ எனக்கு அது அத்தனை முக்கியமில்லை, நீங்கள் எங்களைப் போல் இருக்க வேண்டுமானால் உங்கள் அவமானகரமான வாழ்வை விட்டொழிக்க வேண்டும். காமத்திய புரத்தைச் சேர்ந்த மகர் பெண்கள் ஒட்டு மொத்தமான சமூகத்துக்கு அவமானமாக விளங்குகிறார்கள். உங்கள் வாழ்க்கை முறைகளை நீங்கள் மாற்றி கொள்ளாவிட்டால் உங்களுக்கும் எங்களுக்கும் இடையில் ஒன்றுமே இருக்கப் போவதில்லை. நாங்களும் உங்களுக்குப் பயன்படபோவதில்லை"

உங்களுக்கு இரண்டே வழிகள்தான் உண்டு. ஒன்று நீங்கள் இருக்கும் இடத்திலேயே வெறுப்பையும் அவமானத்தையும் சுமந்து

கொண்டிருங்கள், அல்லது உங்கள் அவமானகரமான தொழிலை தலை முழுகி விட்டு எங்களுடன் வந்துவிடுங்கள்.

பிழைப்புக்கு வேறு என்ன வழி என்று நீங்கள் கேட்கலாம். அதை நான் உங்களுக்குச் சொல்லப் போவதில்லை. பிழைப்புக்கு நூற்றுக்கணக்கான வழிகள் இருக்கின்றன. இந்த அவமானகரமான வாழ்வை விட்டொழியுங்கள் என்றுதான் நான் வலியுறுத்துவேன். மற்ற பெண்களைப் போலவே நீங்களும் திருமணம் புரிந்து கொண்டு இயல்பு வாழ்க்கைக்குத் திரும்புங்கள். விபச்சாரத்திற்கு இட்டுச் செல்லும் சூழலில் தொடர்ந்து இருக்காதீர்கள்."[1]

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா, 1936, ஜூன், 17.

# (32)

# எந்தச் சதிக்கும் பலியாகாதீர்கள்

ஐரோப்பிய பயணம் மேற்கொள்வதற்கு முன்னால் டாக்டர். அம்பேத்கர் ஒரு பொதுக் கூட்டத்தை 1936 நவம்பர் 8 ஞாயிற்றுக் கிழமை காலை 9 மணிக்கு கூட்டினார். அந்த சமத்தா அமினி ஹால் கூட்டம் பம்பாய் பரேல் பகுதியில் தாமோதர் ஹாலில் நடத்தப் பட்டது. அவரே தலைமை வகித்தார்.[1]

கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் பேசினார்:

மிக முக்கியமான ஓர் அவசரப் பணி காரணமாக நாளை நான் ஐரோப்பியப் பயணம் மேற்கொள்கிறேன். நான் இல்லாத போது நீங்கள் பெரும் பொறுப்புகளைச் சுமந்தாக வேண்டும். புதிய அரசு அமைப்பில் ஒடுக்கப்பட்ட மக்களுக்கு மாகாண சட்ட மன்றங்களில் 15 இடங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. அதற்கான தேர்தல் அடுத்த ஆண்டு பிப்ரவரியில் நடக்கிறது. பல்வேறு மாவட்டங்களில் இந்த 15 இடங்கள் நமக்காக ஒதுக்கப்பட்டுள்ளன. சுதந்திரத் தொழிலாளர்கள் கட்சி சார்பில் வேட்பாளர்களை நான் பரிந்துரை செய்திருக்கிறேன். நாம் தொழிலாளர் கட்சியை ஏன் ஆரம்பிக்கவேண்டும்? இந்தக் கேள்வியைத்தான் நான் இந்தக் கூட்டத்தில் அலசப் போகிறேன். இந்தியாவில் ஏற்கனவே இந்திய தேசியக் காங்கிரஸ் என்னும் நிறுவப் பட்ட வலிமையான கட்சி ஒன்று இருக்கும்போது புதிய கட்சி தொடங்குவதன் அவசியம் என்ன என்னும் நியாயமான கேள்வியைப் பலர் கேட்கக் கூடும். அதற்குப் பதில் சொல்வது சுலபம்.

காங்கிரஸின் முக்கிய நோக்கம் சுதந்திரம். நானும் என் சகாக்களும் கூட சுதந்திரம் பெற விரும்புகிறோம். இந்தச் சுதந்திரத்தைப் பெறுவது அத்தனை எளிதல்ல; திரு. காந்தி கண்டுபிடித்த சத்தியாக்கிரக ஆயுதம் கூட இந்த விஷயத்தில் பயன்படபோவதில்லை. நமது சுதந்திரத்தைப் பெறுவதற்கு ஒத்துழையாமை இயக்கம் உதவாது. இது நமது திறமையை மீறிய

1. 'ஜனதா' 1936, டிசம்பர், 5.

விஷயம். ஒவ்வொருவரும் இப்படித்தான் நினைக்கிறார்கள். இந்தச் சுதந்திரத்தை அடைவது கடினமானால் இப்படிப்பட்ட அர்த்தமற்ற சுதந்திரத்திற்காகக் கனவு கண்டு கொண்டிருப்பதில் என்ன பயன்? ஓர் உண்மையான சுதந்திரத்தை வென்றெடுக்கும் வலிமையும் திறமையும் நமக்கு இல்லாவிட்டால் நமது நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள முன்பே முயன்று பலன் தந்த செயல் முறைகள் இருக்கவே இருக்கின்றன. அவற்றைப் பின்பற்றுவதுதான் அறிவுடைமை.

இந்தியா இன்னும் ஓர் நாடாக உருவாகவில்லை. இது 4000 ஜாதிகளாகப் பிரிந்து கிடக்கிறது. போதாத குறைக்கு ஜாதியும், மாகாண இயம், மத வேறுபாடுகள், இன்னும் பல சண்டை சச்சரவுகள், மோதல் முரண்பாடுகளும் நாட்டைப் பிரித்து வைத்திருக் கின்றன. இத்தனை பிரிவினைச் சக்திகள் இருக்கும் போது ஒருங் கிணைந்த இந்தியாவைக் கற்பனை செய்வதே கடினம். இந்துக்கள் முஸ்லீம்கள், கிறித்துவர்கள், ஆகிய மதத்தினருக்கு ஒரு பொது இலட்சியம் இல்லை. இந்தச் சூழலில் பிரிட்டிஷ் அரசு முடிவுக்கு வந்தால் இந்தியா ஒரு நாடு என்னும் நம்பிக்கை இல்லாதவர்களும் மதவெறியர்களும் ஜாதி உணர்வாளர்களும் அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றும் நோக்கில் ஒருவருக்கு ஒருவர் போரிடாமல் இருப் பார்களா?

உண்மையான சுதந்திரத்தை அடைவதற்கான, உண்மையான வலிமை இல்லாவிட்டால் அந்தச் சுதந்திரத்தைப் பற்றிய கனவுகளில் மூழ்குவதே ஆபத்தானது.

இன்னொரு புறம் நமது நிலைக்கும், காங்கிரஸ் நிலைக்கும் குறிப்பிடத்தக்க வேறுபாடு உண்டு. அரசு அமைப்புச் சீர்திருத் தங்களை காங்கிரஸ் விரும்பவில்லை. சீர்திருத்தம் என்றாலே காங்கிரஸ் எதிர்க்கிறது. சட்டமன்ற நுழைவுக்குப் பிறகு சீர்திருத் தங்களை அவர்கள் நிறுத்தி வைத்து விட்டார்கள். இந்தச் சீர்திருத் தங்கள் நமது எண்ணங்களுக்கும் கோரிக்கைகளுக்கும் ஏற்றவையல்ல என்ற போதிலும் அவற்றை வடித்தெடுக்கவே நாம் விரும்புகிறோம். நமக்குச் சட்டமன்றங்களில் வழங்கப்பட்டுள்ள உரிமைகளைக் காட்டிலும் அதிக பட்சமாகப் பெற்றுக் கொள்வதற்கான ஒரு வாய்ப்பாக அந்த முயற்சிகளை நாம் கருதுகிறோம். சட்ட மன்றங்

களை வேடிக்கை விளையாட்டுகள் வித்தைகள் காட்டிக் கொண்டிருக்கும் மைதானமாக மாற்றுவதற்கு இது நேரமல்ல.

இன்றைய காங்கிரஸ் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத ஒரு கலப்பட மக்கள் கூட்டமாக விளங்கிறது. அதில் கீழ்நிலைக் கூலி, ஏழைத் தொழிலாளி, விவசாயி, சிறு வணிகர், கடைக்காரர் முதல் நில உடைமையாளர், கந்து வட்டிக்காரர் வியாபாரிகள், நடுத்தர மக்கள், முதலாளிகள், சுரண்டல்காரர்கள் என்று எல்லாத் தரப்பினரும் இருக்கிறார்கள். சுருங்கச் சொன்னால் முரண்பட்ட நோக்கம் கொண்டவர்கள் அந்தக் கட்சியில் திரண்டிருக்கிறார்கள். ஏழை மக்களின் ரத்தத்தைச் சுவைப்பவர்கள் சுரண்டப்பட்ட மக்களின் நண்பர்களாக இருக்க முடியுமா? காங்கிரஸ் கட்சி கொழுத்த பணக்காரர்கள் மடியில் அமர்ந்து இருக்கிறது. அதனால் ஏழை விவசாயிகளும், தொழிலாளி வர்க்கமும் எப்படி நன்மை பெற முடியும்?

காங்கிரஸ் என்பது விவசாயிகள் தொழிலாளிகள் கட்சி அல்ல. அது, முதலாளிகளின் பாதுகாவலன். தொழிலாளி வர்க்கத்தின் நலன்களையும் பொதுமக்களின் நலன்களையும் காப்பாற்றவும் பாதுகாக்கவும் அக்கட்சியால் முடியாது.

இதற்கு மாறான நமது அமைப்பு - சுதந்திரத் தொழிலாளர் கட்சி சமுதாயத்தின் பலஹீனமான பிரிவுகளுக்குப் பாதுகாப்பாக இருக்கும்.

காங்கிரஸை விட நாம் சுலபமாக விவசாயிகள் தொழிலாளிகள் வர்க்க நலன்களைப் பாதுகாக்க முடியும்.

நமது கட்சியின் முக்கிய நோக்கம் தீண்டத்தகாதோர், தொழிலாளி வர்க்கம், ஏழை வர்க்கம் நசுக்கப்பட்ட மக்களின் நலன்களுக்காகப் போராடுவதே. பிரகடனம் செய்யப்பட்ட நமது கொள்கை. கோட்பாடுகளை விட்டுக் கொடாமலேயே நம்மால் பிறகட்சிகளுடன் கூட்டணி வைத்துக் கொண்டு தேர்தல்களை வெல்ல முடியும்.

தீண்டத்தகாதோர் பிரச்சினையை விட்டுவிட்டுப் பிற மக்களுடன் சேர்ந்து பணிபுரிவதை நான் ஏன் தேர்ந்தெடுத்தேன்

என்று பலமுறை என்னைக் கேள்வி கேட்டார்கள். இதன் தொடர்பாக நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். வரப்போகும் புதிய அரசமைப்புச் சட்டத்தின் படி சட்டமன்றத்தில் 175 உறுப்பினர்கள் இருப்பார்கள். இவர்களில் 15 பேர் தீண்டத் தகாதோர். இந்த 15 பேர்கள் திறம்படச் செயலாற்றுவது கடினம். ஏராளமான மக்களின் உதவி நமக்குத் தேவை. ஆகவே நம்மைப் போன்ற கொள்கைக் கோட்பாடுகள் உள்ள பிற நண்பர்கள் நமக்குத் தேவை. தீண்டத்தகாதோர் அல்லாதோர் மத்தியிலும் நமக்கு நண்பர்கள் இருக்கிறார்கள். அவர்கள் நமக்கு உதவியிருக்கிறார்கள்; தம்முடைய நலன்களை விட்டுக் கொடுத்து நம்மோடு இணைந்து நின்று போரிட்டிருக்கிறார்கள். எனவே வெறும் தத்துவ வாதத்தில் மூழ்கி இந்த கட்டத்தில் நமது நேரத்தை வீணடிக்கக் கூடாது. நமது லட்சியத்தை வெல்ல வேண்டுமென்றால் உள்சண்டை, சச்சரவுகள், வீண் செயல்கள், வெட்டி விவாதங்கள் இவற்றைத் தள்ளி வைக்க வேண்டும். நேரிய நோக்கத்துடனும் அக்கறையுடனும் நமது கட்சியின் லட்சியங்களையும் நம் கோட்பாடுகளையும் பின்பற்றி அவற்றை மேலும் வலுப்படுத்தினால்தான் இதுநாள்வரை நாம் மக்களுக்காகச் சாதித்த சாதனைகளை மேலும் வலுப்படுத்த முடியும்.

சட்டமன்றத் தேர்தலில் நான் வெற்றி பெறாவிட்டால் அது ஒன்றும் அத்தனை முக்கியமில்லை. என்ன நடந்தாலும் சரி இந்த ஜி தொகுதியில் வேட்பாளராகப் போட்டியிடும் திரு. கலோகேயை வெற்றியடையச் செய்வது உங்கள் பொறுப்பு. இது நமது கவுரவப் பிரச்சினை.

மாங்க்-மகர் வேறுபாடுகளை இந்த நேரத்தில் பெரிது படுத்தாதீர்கள். குறுகிய ஜாதி விசுவாசங்களுக்கு முக்கியத்துவம் தராதீர்கள். நாம் எல்லோரும் ஒரே மக்கள் என்னும் ஒற்றுமை உணர்வை மனத்தில் நிறுத்துங்கள்.

இனி அடுத்த முக்கிய விஷயத்திற்கு வருவோம். பெரும்பான்மை வேட்பாளர்களை மகர் சமூகத்தில் இருந்து நான் தேர்ந்தெடுத்திருக்கிறேன். பிற சமூகங்களில் இருந்து அத்தனை பேரை எடுத்துக் கொள்ளவில்லை. இதற்கான காரணங்களை இந்தக் கட்டத்தில் வெளிப்படையாகப் பேசுவது அறிவுடைமை ஆகாது. இந்தப்

பிரச்சினையை எனக்கு எதிராகத் திருப்புகிறார்கள். இதை நாம் மறுதலிக்க வேண்டும். சரியான பதில் தர வேண்டும். இந்தத் தேசிய ஹரிஜனங்களின் அமைப்புக்கு நான் ஒரு பெயர் தேர்ந்தெடுத்திருக்கிறேன். "கிடைத்ததை எடுத்துக்கொண்டு ஓடும் திருடர்கள்" என்று அவர்களுக்குப் பெயர் சூட்டியிருக்கிறேன்.

சம்பார் ஜாதி உறுப்பினர்கள் என்பதற்காக நாம் எவரையும் கட்சியை விட்டுவெளியேற்றவோ, விலக்கி வைக்கவோ இல்லை. அவர்கள் விருப்பத்திற்கு ஏற்றப்படி சிந்தித்துக் கொள்வதற்கு அவர்களுக்குச் சுதந்திரம் உண்டு. எனக்கு அதைப் பற்றிக் கவலையில்லை. இந்த ஹரிஜனங்களில் இருந்து நான் வேட்பாளர்களை தேர்ந்து எடுக்காததற்குக் காரணம் அவர்களுக்கு இருக்கும் "கிடைத்ததை எடுத்துக் கொண்டு ஓடும் குணம்" தான். அற்ப விஷயங்களுக்காகப் பிச்சைக்காரர்கள் மாதிரி அலைவதற்கு அவர்கள் தயாராக இருக்கிறார்கள். கொள்கை, கோட்பாடு, கட்சிக் கட்டுபாடு ஆகியவற்றை அவர்கள் மதிப்பதில்லை. "பறி, பறி", "பையில் போட்டுக் கொள்", "நடையைக் கட்டு" என்பதே அவர்களுடைய கோட்பாடு

மகர் சத்தியாக்கிரகத்தை நாம் ஆரம்பித்தோம். சுயமரியாதை, சுய சார்பு இயக்கத்தை நாம் தொடங்கினோம். நாசிக்கில் இன்னொரு போராட்டத்தை நடத்தினோம். புனா உடன்படிக்கை கையெழுத்து ஆவதற்கு முன்பு நமது வாழ்க்கையைப் பணையம் வைத்து உரிமைகளுக்காகவும் அரசியல் அரண்களுக்காகவும் காந்தியை எதிர்த்து நாம் போராடினோம். எல்லாமே அண்மையில் நடந்த விவகாரங்கள். அப்பொதெல்லாம் இந்த "தேசிய அரிஜனங்கள்" நமது பகைவர்களின் கூடாரங்களில் வசதியாக உட்கார்ந்திருந்தார்கள். இந்தக் கள்ளர்கள் இப்போது நமது வெற்றியில் பங்கு கேட்க வந்து விட்டார்கள். இதற்கான போராட்டங்களில் அவர்கள் பங்குக்கு நமக்கு ஒத்துழைப்புக் கூட தந்ததில்லை. நாம் மட்டும் ஏன் அவர்களிடம் பெருந்தன்மை காட்டவேண்டும். வௌவால் வாழ்க்கை வாழ்பவர்களின் விமர்சனத்தை நான் எப்போதும் லட்சியம் செய்வதில்லை. புனா ஒப்பந்தத்திற்கு முன்பு காந்திஜி உண்ணாவிரதம் இருந்தபோது இதே வௌவால்கள் அவருக்கு ஆதரவாக திரண்டெழுந்து அவரது உயிரைக் காப்பதற்காக

ஒடுக்கப்பட்ட மக்களுக்கான இட ஒதுக்கீடு எங்களுக்குத் தேவையில்லை என்று பிரகடனம் செய்தார்கள். இப்படி இருக்கும்போது போராட்டத்தின் மூலம் பெற்ற 15 இடங்களில் பங்கீடு கேட்க இவர்களுக்கு என்ன உரிமை இருக்கிறது? தேசிய அரிஜன் தலைவர் திரு.நாராயணன் கஜ்ரோல்கர் ஒரு நாள் டாக்டர் சாவர்க்கரோடு ஒரே வரிசையில் உட்கார்ந்திருப்பார். திரு. வல்லபாய் படேல் போன்ற தேசபக்தர்கள் முகாமில் ஓர் இடத்திற்காக திரு. பி. பாலு தொங்கிக் கொண்டிருப்பார்.

இப்படிப்பட்ட சூழலில் இந்த ஹரிஜன அமைப்பின் நிலைமை என்ன? அது என்னவாக இருக்கும் என்று சொல்வதற்கு அவசியமில்லை. சொல்வது முறையும் அல்ல. எதிர்காலத்தில் இப்படி ஒரு நிலை ஏற்படும் என்பது குறித்து யாராவது தெளிவாக்கியிருக்கிறார்களா? நமது போராட்டத்தில் இன்றுவரை ஒத்துழைப்பு தந்த ஒரே நபர் திரு. சிவ தார்க்கர் மாஸ்டர்தான். சமர் வகுப்பில் பிறந்த முக்கியமான தலைவர் அவர். துர்ப்பாக்கிய வசமாக நகராட்சிக் குழுக்களுக்கான தேர்தலில் போட்டியிட அவருக்கு அனுமதி வழங்கப் படவில்லை. அதனால் நமது கட்சியின் வேட்பாளராக அவரை முன் மொழிய முடியாமல் போய்விட்டது.

நல்லது. உண்மையில் சட்டமன்றத்தில் நுழைவதைவிட வெளியில் இருந்து பணிபுரிவதே எனக்குச் சிறந்ததாகத் தோன்றுகிறது. மத மாற்றப் பிரச்சினையும் நம் தலைக்கு மேல் ஆபத்தாகத் தொங்கிக் கொண்டிருக்கிறது.

எது எப்படி இருந்தாலும் நமது மக்களின் விருப்பங்களுக்கு மதிப்பளித்து, சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் வேட்பாளராகச் சட்ட மன்றத்தில் அமர்வது என்று நான் முடிவு செய்துவிட்டேன். இந்த முடிவுக்கு எல்லாவிதங்களிலும் இடையூறு செய்யக் காங்கிரஸ் நிச்சயம் முயலும். அத்தகைய முயற்சிகளை அவர்கள் ஆரம்பித்து விட்டார்கள். நான் சட்டமன்றத்தில் நுழையக் கூடாது என்பதே அவர்களது நோக்கம். எனவே நாம் எல்லோரும் எச்சரிக்கையாகவும் ஒற்றுமையாகவும் இருந்து கட்டுப்பாடான முறையில் பணியாற்ற வேண்டும். இம்முறை உங்கள் எல்லோருடைய வாக்குகளும் எனக்குக் கிடைத்தாக வேண்டும். அதே சமயம் சட்டமன்றப் பிரவேசத்திற்காக

என் கொள்கைகளைக் காற்றில் விட்டுவிடுவேன் என்று மட்டும் எண்ணாதீர்கள்.

உங்களுக்கு உதவி செய்ய யாருமில்லை என்பதை நீங்கள் தெளிவாகப் புரிந்து கொள்ளுங்கள். எந்தச் சதிக்கும் நீங்கள் பலியாகிவிடக் கூடாது என்பதே என் ஆலோசனை. தக்க தருணம் வரும்போது நீங்கள் தன்னலம், பேராசை, குறுகிய மனப்பான்மை ஆகியவற்றை அடியோடு விட்டொழிக்க வேண்டும். வேட்பாளர் வாய்ப்பு கிடைக்காத சிலர் விரக்தியின் காரணமாகச் சீர்குலைவுப் பாதையில் எளிதாகப் பயணம் செய்ய ஆரம்பித்து விடுவார்கள். கவனத்தில் வையுங்கள். நமக்கு நிழலும், வசதியும் பாதுகாப்பும் தருகிற மதத்தை நாம்தான் வளர்க்க வேண்டும்; அதற்குக் காவலும் இருக்க வேண்டும். அதன் கிளைகளை ஒடிக்க ஒருகாலும் நீங்கள் முயல மாட்டீர்கள் என்னும் நம்பிக்கை எனக்கு உண்டு.

சுயநல நோக்கத்தில் நமக்குத் தீங்கு செய்ய நினைப்பவர்கள் வெற்றி பெறுவது சந்தேகம். அவர்கள் எந்த விதத்திலும் பயனடையப் போவதில்லை. கைக்கோடாலியை எடுத்து சொந்தக் காலை வெட்டிக் கொள்பவர்கள் அவர்கள். அவர்களது நடவடிக்கைகளைப் பற்றிக் கவலைப்படாமல் என்னுடைய சகாக்களை வைத்துக் கொண்டு நான் ஒரு திட்டம் தயாரித்துவிட்டேன். அதை உங்கள் முன்வைக்கிறேன் அந்தத் திட்டத்தின் வெற்றிக்காக சமதா - சைனிக் தாள் உறுப்பினர்களாகிய நீங்கள் கட்டுப்பாட்டுடனும் ஊக்கத்துடனும் பாடுபடுவீர்கள் என்று நம்புகிறேன்.

நமது பகைவர்கள் வலிமையும் ஆற்றலும் மிகுந்தவர்கள். அவர்களை நாம் எதிர்கொள்ள வேண்டும். அதற்காகக் குறைந்த பட்சம் 2000 சமதா - சைனிக்குக்களை பம்பாயில் தயார் நிலையில் வைத்திருக்க வேண்டும். மனித சக்தி, அர்ப்பணிப்பு, ஒருமைப்பாடு அனைத்தும் ஒருங்கே திரண்டு இருப்பதால் எந்தச் சூழலையும் சமாளிக்கும் வழி நமக்குப் புலப்படும். என்னுடைய வெற்றிக்கு இடையூறு செய்யும் முயற்சியில் காங்கிரசும் பிற அமைப்புகளும் இறங்கியிருக்கிறார்கள். நமது வர்க்கத்தின் உறுப்பினர்கள் அனைவரும் தங்களது மதிப்பு மிக்க வாக்குகளை எனக்காக அளிப்பீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. அதே போல் என்

தொகுதியில் வாழும் எந்த உறுப்பினரும் வாக்குச் சாவடிக்கு வராமல் இருக்க மாட்டார்கள் என்றும் நான் நம்புகிறேன். இவற்றைச் செய்து முடிப்பது சமதா - சைனிக் கைகளில்தான் இருக்கிறது. ஒவ்வொரு சமதா - சைனிக் உறுப்பினரும் நான் இல்லாதபோது இந்தக் கடமையை உத்வேகத்துடனும் அர்ப்பணிப்புடனும் நிறைவேற்றுவார் என்று நம்புகிறேன். இதை மேற்பார்வை செய்ய ஒரு குழுவை நியமித்திருக்கிறேன். அந்தக் குழுவின் துணையோடு இக்கடமையை வெற்றிகரமாக நிறைவேற்றுவீர்கள் என்று நம்புகிறேன்."

---

# (33)

# நமது குறைகள் தொடர்வதை நாம் அனுமதிக்க முடியாது

பம்பாய் காம்தார் மைதான் பரேலில் சுதந்திரத் தொழிலாளர் கட்சி சார்பில் 1937 மே 30ஆம் நாள் ஒரு மாபெரும் பொதுக் கூட்டம் நடைபெற்றது. நிர்வாகக் கவுன்சில் தேர்தலில் வெற்றி பெற்ற பிரதிநிதியைப் பாராட்டுவதற்காக இது ஏற்பாடு செய்யப்பட்டது. டாக்டர். பி.ஜே. சோலகிங் தலைமை தாங்கினார். 15,000 பேர் செய்யும் பணியில் சமதா-சைனித் தளத்தின் பல்வேறு பிரிவினர் நியமிக்கப்பட்டிருந்தார்கள்[1]

கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் தமது கருத்துகளை மீண்டும் மீண்டும் வலியுறுத்தினார். ஒடுக்கப்பட்ட வகுப்பினர் நலன்களுக்கான ஒரு புதிய அரசு அமைப்பை நிறுவுவதில் தமக்குள்ள உறுதியை அவர் பேச்சில் வெளிப்படுத்தினார். காங்கிரஸ் கட்சி கோரிக்கை விடும் போது இந்தச் சிக்கலை ஒழுங்காக தீர்த்து வையுங்கள் என்று கேட்டுக் கொண்டார். இந்த விஷயத்தில் கட்சியை எச்சரிக்கையும் செய்தார். "நமது குறைகள் நீடிக்க நாம் அனுமதிக்க மாட்டோம். ஏகாதிபத்தியத்தை எதிர்த்துக் காங்கிரஸ் நடத்தும் போராட்டம் தீரும் வரை நமது குறைகளும் நீடித்துக் கொண்டிருப்பதை நாம் அனுமதிக்க முடியாது. ஒடுக்கப்பட்ட வகுப்பில் சில இழிவான மனிதர்களைக் காங்கிரஸ் கட்சி வேட்பாளர்களாக மக்கள்முன் நிறுத்தும் தந்திரத்தை ஜவஹர்லால் நேரு போன்ற தலைவர்கள் கையாள்வதை அம்பேத்கர் கடுமையாக கண்டித்தார். நேரு வீட்டு வேலைக்காரனான ஹரி என்பவனைக் காங்கிரஸ் கட்சி வேட்பாளராக நிறுத்தியதை அவர் சுட்டிக் காட்டினார். இடைக்கால அமைச்சரவையில் ஏன் சேரவில்லை என்று கேட்கப்பட்ட போது அந்த அமைச்சரவைக்குச் சட்டமன்றத்தில் பெரும்பான்மை இல்லையென்றும் அது நீடிக்கப் போவதில்லை என்றும் அந்தப் பதவியில் சேருவதால் எந்தப் பயனும் ஏற்படாது என்றும் பதிலளித்தார்."[2]

---

1. 'ஜனதா' 1937, ஜூன், 12.
2. கீர், ப. 293.

# (34)

# ஒடுக்கப்பட்ட வகுப்பு அமைச்சர்கள் என்பதாக எவரும் இல்லை

*தொழிற்பணி காரணமாக டாக்டர் அம்பேத்கர் 1937- ஜூலை 31 அன்று துலயா சென்று கொண்டிருந்தார். சாலிஸ்கோன் புகைவண்டி நிலையத்தில் ஒடுக்கப்பட்ட மக்களால் அவருக்கு மாபெரும் வரவேற்பு அளிக்கப்பட்டது. காலை 8 மணிக்கு துலியாவை அடைந்தபோது இடிமுழக்கம் போன்ற கைதட்டலுடன் வரவேற்கப் பட்டார். ஒலித்த முழக்கங்கள் "அம்பேத்கர் யார் அவர் எங்கள் மாமன்னர்". பயணியர் விடுதிக்கு அம்பேத்கரை ஊர்வலமாக அழைத்துச் சென்றார்கள். நீதி மன்றத்தில் அவரது வேலை முடிந்தது. பிற்பகல் ஹரிஜன் சேவா சங்கத்தைச் சேர்ந்த பார்வே என்பவரால் ஒரு தேநீர் விருந்து அளிக்கப்பட்டது.*

*அன்று மாலை விஜய் ஆனந்த தியேட்டரில் டாக்டர். அம்பேத்கர் பேசினார். பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் தீண்டத் தகாதோர் மீது அலட்சியம் காட்டினார்கள். இன்று அவர்களுடைய இடத்தில் ஒரு புதிய தலைவர் அணி அதே பணியைச் செய்து கொண்டு இருக்கிறது. இந்தத் தலைவர்கள் நம்முடைய சொந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்பதுதான் வித்தியாசம்.*

*இதை நீங்கள் கருத்தில் கொள்ள வேண்டும் என்று குறிப்பிட்டார். அந்த நாட்கள் சங்கம் கட்டுவதிலும் தீண்டத் தகாதோர் நன்மைக்காக எச்சரிக்கை விடுப்பதிலும் செலவிட்ட நாட்கள் என்றார் அவர். காங்கிரஸ் நிறுவிய அமைச்சரவைகள் மூலம் இந்தியாவில் பிராமணீயம் ஆதிக்கம் செலுத்தி வருகிறது என்றும் அவர் குறிப்பிட்டார். எல்லாக் காங்கிரஸ் உறுப்பினரும் பிராமணர்கள் தலைமையில்தான் வருகிறார்கள். ஒடுக்கப்பட்ட மக்களுக்கென்று அமைச்சர்களே இல்லாமல் போய் விட்டார்கள் என்பதையும் அவர் சுட்டிக் காட்டினார்![1]*

---

*1. கீர், ப. 294.*

# (35)

# இந்து மதக் கடவுள்களை வணங்காதீர்கள்

*எண். 11- ஆண்டு 1938,*
*கீழை மொழிகள் அங்கத்தினர் அலுவலகம்,*
*தலைமைச் செயலகம்,*
*பம்பாய்,*
*5-1-1938.*

## அறிவிக்கை

*கீழே கையொப்பம் இட்டுள்ள நான் உள்துறை (அரசியல்) அரசுச் செயலருக்கு வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். நிரோப்யா என்னும் மராத்தி ஏட்டைத் (தொகுதி XXII எண் - 6 - நவம்பர் 1937) தங்களுக்கு அனுப்புவதில் பெருமைக் கொள்கிறேன். அதன் தலையங்கத்தில் (பக்கம் 135-138) குறிப்பிடத்தக்க செய்திகள் அடங்கியிருக்கின்றன.*

*2. நிரோப்யா புனா ஆர்ச் பிஷப்பால் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது. அச்சகம், எக்ஸாமினர் பிரிண்டிங் பிரஸ், தலாலி தெரு, போர்ட், பம்பாய். அச்சகத்தின் பாதுகாவலர் அல்லது பரிசோதகர் என்னும் பிரகடனத்தில் ஜே. எம். செரிஸ், எஸ். ஜே. என்னும் பெயரும் 23-1-1937 தேதியும் காணப்படுகின்றன. புத்தகம் வெளியிடப்பட்ட தேதி 1-11-1937.*

*3. தலையங்கத்தின் முழு மொழிப் பெயர்ப்பும் (135-138) இக் கடிதத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.*

*(கையொப்பம்)*
*கீழை மொழி அங்கத்தினர்*
*அரசு டி. சி. பி.*

*(கையொப்பம்)*
*மேற்பார்வையாளர் எஸ். பி. சி. ஐ. டி.*

## மதமாற்றத்தின் அவசியம்

டாக்டர் அம்பேத்கர் அணி தர்மந்தச்சாரி கவஷ்யகதா (எ. கா. டாக்டர் அம்பேத்கரும் மதமாற்றத்தின் அவசியமும்) நிரோப்யாவில் வெளிவராத தலையங்கம் (தொகுதி XXII எண் 6, நவம்பர் 1937)

இந்த மொழிபெயர்ப்பில் காணப்படும் அடைப்பு குறிகள் மூலத்தில் இல்லை. மூலத்தில் அடைப்புகுறிகள் காணப்படும் இடங்கள் இடது பக்கம் தனியே சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

ஜனதா வாரச் செய்தி பத்திகையிலிருந்து கீழ்க்கண்ட செய்தி தெரிய வருகிறது. 1938 ஆகஸ்ட் 27 அன்று டாக்டர் அம்பேத்கர் தலைமையில் பந்தரா நகராண்மைக் கழகக் கூட்டத்தில் நடத்தப்பட்ட ஒடுக்கப்பட்ட மக்களின் பொதுக் கூட்டத்தில் கீழே காணும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

"பம்பாய் மாகாண மகர் மாநாட்டில் எடுக்கப்பட்ட தீர்மானத்தின் படி நமது சகோதரர்களும் சகோதரிகளும் இந்து மத விழாக்களைக் கொண்டாடக் கூடாது. இந்து மதச் சடங்குகள் பிராமணர்களைக் கடைப்பிடிக்கக் கூடாது. மத ஒழுக்கங்களை, உண்ணா நோன்புகள் போன்றவற்றைப் பின்பற்றக் கூடாது."

பலர் பேசிய பின்பு அம்பேத்கர் பேச எழுந்தார். பம்பாய் மாகாண மகர் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட மதமாற்றத் தீர் மானத்தைக் குறித்து உங்களுக்கு நினைவூட்ட இந்தக் கூட்டம் கூட்டப்பட்டுள்ளது. மத மாற்றம் பற்றி எந்தக் கேள்வி அல்லது எ ந்த ஐயம் இருந்தாலும் அதை நீங்கள் என்னிடம் கேட்கலாம்.

எவரும் எந்தச் கேள்வியும் கேட்க முன்வராததால் டாக்டர் அம்பேத்கர் பேச்சைத் தொடங்கினார்.

"அன்பார்ந்த சகோதர, சகோதரிகளே முதலில் நான் இந்தக் கூட்டத்திற்கு வருவதாக இல்லை. மகர் மாநாடு மத மாற்றத் தீர்மானத் திற்கு முழுச் செயலாக்கம் தருவதற்கு பழைய மரபுகளை விடாப் பிடியாக பிடித்துக் கொண்டிருக்கும் சிலர், தடையாகயிருக்கிறார்கள்." என்று கேள்விப்பட்டதால் அவர்களது சந்தேகங்களை நீக்குவதற் காகத்தான் இந்தக் கூட்டத்திற்கு வந்திருக்கிறேன். நீண்ட நாட்களுக்கு முன்பே மதமாற்றம் குறித்து பலமுறை என் கருத்துகளை நான்

தெரிவித்து விட்டேன். உங்கள் மனத்தில் அது குறித்து எந்த சந்தேகமும் எழுவதில் நியாயம் இல்லை. 1935 கூட்டப்பட்ட பம்பாய் மாகாண மகர் மாநாடு நமது மரபு வகுப்பின் வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியது. அத்தகைய மாநாட்டின் தீர்மானங்கள் மகர் சமுதாயத்தால் முழுமையாகக் கடைபிடிக்கப் படுவதில்லை. பெரும்பான்மை மகர்கள் அந்தத் தீர்மானத்தைக் கடைப்பிடிக்கிறார்கள்.

## இந்து மதக் கடவுள்களை வணங்கக் கூடாது

டாக்டர் அம்பேத்கர் மேலும் பேசினார்- இந்து மதத்தை ஒட்டிய எல்லா விழாக்களையும், புனித நாட்களையும் நாம் இதுவரை பின்பற்றினோம். இனி அவற்றைக் கைவிட வேண்டும். இந்து மதச் சடங்குகள் மத அடிப்படையிலும் சரி, தர்ம நியாய அடிப்படையிலும் சரி சரியானவையா என்னும் பிரச்சினையை நாம் ஆராய வேண்டும். சில சடங்குகள் கேலிக் கூத்தாக விளங்குகின்றன. சான்றாக ஒவ்வொரு திங்கட்கிழமையும் (பகவான்) சங்கரர் பெயரில் சிலர் உண்ணா நோன்பு இருக்கிறார்கள். சங்கரருடைய லிங்கம் எதுவென்று யாராவது சிந்தித்ததுண்டா? அது வேறு ஒன்றுமில்லை. ஆண் பெண் சங்கமத்தின் குறியீடுதான். இத்தகைய அருவருக்கத்தக்க விஷயங்களை நாம் பாராட்டிக் கொண்டிருக்க வேண்டுமா? ஓர் ஆணும் பெண்ணும் தெருவில் பகிரங்கமாக நாய்களைப் போல் கலவி செய்வார்களே யானால் அந்தச் கலவியை நாம் மலர்கள் தூவியா வணங்குவோம் காலணிகளை எடுத்து வீச மாட்டோமா? அதே காரியத்தை சிவனும், பார்வதியும், பகிரங்கமாகச் செய்யும் போது வணங்குவது சரியா?

கணபதியின் கதையும் இதேதான். ஒரு முறை பார்வதி நிர்வாணமாக குளித்துக் கொண்டிருந்தார். சங்கரர் வெளியே போயிருந்தார். இடையூறு எதுவும் இல்லாமல் இருப்பதற்காக பார்வதி தம்முடைய மேனி அழுக்குகளையெல்லாம் திரட்டி அதைக் கணபதியாக வெளியில் காவலில் நிறுத்தி இருந்தார். இந்தத் துர் நாற்றமடிக்கும் அழுக்குருண்டையைக் கடவுள் என்று நம்பலாமா? கடவுள் களங்கமற்ற புனித உருவாகத் திகழ வேண்டாமா? இந்துக் கடவுள்கள் எல்லோருமே விசித்திரமானவர்கள். எனவேதான் சொல்கிறேன் அவர்களை வணங்காதீர்கள்.

பிறகு டாக்டர் அம்பேத்கர் தத்தாத்ரேயர் கதையைச் சொல்லத் தொடங்கினார். பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளின்

மனைவியரிடமும் அத்ரி முனிவரின் மனைவி அனுசுயா மிக உயர்ந்த பத்தினி என்று சொல்லி வைத்தார். தங்களைவிட உயர்ந்த பத்தினி ஒருவர் இருக்கிறார் என்றால் அதை அவர்களால் சகித்துக் கொள்ள முடியவில்லை. இந்த மூன்று மனைவிகளும் தத்தம் கணவரை நோக்கி அனுசுயாவின் பத்தினித் தன்மையைக் கெடுத்துவிட வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். மூன்று கதாநாயகர்களும் அவர்கள் கேட்டுக்கொண்டபடி தயாராகி விட்டார்கள். அனுசுயாவின் வீட்டிற்குச் சென்றார்கள். ஏதோ காரணம் சொல்லி அவரது கணவரை வெளியே அனுப்பி விட்டார்கள். அனுசுயாவுடன் வாழ ஆரம்பித்தார்கள். அதன் காரணமாக ஒரு மகன் பிறந்தான். மூவரில் யார் தந்தை என்னும் கேள்வி எழுந்தது. மூவருக்கும் சம அளவில் பொறுப்புண்டு என்பதன் காரணமாக அந்த குழந்தைக்கு தத்தாத்ரேயர் என்று பெயர் வைத்தார்கள்.

## மதமாற்றத்திற்கான இயக்கம் திரும்பப் பெறக் கூடாது

சொற்பொழிவின் முடிவில் டாக்டர். அம்பேத்கர் சொன்னார். மதமாற்ற அலை நடந்து விட்டது என்று பலர் நினைத்துக் கொண்டிருக்கலாம். அது ஓயவில்லை. மதமாற்றம் நடக்கத்தான் போகிறது. நான் இந்த இயக்கத்தைக் கைவிட்டு விடவில்லை என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். மத மாற்றப் போராட்டத்தின் விளைவாக எங்கள் கண்களைத் திறந்து விட்டீர்கள் என்று பல இந்துக்கள் என்னிடம் வந்து சொல்கிறார்கள். "நாங்கள் விழித்துக் கொண்டு விட்டோம். உங்களுக்கு ஆற்றவேண்டிய கடமையிலிருந்து தவற மாட்டோம். ஆகவே மத மாற்ற இயக்கத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்று என்னை வேண்டுகிறார்கள். நான் இந்த இயக்கத்தைத் திரும்ப பெறுவதாக இல்லை. சற்று முன்பு உங்களிடம் விவரித்த அதே காரணங்களுக்காக இதைத் திரும்ப பெறுவது நியாயமில்லை. எனவே ஆழ்ந்து சிந்தியுங்கள். ஆழ்ந்த சிந்தனைக்குப் பிறகு புதிய மதத்தை நாம் தழுவ வேண்டும். புதிய மதத்தைத் தழுவுவதற்கு முன்பு நாம் புடம் போட்ட தங்கம் போல் மாற வேண்டும். மகர் மாநாட்டின் தீர்மானங்கள் படியே மகர் வகுப்பினர் எல்லோரும் ஒழுக வேண்டும்.

---

## (36)

# கம்யூனிஸ்ட்டுகள் உழைப்பாளிகளைச் சுரண்டினார்கள்

1937 செப்டம்பர் தொடக்கத்தில் மசூர் இல் ஒடுக்கப்பட்ட மக்களின் மாவட்ட மாநாட்டை அம்பேத்கர் தலைமை தாங்கி நடத்தினார்.

சொற்பொழிவின் போது அவர் பின்வருமாறு கூறினார். தொழிலாளி வர்க்கம் மற்றும் ஏழை மக்களின் பாதுகாவலராக இருக்கும் தகுதி காந்திக்கு இல்லை. காங்கிரஸ் கட்சி ஒரு புரட்சிகரமான கட்சியாக இருந்தால் நான் அதில் சேர்ந்திருப்பேன். அப்படி இல்லையென்று எனக்கு நிச்சயமாகத் தெரியும். சுய விருப்பத்திற்கு ஏற்றபடி ஒரு பொது மனிதன் தன்னுடைய நட்பையும் சுதந்திரத்தையும் பெற்றுத் தன்னை வளர்த்துக் கொள்ள உதவும் சமூக, பொருளாதார சமத்துவம் என்னும் லட்சியத்தை பிரகடனம் செய்யும் துணிவு காங்கிரஸ் கட்சிக்கு இல்லை. சுயநலம் பிடித்த சில தனி மனிதர்கள் கட்டுப்பாட்டில் உற்பத்தி சாதனங்கள் இருக்கும் வரையில் அத்தகைய சமத்துவப் பிரகடனம் சாத்தியமே இல்லை. கலப்பையில் இரண்டு மாடுகளைத் தான் பூட்டுவார்கள். காந்தியம் என்பது உழவனையும் சேர்த்து மூன்றாவது மாடாக அதில் பூட்டுவது போன்றது.

கம்யூனிஸ்ட்டுகள் நடத்தும் தொழிலாளர் இயக்கத்தைப் பற்றி பேசுகையில் அவர் சொன்னார்: நான் அதில் சேரும் சாத்தியக் கூறே இல்லை. நான் அவர்களின் பரம்பரை எதிரி. கம்யூனிஸ்ட்டுகள் என்பவர்கள் தொழிலாளர்களைத் தங்களுடைய அரசியல் நோக்கத்திற்காகச் சுரண்டுபவர்கள்![1]

---

1. கீர், பக். 295 - 296.

# (37)

# சுரண்டல்காரர்களிடம் எச்சரிக்கையாக இருங்கள்

1937 டிசம்பர் 30ஆம் நாள் சோலாமகர் மாவட்ட ஒடுக்கப்பட்ட மக்கள் மாநாட்டுக்கு டாக்டர். அம்பேத்கர் தலைமை தாங்கினார். குருத்வார் புகைவண்டி நிலையத்தில் அதிகாலையில் அவருக்கு உற்சாகமான வரவேற்பு அளிக்கப்பட்டது. மாநாடு செல்லும் வழியில் இடையே அவர் சிறிது நேரம் ஊர்வலத்தை நிறுத்தி தர்க்கம் கிராமத்தில் மதங்க் சமாஜ் முன்பு ஒரு சிறிய சொற்பொழிவை ஆற்றினார்.

காங்கிரஸ் கட்சியில் இருப்பவர்கள் உங்களைச் சுரண்டுபவர்கள், உங்களை ஒடுக்குபவர்கள், உங்கள் ரத்தத்தை உறுஞ்சுபவர்கள். தூய வெள்ளை ஆடையும் வெள்ளை குல்லாவும் அணிந்துகொண்டு உதட்டளவில் ஏழை மக்கள் நலன் பற்றிப் பேசிக் கொண்டிருப் பவர்கள். அவர்கள் விஷயத்தில் நீங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று அவர் கிராம மக்களுக்கு அறிவுரை சொன்னார்.[1]

---

1. கீர், ப. 297.

# (38)

# சுய மரியாதை மற்றும் சுய உதவி இயக்கம் இழப்பதற்கு எதுவும் இல்லை அடைவதற்கோ எல்லாம் உண்டு

ஷோலங்பூர் மாவட்டத்தில் சுற்றுப்பயணம் மேற்கொண் டிருந்த டாக்டர் அம்பேத்கர் 1937 டிசம்பர் 31 அன்று மதியம் பந்தர்பூரை அடைந்தார். பயணிகள் விடுதிக்கு ஊர்வலமாக அழைத்து சென்றார்கள். பந்தர்பூர் நகராண்மை கழகத் தலைவர் அம்பேத்கரைச் சந்தித்தார். இருவரும் மாநாட்டிற்குப் புறப்பட்டார்கள். மாநாடு நகராண்மைக் கழகத் தரும சாலையில் நடத்தப்பட்டது. தொலைவில் இருந்தும் அருகிலிருந்தும் தங்கள் மாபெரும் தலைவர்கள் பேச்சை கேட்க மக்கள் திரண்டார்கள். மாநாட்டில் 1000-க்கும் மேற்பட்ட பெண்கள் கலந்து கொண்டார்கள்.

டாக்டர் அம்பேத்கார் மாநாட்டில் பேசினார்:

“இப்போது உங்கள் முன் மூன்று கேள்விகள் தோன்றுகின்றன. ஒன்று - இந்து சமுதாயத்திற்கு என்றாவது ஒரு சரிசமமான தகுதி தரப் படுமா? இரண்டு - தேசிய சொத்தில் உங்களுக்கு உரிய பங்கு எப்போ தாவது கிடைக்குமா? மூன்று - சுயமரியாதை மற்றும் சுய உதவி இயக் கத்தின் கதி என்ன? முதல் பிரச்சினை பற்றி அவர் கருத்து: ஜாதியம் இருக்கும் வரை உங்களுக்குச் சமத்துவம் கிடைக்கப் போவதில்லை, - இரண்டு - முதலாளிகளால் ஆளப்படும் காங்கிரஸ் கட்சி உங்களை நடத்தும் விதத்தை நான் முழுக்க வெறுக்கிறேன். முதலாளிகள் கையில் காங்கிரஸ் இருக்கும் வரை எதுவும் செய்யும் என்று நீங்கள் நம்பக்கூடாது. எனவே முதலாளிகளுக்கு எதிராக- உங்களைச் சுரண்டுபவர்களுக்கு எதிராக - ஓர் ஐக்கிய முன்னணியைத் திரட்ட வேண்டியது அவசியம். பொருளாதாரச் சுதந்திரத்தை வென்றெடுக்க வேண்டிய நேரம் வந்துவிட்டது. மூன்று - ஒன்று மட்டும் நினைவில் இருக்கட்டும். இழப்பதற்கென்று உங்களிடம் எதுவும் இல்லை. அடைவதற்கு மட்டும் எல்லாம் உண்டு. மரண பயம் என்பதை நீங்கள் அடியோடு ஒழிக்க வேண்டும்.

சட்டமன்றத்தில் அவர் கொண்டு வந்த மகர் வட்டன் மசோதாவை மாநாடு முழுமையாக ஆதரித்தது."

அம்பேத்கரை நகராண்மைக் கழகக் கூட்டத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கே உறுப்பினர்களால் அவருக்கு மகத்தான வரவேற்பு தரப்பட்டது. நகராண்மை கழகத் தலைவர் உள்ளத்தைத் தொடும் வகையில் உரையாற்றினார். விருந்தினருக்கு மாலையிட்டு மரியாதை செய்தார். அம்பேத்கர் அதே உணர்வுகளைத் தாமும் வெளிப்படுத்தி அவர்கள் அனைவருக்கும் நன்றி தெரிவித்தார்.[1]

---

1. கீர், பக். 297 - 298.

# (39)

# கிறித்தவர்கள் அரசியல் அடிப்படையில் பின்தங்கியிருக்கிறார்கள்

*1938 ஜனவரி முதல் தேதி ஷோலாப்பூரில் டாக்டர் அம்பேத்கர் ஓர் முக்கியமான சொற்பொழிவை நிகழ்த்தினார். மதம் குறித்து அவரது கருத்துகளை அறிவதில் உள்ளூர் கிறித்தவர்கள் ஆர்வம் காட்டினார்கள். ரெவரண்ட் கங்காதர் ஜாதவ் தலைமையில் கிறித்துவர் கூட்டத்தில் அவர் பேசினார்.*

*இந்து மதத்தைக் கைகழுவும் எண்ணத்தை வெளியிட்ட நாளிலிருந்து நான் விலை பேசப்படும் பொருளாகி விட்டேன்; ஒரு நகைச்சுவை நாயகனாகி விட்டேன் என்றார் அவர். மஹாராஷ்டிரத்தின் புகழ் பெற்ற நாடக ஆசிரியர் ஆச்சாரிய பி. கே. ஆத்ரே எழுதிய "வந்தே பாரதம்" என்னும் நகைச்சுவை நாடகத்தை அவர் குறிப்பிட்டுப் பேசினார். அந்நாடகத்தில் மதமற்ற கருத்து கேலி செய்யப்பட்டிருந்தது. அம்பேத்கர் சொன்னார்: நான் என் தீர்மானத்தில் உறுதியாக இருக்கிறேன். நான் கற்ற ஒப்பீட்டின்படி இருவருடைய ஆளுமைகள் என்னைக் கவர்கின்றன. ஒருவர் புத்தர், இன்னொருவர் கிறிஸ்து.*

*அவர் தொடர்ந்தார்: "எந்த மதம் மனிதனுக்கு மனிதன் நடந்து கொள்ளும் பண்பையும் அவனது கடமையையும், அதே சமயம் சமத்துவம் சகோரத்துவம் சுதந்திரம் ஆகிய கருத்துகளின் அடிப்படையில் கடவுளுக்கும் அவனுக்குமுள்ள உறவை அறிவுறுத்துகிறதோ அத்தகைய மதமே எனக்குத் தேவை".*

*கிறித்தவர்களைப் பார்த்து அவர் சொன்னார்: "தென்னிந்தியாவில் உள்ள உங்கள் சர்ச்சுகளில் ஜாதி அமைப்பை பின்பற்றுகிறார்கள்; அரசியலிலும் பின்தங்கி இருக்கிறார்கள். மகர் இளைஞர்கள் கிறித்தவர்களாக மாறினால் அவர்களது உதவிச் சம்பளம் பறிக்கப்படுகிறது. ஆக, கிறித்துவர்களாக மாறுவதில் பொருளாதார லாபம் இல்லை. இந்தியக் கிறித்தவர்கள் சமூக அநீதிகளை அகற்றுவதற்காக எப்போதுமே போராடியது இல்லை"[1]*

---

*1. கீர், பக். 299 - 300.*

# (40)

# தீண்டத்தகாதோரை முன்னேற்றும் பணி

*1938 ஜனவரி முதல் நாள் ஷோலாப்பூரில் மாங்க் வகுப்பினர் மாநாட்டின் நான்காம் அமர்வு நிகழ்ந்தது.*

*கூட்டத்தில் அம்பேத்கர் பேசினார். என்னுடைய பணி தீண்டத் தகாதோரை மேல்நிலைக்குக் கொண்டு வருவது. அது மகர் வகுப்போடு நின்றுவிடாது. எல்லா ஒடுக்கப்பட்ட வகுப்புகள் விஷயத்திலும் தொடரும். நான் பிற வகுப்பினருக்காகவும் விடுதிகளைத் திறந்து வைத்திருக்கிறேன். மாங்குக்கள், சாமர்கள், அரசுத் துறைகளில் வேலை வாய்ப்புகள் பெற உதவி இருக்கிறேன் என்று அவர் பேசினார். அந்தக் கூட்டத்தில் 2500 பேர் கலந்து கொண்டார்கள்.[1]*

---

*1. பம்பாய் ரகசிய ஆவணக் குறிப்பு, 1938, ஜனவரி, 8.*

# (41)

# யார் யாருக்குச் செவி சாய்ப்பது சரியோ அவர்களது குறைகளையெல்லாம் ஜனநாயகம் செவி சாய்த்துக் கேட்க வேண்டும்

*மாதங் மாநாட்டில் கலந்துக் கொள்ள டாக்டர் அம்பேத்கர் பந்துவிலிருந்து ஷோலாப்பூர் சென்றார்.* 1938 ஜனவரி 4 காலை பகவத் சித்ரா மந்திரில் அவருக்கு ஷோலாப்பூர் நகராண்மைக் கழகம் வரவேற்பு அளித்தது. ராவ் பகதூர் டாக்டர்.வி.வி. மூலே சொற் பொழிவைப் படித்தார். டாக்டர் மூலே நகராண்மைக் கழகத் தலைவர்; என்றும் ஷோலாப்பூர் தீண்டத்தகாத மக்களுக்கு உதவியவர். அவரது உரைக்குப் பதிலளிக்கும் போது நாடாளுமன்ற ஜனநாயகம் செயல் படும் விதத்தைப் பற்றி தமது கருத்துகளை அம்பேத்கர் குறிப்பிட்டார்.*

*"இந்த நாட்டில் வளர்ந்து வரும் அரசியல் சூழ்நிலையில் காங்கிரஸ் கட்சியை மட்டுமே ஆதரிக்கும் வழக்கம் வர வர மக்களிடையே அதிகரித்து விட்டது."*

*எல்லாச் சூழலுக்கும் ஜனநாயகமே பொருத்தமானது என்று நம்புவது இல்லை நான். இந்தியாவின் இன்றைய சூழலில் அமைப்பு என்னும் அடிப்படையில் ஜனநாயகம் கொஞ்சம் கூடப் பொருந்த வில்லை. எப்படியிருந்தாலும் சரி. கொஞ்ச காலத்திற்கு ஓர் அறிவார்ந்த ஏதேச்சாதிகாரியின் வலிமையான தலைமை இந்தியா விற்குத் தேவைப்படுகிறது.*[1]

---

** இந்தச் சொற்பொழிவில் சில பகுதிகளை டைம்ஸ் ஆப் இந்தியா 4. 1. 1938இல் இருந்து கீரும் பாரிலும் மேற்கோள் காட்டுகிறார்கள். கூட்டம் நடந்த தேதி 4. 1. 1938 என்கிறார் கீர். ஆண்டை மட்டுமே குறிப்பிடுகிறார் பாரில். ஜனதாவை (8,15 - 1 - 38, 5,2 - 38), சரி பார்த்ததிலும் மாங்க் வகுப்பு மாநாடு அறிக்கையைப் படித்ததிலும் உண்மையான தேதி 1 - 11 - 1938 என்று தெரிய வருகிறது.*

*- ஆசிரியர்கள்*

*1. கீர், பக். 298 - 299. டைம்ஸ் ஆப் இந்தியா (4 - 1 - 38).*

இந்தியாவில் ஜனநாயகம் கோலோச்சுகிறது. ஆனால் இந்த ஜனநாயகத்தில் அறிவு என்பது கொஞ்சம் கூடப் பயன்படுத்தப் படுவதில்லை. காரணம் நாடு ஒட்டுமொத்தமாக ஒரு கட்சியால் கட்டுண்டுக்கிடக்கிறது. இந்தக் கட்சியைப் பற்றி, அதன் செயல்கள் சிந்தனைகள் பற்றி நியாயமான விமர்சனத்திற்கு நாடு தயாராக இல்லை. இது ஒரு நோய், இரு ஒரு பலஹீனம், இது ஒரு மாபெரும் தீங்கு, இது மக்கள் எல்லோரையும் பிடித்துள்ளது. அவர்கள் போதையில் ஆழ்ந்து இருக்கிறார்கள். இந்திய மக்கள் மரபார்ந்த வர்கள். அவர்களுக்கு நம்பிக்கை மட்டுமே உண்டு. அறிவு மிக மிகக் குறைவு. ஒருவன் ஒரு சாதாரண காரியத்தைச் செய்துவிட்டால், அல்லது வெளிநாடுகளில் பைத்தியக்காரச் செயல் என்று கருதப் படும் ஒரு விசித்திரத்தை நிகழ்த்திவிட்டால் அவரை எல்லோரும் மகாத்மா என்றும், யோகி என்றும் மதிக்கத் தலைப்பட்டு இருக்கிறார்கள். ஆட்டு மந்தையைப் போல் அவனைப் பின்பற்றத் தொடங்கி விடுகிறார்கள்.

இதே நிலை தொடர்ந்தால் நாம் இந்த அரசியல் அமைப்பிலிருந்து எந்தப் பயனும் அடைய முடியாது. ஜனநாயகத்தின் பாதுகாப்பு ஒன்றுக்கு மேற்பட்ட கருத்தோட்டங்கள் இருந்தால்தான், ஒரு பிரச்சினைக்குப் பல தீர்வுகள் என்னும் நிலை இருந்தால்தான்- அவற்றையும் வெளிப்படையாக விவாதிக்க மக்கள் முன் வந்தால்தான், அவர்கள் கருத்துக்கும் ஜனநாயகம் மதிப்பளித்தால்தான் அந்த ஜனநாயகம் உண்மையான ஜனநாயகமாக இருக்கும்.[1]

ஷோலாப்பூர் நகராண்மைக் கழகம் என் கருத்தை கேட்க முன் வந்திருக்கிறது. நானோ, இந்த நாட்டில் எந்த ஓர் அமைப்பு மக்களால் ஏற்கப்பட்டிருக்கிறதோ அந்த அமைப்பைச் சாராதவன். ஷோலாப்பூர் நகராண்மைக்கழகத்தின் இந்தக் கருத்து மகிழ்ச்சி தருவதாக இருக்கிறது.[2]

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா, 1938, ஜனவரி, 4.
2. கீர், ப. 299.

# (42)

# வறுமைக்கான காரணங்கள் பற்றி விவசாயிகளும் தொழிலாளிகளும் சிந்திக்க வேண்டும்

*1938 ஜனவரி - 10 அன்று டாக்டர். அம்பேத்கர் பம்பாய் நகராண்மைக்கழகத்திற்கு விவசாயிகளை அழைத்துச் சென்றார். தானா, கொலாபா, ரத்தினகிரி, சதாரா, நாசிக் போன்ற அண்டை மாவட்டங்களிலிருந்து விவசாயிகள் புகைவண்டிகளிலும் படகு களிலும் பம்பாய் வந்து சேர்ந்தார்கள். கிழிந்த ஆடைகளுடனும் மூட்டை முடிச்சுகளுடனும் தோளில் ஒரு சுமையும் கையில் சுமையுமாகத் தங்கள் குறைகளை எடுத்துக்கூற அவர்கள் பம்பாய் வந்தார்கள். வெயிலில் கருத்த அவர்களின் முகங்களில் ஒரு வித ஆர்வம் பளிச்சிட்டது. பரேல், அலெக்ஸாண்ரா டாக்ஸ், சௌபாத்தி ஆகிய மூன்று இடங்களிலிருந்தும் அவர்களது ஊர்வலம் நகராண்மைக் கூடம் நோக்கி நடை போட்டது. காவல் துறை பாதுகாப்புடன் ஏற்பாடுசெய்யப்பட்ட தெருக்களின் வழியே அவர்கள் நடந்தார்கள். முக்கியமான சந்திப்புகளில் காவல்துறை நிறுத்தப்பட்டிருந்தது. "கோட்டி அமைப்பு ஒழிக, டாக்டர் அம்பேத்கர் மசோதாவை ஆதரிப்போம்" என்ற முழக்கங்கள் தாங்கிய பதாகைகளை அவர்கள் ஏந்தியிருந்தார்கள். பிற்பகல் 1. 30 மணிக்கு விக்டோரியா முனை அருகில் உள்ள எக்ஸ்ளனேட் மைதானத்தை ஊர்வலம் அடைந்தது. அந்த இடத்தில் காவல்துறை அவர்களைத் தடுத்து நிறுத்தியது. முதல்வரைப் பார்க்க 20 தலைவர்களுக்கு மட்டுமே அனுமதி தரப்பட்டது. அன்றைய முதல்வர் பிரதமர் என்று அழைக்கப்பட்டார். பருலேகர், எஸ்.வி. ஜோஷி, டி. டபுள்யூ. ரவுல், இந்துலால் யக்னிக், ஏ.வி. சித்ரே ஆகியோர் அம்பேத்கர் தலைமையில் பம்பாய் பிரதமரைச் சந்தித்தார்கள்.*

விவசாயத் தொழிலாளிகளுக்கு குறைந்த பட்சக் கூலி தரப்பட வேண்டும் என்பது ஊர்வலத்தினரின் முதல் கோரிக்கை, நில வரி, பாக்கியில்லாமல் செலுத்தப்பட்டதால் குத்தகையும் கூலியும் பாக்கியில்லாமல் அவர்களுக்குத் தரப்பட வேண்டும் என்பது

அவர்களது இரண்டாம் கோரிக்கை. மூன்றாம் கோரிக்கை சட்டத்திருத்தம் பற்றியது. கோட்டி அமைப்பும் இனாம்தார் அமைப்பும் ஒழிக்கப்பட்டதால் அதற்கு இழப்பீட்டுத் தொகை வழங்கியோ வழங்காமலோ ஒரு சட்டம் கொண்டு வர வேண்டும் என்பது அந்தக் கோரிக்கை. அதன் உட்கருத்து வீணானதும் சமூகக் கொடுங்கோன்மைக் குணம் கொண்டதுமான நிலபிரபுத்துவம் ஒழிக்கப்பட வேண்டும் என்பதுதான். இறுதிக் கோரிக்கை சிறு நிலக்கிழார்கள் செலுத்த வேண்டிய நீர்ப்பாசன கட்டணங்களை 50 சதவீதம் குறைக்க வேண்டும் என்பது.

அமைச்சரவை இப்பிரச்சினைகள் எல்லாவற்றையும் தங்களுக் குரிய வகையில் தீர்த்து வைக்க முயலும் என்று பிரதமர் பதிலளித்தார்.

தலைவர்கள் எஸ்பிளனேட் மைதானத்திற்குத் திரும்பினார்கள். அங்கு கூடியிருந்த மாபெரும் கூட்டத்தில் அம்பேத்கர் பேசினார்.

எல்லாக் கம்யூனிஸ்ட் தலைவர்களும் சேர்ந்து எத்தனை புத்தகங்கள் படித்திருப்பார்களோ அவற்றைவிட நான் அதிகம் படித்து இருக்கிறேன்![1] அவர்கள் எப்போதுமே எந்தப் பிரச்சினைக்கும் செயல் பூர்வமான அணுகுமுறையை மேற்கொண்டதில்லை. உலகில் இரண்டு வர்க்கங்கள் உண்டு. உள்ளவர்கள் - இல்லாதவர்கள், பணக்காரன் - ஏழை, சுரண்டுவோர் - சுரண்டப்படுவோர். மூன்றாம் வர்க்கமான நடுத்தர வர்க்கம் மிகவும் சிறியது. எனவே விவசாயிகளும் தொழிலாளர்களும் தங்களது வறுமைக்கான காரணம் பற்றி சிந்திக்க வேண்டும். உங்கள் வறுமையின் மூல கர்த்தாக்கள் சுரண்டல்காரர்கள் அவர்களின், செல்வச்செழிப்பில்தான் உங்கள் வறுமையும் அடங்கி யிருக்கிறது என்ற உண்மையை நீங்கள் அறிய வேண்டும். எனவே ஜாதி, பார்வை ஆகியவற்றை இவற்றை மீறி நீங்கள் ஒரு தொழிலாளர் முன்னணியை அமைத்துக்கொள்ள வேண்டும், உங்கள் உண்மையான பிரதி நிதிகளை சட்ட மன்றங்களுக்குத் தேர்ந்தெடுக்க வேண்டும். அப்படிச் செய்தால் இருக்க இடமும் அணிய ஆடையும் உண்ண உணவும் கிடைக்கும். உலகின் உணவு மற்றும் செல்வத்தின் உற்பத்தி யாளராகிய நீங்கள் பட்டினி கிடந்து சாக நேரிடாது என்று அம்பேத்கர் கூறினார்.[2]

---

1. ஜனதா (15. 1. 1938)
2. கீர், பக். 300 - 301.

# (43)

# ஒடுக்கப்பட்ட வகுப்பினர் நலன் கருதிக் காவல் இருங்கள்

*1938 - ஜனவரி 15 அன்று அகமத் நகர் மாவட்டம் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சேவா சங்கத்தினர் சார்பில் காம்கர் மைதானத்தில் ஒரு பொதுக்கூட்டம் நடத்தப்பட்டது. தலைமை டாக்டர் அம்பேத்கர். பம்பாய் சட்டமன்ற உறுப்பினரான திரு. பிரபாகர் ஜனார்த்தன் ரோகம் தேர்ந்தெடுக்கப்பட்டதற்கான பாராட்டுவிழா அது, பாராட்டு இதழும், ரூபாய் 200 /= ரொக்கப் பணமும் திரு. ரோகமுக்கு வழங்கப் பட்டன. கூட்டத்தில் 500 பேர் கூடியிருந்தார்கள்.*

*டாக்டர் அம்பேத்கர், பாபூ, சாகிஸிப் கெய்க்வாட், ஷிண்டே மாஸ்டர் ஆகியோர் மராத்தி மொழியில் சொற்பொழிவாற்றினார்கள்.*

*அகமத் நகர் மாவட்டத்தில் ஒடுக்கப்பட்ட மக்கள் அளித்த உறுதியான ஆதரவு காரணமாக திரு. ரோகம், சுதந்திரத் தொழிலாளர் கட்சி வேட்பாளராக நின்று வெற்றி பெற முடிந்திருக்கிறது. எனவே எங்கள் எதிர்பார்ப்பின்படி அவர் ஒடுக்கப்பட்ட நலன்களுக்கு பாதுகாப்பாக இருப்பார் என்று அவர்கள் பேசினார்கள். முடிவில் நன்றி கூறப்பட்டது.*

*இரவு 10.30 மணிக்குத் தொடங்கிய கூட்டம் 11.30 மணிக்கு அமைதியாக முடிந்தது.*

---

# (44)

# தங்கள் நலன்களைக் காப்பாற்றிக் கொள்ளத் தொழிற்சங்கங்கள் அரசியல் பிரவேசம் செய்யவேண்டும்

*1938 - பிப்ரவரி 12, 13 தேதிகளில் மன்மத் என்னுமிடத்தில் கிரேட் இந்தியன் பெனின்சுலா (ஜி. ஐ. பி.) ரயில்வேவை சேர்ந்த ஒடுக்கப்பட்ட தொழிலாளர் மாநாடு கூட்டப்பட்டது. மாநாட்டுக்குத் தலைமை ஏற்க டாக்டர் அம்பேத்கர் ஒப்புக் கொண்டார். அது குறித்த துண்டுப் பிரசுரம் எல்லாக் கிளைகளுக்கும் வினியோகம் செய்யப்பட்டது.*

*தீண்டாமை காரணமாக ரயில்வேயில் பணிபுரிந்த தீண்டத் தகாத தொழிலாளர்கள் சந்திக்கும் பிரச்சினைகளை விவாதிப்ப தற்காக மாநாடு திட்டமிடப்பட்டது. தீண்டத்தகாதோரின் பரிதாபத் திற்குரிய சூழலையும் விவாதிக்க முடிவு செய்யப்பட்டது. இந்தியாவில் உள்ள செல்வச் செழிப்பான - வசதியான - அமைப்புகளில் ரயில்வேயும் ஒன்று. ஆனால் அந்தத் துறையிலும் தீண்டத்தகாதோர் நிலை பரிதாபகரமாகத்தான் இருந்தது.*

*மாநாட்டு வெற்றிக்காக மன்மார், புசாவால், கல்யாண், இகாத் புரி, நந்து கோன், தவுண்ட், கோலாப்பூர், தானே, பம்பாய் போன்ற இடங்களிலிருந்து தொழிலாளர்கள் வருவதாக இருந்தது. இது குறித்து டாக்டர் அம்பேத்கரிடம் முன்பே விவரிக்கப்பட்டது. அலகாபாத், லக்னோ, கான்பூர், ஜபல்பூர், ராஜ்பூர் முதலிய இடங்களிலிருந்தும் இதற்கு நல்ல ஆதரவு கிடைத்தது.*

*மாநாடு மாபெரும் வெற்றி பெற வேண்டும் என்பதற்கான கோரிக்கை விடப்பட்டது. தீண்டத்தகாத ரயில்வே தொழிலாளர் களிடையே பிரபலமாக இருந்த திரு. ஆர்.ஆர். பவார் மாநாட்டின் பொதுச் செயலாளரானார். டாக்டர் அம்பேத்கருக்கும், திரு. ஆர்.ஆர். பவாருக்குமிடையே கடிதப் போக்குவரத்து மூலம் தெரியவருவது என்ன வென்றால் தவிர்க்க இயலாத காரணங்களால் டாக்டர். அம்பேத்கரால் மாநாட்டில் கலந்துக்கொள்ள இயலவில்லை.*

பிப்ரவரி - 12, 13 சனி, ஞாயிறு தேதிகளில் மாநாட்டை வைத்துக் கொண்டால் அம்பேத்கருக்கு வசதியாக இருந்திருக்கும். இந்தக் கடித விபரங்களும் மாநாடு குறித்த துண்டுப் பிரசுரத்தில் சேர்க்கப் பட்டிருந்தது.

மன்மத் ரயில் நிலையத்தின் அருகே உள்ள திறந்த வெளியில் (திரு. இப்ராஹீம் தாஜ் பாய்சேத்துக்குச் சொந்தமான இடம்) மாநாட்டுப் பந்தல் நிறுவப்பட்டது. அந்த இடத்திற்குத் தலித் காம்கார் (தொழிலாளர்கள்) நகர் என்று பெயர் சூட்டப்பட்டது.

டாக்டர் அம்பேத்கர் மேலே குறித்த இரண்டு நாட்களும் மன்மத்தில் தங்கினார். இந்தக் கால இடைவெளியில் சதானா, காசி, சங்கவி போன்ற இடங்களுக்கும் சென்று வந்தார். பிப்ரவரி 12ஆம் தேதி சனிக்கிழமை டாக்டர் அம்பேத்கர் தலைமையில் ஓர் இளைஞர் மாநாடும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் எதிர்காலத் திட்டங்கள், அவற்றின் செயலாக்கம் குறித்தும் மாநாட்டில் விளக்கப்பட்டது.

இளைஞர் மாநாட்டைப்போலவே தீண்டத்தகாத பெண்கள் மாநாடு பிப்ரவரி 13 ஞாயிறன்று பிற்பகல் 3 மணிக்கு திட்டமிடப் பட்டது. அதற்கு புனே தொழிலாளர் திருமதி. மைனா பாய் சம்ராஜ் போலே, தலைமை தாங்குவதாக முடிவு செய்யப்பட்டது. திருமதி. வேணுபாய் ரவிகாந்த் ஜாதவ், வரவேற்புக்குழுவின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அந்தப் பெண்கள் மத்தியில் இயக்கத்தை பற்றிபேசி அவர்களை வழிநடத்தினார் டாக்டர் அம்பேத்கர்.

இரண்டு நாட்களிலும் பலவிதமான பொழுதுபோக்கு நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டன. ஜாலிஸ்சோன் பகுதியில் இருந்து பாண்டு, வாத்தியக்குழு ஒன்றும் அழைக்கப்பட்டது. பந்தலில் ஒலிபெருக்கிகள் நிறுவப்பட்டன. திருவாளர்கள் ஆர்.ஆர். பவார், பாஸ்கர், அஸிள காரே, சம்சாரே, பட்டீல், சரோடே, மோரே, பகாரோ, தெலுரே ஆகியோர் மாநாட்டின் வெற்றிக்காகக் கடினமாக உழைத்தார்கள்.

ஜனதா வார பத்திரிகைக்கும், சுதந்திரத் தொழிலாளர் கட்சிக்கும் தனித்தனி அலுவலகங்கள் மாநாட்டுத் திடலில் அமைக்கப்பட்டன.

அவ்விரண்டு பத்திரிகைகளுக்கும் சந்தா வசூலும் நடந்தது. இவ்வியக் கங்கள்பற்றிய தகவல்களும் மாநாட்டு அலுவலகங்கள் மூலம் மக்களுக்குக் கிடைத்தன.

## மாநாடு

1938 பிப்ரவரி 12, 13 தேதிகளில் மாநாடு வெற்றிகரமாக நடைபெற்றது. தலித் கரம்கார் நகர் நன்றாக அலங்கரிக்கப்பட்டது. 20,000 பிரதிநிதிகளுக்காக இருக்கைகள் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தன. தலைவர் மற்றும் பிற தொழிலாளர்களுக்கு ஒரு தனிமேடை நிறுவப்பட்டது. டாக்டர் அம்பேத்கரின் பெரிய அளவிலான திருவுருவப்படமும் பல்வேறு தொழிலாளர்கள் புகைப் படங்களும் வைக்கப்பட்டன. பெண்கள் வரவேற்புக்குழு உறுப்பினர்கள், சிறப்பு விருந்தினர் ஆகியோருக்காக சிறப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. சனிக்கிழமை மாலை தலித் காம்கார் நகரில் 'பேண்ட்' இசையுடனும் "டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் நீடூழி வாழ்க, தொழிலாளர்கள் வெற்றி பெறுக" என்னும் முழக்கங் களுடனும் வரவேற்பு நடந்தது.

தொடக்கத்தில் சிறுவர்களும் சிறுமியரும் சில பாடல்களைப் பாடினார்கள். திரு. சங்கர் ராவ் சால்வே கூட்டம் வெற்றி பெற ஏராளமான முன்னேற்பாடுகள் செய்தார். திரு. பி.என். பங்கர் வரவேற்புரை வாசித்தார். திரு. ராமச்சந்திர பவார் பிரதிநிதிகளையும் விருந்தினரையும் வரவேற்றார். சுபேதார், விக்ரம், கங்காதர், சாவத்தரும், பாய் அஹ்தரவும், சித்ரேவும் மகரிலிருந்து அனுப்பிய வாழ்த்து செய்திகள் உட்பட பல்வேறு வாழ்த்துச் செய்திகளை அவர் படித்தார்.

டாக்டர் அம்பேத்கரை 1938 பிப்ரவரி 12 சனிக்கிழமை மாநாட்டுக்குத் தலைவராக தேர்ந்தெடுத்தார்கள். தேர்ந்தெடுக்கும் போது கூட்டத்தினர் பலத்த கைதட்டலோடு அவரை வரவேற் றார்கள். மாலை அணிந்து தலைமை ஏற்று டாக்டர் அம்பேத்கர் தொடக்க உரை நிகழ்த்தினார்.

இரண்டாம் நாள் கொஞ்சம் காலதாமதமாக மாநாட்டுப் பணி ஆரம்பிக்கப்பட்டது. சுட்டெரிக்கும் வெய்யிலிலும் தலித் காம்கர்

நகரில் டாக்டர் அம்பேத்கர் பேச்சைக் கேட்கப் பெரும் திரளாக மக்கள் கூடியிருந்தனர். பலத்த கைத்தட்டலுக்கிடையே அவர் பேச ஆரம்பித்தார்.

சொற்பொழிவை டாக்டர் அம்பேத்கர் நண்பர்களே என்று தொடங்கினார்.

"ஜி. ஐ. பி. ரயில்வேயில் பணிபுரியும் ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் மாநாடு இது. இதற்கு முன்பும் இது போல் பல மாநாடுகளை ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சந்தித்து உள்ளார்கள். இந்தியாவில் பிற மாகாணங்களிலும் இத்தகைய மாநாடுகள் நடைபெற்றுள்ளன. எனவே, இது நமது முதல் மாநாடு அல்ல. இன்னொரு கோணத்தில் இதை முதல் மாநாடு என்று சொல்லாம். இதுவரையில் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சமூகக் குறைபாடுகளை நீக்கத்தான் போராடினார்கள். பொருளாதாரக் குறைபாடுகளை நீக்குவதற்காக முயற்சிகளை எடுத்துக் கொள்ளவில்லை. இந்த மாநாடு பொருளாதாரக் குறை பாடுகளை அலசுவதற்காகக் கூட்டப்பட்டது. பறையர்கள் என்னும் அடிப்படையில் இதுவரை தீண்டத்தகாதவர்கள் சந்தித்து வந்தார்கள். இப்போது தொழிலாளர் என்னும்அடிப்படையில் சந்திக்கிறார்கள். சமூக குறைபாடுகளை வலியுறுத்துவதில் நாம் தீவிரமாக இருந்ததில் தவறு ஒன்றும் இல்லை. அப்படிச் சொல்ல நான் முயலவில்லை. நமது ஆண்மையே நசுங்கமளவு பெரும் சுமைகளை சுமந்தோம் என்னும் குறைபாடு நமக்கு இருப்பதை எவரும் மறுப்பதற்கில்லை. நமது போராட்டத்தால் எந்த பயனும் விளையவில்லை என்று எவரும் சொல்ல முடியாது. அதே சமயம் தீண்டாமையை ஒழிப்பதில் நாம் வெற்றி பெற்று விட்டோம் என்பதும் உண்மையில்லை. மனிதர் களுக்குத் தேவையான சில அடிப்படைத் தேவைகளைப் பெறுவதில் நாம் இன்னும் வெற்றியடையவில்லை என்பது உண்மைதான். அரசியல் அதிகாரத்தைப் போராட்டத்தின் மூலம் பெற்றிருக்கிறோம் என்பது உண்மை. அதிகாரம் இருக்குமானால் விடுதலையும் இருக்கும் என்னும் கூற்றில் உண்மையுண்டு. அதிகாரம் ஒன்றின் மூலம் மட்டுமே விடுதலையடைய முடியும். தடைகளைக் கடந்து தளையிலிருந்து விடுபட முடியும் அரசியல் அதிகாரம் அத்தகைய வீரியம் கொண்டது. மத பொருளாதார அதிகாரத்தைப் போல் அத்தனை வலிமை அரசியல் அதிகாரத்திற்கு இல்லையென்றாலும் அரசியல் அதிகாரமும் உண்மையில் பலன்தரக்கூடியதாகும். புதிய அரசமைப்பின் மூலம்

ஒடுக்கப்பட்ட வகுப்பினர் வென்றெடுத்த அரசியல் அதிகாரம் சிலரால் பறிக்கப்படுவதும் உண்டு, வீணாகப் போவதும் உண்டு. இதற்குக் காரணம் பகைவர்களின் சூழ்ச்சி, நம்முடன் உள்ள சில தான்தோன்றிகளின், சுயநலப் பேராசைக்காரர்களின் சீர்குலைப்பு நடவடிக்கைகளும் ஒரு காரணம். பின்னணியில் ஓர் அமைப்பு இல்லாத அதிகாரமும் பின்னணியில் ஓர் மனச்சாட்சியில்லாத அதிகாரமும் அதிகாரமே அல்ல. ஒடுக்கப்பட்ட வகுப்பினர் அமைப்பு ரீதியாகத் திரளும் நாள், தங்கள் அதிகாரத்தை உணரும் நாள், அதை அறிவார்த்தமுறையிலும் திறன் வாய்ந்த முறையிலும் பயன்படுத்தி சமூக விடுதலையை பெறும் நாள் வெகு தொலைவில் இல்லை.

நமது முயற்சிகள் திசை தவறி போகின்றன என்று சொல்ல நான் தயாராக இல்லை. பொருளாதாரப் பிரச்சனைகள் மீது உரிய கவனம் செலுத்த நீண்ட காலமாக நாம் தவறி விட்டோம் என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆகவே தீண்டத்தகாதோர் என்பதைக் காட்டிலும் தொழிலாளர்கள் என்னும் அடிப்படைக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து நாம் இன்று திரண்டிருக்கிறோம் என்பதில் எனக்கு மிக மிக மகிழ்ச்சி. இது ஒரு புதிய திருப்பம். அதற்குரிய வாய்ப்பை வழங்கியவர்களை நான் பாராட்டுகிறேன்.

ஆனால் சிலர் இந்தத் திருப்பத்திற்கு ஒரு தீய உள்ளர்த்தம் கற்பிக்கிறார்கள், இதில் நான் கலந்து கொள்வதற்காக என் மீது எதிர்மறை விமர்சனம் செய்தார்கள், தொழிலாளர் தலைவர்கள் அல்லாமல் வேறு இடத்தில் இருந்து இந்த விமர்சனம் வந்திருந்தால் நான் அதை லட்சியம் செய்திருக்க மாட்டேன். தொழிலாளர் தலைவர்கள் என்ன சொல்கிறார்கள் என்றால் இத்தகைய மாநாட்டைக் கூட்டுவதன் மூலம் நாம் தொழிலாளர்களைப் பிளவு செய்கிறோம் என்று விமர்சனம் செய்கிறார்கள்.

என்னைப் பொறுத்தவரை இந்நாட்டுத் தொழிலாளர்கள் இரண்டு பகைவர்களோடு போராட வேண்டியுள்ளது. - ஒன்று - பிராமணியம்; - இரண்டு - முதலாளித்துவம்; தொழிலாளர்கள் பிராமணியம் என்னும் பகைமைச் சக்தியுடனும் போராட வேண்டியுள்ளது என்று நமது விமர்சகர்கள் புரிந்துக் கொள்ளத் தவறுவதால் இத்தகைய விமர்சனம் வருகிறது. பிராமணியம் என்னும் எதிரியை நாம் சமாளிக்க

வேண்டும் என்று சொல்லும்போது என்னைத் தவறாகப் புரிந்துக் கொள்ளக்கூடாது. பிராமணர்கள் ஒரு வகுப்பினர் என்ற அடிப்படையில் அதிகாரம், உரிமைகள், நலன்கள் பெறுவதை நான் பிராமணியம் என்று சொல்லவில்லை. அந்த அர்த்தத்தில் நான் பிராமணியம் என்னும் சொல்லை பயன்படுத்தவில்லை. சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய உயிர்ப்புகளின் எதிர்மறைதான் பிராமணியம் என்று சொல்கிறேன். இந்த எதிர்மறை உணர்வு எல்லா வகுப்பினரிடையையும் உண்டு. பிராமணர்களோடு அது நின்று விடவில்லை. பிராமணர்கள் அதைத் தோற்றுவித்தவர்கள் என்ற போதிலும் அது எல்லா வகுப்பினர்கிடையிலும் ஊடுருவி உள்ளது என்பது உண்மை. இந்தப் பிராமணியம் எங்கும் பரவி எல்லா வகுப்பினரின் சிந்தனை, செயல்களில் ஆதிக்கம் செலுத்துவது மறுக்க முடியாத உண்மை. இந்த பிராமணியம் சில வகுப்புகளுக்கு உரிமை மிகுந்த உயர்வுகள் வழங்குகிறது என்பது மறுக்க முடியாத உண்மை, பிற வகுப்புகளுக்கு சம வாய்ப்புகளை மறுக்கிறது என்பதும் உண்மை. இந்த பிராமணியம் சேர்ந்துண்ணல், கலப்பு மணம் ஆகிய சமூக உரிமைகளோடு நின்று விடுவதில்லை. அப்படி நின்றிருந்தால் யாரும் அதைப் பற்றிக் கவலைப் பட்டிருக்க மாட்டார்கள். அப்படி நிற்க வில்லை. சிவில் உரிமைகளையும் அது பதம் பார்க்கிறது. பொதுப் பள்ளிகள், பொதுக் கிணறுகள், பொதுக் கழிப்பிடங்கள், பொது மருந்தகங்கள் ஆகியவை சிவில் உரிமைகள் சம்பந்தப்பட்டவை. பொது மக்களுக்காக பொது மக்கள் நிதியின் மூலம் நிர்வகிக்கப்படும் எல்லாமே ஒவ்வொரு குடிமகனுக்கும் உரியவை. ஆனால் இந்த சிவில் உரிமைகள் லட்சக்கணக்கான மக்களுக்கு மறுக்கப்படுகின்றன. இது பிராமணியத்தின் விளைவு அல்ல என்று யாராவது சொல்ல முடியுமா? பிராமணியத்தால் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அவிழ்த்து விடப்பட்ட இந்த அடக்குமுறை இன்றும் உயிரோட்ட முள்ள ஒரு மின்னிறையாக ஓடிக் கொண்டிருக்கவில்லையா? பொருளாதார வாய்ப்புக்களைக் கூடப் பாதிக்கும் அளவுக்கு அத்தன்னை சர்வ வல்லமை படைத்ததாக பிராமணியம் விளங்குகிறது. ஓர் ஒடுக்கப்பட்ட தொழிலாளிக்குள்ள வாய்ப்பு வசதிகளைப் பிற தொழிலாளியின் வாய்ப்பு வசதிகளோடு ஒப்பிட்டுப் பாருங்கள், பணிப்பாதுகாப்பு, பணி முன்னேற்றம் ஆகியவற்றில் ஒடுக்கப்பட்ட தொழிலாளிக்குள்ள வாய்ப்புகள் என்ன? தீண்டத்தகாதவன் என்பதால் அவனுக்கு எத்தனையோ வேலை வாய்ப்புகள் மூடப்பட்டு விடுகின்றன. மிகச் சிறந்த எடுத்துக்காட்டு பருத்தித் தொழில்,

இந்தியாவில் பிற பகுதிகளில் உள்ள நிலவரம் எனக்குத் தெரியாது. பம்பாய் மாகாணத்தில், பம்பாயிலும் - சரி - அகமதாபத்திலும் - சரி - பருத்தி ஆடைகளில் நெசவுத் துறை ஒடுக்கப்பட்ட வகுப்பினரை அனுமதிப்பதில்லை. ஒடுக்கப்பட்ட வகுப்பினர் நூற்புத்துறையில் மட்டுமே பணிபுரிய முடியும். நூற்புத் துறையில் ஊதியம் மிக மிகக் குறைவு. நெசவுத் துறையில் ஏன் வாய்ப்பு அவர்களுக்கு மறுக்கப் படுகிறது என்றால் அவர்கள் தீண்டத்தகாதவர்கள் என்பது தான். ஒரு ஜாதி இந்து, முஸ்லீம்களோடு பணிபுரிவதில் எந்தச் சுணக்கமும் காட்டுவதில்லை. இருப்பினும் தீண்டத்தகாதோர் என்றால் எதிர்ப்பு காட்டுகிறான்.

ரயில்வேயை எடுத்துக் கொள்ளுங்கள். ரயில்வேயில் ஒடுக்கப் பட்ட மக்களின் நிலை என்ன? ஒடக்கப்பட்டவன் ஒரு கேங்க் மேனாகத்தான் பணிபுரிய வேண்டும் என்று விதிக்கப்பட்டுள்ளது. பதவிக் காலம் முழுவதும் எந்தவித உயர்வும் இல்லாமல் கேங்க் மேனாகவே பணிபுரியும் நிலை உள்ளது. அவனுக்கு வேறு பதவி உயர்வும் தரப்படுவதில்லை. போர்ட்டராகக் கூட அவன் வர முடியாது. போர்ட்டராக வர வேண்டுமானால் ஸ்டேஷன் மாஸ்டரின் வீட்டு வேலைகளையும் அவன் செய்தாக வேண்டும். ஸ்டேஷன் மாஸ்டர் ஒரு ஜாதி இந்துவாக இருப்பார். ஆகவே ஒடுக்கப்பட்ட தொழிலாளி போர்ட்டராக அவர் வீட்டுக்குள் நுழைவதை விரும்பமாட்டார். எனவே ஒடுக்கப்பட்ட வகுப்பினர் போர்ட்டராக நியமிக்கப் படுவதில்லை. ரயில்வேயில் எழுத்தர் பணிக்குத் தேர்வு நடத்துவதில்லை. மெட்ரிக் தேர்ச்சி அடையாத வர்களே பெரும்பாலும் இந்த இடங்களுக்கு அமர்த்தப்படுகிறார்கள். இந்திய கிறிஸ்தவர்கள், ஆங்கிலோ இந்தியர்கள், ஜாதி இந்துக்கள் ஆகிய சமூகத்தினர் மெட்ரிக் தேறாத பட்சத்திலும் நூற்றுக்கணக்கில் ரயில்வேயில் எழுத்தர்களாக இருக்கிறார்கள். ஒடுக்கப்பட்ட இளைஞர்கள் நூற்றுக்கணக்கில் மெட்ரிக் தேறியவர்களாக இருந்தாலும் அவர்களுக்கு எழுத்தர் பணி வாய்ப்பு வேண்டுமென்றே மறுக்கப்படுகிறது. ரயில்வே பணிமனைகளிலும் இதே நிலைதான். ஒடுக்கப்பட்டவர் மெக்கானிக் துறையில் நுழையவே முடியாது. அவன் மிஸ்ட்டரி ஆகவும் முடியாது. பணி மனையில் போர்மென், சார்ஜ்மென் ஆகிய பணிகளில் அமர அவனுக்குத் தகுதியில்லை. அவன் வெறும் கூலிதான். கூலியாகவே இருந்துவிடுகிறான். ரயில்வேயில் ஒடுக்கப்பட்ட தொழிலாளியின் தகுதி இதுதான்.

எந்தெந்தப் பணிகளில் அவனுக்கு வாய்ப்பு உண்டோ, அங்கும் கூட கீழ் மட்டத்திலேயே நியமிக்கப்படுகிறான். அதிகாரமுள்ள பணிகள் அவனுக்கு மறுக்கப்படுகின்றன. கீழ் மட்டப் பணி நியமனம் ஆவது மட்டுமல்ல ஓய்வுக் காலம் வரை அதிலேயே கிடந்து உழலுகிறான். பதவி உயர்வு என்பதும் இல்லவே இல்லை. புதிய வாய்ப்பு இல்லவே இல்லை பதவி உயர்வும் இல்லை. சந்தையில் மந்தம் இல்லாத நிலையிலும் அவன் நிலை இதுதான். மந்தம் ஏற்பட்டாலோ முதலில் வெளியேற்றப்படுபவன் அவன்தான். செழிப்புக் காலத்திலும் கடைசி நியமனம்தான் அவனுக்கு ஒதுக்கப்படுகிறது.

எனக்கும் உங்களுக்கும் தீய நோக்கத்தைக் கற்பிப்பவர்களுக்கு இரண்டு கேள்விகள். இந்தக் கேள்விகள் நேரடியான கேள்விகள், மேலே சொன்னவையெல்லாம் உண்மையான குறைபாடுகள்தானே? உண்மையான குறைப்பாடுகள் என்றால் அவற்றை நீக்க முனைவதும் அதற்காகத் திரள்வதும் சரிதானே? இந்தக் கேள்விகளுக்கு நேர்மையான எந்த மனிதனும் எதிர்மறையாக பதில் சொல்ல முடியாது. எனவே நமது முயற்சிகள் நியாயமானவை. நம்மீது குற்றம் சாட்டும் தொழிலாளர் தலைவர்கள் ஏதோ ஒரு விதப் பிரமையில் இருக்கிறார்கள். அவர்கள் கார்ல் மார்க்ஸைப் படித்தவர்கள், உடைமை வர்க்கம், தொழிலாளி வர்க்கம் இரண்டு வர்க்கம் மட்டுமே உண்டு என்பவர்கள், இந்தியாவிலும் இரண்டு வர்க்கம்தான், ஆகவே நமது கடமை முதலாளித்துவத்தை ஒழிப்பது என்று கருதுபவர்கள். இந்த விஷயத்தில் அவர்கள் இரண்டு தவறுகள் செய்கிறார்கள். மார்க்ஸ் சொன்னதை ஒரு கருத்து நிலையாகக் கொள்ளாமல் மெய்ம்மை என்று நினைப்பது அவர்கள் செய்யும் முதல் தவறு. சமுதாயத்தில் இரண்டு வர்க்கங்களே உண்டு என்பது கருத்துநிலை. அதை வறட்டுத் தத்துவமாகத் தொழிலாளர் தலைவர்கள் பிடித்துக் கொண்டு விட்டார்கள். இரு வர்க்கம் என்பதை அடிப்படையாகக் கொண்டு பிரச்சாரம் நடத்தினால் வெற்றி பெறுவதற்கு வாய்ப்பே இல்லை. எல்லா வகுப்பிலும் ஒரு பொருளாதார மனிதன், ஒரு பகுத்தறிவுள்ள மனிதன், ஒரு தர்க்க நியாயத்திற்கு உட்பட்ட மனிதன் இருப்பதாக நம்புவது எத்தனை பொய்மையானதோ அத்தனை பொய்மையானது இவர்கள் சிந்தனையும் செயலும். பொது உண்மைகளை அலசும் போது பொருளாதார வல்லுனர்கள் ஓர் எச்சரிக்கை மேற்கொள்ளுவார்கள். நாம் ஒரு பொருளாதார மனிதனை அடிப்படை உண்மையாக வைத்துக் கொள்வோம்

என்றால் பிற புறச் சூழல்களும் சரிசமமாக அமைந்திருக்கின்றன என்னும் கருத்து நிலையிலேயே அப்படி ஒரு பொருளாதார மனிதனைக் கற்பனை செய்து கொள்கிறோம் என்றுதான் அவர்கள் எச்சரிக்கை வரையரையுடன் தமது ஆய்வுகளையும், முடிவுகளையும் வெளியிடுவார்கள். இந்தத் தொழிலாளர் தலைவர்கள் பொருளாதார வல்லுனர்கள் பயன்படுத்தும் பிற புறச் சூழல்களின் சாதக நிலையை அறவே மறந்துவிடுகிறார்கள், ஐரோப்பாவில்கூட மார்க்ஸ் சொன்னது சரியாக இருந்தது என்று சொல்வதற்கில்லை. ஜெர்மனியில் ஓர் ஏழை, ஒடுக்கப்பட்ட மனிதன் இருக்கிறான். அதே போல் பிரான்ஸில் ஒரு ஒடுக்கப்பட்ட கவிஞன் இருக்கின்றான். இரு நாட்டு ஏழை எளிய ஒடுக்கப்பட்ட மனிதரும் ஓர் இனம், ஒரு கொள்கை, ஒரு கடந்த காலம், ஒரு நிகழ்காலம், ஓர் எதிர்காலம் என்பதற்குச் சொந்தக் காரர்கள்தான். அவர்கள் ஒன்று சேர வேண்டும் என்றுதான் மார்க்சியம் சொல்கிறது. மார்க்ஸ் காலத்தில் இந்த அறை கூவலுடன்தான் தொழிலாளர் கூட்டங்கள் திரட்டப்பட்டன. ஆனால் உண்மையில் ஜெர்மனியில் உள்ள ஏழை ஒடுக்கப்பட்ட மனிதனும் பிரான்ஸில் உள்ள உடைமைப் பொருள் இழந்து வாழ்வே சிதைந்து போன கைவினைஞனும் இணைந்து நிற்கிறார்கள். நூறு ஆண்டுகள் ஆன பிறகும் அவர்கள் ஒன்றுபடக் கற்றுக் கொள்ளவில்லை. கடந்த உலகப்போரில் அவர்கள் எதிர் எதிர் அணியில் நின்று பகைவர் களாகப் போரிட்டார்கள். இந்தியாவுக்கும் அது பொருந்தும். இந்தியாவிலும் அத்தகைய ஒற்றுமை ஏற்படவேயில்லை. உடைமை வர்க்கம், இல்லாத வர்க்கம் என்னும் பிரிவினை உணர்வு இந்தியாவில் ஏற்படவேயில்லை. எல்லாத் தொழிலாளர்களும் ஒன்று - ஒரு வர்க்கம் என்பது ஒரு லட்சியம்; அது அடையப்பட வேண்டிய லட்சியமே ஒழிய அதுவே இருக்கிற யதார்த்தம் என்று முடிவுசெய்து கொள்வது தவறு. பிறகு எப்படித் தொழிலாளர் அணிகளைத் திரட்ட முடியும்? தொழிலாளர்களிடையே எப்படி ஒற்றுமையைக் கொண்டு வர முடியும்? ஒரு பிரிவுத் தொழிலாளர்கள், இன்னொரு பிரிவுத் தொழிலாளர்களை நசுக்குவதைத் தடுப்பதன் மூலம் அவர்களிடையே ஒற்றுமையை உருவாக்க முடியும். ஒடுக்கப்பட்ட பிரிவுகள் அமைப்பு ரீதியாகத் திரள்வதைத் தடுப்பதன் மூலம் அது முடியாது. இழைக்கப் படும் அநீதிகளுக்கு எதிராக ஆர்ப்பாட்டம் செய்யும் பிரிவினரைத் தடுப்பதன் மூலம் அது முடியாது; ஒற்றுமையைக் கொண்டு வர ஒரே வழி ஒரு தொழிலாளி இன்னொரு தொழிலாளிக்கு இனம், மதம் ஆகிய பின்னணியில் பகைமைக் கொள்ளுதற்கான அடிப்படைக்

காரணங்களைக் கண்டறிந்து களைவதன் மூலம் அத்தகைய ஒற்றுமையை அவர்களிடையே கொண்டு வர முடியும். தொழிலாளர் களிடையே ஒற்றுமையைக் கொண்டு வரச் சிறந்த மார்க்கம் என்னவென்றால் ஒரு தொழிலாளி மற்ற தொழிலாளர்களுக்குத் தர விரும்பாத உரிமைகளை அவன் மட்டும் பெற வேண்டும் என்பது தவறான சிந்தனை என்று அவனுக்கு எடுத்துச் சொல்வதுதான். தமக்கிடையே சமூக வித்தியாசங்களைக் கண்டுபிடிக்கும் போக்கு தொழிலாளர் மத்தியில் ஒற்றுமையைச் சிதைத்து விடும் என்பதை அவனுக்குப் புரியவைக்கும், சுருங்கச் சொன்னால் சமத்துவமின்மை என்னும் குணாம்சத்தை அதாவது பிராமணியத்தைத் தொழிலாளர் மத்தியிலிருந்து அடியோடு களைந்தெறிய வேண்டும். இத்தகைய முயற்சியில் இறங்கிய தொழிலாளர் தலைவர் யார்? முதலாளித் துவத்திற்கு எதிராக ஆவேசமாக பேசும் தொழிலாளர் தலைவர்களை நான் கேட்டிருக்கிறேன். ஆனால் பிராமணியத்திற்கு எதிராக எவரும் பேசியதாகத் தெரியவில்லை. இந்த விஷயத்தில் அவர்கள் சாதிக்கும் மவுனம் வெளிப்படையாகத் தெரிகிறது. ஒரு வேளை தொழிலாளர் அமைப்பு ஒற்றுமை ஆகியவற்றுக்கும் பிராமணியத்துக்கும் தொடர்பே இல்லையென்று அவர்கள் நினைக்கிறார்களா அல்லது இப்படித் தொழிலாளர் சக்தி சிதறிக் கிடப்பதற்கே பிராமணியம் பெருமளவு காரணமாக இருக்கிறது என்பது இன்னும் அவர்களுக்குத் தெரியவில்லையா. ஒரு வேளை இந்த அப்பட்டமான சந்தர்ப்ப வாதத்தால் தொழிலாளர் உணர்வுகளைப் புண்படுத்தி விடக் கூடாது. அப்போதுதான் தலைமையில் நீடிக்கமுடியும் என்று நம்புகி றார்களா! இப்படித் தொழிலாளி வர்க்கம் சிதறுண்டு கிடப்பதற்கு அடிப்படைக் காரணம் பிராமணியமே என்பதை ஏற்றுக் கொண்டால், அந்தப் பிராமணிய போக்கு தொழிலாளர்களிடையே நிலவுவதையும் விளக்கியே ஆக வேண்டும். இந்தத் தொற்று நோயை அலட்சியம் செய்வதாலோ, அதைப் பற்றி மவுனம் சாதிப்பதாலோ தொழிலாளர்களைப் பீடித்த பீடை அகலாது. இந்தப் பிராமணியப் போக்கைத் தேடிக் கண்டறிந்து தோண்டித் துருவி ஆராய்ந்து அடியோடு கெல்லி ஏறிய வேண்டும். அப்போதுதான் தொழிலாளர் ஒற்றுமை சாத்தியப்படும்.

பிராமணியம் உயிர்ப்புடன் இருக்கும் வரை - மக்கள் அதை விடாப்படியாகக் கொண்டிருக்கும் வரை - (ஒரு பிரிவினருக்கு உரிமைகளையும், இன்னொரு பிரிவினர்க்கு இடையூறுகளையும் அது

விளைவிப்பதால்) பாதிப்புக்குள்ளாகக் கூடியவர்கள் அமைப்பு ரீதியாகத் திரளுவது அவசியம். அவர்கள் அப்படித் திரளுவதால் என்ன தீங்கு நேர்ந்துவிடப் போகிறது? இப்படி - பாதிக்கப்பட தொழிலாளர்தம் அமைப்புகள் உருவாவது முதலாளிகள் முயற்சியின் காரணமாக நேர்கிறது என்று வைத்துக் கொண்டால் அதைப் பற்றிப் புகார் சொல்வதை என்னால் புரிந்து கொள்ள முடியும். அதாவது நாம் முதலாளிகளின் செயல்பாடுகளால் இயங்குகிறோம், அதற்காகவே தனி அமைப்பாகத் திரள்கிறோம். தொழிலாளிகளின் சக்தியில் பிளவுகள் ஏற்படுத்துகிறோம் என்ற குற்றச்சாட்டு விவாதிக்கப் பட்டது. இந்த மாநாட்டை எதிர்த்து பேசுவதிலோ விமர்சனம் செய்வதிலோ நியாயம் இருக்க முடியும். அது துரோகச் செயல் அல்ல. ஆனால் நாம் இப்படி அமைப்பு ரீதியாகத் திரள்வதற்கு முதலாளிகள் பின்புலமாக அமைந்திருக்கிறார்கள் என்று யாராவது சொல்லமுடியுமா? அப்படிச் சொல்ல எந்த விமர்சகனாவது இருக்கிறானா என்று சவால் விட்டிருக்கிறேன். எனவே, இப்படி ஒரு மாநாட்டைக் கூட்டியதில் வெட்கப்படத் தேவையில்லை. அதற்காக மன்னிப்புக் கோரும் அவசியமுமில்லை. மாநாடு கூட்டப்படுவதை நியாயப்படுத்துவதற்கு உரிய காரணங்களும், நோக்கங்களும் இருக்கின்றன. ஒடுக்கப்பட்ட வகுப்பினரைச் சேர்ந்த ஓரிருவர் இந்த மாநாட்டை ஏற்கவில்லை. அவர்கள் போக்கில் புதுமை எதையும் நான் காணவில்லை. அவர்களில் சிலர் மற்றவர்களின் கைக் கருவிகள், கைப்பாவைகள், கூலிப்படைகள். சிலர் தவறாக வழிகாட்டப் பட்டவர்கள். ஒடுக்கப்பட்ட வர்க்கமே மிகவும் பலவீனமான சங்கம் என்கிற வார்த்தையே அதற்குக் கவர்ச்சிகரமாகத் தெரிகிறது. செல்வாக்கு மிக்க பிராசாரகர்கள் வாயிலிருந்து அந்த வார்த்தை வெளிவரும்போது அவர்கள் மயங்கிப் போகிறார்கள். அதனால் ஒருவருக்கொருவர் உணர்வுளிலும், அணுகுமுறையிலும் முரண் பட்டுக் கிடக்கிறார்கள். பல்வேறு பகுதி மக்களிடையே உண்மையான சங்கமம் என்பது உருவாவதற்குச் சாத்தியமில்லை. ஒருவன் உரிமை கேட்கிறான். அவனுடைய நலனைப் பாதுகாத்துக் கொள்வதுதான் அதன் நோக்கம். இதுவே மற்றவர்களுடைய நலன்களுக்கு எதிராகத் தோன்றுகிறது என்னும்போது அவர்களிடையே உண்மையான சங்கமம் எப்படிச் சாத்தியம்? பலகீனமானோர் உழல்வோர் பொறுத்தவரை இந்தச் சங்கமம் ஒரு மோசடியே தவிர வேறு ஒன்றுமில்லை. இந்த மோசடியை தோலுரித்துக் காட்டும் நேர்மையான மனிதன் மோசடிப் பேர்வழிகளால் தூற்றப்படுவது

இயற்கைதான். அவனைப் பிளவுவாதி என்று அவர்கள் ஏசுவதும் இயற்கைதான். அவன் செய்வது பிளவு வேலைதான்.. எங்கே உண்மையான வேறுபாடு இருக்கிறதோ எங்கே முரண்பாடு இருக்கிறதோ அதை அவன் வெளிச்சம் போட்டுக்காட்டுகிறான். இந்த முரண்பாடும் மோதலும் ஏன் தோன்றுகின்றன? தொழிலாளர் களில் ஒரு பிரிவு ஒடுக்கப்பட்ட வகுப்பினர். அதன் மீது மற்ற பிரிவினர் ஆதிக்க உரிமைகளைக் கோருகின்றனர். அதனால் பிளவும் முரண் பாடும் தோன்றின. வேண்டுமென்றே யாரும் வேறுபாடுகளை உருவாக்க முடியவில்லை. நம்மிடையே உள்ள வேறுபாடுகளை புரிந்து கொள்ளுங்கள். இந்த வேறுபாடு நமக்கு அநீதி இழைத்து விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள் என்றுதான் நான் சொல்லுகிறேன்.

உங்கள் குறைபாடுகளைக் களைய வேண்டுமானால், அவற்றிற்கு பரிகாரம் காண வேண்டுமானால் நீங்கள் அமைப்பு ரீதியாகத் திரண்டுதான் ஆகவேண்டும். அப்படித் திரளும்போது அந்த அமைப்பு எந்த நோக்கத்தோடு பணிபுரிய வேண்டும் என்பது அடுத்த கேள்வி. வணிக மேம்பாடு அதன் நோக்கங்களில் ஒன்றாக இருக்கும். சங்கம் ஒன்றில் சேருவதா அல்லது உங்களுக்கென்று தனியாக சங்கம் ஆரம்பித்துக் கொள்வதா என்பது இன்னொரு கேள்வி. உங்கள் திசை வழியைத் தீர்மானிப்பதற்கு முன்னால் இந்தக் கேள்வியைப் பற்றி நீங்கள் தீர்க்கமாகச் சிந்திக்க வேண்டும்.

இந்தியாவில் தொழிற்சங்க இயக்கம் மிகவும் வருந்தத்தக்க நிலையில் இருக்கிறது. அதன் தலையாய நோக்கம் என்னவென்று யாருக்குமே தெரியவில்லை. உழைக்கும் வர்க்கத்தின் வாழ்க்கைத் தரம் சரிந்துவிட்டால் பாதுகாப்பதே அதன் தலையாய நோக்கம். ஐரோப்பாவில் ஒரு சராசரி மனிதன் தன் பிறப்பு, பயிற்சி ஆகியவற்றிற்கு வழக்கமான அதே வாழ்க்கை வசதிகளை அனுபவிக்க வேண்டும் என்பதில் குறியாய் இருக்கிறான். அதைக் குறைக்க முற்படும் எந்த முயற்சியையும் அவன் உறுதியாக எதிர்க்கிறான். இந்த உறுதி இந்தியத் தொழிலாளிகளிடம் இல்லை. இவனுக்கு நாட்களை ஓட்டினால் போதும், வேலையில் நீடித்தால் போதும். தரமுள்ள வாழ்வில் இவனுக்கு வேட்கையில்லை. இப்படித் தரம் தாழ்ந்து போவதை எதிர்க்கும் உறுதி இல்லையென்றால் அந்த நாட்டின் ஏழை எளிய மக்கள் மேலும் மேலும் கீழ்நிலைக்குத் தான் போவார்கள். அது

எத்தகைய முற்போக்கு அரசாக இருந்தாலும் சரி, அவர்கள் வாழ்க்கைத் தரம் மட்டும் அடித்தட்டுக்குத்தான் போகிறது என்று மில் சுட்டிக் காட்டுகின்றார். என்னைப் பொறுத்தவரை தொழிற்சங்க இயக்கம் என்பது இந்தியாவுக்கு மிக மிகத் தேவை. நான் முன்பே சொன்னபடி. இன்றைய இந்தியத் தொழிற்சங்க இயக்கம் தேங்கிப் போய் நாற்றம் வீசுகின்ற குட்டையாய்க் கிடக்கிறது. இதற்கு ஒரு காரணம் இதன் தலைவர்கள் கோழைகள், சுயநலக்காரர்கள், என்பதும். தவறாக வழிகாட்டப் பட்டவர்கள் என்பதுமாகும். இன்னும் சில தலைவர்கள் வெறும் சாய்வு நாற்காலித் தத்துவ ஆசிரியர்கள் அல்லது அரசியல்வாதிகளாக உள்ளனர். அவர்கள் கடமை பத்திரிகைகளுக்கு அறிக்கை தருவதோடு நின்று விடுகிறது. தொழிலாளர்களைத் திரட்டுவது, அவர்களுக்குக் கல்வி புகட்டுவது, அவர்கள் போராட உதவுவது போன்ற கடைமைகள் அவர்களுக்கு இல்லை. தொழிலாளர்களுடைய பிரதிநிதிகள் என்று சொல்லிக் கொண்டு அவர்களுக்காகப் பேச்சுவார்த்தை நடத்த அவர்கள் தயார். ஆனால் தொழிலாளர்களுடன் நேரடித் தொடர்பு வைத்துக் கொள்ள அவர்கள் விரும்பவில்லை. அடுத்ததொரு பிரிவு தொழிற் சங்கங்களைக் கட்டுவதே தம்மைச் செயலாளர்கள், தலைவர்கள் என்று முன்னிறுத்திக் கொள்வதற்காகத்தான்; சொந்தப் பதவி களுக்காகத் தங்களை முன்னிறுத்திக் கொள்வதற்காகத்தான். சொந்தப் பதவிகளுக்காகத் தங்களுக்கென்று தனித்தனிச் சங்கங்கள் வைத்துக் கொண்டு போட்டி அரசியல் நடத்துபவர்கள் அவர்கள். இத்தகைய விசித்திரமான, வெட்கப்படத்தக்க நிகழ்வுகள் இந்தியாவில் பிரசித்தி. தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் இடையே நடக்கும் போராட்டத்தை விட கடுமையான போராட்டம் போட்டிச் சங்கங்கள் மத்தியில் நடப்பது விசித்திரத்திலும் விசித்திரம். இத்தனையும் எதற்காக? தமது தலைமைப்பதவியை தக்க வைத்துக் கொள்வதற்காக! இதில் கம்யூனிஸ்ட்டுகள் இன்னொரு வகை. அவர்கள் அர்த்தமுள்ளவர்கள்தான். ஆனால் தவறான வழி காட்டுதலில் இயங்குபவர்கள். அவர்களைவிட தொழிலாளி வர்க்கத்திற்குப் பேரழிவைக் கொண்டு வந்தவர்கள் வேறு எவரும் இல்லை. இன்று தொழிலாளி வர்க்கத்தின் முதுகெலும்பு உடைக்கப் படுகிறது. முதலாளிகளின் கை மேலோங்கியிருக்கிறது. பொது மக்களுக்கும் தொழிலாளி வர்க்கத்திற்கும் நெருங்கிய நட்பும் இல்லை. இவற்றுக்கெல்லாம் காரணம் இந்தக் கம்யூனிஸ்ட் தலைவர்கள்தான். தாங்கள் ஒரு காலத்தில் வென்றெடுத்த அதிகாரத்தை இவர்கள்

தவறாகப் பயன்படுத்தி வருகிறார்கள். இவர்கள் வேலையே தொழிலாளர்களிடையே அதிருப்தியை வளர்ப்பதுதான். அதிருப்தி தான் புரட்சியைத் தூண்டும், புரட்சியின் மூலம் தொழிலாளி வர்க்கக்கட்சியை நிறுவ முடியும் என்றெல்லாம் இவர்கள் கணக்குப் போடுகிறார்கள். இதற்காகவே இந்த அதிருப்திப் பிரசாரத்தை முடுக்கிவிட்டு பிளவு சிதறல் இவற்றையே ஓர் அமைப்பு அலையாக தொடர்ந்து விளைவித்து வருகிறார்கள். இவர்கள் தொழிலாளர்கள் மீது திணிக்கும் தொடர்வேலை நிறுத்தங்களுக்கு என்ன அர்த்தம்? இது சிதறுதலைத் திட்டமிட்டு செயல்படுத்தும் ஒரு முயற்சிதானே? வெற்றிகரமான புரட்சிக்கு அதிருப்தி மட்டுமே போதாது. அரசியல் சமூக உரிமைக்கான நியாயம், அவசியம், முக்கியத்துவம் ஆகியவை பற்றிய உண்மையான நம்பிக்கை இருந்தால் மட்டுமே வெற்றிகரமான புரட்சி சாத்தியமாகும். ஒரு புரட்சிகர மார்க்சிஸ்ட் வேலை நிறுத்தம் நடத்தலே வேலை என்று அலைய மாட்டான். புரட்சிகர சிண்டிகலிஸ்ட்டுகளின் காலங்களில் அப்படித்தான் நடந்தது. வேலை நிறுத்தத்தை மார்க்சிஸ்டுகள் ஒரு புரட்சி நடவடிக்கையாக எப்போதுமே தீர்மானித்துக் கொண்டதில்லை. எல்லா வழிகளுமே அடைக்கப்பட்ட பிறகுதான் இறுதி புகலிடமாக வேலை நிறுத்தம் கையாளப் பட வேண்டும் என்பதே மார்க்சியம். இந்த உண்மைகளை கம்யூனிஸ்டுக்கள் காற்றில் பறக்க விட்டு விட்டார்கள். தொழிலாளர் களிடையே அதிருப்தியை உருவாக்கத் தங்களுக்கு கிடைத்த தெய்வீக சாதனமாக வேலை நிறுத்தங்களை ஒவ்வொரு கட்டத்திலும் திணித்தார்கள். இதனால் அதிருப்தி வளர்ந்ததோ இல்லையோ அவர்களுக்கு ஆற்றலும் அதிகாரமும் தந்த தொழிற்சங்க இயக்கமே உருத் தெரியாமல் சிதைந்து வருகிறது. இன்றைய தினம் அவர்கள் தெருவுக்கு வந்துவிட்டார்கள். முதலாளித்துவ அமைப்புகளில் புகலிடம் தேடிக் கொண்டிருக்கிறார்கள். பொருளற்ற செயல்கள் அப்படித்தானே முடிய வேண்டும்? இன்றைய கம்யூனிஸ்டு எப்படி இருக்கிறான்? சுற்றுவட்டத்தில் மாபெரும் தீ விபத்தை உண்டாக்கு வதற்கான வெடிகுண்டை எறிந்த ஒருவன் தன் சொந்த வீட்டையும் சேர்த்து எரித்துவிட்ட நிலையில் இருக்கிறான்.

விளைவு இன்று தொழிலாளிகள் குறை தீர்க்கும் சங்கங்களே இல்லை. பம்பாய் நூற்பாலைத் தொழிலாளர் மத்தியில் நிலவும் அவலங்களைப் பற்றி நான் பேசப்போவதில்லை. அவற்றைப் பற்றிப் பேசாமல் இருப்பதே நல்லது. ஜி.ஐ.பி. ரயில்வே தொழிலாளர்

நிலையை எடுத்துக் கொள்வோம். அவர்களுடைய தொழிற்சங்கம் 1920-இல் ஆரம்பிக்கப்பட்டது. அதன் பெயர் ஜி.ஐ.பி. ரயில்வே ஸ்டாப் யூனியன். 1922-24 கட்டத்தில் அது முடங்கிப் போனது. 1925-இல் மீண்டும் புதுப்பிக்கப்பட்டது. 1927-இல் ஒரு போட்டிச் சங்கம் உருவானது. அதன் பெயர் ஜி.ஐ. பி மேன்ஸ் ரயில்வே யூனியன், 1931-இல் இரண்டும் இணைந்தன. ரயில்வே ஒர்க்கர்ஸ் யூனியன் என்று பெயர் மாற்றம் ஏற்பட்டது. 1932-இல் மீண்டும் பிளவு. புதிய சங்கத்திற்கு ரயில்வே லேபர் யூனியன் என்று பெயர். 1935-இல் பழைய ஜி. ஐ. பி. ஸ்டாப் யூனியன் புத்துயிர் பெற்றுச் செயல்பட ஆரம்பித்தது. இன்று மோதல்கள். இத்தனைக்கும் எல்லாமே ரயில்வே தொழிலாளர்களின் நலன் காப்பதற்காக நிறுவப்பட்டவைதாம். இந்த - முரண்பாடு - மோதல்களுக்கு காரணம் கம்யூனிஸ்ட் மற்றும் கம்யூனிஸ்ட் அல்லாத குழுக்களின் இடையிலான போட்டி, பகைமை மத்திய அமைப்பிலும் பிளவைக் கொண்டு வந்தது.

அனைத்திந்திய தொழிற்சங்கக் காங்கிரஸ் ஒரு மத்திய தொழிலாளர் அமைப்பாக 1919-இல் தொடங்கியது. 1929-வரை நாட்டின் எல்லாச் சங்கங்களும் இதன் கீழ் ஒன்றுபட்டு பணியாற்றின. 1929-இல் நாக்பூரில் பிளவு ஏற்பட்டது. கம்யூனிஸ்ட் தலைமையை விரும்பாதவர்கள் விலகி வந்து தேசிய தொழிற்சங்கக் கூட்டமைப்பை நிறுவினார்கள். இந்த இரண்டு அமைப்புகளுக்கும் தீராப் பகை. 1931-32 இல் இரண்டுக்குமிடையே ஒற்றுமையை உண்டாக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அந்த முயறசிகள் தோல்வி அடைந்தன. இன்னும் சில முயற்சிகள் நடக்கின்றன. இவற்றின் பலன் என்னவாக இருக்கும் என்று என்னால் கூற முடியாது. இந்தச் சூழலில் உங்களுக்கு அறிவுரை சொல்வது மிக மிகக் கடினம். நீங்கள் உங்களுக்கென்று ஒரு தலைமைச் சங்கத்தை ஏற்படுத்திக் கொள்வதில் தவறில்லை. சங்கத்தை நிர்வகிக்க உங்களிடம் ஆட்கள் இருந்தால் அது போதும். தகுதியான ஆட்கள் இருக்கிறார்களா என்பது கேள்வி. தகுதியான செயல் வீரர்கள் இல்லாவிட்டால் சங்கம் நடத்துவது மிக மிகக் கடினம். உங்களுக்கு அப்படிப்பட்ட ஆட்கள் கிடைப்பார்கள். கிடைப்பதாக இருந்தால் தனிச் சங்கம் வைத்துக் கொள்ளுங்கள். அது நல்லதுதான் அதில் தவறு ஒன்றுமில்லை. உங்கள் தனிச்சங்கம் எப்போது வேண்டுமானாலும் மத்திய சங்கத்தில் உறுப்பினராக சேர்ந்துக் கொள்ள முடியும். அப்படிச் சேர்ந்தால் நோக்கம் - நடிவடிக்கை இரண்டிலும் ஒருமைப்பாடு உண்டாகும். தனிச் சங்கம்

அமைக்க உங்களால் முடியாவிட்டால் இருக்கும் சங்கங்களில் ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். ஒன்று நினைவிருக்கட்டும். அந்தச் சங்கத்திற்கு ஏதேனும் சொந்தக் காரணங்கள் இருந்து, அது உங்களைக் கருவியாகப் பயன்படுத்தப் போய் நீங்கள் அதன் கைப்பாவை ஆகிவிடக்கூடாது. அப்படிப்பட்ட ஆபத்து சாத்தியமே. பம்பாயில் அதுதான் நடந்திருக்கிறது. நூற்பாலைத் தொழிலாளிகள், நெசவாலைத் தொழிலாளிகள் இரு சாரருக்குமான ஒரு வேலை நிறுத்தம் ஆரம்பிக்கப்பட்டது. அதை நூற்போர் நலனுக்கு மட்டுமே பயன்படுத்தி விட்டார்கள். குறிப்பிட்ட அவலங்களை தவிர்க்க இரண்டு நிபந்தைனைகளை விதியுங்கள். - ஒன்று - சங்கச் செயற்குழுவில் உங்களுக்கு என்று சிறப்பு பிரதிநிதி இருக்கவேண்டும். அதன் மூலம் உங்கள் சிறப்பு பிரச்சினைகளைக் கவனித்துக் கொள்ளவும் அதற்காகச் சங்கத்தின் ஆதரவு பெறவும் முடியும். இரண்டு - நீங்கள் சங்கத்திற்குச் செலுத்தும் சந்தாத் தொகையின் ஒரு பகுதியை உங்களுக்கென்று ஒதுக்கி வைத்து, உங்கள் குறைகளுக்காகப் போராடும்போது அதைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இந்த இரண்டு ஏற்பாடுகளையும் ஏற்றுக் கொள்ளும் எந்தப் பொதுச் சங்கத்திலும் நீங்கள் சேரலாம்.

வணிக நோக்கங்களுக்காகச் சங்கம் அமைக்கலாம் என்பது எல்லோராலும் ஏற்கப்பட்ட உண்மை. ஆனால் அது போதாது. அரசியல் நோக்கங்களுக்காகவும் சங்கம் தேவை. தங்களுக்கு எதிரான போராட்டத்தில் தொழிலாளர்களுக்கு உதவத் தொழிற்சங்க இயக்கம் மட்டுமே போதுமானதாக இல்லை. தொழிற்சங்கங்கள் அரசியலில் ஈடுபடலாமா என்பது கேள்வி. இதில் இருவேறு கருத்துநிலை நிலவுகிறது.

தொழிற்சங்கங்கள் அரசியலுக்கு வரவேண்டும். அரசியல் அதிகாரம் இல்லாமல் தொழிற்சங்க நலன்களை பாதுகாக்க முடியாது. குறைந்தபட்ச ஊதியம், வேலை நாட்கள், பொது விதிகள் சம்பள உயர்வுக்கான பேச்சு வார்த்தைகள் ஆகிய சீர்திருத்தங் களுக்கான அரசியல் அதிகாரம் அவசியம். சட்டத்தின் அங்கீகாரம் இருந்தால்தான் தொழிற்சங்களின் ஆற்றல் வலுப்படும். சங்கமாகத் திரள்வதுடன் நாட்டின் அரசியலிலும் பங்கேற்றால்தான் இவை யெல்லாம் கைகூடும்?

தொழிற்சங்கங்கள் அரசியலில் ஈடுபடுவது அவற்றின் நலன்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக மட்டுமல்ல. மேலும் தொழிற்சங்கத்தின் மீது மட்டுமே முழுக்கவனம் செலுத்துவதால் நமது இறுதி இலக்கை எட்டாமல் போய் விடுவோம். மற்றவர்களுக்கு ஊழியம் செய்வதே நமது தலையெழுத்து என்னும் நிலையிலிருந்து உழைக்கும் வர்க்கம் மீள முடியாமல் போய்விடும். மாறாக நமது இலக்கு இந்த கூலி அடிமைத்தனம் என்னும் கருத்தோட்டத்திலிருந்து விடுபட்டு விடுதலைக் கோட்பாட்டை அடைவதாக இருக்க வேண்டும். அதாவது சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய இலக்குகளை நோக்கி தொழிற்சங்க இயக்கத்தை வழி நடத்த வேண்டும். சமுதாயத்தைப் புனர்நிர்மாணம் செய்ய வேண்டும். இந்தப் புனர்நிர்மாணமே தொழிலாளி வர்க்கத்தி ன் முதல் கடமையாகும். இந்த லட்சியத்தை எப்படி அடைவது? இதற்கு ஒரு வழி அரசியல் அதிகாரத்தைச் சரியாகப் பயன்படுத்துவது. எனவே அதிகாரத்தை நாம் கைப்பற்றியே ஆக வேண்டும் அல்லவா? வெறும் அரசியல் நடத்துவது கூடாது. தொழிலாளர்கள் தனிமனிதர்கள் என்னும் அடிப்படையில் அரசியல் அக்கறைகள் உள்ளவர்களாக விளங்க வேண்டியது அவசியம்தான். ஆனால் அதையும் மீறி அரசியல் கூட்டங்களுக்குப் போவது, தேர்தலில் ஒருவர் மாற்றி ஒருவருக்கு ஓட்டுப்போடுவது, ஏதாவது ஓர் அரசியல் கட்சியில் சேர்ந்து விடுவது என்றே பலர் காலத்தைக் கழிக்கிறார்கள். இதுவும் சரியில்லை. தொழிலாளர்களுக்கு அரசியல் வேண்டாம் என்றால் ஒரு தொழிற் சங்கத்தில் உறுப்பினராக இருக்கும் ஒருவர் தனிப்பட்ட முறையில் எந்த அரசியல் கொள்கையும் வைத்துக் கொள்ளக்கூடாது என்று அர்த்தமில்லை. அரசியல் வேண்டாம் என்னும் எச்சரிக்கை அமைப்பு ரீதியான அரசியல் வடிவங்களுக்கு மட்டுமே பொருந்தும். அதாவது கட்சி அரசியலுக்கு மட்டுமே பொருந்தும். எனவே, ஒவ்வொரு தொழிலாளியும் தனிப்பட்ட முறையில் விருப்பப்படி அரசியலில் இடம் பெறலாம். ஆனால் சக தொழிலாளியுடன் அமைப்பு ரீதியாகத் திரளாதிருக்கும் போது அவன் சொந்த அரசியலை விட்டுவிட வேண்டும். இவ்வாறு தன் வர்க்க நலன்களை அரசியல் காரணங் களுக்காக கைவிடும் போக்கிலிருந்து அவன் தன்னைக் காத்துக் கொள்வது இயக்கத்திற்கு வலிமையைச் சேர்க்கும். இல்லாவிட்டால் திரண்டிருக்கும் தொழிலாளி வர்க்கத்தைத் திரண்டிருக்கும் ஒரு முதலாளித்துவக் கட்சி பலிகொண்டு விடும். உங்கள் எல்லோருக்கும் தெரியும். நாங்கள் தொழிலாளி வர்க்கத்துக்காக வாதாடுபவர்கள்

என்று இரண்டு போட்டி அமைப்புகள் கூறி வருகின்றன. ஒன்று தொழிற்சங்கக் காங்கிரஸ், இன்னொன்று - தொழிற்சங்கக் கூட்டமைப்பு. இரண்டும் ஒன்று சேர முடிவு செய்துள்ளன. இந்த ஒருமைப்பாட்டு பாதையில் ஒவ்வொரு அமைப்பும் பாதி தூரம் கடந்திருக்கின்றன. தொழிற்சங்கக் காங்கிரஸ் தொழிற்சங்கக் கூட்டமைப்பின் அமைப்புச் சட்டத்தை ஏற்றுக்கொள்ள முடிவு செய்துள்ளது. கூட்டமைப்பு தன்னுடைய பெயரைக் கைவிட்டுவிட ஒப்புக் கொண்டுள்ளது. உருவாகப்போகும் புதிய அமைப்பு தூய்மையான தொழிற்சங்க அமைப்பாக இருக்க வேண்டும் என்பதே நோக்கம். அதில் அரசியல் இருக்கக்கூடாது என்பது கட்டாயம். இதைப் பற்றிக் கேள்விப்பட்டதும் சரியான புரிதலில்தான் இவர்கள் செயல்படுகிறார்களா என்று நான் வியந்தேன். அரசியல் அதிகாரம் என்பது ஒரு சாதனம். அதன் மூலம்தான் தங்கள் மீது இழைக்கப்படும் அநீதிகளை நீக்கமுடியும். இதைத் தொழிலாளர்கள் உணராமல் இருப்பதுதான் மிகப் பெரிய சோகம். ஒன்றுபட்ட அரசியல் நடவடிக்கையால் அல்லாமல் இந்தத் தொழிற்சங்க ஒற்றுமை எதற்காக உருவாக்கப்படுகிறது என்று எனக்குத் தெரியவில்லை. சிறு சிறு கருத்துவேறுபாடுகளை இனி லட்சியம் செய்வதில்லை என்று முடிவு செய்தால்தான் ஒட்டுமொத்தமான ஒப்பந்தம் ஏற்படும் என்று நினைப்பதில் நியாயம் இருக்கிறது. ஆனால் கருத்து வேறுபாடு களுக்கான அடித்தளம் அல்லது மையப் பிரச்சினை மிகப் பெரியதாக இருந்தால் அந்த பின்னணியில் ஒற்றுமை காண்பதில் பொருளே இல்லை. மற்றவர்கள் என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொண்டு போகலாம். திரண்டிருக்கும் தொழிலாளி வர்க்கம் அரசியலே வேண்டாம் என்று சபதம் எடுத்துக் கொள்வதனால் அந்த வர்க்கமே அழிந்துபோகும் என்றுதான் சொல்வேன், நாம் இதுவரை சமூக சீர்திருத்தம் நோக்கியே நமது முயற்சிகளை மேற் கொண்டிருந்தோம். அவற்றைப் பொருளாதாரச் சீர்திருத்தம் நோக்கியும் செலுத்த வேண்டிய அவசியத்தை நாம் மறந்திருந்தோம் அல்லது அரைகுறையாகக் கருத்தில் கொண்டிருந்தோம் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். நாம் அனுபவித்த எல்லா கொடுமை களுக்கும் மூல அம்சம் பொதுவானது. நம்மீது சமூக, பொருளாதார ஆதிக்கம் செலுத்துபவர்கள் நமக்குச் சொந்தமான நம் கையில் இருக்கவேண்டிய அரசியல் அதிகாரத்தையும் சேர்த்து எடுத்துக் கொண்டதுதான் அந்த மூல அம்சம் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

அரசியலுக்கு வருவதென்றால் கட்சி அமைத்துக் கொள்வது என்று பொருள். கட்சிப் பின்னணி இல்லாத அரசியல் வீண் வேலை. சுயேச்சையாக இருப்பேன் என்று சில அரசியல்வாதிகள் சொல்லலாம். அவர்கள் தனிமையில் தங்கள் தங்கள் நிலத்தை உழுது கொண்டு இருக்கவேண்டியதுதான். அத்தகைய அரசியல்வாதிகளை நான் எப்போதுமே நம்புவது இல்லை. யாரோடும் சேரமுடியாத ஓர் அரசியல்வாதி எந்தப் பயன் நடைமுறை நோக்கத்துக்கும் பயன்பட மாட்டான். அவனால் எதையும் சாதிக்க முடியாது. அவனுடைய நிலத்தில் ஒரு புல் கூட முளைக்காது. பெரும்பாலான அரசியல் வாதிகள் சுயேச்சையாக இருக்க நினைப்பது அவர்களுடைய அறிவு நேர்மையாலல்ல தங்களுக்கு அதிக விலை நிர்ணயித்துக் கொண்டு தங்களைத் தாங்களே விற்றுக் கொள்வதற்காகத்தான். இதற்காகத்தான் கட்சிக் கட்டுப்பாட்டுக்கு அடங்காமல் சுதந்திரமாக இருக்க அவர்கள் விரும்புகிறார்கள். அரசியலில் சுயேச்சை பற்றிய என் மதீப்பீடு இதுதான். அனுபவமும் இதுதான். கட்சியில்லாமல் அர்த்தமுள்ள அரசியல் நடத்தமுடியாது என்பதே என் கருத்து.

எந்தக் கட்சியில் சேருவது என்பது அடுத்த கேள்வி. எத்தனையோ கட்சிகள் இருக்கின்றன. காங்கிரசில் சேரலாமா? அப்படிச் சேர்ந்தால் தொழிலாளி வர்க்கத்துக்கு உதவிகரமாக இருக்க முடியுமா? காங்கிரஸ் அல்லாத ஒரு தனி அமைப்பு, சுதந்திரமான அரசியல் அமைப்பு தொழிலாளர்களுக்குத் தேவை, இக்கருத்தைத் தொழிலாளர் தலைவர்கள் சிலர் எதிர்க்கிறார்கள். காங்கிரஸ் சோஷலிஸ்டுகள் என்பவர்கள் சோஷலிஸ்டுக்கான தொழிலாளர்கள் ஓர் அமைப்பாக திரள வேண்டும் என்னும் கருத்துடையவர்கள். அந்தத் தொழிலாளர் அமைப்பு காங்கிரசுக்குள்ளேயே செயல் படலாம் என்று அவர்கள் நினைக்கலாம். அதே போல் இன்னொரு பிரிவு. தங்களைக் கம்யூனிஸ்டுகள் என்று அழைத்துக் கொள்கிறார்கள். அவர்களின் பிரதிநிதி திரு. ராய் அவர்கள் கருத்துப்படி காங்கிரசுக் குள்ளேயும் சரி வெளியிலேயும் சரி சொந்தமாகத் தனி அமைப்பு வைத்துக் கொள்ளக்கூடாது என்பவர்கள் அவர்கள். இந்த இரண்டு பிரிவினரோடும் நாம் முழுக்க முழுக்க மாறுபட வேண்டும் எனக் கருதுகிறேன். நிறைய பேருக்கு திரு. ராய் ஒரு புதிர். எனக்கும் அப்படித்தான் ஒரு கம்யூனிஸ்ட், கம்யூனிஸ்ட் தொழிலாளர்களுக்குத் தனி அரசியல் அமைப்பு இருக்கக் கூடாது என்கிறார். எத்தகைய முரண்பாடு? இந்தக் கருத்துநிலையைத் கேள்விப்பட்டால்

கல்லறையில் இருக்கும் லெனின் கூட புரண்டு படுப்பார். இந்திய அரசியலின் முழுமுதல் நோக்கம் ஏகாதிபத்தியத்தை ஒழிப்பது என்று சொல்லும் ராய் இப்படி ஒரு கருத்துநிலைக்கு எப்படித்தான் நியாயம் கற்பிப்பாரோ? அவரது கருத்தில் எந்தப் பொருளும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை ஏகாதிபத்தியம் மறைந்தால் இந்திய முதலாளித்துவமும் அடையாளம் தெரியாமல் நொறுங்கிவிடும் என்பதை நிரூபித்தால் ராயின் கருத்தை நாம் ஏற்க முடியும். பிரிட்டிஷ் காரர்கள் இந்தியாவை விட்டுப் போய் விடுகிறார்கள் என்றாலும் இங்கு இருக்கும் நிலப்பிரபுக்களும், ஆலை முதலாளிகளும் வட்டி வணிகர்களும் மக்களைச் சுரண்டுவது நின்றுவிடவா போகிறது? இந்த அடிப்படை எதார்த்தத்தைப் புரிந்துக் கொள்ள பெரிய புத்திசாலித்தனம் தேவையில்லை. வெள்ளைக்காரன் போன பிறகும் தொழிலாளி தன்னுடைய நலன்களைக் காப்பாற்றிக் கொள்ள போராடித்தான் தீர வேண்டும். அதற்காக அவன் அமைப்பு அடிப் படையில் திரள்வது அவசியத்திலும் அவசியம். காங்கிரஸ் சோஷலிஸ்டுகள் இதைப் புரித்து கொண்டுள்ளார்கள். ஏகாதி பத்தியத்தைப் போலவே முதலாளித்துவத்தோடும் போரிட வேண்டும். அதற்காக ஒன்று திரளவேண்டும் என்பதை அவர்கள் புரிந்து வைத்திருக்கிறார்கள். ஆனால் அப்படித் திரளும் தொழிலாளர் அமைப்பு காங்கிரசின் உள் அமைப்பாகத்தான் இயங்க வேண்டும் என்னும் நிபந்தனையையும் அவர்கள் விதிக்கிறார்கள். காங்கிரசுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையிலான இந்தக் கட்டாயக் கூட்டணியின் அவசியம்தான் எனக்குப் புரியவில்லை. காங்கிரஸ் சோஷலிஸ்ட்டின் நோக்கம் சோஷசலிசத்தைக் கொண்டுவருவது என்று சொல் கிறார்கள். எப்படிக் கொண்டு வரமுடியும்? காங்கிரசில் உள்ள வலது சாரிகளை மனமாற்றம் செய்வோம் என்கிறார்கள். இதனால்தான் காங்கிரசை விட்டு வெளியேறத் தேவையில்லை என்று காரணமும் சொல்கிறார்கள். மனித இனத்தையே புரிந்து கொள்ள மறுக்கும் ஒரு சோகமான கருத்து நிலை இது. சோஷலிஸம்தான் நோக்கம் என்றால் பொதுமக்களிடம் பிரச்சாரம் நடத்த வேண்டும். அவர்களைத் திரட்ட வேண்டும். அதை விட்டுவிட்டு வர்க்கங்களை மனமாற்றம் செய்வது சரியான வழிமுறை அல்ல. காங்கிரஸ் வலதுசாரிகள் ஒரு சொட்டு சோஷலிசத்தைக் கூட சகித்துக் கொள்ளமாட்டார்கள் என்பது நாளுக்கு நாள் தெளிவாகிவருகிறது. கடந்த ஆண்டு பண்டித நேரு சோஷலிசத்துக்காக ஒரு சூறாவளி சுற்றுப்பயணம் மேற்கொண்டார். ஏழை மனிதனை ஏதோ வீட்டுக்கடங்காத சிறுவன் போல் ஓர்

அறையில் அடைத்து அவனுக்கு உணவும் தண்ணீரும் கொடுத்துச் சொன்ன பேச்சைக் கேட்கிறேன் என்று ஒப்புக்கொள்ள வைத்து, இனி ஒழுங்காக இருப்பேன் என்று சொன்னதும் வெளியே விடுவதைப் போன்ற நிகழ்ச்சி அது. நேரு இப்போது முற்றிலும் மாறிவிட்டார். தலைகீழாக மாறிவிட்டார்; அல்லது அவரை மாற்றி விட்டார்கள். சிவப்பு, செங்கொடி என்றாலே இப்பொழுதெல்லாம் அவருக்குப் பிடிப்பதில்லை. ஒரு காலத்தில் அதைத்தான் அவர் வீசிக்கொண்டிருந்தார். காங்கிரஸ் வலதுசாரிகளுக்குச் செங்கொடி என்றால் எப்போதுமே வெறுப்பு. பீகார் காங்கிரஸின் வலதுசாரிகள் தங்கள் உண்மைச் சொரூபத்தை காட்டி விட்டார்கள். கிசான் தலைவர் சுவாமி சகஜானந்த் காங்கிரசைவிட்டு விலகிவிட்டார். அவருடைய நண்பர் திரு. ஜெயபிரகாஷ் நாராயணன் விலகுவதாக இருக்கிறார். கடந்த அகில இந்தியக் காங்கிரஸ் கூட்டத்தில் (பம்பாய்) காங்கிரஸ் மேடையிலிருந்து கொண்டு சோஷலிசத்தைப் பிரசாரம் செய்வதன் மூலம் இடதுசாரிகள் கட்சிக் கட்டுப்பாட்டை மீறுகிறார்கள் என்று வலதுசாரிகள் வெளிப்படையாகக் குற்றம் சாட்டுகிறார்கள். வெறும் ஏதோ குற்றவியல் நடைமுறைச்சட்டத்தின் கீழ் முதல் தடவை குற்றம் புரிந்தவர்களை எச்சரிக்கையுடன் விட்டுவிடுவது போல் காங்கிரஸ் சோஷலிஸ்டுகளை வலதுசாரிகள் கண்டித்தார்கள். ஆக, காங்கிரஸ் சோஷலிஸ்டுகளின் அரசியல் ஒரு வீண் வேலையாக முடிந்திருக்கிறது.

ஏகாதிபத்தியத்திற்குப் பதில் நடவடிக்கை என்பது போல் இந்திய அரசியல் நடத்தப்படுகிறது. ஆதிக்க சக்திகள்தான் தமது உண்மையான எதிரிகள் என்பதைத் தொழிலாளர்கள் மறந்து விடுகிறார்கள். ராயிஸ்டுகளும் காங்கிரஸ் சோஷலிஸ்டுகளும் சிந்தனைக் குழப்பத்தின் காரணமாக இப்படிப்பட்ட தவறான புரிதலில் சிக்கி அவதிப்படுகிறார்கள். ஏகாதிபத்தியத்தை பொது எதிரி யாக நடத்த வேண்டுமானால் எல்லா வகுப்புகளும் தங்கள் தங்கள் நலன்களை மறந்து ஒரே குடையின் கீழ் திரளவேண்டும். ஒரு பொது எதிர்ப்பு முன்னணியைக் கொண்டுதான் ஏகாதிபத்தியத்தோடு போரிட முடியும். அதற்காக எல்லா அமைப்புகளையும் கலைத்து விட வேண்டும் என்று சொல்லவில்லை. இணைத்துவிட வேண்டும் என்றும் சொல்லவில்லை. ஒரு பொது முன்னணி இருந்தால் போதும் காங்கிரஸ் வலது சாரிகள் ஏகாதிபத்தியத்தை ஒரு பூச்சாண்டி போல் பயன்படுத்துகிறார்கள். அதன் மூலம் ஒரு தனிப்பட்ட சுதந்திரமான தொழிலாளர் அமைப்பு உருவாவதைத் தடுக்கிறார்கள். அவர்கள்

வலையில் நீங்கள் விழுந்துவிடக் கூடாது. வர்க்க உணர்வோடுதான் அரசியல் நடத்த வேண்டும். வர்க்க உணர்வு இல்லாத அரசியல் ஒரு போலி அரசியல்.

எனவே நீங்கள் வர்க்க நலன்களையும் வர்க்க உணர்வையும் அடிப்படையாகக் கொண்ட ஓர் அரசியல் கட்சியில் சேர வேண்டும். சுதந்திரத் தொழிலாளர் கட்சியில் நீங்கள் சேரலாம். அதனால் உங்கள் நலன்களுக்கு இடையூறு வராது. அதற்குத்தான் தெளிவான திட்டங்கள் உண்டு. அதுதான் தொழிலாளர் நலன்களுக்கு முன்னுரிமை தருவது. அரசியல் அமைப்புக்கு உட்பட்ட எல்லா வழி முறைகளையும் தனது திட்டத்தைச் செயலாற்றுவதற்காக அது கடைப்பிடிக்கிறது. எப்போதும் அரசியல் அமைப்பை மீறிய நெறிமுறைகளில் அது நடை போடாது. வர்க்கப் போராட்டம் என்பதன் அவசியத்தை அது தவிர்த்துவிடுகிறது. அதே சமயம் வர்க்க அமைப்பு என்னும் கோட்பாட்டின் மீது அது நிலையாக நிற்கிறது. சுதந்திரத் தொழிலாளர்கட்சி அண்மையில் தோன்றிய பம்பாய் மாகாணத்தில் மட்டுமே இயங்குகிறது. அது மேலும் வளர வேண்டும். ஒவ்வொரு கட்சியும் தோன்றும் போது சிறிய கட்சியாகத்தான் தோன்றுகிறது. ஆகவே கட்சியின் பழமை என்பது அத்தனை முக்கியமான விஷயமல்ல. அதன் கொள்கைகள் என்ன? ஆற்றல்கள் என்ன? அது எதை வலியுறுத்துகிறது என்னும் கேள்விதான் முக்கியமானவை. விருப்பம் இருப்பவர்கள் சுதந்திரத் தொழிலாளர் கட்சி அறிக்கையைப் படித்தால் அதன் கொள்கை, கோட்பாடுகள் விளங்கும், அதற்கு மாபெரும் ஆற்றல் உண்டு. அது ஒரு ரகசியமான அமைப்பல்ல ஜாதி நம்பிக்கை எதுவாக இருந்தபோதிலும் அனைவரும் அதில் சேரலாம். அதற்கென்று கொள்கைத்திட்டம் உண்டு. ஒடுக்கப்பட்ட மக்களின் சிறப்புத் தேவைகளை அது வலியுறுத்துகிறது. இருப்பினும் தொழிலாளி வர்க்கத்தின் எல்லா இரு பிரிவுகளுக்கும் அதில் இடமுண்டு. அதன் வளர்ச்சிக்கும் விரிவாக்கத் துக்கும் தடைகல்லாக நிற்கிறது. அதனால்தான் ஜாதி இந்து தொழிலாளர்கள் அதில் சேர மறுக்கிறார்கள். சுதந்திரத் தொழிலாளர் கட்சி வளர்ச்சியை எதிர்க்கும் இவர்கள் வேறு வழிகளில் எதிர்மறை உணர்வுகளை உசுப்பிவிட்டு அறியாமையையும் மூட நம்பிக்கையும் மிகுந்துள்ள தொழிலாளர்கள் அதில் சேர ஒட்டாமல் தடுத்து வருகிறார்கள். ஆனால் அந்தக் கட்சியின் நேர்மை நாணயமான அரசியல் ஓர் ஆற்றல் மிக்க சாதனையாக எல்லாத் தொழிலாளர்

உறுப்பினரையும் கவர்ந்திழுக்கும்: கவர்ந்திழுத்து இந்து சமூக அமைப்பிலிருந்து வெளியேற்றும் நாச சக்திகளுக்கு தோல்வியைத் தரும் என்று நான் நம்புகிறேன். தாணா கொலாபா ரத்தினகிரி போன்ற பகுதிகளில் அது நன்றாக வேரூன்றியிருக்கிறது. மற்ற மாகாணங் களிலும் பரவி வருகிறது. சி.பி. மாகாணத்திலும் பெராலிலும் கட்சி செயல்படுகிறது. இந்தியாவின் பிற மாகாணங்களுக்கும் நாளடைவில் அது பரவும். எனவே அது ஒன்றுதான் தொழிலாளி வர்க்கத்தின் ஆதரவுக்குரிய கட்சி.

ஒடுக்கப்பட்ட மக்களுக்கான ஒரு தொழிலாளர் அமைப்பை ஏற்படுத்துவதன் மூலம் ஒட்டுமொத்தமான இந்தியத் தொழிலாளி வர்க்கத்திற்கு நாம் பெரிய உந்து சக்தியாக இருக்க முடியும். திரு. காமேஜ் என்பவர் இங்கிலாந்து சார்ட்டிஸ்ட இயக்கத்தின் மாணவர். அவர் குறிப்பிட்டார்: “சமூக வேர்கள் இல்லாமல் ஒரு மாபெரும் அரசியல் இயக்கம் தோன்றுவது சந்தேகம்தான். சமூக இன்பத்திற்கான சாதனங்களைப் பெறுவதே மனித குலத்தின் தலையான லௌகீக நோக்கம். இந்தச் சாதனங்களை இவர்கள் பெறமுடிந்தால் அரசியல் தடுமாற்றத்திற்கு ஆளாக மாட்டார்கள். மாபெரும் சமூக அநீதிகள் மூலம்தான் அரசியல் உரிமைகளின் மதிப்பு பொதுமக்களுக்கு தெரியவருகிறது.” உங்களுக்கு இழைக்கப் பட்ட அநீதிகள் மிகப்பெரியவை. அவை உண்மையானவை; எனவே உங்கள் அரசியலும் நேர்மையானது. எதார்த்தமானது. இதை நீங்கள் உணர்ந்தால் இந்தியத் தொழிலாளர் வர்க்கத்திற்கு நீங்கள் கலங்கரை விளக்கமாகத் திகழ்கிறீர்கள். உங்களுக்கென்று சட்டமன்றத்தில் இட ஒதுக்கீடு நிச்சயம் செய்யப்பட்டது. இத்தகைய இட ஒதுக்கீட்டின் மூலம் தொழிலாளர்களுக்குக் கிடைக்க கூடிய லாபங்களை பற்றிச் சில தொழிலாளர் தலைவர்களுக்கு ஒன்றுமே தெரியவில்லை. தேர்தல்கள் பெரும்பாலும் சூதாட்டங்கள். எந்தத் தேர்தல் அமைப்பிலும் எந்தக் கட்சியும் சாதாரணமான வழிகளில் தங்களின் சட்டமன்றப் பிரதிநிதித்துவத்தைப் பாதுகாத்துக் கொள்ள முடியாது. எந்தத் தேர்தல் அமைப்பும் எந்த வாக்காளர் தொகுதிக்கும் அவர்களின் எண்ணிக்கை அடிப்படையில் பிரதிநிதித்துவம் வழங்காது. இங்கிலாந்து தேர்தல் வரலாற்றைப் பாருங்கள். பல்வேறு கட்சிகளுக்கு எத்தகைய வியக்கத்தக்க அழிவுகள் நேர்ந்துள்ளன என்பதைக் கவனியுங்கள். நமக்கு அந்நிலையில்லை. நிச்சயம் செய்யப்பட்ட இட ஒதுக்கீடு அதை உறுதி செய்யும். இந்த இட

ஒதுக்கீடு ஒடுக்கப்பட்ட வகுப்பினருக்கு மட்டுமல்ல தொழிலாளர் வர்க்கம் முழுமைக்கும் பயன்தரக் கூடியது. ஒடுக்கப்பட்ட வகுப்பினருக்குப் பிரதிநிதித்துவம் உண்டு என்றால் அதன்மூலம் பிற தொழிலாளர் வகுப்பினர் அரசியல் அடிப்படையில் திரள்வதற்கு ஒடுக்கப்பட்ட வகுப்பினர் உதவ முடியும். தொழிலாளி வர்க்கம் ஆதரவு கோரினால் போதும். ஒடுக்கப்பட்டவர்கள் ஆதரவு தருவார்கள். இந்த ஆதரவின் வலிமை கடந்த தேர்தலில் நிரூபிக்கப் பட்டது. சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் சார்பில் போட்டியிட்ட மூன்று ஜாதி இந்துக்கள் பம்பாய் சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். அவர்களுடைய தேர்வுக்கு ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் ஆதரவுதான் காரணமாக இருந்தது. இதேபோல் நமது கட்சி சார்பாக நிற்காவிட்டாலும் கட்சி ஆதரவை மட்டும் வைத்துக் கொண்டே மற்றும் பலர் சட்டமன்றத் தேர்தலில் வெற்றி பெற்றுள்ளனர். ஆகவே நமது முயற்சிகள் மூலம் லாபம் அடைய விரும்புபவர்கள் வெற்றி பெறுவது உறுதி. - இன்னொன்று - இந்நாட்டு அரசியலில் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் தாங்களாகவே மிகப்பெரிய பங்களிப்பைச் செய்துகாட்ட முடியும். அதனால் அவர்களுக்கும் பயனுண்டு. ஒட்டு மொத்தமான தொழிலாளி வர்க்கத்துக்கும் பயனுண்டு.

இவையெல்லாம் நீங்கள் எத்தனை நன்றாக எத்தனை உயர்வாகத் திரள்கிறீர்கள் என்பதைப் பொறுத்தே அமையும். நீங்கள் அமைப்பு அடிப்படையில் ஏன் திரள வேண்டும் என்றும் அப்படித் திரள்வதன் மூலம் என்ன சாதிக்க முடியும் என்றும் நான் சொன்னேன். - இனி முடிவுரை - அமைப்பு ரீதியாக திரளத் தொடங்குங்கள். அதற்காக நேரம் வரும் என்று காத்திருக்காதீர்கள். ஓயாதீர்கள். மாநாட்டுக்கு என்னைத் தலைமை தாங்க வைத்ததற்காக உங்களுக்கு என் நன்றி! நீங்கள் வெற்றி பெற என் வாழ்த்துகள்![1]

---

1. சிறு நூல் - அச்சிடப்பட்ட இடம் பாரத் பூஷன் பிரிண்டிங் அச்சகம், 57, வின் சென்ட் ரோடு, தாதர், பம்பாய் - 14.

## (45)

# நேர்மையும் எளிமையும் இல்லாது கல்வியறிவு மட்டும் உள்ளவர்கள் மிருகத்தைவிட ஆபத்தானவர்கள்

*1938 பிப்ரவரி 12 அன்று டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தலைமையில் பம்பாய் மாகாண ஒடுக்கப்பட்ட வகுப்பு இளைஞர் மாநாடு கூட்டப்பட்டது. மாநாட்டுக்காக பிரமாண்டமான பந்தல் ஜி.ஐ.பி. ரயில்வே ஒடுக்கப்பட்ட தொழிலாளர் மாநாட்டுக்காகப் போடப்பட்ட பந்தல் அது. வரவேற்புரை நடத்தியவர் திரு. முரளிதர் பகாரே.[1] டாக்டர் அம்பேத்கர் உணர்ச்சிகரமான, அதே சமயத்தில் அறிவுரை நிறைந்த சொற்பொழிவை நிகழ்த்தினார்.*

ஒவ்வொருவரும் உயர்ந்த குறிக்கோள் ஒன்றை வைத்துக் கொள்வதே வாழ்வின் விதி. அது தேசிய முன்னேற்றமாக இருக்கலாம் அல்லது சுயமுன்னேற்றமாக இருக்கலாம். எதையும் அடையும் முயற்சியில் தொடர்ந்து விடாப்பிடியாக ஈடுபட வேண்டும். ஒவ்வொரு சாதனையின் பின்னணியிலும் கடுமையான உழைப்பும் பொறுமையும் சோதனையும் உண்டு. மனத்தை ஒரு முகப்படுத்தி லட்சியம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு நாம் பாடுபட வேண்டும். வாழ்வதற்காக நாம் உணவு உட்கொண்டுதான் தீர வேண்டியிருக்கிறது. அதேபோல் சமுதாய நலனுக்காக நாம் வாழவும் சேவை செய்யவும் முயல வேண்டும்.

அடுத்துக் கல்விப் பிரச்சினை. கல்வியென்பது இருபுறமும் கூர்மையுள்ள ஓர் ஆபத்தான கருவி. கற்றவனுக்கு நன்னடத்தையும் எளிமையும் அவசியம். அவை இல்லாவிட்டால் கற்றவன் விலங்குகளை விட ஆபத்தான நிலைக்கு போய் விடுவான். ஏழை எளிய மக்களின் நலனுக்கு இடையூறு விளைவிப்பதாக இருந்தால் அவன் கற்ற கல்வியால் சமுதாயத்திற்குச் சாபமே வந்து சேரும் அப்படிப்பட்ட கல்வியாளரைத் தூக்கியெறிய வேண்டும். நேர்மையே கல்வியைவிட

---

1. 'ஜனதா' 1938, பிப்ரவரி, 26.

மிக மிக அவசியம். மதத்தை அலட்சியமாக நினைக்கும் இளைஞர்கள் எனக்கு மிக மிக வருத்தத்தைத் தருகிறார்கள். யாரோ சொன்னது போல் மதம் ஓர் அபினியல்ல. என்னிடமிருக்கும் நல்ல பண்பு களுக்கும் என் கல்வியால் சமுதாயத்திற்குக் கிடைந்த நல்ல பயன் களுக்கும் என் மத உணர்வுகளே காரணம். மதம் எனக்குத் தேவை அதே சமயம். மதம் என்னும் பெயரில் கபட வேடம் போடுவதும் எனக்குப் பிடிக்காது.

மாநாடு வெற்றிகரமாக முடிந்தது. வாய்ப்புக் கிடைத்தால் ஒடுக்கப்பட்ட வகுப்பு தலைவர்களாலும் ஒடுக்கப்பட்ட பொது மக்களைத் திரட்ட முடியும் என்பது நிதர்சனமானது![1]

---

1. கீர், ப. 305.

## (46)

# தீண்டத்தகாதோர் தமக்குத் தாமே முயல வேண்டும்

சமாத் தத்லாடி (முஜ்கோன்) தீண்டத்தகாத குடிகள் சார்பில் 1938 மார்ச் 19ஆம் நாள் தத்வாடி முஜ்கோனில் ஒரு பொதுக் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. டாக்டர் அம்பேத்கர், டாக்டர் ஜி.ச.பி. ஜோலங்கி (சுதந்திரத் தொழிலாளர் கட்சித் தலைவர்) இருவருக்கும் பணமுடிப்பு வழங்குவதற்காகக் கூட்டப்பட்ட கூட்டம் இது. விவித் விருத்தா ஆசிரியர் ஆர்.கே. டட்னிஸ் தலைமை வகித்தார். அவரும் எம்.என். தலபாடே,எஸ். டி. கெய்க்வாட், டாக்டர் அம்பேத்கர் ஆகியோரும் மராத்தி மொழியில் சொற்பொழிவாற்றினார்கள். கூட்டத்தில் 500 பேர் திரண்டனர். அதில் 100 பேர் பெண்கள்

தலைவர் டல்பாடேதும் எஸ். கெய்க்வாடும் பேசும்போது டாக்டர் அம்பேத்கர், டாக்டர் சோலங்கி இருவரும் தீண்டத் தகாதோர் பிரச்சினைக்காக புரிந்த பணியைப் பெரிதும் பாராட்டினார். பாராட்டுப் பத்திரமும், பண முடிப்பும் தலைவரால் டாக்டர் அம்பேத்கருக்கு அளிக்கப்பட்டன. நோய்வாய்பட்டிருந்ததால் டாக்டர் சோலங்கி கூட்டத்தில் கலந்து கொள்ளவில்லை.

பாராட்டுரைக்குப் பதிலுரைத்து டாக்டர் அம்பேத்கர் பேசும் போது எந்த தனிமனிதன் அல்லது அமைப்பின் உதவியையும் எதிர் பாராமல் தங்களைத் தாங்களே முன்னேற்றிக் கொள்ளத் தீண்டத் தகாதோர் பாடுபடவேண்டும் என்று கூறினார். காங்கிரஸ் அமைப்பும் தீண்டத்தகாதோருக்கு பாடுபடுவதாகத்தான் சொல்லிக் கொள்கிறார்கள். ஆனால் எதுவும் செய்வதில்லை. அத்தகைய அமைப்புகள் சொல்வது ஒன்றும் செய்வது ஒன்றுமாகத்தான் இருக்கிறது. எடுத்துக்காட்டாக மத்திய மாகாணங்களில் ஒரு தீண்டத்தகாத பெண்ணை முகம்மது என்பவன் கற்பழித்துவிட்டான். அவனுக்குத் தரப்பட்ட தண்டனையை ரத்து செய்துவிட்டார்கள் என்று உதாரணம் காட்டி அம்பேத்கர் பேசினார். பம்பாயில் தீண்டத்தகாதோருக்காக ஒரு கூடம் தேவை யென்றும் அதை தீர்மானிப்பதற்காக நிதியுதவி கோரியும் அவர் பேசினார். பிர்லா அல்லது பஜாஜ் போன்றவர்களிடமிருந்து

தேவையான பணத்தை வசூல் செய்வது சுலபம் என்றும் அப்படிச் செய்ய தாம் விரும்பவில்லை என்றும், இதனால் அவர்களுடைய கரங்கள் ஓங்கி விடும் என்றும் கூறினார். தமக்கு வழங்கப்பட்ட பண முடிப்பைச் சுதந்திரத் தொழிலாளர் கட்சி நிதிக்குச் சேர்ப்பிக்கிறேன் என்றும் அறிவித்தார். இரவு 10.30 மணிக்கு ஆரம்பித்த விழா 12.30 மணிக்கு அமைதியாக முடிந்தது.

கையொப்பம்
சூப்பிரண்டன்ட்,
எஸ். பி., சி. ஐ. டி.
22 மார்ச், 1938.

---

## (47)

# கௌரவமான வாழ்க்கை நடத்துங்கள்

*1938 மே 14 அன்று ரத்தினகிரி மாவட்டம் கங்கா வெளியில் கொங்கன் பஞ்ச் மஹால் மாநாட்டில் டாக்டர் அம்பேத்கர் பேசினார். மாநாட்டில் 1500 பேர் கூடியிருந்தார்கள். மகர்களின் வேதனை நிறைந்த வாழ்க்கைச் சூழலை அம்பேத்கர் நொந்து கொண்டார். கௌரவமான வாழ்க்கை நடத்தும் படியும் பொதுக் கிணறுகள், தர்ம சாலைகள், கல்வி ஆகியவை மீது உள்ள சட்ட ரீதியான உரிமைகளை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டு வாழுங்கள் என்றும் அறிவுரை வழங்கினார். எல்லோரும் சுதந்திரத் தொழிலாளர் கட்சியில் சேர வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். காங்கிரசில் பாமரரும் வணிகர்களும் ஆதிக்கம் செலுத்துகிறார்கள். அவர்களே உங்கள் வறுமைக்கு மூல காரணம். எனவே காங்கிரஸ் உங்களுக்கு எந்த நன்மையும் செய்யவில்லை என்றார். காங்கிரஸ் கட்சியை விட்டுப் பணக்காரர்களைத் துரத்துவதில் இருக்கும் ஆசை இந்தியாவிலிருந்து பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை வெளியேற்றுவதில் தமக்கு இல்லை என்றும் கூறினார். இறுதியாக கோட்டி அமைப்பு நீக்க மசோதாவை ஆதரிக்கும்படி மக்களை வற்புறுத்தினார்.*

*மகர் மாட்டன் மசோதா, கோட்டி அமைப்பு நீக்க மசோதா (இரண்டையும் சட்டமன்றத்தில் அம்பேத்கர் கொண்டு வந்திருந்தார்) ஆகியவற்றை ஆதரித்துத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.*

கையொப்பம்<br>
*சுப்பிரடண்டண்ட்*<br>
*எஸ். பி. சி. ஐ. டி.*<br>
*30 மே 1938*[1]

---

*1. பம்பாய் ரகசியங்களின் தொகுப்பு, 1938, மே, 21.*

# (48)

# ஒதுக்கப்பட்ட வகுப்பினரை அரசு லட்சியம் செய்யவில்லை

*1938 அக்டோபர் 22, 23 தேதிகளில் டாக்டர் அம்பேத்கர் அகமதாபாத்தில் தங்கியிருந்தார். அப்போது அங்குள்ள பிரேமாபாய் ஹாலில் உரை நிகழ்த்தினார்.*

*"நான் அரசியலில் காந்திஜிக்கு எதிரானவன். காரணம் காந்திஜி மீது எனக்கு நம்பிக்கை இல்லை. ஒடுக்கப்பட்ட மக்களுக்கு அவர் நன்மை செய்வார் என்று நான் நம்பவில்லை. காந்தி நேர்மை யானவராக இருந்திருந்தால் ஒடுக்கப்பட்ட வகுப்பினரை அமைச்ச ரவையில் சேர்த்துக் கொள்ளும்படி பம்பாய் மற்றும் மத்திய மாகாணங்களின் பிரதமர்களை ஏன் கேட்டுக் கொள்ளவில்லை?" பணக்காரர்களுக்கு வரி விதிக்கவும் காங்கிரஸ் தயாரில்லை. காங்கிரசுக்கு முந்திய அரசு சில பரிந்துரைகள் செய்தது. விவசாயம் செய்வதற்காகத் தரிசு நிலங்களை ஒடுக்கப்பட்ட மக்களுக்கு வழங்குதல், அவர்களுக்கு காவல்துறையில் வேலை வாய்ப்புத் தருதல், அரசு துறைகளில் குறிப்பிட்ட சதம் இட ஒதுக்கீடு கொடுத்தல் ஆகியவை அந்தப் பரிந்துரைகள். ஆனால் காங்கிரஸ் கட்சியோ ஒடுக்கப்பட்ட மக்களை லட்சியம் செய்யவில்லை.*[1]

---

*1. கீர், பக். 311 - 312.*

# (49)

# பொது எதிரியான அந்நிய ஏகாதிபத்தியத்தோடு போராட ஐக்கிய அரசியல் அமைப்பு தேவை

*சுவாமி சகஜானந்துக்கு டாக்டர் அம்பேத்கர் வரவேற்பு தந்தார். சகஜானந்த் அகில இந்தியக் கிசான் தலைவர். 1938 டிசம்பர் 25 ஞாயிற்றுக் கிழமை பிற்பகல் நடந்த வரவேற்புக்குத் தொழிலாளர் தலைவர்களும், புரட்சியாளர்களும் பத்திரிகையாளர்களும் வந்திருந் திருந்தார்கள்.*

*டாக்டர் அம்பேத்கர் ஆண்டுப் பிரகடனம் செய்தார்:*

*"கூட்டமைப்புக்கு எதிரான போராட்டத்தில் இந்திய தேசிய காங்கிரசுடன் சுதந்திரத் தொழிலாளர் கட்சியும் அதன் அதிகார பூர்வ பேச்சாளருமாகிய நானும் இணைய சம்மதம் என்று எழுதிக் கொடுக்கத் தயாராக இருக்கிறேன்."*

*"கூட்டமைப்புக்கு எதிர்ப்பு காட்டும் விதமாக காங்கிரஸ் அமைச்சர்கள் பதவி விலகுவதாக இருந்தால் சுதந்திரத் தொழிலாளர் கட்சி காலியான பதவியிடங்களை கைப்பற்றாது என்றும் அரசு நிர்வாகத்தை மற்றவர்கள் நடத்துவதை முழுப் பலத்தையும் திரட்டி எதிர்க்கும் என்றும் எழுதிக் கொடுக்கத் தயாராக இருக்கிறேன்."*

*"நாங்கள்தான் இந்தியாவின் பசி மிகுந்த நாய்கள் என்று நான் உணர்கிறேன். அடித்தட்டில் வசிப்பவர்கள், வறுமையில் வாடு பவர்கள், ஒடுக்கப்பட்டவர்கள், வேறு எந்த வகுப்பும் சந்திக்காத அநீதிகளை நாங்கள் சந்தித்திருக்கிறோம். ஒரு கணம் உயர் வகுப்பின ருக்கும் எங்களுக்குமுள்ள வேறுபாடுகளை ஒதுக்கி வைக்க நாங்கள் தயார். காங்கிரஸ் கட்சி மட்டும் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து உண்மையாகப் போராடத் தீர்மானித்துவிட்டால் எங்களுடைய சொந்த வகுப்புக் கோரிக்கைகளைத் தள்ளி வைத்துவிட்டு காங்கிரசில் சேரவும் தயாராக இருக்கிறேன்."*

இந்தப் பிரகடனம், சுவாமி சகஜானந்தா எல்லோரையும் காங்கிரசில் சேரும்படி வேண்டிக் கொண்ட போது அம்பேத்கர் செய்த பிரகடனம் ஆகும்.

காங்கிரஸ் ஓர் ஏகாதிபத்திய எதிர்ப்பு அமைப்பு; ஏகாதிபத்திய எதிர்ப்பு போராட்ட மரபுகள் கொண்டது. வேறு எந்த அரசியல் கட்சியும் இத்தகைய பாரம்பரியம் உள்ளதாக இல்லை. காங்கிரஸின் பெயரும் லட்சியங்களும் நாட்டில் உள்ள லட்சோப லட்சம் தொழிலாளர்களுக்கும் விவசாயிகளுக்கும் நன்றாகத் தெரிந்தவை. பொதுமக்களின் வர்க்க உணர்வு பலப்படுத்தப்பட்டால் அதைக் கொண்டு காங்கிரஸ் கட்சியின் இன்றைய தலைமையிலிருந்து கட்சியைக் காப்பாற்றிவிட முடியும் என்று முன்னதாக சுவாமி சகஜானந் பேசியிருந்தார்.

அதற்குப் பதிலாக டாக்டர் அம்பேத்கர் கீழ்க்கண்டவாறு பேசினார்: "பொது எதிரியான அந்நிய ஏகாதிபத்தியத்தை எதிர் கொள்ள நாட்டின் எல்லா வகுப்பினரும் ஓர் ஐக்கிய அரசியல் அமைப்பை நிறுவ வேண்டியதன் அவசியத்தை நான் புரிந்து கொள்கிறேன். பொது எதிரியோடு போராட வேண்டுமென்றால் எல்லா அரசியல் அமைப்புகளையும் தற்காலிகமாகக் கலைத்து விட வேண்டும் என்பதையும் ஏற்றுக் கொள்கிறேன். சுதந்திரத் தொழிலாளர் கட்சியைக் கலைத்து விடுகிறேன். என்னுடைய ஆதரவாளர்கள் அனைவரையும் இந்திய தேசிய காங்கிரஸிடம் சமர்ப்பித்து விடுகிறேன்."

"ஆனால் இன்றைய நிலவரப்படி ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தில் காங்கிரஸ் ஈடுபடவில்லை. அதற்குப் பதிலாக முதலாளிகள் மற்றும் ஆதிக்க சக்திகளின் நலன்களை முன்னேற்று வதற்காக அரசு அமைப்பு எந்திரத்தை காங்கிரஸ் பயன்படுத்தி வருகிறது. தொழிலாளர் மற்றும் விவசாயிகள் நலன்களைத் தியாகம் செய்வதன் மூலம் சுரண்டல்காரர்களைக் கொழுக்க வைத்துக் கொண்டிருக்கிறது."

"காங்கிரசின் நிர்வாக நடவடிக்கைகளுக்குப் பொது மக்களிடமிருந்து பாராட்டுகள் வருவதற்கு பதிலாக யாரை எதிர்த்து காங்கிரஸ் போராடுவதாக சொல்லிக் கொள்கிறதோ அந்த ஏகாதிபத்தியத்திடமிருந்துதான் பாராட்டுகள் குவிகின்றன."

"வகுப்பு நலன்களைக் காத்துக் கொள்வதிலும், சிதறிக்கிடக்கும் சக்திகளைச் சுரண்டுவதிலும்தான் காங்கிரஸ் சுறுசுறுப்பாக இயங்குகிறது. இந்தப் பின்னணியில் எங்கள் நலனைப் பாதுகாத்துக் கொள்ளவும் எங்கள் உரிமைகள் மற்றும் சுதந்திரங்கள் மீது காங்கிரசும் பிற அமைப்புகளும் ஆக்கிரமிப்பு செய்யாவண்ணம் எங்கள் சொந்த வகுப்பு அமைப்புகளை நிர்மாணித்துக் கொள்வது தான் எங்களது கடமையாக இருக்கிறது. இந்தக் கட்டத்தில் காங்கிரசோடு சேருவது எங்களைப் பொறுத்தவரை ஒரு தற்கொலை முயற்சியே"

காங்கிரசின் இன்றைய கொள்கைகளுக்கெல்லாம் பொறுப்பு அதன் தவறான தலைமைதான். காங்கிரசின் இன்றைய தலைமையை நீக்கிவிட்டு ஒரு வெகுஜனத் தலைமையை நியமித்தால் எல்லாம் சரியாகி விடும். பொது மக்கள் வர்க்க உணர்வு இல்லாதிருப்பதால் இத்தனை காலம் இது சாத்தியமில்லை என்பது சுவாமி சகஜானந்தின் மையக் கருத்தோட்டம்.

வர்க்க உணர்வைப் பொது மக்களுக்கு ஊட்ட வேண்டியது இன்று நமது தலையான கடமை. அப்படி ஊட்டினால் இன்றைய தலைமை தானாகக் கவிழ்த்துவிடும்.

டாக்டர் அம்பேத்கர் சொன்னார்: "காங்கிரசை நாம் கைப்பற்றினாலும் அதன் இன்றைய தலைமை இன்னொரு அமைப்பை ஏற்படுத்துவதை நம்மால் தடுக்க முடியாது. அப்படி ஏற்படுத்துவது நம்முடைய முயற்சிகளை மண் கவ்வச் செய்துவிடும்

அம்பேத்கர் கூறிய மறுப்புரைக்குப் பதிலளிக்கும் போது சுவாமிஜி சொன்னார்: காங்கிரஸ்தான் மக்களைத் தட்டி எழுப்புகிறது. அதன் மீதுதான் மக்கள் நம்பிக்கையும் விசுவாசமும் வைத்திருக் கிறார்கள்.

"இந்த நாட்டை முதலில் அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுவிக்க வேண்டும். அதற்காக எல்லாச் சக்திகளும் ஒன்றிணைந்து போராட வேண்டும். இந்தப் போராட்டத்தை நடத்துவதற்குக் கடந்த கால அனுபவங்களும் பாரம்பரியமும் உள்ள காங்கிரஸ் கட்சியால்தான் முடியும்"

இந்தக் கட்டத்தில்தான் டாக்டர் அம்பேத்கர் சுதந்திரத் தொழிலாளர் கட்சித் தலைவர் என்னும் தகுதியில் முதலில் நாம் மேற்கோள் காட்டிய பிரகடனம் கொடுத்தார். அதில், ஏகாதிபத்தியம் அல்லது கூட்டமைப்போடு போராட காங்கிரஸ் ஆரம்பிக்கும் எந்த இயக்கத்துக்கும் தானும் தனது கட்சியும் சேரத் தயார் என்றும் கூறினார். காங்கிரஸ், பதவி விலகினால் அந்தக் காலியிடத்துக்கு தம்முடைய கட்சி முன்நிற்காது என்றும் அரசு அமைப்பின் தொடர்ச்சிக்காகப் பிற சக்திகள் முயற்சி செய்தால் அவற்றையும் தடுக்கும் என்றும் பிரகடனம் செய்தார்.

இந்தப் பிரகடனத்தில் சுவாமி சகஜாநந்த் பரிபூரணமாக திருப்தி அடைந்தார். திருப்தியுற்ற பிறகு அவர் சொன்னார்: "இன்றைய காங்கிரஸ் தலைவர்கள் என்ன வேண்டுமானாலும் செய்துவிட்டுப் போகட்டும். ஏகாதிபத்தியத்திற்கு எதிரான போராட்டம் வெகு அண்மையில் வந்துவிட்டது".*

---

* பம்பாய் கிரானிக்கள், 27 - 12 - 1938.

## (50)

# உங்கள் குறைகளை எனக்குத் தெரிவியுங்கள்

*1938 டிசம்பர் 30 கிழக்கு கண்டேஷ் மாவட்டத்தில் மகரன் பூரில் ஒரு மாநாட்டுக்குத் தலைமை வகித்தார் டாக்டர் அம்பேத்கர். அதில் அவுரங்ரபாத் மாவட்டத்திலிருந்து 200 பேர் கலந்துக் கொண்டார்கள். அவுரங்காபாத் நிஜாம் ஆதிக்கத்திலிருந்தது. அங்கே மாநாடு கூட்ட அனுமதியில்லை. அதனால் மகரன் பூரில் அந்த மாநாடு நடந்தது. அதில் மஹாராஷ்ரா மாகாணத்தில் தீண்டத்தகாதோர் மீது முஸ்லீம்கள் காட்டிய அணுகுமுறை கண்டிக்கப்பட்டது. முதன்மைப் பேச்சாளரான டாக்டர் அம்பேத்கர் உங்கள் குறைகளை எனக்கு எழுதி அனுப்புங்கள் என்று கேட்டுக் கொண்டார். சுதந்திரத் தொழிலாளர் கட்சியை மாகாணத்தில் தொடங்கவேண்டும் என்றும் வேண்டுகோள் விடுத்தார்.*

*மாநாட்டில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:*

*1. மகர்களுக்கு வாட்டன் நிலத்தை அளிப்பது.*

*2. தீண்டத்தகாதோருக்குச் சட்டமன்றத்தில் இட ஒதுக்கீடு தருவது.*

*3. ஒவ்வொரு ஆண்டும் ஏப்ரல் 14 ஆம் நாளை டாக்டர் அம்பேத்கர் தினமாகக் கொண்டாடுவது.*

*4. இந்து மகா சபை, ஆரிய சமாஜம், காங்கிரஸ் போன்ற இயக்கங்களில் நம்பிக்கையில்லாத காரணத்தால் தீண்டத்தகாதோர் இந்து மதத்தை விட்டு நீங்க வேண்டும் என்று டாக்டர் அம்பேத்கர் கொண்டு வந்த மத மாற்றப் பிரகடனத்தை ஆதரிப்பது.*[1]

---

*1. பம்பாய் ரகசியங்களின் தொகுப்பு, 14 - 01 - 1939.*

# (51)

# உயர்ந்த ஒழுக்கமுள்ள மனிதர்களாக விளங்குங்கள்

*தொழிலாளர் வேலை நிறுத்தம் பற்றிய அரசு விசாரணைக்குழு நவம்பர் 7 ஆம் தேதி தொடங்கியது. அதற்குப் பிறகு, முதல் முதலாக அந்த விசாரணைக்குழு முன்னர் சமர்ப்பிக்கப்பட்ட சான்றுகளின் இயல்பு குறித்த நேடியான தாக்குதல் சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் தலைவர் டாக்டர் அம்பேத்கரால் தொடுக்கப்பட்டது. அந்த முதல் தாக்குதலை அவர் தொடுத்த இடம் காம்கர் மைதானம். நாள் 1939 - ஜனவரி - 8 ஞாயிற்றுக்கிழமை. அன்று கட்சியின் தொண்டர் படையின் ஆண்டு அணிவகுப்பு நடைபெற்றது. அதில் 20,000 உறுப்பினர்கள் கலந்து கொண்டார்கள். 2500 சீருடையணிந்த செயல்வீரர்கள் திரண்டார்கள்.*

*நிகழ்ச்சியில் பேசும் போது டாக்டர் அம்பேத்கர் குறிப் பிட்டார்: "இந்தக் குழுவின் முன்பு சமர்ப்பிக்கப்பட்ட சான்றா தாரங்கள் பற்றிய விவரங்களுக்குள் நான் போக விரும்பவில்லை. ஏனெனில் குழு இன்னும் அமர்வில் இருக்கிறது. அவற்றைப் பற்றிக் கருத்து தெரிவிப்பது மன்ற அவமதிப்பு ஆகிவிடும். ஆனால் குழுவின் முன்பு சமர்ப்பிக்கப்படும் நமது சுதந்திரத் தொழிலாளர்கட்சிக்கு எதிரான விஷமத்தனமான பொய்க் குற்றச்சாட்டுகளைப் பற்றியும் நமது செயல் வீரர் படையின் இயல்பு மற்றும் மரபுகள் பற்றியும் நான் வெளியுலகத்துக்குத் தெரிவித்தாக வேண்டும்.*

*சில நிகழ்வுகளை மேற்கோள் காட்டுகிறேன். அவை முழுக்க முழுக்க பாராட்டுரைகள்; செயல்வீரர்கள் மீதான பாராட்டுரைகள்; அவற்றை வழங்கியவர்கள் நமது நண்பர்களோ அல்லது அனுதாபி களோ அல்ல; காங்கிரஸ் எஜமானர்களே வழங்கிய பாராட்டுகள் அவை.*

*திருவாளர்கள் கெர், சர்தார் படேல் ஆகியோர் செயல்வீரர்கள் குறித்து மொழிந்த பாராட்டுகளை மேற்கோள்காட்டிய பிறகு*

அம்பேத்கர் தொடர்ந்தார் "நமது செயல் வீரர்கள் உறுப்பினர்களில் பெரும்பான்மையினர் பல்லாண்டுகள் ராணுவத்தில் பணி புரிந்த வர்கள். சட்டத்தை மீறிக் கலகங்கள் செய்யும் ரௌடிகள் அல்ல. பொறுப்புகள் என்னவென்று அவர்களுக்குத் தெரியும். அவர்கள் கட்டுப்பாடானவர்கள். நன்நடத்தை உள்ளவர்கள்; குழுவின் முன்பு சாட்சிகள் குறிப்பிட்டுள்ள அவமானகரமான செயல்களில் ஈடுபட்டவர்களாக அவர்கள் இருக்க முடியாது."

செயல்வீரர்கள் முன்பு அம்பேத்கர் பேசினார்: "இந்தச் செயல் வீரர் படை ஒடுக்கப்பட்ட உறுப்பினர்களால் அவர்களது மனித உரிமைகளை நிலை நாட்டும் போராட்டத்தின் காரணமாகத் தோற்றுவிக்கப்பட்டதாகும். இந்தப் போராட்டத்தின் விளைவுதான் மகர் சத்தியாகிரகம்."

"உங்களது கடமைகளை நீங்கள் செவ்வனே நிறைவேற்ற வேண்டுமானால் உயர்ந்த ஒழுக்கமுள்ள மனிதர்களாக நீங்கள் இருக்கவேண்டும். சமுதாயம் முழுமையும் உங்களை மனித குலத்தின் சிறந்த பிரதிநிதிகளாக கருத வேண்டும். நீங்கள் ஒரு கூட்டமோ, கும்பலோ அல்ல. கும்பலுக்கும் போர்ப்படைக்கும் வித்தியாசம் உண்டு. நன்றாக பயிற்சி தரப்பட்ட உயர்ந்த கட்டுப்பாடு கொண்ட உங்களைப் போன்ற சிலர் இருந்தால் போதும். ஆயிரக்கணக்கான மக்கள் கூட்டத்தைக் கட்டுப்படுத்திவிட முடியும். உங்களுக்கும் சாதாரண கும்பலுக்கும் உள்ள வித்தியாசம் அதுதான்"

இளைஞர்கள் எல்லோரும் செயல்வீரர் படையில் சேர்ந்து அதன் பலத்தை அதிகரிக்க வேண்டுமென்று உளமாற வேண்டிக் கொண்டு டாக்டர் அம்பேத்கர் தமது பேச்சை முடித்துக் கொண்டார்.

செயல்வீரர் படையின் பொதுத் தளபதியின் சார்பாக திரு. டி.வி. பரதான் பேசினார். படையின் கிளைகள் மற்ற மாகாணங் களிலும் பம்பாய் மாகாணத்தைப் போலவே ஆரம்பிக்கப்படும் என்னும் நம்பிக்கையை தமது பேச்சில் தெரிவித்தார்.[1]

---

1. பம்பாய் கிராணிக்கிள், 10 - 1 - 1939.

# (52)

# இந்திய அரசியல் பரிணாமத்தின் லட்சியம் என்ன?

## கூட்டமைப்பை டாக்டர் அம்பேத்கர் சாடுகிறார்

*"சுதந்திரத் தொழிலாளர் கட்சித் தலைவர் டாக்டர் அம்பேத்கர் 1939 ஜனவது 29 அன்று கோகலே ஸ்கூல் ஆப் எக்னாமிக்சில் மூன்று மணி நேரம் நீண்ட விரிவுரையாற்றினார். விரிவுரையின் தலைப்பு, ஞாயிறு இரவில் புனா". அதில் கூட்டமைப்புத் திட்டம் பற்றி அவர் ஆய்வு செய்தார்.*

*கூட்டமைப்புத் திட்டம் நாட்டைப் பூரண சுதந்திரத்திற்கு வழிநடத்துவதற்கு மாறாக பெரும் தடைக்கல்லாக மாறிவிடும். அதனால் டொமினியன் தகுதியைக் கூட நாம் பெறமுடியாமல் போய்விடும்*

*பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களின் கூட்டமைப்பே நமக்குத் தேவையானது என்று டாக்டர் அம்பேத்கர் பேசினார்.*

*மாநிலங்களைப் பொறுத்தவரை சிறிய மாநிலங்களின் ஆட்சியாளர்களுக்கு ஒய்வூதியம் கொடுத்து அவர்களை வீட்டுக்கு அனுப்பிவிடவேண்டும். பெரிய மாநிலங்களின் தலைவர்கள் சில சூழ்நிலையில் செயல்பட அனுமதிக்கப்படலாம்.*

*கூட்டமைப்புத் திட்டம் நமது தேசிய அமைப்பின் பெரும் பான்மை அங்கம் வகிக்கும் சுதந்திரமான மனிதர்களையும் ஏழை எளிய மக்களையும் கருத்தில் எடுத்துக் கொள்ளவேயில்லை என்று அவர் சொன்னார். அவர் பேச்சில் சாரம் வருமாறு:-*

*கூட்டமைப்பின் உண்மையான பண்பு பற்றி ஒரு நிறைவான கருத்து நிலையை டாக்டர் அம்பேத்கர் முன்வைத்தார் நமது கூட்டமைப்பையும் பிற நாடுகளின் கூட்டமைப்புகளையும் அவர் ஒப்பிட்டார். மூன்று தளங்களில் அந்த ஒப்பீட்டைச் செய்தார்*

1. கூட்டமைப்புகளின் அடிப்படை அலகுகள் யாவை? 2. அவற்றுக்கும், கூட்டமைப்புக்கும் உள்ள உறவு என்ன? 3. கூட்டமைப்பின் இறை யாண்மைக்குக் கீழ் கொண்டு வரப்படும் பொது மக்களுக்கும் கூட்டமைப்புக்கும் உள்ள உறவு என்ன?

அவர் குறிப்பிட்டார்: "கூட்டமைப்பு என்பது பொதுக் குடியுரிமை உள்ள ஒரு பொது முழுமை ஆகாது. மாறாக அடிப் படையில் அந்நிய மாகாணங்களாக உள்ளவற்றின் தொகுப்பே கூட்டமைப்பு என அழைக்கப்படுகிறது. இந்தக் கூட்டமைப்பு உண்மையில் ஒரு மகா கூட்டமைப்பு; இதன் சிறப்பியல்புகள் அப்படித்தான் விளங்குகின்றன. இதைக் கூட்டமைப்பு என்றுதான் அழைக்க வேண்டும் என்றால் இது கூட்டமைப்புகளிலேயே ஒரு ராட்சதக் கூட்டமைப்பாக பேரழிவுக்கு கொண்டு செல்லும் கூட்டமைப்பாக எனக்குத் தென்படுகிறது"

இந்த கூட்டமைப்புத் திட்டத்தை ஏற்பதற்காகச் சில காரணங்கள் சொல்லப்படுகின்றன. அவற்றை அம்பேத்கர் அலசினார்.

1. கூட்டமைப்புத் திட்டம் இந்தியாவை இணைக்க உதவுகிறது.

2. இத்திட்டத்தால் பிரிட்டிஷ் இந்தியா, இந்திய இந்தியா மீது தாக்கம் செலுத்த முடியும்; இங்கிருக்கும் ஏதேச்சதிகாரத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக பிரிட்டிஷ் இந்தியாவில் இருப்பது போன்ற ஜனநாயகமாக மாற்றி அமைக்க முடியும்.

3. இத்திட்டத்தின் மூலம் ஒரு பொறுப்பான அரசு நிருவப்படும்.

முதல் கருத்துநிலை குறித்து டாக்டர் அம்பேத்கர் சொன்னார் - இந்தியா என்ற சொல்லால் குறிப்பிடப்படும் எல்லாப் பகுதிகளும் கூட்டமைப்பு திட்டத்தின் கீழ் கொண்டு வரப்படவில்லை. கூட்டமைப்புச் சட்டத்தின் பட்டியல் (1) பிரிவு 6(1) பகுதியை அவர் படித்துக் காட்டினார். அந்த பிரிவின் படி ஒவ்வொரு மாகாணமும் கூட்டமைப்பில் சேரலாம் என்று அதில் குறிப்பிடவில்லை. ஆகவே 498 மாகாணங்கள் கூட்டமைப்புக்கு வெளியில்தான் இருக்கப் போகின்றன. இவை ஏன் இப்படி விலக்கி வைக்கப்பட வேண்டும்?. இவற்றின் நிலை என்ன? கதி என்ன? என்று கேட்டார் டாக்டர் அம்பேத்கர்.

இரண்டாம் கருத்து நிலை பற்றிப் பேசும்போது, ஒரு பக்கம் பிரிட்டிஷ் இந்திய விவகாரங்களைக் கட்டுப்படுத்தும் உரிமை மாகாணங்களுக்கு சட்ட நீதியாக தரப்படுகிறது. அதே சட்டப்படி இந்திய மாகாணங்களின் மீது பிரிட்டிஷ் இந்தியா தாக்கம் செலுத்து வதும் தடைசெய்யப்படுகிறது. இத்தகைய கூட்டமைப்பு திட்டம் எந்த வகையிலும் உதவிகரமாக இருக்காது. இந்திய மாகாணங்களை ஜனநாயகப்படுத்தும் பிரிட்டிஷ் இந்திய முயற்சிக்கு இந்தச் சட்டம் இடையூறாகவே மாறும். அத்துடன் பிரிட்டிஷ் இந்தியாவில் ஜன நாயகத்தை அழிக்கும் முயற்சியில் இறங்கியுள்ள இந்திய மாகாண அரசுகளுக்கு இந்தத் திட்டம் \ சட்ட உதவி செய்யும்.

மூன்றாம் கருத்து நிலை குறித்து அவர் கருத்து: இத்திட்டத்தின் படி பாதுகாப்பு, அயல் உறவுகள் பற்றிய பொறுப்புகள் கூட்டமைப் புக்கு இல்லை. முன்பே மாகாணங்களில் நடைபெற்று வரும் இரட்டை ஆட்சி முறையில் இருக்கும் பொறுப்புகள் கூட இத் திட்டத்தின் கீழ் இருக்கப் போவதில்லை. ஆக எந்தக் கோணத்தில் இந்த கூட்டமைப்பின் திட்டத்தை அலசினாலும் சரி இதற்கு உண்மையான பொறுப்பு இருப்பதாகத் தெரியவில்லை.

கூட்டமைப்பின் அவலம் குறித்து மேலும் மேலும் விவரங் களையும் அதன் குறைபாடுகளையும் சுட்டிக் காட்டிய அவர் இந்த திட்டத்திலுள்ள ஓட்டை உடைசல்கள் எல்லோருக்கும் தெரிந் திருக்கின்றன என்றும் சொன்னார்.

கருத்து வேறுபாடு எங்கே இருக்கின்றது என்றால் திட்டம் பற்றி நாம் என்ன செய்வது என்னும் கேள்விக்குப் பதிலளிக்காமல் இந்தக் கேள்வியை தள்ளிப் போடலாம் - ஆனால் தவிர்க்க முடியாது. சரி எந்தெந்த வழிகளில் அரசு அமைப்புச் சட்டத்தில் திருத்தங்கள் கொண்டு வரலாம்? இந்த விஷயத்தில் திரு. சத்தியமூர்த்தி வெளியிட்ட அறிக்கையை ஆரம்பமாக வைத்து அம்பேத்கர் பேச ஆரம்பித்தார். சத்தியமூர்த்தி, கூட்டமைப்புத் திட்டத்தில் காங்கிரஸ் கட்சிக்கு ஏற்புடையதாக ஒரு குறைந்த பட்சத் திருத்தப் பட்டியலை வெளி யிட்டிருந்தார். கூட்டமைப்புத் திட்டத்தை நாம் மறுத்து விட அதில் சத்தியமூர்த்தி குறிப்பிட்ட சில திருத்தங்களைச் செய்து விட்டால் நம்முடைய மனநிலை மாறி அதை ஏற்றுக்கொண்டு விடுவோமா என்றும் டாக்டர் அம்பேத்கர் கேட்டார்.

சத்தியமூர்த்தி தெரிவித்த எல்லாக் கோரிக்கைகளையும் ஏற்றுக் கொள்ள பிரிட்டிஷ் நாடாளுமன்றம் முன்வந்தாலும் கூட, கூட்டமைப்புத் திட்டத்தை நாம் ஏற்றுக் கொள்ள முடியாது. ஏன் என்றால் நாம் எழுப்புகிற அடிப்படைக் கேள்வி, இந்தக் கூட்டமைப்புத் திட்டத்தின் மூலம் இந்தியாவின் லட்சிய இலக்கை எட்டவே முடியாது என்பதுதான். இந்த அணுகுமுறையோடுதான் திட்டத்தை நாம் பரிசீலிக்க வேண்டும். இந்திய அரசியல் பரிணாமத்தின் இலக்கு என்ன என்று டாக்டர் அம்பேத்கர் கேட்டார்.

கூட்டமைப்பின் அரசியல் சட்டத்தின் கீழ் டொமினியன் தகுதி கூட இந்தியாவுக்குக் கிடைக்காது. காரணம் அந்த அரசமைப்பு வரையறுக்கப்பட்டது, வளைந்து கொடுக்காதது. அதை மாற்றும் அதிகாரம் நாடாளுமன்றத்துக்குக் கூட இல்லை. கூட்டமைப்புத் திட்டதை அடியோடு அழித்தால் ஒழிய, கூட்டமைப்பு அரசியல் சட்டத்தை யாராலும் மாற்ற முடியாது என்பது அவர் கருத்து.

கூட்டமைப்பு அரசியல் சட்டம் சுயேச்சையான மாகாணங்களை உருவாக்கும் என்பதால் அவற்றுக்கிடையே ஒரு பந்தத்தை ஏற்படுத்த வேண்டும் என்று ஒரு விவாதம் வைக்கப்படுகிறது. அது குறித்துப் பேசுகையில் ஒரு மத்திய அரசாங்கம் தேவையென்றும் மத்திய அரசாங்கம் இல்லாத நிலையில் சுயேச்சை அதிகாரம் அராஜகத்திற்குக் கொண்டு சென்றுவிடும் என்றும் அம்பேத்கர் ஒப்புக்கொண்டார்.

இந்த வாதம் அதையும் மீறி அகில இந்தியாவுக்கும் ஒரு மத்திய அரசாங்கத்தை நியாயப்படுத்துகிறது என்று தாம் கருதுவதாகச் சொன்னார். அவர் கருத்தில் சுயேச்சை மாகாணங்களின் உருவாக்கத்திற்கு ஒட்டு மொத்தமான முழு இந்தியாவுக்கும் ஒரு மத்திய அரசாங்கம் தேவையில்லை. மாறாக பிரிட்டிஷ் இந்தியாவுக்கான மத்தியஅரசாங்கம் கூட்டாட்சி அம்சங்களை கொண்டிருக்க வேண்டிய அவசியம் உண்டு. இதில் ஏன் மாகாணங்கள் இருக்க வேண்டும்? 1935 ஆம் ஆண்டு இந்திய அரசியமைப்பு சட்டம் இரண்டு விதமான கூட்டமைப்புகளை நிறுவியது. (1) பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களின் கூட்டமைப்பு (2) அனைத்திந்தியக் கூட்டமைப்பு, இவ்விரண்டு அமைப்புகளிக்குமிடையே சட்டம் மற்றும் நிதி அதிகாரங்களில் எந்த வேறுபாடும் இல்லை. ஆனால் ஒரே ஒரு மிக முக்கியமான வேறுபாடு உண்டு.

பிரிட்டிஷ் இந்தியக் கூட்டமைப்பு மட்டுமே இருந்த காலத்தில் மத்தியில் எந்தப் பொறுப்புள்ள அதிகாரபீடமும் இல்லை. இதற்கு அனைத்திந்தியக் கூட்டமைப்பு ஒன்று இல்லாததே அதற்குக் காரணம். பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் பொறுப்பு ஏற்பட வேண்டு மானால் மாகாணங்கள் அதன் கட்டுப்பாட்டுக்குக் கீழ் வர வேண்டும் என்பது நிபந்தனை, அப்படிப்பட்ட நிபந்தனை ஏன் என்பது அம்பேத்கரின் கேள்வி. அதன் நோக்கம் என்னவென்றால் பிரிட்டிஷ் இந்தியாவில் ஜனநாயக எழுச்சி ஏற்படுவதைத் தடை செய்யும் வண்ணம் ஏகாதிபத்திய நலன்களுக்கு ஆதரவாக சுதேசி மன்னர்களைப் பயன்படுத்துவதே அதன் நோக்கம் என்றும் அம்பேத்கர் விளக்கினார். கூட்டமைப்புக்குள் அனுமதி கிடைக்க என்ன விலை கொடுத்தார்கள் பாருங்கள் என்று இன்னொரு கேள்வியையும் கேட்டார்.

சுதேசி மன்னர்களின் கூட்டமைப்பில் இணைவதற்காக விட்டுக் கொடுத்த உரிமைகள் அளவுக்கு மத்தியப் பொறுப்புகளை ஏற்று திறம்பட நிர்வகிக்க பிரிட்டிஷ் இந்தியாவால் முடியவில்லை. அத்துடன் டொமினியன் தகுதிக்கான கோரிக்கை உரிமையையும் அது இழந்து விட்டது.

கூட்டமைப்புக்கு இரண்டு கூறுகள் உண்டு என்று முன்பே பார்த்தோம். அவற்றில் பிரிட்டிஷ் இந்தியா முற்போக்கான பகுதியாக இருந்தது. மாகாண அரசுகள் அத்தனை முற்போக்காக இல்லை. இரண்டையும்இணைத்து ஒரே திசை வழியில் செலுத்த வேண்டும். பிற்போக்கான மாகாணங்கள் முற்போக்கான பகுதிகளுக்கு ஒத்து வரும்படி செய்ய வேண்டும். இந்தப் பணியையும் கூட்டமைப்பால் சரிவரச் செய்ய இயலவில்லை.

கூட்டமைப்பை இன்னும் பல கோணங்களில் - சுதேசி மன்னர்களின் கோணத்தில், இந்து முஸ்லீம் கோணத்தில் என்று பலவிதமாக டாக்டர் அம்பேத்கர் அலசினார். அவர் சொன்னார்: சுதேசி மன்னர்களின் நலன்கள் இரு வகை 1) பிரிட்டிஷ் அரசின் பரிபூரண இறையாண்மையிலிருந்து தப்பிக்க அவர்கள் விரும்பி னார்கள், 2)அதே சமயம் பிரிட்டிஷ் அரசின் அதிகாரத்திற்கு அதிகப் பட்சமாகக் கட்டுப்படவும் அவர்கள் விரும்பவில்லை.

கூட்டமைப்பு விஷயத்தில் சுதேசி மன்னர்களுக்கு இரண்டு பிரச்சினைகள். பிரிட்டிஷ் அரசின் பரிபூரண இறையாண்மை என்னும் கொடுங்கோன்மையிலிருந்து தப்பிப்பதற்கு இந்த கூட்டமைப்புத் தத்துவம் எத்தனை தூரம் அவர்களுக்கு உதவும்? இந்தத் தத்துவத்தால் அவர்களது சொந்த உள்நாட்டு அரசு அதிகாரங்கள் எத்தனை தூரம் பறிக்கப்படும்? கொடுங்கோன்மையிலிருந்து அதிகப்பட்சமாக தப்பிப்பது - உள்நாட்டு அரசு அதிகாரங்களைக் குறைந்தபட்சமாக விட்டுக் கொடுப்பது என்பது அவர்களின் நிலைப்பாடு.

இவற்றுடன் வேறுசில பார்வைகளும் உண்டு என்று அம்பேத்கர் குறிப்பிட்டார். சுதந்திரமான மனிதன், ஏழை எளிய மனிதன் என்னும் இவர்களின் கோணங்களிலிருந்து கூட்டமைப்பை ஆராய வேண்டும் என்றார். கூட்டமைப்பு திட்டம் இவர்களை எல்லாம் கணக்கில் எடுத்துக் கொள்ளவேயில்லை. ஓர் அரசு என்றால் அதன் பொது மக்கள்தான் அதற்கு எல்லாமே; அவர்கள் நலனை ஒட்டு மொத்தமாகக் கூட்டமைப்பு திட்டம் புறக்கணித்துவிட்டது என்றும் சாடினார்.

கூட்டமைப்புத் திட்டம் முழுக்க முழுக்க செயல்படுத்தப் படுமானால் அது சுதந்திர மனிதனுக்குப் பெரும் தலைவலியாகப் போய் விடும்; ஏழை எளியவர்களுக்கு பெரும் இடையூறாகப் போய்விடும் என்றும் அவர் கருத்து தெரிவித்தார்.

முடிவுரையில் அவர் சொன்னார்: இந்தத் தலைப்பு ஆழ்ந்து அகன்றது. அதனால் நானும் அதிக பட்சமாக பேச வேண்டியிருந்தது. ரானடே, திலகர், அகார்சர், கோகலே, தாதாபாய், பேரோஷா மேத்தா, சுரேந்திரநாத் பானர்ஜி ஆகியோர் இந்திய மக்களை வழி நடத்திய போது இத்தகைய பிரச்சினைகளைப் பற்றி மிகவும் சுருக்கமாக விவாதித்தார்கள். அந்தக் காலத்திற்கு நாம் போக வேண்டாம், அவர்கள் காலம் வேறு. அவர்கள் எல்லாருமே ஒன்றாக உடை உடுத்திக் கொண்ட, ஒன்றாக படித்த அரசியல் வாதிகள். கல்வி, அனுபவம் இரண்டை மட்டுமே சார்ந்திருந்தவர்கள்.[1]

---

1. பாம்பே கிரானிக்கள், 31 - 01 - 1939.

# (53)

# எந்த வடிவத்திலும் கூட்டமைப்பை ஏற்பதற்குக் காந்தி தயார்

*சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் தலைவர் டாக்டர் அம்பேத்கர் 1939 பிப்ரவரி 12 அன்று பீஜப்பூரில் மாவட்ட அரிஜன மாநாட்டுக்குத் தலைமை வகித்துப் பேசினார்.*

"கூட்டமைப்புப் பிரச்சனையில் திரு. போஸை, திரு. காந்தி ஏன் எதிர்க்கிறார் என்று எனக்குப் புரியவில்லை. இரண்டு விதமாக காந்தியின் நிலைப்பாட்டை எடுத்துக் கொள்ளலாம். ஒன்று- நிபந்தனையற்ற முறையில் கூட்டமைப்பை ஏற்க அவர் தயராகி விட்டிருக்கலாம். இரண்டு - தம்முடைய அகிம்சை மற்றும் சத்தியாக்கிரக ஆயுதங்கள் மீது அவருக்கு நம்பிக்கை குறைந்து போயிருக்கலாம், அதனால் கூட்டமைப்பை எந்த வடிவத்திலும் ஏற்க அவர் சித்தமாகி விட்டிருக்கலாம்.

கூட்டமைப்பு எந்த விதத்திலும் நிலைமையைச் சரிசெய்யாது, குழப்பமே மிஞ்சும். காங்கிரஸில் நாணயம் என்பது கொஞ்சங்கூட இல்லை. அந்தக் கட்சி ஒரு குறிப்பிட்ட சிலரின் கைப்பாவையாக இயங்கி வருகிறது. திரு. காந்தியைப் பற்றி பொய்யான புகழுரைகள் சொல்லத் தயாராக இருந்தால், எனக்கு காங்கிரஸ் கட்சியில் மிக உயர்ந்த இடத்தை அளித்திருப்பார்கள். எனக்கு நன்றாகத் தெரியும் - காங்கிரஸின் இன்றைய கொள்கை பூரண சுயராஜ்யத்திற்கு வழி வகுக்கப் போவதேயில்லை. எனக்கும் காங்கிரசில் சேர விருப்ப மில்லை. சென்ற சட்டமன்றத் தேர்தலுக்கு சில நாட்கள் முன்பு நான் ஒரு தனிக்கட்சியை ஆரம்பித்தேன். அதற்குச் சுதந்திரத் தொழிலாளர் கட்சி என்று பெயரிட்டேன். நாளுக்கு நாள் அது வலிமை பெற்று வருகிறது. அதன் கிளையொன்றை நிறுவ வேண்டும் என்றுதான் பீஜப்பூருக்கு நான் வந்திருக்கிறேன்.[1]

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா, 15 - 02 - 1939.

# (54)

# பயங்கரமான வாழ்விலிருந்து உங்கள் குழந்தைகளைக் காப்பாற்றுங்கள்

பம்பாய் செம்பூர் பகுதியில்1939 பிப்ர்வரி 26 ஞாயிறு மாலை குச்சரப்பட்டி தொழிலாளர்கள் மத்தியில் சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் தலைவர் டாக்டர் அம்பேத்கர் பேசினார். கட்சியின் தலைமையகக் கட்டிட நிதியாக ரூபாய் 1001/ - நன்கொடை அச்சமயம் அவரிடம் தரப்பட்டது.

டாக்டர் அம்பேத்கர் பேசினார்:

கடந்த 10 ஆண்டுகளில் ஒடுக்கப்பட்ட வகுப்பினரிடையே சமூக உளவியல் பார்வைகளில் குறிப்பிடத்தக்க மாற்றம் நிகழ்ந்துள்ளது.

கூட்டத்தினரை நேரிடையாக விளித்து அவர் பேசினார். பம்பாயில் பதின்மூன்று லட்சம் மக்கள் அழுக்கிலும், குப்பையிலும் வாழ்கிறார்கள். அவர்கள் விதியை மாற்ற நியமிக்கப்பட்டிருக்கும் மக்கள் நீங்கள். உங்கள் வாழ்வும் அத்தகைய அவலத்துக்கிடையே தான் செலவிடப்பட்டுக் கொண்டிருக்கிறது.

உங்கள் குழந்தைகளாவது இந்த அவல வாழ்வில் இருந்து தப்பித்தாக வேண்டும். உங்களைக் காட்டிலும் நல்ல படிப்பும் நல்ல மகிழ்ச்சிகரமான, வசதியான, நாகரிகமான வாழ்வும் அவர்களுக்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டியது இங்கே கூடியுள்ள ஒவ்வொருவரின் கடமையாகும்.

சுதந்திரத் தொழிலாளர் கட்சி கட்டிட நிதிக்கு நன்கொடை தந்த அனைவருக்கும் நன்றி. செம்பூர் மக்களை இந்த விஷயத்தில் மற்ற தொழிலாளி வர்க்க மையங்களும் பின்பற்றும் என நான் எதிர் பார்க்கிறேன். அப்போதுதான் கட்சிக் கட்டிடப் பணியைக் கூடிய விரைவில் தொடங்க முடியும்.

டாக்டர் அம்பேத்கருக்கு முன்பு கூட்டத்தில் பேசிய பேச்சாளர்கள், திருவாளர்கள் ஜி.எம். யாதவ், கல்லூரி முதல்வர் தோண்டே கெய்க்வாட், (பம்பாய் சட்டமன்ற ஒடுக்கப்பட்ட வகுப்பினர் பிரதிநிதி) டாக்டர் தேவருக்கர் ஆகியோர் ஆவர். கூட்டத்திற்கு டி.வி. பிரதான் தலைமை வகித்தார்.[1]

---

1. பாம்பே கிரானிக்கிள், 28 - 02 - 1939.

# (55)

## நான் முழு சமூகத்துக்கும்தான் பணியாற்றினேன், ஒரு குறிப்பிட்ட பிரிவினருக்கு மட்டுமல்ல

*1939 ஆம் ஆண்டு ஜூலை 2ஆம் தேதி, பம்பாய் பரேலிலுள்ள ஆர். எம். பட் பள்ளிக்கூடத்தில் நடந்த ரோகிதாஸ் சிக்சன் சமாஜ் கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் உரையாற்றும் போது பின்வருமாறு சொன்னார்:*

*தாழ்த்தப்பட்ட சாதியினரிடையில் உள்சாதிகள் ஒழிய வேண்டும் என்பதற்காகப் பாடுபடுவதாக அவர் சொன்னார். திருமணம் என்பதை வலுக்கட்டாயமாக முடிவு செய்ய முடியாது என்றார் அவர். மஹர் வகுப்பைச் சேர்ந்த ஒரு பெண்ணை, சமார் வகைப்பையோ, மாங் வகுப்பையோ சேர்ந்த ஒரு வாலிபனுக்கு, மந்திரக் கோல் ஒன்றை ஆட்டுவதன் மூலம் மணம் செய்து வைத்துவிட முடியாது என்று கூறினார். அரசியல் பிரச்சினை பற்றிக் குறிப்பிட்ட டாக்டர் அம்பேத்கர், அவருடைய கட்சிக்கு எதிராக சில தாழ்த்தப்பட்ட வகுப்புத் தலைவர்களைத் தூண்டிவிட்டு கட்சியில் பிளவு ஏற்படுத்த காங்கிரஸ் தலைவர்கள் தந்திரமாக வேலை செய்கின்றனர் என்றார். காங்கிரசின் பொய்ப் பிரச்சாரத்தை நம்ப வேண்டாம் என்று தமது கட்சியினரை அவர் கேட்டுக் கொண்டார். அரிஜனத் தலைவர்களுக்கு காங்கிரஸ் தலைவர்கள் ஆசை வார்த்தை காட்டுகிறார்கள், ஏனென்றால் அவர் காங்கிரஸ் கூடாரத்தில் இல்லை. சுதந்திரத் தொழிற்கட்சியில் பெரும்பகுதியினர் மஹர் வகுப்பினர் என்பது உண்மையே என்று அவர் குறிப்பிட்டார். தாழ்த்தப்பட்ட வகுப்பினரில் மஹர்கள் பெரும்பான்மையாக இருப்பது தனது குற்றமல்ல என்றார் அம்பேத்கர்*. எனினும், தனிப் பிரிவினரின் உணர்வுகளைப் போக்குவதற்கு ஒரே வழி வேறொரு மதத்தைத் தழுவிக் கொள்வதுதான்![1]*

---

** ஜனதா 1937, ஜூலை 8.*

*1. கீர் 323 - 324.*

எனினும் டாக்டர் அம்பேத்கரின் உரையில் வேறு பரிமாணங்கள் சிலவும் இருந்தன. "டைம்ஸ் ஆப் இந்தியாவில்" இரு வெளிவந்துள்ளன. அந்தப் பரிமாணங்கள் கீழ்க் கண்டவை - ஆசிரியர்கள்.

தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பல்வேறு பிரிவினரிடையே கருத்து வேறுபாடுகள் இருப்பது வருத்தமளிக்கிறது. ஆனால், அவரது ஆற்றி வரும் பணிகள் ஏதோ ஒரு குறிப்பிட்ட பிரிவுக்கு மட்டுமல்ல முழு சமூகத்துக்கும் தான். ஒரு பிரிவுக்காக செக்டேரியன் கருத்துக்கள் எதையும் தமது முன்னேற்றும் பணியில் அவர் ஆதரிக்கவில்லை.

சுதந்திரத் தொழிற்கட்சியிலிருந்து ஒதுங்கியிருக்கும் சமார் வகுப்பினர், தமது வகுப்பினரை காங்கிரஸ் கட்சி மேல் நிலைக்குக் கொண்டு வரும் என்று நம்பியிருக்கின்றனர். ஆனால் அவர்களது கனவு பொய்யாகிப் போகும். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் அனைவரிடமும் ஒற்றுமை ஓங்க வேண்டும் என்று அவர் வேண்டுகோல் விடுத்தார்.

தலைவர் திரு. எம். வி. டோண்டே, தமது வகுப்பினருக்கு அரசாங்கம் வழங்கி வரும் உதவித் தொகை போதுமானதல்ல என்றும் அவர்களுக்கு மேலும் அதிக ஊக்கம் தர வேண்டும் என்றும் கூறினார்.

இவ்வகுப்பினருக்கு இலவச விடுதிகள் கொண்ட பள்ளி மாவட்டத்தில் இருக்க வேண்டும் என்றும், அண்மையில் நடைபெற்ற தேர்வுகளில் தேறாதவர்களுக்கு மூன்று மாத காலத்தில் மீண்டும் தேர்வு நடத்த வேண்டும். என்றும் அரசாங்கத்துக்கு வேண்டுகோள் விடுக்கும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

நிர்வாகக் குழுவிற்கு பின்கண்டவர்கள் தேர்வு செய்யப் பட்டனர்: திரு. கே. ஆர். பவேகர் (தலைவர்), திரு. பி. ஜே. தேவ்ருகர், திரு. பி. ஜி வாக்மேர் (செயலாளர்கள்) மற்றும் நாற்பது கமிட்டி உறுப்பினர்கள்.[1]

---

1. திடைம்ஸ் ஆப் இந்தியா, 1939, ஜுலை, 5.

# (56)

## வரிகளை உழவர்களுக்காகப் பயன்படுத்த வேண்டும்

*நாசிக்கிலுள்ள ஹன்ஸ்ராஜ் பி. தாக்கர்சே கல்லூரியில் 1939 ஜூலையில் டாக்டர் அம்பேத்கருக்கு ஒரு தேநீர் விருந்து அளிக்கப்பட்டது. அப்போது எழுத்து மூலமாக அளிக்கப்பட்ட கேள்விகளுக்கு டாக்டர் அம்பேத்கர் பதிலளித்தார்.*

*வரிகளின் மூலமாக அரசாங்கம் வசூலிக்கிற பணத்தை உழவர்களின் கடன் தொல்லையைப் போக்கவும், வறுமையை ஒழிக்கவும், கல்வி வழங்கவும் செலவிட வேண்டும். அவசரப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு பதில் மதுவிலக்குக்கு முக்கியத்துவம் கொடுத்தால் இதைச் செய்ய முடியாது. இந்தியாவை பிரிப்பது பற்றி சர் சிகந்தர் ஹையத் கானின் மண்டல முறையை அம்பேத்கர் ஆதரிக்கிறாரா என்று அவரிடம் கேட்கப்பட்டது. ஏழு மண்டலங்களாக இந்தியாவை பிரிப்பது தமக்கு சம்மதமில்லை என்றும், அது பாகிஸ்தான் தோன்றுவதற்கு வழி வகுக்கும் என்றும் அம்பேத்கர் சொன்னார். பிரிட்டிஷ் ஆட்சியைப் பொருத்தவரை மற்ற குறைபாடுகள் எப்படியிருந்த போதிலும் இந்தியர்களுக்கு இரண்டு அனுகூலங்களை அது செய்திருக்கிறது, அதாவது ஒரு பொதுவான மத்திய அரசாங்கத்தைத் தந்துள்ளது, மற்றும் வெவ்வேறு மதங்களைச் சேர்ந்த மக்களிடையிலும் அவர்கள் ஒரே அரசாங்கத்தின் உறுப்பினர்கள் என்ற உணர்வை ஏற்படுத்தியுள்ளது![1]*

---

*1. அகமது நகர் மாவட்டம், ஜாபர்களின் தாலுகாவைச் சேர்ந்த ஹரிஜனில் 1939, டிசம்பர் 16ஆம் தேதி இந்த மாநாடு நடைபெற்றது.*

## (57)

# மஹர் வடன் ஓர் இதயமற்ற சுரண்டல்

டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் தலைமையில் அகமத்நகரில்* வார இறுதி நாளில் வடன்டார்களின் மாநாடு நடந்தது. மஹர்கள், மற்றும் மாங் வடன்டார்களின் எண்ணற்ற குறைகளைப் போக்குவதற்கு பம்பாய் ராஜதானி முழுவதும் சத்தியாக்கிரகமும் பொது வேலை நிறுத்தமும் தொடங்குவது பற்றி ஆலோசிப்பதற்காக இந்த மாநாடு ஏற்பாடு செய்யப்பட்டது.

சட்டப் பேரவையின் சுதந்திரத் தொழிற் கட்சி உறுப்பினர்கள் அநேகமாக அனைவரும் இதில் கலந்து கொண்டனர்.

கிராம அதிகாரிகள் என்ற அமைப்பின் தோற்றுவாய் பற்றிக் குறிப்பிட்டு அம்பேத்கர் சொன்னார்..

மராத்தாக்களின் ஆட்சியின் போது 12 விதமான அதிகாரிகள் இருந்தனர். படேல்., குல்கர்னி, தேசாய், நாவி (நாவிதர்), சுதார் (தச்சர்), முசல்மான் போன்றோர் அவர்கள். இவர்கள் ஒவ்வொருக்கும் தனித்தனிப் பணிகள் ஒதுக்கப்பட்டிருந்தன. இந்தப் பணிகளுக்காக அவர்களுக்கு நிலம் இலவசமாக வழங்கப்பட்டது.

பிரிட்டிஷ்காரர்கள் இங்கு வந்தபோது, இவர்களுக்கு ஊதியமாக வடான் நிலம் வழங்குவது நீக்கப்பட்டது. மஹர்களுக்கு மட்டும் இந்த முறை நீடித்தது. மாதாந்திர ஊதியத்தில் இப் பணிகளுக்கு ஆட்கள் நியமிக்கப்பட்டனர்.

"இந்தப் பழைய முறைமையை ஒழிந்ததில் ஒரு சுவாரஸ்யமான விஷயம் என்னவென்றால், முந்தைய படேல்கள், குல்கர்னிகள், டலாடிகள் ஆகியோர் அவர்களது பணிகளிலிருந்து நீக்கப்பட்ட பின்பும் அவர்களுக்கு வழங்கப் பட்ட நிலங்களை அவர்களே வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டனர். இந்த நிலங்களுக்கு விதிக்கப்பட்ட குத்தகை மிகக் குறைவே. இவ்வாறாக, கிராம அதிகாரிகளின் வாரிசுகளுக்கு, அவர்கள் எந்த கிராமப் பணியையும்

செய்யாத போதும், லட்சக் கணக்கான ரூபாயை அரசாங்கம் அளித்து வருகிறது" என்றார் அம்பேத்கர்.

இதற்கு நேர்மாறான நிலை *மஹார்* வடன்டார்களுடையது. ஒவ்வொரு *மஹாரும்* ஒரு வடன்டார்தான். இவர்களின் வாரிசுமுறை பணியை அரசு நீக்கவில்லை. *மஹார்கள்* முன்பு போலவே தமது பணிகளைச் செய்து வந்தனர். ஆனால் அவர்களுக்கு சலுகைக் கட்டணத்தில் கொடுக்கப்பட்ட நிலத்திற்கு 'ஜீடி' என்றழைத்த கட்டணத்தை அதிகரித்து விட்டனர்.

## அநியாய வரி

இந்த விஷயம் அரசாங்கத்தால் விசாரிக்கப்பட்டது. 1874-ல் ஒரு சட்டம் இயற்றப்பட்டு, வடான் நிலங்களை பணியாளர்களிடமிருந்து பறிக்கக் கூடாது; அவர்களின் மீது சுமையை அதிகரிக்கக் கூடாது என்று முடிவு செய்யப்பட்டது. இவ்வாறிருந்த போதும், தாழ்த்தப்பட்ட மக்களுக்குச் சேவை செய்வதாகச் சொல்லிக் கொள்ளும் காங்கிரஸ் அரசாங்கம், வருமானத்தை அதிகரித்துக் கொள்ள எத்தனையோ வழிகள் இருந்த போதும், வறுமையால் பீடிக்கப்பட்டுக் கிடக்கும். இந்த வகுப்பினரின் மீது வரித்திணிப்பு செய்து வருமானத்தை அதிகரித்துக் கொள்கிறது.

இது அநியாயமானதும், சமத்துவமற்றதும் அல்லாமல், சட்டப் புத்தகத்தில் இன்னமும் இருந்து வருகிற சட்ட விதியை இது மீறுவதால், அது சட்ட விரோதமானது, அரசியல் சாசன விரோதமானது என்றார் தலைவர். அரசாங்கம் தனது முட்டான் தனத்தை உணர்ந்து தனது உத்தரவை ரத்து செய்யவில்லை என்றால், *மஹார்* வடன்டார்கள் அதிகார வர்க்கத்துக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்து தமது கிராமியப் பணிகளைச் செய்ய மறுப்பர்.

அவசரப்பட்டு எந்த நடவடிக்கையும் எடுக்க தலைவர் விரும்பவில்லை. அதிகார வர்க்கத்துக்கு தவறைத் திருத்திக் கொள்ள அவகாசம் தர விரும்பினார். எனவே, ஆறு மாத கால நோட்டீஸ் அனுப்பி அதன்பின் நேரடி நடவடிக்கையில் இறங்கலாம் என்று அவர் தெரிவித்தார்.

"இதைப் பற்றி நாம் ஏன் ஆழ்ந்த கவலைக்குள்ளாகிறோம்? ஏனென்றால் இந்த அதிகப்படியான சுமையை காங்கிரஸ் அரசாங்கம் அவர்களின் மீது ஏற்றுவதற்கு இந்த *மஹர் வடான்* முறை ஒரு இதயமற்ற சுரண்டலாய் இருந்தது."

ஆயிரக் கணக்கான *மஹர்கள்* திண்டான்டத்துக்கு உள்ளாகும் வேறொரு பிரச்சினையும் உண்டு. எண்ணற்ற கிராமங்களில், தமக்கு அளிக்கப்பட்டுள்ள பணிகளை *வடான்* நிலமோ வேறு ஊதியமோ இன்றி இவர்கள் செய்து வருகின்றனர். வலுக்கட்டாயமாக வாங்கப்படும் இலவச உழைப்புத்தான் இது. இதனை ஒரு முடிவுக்கு கொண்டு வந்தாக வேண்டும்.

இவை பற்றியும் மற்ற முறைகள் குறித்தும் ஒரு குழுவினர் கவர்னரிடம் சென்று உண்மைகள் அனைத்தையும் எடுத்துக் கூறி அவரிடமிருந்து நிவாரணம் கோரலாம் என்று யோசனை கூறினார் அவர்.

பின்னர் காங்கிரசை நோக்கி டாக்டர் அம்பேத்கர் சொன்னார்:

தன்னை காங்கிரஸ் இவ்வளவு சீக்கிரம் அடையாளம் காட்டிக் கொண்டது நல்லதாகப் போயிற்று. முழு சுதந்திரத்துக்காக இனி காத்திருக்க வில்லை. சுதந்திரம் வந்த பின்போ பிரச்சனைகளைச் சரி செய்வது மிகக் கடினமாகப் போய்விடும்.

இந்தப் படிப்பினையை நாம் அவ்வளவு சீக்கிரமாக மறந்து விட மாட்டோம். நாம் காங்கிரசைப் போல் அவ்வளவு வலிமை யுள்ளவர்கள் அல்ல. அவர்களைப் போல் எண்ணிக்கை அளவிலும் நாம் இல்லை. ஆனால் நாம் சமுதாய வாழ்வில் நம்பிக்கை கொண்டுள்ளோம். வறண்டு போன ரொட்டி கிடைத்தால் கூட நாம் அதை மற்றவர்களுடன் பகிர்ந்து உண்டோம். காங்கிரஸ் வறண்ட ரொட்டியை அடைய விரும்பவில்லை. முழு விருந்துக்கு அது தயாராகிறது, தான் மட்டுமே அதனை அனுபவிக்கவும் அது விரும்புகிறது. மற்றவர்களை அது பட்டினியில் வாட்ட விரும்புகிறது.

சரி, அவர்கள் கையிலுள்ள பலகாரங்களை நாம் பறிக்க மாட்டோம். ஆயினும் நாம் ஒன்று செய்யலாம். அவர்கள் விருந்துண்ணும் போது ஒரு கை மணலை எடுத்து விருந்துப் பண்டங்கள் மீது வீசலாம்.

---

# (58)

# தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக அரசாங்கம் எதுவுமே செய்யவில்லை

*இந்த மாநாடு டாக்டர் அம்பேத்கர் தலைமையில் சதாரா மாவட்டத்திலுள்ள அங்கல்கோப் என்ற கிராமத்தில் 1939 டிசம்பர் 24ஆம் தேதி 2000 நபர்கள் கலந்து கொள்ள நடந்தது. மாநாட்டில் பேசியவர்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக அம்பேத்கர் செய்து வரும் சேவைகளைப் பாராட்டி அவருக்கு ஆதரவு தர வேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக் கொண்டனர்.*

*காங்கிரஸ் அரசாங்கம் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக எதையுமே செய்யாதது மட்டுமின்றி, அதற்கு மாறாக இனாமி மற்றும் மஹார்கி நிலங்களுக்கு விதித்திருந்த வரியையும் அதிகரித்து விட்டது. மஹார்கள் செய்ய வேண்டிய கிராமிய வேலைகளுக்கு ஒரு அளவு வைக்க வேண்டும், அவர்களுக்கு தகுந்த ஊதியமும் வழங்க வேண்டும். அவர்களது குறைகள் அடுத்த ஆறு மாத காலத்திற்குள் நிவர்த்தி செய்யப்படவில்லை என்றால் மஹார்கள் பணி செய்வதை நிறுத்திக் கொள்ளவேண்டும்.*[1]

---

1. பம்பாய் ரகசிய தகவல் 1940, ஜனவரி 6.

# (59)

# தீண்டாமை எனும் பாவத்திற்கு இந்துக்களே பொறுப்பு

*பெல்காம் நகரசபையினால் டாக்டர் அபேத்கருக்கு டிசம்பர் 26, 1939 அன்று பாராட்டுரை வழங்கப்பட்டது.*

பாராட்டுரைக்கு நன்றி தெரிவித்துப் பேசிய டாக்டர் அம்பேத்கர் தீண்டாமை எனும் பாவத்திற்கு ஜாதி இந்துக்களே பொறுப்பு, வேறெவருமல்ல என்று கூறினார். அரிஜனங்களை மேம்படுத்துவதற்காக இத்தீண்டாமையை ஒழிப்பதற்காக அவர் பாடுபட்டு வருகிறார். சுயராஜ்யத்தை அடைவதைவிடவும் அரிஜனங்கள் பிரச்சினையைத் தீர்க்க வேண்டியது அதி அவசரம் என்றார், அவர்.

---

# (60)

## ராணுவத்தில் கடந்தகாலத்தில் இருந்த நிலையை மீண்டும் எய்த வேண்டும்

ராணுவ அந்தஸ்துள்ளவர்களாக புதிதாக சேர்க்கப்பட்ட "மஹர் ராணு"வத்தினரால் ஜனவரி 28*, 1940 ல் டாக்டர் அம்பேத்கர் ரத்னகிரிக்கு விஜயம் செய்த போது வரவேற்கப்பட்டார். தீண்டத் தக்கவர்களான குன்பீக்களுக்கும் தீண்டத்தகாத ராணுவ வீரர்களுக்கும், முன்னால் ஒரு சுருக்கமான உரை நிகழ்த்தினார், அவர்.[1]

அண்மையில் சேர்க்கப்பட்ட மஹர்கள் ஒரு கூட்டமாக வந்து தமது தலைவருக்கு மரியாதை செலுத்தியபோது, குன்பீக்களும் மஹர்களும் ராணுவத்தில் சேர வேண்டும் என்று டாக்டர் அம்பேத்கர் வேண்டுகோள் விடுத்தார்.

ராணுவத்தில் சேர்ந்து கொள்ளுவதென்று அவர்கள் செய்த முடிவை டாக்டர் அம்பேத்கர் பாராட்டினார். கடந்த காலங்களில் நல்ல சேவை செய்துள்ள போதிலும், ராணுவ வேலைகள் அவர்களுக்கு சாதிய வெறுப்பினால் கொடுக்கப்படுவதில்லை. என்றார் அவர். ஒரு காலத்தில் பம்பாய் ராணுவத்தில் 3/4 பங்கினர் மஹர் வகுப்பைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். பிரிட்டிஷாருக்காக பல சண்டைகளில் அவர்கள் போரிட்டிருக்கிறார்கள். பேஷ்வாவைத் தோற்கடித்து பிரிட்டிஷாரின் மேலாண்மையை நிலைநாட்டிய புகழ்பெற்ற கொரேகவுன் சண்டையும் இதில் அடங்கும்.

1857 கலகத்திற்குப் பிறகு இதர வகுப்பினர்கள் ராணுவத்தில் சேர்ந்தனர். அவர்களின் தப்பெண்ணங்களுக்கு மதிப்பளித்து மஹர்கள் ராணுவத்தில் சேர்ப்பது நிறுத்தப்பட்டது. எனவே புதிதாக சேர்க்கப் பட்டுள்ளவர்கள் ராணுவத்தில் தமக்கிருந்த கடந்த கால நிலைமையை எய்தும் பொறுப்பை ஏற்க வேண்டும்.[2]

---

* ஜனதாவின் பிரகாரம் இந்தத் தேதி ஜனவரி 28, 1940 ஆகும். அறிக்கையில் இந்தத் தேதி 29 என்று காட்டப்பட்டுள்ளது -ஆசிரியர்கள்.

1. ஜனதா 10, பிப்ரவரி 1940.

2. தி டைம்ஸ் ஆப் இந்தியா 31 ஜனவரி 1940.

# (61)

# இந்தியா அரசாங்க சட்டம் மற்றும் புனா ஒப்பந்தம் வழங்கும் பாதுகாப்புகள் போதுமானவை அல்ல

"1940 பிப்ரவரி 4 ஆம் தேதி ஞாயிறு அன்று மஜகவுனில் எஸ். சி. ஜோசி தலைமையில் 40,000 பேர் கலந்து கொண்ட பேரணி நடைபெற்றது.

டாக்டர் அம்பேத்கரின் வீட்டிலிருந்து புறப்பட்ட ஐந்து மைல் நீள ஊர்வலத்தின் உச்சகூட்டம்தான் இப்பேரணி. சுதந்திரக் கட்சியின் கொலாபா மாவட்டக் கிளையின் தலைவரான சுரேந்திர நாத் திப்னீஸ், தானா சிறையிலிருந்து சனிக்கிழமை விடுவிக்கப் பட்டதைத் தொடர்ந்து அவரைக் கவுரவிப்பதற்காக இந்தப் பேரணி நடந்தது. கோட்டி முறையை ஒழிக்க வேண்டும் என்று பேசியதற்காக அவர் மூன்று மாதம் சிறையில் அடைக்கப்பட்டிருந்தார்.

கட்சியின் மாவட்டத் தலைவர்கள் அனைவரும், சட்டப் பேரவையின் கட்சி உறுப்பினர்களும் மற்றும் தன்னார்வத் தொண்டர்களும் சுமார் ஆயிரம் பேர் கொண்ட ஊர்வலம், முழக்கங்களை எழுப்பியபடி நெருக்கடி நிறைந்த தொழிலாளர் பகுதிகளில் நகர்ந்து சென்றது.

பேரணியில் பேசிய, சுதந்திரத் தொழிற்கட்சியின் தலைவரான டாக்டர் அம்பேத்கர் பேசும் போது,

இந்திய அரசாங்க சட்டமும், புனா ஒப்பந்தமும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரைப் பாதுகாக்க சற்றும் போதுமானதல்ல. இந்த வகுப்பினர் விரைவில், அனைத்தையும் உள்ளடக்கிய விரிவான யோசனை களையும் நிபந்தனைகளையும் வகுப்பதற்காக தமது கவனத்தைச் செலுத்துவர். நிர்வாகத்துடன் எந்தவொரு கூட்டுறவும் இவற்றின் அடிப்படையிலேயே சாத்தியமாகும் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.[1]

---

1. பாம்பே கிரானிக்கிள் 1940, பிப்ரவரி 6.

# (62)

# பண்டைக்கால வட்டத்திற்குள்ளிருந்து வெளிப்பட்டு இந்து சமூகம் தன்னை நவீன முறையில் ஒழுங்கமைத்துக் கொள்ள வேண்டும்

*மார்ச் 19 ஆம் தேதியை தீண்டத்தகாதோரின் சுதந்திர தினமாக டாக்டர் அம்பேத்கர் அறிவித்தார். 1927 ஆம் ஆண்டு இதே நாளில்தான் மஹத்தில் நடந்த தீண்டத்தகாதோர் கூட்டத்தில், சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற மூன்று கோட்பாடுகளை டாக்டர் அம்பேத்கர் பிரகடனப்படுத்தினார். அந்தச் சிறப்பு நிகழ்ச்சியை நினைவு கூரும் வகையில் தான் 19 மார்ச் 1940 ஐ சுதந்திர தொழில் கட்சி சுதந்திர நாளாக கொண்டாட ஏற்பாடு செய்துள்ளது. இந்தச் சம்பவத்தின் போது ஒரு துண்டுப் பிரசுரம் வெளியிடப்பட்டது. இதன்படி தாழ்த்தப்பட்ட வகுப்பினர் 19, மார்ச், 1940 ஐ தமது சுதந்திர தினமாக அனுஷ்டித்தனர்.[1]*

*மஹத்தில் 10, 000 பேர் அடங்கிய பேரணியில் டாக்டர் அம்பேத்கர் உரையாற்றினார். தமது உரையில் அவர் கூறினார்.*

*"மிக முக்கியமான சமுதாய, பொருளாதார பிரச்சினைகளை மறந்துவிட்டு அரசியல் சுதந்திரத்திற்காகவே தமது கவனம் முழுவதையும் செலுத்துவது இந்தியர்கள் செய்யும் மோசமான தவறாகும். இந்திய சமூகம் பண்டைக்கால வட்டத்திற்குள் இருந்து வெளிப்பட்டு நவீன முறையில் தன்னை ஒழுங்கமைத்துக் கொள்ள வேண்டிய தருணம் வந்து விட்டது. அன்றிரவு மஹத் நகரசபை டாக்டர் அம்பேத்கருக்கு வரவேற்பு அளித்தது.[2]*

---

*1. ஜனதா 1940, மார்ச் 23 மற்றும் 30.*

*2. கீர் ப. 331.*

# (63)

# காந்தியின் முயற்சிகள் போதுமானவை அல்ல

டாக்டர் பி. ஆர் அம்பேத்கரின் தலைமையில், 1941 பிப்ரவரி 23 ஆம் தேதி, ஷோலாப்பூர் மாவட்டம் தத்வாலில் (டோகி) நடந்த மஹர் மற்றும் வடண்டார்கள் மாநாட்டில் சுமார் 3000 பேர் பங்கேற்றனர்.

மாநாட்டின் பிரதான பேச்சாளரான டாக்டர் அம்பேத்கர் அரிஜன மக்களின் நிலையை மேம்படுத்துவதற்காக காந்தி செய்யும் முயற்சிகள் போதுமானவை அல்ல என்று விளக்கினார். மைசூர் மற்றும் பரோடா மாகானங்களில் அரிஜனங்கள் நடத்தப்படும் விதத்திற்காக அம்மாநில நிர்வாகங்களை அவர் பாராட்டினார். ஹைதராபாத் மாகாணத்தில் அம்பேத்கர் நிதியுதவி கேட்டு வேண்டுகோள் விடுத்தார். ரூபாய் 761 அவரிடம் வழங்கப்பட்டது.[1]

---

1. பம்பாய் ரகசிய தகவல் 1941, மார்ச் 8.

## (64)

# கடுமையான முயற்சிகள் மேற்கொள்ளவில்லையென்றால் சமுதாயத்தில் நமது நிலைமைகள் இன்னும் மோசமாகப் போகும்

"நகரத்திலுள்ள மஹர் வகுப்பாரின் *பஞ்சாயத்துகள்* வேலை செய்யும் விதம் பற்றி கடுமையாகத் தாக்கிப் பேசினார் டாக்டர் அம்பேத்கர். பம்பாய் பட் உயர்நிலைப் பள்ளி மண்டபத்தில் நடந்த தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் இந்தக் கூட்டத்தில் பஞ்சாயத்தின் முக்கியப் பிரமுகர்கள் கலந்து கொண்டனர். தானாவிலுள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் மாணவர் விடுதியின் பொருளாதார நிலைமையை பரிசீலிப்பதற்காக இக்கூட்டம் 1941 மார்ச் 28 ம் நாள் நடந்தது.

*பஞ்சாயத்துள்* தாழ்த்தப்பட்ட வகுப்பாரின் மீது பலவிதமான காரணங்களைக் கூறி விதவிதமான வரிகளைச் சுமத்துகின்றன என்று அவர் சொன்னார். இப்படி வசூலான பணத்தை குடித்துக் கும்மாளமிட முன்னர் பயன்படுத்தினர். இப்போது நகரில் மதுவிலக்கு அமலில் உள்ளதால் "*பட்டாசாக்கள்*" சாப்பிடவும் இனிப்புகள் வினியோகிக்கவும் இப்பணம் செலவழிக்கப் படுகிறது.

"நமது வகுப்பினரின் மூத்த உறுப்பினர்களான உங்களுக்கு என்னதான் ஆகிவிட்டது? பொதுப் பணத்திலிருந்து இனிப்புகள் வாங்கி குழந்தைகளைப் போல நீங்கள் நடந்து கொள்ளலாமா? இந்த நேரத்தில் வாழ்க்கை நடத்துவதற்காக மற்ற வகுப்பாருடன் போராட்டம் நடத்திக் கொண்டிருக்கிறார்கள் நம்மவர்கள். இத்தகைய குழந்தைத் தனமான நமது செயல்களை நாம் கைவிட்டு சமுதாய, கல்வி முன்னேற்றத்திற்காக பாடுபடவில்லையென்றால் நமது நிலைமை இன்றிருப்பதை விட இன்னும் மோசமாகிப் போகும்."

முன்னேறியுள்ள இந்திய வகுப்பினரை தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஓர் உதாரணமாகக் காட்டினார். முன்னேறிய வகுப்பினரில்

சிலர் எப்போதும் கல்வி வளர்ச்சிக்காகவும் சமுதாய அமைப்புகளின் மேம்பாட்டுக்காகவும் பாடுபடுகின்றனர். இந்தச் சேவைக்கு பரிசோ பாராட்டோ அவர்கள் எதிர்பார்ப்பதில்லை.

தாழ்த்தப்பட்ட வகுப்பினரிடையில் உள்ள இளைஞர்களோ, உள்ளூர் அமைப்புகளிலோ நகராட்சிகளிலோ ஏதாவது பதவியை நாடுகின்றனர். அது கிடைக்காத போது, எல்லோருக்கும் அது கிடைக்கப் போவதில்லை, பொதுப் பணியில் உற்சாகமிழந்து தமது வகுப்பினரின் தலைவிதி பற்றி வெகு அசட்டையாக இருந்து விடுகின்றனர்.

வேறு சிலரோ பொது வேலையில் ஒருசீரான தன்மை இன்றி, ஒருவிதமான வேலையைக் கொஞ்ச காலம் செய்து விட்டு அடுத்த வேலைக்குப் போவது, பின்னர் வேறொன்றுக்கு மாறுவது என தாம் வேலை செய்த அமைப்புகளை அலங்கோலமாக்கி விடுகிறார்கள்!

---

1. தி பாம்பே கிரானிக்கிள் 1941, மார்ச் 29.

# (65)

# எத்தகைய வலுவான சக்தி உங்களிடம் உள்ளது என்பதை நீங்கள் உணரவில்லை

*1941 ஜூலை 13ஆம் நாள் பம்பாய் கவாஸ்ஜி ஜஹாங்கீர் ஹாலில் பம்பாய் நகராட்சி கம்கார் தொழிற்சங்கத்தின் வருடாந்திர பொதுக் கூட்டத்தில் தலைமையுரை ஆற்றிய டாக்டர் அம்பேத்கர் நகரிலுள்ள சில தொழிற்சங்கங்கள் பணி செய்கிற விதம் பற்றி கடுமையாக விமர்சனம் செய்தார். கூட்டத்தில் ஆரோக்கியம், வடிகால் வாரியம் மற்றும் நகராட்சியின் பிற சுகாதாரத் துறைகளைச் சேர்ந்த ஆயிரத்துக்கும் மேற்பட்ட பெண்களும் ஆண்களும் கலந்து கொண்டனர். அமைப்புரீதியாக ஒன்றுபட்டிருப்பதால், எந்த விதமான பெரிய தியாகமும் செய்யாமல் வேண்டியவையெல்லாம் அவர்களுக்கு எப்படிக் கிடைக்கின்றன என்று அவர் சுட்டிக் காட்டினர்.*

*நகரிலுள்ள சில தொழிற்சங்கங்களின் தலைவர்கள், குறிப்பாக பஞ்சாலையை சேர்ந்தவர்கள் கடந்த 14 ஆண்டுக்காலமாக தமது தொழிலாளர்களை எத்தனையோ வேலை நிறுத்தங்கள் மேற்கொள்ளச் செய்துள்ளனர். எனினும் ஒரு வேலைநிறுத்தத்தில் கூட தமது கோரிக்கைகள் எதையும் அவர்களால் பெற முடியவில்லை. சொல்லப் போனால், இந்த வேலைநிறுத்தங்களால், வேலை நிறுத்த காலத்தில் வேலை இல்லாமல் போய், வேலை நிறுத்தங்களைத் தொடர்ந்து ஆட்குறைப்பு செய்யப்பட்டதாலும், பணி நீக்கம் செய்யப்பட்டதாலும் தொழிலாளர்களின் துன்ப துயரங்கள் அதிகரித்தன என்று சுட்டிக் காட்டினர் டாக்டர் அம்பேத்கர்.*

*இத்தகைய நடவடிக்கைகள் தொழிலாளர்களை ஒன்று சேர்ப்பதற்கு பதிலாக இருந்த ஒற்றுமையையும் குலைந்து, தொழிற்சங்கங்கள் சிதறிப் போயின.*

*இதற்கு மாறாக, நகராட்சி தொழிலாளர் சங்கம், அதிகாரிகளுடன் பேச்சுவார்த்தை நடத்தி பலகுறைகளை நிவர்த்தி செய்து கொண்டுள்ளது.*

"உங்களிடமுள்ள அபரிமிதமான சக்தியை நீங்கள் உணரவில்லை" என்றார் அரிஜனத் தலைவர். மூன்று மாதங்களில் இந்து - முஸ்லீம் கலவரங்களால் விளைந்த கேடுகளைவிட அதிகமான கேட்டையும் அழிவையும், வேலை செய்ய மறுப்பதன், மூலம் ஒரே வாரத்தில் நீங்கள் உண்டாக்கிவிட முடியும். அதிகாரிகளுக்கும் இது தெரியும். எனவே ஒன்றுபட்டு நீங்கள் விடுக்கும் கோரிக்கைகளை, வேறெங்கும் விட, உங்கள் அதிகாரிகள் ஏற்றுக்கொள்வர், இத்தகைய சீர்கேட்டை நகரத்தில் உண்டாக்க நான் விரும்பமாட்டேன். நமது நியாயமான கோரிக்கைகளை அதிகாரிகள் ஏற்றுக் கொள்ளும் போது இந்தக் கேடு வருவதை தடுப்பதற்கு என்னால் ஆன அனைத்தையும் செய்வேன். நான் சொல்லுவதெல்லாம் தொழிற்சங்கத்தில் நீங்கள் ஒன்றுபடுங்கள், மற்ற பணிகளை தகுதியும் திறமையும் கொண்ட நிர்வாகக்குழுத் தலைவர்கள் கவனித்துக் கொள்வார்கள்.

அதன்பின், தமது ஒற்றுமையின் காரணமாக தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தேசத்தின் அரசியல் வாழ்வில் அடைந்துள்ள நிலை பற்றிக் குறிப்பிட்டு, பத்து ஆண்டுகளுக்கு முன்பு இந்த வகுப்பினருக்கு எந்த விதமான அரசியல் அந்தஸ்தும் இல்லாமலிருந்தது என்றும், இன்றோ காங்கிரசுக்கும் முஸ்லீம் லீடுக்கும் இணையான ஒரு அந்தஸ்தை பெற்றிருப்பதற்கு அவர்களிடையே உள்ள ஒற்றுமையே காரணம் என்றும் கூறினார்.

இறுதியாக, தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சட்டப் பேரவை வாக்காளர் பட்டியலில் தமது பெயர்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று அவர் வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார்.

இது தொடர்பாகப் பேசும்போது, கடந்த சட்டப் பேரவைத் தேர்தலின்போது தாம் போட்டியிட்ட வடக்கு பம்பாய்த் தொகுதியில் அரிஜன வாக்காளர்கள் வெறும் 8000தான் என்றும், இந்து வாக்காளர்களோ 48000 இருந்தார்கள் என்றும், இதன் காரணமாக இந்தத் தொகுதியில் போட்டியிடுவதன் மூலம் தமது கழுத்தில் தானே சுருக்குக் கயிறு மாட்டிக் கொண்டது போல உணர்ந்ததாகவும் அவர் நினைவு கூர்ந்தார். எனினும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஒருவர்கூட பாக்கியில்லாமல் வாக்குச் சாவடிக்கு வந்ததால் தேர்தலில் ஒரு அற்புதமே நிகழ்ந்தது.

சங்கத்தின் பொதுச் செயலாளரான திரு. டி.வி. பிரதான், தொடக்கத்திலேயே ஆண்டறிக்கையைப் படித்தார், அதில் சகல துறைகளிலும் முன்னேற்றம் அடைந்துள்ளதை அவர் எடுத்துக் காட்டினார்.

பின்னர் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

பஞ்சப்படியை ஒரு ரூபாய் உயர்த்த வேண்டும், ரூ 75/- வரை மாத சம்பளம் வாங்குகிற அனைவருக்கும் இது பொருந்த வேண்டும், மாநகராட்சியால் நியமிக்கப்பட்ட, நகராட்சித் தொழிலாளர்களின் வாழ்க்கை நிலைமை பற்றி ஆராய்வதற்கான கமிட்டி தனது அறிக்கையை விரைவாகச் சமர்ப்பிக்க வேண்டும்; சங்கத்தில் சில சிறு மாற்றங்கள் செய்ய வேண்டும் என்ற தீர்மானங்கள் தாக்கல் செய்யப்பட்டு நிறைவேற்றப்பட்டன. எம்.வி. டோண்டே, எம். காவ்லி, ஜி. எம். ஜாதவ் ஆகியோர் தீர்மானத்தின் மீது பேசினர்.

டாக்டர் அம்பேத்கர் தலைவராகவும், எம். வி. டோண்டே, எஸ். பி. கேஸி ஆகியோர் துணைத் தலைவர்களாகவும் கொண்ட புதிய நிர்வாகக் கமிட்டி தேர்ந்தெடுக்கப்பட்டது. இதற்கான தீர்மானத்தை திரு. டி. வி. டோண்டே முன்மொழிந்தார்.

துணைச் செயலாளரான எம். வி. ஜாதவ் பின்னர் பேசுகையில், தொழிலாளர்கள் மத்தியில் வகுப்புவாதம் எப்படி தூண்டிவிடப் படுகிறது என்றும், தொழிற்சங்கப் பணிகளால் சலுகைகளும் கூலி உயர்வும் பெற்று வரும் குஜராத்தைச் சேர்ந்த தாழ்த்தப்பட்ட வகுப்பினரான பாங்கிகள் போன்றோர் எப்படி தொழிற் சங்கத்திலிருந்து ஒதுங்கி இருக்கிறார்கள் என்றும் விளக்கிக் கூறினார்.

---

# (66)

## மகர்களுக்கு வடண்டாரி ஒரு சாபம்

*1941 ஆகஸ்டு 16ஆம் தேதி நாசிக் மாவட்டம் சின்னாறில். 4000 பேர் கலந்து கொண்ட ஒரு கூட்டத்திற்கு டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் தலைமை வகித்தார். 1939 டிசம்பரில் நடந்த ஹரேகவுன் மாநாட்டு முடிவின்படி பம்பாயின் மேதகு ஆளுனரிடம் ஒரு மனு அளிக்கப்பட்டதென்றும், அதனால் ஒரு பயனும் ஏற்படவில்லை என்றும் டாக்டர் அம்பேத்கர் தெரிவித்தார். மஹர்களும் மாங்குகளும் மற்ற வடண்டார்களுடன் சமமாக நடத்தப்படவில்லை, ஆனால் அவர்களின் வடாண் நிலங்களின் மீது விதிக்கப்பட்ட வரி அதிகரிக்கப்பட்டது. எனவே, மஹர்களும் மாங்குகளும் அதிகப் படியாக விதிக்கப்பட்ட வரியை கொடுக்கக்கூடாது என்றும், எந்தக் காரணம் கொண்டும் தமது நிலத்தை அவர்கள் விட்டுவிடக் கூடாது என்றும் அறிவுறுத்தினார் அவர்.[1]*

*டாக்டர் அம்பேத்கரின் பேச்சில் இந்த விஷயத்தில் கூடுதல் பரிமாணங்களும் இருந்தன என்று பம்பாய் கிராணிகிள் தெரிவித்தது. அந்தப் பரிமாணங்களாகவன:*

*"வடாண் நிலங்களின் மீது அதிகரிக்கப்பட்ட வரிகளை எந்தக் காரணம் கொண்டும் மஹர்கள் மாங்குகள் வெதியாக்கள் செலுத்தக் கூடாது என்று நேற்றிரவு நடந்த வடண்டார்களின் மாபெருஜம் கூட்டத்தில் இடிபோல முழங்கினார் டாக்டர் அம்பேத்கர்."*

*வரி கொடுக்க மறுப்பது என்பது தர்க்கபூர்வ செயல்தான்.*

*"என்னுடைய பொது வாழ்வு முழுவதிலும் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு நான் விசுவாசமாக இருந்து வந்துள்ளேன்" என்று தனது தலைமையுரையில் டாக்டர் அம்பேத்கர் குறிப்பிட்டார்,*

---

*1. பம்பாய் ரகசிய தகவல் 1941, ஆகஸ்டு 23.*

"நான் பிரிட்டிஷாருக்கு விசுவாசமாக இருந்து வந்துள்ளேன்.. ஏனென்றால், தாழ்த்தப்பட்ட மக்கள் நாலாபுறமும் எதிரிகளால் சூழப்பட்டுள்ள நிலைமையில், ஒரே நேரத்தில் அவர்களால் பல முனைகளில் போராட முடியாது. எனவேதான், ஜாதி இந்துக்களின், 2000 ஆண்டுகாலக் கொடுங்கோன்மையையும் அடக்குமுறையையும் எதிர்த்துப் போராடி தாழ்த்தப்பட்ட மக்களுக்கு சமவுரிமை பெறுவதற்கு முன்னுரிமை கொடுத்தேன்."

"இந்தப் பல ஆண்டுகளாக இந்து சமூகத்தின் மீதும் அதன் கொடுமைகளின் மீதும் நான் பயங்கரத் தாக்குதல் நடத்திவந்துள்ளேன். ஆனால் இதை விட நூறு மடங்கு வலிமையான, பயங்கரமான, கொலைத் தாக்குதலை பிரிட்டிஷாரின் மீது நான் தொடுப்பேன் . . . பிரிட்டிஷாருக்கு நான் காட்டும் விசுவாசத்தைப் பயன்படுத்திக் கொண்டு என்னுடைய மக்களையே நசுக்கவும், எமது மக்களிடமிருந்து அவர்கள் தமது கையில் வைத்துள்ள உயிர்வாழக் குறைந்த பட்சத் தேவையான கடைசி எலும்புத் துண்டையும் அந்தப் பிரிட்டிஷ் உரசு பறித்தால். இந்தத் தாக்குதல் நடைபெறும்...

இந்த மாகாணத்தில் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்டதற்கு நாம்தான் காரணம் என்று அவர்களிடம் நான் கூற விரும்புகிறேன். இந்த மாகாணத்தில் ஆட்சி செய்து வந்த பேஷ்வா ஆட்சியை மஹர் ராணுவப் படைதான் தோற்கடித்தது.

மஹாராஷ்டிராவில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு வழி. ஏற்படுத்தியதும் மஹர்கள்தான், தமது சேவைக்காக மஹர்களுக்குக் கிடைத்தது என்ன? ஒன்றுமில்லை.

மஹர்களுக்கு வடண்டாரி ஒரு சாபமாக உள்ளது. நிரந்தரமான வறுமைக்குள் அது அவர்களைத் தள்ளுகிறது. அவர்களின் சுயமரியாதைக்கு அது இழுக்காக அமைகிறது. அவர்களை இது கீழ்மைப்படுத்துகிறது.

நாம் சொல்லுவதெல்லாம் "உங்களுடையட வடண்டாரி. எங்களுக்கு வேண்டாம். எங்களை உங்கள் பணியிலிருந்து நீக்கி விடுங்கள். எங்களுக்குக் கொடுக்கப் பட்டுள்ள நிலத்திற்கு முழுமையான வரி விதித்து, மற்ற கிராமிய வேலைகளுக்கு நீங்கள் தருவதைப் போன்ற ஊதியம் தந்து எங்களைப் பணியமர்த்துங்கள்.

இந்த 20 ஆண்டுகளாக இதைத்தான் கோரி வருகிறேன். ஆனால் எங்களுக்குக் கிடைத்தது என்ன? எங்களைப் பணியிலிருந்து நீக்குவதற்கு பதிலாக வடண்டார்கள் மீது மேலும் பணிச்சுமை ஏற்றப்படுகிறது. வரியும் அதிகரிக்கப்படுகிறது.

இந்த மிருகத்தனத்தை நான் பொறுத்துக் கொள்ள மாட்டேன். உங்களால் முடிந்ததைச் செய்து கொள்ளுங்கள் என்று பிரிட்டிஷ் அதிகாரத்துக்கு நான் சவால் விடுகிறேன்.

அதிக வரியாக ஒரு பைசா கூட அவர்களால் எங்களிடமிருந்து பெற முடியாது என்று இப்போது முடிவாகச் சொல்லுகிறேன். அவர்கள் என்ன வேண்டுமானாலும் செய்யட்டும்.

வடண்டார்களே உங்களிடம் நான் அறிவுறுத்த விரும்புவது எளிமையானது தான். எத்தகைய விளைவுகள் ஏற்படுவதானாலும் அதிகரிக்கப்பட்டுள்ள வரியை நீங்கள் செலுத்த மறுத்து விட வேண்டும். உங்கள் வீட்டுப் பொருள்களையோ, கால்நடைகளையோ ஜப்தி செய்ய வந்தால் அதனைத் தடுத்து நிறுத்த உங்களால் ஆன அனைத்தையும் செய்யுங்கள்.

என்ன நேர்ந்த போதும் அரசாங்கம் இறங்கிவந்தேயாக வேண்டும். நமது முடிவிலிருந்து நாம் பின்வாங்க மாட்டோம், முடிவினை நிறைவேற்றுவதிலிருந்தும் நாம் பிறழவும் மாட்டோம்.

தலைமையுரைக்குப் பிறகு இரண்டு தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன. அதில் ஒன்று டாக்டர் அம்பேத்கர் மஹர் வடண்டாரி சம்பந்தமாக ஆளுநரிடம் கொடுத்துள்ள மனுவுக்கு* ஆதரவு தெரிவித்தது. அடுத்த தீர்மானம் வடண்டாரிகள் அதிகரிக்கப் பட்டுள்ள வரியை வசூலிப்பதற்கு தமது சக்தியனைத்தையும் கொண்டு எதிர்க்க வேண்டும் என்பது.

தீர்மானங்களுக்கு ஆதரவாகப் பேசியவர்களில் ஆர். ஆர். போலே, பி. எச். வராடே, ஜே. எஸ் அய்ண்டால், பி. ஜே. ரோஹம், டி. ஜி. ஜாதவ், பி. கே. கெய்க்வாட் மற்றும் ஏ. வி. சித்ரே ஆகியோர்

* இந்த தொகுதியின் முதல் பாகம் 308 - 338. பக்கங்களில் வெளியிடப் பட்டுள்ள மனுவைக் காண்க.

அடங்குவர். இதே போல புனா, பெல்காம், ஷோலாபூர், அகமது நகர், கண்டேஷ், நாசிக் மற்றும் கொலாபா மாவட்டத்து சட்டப் பேரவை உறுப்பினர்களும் பேசினர்.

தமது மாவட்டத்திலுள்ள மஹர்களுக்கு அனைத்து உதவி களையும் நல்குவதாக ஒவ்வொருவரும் வாக்களித்தனர். கோரிக்கை களை குறித்த காலத்திற்குள் அதிகாரிகள் ஏற்றுக் கொள்ள வில்லையானால் நாசிக் மாவட்டத்தில் தேவையான எந்தவொரு இயக்கத்தைத் தொடங்கவும், தங்கள் மாவட்டங்களில் சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கவும் அவர்கள் முன்வந்தனர்.

தமக்கு முன்பாக பேசியவர்கள், இயக்கம் தொடங்குவது பற்றி திட்டவட்டமான தேதி குறித்துப் பேசியதை டாக்டர் அம்பேத்கர் தமது முடிவுரையில் திருத்தினார்.

“ஜப்தி நடவடிக்கைகள் நாளைக்கு ஆரம்பித்தால் எதிர்ப்பு இயக்கம் நாளையே தொடங்கிவிடும். காத்திருப்பதோ, கட்டளை களை எதிர்நோக்குவதோ தேவையில்லை” என்றார் டாக்டர் அம்பேத்கர்.

“இந்த வரியை வசூலிக்க நடவடிக்கை தொடங்கிய அடுத்த கணமே எதிர்ப்பு தொடங்க வேண்டும். அதிகரித்த வரியை வசூலிக்க நடவடிக்கை தொடங்கிய முதல் கட்டத்திலும் அடுத்தடுத்த கட்டங்களிலும் அதனை அடியோடு எதிப்பது என்ற கருத்தை நினைவில் நிறுத்திக் கொண்டு வடண்டார்கள் திரும்பிச் செல்லட்டும்”!

---

1. தி பாம்பே கிரானிக்கிள்

* பத்திரிகைத் தேதி ‘20’ என்பது தவறாக பிரசுரிக்கப்பட்டிருக்கக் கூடும் - ஆசிரியர்கள்.

# (67)

## குறிப்பிடத்தக்க மாற்றம் ஏற்பட்டுள்ளது . .

*1941 ஆகஸ்டு 20ஆம் தேதி,* சுதந்திரத் தொழிற்கட்சியின் தலைமையகத்திற்காக டாக்டர் அம்பேத்கரிடம் கட்டிட நிதியளிக்கப்பட்டது. இக்கட்டிடத்திற்காக ரூ 40, 000/- பெறுமான நிலம் குத்தகைக்கு எடுக்கப் பட்டுள்ளது. நிதியளித்தவர்கள் அந்தப் பகுதியைச் சேர்ந்தவர்கள். அப்போது பேசிய டாக்டர் அம்பேத்கர், கடந்த சில ஆண்டுகளில் தாதருக்கு அருகிலுள்ள காசர்வாடியில் நகராட்சி கொண்டு வந்துள்ள பிரமாதமான மாற்றங்களையும் அப்பகுதியிலுள்ள அரிஜன குடியிருப்புகள் மேம்படுத்தப் பட்டுள்ளதையும் பற்றியும் குறிப்பிட்டார்.*

*நிதியை வழங்கிப் பேசிய திரு. உப்ஷாம் கட்டிட நிதிக்காக நான்காவது முறையாக பணம் கொடுப்பதாகக் குறிப்பிட்டார்.*

*நகராட்சியின் கம்கார் தொழிற்சங்கத்தின் பொதுச் செயலாளரான திரு.டி.வி. பிரதான் பேசுகையில், தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் குஜராத்திப் பிரிவினர், சங்கத்தின் நடவடிக்கைகளால் கிட்டுகிற முழுப்பயனையும் பகிர்ந்து கொள்ளும் அதே வேளையில் சங்க நடவடிக்கைகளில் பங்கேற்க மறுக்கிறார்கள் என்று கூறி வருத்தப்பட்டார்.*

*செப்டம்பர் 7-ஆம் தேதி நகராட்சித் தொழிலாளர்கள், பஞ்சப்படி கோரி ஊர்வலம் நடத்துவார்கள் என்றும் அவர் அறிவித்தார்!*

---

*1. தி பாம்பே கிராணிக்கிள் 1941, ஆகஸ்டு 20.*

# (68)

# கல்வி பெற்ற நபர்கள் ராணுவத்தில் சேர வேண்டும்

*1941 செப்டம்பர் 21 ஆம் நாள் பரேலிலுள்ள ஆர். எம். பட் உயர்நிலைப் பள்ளியில் இரவு சுமார் 9. 15 மணிக்கு 'மஹர் படைப்பிரிவு' என்ற பொருளில், மஹர் வகுப்பினர் நடத்திய கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் பேருரை நிகழ்த்தினார். சுமார் 500 மஹர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.*

*இந்த வகுப்பினரில் கல்விகற்ற நபர்கள் ராணுவத்தில் சேருவதற்கு உற்சாகப்படுத்தவே இந்தக் கூட்டம் நடந்ததாக டாக்டர் அம்பேத்கர் கூறினார். கடந்த பெரும் போரில் 111 மஹர்கள் செய்த வீரச் செயல்களைக் கருத்தில் கொண்டு மஹர் படைப்பிரிவு ஒன்று தொடங்க இருப்பதாக அவருக்கு இந்திய அரசாங்கம் வாக்குக் கொடுத்திருந்தது. அந்தப் படைப்பிரிவில் அதிகாரிகளாக இருந்த இந்துக்களும் முஸ்லீம்களும் இந்த ராணுவ வீரர்கள் ராணுவ வேலைகளுக்குத் தகுதியற்றவர்கள் என்று கூறியதால் இந்தப் படைப் பிரிவு கலைக்கப்பட்டு விட்டது என்பதைச் சுட்டிக் காட்டினார் அவர், எனவே, இந்த முறை மஹர் படைப்பிரிவுக்கு மஹர் அதிகாரிகளையே நியமிக்க வேண்டும் என்று தாம் வற்புறுத்தியதாகக் கூறினார். எனவே, வந்திருப்பவர்கள் ராணுவத்தில் சேர வேண்டும் என்று பொதுவாக வேண்டுகோள் விடுத்ததுடன் குறிப்பாக கல்வி கற்றவர்கள் இவ்வாறு செய்ய வேண்டும் என்றார் அவர்,*

*சொற்பொழிவு சுமார் 10 மணிக்கு முடிவடைந்தது.[1]*

*டாக்டர் அம்பேத்கரின் பேச்சில் கூடுதல் பரிமாணங்கள் இருந்ததை "டைம்ஸ் ஆஃப் இந்தியா" பத்திரிகை வெளியிட்டது. அப்பரிமாணங்களாவன:*

---

*1. பி.எஸ். ஏ 1941, செப்டம்பர் 25.*

"வடண்டார் முறைமை மூலம் மஹார்கள் நாசிக், கண்டேஷ் மற்றும் பிறபகுதிகளில் கொடுமைப் படுத்தப்பட்ட போதும் தமது ஒத்துழைப்பை மஹார்கள் தர மறுப்பதற்கு இது தருணமல்ல என்றார் டாக்டர் அம்பேத்கர். கடைசியாக நடந்த போருக்குப் பின் மஹார் படைப்பிரிவு கலைக்கப்பட்டு விட்டது, இராணுவத்தில் சேர்ந்திருந்த மஹார்களுக்கு நிவாரணம் எதுவும் கொடுக்கப்படவில்லை. மஹார் படைப்பிரிவு ஒன்று நிரந்தரமாக வைத்திருக்க வேண்டும் என்று அண்மையில் அரசாங்கத்திடம் அவர் கேட்டுக் கொண்டார். இந்த வகுப்பினர் பெற்றுள்ள வெற்றிகளுக்கு பம்பாய் கவர்னருக்கும் வைஸ்ராய்க்கும் நன்றி கூறவேண்டும்."

மஹார்கள் பலர் தற்போது கல்லூரியில் பயின்று வருகிறார்கள் என்றார் டாக்டர் அம்பேத்கர். அவர்கள் தமது கல்வியை விட்டுவிட்டு ராணுவத்தில் சேர்ந்து மன்னர் மற்றும். வைஸ்ராயின் கமிஷன்களில் சேரத் தகுதி பெறவேண்டும், சாமானிய மஹார்கள் பெருமளவில் ரா்ணுவத்தில் சேர்ந்துள்ளனர். ஆனால் அதிகாரிகள் மட்டத்திற்கு கல்விகற்ற மஹார்கள் போதுமான அளவு இல்லை. இவ்வகுப்பாரில் கல்விகற்ற இளைஞர்கள் ராணுவத்தில் சேர முன்வருவார்கள் என்று அவர் நம்பிக்கை தெரிவித்தார்.[1]

---

1. தி டைம்ஸ் ஆப் இந்தியா 1941, செப்டம்பர் 26.

# (69)

# நமது நாட்டைக் காப்பாற்ற எனது உயிரையும் கொடுப்பேன்

*1942 பிப்ரவரி மத்தியில் பம்பாய் வாக்லே ஹாலில் வசந்தகால பேருரைகள் நடந்தன. பாகிஸ்தான் பற்றிய சிந்தனைகள் பற்றிய விவாதங்களுக்கு மூன்று நாட்கள் ஒதுக்கப்பட்டிருந்தன. அந்த விவாதங்களின் போது டாக்டர் அம்பேத்கரும் அங்கு இருந்தார். ஆச்சார்ய எம். வி. டோண்டே கூட்டத்திற்கு தலைமை தாங்கினார். டாக்டர் அம்பேத்கரின் நண்பரும் சகதோழரும் மாகாணத்தின் சிறந்த கல்வியாளருமான டோண்டேயின் வேண்டுகோளுக்கு இணங்க டாக்டர் அம்பேத்கர் பேச எழுந்தார்.*

*அவர் சொன்னார்,*

*பாகிஸ்தான் என்பது ஒரு விவாதத்திற்குரிய விஷயமே அல்ல என்று கூறுபவர்களின்பால் என்னுடைய வார்த்தைகளை நான் வீணாக்க விரும்பவில்லை. அந்தக் கோரிக்கை நியாயமற்றது என்று கருதப்பட்டால், பாகிஸ்தான் உருவாவது அவர்களுக்கு ஒரு பயங்கரமான விஷயமாகிவிடும். வரலாற்றை மறந்து விடுங்கள் என்று மக்களிடம் சொல்வது தவறு. வரலாற்றை மறந்து விடுகிறவர்களால் வரலாற்றைப் படைக்க முடியாது. இந்திய ராணுவத்தில் முஸ்லீம்களின் செல்வாக்கை குறைத்து, விரோத சக்திகளை வெளியேற்றி விட வேண்டும். நமது பூமியை நாம் காப்பாற்றுவோம். இந்தியாவில் முஸ்லீம் சாம்ராஜ்யத்தை பாகிஸ்தான் விரிவுப்படுத்தி விடும் என்று தவறான கருத்துக் கொண்டிருக்க வேண்டாம். இந்துக்கள் அதை மண்ணைக் கவ்வச் செய்வார்கள். சாதி இந்துக்களிடம் சில பிரச்சினைகளில் நான் சண்டையிடுகிறேன் என்பது உண்மைதான், ஆனால் நமது பூமியைக் காப்பாற்றுவதற்காக நான் எனது உயிரையும் கொடுப்பேன் என்று உங்கள் முன் சத்தியம் செய்கிறேன் என்றார். அவரது பேச்சைக் கேட்டு இடியோசை போன்ற கரவொலி எழுந்தது.[1]*

---

*1. கீர் பக். 340 - 341.*

## (70)

# உங்கள் விமோசனம் உங்கள் கையில்தான் இருக்க வேண்டும்

1942 ஏப்ரல் 26ஆம் நாள் "இந்துக்கள் நமக்காக என்ன செய்தனர்" என்கிற வெடிகுண்டு, வீசுவது பற்றி விபரம் சேகரிப்பதற்கு புத்தகங்களிடையில் ஞாயிறு முழுதும் இருந்த அம்பேத்கர் அங்கிருந்து வெளியேறி வெடிகுண்டா, ஒத்துழைப்பா என்ற தலைப்பில் பேசுவதற்காக பம்பாய் காம்கார் மைதானத்துக்கு விரைந்தார்.

அவரது பொன்விழா கொண்டாட்டத்திற்காக நிதியளிப்பு நிகழ்ச்சிக்கு பெரும் கூட்டம் கூடியிருந்தது. ஒரு கண்காட்சிக்கு வந்தது போல கூடியிருந்த பதினாயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் போர் முழக்கமிட்டபடி திரும்பினர்.

"பிறந்த நாள் விழாக்கள் இனிமேல் எனக்கு வேண்டாம்" என்று கூறினார் அம்பேத்கர்.

மென்மையான, அமைதியான டாக்டர் அம்பேத்கரின் குரல் இடியோசையாக மாறியது: பிரிட்டிஷ் அரசாங்கம் மிகமோசமாக நமக்கு துரோகம் இழைத்து விட்டது. பிரிட்டனுக்கு வாய்த்துள்ள கஷ்டநேரத்தில் காங்கிரசையும் லீகையும் கிரிப்ஸ் ஆலோசனைகள் சாந்தப்படுத்தி, தாழ்த்தப்பட்ட வகுப்பினரை பலி கொடுத்து விட்டன. காங்கிரசும் லீகும் முன்வைக்கும் கோரிக்கைகள் கடுமையான முரண்பாடுகளைக் கொண்டவை. பிரிட்டிஷார் இருசாராரின் கோரிக்கைகளையும் ஏற்றுக் கொண்டதன் மூலம் இரு சாராருமே அவற்றை நிராகரித்தனர். இது நல்லதே.

தாழ்த்தப்பட்ட வகுப்பினர் பேரழிவிலிருந்து காப்பாற்றப் பட்டனர். ஆனால் இந்தத் துயரம் மீண்டும் தலைதூக்கலாம். அவ்வாறு அடுத்த முறை நடக்கும் போது நீங்கள் செயல்படத் தயாராக இருக்க வேண்டும். என்ன மாதிரியான நடவடிக்கை எடுப்பது என்பது பற்றி எனக்கு கவலையில்லை, சட்டபூர்வமாக அல்லது

சட்டவிரோதமாக, வன்முறை அல்லது அகிம்சை முறையில் அமைதி பூர்வமாக அல்லது சலசலப்புடன், எதுவானாலும் சரிதான்.

## காங்கிரசுக்கு போகளை

சட்ட பூர்வ நடைமுறை வல்லுனரான அம்பேத்கர், தனது அடுத்த விழாவை புரட்சி வீரராக கொண்டாடும் சாத்தியம் பற்றி சாடை காட்டினார்.

அவர் சொன்னார்: நீங்கள் மீண்டும் ஓர் அரசியல் நிர்ணய சபையைச் சந்திக்க நேரலாம். உங்களுக்கு அரசியல் நிர்ணய சபைக்குள் இடம் கிடைக்காமல் போகும். உங்கள் தலைமையகமே உங்கள் நியாயபூர்வமான இடமாகிவிடும். அங்கு நீங்கள் வெடிகுண்டுகள் தயாரிப்பீர்கள் - ஆம், வெடிகுண்டுகள் தயாரிப்பு; இதை நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள். மற்றவர்களைவிட கையெறி குண்டுகளை நாம் சிறப்பாகக் கையாளுவோம்.

20 ஆண்டுகளாக காங்கிரசுடன் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த அம்பேத்கர், அக்காங்கிரசுக்கு கை கொடுக்க முன்வந்தார்; நீங்கள் சுயராஜ்யத்துக்காகப் போராடி வருகிறீர்கள். நான் உங்களுடன் சேர்ந்து கொள்ளத் தயார். உங்களைவிட சிறப்பாக நர்ன் போரிட முடியும் என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். நான் ஒரேயொரு நிபந்தனைதான் விதிப்பேன். சுயராஜ்யத்தில் எனக்கு என்ன பங்கு கொடுப்பீர்கள் என்று சொல்லுங்கள், இதை எங்களுக்குச் சொல்ல விரும்பாமல் எனது முதுகுக்குப் பின்னால் பிரிட்டிஷாருடன் சமரசம் செய்து கொள்ள விரும்பினால், நீங்கள் இருவருமே நாசமாய்ப் போங்கள்.

கூடியிருந்தோரைப் பார்த்து ஒரு பாசமுள்ள தந்தையைப் போல பண்டைக் கால கதைகளைச் சொல்லி கடந்த 23 ஆண்டுகளாக நிகழ்ந்த நாட்டு நடப்புகளை எடுத்துக் கூறினார். பழைய சம்பவங்களை நினைவு கூர்ந்த அவர், முதன் முதலில் கோலாபூரில் பொதுக்கூட்டத்தில் பேசியதையும், வெறுக்கத்தக்க படிக்கங்களை, அவை விலை மதிப்பற்ற பரம்பரைச் சொத்து என்றும், ஒடுக்கப்படுவது தமது பிறப்புரிமை என்றும் நம்பிய அவரது மக்களே அவருக்கு எதிராகச் செயல்பட்டது ஆகியவற்றை எடுத்துக் கூறினார்.

இந்தப் பழக்கங்களைப் பற்றி டாக்டர் அம்பேத்கர் விவரிக்கும் போது, மேடைக்கு அருகில் நாகரிக உடையணிந்து வீற்றிருந்த அழகு மங்கைகள் திரும்பிபார்த்து சுருக்கம் விழுந்திருந்த தமது அன்னையரைப் பார்த்துச் சிரித்தனர். அந்த அன்னையர்கள் அன்று செய்து வந்த பணிகளையும் அவற்றை வேண்டா வெறுப்பாகக் கைவிட்டதையும் நினைத்து வெட்கப்பட்டனர். அம்பேத்கர் மேலும் சொன்னார்:

"அந்தக் கேடுகளிலிருந்து இன்று நீங்கள் பரிசுத்தமாகி விட்டீர்கள், மூட நம்பிக்கைகளில் ஜாதி இந்துக்களின் ஆண் பெண்களுக்கு முன்னால் அதிகாலை வெண்பனி போல நீங்கள் நிற்கிறீர்கள். இந்த மராத்தாக்களும் பந்தாரிகளும் சமுதாய, கலாசாரக் கண்ணோட்டத்தில் பார்க்கையில் உங்களுக்குக் காத தூரத்துக்குப் பின்னால் இருக்கிறார்கள்.

நான் எனது பொது வாழ்வைத் தொடங்கியபோதும், அதற்குப் பலகாலம் பின்பும் நல்லதோ கெட்டதோ நாம் இந்து சமூகத்தின் ஒரு அங்கம்தான் என்று எண்ணி வந்தேன்.

இந்து சமூகத்திலுள்ள தீங்குகளைக் களைந்து, தாழ்த்தப்பட்ட வகுப்பினரையும், சமத்துவ அடிப்படையில் அதில் சேர்த்துக் கொள்ளலாம் என்றுதான் நீண்ட டகாலம் நம்பி வந்தேன். இதுவே மஹத் சௌதார் குளத்து சத்தியாக்கிரகமும், நாசிக் ஆலயப் பிரவேச சத்தியாக்கிரகமும் நடைபெற உந்துதலாக இருந்தது. இந்த நோக்கத்துடன்தான் மனுஸ்மிருதியை எரித்தோம், வெகுஜன பூனூல் போராட்டம் நடத்தினோம். ஆனால் அனுபவம் எனக்குக் கற்றுக் கொடுத்தது வேறு. இந்துக்களுடன் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சமஉரிமையுடன் வாழமுடியாது, இந்து சமுதாயத்தின் அடித்தளமே சமத்துவமின்மைதான் என்று நான் முழுமையாக இன்று நம்புகிறேன்.

இந்து சமுதாயத்தின் ஓர் அங்கமாக நாம் இருக்க இனி விரும்பவில்லை.

பிறகு நாம் என்ன செய்வது? பொருத்தமான ஒரு நேரத்தில் அதை முடிவு செய்வோம். இந்து சமூகத்தின் ஓர் அங்கமாக எந்தக் காரணம் கொண்டும் இருக்க முடியாது என்று மட்டும் இப்போதைக்கு சொல்ல விரும்புகிறேன். இந்த நாட்டை ஆட்சி

செய்வதில் நாம் பங்குதாரராக இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன். இந்துக்களிடமிருந்து தனித்து நாம் அரசியல் உரிமை பெற்றவர்கள் என்று தெளிவாக அங்கீகரிக்கப்படவேண்டும்.

இந்த உரிமைகளை அங்கீகரிக்க இந்துக்கள் ஒத்துக் கொண்டால் நான் அவர்களுடன் இணைந்து நாட்டின் சுதந்திரத்துக்காகப் போராடத் தயார்.

டாக்டர் அம்பேத்கர் வீரவழிபாடு செய்பவரல்ல. தன்னைப் பின்பற்றுபவர்களும் அவ்வாறு செய்ய அவர் விரும்பவில்லை. வீரவழிபாட்டினால் விளைந்த தீங்குகளையும், நூற்றுக்கணக்கான ஆண்டுகளாய் அது விளைவித்த சேதங்களையும் அவர் நன்கு அறிவார்.

அமைதியாகவும் அழுத்தம் திருத்தமாகவும் டாக்டர் அம்பேத்கர் சொன்னார்: "கடந்த 15 ஆண்டுக்காலமாக எனது பிறந்த நாளை நீங்கள் கொண்டாடிவருகிறீர்கள். இவற்றில் நான் ஒரு போதும் கலந்து கொண்டதில்லை. நான் இதை எப்போதும் எதிர்த்தே வந்திருக்கிறேன். இப்போது எனது பொன்விழாவை நீங்கள் கொண்டாடியுள்ளீர்கள். இதுவே போதும். இனிமேல் எந்தக் கொண்டாட்டமும் வேண்டாம்.

காரணம்: தலைவர்களின் மீது அளவு கடந்த மரியாதை வைப்பதால் மக்களின் தன்னம்பிக்கை குறைந்து விடுகிறது. சோதனைக்காலத்தில் தலைவர் இல்லாதபோதோ, ஒழுக்க மற்ற தலைவர்கள் வாய்க்கும் போதோ அவர்கள் நிர்க்கதியாய் இருப்பார்கள்.

இந்து சமுதாயம் வீழ்ச்சியுற்றதற்கும், அதன் தற்போதைய தாழ்வு நிலைக்கும் ஒரு முக்கிய காரணம் என்னவெனில், சோதனைக் காலங்களில் மக்களின் கதியற்ற நிலையைப் போக்க மக்கள் தனது அவதாரத்தை எதிர்நோக்க வேண்டும் என்று கிருஷ்ணன் சொன்னதுதான். பேராபத்துகள் வரும்போது இந்து சமுதாயம் கையறு நிலையில் நிற்பதுக்கு இதுவே காரணம்.

அழிவைக் கொண்டுவரும் இத்தகைய போதனைகளை நீங்கள் பின்பற்றக்கூடாது நீங்கள் மேன்மையடைய எந்தவொரு

தனிமனிதனையும் சார்ந்திருக்கக்கூடாது. உங்கள் மேன்மை உங்கள் கையில்தான் இருக்க வேண்டும், உங்கள் முயற்சிகளில்தான் இருக்க வேண்டும்.''[1]

முடிவாக, பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கும் இந்துக்களுக்கும் ஓர் எச்சரிக்கை விடுத்தார் டாக்டர் அம்பேத்கர். அதிகார மாற்றத்தின் போது, தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு தகுந்த உத்தரவாதம் தர வேண்டும் என்பதை பிரிட்டிஷ் அரசாங்கம் நினைவில் கொள்ள வேண்டும். அவ்வாறு செய்யவில்லையென்றால் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தமது சக்திகளையெல்லாம் திரட்டி பிரிட்டிஷாருக்கு எதிராகப் போரிடுவார்கள். தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு போதுமான உத்தரவாதத்தை இந்துக்கள் அளித்தால், அவர்களுடன் தோளோடு தோள் சேர்ந்து போரிடுவார்கள். இல்லையென்றால் அவர்களுடன் எத்தகைய சமரசமும் கிடையாது.

டாக்டர் அம்பேத்கரின் 50-வது பிறந்த தினத்தைக் கொண்டாடுவதற்காக அமைக்கப்பட்ட பொன்விழாக் கமிட்டி, கமாகர் மைதானத்தில் நடந்த மாபெரும் பொதுக்கூட்டத்தில் ரூ 580/ - க்கான பணமுடிப்பை அவரிடம் அளித்தது.[1] நகர மன்ற உறுப்பினர் திரு. எம்.வி. டோண்டே கூட்டத்துக்குத் தலைமை வகித்தார்.[2]

1. தி பாம்பே கிரானிக்கிள் 1942, ஏப்ரல் 27.
2. பாம்பே சென்டினல் (பம்பாய்) 1942, ஏப்ரல் 28.

# (71)

# எனது வீட்டுக் கதவுகள் நண்பர்களுக்கு எப்போதும் திறந்தே இருக்கும்

*1942 ஜூலை 2-ல் வெளியிடப்பட்ட பிரகடனத்தின்படி டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் இந்திய வைஸ்ராயின் நிர்வாகக் கவுன்சிலில் இடம் பெற்றுள்ளார்.*

"1942 ஜூலை 5ஆம் நாள், தேசிய பாதுகாப்புக் கவுன்சில் கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக டாக்டர் அம்பேத்கர் டெல்லிக்குப் புறப்பட்டுச் சென்று, பம்பாய்க்கு ஜூலை 11 ல் திரும்பினார்,

அம்பேத்கர் திரும்பிவந்த பொழுது, பம்பாய் ரேடியோ கிளப்பில் அவரது நண்பர்களும் அவரைப் பின்பற்றுபவர்களும் அவருக்கு ஒரு விருந்தளித்தனர். அந்த நிகழ்ச்சியில் ஆச்சார்யா எம்.வி. டோண்டே பேசுகையில் கடந்த காலத்தில் செய்த பொறுமைமிக்க பணிகளைக் குறிப்பிட்டு டாக்டர் அம்பேத்கருக்கு அவர்கள் பக்க பலமாக இருந்ததை நினைவு கூர்ந்தார். மேலும், தமது தலைவர் தமது மக்களின் அடிமைத்தனத்தை முடித்து வைத்து, இந்திய உழைக்கும் மக்களின் நிலைமைகளை மேம்படுத்தும் பணியில் வெற்றி பெறுவார் என்று நம்பிக்கை தெரிவித்தார்.

இதற்குப் பதிலளித்து டாக்டர் அம்பேத்கர் பேசுகையில்: தாம் ஓர் ஏழைக் குடும்பத்தில் பிறந்ததாகவும், ஏழைகள் மத்தியில் வளர்ந்ததாகவும், அவர்கள் மத்தியில் வாழ்ந்ததாகவும், ஓதம் பிடித்த தரையில் சாக்கு விரித்துப் படுத்துக் கொண்டு அவர்களுடன் தூங்கியதாகவும், அவர்களின் துன்பங்களைப் பகிர்ந்து கொண்டதாகவும் சொன்னார். தமது நண்பர்களுடனும் மற்றவர்களுடனும் பழகுவதில் எத்தகைய மாற்றத்தையும் தாம் செய்யவில்லையென்றும், டில்லியில் உள்ள தமது வீட்டின் கதவுகள் நண்பர்களுக்காக எப்போதும் திறந்தே இருக்கும் என்றும் கூறினார்."[1]

---

*1. கீர், பக். 347-349.*

# (72)

# சமுதாயத்தின் கீழ்த்தட்டு மக்கள் நடத்தும் போராட்டம் தொழிலாளிவர்க்கத்தின் அனைத்துப் பிரிவினருக்கும் நன்மை பயக்கும்

1942 ஜூலை 12ஆம் நாள் சுதந்திரத் தொழிற்கட்சியும் பம்பாய் நகராட்சித் தொழிலாளர் சங்கமும், டாக்டர் அம்பேத்கருக்கு வாழ்த்துத் தெரிவிக்கும் கூட்டம் நடத்தின.

தொழிலாளர்களிடம் பேசும்போது, நிர்வாகத்தின் பிரதான பணி நாட்டின் பாதுகாப்புத்தான் என்றும், கவுன்சிலுள்ள தோழர்களைப் பொறுத்தே தாம் என்ன சாதிக்க முடியும் என்பதை நிர்ணயிக்க முடியும் என்றும் கூறினார்.

பம்பாய் ஆர்.எம். பட் உயர்நிலைப் பள்ளியில் இன்னொரு கூட்டம் கொங்கன் மாவட்ட விவசாயிகளால் நடத்தப்பட்டது. போராட்டத்தில் தான் ஒதுபோதும் சரணடையப் போவதில்லை என்றும், இந்தியாவிலுள்ள தொழிலாளி வர்க்கத்தின் நலன்களைக் காப்பதற்காக தான் போராட்டம் நடத்த வேண்''ுள்ளது' என்றும் அறிவித்தார் அம்பேத்கர். எனினும் ஒவ்வொரு சிறு விஷயத்திலும் ஏற்படும் கருத்து வேறுபாடு காரணமாக அமைச்சரவையிலிருந்து தாம் ராஜினாமா செய்துவிடப் போவதாக மிரட்டப் போவதில்லை என்றும் கூறினார் அவர்,

தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக தனியாக ஒரு அமைப்பு தோன்றுவது, பொதுவான தொழிலாளர் வர்க்கத்தின் நலன்களுக்கு கேடுபயக்கும் என்ற கூற்றுக்கு அம்பேத்கர் பதிலளித்தார். சமுதாயத்தின் மிகக் கீழ்மட்டத்திலுள்ளோர் நடத்தும் போராட்டம் தொழிலாளி வர்க்கத்தின் எல்லாப் பிரிவினருக்கும் நலம் பயக்கும், எப்படியென்றால், ஒரு கட்டிடத்தின் மிகக் கீழே உள்ள கல் அதன் நிலையிலிருந்து நகர்த்தப்பட்டால், அதற்கு மேலே உள்ள கற்கள் எல்லாம் தமது நிலையில் ஆட்டம் காணவே செய்யும் என்றார்

அம்பேத்கர். ஜாதி இந்து வகுப்பைச் சேர்ந்த தொழிலாளர்கள், தாழ்த்தப்பட்ட வகுப்பினரிடம் கொண்டுள்ள எதிர்ப்புணர்ச்சி மறையவில்லை என்று அவர் சுட்டிக் காட்டினார்.

விழாவிற்குத் தலைமை தாங்கிய ஆனந்தராவ் சித்ரே, தொழிலாளர் இயக்கத்திற்கு அம்பேத்கர் ஆற்றிவரும் பணிகளையும் அவரது செல்வாக்கையும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் அல்லாதார் மத்தியிலும் விரிவுபடுத்தி, இந்தியாவிலுள்ள உழைக்கும் மக்கள் அனைவருக்கும் அவர் தலைமை ஏற்க வேண்டும் என்று வேண்டிக் கேட்டுக் கொண்டார்."[1]

---

1. கீர், ப. 349.

# (73)

# மிகக் கீழே இருக்கும் கல்லை நகர்த்தினால் அதற்கு மேலிருக்கும் கற்கள் ஆட்டம் காணும்[1]

ரத்னகிரி, கொலாபா மாவட்டங்களைச் சேர்ந்த விவசாயிகளும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரும், பம்பாய் பட் உயர்நிலைப் பள்ளியில் நேற்று மாலை* நடந்த கூட்டத்தில் தம்மை வாழ்த்திப் பேசியதைத் தொடர்ந்து டாக்டர் அம்பேத்கர் உரையாற்றினார்:

"நிர்வாகக் கவுன்சிலில் இந்தியத் தொழிலாளர் வர்க்கத்தின் நலன்களைக் காக்கவும் அவர்களை முன்னேற்றவும் நான் தொடுக்கும் போராட்டத்தில் சரணடைய மாட்டேன் என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். இதில் நீங்கள் என்னை நம்பலாம். எனது ராஜினமாக் கடிதத்தை எனது சட்டைப் பையில் எப்போதும் வைத்துக் கொண்டிருந்து, சக தோழர்களுடன் ஏற்படும் சிறுசிறு கருத்து வேறுபாடுகளின் காரணமாக அதனை உடனே தோழர்களின் முகத்தில் விட்டெறிந்து, சிறுபிள்ளையைப் போல நடந்துகொள்ள மாட்டேன் என்றும் உங்களிடம் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

மற்ற சமூகத்தில் இருக்கிற உழைக்கும் மக்களுடன் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இயக்கம் கூட்டணி அமைத்துக் கொள்ள வேண்டும் என்பதிலும் நான் மிகுந்த அக்கறை காட்டுகிறேன்.

இந்தக் குறிக்கோளுடன் தான் பிராமணர் அல்லாதார் கட்சியுடன் நான் கடந்த பத்து ஆண்டுகளாக ஒட்டிக் கொண்டி

---

1. பம்பாய் சென்டினல் 1942, ஜூலை 14.

1942 ஜூலை 14ஆம் தேதியிட்ட பி.எ.ஏ. பிரகாரமும், 1942 ஜூலை 21ஆம் தேதியிட்ட பாம்பே கிரானிக்கிள் பிரசுரித்த பிரகாரமும் இந்த கூட்டம் 1942 ஜூலை 15ஆம் தேதி நடைபெற்றது. பாம்பே சென்டினல் பிரசுரித்துள்ள '14ஆம் தேதி' என்பது தவறாக இருக்கக் கூடும் - ஆசிரியர்கள்.

ருக்கிறேன். பிராமணர் அல்லாத சமூகத்தைச் சேர்ந்த உழைக்கும் மக்களின் விடுதலைக்காக தான் ஆற்ற வேண்டிய மகத்தான கடமையை மேற்கொள்வதற்கு கூடிய சீக்கிரம் முன்வரும் நம்பிக்கையில் தான் இங்கு ஒட்டியிருக்கிறேன்.

ஜனநாயகம் என்ற கொள்கை வைரம் அக்கட்சியிடம் உள்ளது. அதன் தலைவர்கள், துரதிருஷ்டவசமாக தமது கடமைகளையும் பொறுப்புகளையும் உணராமல் அரசாங்கம் மற்றும் காங்கிரசின் அரவணைப்பில் கட்சி துண்டு துண்டாகச் சிதறுவதற்கு வழி செய்து விட்டது.

இந்த விஷயத்தில் அவர்கள் ஏதாவது செய்தால் இப்போதும் கூட நான் அதை வரவேற்பேன். பிரமாணரல்லாத உழைக்கும் மக்கள் எமது கட்சியில் சேர்ந்து கொள்ள வேண்டும் நான் வற்புறுத்தவே மாட்டேன். அவர்கள் விரும்பினால் தமது கட்சியை வைத்திருக் கட்டும். ஆனால் சுரண்டும் வகுப்பினரான பிராமணர்கள், முதலாளிகள், நிலச்சுவான்தார்கள், ஏனைய சுரண்டும் வகுப்பினர் ஆகியோருக்கு எதிராக நாம் ஓரணியில் நிற்கலாம். கட்சியை உடைத்ததன் மூலம் பிராமணர் அல்லாதோர் அரசியல் தற்கொலை செய்து கொண்டனர்.

என்னைப் பொறுத்தவரை இத்தகைய தற்கொலைப் பாதையில் செல்ல நான் விரும்பவில்லை. தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தமக்கென்று ஒரு வேலைத் திட்டத்தை வைத்திருப்பர்.

தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தமக்கென்று ஒரு தனி அரசியல் கட்சி வைத்திருப்பதால், உழைக்கும் மக்களின் மொத்த நலன்களும் பாதிக்கப்படும் என்று சிலர் சொல்கின்றனர்.

ஒரு கட்டிடத்தின் மிகக் கீழே உள்ள கல்லை அதன் இடத்திலிருந்து நகர்த்தி விட்டால், அதற்கு மேலுள்ள கற்கள் எல்லாம் தத்தமது நிலையிலிருந்து ஆட்டம் காணவே செய்யும். மாறாக, ஜாதி இந்துக்களை மட்டுமே கொண்ட உழைப்பாளர்கள் அமைப்பு ஒன்று, இந்துக்களுக்கு உதவியாக இருக்காது.

அந்த அமைப்பு, கறாராக வழிநடத்தப்படவில்லையென்றால் அது தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தீங்கு பயப்பதாகக் கூட ஆகிவிடும். தாழ்த்தப்பட்ட வகுப்புத் தொழிலாளரின் உரிமையை சாதி இந்து அமைப்புகள் அங்கீகரிக்காமல் இருக்கலாம். கடந்த காலங்களில் பலப்பல முறை நடந்துள்ளது போல அந்த உரிமைகளை அவர்கள் காலடியில் போட்டு மிதிக்கலாம்.

என்னுடைய கருத்தை நிரூபிக்க ஓர் உதாரணம் போதும். 1929ல் பம்பாய் துணி ஆலைகளில் தொடர்ந்து வேலைநிறுத்தம் நடந்தது. அந்த வேலை நிறுத்தத்தின்போது வேலைநிறுத்தத் தலைவர்களை அணுகி, தாழ்த்தப்பட்ட வ வகுப்பினரைச் சேர்ந்தவர்கள் மில்லின் சிலதுறைகளில் வேலை செய்வதற்கு சாதி இந்துக்கள் விதித்திருந்த தடையை நீக்குவதற்கு ஏதாவது செய்யுமாறு கேட்டுக் கொண்டேன். பல மாதங்களுக்கு தொழிலாளர் தலைவர்கள் எதுவும் செய்யவில்லை. ஒரு பயனற்ற தீர்மானத்தை மேற்கொண்டு அதனை ஃபாவ்செட் கமிட்டிக்கு அனுப்பி மட்டும் வைத்தார்கள். கமிட்டியோ இந்த விஷயத்தில் ஒன்றும் செய்யவில்லை.

இதற்கு மாறாக, கோட்டி முறையை ஒழிப்பதற்காக ஓர் இயக்கத்தை நாங்கள் தொடங்கினோம். தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் நலன்களுக்காகத்தான் இந்த இயக்கம் பிரதானமாக தொடங்கப் பட்டது, என்றாலும் கோட்டி நிலம் வைத்திருந்த சாதி இந்துக் களுக்கும் அது உதவிகரமாக இருந்தது. இத்தகைய சம்பவங்கள் எண்ணற்றவை உண்டு.

எங்கள் பிரிவினரின் இயக்கம் எவ்விதத்திலும் மற்ற பிரிவினருக்கு தீங்கு பயப்பதாக இருக்காது என்று நான் அழுத்தம் திருத்தமாகக் கூற விரும்புகிறேன். மேலும் இதர உழைக்கும் பிரிவினருடன் ஒன்றுபட்டுச் செயலாற்ற நாங்கள் எப்போதும் தயாராக இருக்கிறோம்.

திரு. ஏ. வி. சித்ரே தமது தலைமையுரையில், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் அல்லாதவர்களையும் தமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரும் விதத்தில் தொழிலாளர் இயக்கத்தை விரிவுபடுத்தும் முயற்சிக்கு டாக்டர் அம்பேத்கர் தலைமை தாங்க வேண்டும் என்று

சொன்னார். டாக்டர் அம்பேத்கர் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு மட்டுமின்றி இந்தியாவின் உழைக்கும் மக்கள் அனைவருக்கும் தலைவராக இருக்க வேண்டும் என்று தாம் விரும்புவதாகவும் அவர் சொன்னார்.

சுரேந்திரநாத் திப்னிஸ், நாராயண் நாகு பட்டீல், தேவ்ராவ் நாயக், வத்வால்கர், மற்றும் கெய்க்வாட் ஆகியோரும் பேசினர்.

---

# (74)

# ஜனநாயகம் மடிந்து போனால் அது நமக்குப் பேரழிவு ஆகும்

*1942 ஜூலை 18ல், அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மாநாட்டின் மூன்றாவது அமர்வுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ராவ் பகதூர் சிவராஜ் எம்.எல்.ஏ (மத்திய பகுதி) மற்றும் டாக்டர் அம்பேத்கர் இருவரும் நாக்பூருக்கு வந்து சேர்ந்தனர். வரவேற்புக் குழுவின் தலைவரும் உறுப்பினர்களும் அவர்களை வரவேற்றனர். வரவேற்புக் குழு உறுப்பினர்களும் பிரதிநிதிகளும் மேடையில் அமர்ந்திருந்தனர். 'அம்பேத்கர் வாழ்க' என்ற இடி முழக்கத்துக்கிடையே தலைவராகத் தேர்வு பெற்றவருக்கும் டாக்டர் அம்பேத்கருக்கும் அன்புடன் வரவேற்பளித்தனர். தலைவருக்கும் அம்பேத்கருக்கும் ஏராளமான மாலைகள் அணிவிக்கப்பட்டன. தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவரையும் டாக்டர் அம்பேத்கரையும் ஊர்வலமாக ரயில் நிலையத்தின் புறவெளிக்கு அழைத்துச் சென்றனர். அம்பேத்கரையும் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவரையும் தரிசிப்பதற்காக அங்கே 50, 000 க்கும் மேற்பட்டோர் கூடியிருந்தனர். அவர்கள் அங்கு வந்தவுடன் 'அம்பேத்கர் வாழ்க' என்ற முழக்கத்துடன் கரவொலி எழுந்தது. புல்வெளியில், மாகாணத்தின் சமதா சைனிக் உறுப்பினர்கள் 5000 பேர் சீருடை அணிந்து மரியாதை அணிவகுப்பு நடத்தினர். சைனிக்குகளின் பேண்டு வாத்தியம் பொருத்தமான இசைகளை வாசித்தது. மரியாதை அணிவகுப்பை ஏற்றுக் கொண்ட தலைவரும் டாக்டர் அம்பேத்கரும் மாநாட்டுப் பந்தலுக்கு ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டனர். சமதா சைனிக்ல் தளத் தொண்டர்கள் ஒரு மைல் நீள ஊர்வலமாக இவர்களுக்கு முன் சென்றனர், அவர்களுடன் பேண்டு வாத்தியமும் ஆயிரக்கணக்கான மாநாட்டுப் பார்வையாளர்களும் பிரதிநிதிகளும் சென்றனர். அதுவரை காணப்படாத அந்த ஊர்வலத்தை நாக்பூர் மக்கள் நீண்ட நாள் நினைவில் வைத்திருப்பர். வெற்றி விழா வளைவுகள் வழிநெடுக அமைக்கப் பட்டிருந்தன. அவற்றிற்கு 'அம்பேத்கர் நுழைவாயில்', 'ஹர்தாஸ் நுழைவாயில்', "கல்லு அஹிரே நுழைவாயில்", "ரமாபாய் அம்பேத்கர் நுழைவாயில்" என்றெல்லாம் பெயரிடப் பட்டிருந்தன.*

தலைவரும் டாக்டர் அம்பேத்கரும் தங்கிய மோகன் பார்க் ஹோட்டலுக்கு முன்புறம், சைனிக்குகள் இருபுறமும் வரிசையாக நின்று, தமது லத்திக் கம்புகளை ஆர்ச் வளைவாகப் பிடித்து நிற்க மதிப்புமிக்க தலைவர்கள் அதன் வழியே நடந்து சென்றனர்.

1942 ஜூலை 18 முதல் ஜூலை 20 வரை நாக்பூரில் 3 மாநாடுகள் நடைபெற்றன.

1) அகில இந்திய தாழ்த்தப் பட்டோர் மாநாடு, இதற்கு ராவ் பகதூர் என். சிவராஜ் பி.ஏ.பி.எல்., எம்.எல்.ஏ (மத்திய பகுதி) தலைமை தாங்கினார்.

2) தாழ்த்தப்பட்ட மக்களின் மாதர் மாநாடு. இதற்கு அமராவோடியைச் சேர்ந்த திருமதி டோங்றே தலைமை தாங்கினார்.

3) சமதா சைனிக் தள மாநாடு. இதற்கு திரு. கோபால் சிங் எம்.பி. இ., எம்.எல்.ஏ. (பஞ்சாப்) தலைமை தாங்கினார்.

அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் மாநாடு மூன்று அம்சங்களில் முக்கியம் வாய்ந்ததாகும். எப்போதும் இல்லாத அளவில் ஆண்களும் பெண்களும் கலந்து கொண்டது இதன் ஒரு சிறப்பு அம்சமாகும். ஒரு அமர்வில் 75000 பேருக்குக் குறையாமல் இருந்தனர். இதில் 20000 பேருக்குக் குறையாமல் பெண்கள் இருந்தனர். இத்துடன் இந்திய மாகாணங்கள் அனைத்திலிருந்தும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பிரதிநிதிகள் இதில் கலந்து கொண்டனர்.

மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் இந்த மாநாடு நினைவில் நிற்க இரண்டாவது காரணமாகும். தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் அரசியல் கோரிக்கைகள் இத்தீர்மானங்களில் முதன் முறையாக வெகுத் தெளிவாக குறிப்பிடப் பட்டிருந்தன. இத்தீர்மானங்களைப் படிப்பவர் எவருக்கும் தீண்டத்தகாதோரின் அரசியல் கோரிக்கைகள் குறித்து எத்தகைய ஐயப்பாடும் ஏற்படாது. அவற்றின் திட்டவட்டமான வார்த்தைகளைப் பார்க்கும் போது, மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஒரு பாகிஸ்தான் கோரும் மாநாடு இது என்று சில பத்திரிகைகள் குறிப்பிட்டன.

அகில இந்திய அரிஜன சம்மேளனம் என்ற இந்தியா தழுவிய ஓர் அமைப்பை ஏற்படுத்த வேண்டும் என்று மாநாட்டில் நிறைவேற்றப் பட்ட தீர்மானத்திற்காக இம்மாநாடு நினைவில் நிற்கும் என்பது மூன்றாவது அம்சம்ஆகும்.

இந்தியாவின் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் அனைவரது ஒரே மேடையாக இந்த அமைப்பு விளங்கும். மற்ற கட்சிகள், மாநில அமைப்புகள் இந்த சம்மேளனத்தில் இணைந்து விடும் என்றும் இந்த அமைப்புக்கு மாகாணங்கள் தோறும் கிளைகள் இருக்கும் என்றும் மாநாட்டுத் தீர்மானம் வரையறுத்துக் கூறியது.

மாநாட்டில் சாதிக்கப்பட்டவற்றைக் கணக்கில் கொண்டு பார்த்தால், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு இம்மாநாடு ஒரு புதிய பார்வையைக் கொடுத்திருக்கிறது, தீண்டத்தகாதோரின் இயக்கத்துக்கு புதிய திசையைக் காட்டியிருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை.

பிரதான அரசியல் மாநாடு நடந்த அதே பந்தலில் நடந்த மற்ற இரண்டு மாநாடுகளின் நடவடிக்கைகளையும் பிரதான அரசியல் மாநாட்டு நடவடிக்கைகளுடன் இணைத்துக் கொள்வதென்று வரவேற்புக் குழு தீர்மானித்தது, இந்தியா முழுதும் உள்ள தீண்டத்தகாதவர்களிடம் உற்சாகத்தையும் அக்கறையையும் இவை உருவாக்கும். தன்னார்வத்தொண்டர் அமைப்பும், மாதர் அமைப்பும் சமுதாய, பொருளாதார விவகாரங்களில் படிப்படியாக செல்வாக்கு செலுத்தி வருவதைப் பார்த்து அவர்கள் மனவெழுச்சி பெறுவர்.

## நாக்பூரில் நடந்த அகில இந்திய தாழ்த்தப்பட்டோர் மாநாடு ஜூலை, 18, 19, - 1942 முதல் நாள் நடவடிக்கைகள்

1942 ஜூலை 18 ஆம் நாள் மதியம் 3.30 மணிக்கு நாக்பூர் மோகன் பார்கில் அமைக்கப்பட்ட விசாலமான பந்தலில் ராவ் பகதூர் சிவராஜ் எம்.எல்.ஏ (மத்திய பகுதி) தலைமையில் அகில இந்திய தாழ்த்தப்பட்டவர்களின் மாநாடு தொடங்கியது. இந்தியா முழுவதிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தனர். புகழ்பெற்றவர்கள் பலரும் பங்கு பெற அனுபதாயிரத்துக்கும் மேற்பட்டவர்கள்

இம்மாநாட்டில் கலந்து கொண்டனர். இவர்களில் 20,000 பேர் பெண்கள். இவர்கள் பெருமளவில் மாநாட்டில் கலந்து கொண்டது ஓர் அற்புதமான விஷயமாகும்.

தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டவரும் டாக்டர் அம்பேத்கரும் வரவேற்புக் கமிட்டித் தலைவரால் அவர்களின் இருக்கைகளுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். தலைவர் அமர்ந்த பின் டாக்டர் அம்பேத்கரும் மற்றவர்களும் அமர்ந்தனர். வரவேற்புப் பாடல்களுடன் நடவடிக்கைகள் தொடங்கின.

வரவேற்புப் பாடல்களுக்குப்பின் வரவேற்புக் குழுவின் தலைவரான திரு.ஜி.டி மேஷ்ரம் வரவேற்புரை நிகழ்த்தினார்.

பொதுச் செயலாளரின் சார்பாக எச்.எல். கோசரே அறிக்கை வாசித்தபின், “இந்தியா முழுவதிலிருந்தும் ஆதரவுக் கடிதங்கள் வந்துள்ளன” என்று சொன்னார்.

“அவற்றை எல்லாம் படிப்பதற்கு நீண்ட நேரம் பிடிக்கும். எனவே செய்திகள் அனுப்பியுள்ளவர்களின் பெயர்களை மட்டும் படிக்கிறேன்.”

## வங்காளம்

1. திரு. யு.என். எட்பார் எம்.ஏ.பி.எல்., எம்.எல்.ஏ
2. திரு. ஏ. மஜி., எம்.எல்.ஏ
3. திரு. பி.பி. மண்டல் பி. எல்., எம்.எல்.ஏ
4. மேதகு திரு.என். பார்மன். அமைச்சர்.

## மதராஸ்

1. ராவ்சாகேப் வி.ஜே. முனிசாமிபிள்ளை, எம்.எல்.ஏ
2. திரு. இ.கண்ணன் எம்.எல்.ஏ
3. திரு. ஆர். வீரைய்யன், கோயம்புத்தூர்
4. சுவாமி சகஜானந்தா, எம்.எல்.ஏ. சிதம்பரம்,

## பம்பாய்:

1. திரு. எஸ்.என். மானே, பார். அட்லா, பெல்காம்
2. தாழ்த்தப்பட்ட வகுப்பினர் கல்லூரி மாணவர்கள், புனா
3. திரு. சாவந்த், எம்.எல்.ஏ, சகாரா மாவட்டம்
4. பல்பீம் சிங், தூலியா
5. சமதவாடி தலித் மண்டல், தூலியா..
6. திரு. எஸ்.எம். திகாலே, புனா
7. திரு. ஆர் எஸ், சாலுங்கே, போர் ஸ்டேட் தலித் பிரஜா.
8. திரு. ஆர்.ஜி கண்டாலே, தாவுண்த்
9. திரு. டிஎஸ் துத்ரே, தானா.
10. ராஜா - பாம்பே
11. தென்னிந்திய ஆதி. திராவிடர் இளைஞர் லீக்.
12. திருநெல்வாடி மாவட்டம் 5- பி. ஆதி திராவிடர் மாநாடு
13. திரு.எம்ஜி. பார்மெர், பி.ஏ.டி.பி.ஏ எப்.ஆர்.சி.எஸ் (என். ஜி)
14. திரு. ராமாஜிபாய் பானாபாய், அகமதாபாத்
15. திரு. சோமாபாய் சுந்தர்ஜி. அகமதாபாத்
16. திரு. சாது பிரேம்தாஸ், அகமதாபாத்
17. திரு. ஆத்மராம் இச்யாராம் சோலங்கி, அகமதாபாத்
18. திரு.எஸ்.பி. சவான் மேக்வால் சுதந்திரலீக், (பாம்பே)

## பஞ்சாப்

1. திரு. பகத் ஹன்ஸ்ராஜ் எம்.எல்.ஏ
2. திரு. சுக்லால், லாகூர்.
3. திரு. ஆர். எல். போனோடியா, லாகூர்.

## உ. பி.

1. திரு. ராம்சந்தரா, அலகாபாத்

2. ராய் பகதூர் ஹோமிபிரசாத் தம்தா, அல்மோரா.

3. திரு. ராதேலால் வ்யாஸ், பரேலி.

4. திரு. கங்காராம் ஜி. தானுக், இடாவா.

## ஹைதராபாத்

1. திரு. ஜி. எஸ். மோரே, அவுரங்காபாத்.

திரு.டி.ஜி ஜாதவ் பி.ஏ., எல்.எல்.பி., பி., எம்.எல்.ஏ. ஜல்கான், கிழக்கு கந்தேஷ் (பம்பாய்), தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் தலைமைப் பொறுப்பேற்க வேண்டும் என்று முன்மொழிவார் என்று "திரு. ஜே.டி. மஷ்ராம் சொன்னார்.

அதன்படி டி.ஜி. ஜாதவ், ஆர். எல் பீஸ்வாஸ், பி. ஏ., பி.. எல்., எம்.எல்.ஏ வங்காளம், ராய் சாஹிப் ஷாம்லால் மாஜி எம்.எல்.சி. (அலகாபாத்; உ.பி.); கே. எச். ஷெண்ட்ரே பி. எ. எல்.எல்.பி. நாக்பூர், மத்திய (மாகாணங்கள்); கோபால் சிங் எம்.பி.இ., எம்.எல்.ஏ, பஞ்சாப் அரசாங்கத்தின் பாராளுமன்ற செயலாளர், குர்மையா, பி.ஏ., பி.எல்., எம்.எல்.ஏ., (மதராஸ், ஆந்திரா); ஏ.டி. ராய், எம்.எல். சி., (வங்காளம்) மற்றும் பி.என். ராஜ்போஜ், புனா (பம்பாய்) முன்மொழிந்து, வழிமொழிந்து தீர்மானத்துக்கு ஆதரவளித்தனர். அதன்பின் மேஷ்ராம் சொன்னார்: "அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மாநாட்டின் மூன்றாவது அமர்வுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள ராவ் பகதூர் சிவராஜ் அவர்களை தலைமைப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளும் தீர்மானம் முன்மொழியப்பட்டு, முறைப்படி வழிமொழியப்பட்டு மாநாட்டின் அனைத்துப் பகுதியினராலும் ஆதரிக்கப்பட்டுள்ளது. இதை நான் இப்போது வாக்களிப்புக்கு விடுகிறேன். இதை ஏற்றுக்கொள்கிறவர்கள் தமது கையை உயர்த்தவும் (அனைவரும், அனைவரும்). இதற்கு எதிர்ப்புத் தெரிவிப்பவர்கள் இப்போது தமது கையை உயர்த்தவும். ஒருவரும் எதிர்க்கவில்லை. தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. இப்போது, ராவ் பகதூர் சிவராஜ் அவர்களை தலைவர் இருக்கையில் அமரக் கேட்டுக் கொள்கிறேன். ராவ் பகதூர் சிவராஜ், பெருத்த கரவொலிக்கு இடையே தலைவர் இருக்கையில் அமர்ந்தார், அவருக்கு வரவேற்புக் குழுத் தலைவர் மாலை அணிவித்தார்.

பின்னர் கரவொலிக்கிடையே ராவ் பகதூர் மாநாட்டில் உரையாற்ற எழுந்தார், தலைமையுரையை முடித்தபின் ராவ் பகதூர் சிவராஜ் சொன்னார்: விஷயாலோசனைக் கமிட்டி மோஹன் பார்க் ஹோட்டலில் இரவு ஒன்பது மணிக்குக் கூடும். இங்கு வந்துள்ள பிரதிநிதிகள் அனைவரும் விஷயாலோசனைக் கமிட்டியில் இருப்பர். இன்று டாக்டர் அம்பேத்கரின் உரையைக் கேட்க நீங்கலெல்லாம் ஆவலாக இருப்பதால், விஷயாலோசனைக் கமிட்டி கூடுவதற்கு முன்னால் டாக்டர் அம்பேத்கரை பேச அழைக்கிறேன். அவரது பேச்சை வரபேற்புக் குழுத் தலைவர் மராத்தியில் மொழி பெயர்த்துச் சொல்லுவார்.

திரு. ஜி.டி மேஷ்ராம்: தலைவர் கேட்டுக் கொண்டபடி டாக்டர் அம்பேத்கர், தமது முழு நாள் பயணத்தால் ஏற்பட்டுள்ள களைப்பும், தொண்டைக் கமறலும் இருந்தபோதும் உங்கள் முன் பேச இசைந்துள்ளார். அவர் முதலில் ஆங்கிலத்திலும் பின்னர் மராத்தியிலும் உரையாற்றுவார். நேற்று இரவு அவர் பயணம் செய்தபோது அவரது ரயில் நின்ற இடங்களிலெல்லாம், அவரை வரவேற்பதற்காக நம் மக்கள் பெருமளவில் கூடியதால் பயணத்தின் போது அவரால் தூங்க முடியவில்லை.

டாக்டர் அம்பேத்கர் பேச எழுந்த போது நீண்ட கரவொலி எழுந்தது.

## டாக்டர் அம்பேத்கரின் உரை

டாக்டர் அம்பேத்கர் சொன்னார்:

தலைவர் அவர்களே, தாய்மார்களே, நண்பர்களே,

இந்த மாநாட்டில் முதலில் ஒருவருக்கு ஏற்படும் கஷ்டம் என்னவென்றால் அது மொழி பிரச்சினைதான். இம்மாநாட்டில் பெரும் எண்ணிக்கையில் கூடியுள்ள மக்களில் பெரும்பகுதியினர் மராத்தி பேசுவோர். எனவே இம்மாநாட்டின் செயல்பாடுகளை அவர்கள் புரிந்து கொள்ள வேண்டுமானால் ஒருவர் மராத்தி மொழியில்தான் பேச வேண்டும். பெரும் எண்ணிக்கையிலான இந்த மராத்தி பேசும் மக்களைத் தவிர, இம்மாநாட்டில் பிற

மாகாணங்களைச் சேர்ந்த மராத்தி பேசாத அரிஜன மக்களும் இருக்கின்றனர். வங்காளம், பீகார், மதராஸ், ஆந்திரா, பஞ்சாப் மற்றும் பிற மாகாணங்களிலிருந்து வந்துள்ளவர்களை நான் பார்க்கிறேன். எனவே அவர்கள் நமது செயல்பாடுகளை அறிந்து கொள்ள வேண்டும் என்றால் ஆங்கிலத்தில் பேச வேண்டியது அவசியமாகிறது. இந்தப் பிரச்சினையைத் தவிர்ப்பதற்காக நான் இரண்டு முறை பேச எத்தனிக்கிறேன், முதலில் ஆங்கிலத்தில், பின்னர் மராத்தியில். இதனால் இருபிரிவினரும் நான் சொல்வதைப் புரிந்து கொள்ள முடியும். இன்று நான் ஆங்கிலத்தில் பேசுவேன். நாளை மராத்தியில் உரை நிகழ்த்துவேன்,

இந்த மாநாட்டை நடத்துவதென்ற கருத்து எப்போது உருவானது என்று நான் உங்களுக்குச் சொல்ல வேண்டும். சர் ஸ்தராபோர்டு கிரிப்ஸைச் சந்திப்பதற்காக கடந்த ஏப்ரலில் நான் டில்லிக்கு அழைக்கப்பட்டேன். மேதகு மன்னர் அரசின் தூதராக, அரசியல் சட்டத்தில் மாற்றம் செய்வதற்கான சில ஆலோசனைகளுடன் கிரிப்ஸ் இந்தியா, வந்தார். அந்த ஆலோசனைகளை பல்வேறு அரசியல் கட்சிகளையும் ஏற்றுக் கொள்ள வைப்பதற்காக பேச்சுவார்த்தை நடத்தும் பொறுப்பு அவருக்கு அளிக்கப்பட்டிருந்தது. நான் டில்லிக்குச் செல்வதற்கு முன்னால் இந்தியாவின் பல்வேறு மாகாணங்களைச் சேர்ந்த அரிஜன வகுப்புப் பிரதிநிதிகளை, ஆலோசனைக்காக டில்லிக்கு அழைத்திருந்தேன். சர் ஸ்டிராபோர்டு கிரிப்சுடன நான் நடத்திய பேச்சுவார்த்தைகளைப் பற்றி அவர்களிடம் தெரிவித்த போது, சர் ஸ்டிராபோர்டு கிரிப்ஸ் தன்னுடன் கொண்டு வந்துள்ள ஆலோசனைகள் அரிஜன வகுப்பினர் நலன்களுக்கு ஒரு மரண அடியாக இருக்கும் என்று நாங்கள் அனைவரும் உணர்ந்தோம். கிரிப்ஸ் ஆலோசனைகள் பற்றிய எனது கருத்தை நான் விடுத்துள்ள பத்திரிகை அறிக்கையில் தெரிவித்தேன். அதை நீங்கள் படித்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். எனவே இந்தியா முழுதும் உள்ள அரிஜன மக்கள் ஒன்றுதிரண்டு செயல்பட வேண்டும் என்னும் இந்த ஒன்றுபட்ட நடவடிக்கை மட்டுமே வரவிருக்கும் அரசியல் பேரழிவிலிருந்து நம்மைக் காப்பாற்றும் என்று அனைவராலும் உணரப்பட்டது. இந்தியா முழுதுமுள்ள அரிஜன வகுப்புப் பிரதிநிதிகள் டில்லியில் கூடி எடுத்த முடிவின் விளைவுதான் இந்த மாநாடு. எனவே, இந்தியா முழுதுமுள்ள தீண்டத்தகாதோரின் ஆதரவு

இதற்கு உண்டு. எனவேதான் இந்தியா முழுதும் உள்ள அரிஜன வகுப்புப் பிரதிநிதிகளை இங்கு காண முடிகிறது. இந்த மாநாட்டை எங்கு நடத்துவது என்பதில் பெரும் போட்டி நிலவியது. வங்காளம், பஞ்சாப், உ.பி. சி. பி., பம்பாய் ஆகிய ஒவ்வொன்றும் தத்தமது மாநிலத்தில் இம்மாநாட்டை நடத்த விரும்பின. இறுதியாக மாநாட்டை நடத்தும் வாய்ப்பை மத்திய மாகாணத்துக்கே அளிப்பது என்று அனைவரும் ஒத்துக் கொண்டனர். ஆனால் அதற்கு ஒரு நிபந்தனையை அவர்கள் விதித்தார்கள். அதாவது, மாநாடு எங்கே நடந்தாலும் அதற்கு நான்தான் தலைமை தாங்க வேண்டும் என்பதே அது. அனைவரின் விருப்பத்துக்கு இணங்க நான் தலைமை ஏற்க ஒப்புக் கொண்டேன். அந்தத் திட்டத்தின்படிதான் இம்மாநாடு நடக்கிறது. இத்தகைய மாபெரும் மாநாட்டை வெற்றிகரமாக நாம் வேறெங்கும் இதுவரை நடத்தவில்லை. மத்திய மாகாண நண்பர்களுக்கு நாம் அனைவரும் கடமைப்பட்டுள்ளோம். அவர்களது உற்சாகமும் முயற்சிகளும் தான் மாநாட்டின் வெற்றிக்குக் காரணம். நமது முதல் திட்டத்தில் செய்யப்பட்டுள்ள ஒரே மாற்றம் மாநாட்டுத் தலைமைதான். எனக்கு பதிலாக நமது நண்பர் ராவ் பகதூர் சிவராஜ் மாநாட்டுக்குத் தலைமை தாங்குகிறார். நான் மாநாட்டுத் தலைவராக இருக்க ஒப்புக் கொண்டபோது, கட்டுகளற்ற ஓர் அரசியல்வாதியின் சுதந்திரத்துடன் இருந்தேன். எனவே மாநாட்டிற்கு தலைமை தாங்கி நான் சொல்ல வேண்டியதைச் சொல்லியிருப்பேன். அப்போது ஒரு பதவியோ அதன் கட்டுப்பாடோ எனக்கு இருக்கவில்லை. ஆனால் மாநாடு தொடங்குவதற்கு முன்னால் வைஸ்ராயின் நிர்வாகக் குழுவில் நான் ஓர் உறுப்பினராக நியமிக்கப்பட்டுள்ளதாக அறிவிப்பு வந்தது. எனவே அப்பதவியின் கட்டுப்பாடு எனக்கு உள்ளது. அதன் காணமாக அரிஜன வகுப்பினருக்கு சுதந்திரமாகவும் அதிகார பூர்வமாகவும் பேச வசதியாக வேறொருவர் இருப்பது நல்லது என்று நான் நினைத்தேன். ராவ் பகதூர் சிவராஜ் சுதந்திரமாகப் பேசக் கூடியவர், அவர் அதிகார பூர்வமாகவும் பேச முடியும் என்று நினைக்கிறேன். நமது மக்களின் மேம்பாட்டுக்காக நீண்ட காலம் உழைத்தவர் அவர். மத்திய சட்டப் பேரவையில் நமது மக்களின பிரதிநிதியாக அவர் இருக்கிறார். அவர் பெற்றுள்ள கல்விக்கு ஈடாகக் கல்வி கற்றோர் வெகு சிலரே. மதராஸ் பல்கலைக் கழகத்தில் பி.ஏ.பி.எல், படித்தவர் அவர். வழக்குகள் நடத்தி வரும் வழக்கறிஞரான இவர், சட்டத்துறைப் பேராசிரியராக பத்து ஆண்டுகளுக்கு மேலாக பணியாற்றியுள்ளார். அவரைவிடப்

பொருத்தமான ஒருவர் இந்த மாநாட்டுக்குத் தலைமை தாங்கக் கிடைக்க மாட்டார். அவர் இந்தத் தலைவர் பொறுப்புக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது எனக்கு பெரு மகிழ்ச்சியைத் தருகிறது.

நான் இந்திய அரசில் ஓர் உறுப்பினராக இருக்கும்போது, நமது இயக்கத்தை தொடர்ந்து நடத்தி வர வேண்டியது உங்கள் கடமையாகும். இயக்கத்தை விரிவுபடுத்தி நாம் விரும்புகிறபடி மேன்மையடைய வேண்டும். நான் உங்களுக்கு உதவுவேன், அறிவுரை கூறுவேன். ஆனால் நான் இயக்கத்தில் பங்கு கொள்ள முடியாது. இந்த உண்மையை நீங்கள் அனைவரும் மனதில் கொள்ள வேண்டும். ஆகவே, நான் பொறுப்பினை மற்றவர்களிடம் ஒப்படைக்கும்போது தீண்டத்தகாதோர் இயக்கத்தை நான் வழிநடத்தி வந்த 20 ஆண்டு காலத்தைப் பற்றிய கணக்குக் கொடுக்க வேண்டும். அடுத்து இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளப் போகிறவர்கள் அரிஜன வகுப்பினர் மற்ற வகுப்பாருடன் ஒப்பிடும்போது என்ன நிலையில் இருக்கிறார்கள், அவர்களது மேன்மைக்காக என்ன செய்யப் பட்டிருக்கிறது, அவர்கள் இனி செய்ய வேண்டியது என்ன என்று அறிந்து கொள்ள வேண்டும்.

தீண்டத்தகாதோர் எல்லாப் பக்கங்களிலும் பெருமுன்னேற்றம் அடைந்துள்ளனர் என்பது நல்ல திருப்தியைத் தருகிறது. நான் மூன்று விஷயங்களைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும். அவை அரசியல் உணர்வுடையவை. இந்த உணர்வு இந்தியாவில் ஒரு சில வகுப்பினரிடம் மட்டுமே உண்டு. இரண்டாவதாக கல்வித்துறையில் அவர்கள் கணிசமான முன்னேற்றம் கண்டுள்ளனர். மூன்றாவதாக, அவர்கள் நிறுவனங்களிலும் நாட்டின் பொதுப் பணிகளிலும் காலடி பதிக்க முடிகிறது.

தீண்டாத்தகாதோர் அடைந்துள்ள மகத்தான முன்னேற்றங் களை தற்போதைய தலைமுறையினர் அறியமாட்டார்கள். ஏனென்றால் 20 ஆண்டுகளுக்கு முன்னால் இவ்வியக்கம் துவக்கப்பட்ட போது நமது நிலைமை எப்படி இருந்தது என்பதை அவர்கள் அறிய மாட்டார்கள். பாரிஸ்டர் படிப்பு முடித்து விட்டு லண்டனிலிருந்து இந்தியா வந்த நான் முதலில் பேசிய கூட்டம் எனது நினைவில் பசுமையாக உள்ளது. கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தவர்களைத் தவிர வேறு ஒருவர்கூட கூட்டத்திற்கு வரவில்லை.

தத்தமது வீட்டு வாசல்படிகளில் சில பேர் உட்கார்ந்து புகைத்துக் கொண்டிருந்தனர். மற்றவர்கள் மூலைகளில் நின்று பேசிக் கொண்டிருந்தனர். கூட்டத்தில் கலந்து கொள்ள யாரும் விரும்பவில்லை. இப்போது வித்தியாசத்தைப் பாருங்கள். இன்று 75000 பேர் கூடியிருக்கிறீர்கள். 20 ஆண்டுகளுக்கு முன்பு இருந்ததை விட கல்வித் துறையில் நல்ல முன்னேற்றம் கண்டுள்ளோம் பூனாவில் மட்டும் 50 மாணவர்கள் கல்லூரியில் பயின்று வருகிறார்கள். பல்வேறு பல்கலைக் கழகங்களில் பட்டம் பெற்றுள்ள தீண்டத்தக்காதோரின் எண்ணிக்கை சுமார் 500. சிலர் டாக்டர்களாகவும் வேறு சிலர் வழக்கறிஞர்களாகவும் இருக்கின்றனர். நமது சகோதரர்களில் சிலர் நகராட்சிகளிலும், மாவட்ட உள்ளூர் போர்டுகளிலும் உறுப்பினர்களாக இருக்கின்றனர். சில ஆண்டுகளுக்கு முன்பு தீண்டத்தகாதோர் வந்த இடம் மாசுபட்டு விடும் என்று கருதி உள்ளூர் போர்டுகளிலோ, நகராட்சிகளிலோ உறுப்பினர்களாக அவர்கள் அனுமதிக்கப் படவில்லை, இவையெல்லாம் இப்போது மாறிவிட்டது. பொதுப்பணிகளில் நமது முன்னேற்றம் நாம் விரும்புகிறபடி இல்லை. சில விஷயங்களில் தீண்டத்தகாதோருக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்துள்ளது. போலீசிலும், ராணுவத்திலும் நமக்கு வாய்ப்புகள் கிடைக்கின்றன என்பதை நான் குறிப்பிட்டாக வேண்டும். போலீஸ் துறை தீண்டத்தகாதவர்களுக்கு எட்டாக்கனியாக இருந்தது, சாதாரண போலீஸ்காரர் பதவி கூட அவர்களுக்குத் தரப்பட்டதில்லை. சில மாகாணங்களிலாவது இந்நிலை மாறியுள்ளது. நமது மக்கள் போலீஸ் பணிகளில் தற்போது சேர்த்துக் கொள்ளப் படுகின்றனர். ராணுவத்தையும் இங்கு நான் குறிப்பிட வேண்டும். 1892 வரை ராணுவத்தில் எங்கு பார்த்தாலும் மஹர்கள் இருந்தனர். மஹர்களின் படைப்பிரிவுகளே இருந்தன. 1892க்குப் பிறகு மஹர்களை ராணுவத்தில் சேர்ப்பது மீண்டும் துவங்கியது. ஒரு மஹர் படைப்பிரிவு உருவாக்கப்பட்டது. கடைசிப் போருக்குப் பிறகு அந்த படைப்பிரிவு கலைக்கப்பட்டு விட்டது. எனினும் நமது படைப்பிரிவுகள் இப்போது தொடங்கப்பட்டு வருகின்றன. நமது இளைஞர்களுக்கு கமிஷன் பதவிகள் கிடைக்கின்றன. 5, 6 இளைஞர்கள் மன்னர் கமிஷன் பதவி பெற்று ராணுவத்தில் பொறுப்பும் கவுரவுமும் நிறைந்த பதவிகளில் இருக்கின்றனர். நமது பெண்மணிகள் அடைந்துள்ள முன்னேற்றம் மகத்தானது. இந்த மாநாட்டில் நீங்கள் 20, 000 முதல் 25, 000 பெண்மணிகளை இங்கே காண்கிறீர்கள். அவர்களது உடை, பாங்கு,

பேச்சு ஆகியவற்றைப் பாருங்கள். இவர்கள் தீண்டத்தகாதவர்கள் என்று யாராவது சொல்ல முடியுமா? நமது பெண்மணிகள் அடைந்துள்ள முன்னேற்றம் வியக்கத்தக்கதும் உற்சாகமூட்டுவதும் ஆகும். இது மிகவும் மகிழ்ச்சியூட்டும் விஷயம் என்பதில் சந்தேகமில்லை.

இந்த முன்னேற்றச் சாதனைக்காக நாம் அனைவரும் பெருமிதம் கொள்கிறோம். இந்த முன்னேற்றத்திற்காக நாம் யாருக்கும் நன்றி சொல்லத் தேவையில்லை. இந்துக்களின் தர்மசிந்தனையால் விளைந்தது அல்ல இது., முழுக்க முழுக்க நமது சொந்த உழைப்பில் கிட்டிய வெற்றி இது. இந்த முன்னேற்றத்தை எப்படிக் கட்டிக்காப்பது என்பதுதான் இப்போதைய கேள்வி. இந்தக் கேள்வியை நம்மை நாமே கேட்டுக் கொள்ள நாம் ஒருபோதும் மறந்துவிடலாகாது. வகுப்புகளுக்கு இடையில் நிலவும் போட்டியில் பொருளாதார வலிமையாகவோ சமுதாய, அரசியல் வலிமையாகவோ இருக்கலாம். நமது முன்னேற்றத்தை நிலைநிறுத்திக் கொள்ள நம்மிடம் வலிமை உள்ளதா? நம்மிடம் பொருளாதார வலிமை உண்டா? நம்மிடம் நிச்சயமாக இது இல்லவே இல்லை. மனித இனத்தின் ஒரு பகுதியாக நாம் கீழ்மைப்பட்டு இருக்கிறோம். எனவே நமது முன்னேற்றம் தொடர்ச்சியாக இருக்க வேண்டும். நமக்குத் தேவை அரசியல் அதிகாரம்தான். அரசியல் அதிகாரம் ஒன்று மட்டுமே நமக்கு வாழ்வளிக்கும். அதில்லாமல் நாம் அழிந்தே போவோம். இந்தப் பிரச்சினையில்தான் நமது கவனம் முழுவதையும் நாம் செலுத்த வேண்டும். இது நமக்கு வாழ்வா, சாவா என்ற பிரச்சினை. அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கு நமக்குள்ள சாத்தியப்பாடுகள் என்ன? நமக்கு உதவி செய்கிற சக்திகள் எவை, நமக்கு எதிராக வேலை செய்கிற சக்திகள் எவை என்று நான் சுருக்கமாகச் சொல்வது நல்லது. இந்தச் சக்திகளைப் பற்றி நீங்கள் தெரிந்து கொண்டால் உங்கள் கொள்கைகளை வகுத்துக் கொண்டு அணி திரட்டுவது சுலபமாக இருக்கும்.

என்னுடைய முக்கிய அம்சம் எது என்று ஆரம்பத்தில் சொல்லிவிடுகிறேன். அது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். எனினும் மீண்டும் அதைச் சொல்லுவது நல்லதே. தீண்டத்தகாதோர் இந்துக்களின் ஒரு பிரிவு அல்ல, அவர்கள் இந்திய தேசிய வாழ்வில் ஒரு முழுமையான தனி அங்கம் என்பதே என் அரசியலின்

அடிப்படை. தீண்டத்தகாதோர் இந்திய முஸ்லீம்களைப் போல ஒரு தனி அந்தஸ்து கொண்டவர்கள். எனவே இந்துக்களைப் போலவே இவர்களுக்கும் தனியான அரசியல் உரிமைகள் உண்டு. இதைக்கருத்தில் கொள்கிற எவரும் என்னையோ எனது அரசியலையோ தவறாகப் புரிந்து கொள்ள மாட்டார். என்னுடைய அரசியலின் அடிப்படை என்ன என்பதைக் கூறியபின், நமது தனி அரசியல் உரிமைக் கோரிக்கைகளுக்கு ஆதரவாகவும் எதிராகவும் உள்ள சக்திகள் எவை என்பதைச் சொல்ல வேண்டும். வட்டமேசை மாநாட்டு நிகழ்வுகள் பற்றிய விஷயங்களிலிருந்து தொடங்குகிறேன். அந்த மாநாடு மிகப் பரந்த விஷயக்ளை உள்ளடக்கியது. எனவே, அங்கு நடந்த விஷயங்கள் அனைத்தையும் கூறி உங்களை சங்கடத்திற்கு உள்ளாக்க விரும்பவில்லை. தீண்டத்தகாதோர் பற்றி என்ன பேசப் பட்டது என்பது குறித்து மட்டும் நான் சொல்லுவேன். எனக்கும் காந்திக்கும் இடையில் அங்கு போட்டி நிலவியது. தீண்டத்தகாதோர் இந்து சமூகத்தின் ஒரு உட்பிரிவு என்றும், எனவே, பிரிட்டிஷாரிடமிருந்து அதிகாரம் கைமாற்றப்படுமாயின், அது முழுமையாக இந்துக்களிடம் கொடுக்கப்படவேண்டும், இந்துக்கள் தீண்டத்தகாதோரின் நலன்களை காப்பார்கள் என்று நம்ப வேண்டும் என்று காந்தி கூறினார். நான் மேற்கொண்ட நிலை முற்றிலும் மாறுபட்டது. தீண்டத்தகாதோர் தேசத்தின் வாழ்வில் தனியான, தெளிவான ஒரு கூறு என்றேன் நான். இந்துக்கள் அவர்களது பரம்பரை விரோதிகள், அவர்களை நம்பமுடியாது. தீண்டத் தகாதோரை மேம்படுத்துவதற்கு பதிலாக, அவர்களை நிரந்தரமாக அடிமைகளாக வைத்துக் கொள்ளவே இந்துக்கள் விரும்புவர் என்று நாங்கள் நம்புகிறோம். எனவே, இந்துக்களுக்கும் தீண்டத் தகாதோருக்கும் இடையே அரசியல் பிரிவினை செய்யப்பட வேண்டும் என்று நான் கூறினேன்.

* * *

. . . . தங்கள் வாழ்வை வளப்படுத்திக் கொள்வதற்காகவும் இந்துக்களின் கொடுமை மற்றும் ஒடுக்குமுறைகளிலிருந்து தங்களைக் காத்துக் கொள்வதற்காகவும் அரசியல் அதிகாரத்தைத் தங்கள் கைகளில் தீண்டத்தகாதோர் பெற வேண்டும். இந்தக் கோரிக்கையை முறியடிக்க, மகாத்மாவோ அல்லது மற்ற இந்துக்களோ எவ்வாறெல்லாம் திட்டமிட்டார்கள் என்பதை நான் விவரிக்க

விரும்பவில்லை. வட்ட மேஜை மாநாட்டில் தீண்டத்தகாதவர்கள் வெற்றிபெற்றனர் - மகாத்மாக தோல்வியுற்றார் என்பதைச் சொன்னால் மட்டும் போதும். இந்தப் போட்டியின் முடிவுதான் வகுப்புவாரித் தீர்ப்பாகும். இந்தியாவின் தேசிய வாழ்வில் தீண்டத்தகாதவர்கள் அங்கீகரிக்கப்பட்டிருப்பதிலும், தனி அரசியல் உரிமைகளைக் கோரிப்பெற தகுதிபெற்றிருப்பதிலும்தான் இதன் பெரும் சிறப்பே அடங்கியிருக்கிறது. வகுப்புவாரித் தீர்ப்பின் முக்கியத்துவமே இதுதான்.

திரு. காந்தி முதலில் வகுப்புவாரித் தீர்ப்பை ஒப்புக் கொள்ள வில்லை. தீர்க்கப்பட்ட ஒருவிஷயத்தை குலைக்கும்படி ஆங்கில அரசாங்கத்தை வற்புறுத்தி சாகும் வரையிலான உண்ணாவிரதத்தை அவர் ஆரம்பித்தார். இந்துக்களிலிருந்து வேறுபட்ட ஒரு தனித்த பகுதியினராகத் தாங்கள் நடத்தப்பட வேண்டும் என்றும் தனித்த அரசியல் அங்கீகாரத்திற்குத் தாங்கள் தகுதியுடையவர்கள் என்றும் தீண்டத்தகாதவர்கள் வைத்த கோரிக்கையை முறியடிப்பதில் அவர் வட்ட மேஜை மாநாட்டில் தோல்வியுற்றதைப் போலவே இந்த உண்ணாவிரதத்திலும் அவர் தோல்வியுற்றார். அவருடைய உண்ணா விதத்தின் விளைவாக ஏற்பட்ட புனா ஒப்பந்தத்தில், நான் வட்டமேஜை மாநாட்டில் முன் வைத்த முக்கிய கோரிக்கையை அவர் ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று.

முதல் சுற்றில், தீண்டத்தகாதவர்களுக்கு வெற்றி கிடைத்தது. போர் ஆரம்பித்த பிறகும் கூட எங்களுடைய நிலை உறுதியாக இருந்தது. இந்திய அரசியலில் மேலாதிக்க நிலை வகிக்க காங்கிரஸ் முன்வந்தது. 1940 ஆகஸ்ட் 8 அன்று வைஸ்ராய் வெளியிட்ட பிரகடனத்தின் மூலம் எங்கள் கோரிக்கை மீண்டும் உறுதி செய்யப்பட்டு நீடித்தது. இந்தியாவின் தேசிய வாழ்வில் முஸ்லீம்கள் மற்றும் ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் ஆதரவு பெறாத எந்த சட்டத்தையும் ஆங்கில அரசு என்றும் அமல் படுத்தாது என்றும் அந்தப் பிரகடனத்தில் தெளிவாக்கப்பட்டது.

எங்களுடைய நிலைபாட்டின் வலிமையைப் பற்றி இதுகாறும் நான் பேசினேன். எங்கள் நிலைபாட்டை வலுவிழக்கச் செய்ய முயற்சிக்கும் சக்திகள் பற்றி இப்போது நான் உங்களிடையே பேச வேண்டும். காந்தியும் காந்தீயமும் எங்கள் நிலைபாட்டை

வலுவிழக்கச் செய்ய முயன்று கொண்டிருக்கும் ஒரு தீய கூறு ஆகும். புனா ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டதன் மூலம் திரு. காந்தியின் உயிரைக் காப்பாற்ற நான் உதவினேன். ஆனால் தன்னுடைய வார்த்தையைக் காப்பாற்றும் நோக்கத்துடன் ஒரு பண்பாளராக பூனா ஒப்பந்தத்தை ஏற்றுக் கொண்டு திரு. காந்தி அதில் கையெழுத்திடவில்லை. ஒரு இக்கட்டிலிருந்து மீள்வதற்கு வழிகாணும் தந்திரக்காரராகக் கையெழுத்திட்டார். புனா ஒப்பந்தம் அவரைச் சாவிலிருந்து காப்பாற்றியிருந்தும்கூட, அந்தப் புனா ஒப்பந்தத்தின் அடிநாதமான கொள்கைகளுக்கு திரு. காந்தி எப்போதுமே தனது உண்மையான, நேர்மையான ஒப்புதலைக் கொடுத்ததில்லை என்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். தீண்டத்தகாதவர்களின் தனி அரசியல் அங்கீகாரக் கோரிக்கைக்கு அவர் உறுதியான எதிர்ப்புத் தெரிவிப்பவராகவே இருந்தார். எங்களுடைய கோரிக்கையை எதிர்ப்பதற்கும் எங்கள் நிலை பாட்டைக் குலைப்பதற்குமான எல்லாவிதமான வேலைகளையும் எப்போதுமே செய்து வந்தார். எங்களுடைய முதற்பெரும் எதிரி திரு. காந்தி என்பதை நீங்கள் மனதில் நிறுத்திக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அவரை விரோதி என்று கூறுவதற்குப் போதுமான நியாயங்கள் இருந்தாலும் அந்த வார்த்தையைப் பயன்படுத்த நான் விரும்பவில்லை. நம்மிடையே கூடச் சிலர், அவருடைய செயற்கையான வார்த்தைப் பிரயோகத்தில் மயங்கிவிடுகிறார்கள். உங்கள் தரப்பை வலுவிழக்கச் செய்யும் எதிர்சக்தி, உங்களுடைய அரசியல் விடுதலைக்கான போராட்டத்தில் வெற்றிபெற நீங்கள் கூர்மையாகக் கவனம் செலுத்தி எதிர்க்க வேண்டிய சக்தி, மிகவும் வலிமைவாய்ந்த சக்தி திரு. காந்திதான் என்பதை கவனத்தில் கொள்ள மறந்தால், நீங்கள் மாபெரும் தவறிழைத்தவர்களாவீர்கள் என்று எச்சரிக்க விரும்புகிறேன்.

உங்களுடைய நிலைமையை வலுவிழக்கச் செய்த இரண்டாவது காரணம், மாண்பமை அரசினரின் மனப்போக்கில் ஏற்பட்ட மாறுதலே என்று கூறவேண்டும். தீண்டத்தகாதவர்கள் தனித்த வேறான பகுதியினர் என்பதும், எந்த ஒரு சட்டத்திருத்தம் செய்யப்படுவதாக இருந்தாலும் அவர்களது ஒப்புதல் தேவை என்னுமளவிற்கு அவர்கள் மிக முக்கிய பகுதியினராக இருக்கிறார்கள் என்பதும் 1940 ஆகஸ்ட் 8 பிரகடனம் வரைக்கும் மாண்பமை அரசினரின் கருத்தாக இருந்தது. ஸ்ட்ராஃபோர்டு கிரிப்ஸ் வழியாக

மாண்பமை அரசினர் அனுப்பிய கருத்துக்களில், மாண்பமை அரசு முற்றிலுமாக நேர்எதிர் நிலை எடுத்திருந்தது. அதாவது, கிரிப்ஸின் கருத்துக்களில் செய்யப்பட வேண்டிய அரசியல் சட்ட மாற்றங்களுக்கு இந்துக்கள் மற்றும் முஸ்லிம்களின் ஒப்புதல் மட்டுமே தேவை; தீண்டத்தகாதோரின் ஒப்புதல் தேவையில்லை என்று எந்தவித முகமாறுதலுமின்றி சர்.ஸ்ட்ராஃபோர்டு கிரிப்ஸ் அறிவித்தார். தெளிவாகச் சொல்வதென்றால், தீண்டத்தகாதவர்கள் இந்தியாவின் தேசிய வாழ்க்கையில் ஒரு முக்கியமான பகுதியினராகக் கருதப்படுவது முடிவுக்கு வந்துவிட்டது என்பதேயாகும். எப்படி ஆறுமுதல் ஏழு கோடி வரையிலுள்ள தீண்டத்தகாதவர்கள் ஒரு சில மாதங்களிலேயே ஒரு முக்கிய பகுதியினராகக் கருதப்படுவதிலிருந்து விலக்கப்பட்டார்கள் என்பது அவரவர் சிந்தனைக்கு உரியதாகும். மாண்பமை அரசினரைப் பொருத்தவரைக்கும் இது ஒரு முழுமையான குட்டிக்கரணம் ஆகும். தீண்டத்தகாதவர்களுக்கு இழைக்கப்படும் மாபெரும் துரோகமாகும். இந்த வஞ்சனைக்கு என்னதான் காரணமாகயிருந்தாலும், மாண்பமை அரசின் இத்தகைய நியாயமற்ற கேவலமான நடவடிக்கையின்பால் உங்களுக்கு எவ்வளவு ஆழமான உணர்வுகள் ஏற்பட்டிருந்தாலும், இது எங்கள் போராட்டத்தில் ஏற்பட்ட மிகப்பெரும் ஒப்பந்த மீறல் என்னும் உண்மையை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். எதிரான பண்புடைய மூன்றாவது சூழ்நிலை ஒன்று இருக்கிறது. அதனை உங்கள் கவனத்திற்கு நான் கொண்டுவந்தாகவேண்டும். இந்தியாவிலுள்ள வெவ்வேறு சிறுபான்மை சமுதாயத்தினரிடையேயும், சமுதாய நலன் அடிப்படையிலான ஒருமைப்பாட்டு உணர்வு இருந்த காலம் ஒன்று இருந்தது. அவற்றில் முஸ்லீம் சமுதாயம் முதன்மையான சமுதாயமாக இருந்தது. அந்த ஒருமைப்பாடு இபோது இல்லை. அதற்கு முக்கியகாரணம், முஸ்லிம் லீகினால் வழி நடத்தப்படுகின்ற முஸ்லிம் சமுதாயத்தின் தொலை நோக்கில் ஏற்பட்ட மாற்றமேயாகும். 1937 தேர்தலுக்குப் பிறகு திரு. ஜின்னாவினால் உயிர்ப்பிக்கப்பட்ட முஸ்லிம் லீகானது, முஸல்மான்கள் ஒரு சிறுபான்மையினர் என்ற கருத்தினடிப்படையில் தொடங்கியது. சிறுபான்மையினரான அவர்களுக்கு ஆதரவு தரவும் ஆதாரமாக இருக்கவும் மற்ற சிறுபான்மையினரின் வலிமை தேவைப்பட்டது. பரஸ்பரப் பலப் பரிமாற்றத்தில் முஸ்லிம் லீகிற்கு மிக உறுதியான நம்பிக்கை இருந்தது. அதனால் பிற சிறுபான்மையினரின் பிரச்சினைகளைக் கையிலெடுத்தார்கள். அவர்களின் கோரிக்கைகளுக்கான தங்களது

ஆதரவை உறுதிசெய்து தீர்மானங்கள் போட்டார்கள். முஸ்லிம்களின் பிரச்சினைகளுக்காக மட்டும் அவர்கள் நில்லாமல், இந்தியாவிலுள்ள பிற எல்லா சிறுபான்மையினருக்கும் ஆதரவாக அவர்கள் மேற்கொண்ட தீண்டத்தகாதோருக்குப் பேருதவியாக இருந்தது என்பதில் சந்தேகமேயில்லை. அதுபோலவே தீண்டத் தகாதோரின் மனப்பான்மையும் இந்தியாவிலுள்ள முஸ்லிம்களுக்குப் பேருதவியாக இருந்தது. ஆனால் லீகின் மனப்பான்மையில் முற்றிலுமாக மாற்றம் ஏற்பட்டது. பாகிஸ்தான் பற்றிய தீர்மானம் நிறைவேற்றப் பட்டதிலிருந்தே முஸ்லிம்களை ஒரு சமுகத்தினராக முஸ்லிம்லீக் மதிப்பதை நிறுத்திவிட்டது. அது முஸ்லிம்களை ஒரு தேசிய இனமாகக் கருதியது. அது மட்டுமல்ல. மேலும் பிறசமுதாயத்தினரோடு தனக்கு எவ்வித ஒட்டுறவுமில்லை என்று முஸ்லிம்லீக் எண்ணியது. இந்து சமுதாயத்தினரோடு மட்டுமல்ல, பிற சிறுபான்மை சமுதாயத்தினரோடும் எவ்வித உறவுமில்லை என்று அது நம்பியது. முஸ்லிம்லீகின் இந்தப் போக்கு முஸ்லிம் அல்லாத அனைவருக்கும் எதிரான போக்காகும். முஸ்லிம்களின் மனப்பான்மையில் ஏற்பட்ட இத்தகைய மாற்றமானது தீண்டத்தகாதோரிடையே மிகமோசமான விளைவுகளை ஏற்படுத்தியது. அதாவது தீண்டத்தகாதோர் ஒரு கூட்டாளியை இழந்தனர். ஆனால் அது ஒரு கூட்டாளி இழப்பு என்பதைவிட மிக அதிகமானது. முஸ்லிம் லீகானது, முஸ்லிம் அல்லாதவர் களுக்கெதிராக முஸ்லிம்கள் என்னும் ஒருபுதிய, மாறான நிலைப்பாட்டை ஏற்படுத்தியதோடு மட்டுமல்லாமல், ஒரு புதிய தகுதிச் சமன்பாட்டையும் தோற்றுவித்தது. அந்தச் சமன்பாடு மிகவும் எளிமையானது. முஸ்லிம்கள், அவர்களின் எண்ணிக்கை எதுவாக இருந்தாலும், முஸ்லிம் அல்லாதவர்களுக்குச் சமமானவர்கள். ஆகவே, எந்த ஒரு அரசியல் திட்டமாக இருந்தாலும் முஸ்லிம்களுக்கு ஐம்பது சதம் ஒதுக்க வேண்டும் என்று அது கூறுகிறது. இந்தச் சமன்பாட்டை எவரும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். இது கணக்கறிவுக்கு எதிரானது மட்டுமல்ல; தீண்டத்தகாதோர் உள்ளிட்ட அனைத்து முஸ்லிமல்லாதோரின் நலன்களுக்கும் எதிரானது. முஸ்லிம்லீகின் இந்த அரசியல் நிலைப்பாட்டு மாற்றங்களை மதிக்கிறபோதே, தீண்டத்தகாதோர் ஒரு கூட்டாளியை மட்டுமல்லாமல் ஒரு நண்பரையும் இழந்ததாகக் கூறவேண்டும். ஏனென்றால், எல்லாவற்றிலும் ஐம்பது சத பிரதிநிதித்துவத்தை லீக்

வற்புறுத்துமானால், முஸ்லிம்களுக்கும் தீண்டத்தகாதோருக்கு மிடையே மோதல் ஏற்படும் என்பதில் சந்தேகமேயில்லை.

இந்திய அரசியலில் எங்களின் நிலைப்பாடு என்ன என்பது பற்றியும் அந்நிலைப்பாட்டைச் சீர்குலைக்க என்ன சக்திகள் செயல்படுகின்றன என்பது பற்றியும் இதுவரை உங்களுக்குத் தெளிவு படுத்தியிருக்கிறேன். உங்களது அரசியல் கோரிக்கைகள் என்னவாக இருக்க வேண்டும் என்று நான் நினைப்பதை இப்போது உங்களிடையே தெளிவாக்க விரும்புகிறேன். நீங்கள் அவற்றைத் தெளிவானவரையறைகளால் திட்டமிட்டுக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். நாம் எதற்காக நிற்கிறோம் என்பதை நம் மக்கள் அறிவார்கள். நமது கோரிக்கைகள் பற்றி நமது எதிரிகள் அறிந்து கொள்வார்கள்.

முதலில், இந்திய தேசிய வாழ்வில் ஒரு சுதந்திரமான, தனித்த பகுதியினராக அங்கீகரிக்கப்படுவதை நீங்கள் வற்புறுத்த வேண்டும். அவர்கள் இந்துக்களின் உபபிரிவினர்தானே என்று கூறப்படும் வாதத்தை முற்றிலுமாக முறியடிக்க வேண்டும். இந்துக்களிலிருந்து வேறுபட்ட, தனித்த பகுதியினராக அங்கீகாரம் பெறத் தவறுவது அவர்கள் மூழ்கடிக்கப்படுவதிலும், ஒடுக்கப்படுவதிலும், இழிவுப் படுத்தப்படுவதிலும் முடியும். அடுத்ததாக, தீண்டத்தகாதோரின் கல்விக்காக ஒவ்வொரு மாநில பட்ஜெட்டிலும் ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட நிதியை ஒதுக்குவதற்கேற்ப அரசியல் சட்டத்தில் வகைசெய்யுமாறு நீங்கள் கேட்க வேண்டும். அத்தகைய நிதி ஆரம்பக்கல்விக்கு மட்டுமல்லாது, உயர் கல்விக்குமாக இருக்க வேண்டும் என்று நீங்கள் கோரவேண்டும். இந்தக் கட்டத்தில் ஆரம்பக் கல்வியை விட உயர்கல்வி நமக்கு மிக முக்கியமானதாகும். தலைமையின் நோக்கில், நிர்வாகத்தில் உயர்ந்த பணியிடங்களை நிரப்பும்போது, தீண்டத்தகாதோருக்கு உயர்கல்வி என்பது மிகவும் அத்தியாவசியமானது. மூன்றாவதாக, தீண்டத்தகாதோருக்கு அரசுப் பணியிடங்களில், குறைந்த தகுதி அடிப்படையில் குறிப்பிட்ட இடங்களை ஒதுக்க வேண்டுமென்று கோர வேண்டும். இது மிகவும் அத்தியாவசியமானது. நாம் மோசமான சட்டங்களால் அல்ல - மோசமான நிர்வாகத்தால் பாதிக்கப்படுகிறோம். ஜாதி இந்துக்களிடம் நிர்வாகம் இருப்பதால் அது மோசமாக இருக்கிறது. அவர்கள் சமூக வெறுப்புகளை நிர்வாகத்தில் காட்டுகிறார்கள்.

தீண்டத்தகாதவர்களுக்கு உரித்தான சமநீதிக் கொள்கைகளை ஏதாவதொரு காரணம் காட்டி தொடர்ந்து மறுத்து வருகிறார்கள். நல்ல நிர்வாகம் இல்லை என்றால் நல்ல சட்டங்களும் நல்லது செய்ய முடியாது. தீண்டத்தகாதோர் உயர்ந்த நிர்வாகப் பொறுப்பில் இருக்கும் போது உங்களுக்கு நல்ல நிர்வாகம் கிடைக்கும். அங்கிருந்து பிற இந்து அரசுப் பணியாளர்கள் தீண்டத்தகாதோரிடம் எவ்வாறு நடந்து கொள்கிறார்கள் என்பதை அவர்கள் கண்காணிக்க முடியும். அவர்களை அடக்கி கட்டுப்படுத்தி, கேடுகள் செய்யாவண்ணம் தடுத்து நிறுத்த முடியும். ஆனாலும் வெறும் இட ஒதுக்கீடு கேட்டால் மட்டும் போதாது. அத்தகைய ஒதுக்கீடு ஒரு குறிப்பட்ட கால வரையறைக்குள் அமல்படுத்தப்பட வேண்டும் என்று வற்புறுத்துவது அவசியம். இது வெறும் இட ஒதுக்கீட்டைவிட மிகவும் இந்றியமையாதது. ஏனெனில், நீங்கள் ஒரு கால வரையறையை நிர்ணயிக்காவிட்டால், இட ஒதுக்கீடு வராது. ஏதாவது ஒரு காணத்தினடிப்படையில் அது தவிர்க்கப்படும். தகுந்த ஆள் கிடைக்கவில்லை என்னும் ஆழங்காணமுடியாத வழக்கமான காரணம் அவர்களுக்கு ஏதுவாகக் கிடைக்கும். ஓர் இந்து, வேலைநியமன அதிகாரியாக இருந்தால், தீண்டத்தகாதோரிலிருந்து வருகிற எந்த நபரும் வேலைக்குத் தகுந்த ஆளாக இருக்கமாட்டார் என்பது நம் எல்லோருக்குமே தெரியும். நான்காவதாக, மத்திய மாநில நிர்வாகப்பணிகளுக்குத் தீண்டத்தகாதோருக்கான பிரதிநிதித் துவத்தைப் பெற நீங்கள் வற்புறுத்த வேண்டும். இவை மிகக் கேந்திரமான பணியிடங்களாகும். இந்த இடங்களில் இருப்பவர்கள்தான் நிகழ்ச்சிப் போக்குகளுக்கு வழிகாட்டும் அதிகாரம் படைத்தவர்கள். அவர்கள் மட்டுமே அச்சுறுத்தும் கேடுகளை கட்டுப்படுத்த முடியும். அவர்கள் மட்டுமே அரசியல், சமூக, பொருளாதாரப் பிரச்சினைகளில் புதிய,. நலம் விளைவிக்கிற மாற்றங்களை நடைமுறைப்படுத்த முடியும். தங்களது பிரதிநிதிகள் இத்தகைய கேந்திரமான பணியிடங்களில் அமர்த்தப்பட வேண்டும் என்று தீண்டத்தகாதோர் வலியுறுத்த வேண்டும். தங்களது வாக்குறுதிகளுக்கேற்ப இந்துக்கள் நடந்துகொள்வார்கள் என்று நம்பமுடியாது. இதற்கான வழிவகைகள் அரசியல் சட்டத்தில் செய்யப்படுவதை உறுதிசெய்ய வேண்டும்.

பிறகு, தீண்டத்தகாதோர் வற்புறுத்த வேண்டிய கடைசி கோரிக்கை ஒன்று இருக்கிறது. அது கடைசியானது. ஆனால்

முக்கியத்துவத்தில் சிறிதும் குறைந்ததல்ல. அது என்னைப் பொறுத்த வரையில் மற்ற எல்லாக் கோரிக்கைகளையும் புறந்தள்ளி முன்னிற்கக்கூடிய மிகவும் ஜீவாதாரமான கோரிக்கை என்று உணருகிறேன். இந்து கிராமங்களிலிருந்து பிரிந்து, தனியாக தீண்டத்தகாதோருக்கான புதிய குடியிருப்புகள் அமைப்பதுபற்றிய திட்டத்தை நான் குறிப்பிடுகிறேன். பல்லாயிரம் ஆண்டுகளாக இந்தத் தீண்டத்தகாதோர் ஏன் இந்துக்களின் அடிமைகளாய், பண்ணையாட்களாய் இருக்கிறார்கள்? இந்து கிராமங்களின் தனித்தன்மை வாய்ந்த அமைப்பு முறையே இதற்குக் காரணம் என்று என் மனதில் படுகிறது. நீங்கள் இந்தியா முழுவதுமாக ஏழுலட்சம் இந்து கிராமங்களில் பரவியிருக்கிறீர்கள். ஒவ்வொரு இந்து கிராமத்தோடும் ஒட்டியதாய் தீண்டத்தகாதோர் வாழும் சிறு குடியிருப்பு இருக்கிறது. இந்து கிராமத்தோடு ஒப்பிடுகிறபோது, அதனுடன் இணைக்கப்பட்டிருக்கும் தீண்டத்தகாதோர் குடியிருப்பு எண்ணிக்கையில் மிகக் குறைவானதாகும். இரண்டாவதாக, தீண்டத்தகாதோரின் குடியிருப்பில் பொருளாதாரத்திற்கான எந்த வாய்ப்பும் இல்லை. முன்னேற்றத்திற்கான எவ்வித வழிவகையும் இல்லை. அனேகமாக நிலமற்றமக்களின் குடியிருப்பாகத்தான் அது இருக்கும். தீண்டத்தகாதோராய் இருப்பதால் எதையும் விற்பனை செய்ய முடியாது. ஏனென்றால், தீண்டத்தகாதோரிடமிருந்து யாரும் வாங்க மாட்டார்கள். தங்களது வாழ்வாதாரத்திற்கு இந்து கிராமத்தைச் சார்ந்திருக்கும் வகையற்ற மக்கள் இனத்தை முழுமையாகக் கொண்டது. அது இரந்துண்டு வாழ்கிறது. அல்லது, அற்பக் கூலிக்குத் தனது உழைப்பைக் கொடுத்து வாழ்கிறது. இந்தப் பின்னணியில், பல நூற்றாண்டுகளாய் தீண்டத்தகாத மக்கள் ஏன் இழிந்த நிலையில் இருக்கிறார்கள் என்பதை நீங்கள் நன்கு புரிந்து கொள்ளலாம். இந்து கிராமத்திற்கு மாறாக, தீண்டத்தகாதோர் எந்த எதிர்ப்பையும் காட்ட முடியாது. அவர்கள் எண்ணிக்கையில் குறைவானவர்கள். பொருளாதார நிலையில் ஏழைகள். இப்போதிருக்கிற நிலையிலேயே கிராம அமைப்பு முறை தொடர்ந்திருக்குமானால், தீண்டத்தகாதோர் தங்களது சமூக, பொருளாதார விடுதலையை எப்போதுமே அடையமாட்டார்கள். அவர்கள் தங்களது சமூக, பொருளாதார சார்பு நிலை காரணமாக வளர்த்துக் கொண்ட தாழ்வு மனப்பான்மையிலிருந்து அவர்கள் விடுபடவே மாட்டார்கள். ஆகவே, இந்த கிராம அமைப்பு முறை தகர்க்கப்பட வேண்டும். கிராம அமைப்பு முறை மூலம் இந்துக்களின்

ஆதிக்கப்பிடியில் சிக்குண்டிருக்கும் தீண்டத்தகாதோர் உண்மையிலேயே அந்த அடிமைச் சங்கிலியறுத்து விடுதலை பெறவிரும்பினால், இதுதான் அவர்களுக்கான ஒரே வழி. தீண்டத்தகாதோருக்கு மட்டுமேயான புதிய, தனி கிராமங்களை அரசு செலவில் மத்திய அரசே உருவாக்கித்தருவதற்கான வழிவகைகள் அரசியல் சட்டத்தில் செய்யப்படவேண்டும் என்று நீங்கள் வலியுறுத்த வேண்டும் என்பது எனது யோசனை. அரசுக்குச் சொந்தமான விளை நிலங்கள் ஏராளமான அளவில் உடைமையாகப்படாமல் இருக்கின்றன. இது, தீண்டத்தகா தோருக்கான புதிய கிராமங்கள் அமைக்கும் திட்டத்தை நிறைவேற்றுவதற்கென ஒதுக்கீடு செய்யப்படலாம். தனி நபர்களிடமிருந்து தனி ஒதுக்கமாக இருக்கும் காலி நிலங்களை அரசு வாங்கி, இதே காரியங்களுக்குப் பயன்படுத்தலாம். இப்போதிருக்கிற குடியிருப்புக்களிலிருந்து இத்தகைய புதிய கிராமங்களுக்கு இடம் பெயர்ந்து சுதந்திரமான விவசாயிகளாக குடியமர்வதற்கு, தீண்டத்தகாதோரைத்தூண்டுவது கடினமான செயலல்ல. இதற்குக் கொஞ்சம் காலம் அதிகமாகும். அதனால் பரவாயில்லை. இந்தப் பணியைச் செய்வது மத்திய அரசின் கடப்பாடு என்பதை அரசியல் சட்ட ரீதியாக்க வற்புறுத்துவது நமக்கு மிகவும் முக்கியமானதாகும்.

இன்னும் ஒரு விஷயத்தைப் பற்றி நான் உங்களிடம் சிலவார்த்தைகள் பேச வேண்டும் அது, இந்தியாவிலுள்ள தீண்டத்தகாதோரின் பிரச்சாரகமாகப் பயன்படும் ஒரு மத்திய அகில இந்திய அரசியல் அமைப்பை உருவாக்குவதன் அவசியம் பற்றிய தாகும். நாம் நமது மாநில அமைப்புக்கள் மூலமாக நமது அரசியல் நடவடிக்கைகளை முன்னெடுத்துச் சென்று கொண்டிருக்கிறோம். மாநிலங்களில் கூட பல்வகையான அரசியல் அமைப்புக்கள் செயல்படுவதை நான் பார்க்கிறேன். தலைவராகவோ செயலாளராகவோ பவனிவரப் பேரார்வமுடைய எந்த ஒருவரும், தன்னைத் தலைவர் அல்லது செயலாளராகக் கொண்டு ஒரு சங்கத்தைத் தோற்றுவித்து விடுகிறார்கள். தலைவர் அல்லது செயலாளராகத் தனது பெயரோடு தனது சங்கத்தின் பெயர் அச்சடித்த லெட்டர்காகிதத்தைத் தயார் செய்து வைத்துக் கொள்வதைத் தவிர அவர் வேறொன்றும் செய்யத் தேவையில்லை. இது ஒரு மோசமான நிலை. இதனை நீங்கள் உடனடியாக ஒரு முடிவுக்குக் கொண்டுவர வேண்டும். இதனைச் செய்ய ஒரே ஒரு

வழிதான் இருக்கிறது. இப்போது இருக்கிற அனைத்து அமைப்புக்களையும் ஒழித்துவிட வேண்டும். மாநிலங்களில் கிளைகளோடு கூடிய அனைத்திந்திய அமைப்பை உருவாக்க வேண்டும். இது உங்களுக்குத் தேவையான வலிமையைக் கொடுக்கும். ஒரு ஐக்கிய முன்னணியை உருவாக்குவதற்கு ஏற்றவகையில் நீங்கள் பணிபுரிய உதவும். நீங்கள் உடனடியாக இந்தப் பணியைச் செய்வீர்கள் என்று நான் நம்புகிறேன்.

தீண்டத்தகாதோர் பிரச்சினை பற்றி நான் என்ன நினைத்தேனோ, உணர்ந்தேனோ அவற்றை உங்களிடம் கூறியிருக்கிறேன். உங்களின் மேலான கவனத்தை இதில் செலுத்துவீர்கள் என்று நம்புகிறேன்.

கடைசியாக, யுத்தத்தைப் பற்றிய எங்களது மனப் போக்கைக் குறிப்பிட விரும்புகிறேன். ஆரம்பத்திலிருந்தே யுத்த முயற்சிகளை நாங்கள் ஆதரித்து வந்திருக்கிறோம். அதற்கு நாங்கள் எங்களின் ஆதரவைத் தொடர்ந்து தருவோம் என்பதில் உறுதியாக இருக்கிறேன். நாங்கள் வலியுறுத்திவரும் எங்களின் அரசியல் கோரிக்கைகள் நிறைவேற்றப்படும். ஆனால் எங்கள் கோரிக்கைகள் முன்னதாகவே நிறைவேற்றப்படவேண்டுமென்னும் நிபந்தனையில்லாமலே, யுத்த முயற்சிகளுக்கு எங்களது ஆதரவைக் கொடுத்திருக்கிறோம். யுத்தம் வெற்றிகரமாக முடிய வேண்டும் என்பதைவிட எங்களின் கோரிக்கைகள் நிறைவேற்றப் பட வேண்டியதன் முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப்பிடுகிறோம் என்று இதற்குப் பொருளல்ல. யுத்த ஆதரவிற்கு நாங்கள் எந்த நிபந்தனைகளையும் விதிக்கவில்லை. ஏனென்றால், யுத்தத்தில் ஏற்படும் தோல்வியைவிட, வெற்றிகரமான யுத்த விளைவுகள் எங்களின் அரசியல் கோரிக்கைகளை வென்றெடுப்பதற்கு மேலான முறையில் உதவும் என்று நாங்கள் எண்ணுகிறோம். இது ஜனநாயகத்திற்கும் சர்வாதிகாரத்திற்கு மிடையேயான போர். அறிவார்ந்த சர்வாதிகாரமல்ல. நேர்மையான கருத்துக்கள் இல்லாமல் இனத்திமிரின் அடிப்படையில் அமைந்த அதீத காட்டுமிராண்டித்தனமான சர்வாதிகாரம். ஏதாவதொரு சர்வாதிகாரம் அழிக்கப்பட வேண்டுமென்றால், அது இந்த இழிந்த நாஸி சர்வதிகாரம்தான். இந்த நாட்டில் காணப்படும் எல்லாவித அரசியல் வேறுபாடுகளுக்கிடையிலும், சிலர் எண்ணுவதைப் போல்

எதிர் காலத்தைப் பற்றிய அனைத்து உறுதியற்ற நிலைமைகளுக்கிடையிலும் இந்த நாஸியிசம் வெற்றிபெற்றால் அது நமது எதிர்காலத்திற்கு விளைவிக்கப்போகும் கேடுகளை நாம் மறந்து விடுகிறோம். மிக முக்கியமானது என்னவென்றால், அதன் இனவாதம் இந்தியர்களுக்கு மிகுந்த கேட்டைவிளைவிக்கும். இது இந்தச் சூழ்நிலை பற்றிய சரியான கண்ணோட்டமாக இருக்குமானால், மனித உறவின் அடிப்படைக்கோட்பாக இருக்கும் ஜனநாயகம், இப்புவியிலிருந்து மறைந்து விடாமல் காக்கும் மாபெரும் கடமை நமக்கு இருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது. அதில் நமக்கு நம்பிக்கை இருக்குமானால் நாம் அனைவருமே அதற்கு உண்மையானவர்களாகவும் பொறுப்புடையவர்களாகவும் இருப்போம். ஜனநாயகத்தின் மீது நமக்குள்ள நம்பிக்கையில் நாம் உறுதியுடன் இருப்போம். அது மட்டுமல்ல, நாம் எதைச் செய்தாலும் சரி, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய கோட்பாடுகளை ஜனநாயக விரோதிகள் சிதைப்பதற்கு, நாம் எவ்விதத்திலும் உதவிடாமலிருக்க உறுதியேற்கவேண்டும். அந்தப் பிரச்சினையில் நாம் அனைவரும் ஒன்றுபட்டிருப்போம். ஜனநாயக நாகரிகத்தின் அடிப்படையைக் காப்பதற்கு, பிற ஜனநாயக நாடுகளுடனும் சேர்ந்து நாம் பாடுபட வேண்டும். ஜனநாயகம் வாழுமானால், அதன் பயன்களை நாம் நிச்சயமாக அனுபவிப்போம். ஜனநாயகம் வீழுமானால் அதுவே நமக்கு அழிவுக்காலமாகும். அதில் எவ்வித சந்தேகமுமில்லை.

இந்த சந்தர்ப்பத்தில் நான் வேறெதுவும் உங்களுக்குச் சொல்வதற்கில்லை. உங்கள் மத்தியில் இருப்பதற்கு நான் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். கடந்த காலத்தைப் போலவே எதிர்காலத்திலும் உங்களுக்குச் 'சேவை செய்வதில் மகிழ்ச்சி அடைவேன். நாம் அனைவரும் ஒன்றுபட்டுப் பாடுபட்டால் நாம் தோல்வியடைய மாட்டோம். ஏனெனில் நமது நோக்கம் நேர்மையானது, மனித நேயத்திற்கானது.

தலைவர் ராவ் பகதூர் என். சிவராஜ், இந்த அமர்வை மறுநாள் காலை 10 மணி வரை ஒத்திவைத்தார். ஏற்கனவே அறிவித்தபடி ஆய்வுக்குழுக்கூட்டம் இன்றிரவு 9 மணிக்கு மோகன் பார்க் ஹோட்டல் கூடத்தில் நடைபெறும்.

## ஆய்வுக்குழுவின் அமர்வு ஜூலை 18, 1942

அனைத்துப் பிரதிநிதிகளும் கலந்து கொண்ட, அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் மூன்றாவது மாநாட்டின் ஆய்வுக்குழுக் கூட்டம் மோகன் பார்க் ஹோட்டலில் இரவு 9 மணிக்குக் கூடியது. தலைவர் என். சிவராஜ் தலைமை வகித்தார். வரைவுத் தீர்மானங்கள் விவாதிக்கப்பட்டன. நான்கு மணி நேர அமர்வுக்குப் பின்னர், அத்தீர்மானங்களெல்லாம் மாநாட்டின் பொது அமர்வில் வைக்கப்பட வேண்டுமென்று ஆய்வுக்குழு ஒருமனதாகத் தீர்மானித்தது.

## பொது அமர்வு இரண்டாம் நாள் ஜூலை 19, 1942

அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் மாநாட்டு மூன்றாவது அமர்வு காலை 10 மணிக்கு ராவ்பகதூர் என். சிவராஜ் தலைமையில் மீண்டும் கூடியது.

மாநாட்டுப் பிரதிநிதிகள் பலர் சிறப்பாக உருவாக்கிப் பாடிய பாடல்களுடன் நிகழ்ச்சிகள் தொடங்கின.

ராவ்பகதூர் என்.சிவராஜ் பேசினார், தாய்மார்களே, பெரியோர்களே,

ஐந்து தீர்மானங்களை இந்த மாநாட்டில் முன்வைக்க ஆய்வுக் குழு முடிவு செய்திருக்கிறது என்பதை அறிவிக்க விழைகிறேன்.[1] முதல் 4 வரையிலுள்ள தீர்மானங்கள் ஒரே முன் மொழிவாக முதலில் முன் வைக்கப்படும். ஐந்தாவது தீர்மானம் அடுத்ததாக முன்மொழியப்படும். நாசிக் (பம்பாய்) எம்.எல்.எ. திரு.பி.கே. கெய்க்வாடை முதல் நான்கு தீர்மானங்களை முன்மொழிய அழைக்கிறேன்.

தீர்மானங்களை முன்மொழியும் போது திரு. பி. கே. கெய்க்வாடு கூறினார்; திரு. தலைவர் அவர்களே, தாய்மார்களே, பெரியோர்களே, எனக்கு முன்மொழியக் கொடுக்கப்பட்டுள்ள தீர்மானங்களாவன:

## தீர்மானம்1 : கிரிப்ஸின் முன்மொழிவுகள் - ஏற்க முடியாது

அரசியலமைப்பு மாற்றங்கள் சம்பந்தமாக சர் ஸ்டாஃபோர்டு கிரிப்ஸ் மூலம் மாண்பமை அரசு கொடுத்தனுப்பிய முன்மொழிவுகள், தாழ்த்தப்பட்ட வகுப்பினரால் முற்றிலுமாக ஏற்கக் கூடியவையல்ல என்று மாநாடு அறிவிக்கிறது. இந்த மாநாட்டின் கருத்துப்படி இந்த முன்மொழிவுகள் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் நலன்களுக்கு வஞ்சனை செய்வதைத் தவிர வேறில்லை. தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் ஒப்புதல் பெறாத எந்த அரசியலமைப்புச் சட்டமும் அவர்கள் மீது திணிக்கப்படமாட்டாது என்று மாண்பமை அரசின் சார்பில் மாண்புமிகு வைஸ்ராய் அவர்கள் 1940 ஆகஸ்ட் 8 அன்று செய்த பிரகடனத்தில் கொடுத்த வாக்குறுதியை மீறிய செயலாகும்.

## கிரிப்ஸின் முன்மொழிவுகளுக்கு எதிர்ப்பு

அரசியல் நிர்ணய நடையினால் புதிய அரசியலமைப்புச் சட்டம் உருவாக்கப்பட வேண்டுமென்ற காங்கிரசின் கோரிக்கையை மாண்பமை அரசு ஏற்றுக் கொண்டதற்கும் புதிய இந்திய தேசிய அரசுக்கு இங்கிலாந்திலுள்ள மாண்பமை அரசுக்குமிடையில் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டு அதன் மூலம் தாழ்த்தப்பட்ட பிரிவினரின் நலன்காக்கத் திட்டமிடுவதற்கும் இந்த மாநாடு தனது மிக உறுதியான எதிர்ப்பைப் பதிவு செய்கிறது.

## தீர்மானம் 2: அரசியலமைப்புக் கோரிக்கை

(1) அரசியலமைப்பு, தாழ்த்தப்பட்டவர்களின் ஒப்புதலைப் பெறாவிட்டால்,

(2) இந்திய தேசிய வாழ்க்கையில் தாழ்த்தப்பட்ட விரிவினர் தனித்த, வேறான, முக்கியமான கூறு என்பதை அது அங்கீகரிக்காவிட்டால்,. மற்றும்

(3) புதிய அரசியலமைப்பின் மூலம் தாழ்த்தப்பட்ட பிரிவினருக்கு உண்மையான பாதுகாப்பு உணர்வுகொடுக்கும் வழிவகைகள் செய்யப்படாமலும் பின்வரும் தீர்மானங்கள்

உள்ளடக்கப்படாமலும் இருந்தால், அத்தகைய அரசியல் சட்டம் தாழ்த்தப்பட்ட பிரிவினருக்கு உடன்பாடானதல்ல என்று இந்த மாநாடு அறிவிக்கிறது.

## தீர்மானம் 3: புதிய அரசியல் சட்டத்தில் சிறப்புச் சட்டப்பிரிவுகள்

தாழ்த்தப்பட்ட விரிவினரிடையே பாதுகாப்பு உணர்வைத் தோற்றுவிப்பதற்காக, கீழ்வரும் சிறப்புச் சட்டப்பிரிவுகள், புதிய அரசியல் சட்டத்தில் சேர்க்கப்பட வேண்டுமென்று இந்த மாநாடு கோரிக்கை வைக்கிறது.

## மாநில பட்ஜெட்டுகளில் தாழ்த்தப்பட்ட பிரிவினருக்கான வழிவகைகள்

(1) ஒவ்வொரு மாநில பட்ஜெட்டிலும், தாழ்த்தப்பட்ட பிரிவினரின் குழந்தைகளுக்கு ஆரம்பக்கல்வி மேம்பாட்டிற்காக, உடன்பாட்டின் பேரில் ஒப்புக்கொள்ளப்பட்ட நிதியை ஆண்டுதோறும் ஒதுக்க வேண்டும். அதேபோல் அவர்களின் நிதி மாநில வருவாயிலிருந்து முதற்கடமையாக ஒதுக்கப்பட வேண்டுமென்று அறிவிக்கப்பட வேண்டும்.

## அரசு நிர்வாகத்தில் பிரதிநிதித்துவம்

(2) மத்திய, மாநில அரசு நிர்வாகம் அனைத்திலும் தாழ்த்தப்பட்ட பிரிவினருக்கு பிரதிநிதித்துவம் அளிக்கப்பட சட்டத்தில் உரிய வழிவகைகள் செய்யப்பட வேண்டும். பிரதிநிதித்துவ விகிதாச்சாரம் அவர்களின் எண்ணிக்கை, தேவை, முக்கியத்துவம் ஆகியவற்றைக் கொண்டு நிர்ணயிக்கப்படலாம்.

## அரசுப் பணிகளில் பிரதிநிதித்துவம்

(3) அரசுப் பணிகளில் தாழ்த்தப்பட்ட பிரிவினருக்கான பிரதி நிதித்துவத்தைப்பெற சட்டத்தில் உரிய வழிவகைகள் செய்யப்பட வேண்டும். அதற்கான விகிதாச்சாரம், அவர்களின் எண்ணிக்கை,

தேவை, முக்கியத்துவம் ஆகியவற்றைக் கொண்டு நிர்ணயிக்கப் படலாம். நீதி, காவல் மற்றும் வருவாய் போன்ற பாதுகாப்புப் பணிகளில், குறைந்தபட்ச தகுதி அடிப்படையில், தாழ்த்தப்பட்ட பிரிவினருக்கு நிர்ணயிக்கப்பட்ட பிரதிநிதித்துவம் பத்தாண்டு களுக்குள் எட்டப்பட வழிவகைகள் செய்யப்பட வேண்டும் என்று இந்த மாநாடு வலியுறுத்துகிறது.

## அனைத்து சட்டமன்றங்கள் மற்றும் உள்ளாட்சி மன்றங்களிலும் பிரதிநிதித்துவத்திற்கான நிரந்தரச் சட்டம்

(4) அனைத்து சட்டமன்றங்களிலும், உள்ளாட்சி மன்றங் களிலும், தாழ்த்தப்பட்ட பிரிவினருக்கு, அவர்களின் எண்ணிக்கை, தேவை, முக்கியத்துவம் ஆகியவற்றிற்கேற்ப பிரதிநிதித்துவத்தை உத்திரவாதப் படுத்துவதற்கேற்ப சட்ட வழிவகைகள் செய்யப்பட வேண்டும்.

## தனி வாக்காளர் தொகுதி

(5) அனைத்து சட்டமன்றங்களிலும் உள்ளாட்சி மன்றங் களிலும் தாழ்த்தப்பட்ட பிரிவினருக்கு தனிவாக்காளர் தொகுதி மூலம் பிரதிநிதித்துவம் பெறச் செய்ய சட்ட வழிமுறைகள் மேற் கொள்ளப்பட வேண்டும்.

## அரசு வேலை வாய்ப்பு ஆணையத்தில் பிரதிநிதித்துவம்

(6) அனைத்து மத்திய, மாநில வேலைவாய்ப்பு ஆணையங் களிலும் தாழ்த்தப்பட்ட பிரிவினருக்கு பிரதிநிதித்துவம் அளிக்கப்பட சட்ட வழிமுறைகள் செய்யப்பட வேண்டும்.

## தீர்மானம் 4: கிராம அமைப்பு முறை மாற்றம்

கிராமங்களின் வெளிப்புறப்பகுதிகளில், தாழ்த்தப்பட்ட பிரிவினர், வாழ்வாதாரம் எதுவுமின்றி, இந்துக்களைவிட மிகக் குறைந்த எண்ணிக்கையில் வாழ்வது தொடருகிற வரையில் அவர்கள்

தீண்டத்தகாதவர்களாகவே நீடித்திருப்பர். இந்துக்களின் கொடுமை மற்றும் அடக்கு முறைக்குள்ளாவர். அவர்கள் சுதந்திரமான முழுமையான வாழ்வை அனுபவிக்கமுடியாது. ஜாதி இந்துக்களின் கொடுமை, அடக்குமுறை ஆகியவற்றிலிருந்து தாழ்த்தப் பட்டவர்களுக்குப் பாதுகாப்பளிக்க, அவர்கள் முழுமையான மனிதத்தன்மையோடு மேம்பாடடைய உதவிட, அவர்களுக்கு சமூக, பொருளாதார பாதுகாப்பளித்திட, தீண்டாமையை அகற்ற வழிவகைகள் செய்திட, பலநூற்றாண்டுக்காலமாக இந்துக்களினால் தாழ்த்தப்பட்டவர்கள் அவதியுறக் காரணமான அனைத்துத் தீமைகளுக்கும் மூல ஊற்றாய் விளங்கும் செல்வாக்குமிக்க கிராம அமைப்பு முறையில் புரட்சிகர மாற்றம் செய்யப்பட வேண்டும் என்று இந்த மாநாடு நீண்ட, அறிவார்ந்த விவாதங்களுக்குப் பின்னால் முடிவிற்கு வருகிறது. இந்த மாற்றங்களின் அவசியத்தை உணர்ந்திருப்பதால், அரசு அமைப்புமுறையில் சட்டமாறுதல்கள் செய்வதோடு கூடவே, இப்போது மிகுந்த செல்வாக்குடன் இருக்கும் கிராம அமைப்பு முறையில், கீழ்க்காணும் வழிகளில் மாற்றம் செய்யப்பட வேண்டும் என்று இந்த மாநாடு எண்ணுகிறது:

## தனியான கிராமங்கள்

(1) இந்து கிராமங்களிலிருந்து தொலைதூரத்தில், தாழ்த்தப் பட்ட மக்களுக்கான தனிகிராமங்களை அமைத்து, இப்போதுள்ள குடியிருப்புக்களிலிருந்து தாழ்த்தப்பட்ட மக்களை அத்தனிக் கிராமங்களுக்கு மாற்றிட சட்ட வழிவகைகள் செய்யப்படவேண்டும்.

## குடியிருப்பு ஆணையங்கள்

(2) புதிய கிராமங்களில் தாழ்த்தப்பட்ட மக்கள் குடியேறு வதற்கு ஏற்ப, குடியிருப்பு ஆணையங்கள் அமைத்திடும் வகையில் அரசியல் சட்டத்தில் வழிவகைகள் செய்ய வேண்டும்.

## தாழ்த்தப்பட்ட மக்களுக்கு நிலம்

(3) கைக்கொள்ளப்படாத, அரசுக்குச் சொந்தமான விளை நிலங்களெல்லாம் பொறுப்பாகப் பாதுகாக்கப்பட்டு, தாழ்த்தப்பட்ட

மக்களுக்கு புதிய குடியிருப்புக்களை உருவாக்குவதற்காக ஆணையத்திடம் ஒப்படைக்கப்பட வேண்டும்.

## புதிய நிலங்களைக் கைப்பற்றுதல்

(4) தாழ்த்தப்பட்ட மக்களுக்கான குடியிருப்புத் திட்டத்தைப் பூர்த்தி செய்வதற்காக, நிலங்களை வைத்திருக்கும் தனியாரிடமிருந்து நில ஆர்ஜிதச் சட்டத்தின் கீழ் புதிய நிலங்களை வாங்குவதற்கு ஆணையத்திற்கு அதிகாரமளிக்கப்பட வேண்டும்.

## குறைந்தபட்சம் ஆண்டிற்கு ஐந்து கோடி ரூபாய் மத்திய அரசு ஒதுக்கீடு செய்ய வேண்டும்

(5) ஆணையம் தங்களுக்குள்ள இத்தகைய பணிகளைச் செய்வதற்காக, ஆணையத்திற்கு ஆண்டிற்குக் குறைந்தபட்சமாக ஐந்துகோடி ரூபாய் மத்திய அரசு மானியமாக அளிக்க சட்ட வழிவகைகள் செய்யப்பட வேண்டும்.

தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானங்கள்தான் நமது இயக்கத்திற்கு உண்மையிலேயே மூலபலமாக அமைந்திருக்கின்றன. அவைஎல்லாம் மிகத் தெளிவாகவே எழுதப்பட்டிருக்கின்றன. ஆகவே உங்களுக்குப் பரிந்துரைக்க நான் நீண்ட சொற்பொழிவாற்றத் தேவையில்லை. தாழ்த்தப்பட்ட மக்களின் நலன்களுக்கு ஊறுவிளைவிக்கும் கிரிப்ஸ் முன்மொழிவுகளை அரசு அறிவித்ததை முதல் தீர்மானம் கண்டிக்கிறது. 2, 3, 4 வது தீர்மானங்கள், தாழ்த்தப்பட்ட மக்களின் அரசியல், பொருளாதார, சமூக மேம்பாட்டிற்கு, எதிர்கால அரசியல் சட்டத்தில் சேர்க்கப்பட வேண்டிய அத்தியாவசியமான சட்டப் பிரிவுகளை முன்வைக்கிறது. ஜாதி இந்துக்கள் உரத்துக் கூறும் வாக்குறுதிகளில் எங்களுக்கு நம்பிக்கை இல்லை. புனா ஒப்பந்தத்தின் மை உலருவதற்கு முன்னாலேயே அதற்கு எதிராகப்போன நபர்களை எப்படி நம்பமுடியும்? தாழ்த்தப்பட்ட பிரிவினர் இதுவரை அடைந்திருக்கிற முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்தத் துடித்துக் கொண்டிருக்கும் இத்தகைய சமூகத்தினரிடம் இந்தியாவின் ஒடுக்கப்பட்ட லட்சோபலட்சம் மக்களின் தலைவிதி ஒப்படைக்கப்படுமானால் அது உலகவரலாற்றில் மிகக் கருமை படிந்த நாளாகும். இந்தத்

தீர்மானங்கள் நமது உரிமைப்பத்திரமாகும். இதில் குறிப்பிடப் பட்டிருக்கின்ற கோரிக்கைகளை அடைவதற்கு தாழ்த்தப்பட்ட மக்களின் ஒவ்வொரு பிரதிநிதியும் சர்வபரித்தியாகமும் செய்யத்தயாராக இருக்க வேண்டும். இப்போதுகூட கிராமங்களில் உள்ள நமது மக்கள் அடிமைகளைவிடக் கேவலமாக நடக்கப் படுகிறார்கள். ஆக ஜாதி இந்துக்களிடம் நமது தலைவிதி ஒப்படைக்கப்படும் பொழுது, நமது கதி என்ன ஆகும் என்பதை மனக்கண்முன் கொண்டுவந்து நிறுத்திப் பார்க்க முடிகிறது. ஆகவே, நமது சமூகத்திலுள்ள ஒவ்வொருவரும் இந்தத் தீர்மானங்களை ஆதரிக்க வேண்டியது அவர்கள் கடமையாகும். இந்தத் தீர்மானங்களை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று பலமாகப் பரிந்துரைத்து முடித்துக் கொள்கிறேன்.

அலகாபாத்தைச் சேர்ந் திரு. ராய் சாஹிப் ஷாம்லாலை, இந்தத் தீர்மானத்தை வழிமொழித்து பேசும்படி ராவ் பகதூர் என். சிவராஜ் கேட்டுக் கொண்டார்.

ராய் சாஹிப் ஷாம்லால் கூறியதாவது: தலைவர் அவர்களே, தாய்மார்களே, பெரியோர்களே,

நாசிக்கைச் சேர்ந்த எனது நண்பர் திரு.பி.கே. கெய்க்வாடு முன் மொழிந்த தீர்மானத்தை வழிமொழிவதில் நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். தாழ்த்தப்பட்ட மக்களின் சமூக சேவகனாக நான் கடந்த முப்பதாண்டுகளாகப் பணியாற்றி வருகின்றேன். நமது இறுதி நோக்கங்களையும் இலக்குகளையும் கொண்ட ஆதாரபூர்வமான திட்டம் நமக்கு இல்லை என்பதுதான் நம்முடைய மாபெரும் பின்னடைவாகும். இப்பொழுது முன்மொழியப்பட்டிருக்கிற தீர்மானத்தால் இப்பின்னடைவு தீர்க்கப்படும். டில்லியில் கிரிப்ஸ் முன்மொழிவுகள் வெளியிடப்பட்டபோது, இந்தியா முழுமையிலுள்ள தாழ்த்தப்பட்ட பிரிவினரின் தலைவர்களை டாக்டர் அம்பேத்கர் உடனடியாக டில்லிக்கு அழைத்தார். நாம் அங்கு சந்தித்த பிறகு, முழுக்கமுழுக்க ஒருசார்பான, தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அதீத தீங்கு விளைவிக்கும் வகையில் திட்டமிடப்பட்ட அந்த முன்மொழிவுகளை நிராகரிப்பது என ஒருமனதாக முடிவு செய்தோம். நமது பின்னடைவுகள் யாவை, என்ன இயலாமைகளால் நாம் துன்புற்று வருகிறோம் என்பனவற்றைப் பற்றி உங்களுக்குச்

சொல்ல ஒரு நீண்ட சொற்பொழிவு நிகழ்த்துவது தேவையற்றதாகும். நாம் ஒவ்வொருவரும் தினமும் இத்துன்பங்களை அனுபவித்து வருகிறோம். அவற்றை நான் இங்கு கூறுவது, கூறியது கூறலாகக் கருதப்படும். இந்தத் தீர்மானம் இன்றைய தலைமுறைக்கும் வருங்காலத்தலைமுறையினருக்கும் நன்மை பயக்கும். அனைவரும் ஒருமனதான ஒப்புதலைத் தரவேண்டும். நான் சார்ந்த மாநிலத்தின் சார்பாக, இந்தக் கட்டளையை நிறைவேற்ற எங்களது நெஞ்சார்ந்த ஆதரவு உண்டு என்பதை இந்த மாநாட்டில் உறுதியளிக்கிறேன். இந்த வார்த்தைகளுடன், தீர்மானத்தை நான் வழிமொழிந்து உங்களது ஏற்புக்குப் பரிந்துரைக்கிறேன்.

பின்வரும் பிரதிநிதிகளால் தீர்மானம் ஆதரிக்கப்பட்டது:

1. திரு. கோபால் சிங், எம். பி. இ., எம்.எல்.ஏ (பஞ்சாப்)
2. திரு.என்.என். தாஸ், எம்.ஏ., பி. எல். (கல்கத்தா)
3. திரு. ஆர். ஆர் போலே, பி. ஏ., எல். எல். பி, எம்.எல்.ஏ (புனா பமபாய்)
4. திரு. ஏ. டி. ராய், பி. ஏ., எம். எல். சி, (ஜெஸ்ஸீர், வங்காளம்)
5. திரு. பி. எம். படானி, (அஹமதாபாத், குஜராத்)
6. திரு. மங்கிலால் (ராஜ்புதானா)
7. திரு. ஹெச். எல். கோசரே, பி. ஏ., (நாகபுரி)
8. திரு. பி. ஹெச். வரலேர, எம். எல். ஏ (கர்னாடக், பம்பாய்)

இத்தீர்மானங்கள் முன்மொழியப்பட்டு, முறையாக வழிமொழியப்பட்டு ஆதரிக்கப்பட்டன. தலைவர் வாக்கெடுப்புக்கு விட்டார். இத்தீர்மானங்களை யாருமே எதிர்க்காத காரணத்ததால், தீர்மானங்கள் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டதாக அறிவிக்கப்பட்டது.

தீர்மானத்தின் இரண்டாவது பகுதியை, அதாவது தீர்மானத்தின் ஐந்தாம் பிரிவை முன்மொழியுமாறு ஜல்கோவானைச் (பம்பாய்) சேர்ந்த திரு. டி. ஜி. ஜாதவ், பி. ஏ. எல். எல். பி., எம். எல். ஏ. வை தலைவர் ராவ் பகதூர் என். சிவராஜ் அழைத்தார்.

## தீர்மானம் - திரு. - டி. ஜி ஜாதவ்

*தீர்மானத்தை முன்மொழிந்து திரு. டி. ஜி. ஜாதவ் கூறினார்:*

*"தலைவர் அவர்களே, சகோதரப் பிரதிநிதிகளே, தாய்மார்களே, பெரியோர்களே,*

*உங்களின் ஒப்புதலுக்காக நான் முன்மொழியப் பேறு பெற்றிருக்கும் தீர்மானமாவது:*

## தீர்மானம் 5: அகில இந்திய தாழ்த்தப்பட்ட பிரிவினருக்கான கூட்டமைப்பை நிறுவுதல்

*தாழ்த்தப்பட்டவர்களின் அரசியல் இயக்கங்களை வழிநடத்திச் செல்வதற்கு ஒரு மத்திய அரசியல் அமைப்பை உருவாக்கு ஏற்ற நேரம் வந்துவிட்டதென்று இந்தமாநாடு கருதுகிறது. எனவே அகிலஇந்திய தாழ்த்தப்பட்ட பிரிவினருக்கான கூட்டமைப்பை இந்தியாவிலுள்ள தாழ்த்தப்பட்ட மக்களின் மத்திய அரசியல் அமைப்பாக நிறுவுவது என்று இம்மாநாடு தீர்மானிக்கிறது. தாழ்த்தப்பட்ட மக்களின் ஸ்தல அரசியல் அமைப்புக்களையெல்லாம் இதனுடன் இணைத்து இதன்மூலம் செயலாற்றுமாறு அறைகூவல் விடுக்கிறது. இதனைச் செயல்படுத்த, அகில இந்தியதாழ்த்தப்பட்ட பிரிவினரின் கூட்டமைப்பிற்கான விதிமுறைகளை உருவாக்க தன்னைத் தலைவராகக் கொண்ட ஒரு குழுவை ஏற்படுத்துவதற்கு தலைவருக்கு இந்த மாநாடு அதிகாரமளிக்கிறது. அந்தக்குழு கீழ்க்கண்டவர்களை உறுப்பினர்களாகக் கொண்ட தற்காலிகக் குழுவிடம் அறிக்கையைச் சமர்ப்பிக்கும். அவர்களின் அங்கீகாரத்திற்குப்பிறகு அமைப்புவிதி முறைகள் நடைமுறைக்கு வரும்.*

## வங்காளம்

*திரு. ஆர். எல். முஸ்வாஸ்*

*திரு. ஏ. டி. ராய்*

*திரு. ஆர். எஸ். துஸியா*

*பி. சி. மண்டல்*

## பம்பாய்

திரு. டி. ஜி. ஜாதவர்

திரு. பி. என். ராஜ் போஜ்

திரு. பி. கே. கெய்க்வாடு

## பஞ்சாப்

திரு. கோபால் சிங்

திரு. சேத் கிசன் தாஸ்

## சி. பி. மற்றும் பீரார்

திரு. ஆர். வி. கவாடே

திரு. ஆர் ஹெச். ரஷன்த்ரே

திரு. ஹெச். எல். கொசரே

## ஐக்கிய மாநிலங்கள்

திரு. ராய் சாஹிப் ஷாம்லால்

திரு. ராய் சாஹிப் ராம் சஹாய்

திரு. டாக்டர். நந்தலால் ஜெய்ஸ்வால்

திரு. பத்ரிபிரசாத் பால்மிகி

திரு. பாபு திலக் சந்த்.

தாய்மார்களே, பெரியோர்களே, உங்களின் ஒப்புதலுக்காக நான் பரிந்துரைக்கும் இந்தத் தீர்மானம் எல்லோருக்கும் ஏற்புடையதாக இருக்குமென்றும் உங்கள் அனைவரின் ஒருமனதான ஆதரவைப் பெறும் என்றும் நான் நிச்சயமாக நம்புகிறேன். ஒற்றுமையே பலம் என்பதை யாருக்கும் சொல்லித்தரத் தேவையில்லை. இது கூட்டு நிர்ப்பந்தம் கொடுக்கிற காலம். ஒரே அமைப்பின் கீழ் நம் அனைவரின் ஒட்டு மொத்த வலிமையையும் திரட்டிக் காட்ட வில்லையென்றால், நாம் பிற பெரிய சமூகங்களின் தாக்குதல்களிலிருந்து தப்பிக்க முடியாது. ஜாதி இந்துக்கள் காங்கிரசில் மிக வலிமையோடு திரண்டிருக்கிறார்கள் என்பதையும் முஸ்லிம்கள் முஸ்லிம் லீகில்

திரண்டிருக்கிறார்கள் என்பதையும் நாம் அறிவோம். இந்த உண்மைகளை அறிந்தபிறகும் நாம்அனைவரும் ஒரு கூட்டமைப்பின் கீழ் அணிதிரளவில்லையென்றால் நம்மிடையேயுள்ள ஒற்றுமை யின்மையை எதிரிகள் பயன்படுத்திக் கொண்டு ஒரு பிரிவினருக்கும் மற்றொரு பிரிவினருக்குமிடையே சிண்டு முடிந்து விடுவார்கள். இவ்வாறு நாம் நமக்குள்ளேயே சில்லரைச் சண்டைகளில் முழுவதுமாக ஈடுபட்டுக் கொண்டிருக்கும்போது, தாழ்த்தப்பட்ட வகுப்பினர் என்று தனியே ஒரு பிரிவு இல்லை என்று உலகிற்குச் சொல்லுவார்கள். நமது எதிரிகளோடு மோதுவதற்கு நமக்கு வாய்ப்பிருக்காது. இவ்வாறாக நமக்குள்ளேயே இருக்கும் ஒற்றுமையின்மையே நமது வீழ்ச்சிக்குக் காரணமாக இருக்கும். ஜாதி இந்துக்களின் நல்லெண்ணத்திற்கு நாம் சரணடைந்தோமானால், நம்மை எதிர்நோக்கியிருக்கும் இயலாமையை நாம் உணர்ந்து கொள்ள முடியும்.

அனைத்து ஸ்தல அமைப்புகளும் ஒரே மத்திய அமைப்பில் இணைந்து அதன்கீழ் பணியாற்ற வேண்டும் என்று இந்தத் தீர்மானம் கேட்டுக் கொள்கிறது. யுத்த சமயத்தில், போரில் ஈடுபட்டுள்ள நாடுகளிலுள்ள அரசியல் கட்சிகள் தங்களுக்கிடையிலுள்ள வேறுபாடுகளை மறந்து, பொது எதிரியை எதிர்ப்பதற்காக ஒன்றுபட்டுச் செயல்படுகின்றன. நாம் காலத்தே படிப்பினை பெறவேண்டும். ஏனென்றால் நமது போராட்டம் என்பது வாழ்விற்கான போராட்டமாகும். நம்மிடையே உள்ள ஒவ்வொருவரும் அடிமையாக வாழ்வதைவிடச் சாவதையே விரும்புவார்கள் என்பது உறுதி. பிறகு ஏன் வரமுன்னர் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர் வைத்தூறுபோலக்கெடும் என்பதையுணர்ந்து செயல்படக்கூடாது? தாமதமின்றி ஒன்றுபட்டு, உங்களை நோக்கிச் சீறிவரும் கேடுகளைத் தடுத்து நிறுத்துங்கள், கேடுகள் உங்களைத் தாக்கிவிட்டால், பிறகு அவற்றைக்களைவது கடினமாகிவிடும். ஒரே தலைமையின் கீழ் வந்து விட்டால் தங்களுக்குள்ள முக்கியத்துவம் போய்விடும் என்று நம்மில் சிலர் பயப்பட வாய்ப்புண்டு. பலலட்சக்கணக்கானவர் அடையும் இழப்பைவிட ஒரு சில நபர்களின் முக்கியத்துவம் குறைவது பெரிதா? என்று நான் கேட்கிறேன். இந்தத் தீர்மானத்தை ஒருமனதாக ஏற்றுக் கொள்வதோடு மட்டுமல்லாமல் வெவ்வேறு ஸ்தல அமைப்புக்கள் அனைத்தையும் ஒரே மத்திய அமைப்பின் கீழ் காலமதமின்றி

கொண்டுவர வேண்டுமென்று உங்களுக்கு வேண்டுகோள் விடுக்கிறேன். நம்முடன் இல்லாத முக்கியமான அமைப்புக்கள் இருப்பதாக நான் கூறவில்லை. நான் கூறவருவது என்னவென்றால், முக்கியமில்லாத ஒரு சில அமைப்புக்கள் கூட நமது அமைப்புடன் இணையாமல் விடுபட்டுவிடக்கூடாது என்பதுதான். இந்த சில வார்த்தைகளுடன் இந்தத் தீர்மானத்தை உங்களின் ஒப்புதலுக்காக நான் பரிந்துரைக்கிறேன்.

பிறகு, வங்காளத்தைச் சேர்ந்த ராய் சாஹிப் என். சி. துஸ்யாவை, இந்தத் தீர்மானத்தை வழிமொழியும் படி ராவ் பகதூர் என். சிவராஜ் அழைத்தார்.

அதன்படி ராய் சாஹிப் என். சி. துஸ்யா தீர்மானத்தை வழிமொழிந்தார்.

(1) திரு. பி. என் ராஜ்போஜ், புனா (பம்பாய்)

(2) திரு. மங்கிலால் (ராஜ் புதானா)

(3) திரு. பி. சி. மண்டல், பி. ஏ. (கல்கத்தா)

(4) திரு. பத்ரிபிரசாத் வால்மிகி (உ. பி)

(5) திரு. பி. எல். கே. தலிப், எம். ஏ., எல்எல். பி., (லக்னோ, உ. பி.)

(6) திரு. பி. ஜே. ரோஹம், எம். எல். ஏ., அகமது நகர் (பம்பாய்)

ஆகியோர் தீர்மானத்தை ஆதரித்தனர்.

"தீர்மானம் எண் 5, முன்மொழியப்பட்டு முறைப்படி வழிமொழியப்பட்டு ஆதரிக்கப்பட்டிருப்பதால், நான் இப்போது அதனை வாக்கெடுப்பிற்கு விடுகிறேன். இந்தத் தீர்மானத்தை ஆதரிக்கிறவர்களெல்லாம் அதனை வெளிப்படுத்த அவரவர் கைகளை உயர்த்துங்கள். (எல்லோருமே கைகளை உயர்த்துகிறார்கள்) இந்தத் தீர்மானத்தை எதிர்ப்பவர்கள் தங்கள் எதிர்ப்பைக் காட்ட கைகளை உயர்த்துங்கள். யாருமே எதிர்ப்பைத் தெரிவிக்கவில்லை என்பதைப் பார்க்கிறேன். இந்தத் தீர்மானம் ஒருமானதாக நிறைவேற்றப்பட்டதாக அறிவிக்கிறேன்" என்று ராவ் பகதூர் என். சிவராஜ் கூறினார்.

# டாக்டர் அம்பேத்கரின் முடிவுரை

பிறகு ராவ் பகதூர் என். சிவராஜ், டாக்டர். பி. ஆர். அம்பேத்கரை, அவர் வாக்களித்தபடி பேசுமாறு கேட்டுக் கொண்டார்.

இம்முறை மராத்தியில் டாக்டர். பி. ஆர். அம்பேத்கர் பேசியதாவது: நண்பர்களே, கடந்த பத்தாண்டுகளில் அரசியல் இயக்கங்கள் பெரும் வீச்சில் நிகழ்ந்து வருகின்றன. இருப்பினும், இன்று நீங்கள் நிறைவேற்றியிருக்கிற தீர்மானங்கள், தீண்டத்தகாதோரைப் பொருத்த வரையிலும் ஒரு புதுயுகத்தின் தொடக்கமாக அமையும் என்று உறுதியாக நம்புகிறேன். நாளையிலிருந்து எனது புதிய அலுவலகப் பணிகளை ஏற்றுக் கொள்கிறேன் என்பது உங்களுக்கெல்லாம் தெரியும். கடந்த இருபது ஆண்டுகளில் என்னுடைய களப்பணிபற்றிய விவரங்களை உங்கள் முன்வைப்பது எனது கடமை என்று கருதுகிறேன். (கடந்த இருபது ஆண்டுகளில் தாழ்த்தப்பட்ட மக்கள் அடைந்த அரசியல், பொருளாதார, சமூக முன்னேற்றங்களை டாக்டர் அம்பேத்கர் மராத்தியில் திரும்பக் கூறினார்).

தீண்டத்தகாதோர், முஸ்லிம்கள் ஆகிய இருசாராருமே சிறுபான்மை இனத்தவராக அறியப்பட்டாலும், அவர்களின் நிலையில் கணிசமான வேறுபாடு இருக்கிறது என்பதைச் சொல்லத்தான் வேண்டும். நமது இனத்தைக் காட்டிலும் முஸ்லிம் இனம் மிகவும் செழிப்பானது. ஆங்கிலேயர் வருகிறவரைக்கும் அவர்கள் இந்த நாட்டின் ஆட்சியாளர்களாக இருந்திருக்கிறார்கள். இவ்வாறு அவர்கள் உயர்ந்த அந்தஸ்தைப் பெற்றிருக்கிறார்கள். அவர்களின் வளர்ச்சியும் தீர்மானகரமாகவே நம்மைக் காட்டிலும் முன்னேற்றமானது. நாம் பலநூற்றாண்களாக ஒடுக்கப்பட்டிருந்தோம். பொருளாதார நிலையிலும் நாம் மிகுந்த வறுமையில் இருந்தோம். வெறும் மக்கள் தொகைக் கணக்கே மட்டும் வைத்து நாம் முஸ்லிம்களோடு நம்மை ஒப்பிடக்கூடாது. நாம் சொந்த முயற்சியையே முழுவதுமாகச் சார்ந்து, ஆரம்பத்திலிருந்து நம்மை படிப்படியாக முன்னேற்றிக் கொள்ள வேண்டும். நமது சமுதாயத்தை நாம் முன்னேற்ற வேண்டும். என்னுடைய புதிய நியமனத்தால், இந்தப் பணிகளை ஏற்று நடத்துவது இப்போது மற்றவர்களைச்

சார்ந்திருக்கிறது. ஆட்சிப் பொறுப்பின் மீது எனக்கு ஆசை இல்லை. நான் முன் இருந்ததைப் போல் நன்றாகத்தானிருக்கிறேன். "மாண்புமிகு டாக்டர். அம்பேத்கர்" என்பதற்கும் வெறுமனே "டாக்டர். அம்பேத்கர்" என்பதற்கும் எந்த வேறுபாடும் இருப்பதாக நான் நினைக்கவில்லை. என்னுடைய நியமனத்தைப் பொருத்தவரை மிகமுக்கியமானதாக நான் கருதுவது என்னவென்றால், கவர்னர் ஜெனரலின் நிர்வாகக் குழுவில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பிரதிநிதிக்கு ஒரு இடம் இருக்க வேண்டும் என்னும் மரபு இப்பொழுது நிறுவப்பட்டிருக்கிறது என்பதேயாகும் - இது பிராமணீயத்துக்குக் கொடுக்கப்பட்ட மரண அடியாகும். அதில்தான் எனது நியமனத்தின் முக்கியத்துவமே இருக்கிறது. இவ்வாறான மரபை ஏற்படுத்துவதே பிராமணியத்தின் விருப்பம் அல்ல. இதனை தீண்டத்தகாதோரின் பெருவெற்றியாக நான் கருதுகிறேன்.

நிறையப்பேர் என்னோடு சரியாகப் பழகுவதில்லை. இயற்கையாகவே நான் தனியாக வாழ்கிறவன். படிப்பதிலேயே என் நேரத்தைக் கழிக்கிறவன. என்னுடைய இந்த குணத்தை வைத்து, நான் மனிதர்களைச் சரியாக நடத்துவதில்லை என்றும் அவர்களைத் தவிர்க்கிறேன் என்றும் கருதுகிறார்கள். நான் யாரையும் அவமதிப்பதில்லை என்பதை உறுதியாகக் கூறுகிறேன். என்னுடைய நேரம் குறைவானது. நான் எத்தனையோ வேலைகளைச் செய்ய வேண்டியிருக்கிறது. எனக்கு உதவியாளர் இல்லை.

பல இந்துக்கள் என்னை அவர்களின் எதிரியாகப் பார்க்கிறார்கள். அவர்களது உணர்வுகளைக் காயப்படுத்தும்படி நான் கடுமையாகப் பேசுவதாக அவர்கள் குற்றம் சாட்டுகிறார்கள். நான் ஈரநெஞ்சம் உடையவன். எனினும் நான் உண்மையைப் பேச வேண்டியிருக்கிறது. தன்னுடைய உற்றார் உறவினரெல்லாம் நாயைவிடக் கேவலமாக நடத்தப்படுவதையும் அவர்களுடைய எதிர்கால முன்னேற்றம் எல்லாவகையிலும் தடுக்கப்படுவதையும் அவன் பார்க்கும்பொழுது, எந்தத் தவறுமே செய்யாதவர்கள் போல இவர்களிடம் நான் அன்பாக நடக்க வேண்டும் என்று எப்படி இவர்கள் எதிர்பார்க்கலாம். நான் எனது உணர்வுகளைக் கட்டுப்படுத்தி,. எனது எதிரிகளையும் மரியாதையோடு நடத்த முயற்சிக்கிறேன். எதிரிகளின் பால் என் நடவடிக்கை எப்போதுமே கடுகடுப்பாக இல்லாதபோதும் அவர்களின் குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கிறது.

இந்த நாட்டில் இந்துக்கள், முஸல்மான்கள், தாழ்த்தப்பட்டோர் ஆகியோரிடையே அரசியல் அதிகாரங்கள் பகிர்ந்து கொள்ளப்பட வேண்டும் என்னும் உறுதியான கருத்து எனக்குண்டு. இந்துக்கள், முஸல்மான்கோடு கூட தாழ்த்தப்பட்ட பிரவினரும், இந்நாட்டு அரசுத்துறையில் உரிய பங்கினை சட்டத்தின் மூலம் பெற வேண்டும். இந்த மூன்று தூண்களால் தாங்கப்பட்டால் மட்டுமே எதிர்கால அரசியலைமைப்புச் சட்டம் சரிவர வேலைசெய்யும். இதனை அடைய, நீங்கள் அனைவரும் ஒரு கொடியின் கீழ் திரள வேண்டும். ஒரே அமைப்பினை உருவாக்க வேண்டும். இதுவரையிலும் அரசியமைப்பில் நமக்குரிய பங்கை நாம் அடையவில்லையென்றால், நாம் ஒன்றுபடாததே இதற்குக் காரணமாகும். நீங்கள் அனைவரும் ஒன்றுபட்டு ஒரே அமைப்பின்கீழ் வேலைசெய்தால், உங்களுக்குரிய இடத்தை நீங்கள் நிச்சயம் அடைவீர்கள் என்பதில் சந்தேகமே இல்லை.

காங்கிரஸ் என்பது பெரிய ஸ்தாபனம். அதன் செல்வாக்கு மிகத் தொலைவிற்குப் பரவியிருக்கிறது. அது ஏன் அப்படியிருக்கிறது, நமது அமைப்பு ஏன் அவ்வாறு பரவவில்லை என்று சிலர் இயல்பாகவே கேட்கிறார்கள். காங்கிரஸின் ஆதிக்கத்தில் இரண்டு விஷயங்கள் இருக்கின்றன. இந்தியாவிலுள்ள மொத்தப்பத்திரிகைகளும் காங்கிரசின் பின்னால் நிற்கின்றன. அது நல்ல விளம்பரத்தைப் பெறுகிறது. தேசிய இந்து பத்திரிகைகளிடமிருந்து நமக்கு எவ்வித விளம்பரமும் பெறமுடியாது. இரண்டாவதாக காங்கிரஸ் தனது கட்டுப்பாட்டில் பெரும் நிதிவைத்திருக்கிறது. காங்கிரஸ் ஒரு கோடி ரூபாய் நிதி வசூலித்தது என்பது நினைவிருக்கும். இப்பெருநிதிதான் அதன் வெற்றியின் இரகசியம். ஆனால் நமது சமூகப் பணிகளுக்காக, நான் எப்போதுமே நிதி கேட்டதில்லை. நாம் அடைந்திருக்கும் முன்னேற்றத்தையெல்லாம், எந்தவித நிதியுமே இல்லாமல் அடைந்திருக்கிறோம். இருந்தாலும், நமது அமைப்பை வலுப்படுத்த நிதி திரட்டுவது மிகவும் அத்தியாவசியமானது என்பதைக் கூறியே ஆக வேண்டும். நிதியில்லாமல் நமது சமூகம் முன்னோக்கி நடைபோட முடியாது. நன்கு அமைக்கப்பட்ட பிற சமூகங்களின் வேகத்திற்கு ஈடு கொடுக்க முடியாது. பொது வாழ்க்கையில் தவறுகள் நிகழும். ஆனால் அவை நம்மைத் தளர்வடையச் செய்யக் கூடாது. தவறுகளினால்தான் நாம் நமது பலவீனங்களைக் கண்டறிந்து சரி செய்து கொள்கிறோம்.

இந்தியா முழுமைக்குமாக ஒரு அமைப்பை உருவாக்குவதற்கு இன்று நீங்கள் எடுத்திருக்கும் முடிவு மகிழ்ச்சி அளிக்கிறது. இப்பொழுது ஒவ்வொரு மாநிலத்திலும் அதன் கிளைகளை நீங்கள் உருவாக்க வேண்டும். இப்பொழுது இயங்கிவருகிற எல்லா அமைப்புகளும் இந்த ஒரே அகில இந்திய கூட்டமைப்பில் இணைக்கப்பட நீங்கள் வழிசெய்ய வேண்டும்.

அலுவலகப் பணிகள் மற்றும் களப்பணிகள் செய்வதற்கேற்ற மையமாக ஒவ்வொரு மாநிலத்தில் மட்டுமல்ல, ஒவ்வொரு நகரத்திலும் நமது அமைப்பிற்கான கட்டடங்கள் இருக்க வேண்டும் என்பது எனது பேரவாவாகும். கடந்த இரவு, (நாக்பூர்) பேலாவைச்சேர்ந்த திரு. தசரத் பாட்டிலுடன் நான் பேசிக் கொண்டிருந்தேன். நாக்பூரில் ஒரு, இடத்தை வாங்கி நமது அமைப்பிற்காக ஒரு கட்டடம் கட்டும்படி அவரிடம் கூறினேன். ரூ. இருபதாயிரம் முதல் இருபத்தைந்தாயிரத்தில் நீங்கள் அதைச் செய்யலாம். இதை நீங்கள் செய்து, நாக்பூரில் அத்தகைய கட்டடத்திற்கான அடிக்கல் நாட்டுவதற்கு என்னை அழைத்தால், உங்கள் அழைப்பை ஏற்றுக் கொள்வதில் நான் பெருமகிழ்வடைவேன். (இந்தச் சமயத்தில் நாக்பூர் பன்கேடா பஸ்தியின் சார்பாக இருநூற்று ஐம்பது ரூபாய் நிதியை திரு. சீத்தாராம் ஹட்கே அளித்தார்.) அந்த நிதியை டாக்டர். அம்பேத்கர் பெற்றுக் கொண்டு அதைக் கட்டிட நிதியில் சேர்க்குமாறு திரு. தசரத் பாட்டிலிடம் கொடுத்தார்.

பொதுச் செயலாளர் திரு. ஆர். வி. கவாடே நன்றி தெரிவித்தார். அமர்வு முடிவுற்றதாக தலைவர் அறிவித்தார்.

---

# (75)

# கற்பி, கிளர்ச்சிசெய், ஒன்றுதிரட்டு, பற்றுக்கொள், நம்பிக்கை தளராதே

*அகில இந்திய தாழ்த்தப்பட்ட பிரிவினர் மாநாடு நாக்பூரில் 1942 ஜூலை 18 முதல் 20 வரை நடைபெற்றது. அப்போது, 1942 ஜூலை 20 அன்று வரவேற்புக் குழுவின் தலைவரும் உறுப்பினர்களும் டாக்டர் பி. ஆர் அம்பேத்கருக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தனர். அந்த வரவேற்புரை மற்றும் அவ்வரவேற்பிற்கு டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் அளித்த பதில் ஆகியவற்றின் நகல் வருமாறு: ஆசிரியர்கள்*

*மேதகு வைஸ்ராய் அவர்களின் நிர்வாகக் குழு உறுப்பினர்*

## *மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்*

*எம். ஏ., பிஹெச். டி., டி. எஸ்ஸி, ஜே. பி., பாரிர் - அட் - லா*

*அவர்களுக்கு வாசித்தளித்த வரவேற்பிதழ்.*

*எங்களின் பேரன்பிற்குரிய பாபா சாஹிப் அவர்களே,*

*உங்களுக்கு 50 வயது நிறைவுறும் இத்தருணத்தில், இந்தியாவிலுள்ள லட்சக்கணக்கான அடக்கி ஒடுக்கப்பட்ட பேச்சுரிமையற்ற மக்களின் நல்வாழ்விற்காக நீங்கள் பல்லாண்டுகளாகத் தொடர்ந்து சோர்வின்றி ஆர்வத்துடன் பாடுபட்டு வருவதற்கு, நாக்பூரில் நடைபெறும் அகில இந்திய தாழ்த்தப்பட்டோரின் மூன்றாவது மாநாட்டு வரவேற்புக்குழுத் தலைவரும் உறுப்பினர்களும் எங்களின் நன்றி கலந்த பாராட்டாக இந்த வரவேற்பை மிக்க மரியாதையுடன் அளிக்கிறோம்.*

*உங்களுக்கு 50 வயது நிறைவடைவதாலும், உங்கள் பணிக்களத்தை தீவிர அரசியலிலிருந்து நிர்வாகப் பொறுப்பிற்கு நீங்கள் மாற்றிக் கொண்டதாலும், இந்த ஆண்டு நிகழ்வுப் பொருத்தமாகவே இந்தியாவிலுள்ள தாழ்த்தப்பட்ட மக்களின்*

வரலாற்றில் ஒரு மிக முக்கியமான ஆண்டாகிவிட்டது. பல லட்சக்கணக்கான ஒடுக்கப்பட்ட மக்களின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடுபவரின் தனிப்பவரின் தியாக வரலாறுதான் உங்கள் வாழ்க்கை வரலாறாகும். நீங்கள் ஒரு தனிநபர் மட்டுமல்ல, எங்களுக்கு நீங்கள் ஒரு நிறுவனம். நீங்கள் எங்களின் முழுமையான வழிகாட்டி, நண்பர், ஞானி. அதுமட்டுமல்ல தாழ்த்தப்பட்ட மக்களின் ஒரே பற்றுக்கோடு. நமது வர்க்கத்தினரின் மேம்பாடு கருதி நியாயமான நேர்மையான காரணங்களுக்காக, தொடர்ந்து இடைவிடாது நீங்கள் எடுத்த முயற்சிகள்தான் நாங்கள் இதுவரை அடைந்திருக்கிற பயன்களுக்கான உண்மையான காரணங்களாகும்.

மிகப் பரந்த எதிர்காலத்தோடு, மகிழ்ந்து வந்த வழக்கறிஞராக இருந்த நீங்கள், ஒடுக்குகிறவர்களிடமிருந்து துயருகிறவர்களை மீட்கும் போராட்டத்தில், வருமிடர் துணிந்து ஏற்று, உங்களை முழுமனுதடன் ஈடுபடுத்திக் கொண்டுள்ளீர்கள். அவ்வாறு செய்கிறபோது, உங்களது எதிர்காலக் கட்சிக்காரர்களான தீண்டத்தகுந்தவர்களை எதிரிகளாக்கிக் கொள்கிறோமே என்பதற்காகப் பணியை நிறுத்தவில்லை. ஏனெனில் ஒடுக்கப் படுகிறவர்களின் நலன்களுக்கு ஆதரவான போராட்டம் என்பது இந்துக்கள் எனப்படுகிறவர்களுக்கெதிரான போராட்டமாகும். உங்களுடைய முயற்சிகள், மிகக் குறைந்த இருபதாண்டுக்காலத்தில், நாட்டின் மிக்குயர்ந்த நிர்வாகத்தில் ஓர் இடத்தை ஒதுக்கும் அளவிற்கு, தாழ்த்தப்பட்டவர்களின் உரிமைகள் உயிர்ப்புள்ளவை என அங்கீகரிக்கப்படும் என்று யாரும் அன்று உணரவில்லை.

நாக்பூர் ரயில் நிலையத்திலிருந்து மாநாட்டுப்பந்தல்வரை எடுக்கப்பட்ட ஊர்வலமும் மாநாட்டு அமர்வுகளில் பெருமள விலான பிரதிநிதிகள் பங்கேற்றிருப்பதும், நமது குழுக்களில் உள்ளவர்கள் உங்களை எவ்வளவு உயர்வாக மதிக்கிறார் களென்பதற்குச் சான்றாகும். இந்த இயல்பான வெளிப்பாடானது, நீங்கள் ஆற்றிய பணிக்காக உங்கள்பால் நமது வர்க்கத்தினர் காட்டும் முனைப்பார்வ வெளிப்பாடாகும். நீங்கள் எங்களுக்குப் படைத்தவரை விட மேலானவர். படைத்தவர் எங்களை ஆழமான படுகுழியில் எறிந்துவிட்டார். அவரைப்போலல்லாமல் அதிலிருந்து எங்களைத் தூக்கிவிட நீங்கள் அனைத்தும் செய்து கொண்டிருக்கிறீர்கள்.

நமது வர்க்கத்தினருக்குச் சேவை செய்வதற்கு பணப்பையை அகலத்திறந்து வைத்துக் கொண்டு எங்கள் பிரச்சினைக்காக முழுவாழ்க்கையையும் சக்தியையும் தியாகம் செய்து கொண்டிருக்கும் உங்களைப் போன்ற பெருந்தகையாளரை, உங்கள் மூளைக்கும் இதயத்திற்கும் ஈடானவரை வரலாற்றில் நாங்கள் காணமுடியாது. எங்கள் இதய வெளிப்பாடுகளைச் சொல்லவும் எங்கள் உணர்வுகளைக் கொட்டவும் வார்த்தைகள் கிடைக்கவில்லை,. வாழும் கடவுள் இந்த வையத்தில் ஒன்று உண்டென்றால் அது உங்கள் உருவத்தில் தானிருக்கிறது என்று கூறினால் போதுமானது.

மீண்டும் எங்களது பணிவான, உளம் நிறைந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறோம். உங்களின் வாழ்வுப்பணி இப்பூவுலகில் நிறைவுற நீண்ட ஆயுள் பெற வாழ்த்துகிறோம்.

தங்களின் கீழ்ப்படிதலுள்ள

உங்களிடம் நன்றியும் முழு ஈடுபாடும் கொண்ட தொண்டர்கள்,

அகில இந்திய தாழ்த்தப்பட்டோர் மாநாட்டு வரவேற்புக் குழுவின் தலைவர் மற்றும் உறுப்பினர்கள்

நாக்பூர் 20 ஜூலை 1942.

## வரவேற்பிற்குப் பதிலளித்து டாக்டர் அம்பேத்கர் கூறினார்:-

தாய்மார்களே, பெரியோர்களே,

எனக்களிக்கப்பட்ட வரவேற்பிற்கு நான் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இத்தகைய வரவேற்பு தேவைதானா என நான் வியக்கிறேன். நலம் பாராட்டுதல், சிறப்புரையாற்றுதல் ஆகியவற்றிற்குப் பின்னால் தனிச்சிறப்பான வரலாறே இருக்கிறது. நலம் பாராட்டுதலுக்குக் கண்டிப்பாக இருக்கிறது. ஆங்கில சமுதாயத்தில் நாம் பார்ப்பது போன்ற, மன்னரின் ஆரோக்கியத்திற்காக குடிக்கும் சடங்குகள்; உள்நாட்டுக்கலவரம் மற்றும் மறுவருகை ஆட்சிக் காலத்திற்குப்

பிறகு பழக்கத்திற்கு வந்தது. ஆரம்பத்தில் இது கட்டாயப் படுத்தப்பட்டது. மன்னருக்கு எதிராகக் கிளர்ச்சி செய்த ஆங்கிலப் படையினர் மீது திணிக்கப்பட்டது. அரசரின் ஆரோக்கியத்திற்காகக் குடிக்க வற்புறுத்தப்பட்டு, புதிய அரசர் மேல் ராஜபக்தி கொள்ளுமாறு நிர்ப்பந்திக்கப்பட்டனர். அரசினர் ஆரோக்கியத் திற்காகக் குடிப்பது என்பது இப்போது பரவலாகிவிட்டது. அதன் தோற்றத்தைப் பற்றி யாருமே விசாரித்தறிய விரும்புவதில்லை. சந்தேகத்திற்குரியவர்களின் ராஜபக்தியை வெளிப்படையாக அறிவிக்கச் செய்ய வற்புறுத்துவதே இதன் மூலகாரணமாகும். உங்களது பற்றுறுதி சந்தேகத்திற்கே இடமில்லாதது என்பது எனக்குத் தெரியும். அதை நீங்கள் இந்த வரவேற்பின் மூலம் கனிவுடன் வெளிப்படுத்தியிருப்பது தேவையில்லாதது என்று நான் நினைக்கலாம். அதனை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று நீங்கள் வற்புறுத்துவதனால், நீங்கள் என் மீது வைத்திருக்கும் அன்பு, பரிவு ஆகிய உணர்வுகளின் அடையாளமாக நான் அதனை வரவேற்கிறேன். தீண்டத்தகாதோருக்கு நான் ஆற்றியபணிக்கு, உங்கள் பாராட்டின் அடையாளம் அது. இந்தியாவிலுள்ள தீண்டத்தகாதோரின் பெயரால், இந்திய அரசியலில் நான் எடுத்துள்ள நிலைபாட்டை நீங்கள் ஆதரிக்கிறீர்கள் என்பதை இந்த வரவேற்பு நிரூபிக்கிறது. இந்த நாட்டின் அரசாங்கத்தை நடத்துவதில் இந்துக்களோடும் முஸ்லிம்களோடும் மரியாதைக்குரிய கூட்டாளிகளாக - சரி சமமான மரியாதைக்குரிய நிபந்தனைகளோடு கூடிய கூட்டாளிகளாக அங்கீகரிக்கப்பட வேண்டும் என்பது நமது குறிக்கோளாகும். நமக்கு முன் நாம் நிர்ணயித்துள்ள இந்தக் குறிக்கோளைக் கண்டிப்பாக அடைய முயற்சிப்பேன் என்று உறுதி கூறுகிறேன்.

இந்தக் குறிக்கோளை அடைய நான் போராடுவேன் என்பதில் என் மீது உங்களுக்கு நம்பிக்கை உண்டு. நான் உங்களிடமிருந்து ஒரு உறுதியை அதிகமாக எதிர்பார்க்கிறேன். உங்கள் அன்பும் பரிவும் எனக்கு உண்டு என்று உறுதியளித்திருக்கிறீர்கள். அது தேவையற்றது. நான் வேறு வகையான உறுதியை வேண்டுகிறேன். ஒற்றுமை, நமது உரிமைகளுக்காக நிற்கும் உறுதி, நமது உரிமைகளுக்காகப் போராடுதல், நமது உரிமைகளை வென்றெடுக்கும் வரை திரும்பிப் பாராதிருத்தல் ஆகிய உறுதிகள். உங்கள் பங்கினைச் செய்ய நீங்கள் உறுதிமொழி கொடுங்கள். என்பங்கினைச் செய்ய நான் உறுதி கொடுக்கிறேன். நீதி நம் பக்கம் இருப்பதால், நமது போரில்

தோல்வியடைய வாய்ப்பில்லை. போராட்டமானது முற்றிலுமாக அகநிலை சார்ந்தது. அதில் பருபொருள் சார்போ, இழிவோ எதுவும் இல்லை. ஏனெனில் நமது போராட்டம் செல்வத்திற்காகவோ, அதிகாரத்திற்கோ அல்ல. இது விடுதலைக்கான போராட்டம். இந்து சமூக அமைப்பினால் ஒடுக்கப்பட்டு சிதைக்கப்பட்ட மனிதப் பண்பியல்புகளை மீட்டெடுப்பதற்கான போராட்டம். இந்த அரசியல் போராட்டத்தில் இந்துக்கள் வெற்றிபெற்றும் நாம் தோல்வி யடைந்தால், ஒடுக்கப்படுவதும் சிதைக்கப்படுவதும் தொடரும். கற்பி, கிளர்ச்சி செய், ஒன்றுதிரட்டு, உன்னிலேயே பற்றுக் கொள், நம்பிக்கை தளராதே என்பதுதான் உங்களுக்கு எனது கடைசி அறிவுரை வார்த்தைகள். நீங்கள் என்னுடனேயே இருப்பீர்கள் என்று எனக்குத்தெரியும். நான் எப்பொழுதும் உங்களுடனேயே இருப்பேன்"

---

# (76)

# பெண்களின் முன்னேற்றத்தைக் கொண்டுதான் சமுதாயத்தின் முன்னேற்றம் மதிப்பிடப்படுகிறது

## *அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பெண்கள் மாநாடு. இரண்டாவது அமர்வு. 20 ஜூலை 1942 அன்று நாக்பூரில் நடைபெற்றது நடவடிக்கைக் குறிப்பு*

*அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பெண்கள் மாநாட்டு இரண்டாவது அமர்வு 1942 ஜூலை 20 அன்று காலை 10 மணிக்கு நாக்பூர் மோகன் பார்க்கில் பிரத்தியேகமாக அமைக்கப்பட்ட பந்தலில், 75000 பார்வையாளர்கள் முன்னிலையில் தொடங்கியது. பெண் பிரதிநிதிகளும் பார்வையாளர்களும் 25,000 பேர் இருந்தனர். டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் உட்பட புகழ்மிக்க தலைவர்கள் மேடையில் அமர்ந்திருந்தனர்.*

*வரவேற்புப் பாடல்களுக்குப் பின்னர், வரவேற்புக்குழுவின் தலைவர் திருமதி. கிர்த்திபாய் பாட்டில் தனது உரையை நிகழ்த்தினர்.*

*அதற்குப்பின் பொதுச் செயலாளர் திருமதி. இந்திராபாய் பாட்டில் தனது அறிக்கையை வாசித்தார்.*

*அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பெண்கள் மாநாட்டு இரண்டாவது அமர்வுக்கு திருமதி. சுலோசனாபாய் டோங்கரேயின் பெயரை திருமதி. ஜெய்பாய் சௌத்ரி பிரரேபித்தார்.*

*திருமதி. ராதாபாய் காம்பிளே அதனை வழிமொழிந்தார். அதன்படி திருமதி. சுலோசனாபாய் டோங்கரே தலைமை ஏற்று தனது உரையை நிகழ்த்தினர்.*

*அவர் கூறியதாவது:-*

"பிரதிநிதி சகோதரிகளே, உங்கள் விருப்பப்படி மாண்புமிகு டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் அவர்கள் இந்த மாநாட்டில் இன்று உங்களிடையே உரை நிகழ்த்த ஒப்புக் கொண்டுள்ளார். மற்றொரு மாநாடான சமதா சைனிக் தள் இன்று இதே பந்தலில் நடைபெற விருக்கிறது. ஆகவே, ஆய்வுக்குழு தயாரித்திருக்கும் தீர்மானங்கள் மாநாட்டின் இந்தப் பொது அமர்விலேயே, விரைவில் நடவடிக்கைகளை முடிப்பதற்கேதுவாக, நீண்ட பேச்சுக்கள் ஏதுமின்றி முன்மொழியப்படலாம் என்ற கருத்தை நான் முன்வைக்கிறேன்.

தலைமையிலிருந்து முதல் தீர்மானத்தை நான் முன் மொழிகிறேன். அது வருமாறு:-

## தீர்மானம் 1: அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் மாநாட்டிற்கு ஆதரவு

1942 ஜூலை 19 அன்று நாக்பூரில் நடைபெற்ற "அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் மூன்றாவது மாநாட்டில்" நிறைவேற்றப்பட்ட எல்லாத்தீர்மானங்களையும் இந்த மாநாடு மனமார ஆதரிக்கிறது.

இந்தத் தீர்மானத்தை இப்பொழுது நான் வாக்கெடுப்பிற்கு விடுகிறேன். எதிர்ப்பு ஏதுமில்லாததால், இந்தத் தீர்மானம் ஒரு மனதாக நிறைவேறியதாக அறிவிக்கிறேன்.

இரண்டாவது மூன்றாவது தீர்மானங்களை முன்மொழிவதற்கு செல்வி. பிரபாவதிபாய் ராம் டெகேவை தலைவர் அழைக்கிறார்.

"தலைவர் அவர்களே, பிரதநிதிகளே, நண்பர்களே,

என்பெயரில் இருக்கும் தீர்மானங்களை நான் படிக்கிறேன்" என்று செல்வி பிரபாவதிபாய் ராம் டெகே கூறினார்.

## தீர்மானம் 2: மணமுறிவுச் சட்டம்:

கணவனை ரத்துச் செய்யும் பெண்களுக்கான உரிமை சட்டப்படி அங்கீகரிக்கப்பட வேண்டும் என்று இந்த மாநாடு

தீர்மானிக்கிறது. அதற்கு உதவும் வகையில், அரசும் சமுதாயத் தலைவர்களும் சட்டத்தில் தேவையான மாறுதல்களைச் செய்ய நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று இந்த மாநாடு கேட்டுக் கொள்கிறது.

## தீர்மானம் 3: பலதாரமணம்:

சமுதாயத்தில் நடைமுறையிலுள்ள பலதார மணம் பெண்களுக்கு அநீதி இழைப்பதால் அதனை இம்மாநாடு வெறுக்கிறது. ஆகவே, இந்தப் பழக்கத்தைக் கட்டுப்படுத்த, சட்டத்தில் தேவையான திருத்தங்களையோ மாற்றங்களையோ செய்யுமாறு அரசைக் கேட்டுக் கொள்கிறது.

இத்தீர்மானங்கள் நீண்டநாள் கோரிக்கைகளைக் குறிக்கின்றன. நாம் இவற்றை ஒவ்வொரு மேடையிலும் திரும்பத்திரும்பக் கூறிக் கொண்டிருக்கிறோம். இது குறித்து நான் பேசத் தேவையில்லை. அவற்றை உங்களின் ஒப்புதலுக்கு நான் பரிந்துரைக்கிறேன்.

இத்தீர்மானங்களை வழிமொழியுமாறு செல்வி. பீமாபாய் பாட்கேயை தலைவர் திருமதி. டோங்கரே அழைத்தார். அதன்படி அவர் தீர்மானங்களை வழிமொழிந்தார். எதிர்ப்பு இல்லாததால், தீர்மானங்கள் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டதாக தலைவர் அறிவித்தார்.

நான்காவது தீர்மானத்தை முன்மொழியுமாறு தலைவர் அழைத்தார். அது திருமதி. ராதாபாய் காம்பிளேயால் முன் மொழியப்பட்டது. திருமதி. ராதாபாய் காம்பிளே கூறினார்: "தலைவர் அவர்களே பிரதிநிதிசகோதரிகளே, உங்களின் ஒருமித்த ஒப்புதலுக்காக நான் இந்தத் தீர்மானத்தை முன்மொழிகிறேன்.

## தீர்மானம் 4: பொருளாதார நிலை

பொருளாதார நிலை மேம்படுவதற்காக, மில்கள், தொழிற் சாலைகள், நகராட்சிகள், ரயில்வேக்களில் பணிபுரியும் பெண்களின் உரிமைகள் கீழ்க்கண்டவாறு அங்கீகரிக்கப்பட வேண்டுமென்று இந்த மாநாடு தீர்மானிக்கிறது:

(அ) 21 நாள் சிறு விடுப்பிற்கும், பிறதொழிலாளர்களைப் போல ஆண்டிற்குக் குறைந்த பட்சம் ஒரு மாதம் விடுப்பிற்கும் அவர்கள் உரியவர்கள் ஆகிறார்கள்.

(ஆ) இந்தப் பணியாளர்களுக்கு வேலை நேரத்தில் மரணம், விபத்து அல்லது காயம் ஏற்பட்டால் அவர்களுக்கோ அல்லது அவர்களின் குழந்தைகளுக்கோ போதுமான ஈட்டுத்தொகை கொடுக்க வேண்டும்.

(இ) இருபது ஆண்டு பணிமுடித்த பணியாளர்களுக்குக் குறைந்தது பதினைந்து ரூபாய் ஓய்வூதியமாகக் கொடுக்கப்படவேண்டும். அரசையும், மேதகு வைஸ்ராய் அவர்களின் நிர்வாகக் குழுவிலுள்ள தொழிலாளர் துறை உறுப்பினரையும் இக்குறைகளைப் போக்க தேவையான சட்ட வழிவகைகள் செய்ய இந்த மாநாடு கேட்டுக் கொள்கிறது."

திருமதி. ஜெய்பாய் சௌத்ரி இத்தீர்மானத்தை வழிமொழிந்தார்.

திருமதி. ஜெய்பாய் கூறியதாவது:

தலைவர் அவர்களே, பிரதிநிதி சகோதரிகளே,

இத்தீர்மானங்களை நான் உளப்பூர்வமாக வழிமொழிகிறேன். நம்மில் ஏறக்குறைய அனைவருமே தொழிலாளர்கள்தான். இந்தத் தீர்மானத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதைப் போல் வழிவகைகள் செய்ய சட்டத்தில் திருத்தங்கள் செய்யப்பட வேண்டியது மிகவும் அவசியமாகும். இந்த ஏற்பாடுகள் இல்லாததால் அனேக தொழிலாளர்களின் குடும்பங்கள் மிகுந்த இன்னலுக்குள்ளா கியிருக்கின்றன. உங்களின் ஒருமனதான ஒப்புதலுக்காக இத் தீர்மானத்தைப் பரிந்துரைக்கிறேன்.

தீர்மானம் ஒருமனதாக நிறைவேறியதாகத் தலைவர் அறிவித்தார்.

ஐந்தாவது தீர்மானத்தை முன்மொழிய செல்வி மஞ்சுளா கன்ஃபாடேவைத் தலைவர் அழைத்தார்.

செல்வி. மஞ்சுளா கன்ஃபாடே, ஒருமனதான ஒப்புதலுக்காத ஐந்தாவது தீர்மானத்தை முன்மொழிந்தார்.

## தீர்மானம் 5: கல்வி

(அ) தாழ்த்தப்பட்ட வகுப்புப் பெண்களிடையே கற்ற பெண்களின் சதவிகிதம் மிகவும் குறைவாக இருப்பதாக இந்த மாநாடு கருதுகிறது. எனவே அவர்களிடையே கல்வியைப் பரப்ப, ஒவ்வொரு மாநிலத்திலும் தாழ்த்தப்பட்ட வகுப்பு மாணவியர் குறைந்தது ஐம்பது பேருக்கான தங்கும் விடுதியை மாநில அரசுகளின் செலவிலேயே நடத்திட வேண்டுமென்று இம்மாநாடு அரசைக் கேட்டுக் கொள்கிறது.

(ஆ) தாழ்த்தப்பட்ட வகுப்பினரிடையேயுள்ள கடும் ஏழ்மையின் காரணமாக அம்மாணவர்கள் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் மேல்நிலைக்கல்வி மற்றும் உயர்கல்வி பெறமுடியாத நிலை ஏற்படுகிறது. மேல்நிலைக் கல்வி மற்றும் உயர்கல்வி கற்கவிரும்பும் தாழ்த்தப்பட்ட பிரிவிலுள்ள அத்தகைய மாணவர்களுக்கு ஒவ்வொரு மாநிலமும் இலவசக் கல்வி மற்றும் கல்வி உதவித்தொகை கொடுக்க வேண்டுமென்று அரசினை இந்த மாநாடு வேண்டிக் கேட்டுக்கொள்கிறது.

(இ) தாழ்த்தப்பட்ட வகுப்புப் பெண்களுக்கான பொதுக் கல்வியறிவைப் பொறுத்தவரையிலும், அவர்களிடையே கட்டாய ஆரம்பக்கல்வியை சட்டத்தின் மூலம் முறைப்படுத்த இந்நாட்டி லுள்ள அனைத்து மாநில அரசுகளும் உடனடி நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று இந்த மாநாடு கேட்டுக் கொள்கிறது.

இந்தத் தீர்மானத்திற்கு விளக்கப் பேச்சுத் தேவையில்லை. இதனை உங்களின் ஒருமித்த ஒப்புதலுக்காகப் பரிந்துரைக்கிறேன்.

செல்வி. லாதிகா கஜ்பியே இந்தத் தீர்மானத்தை வழிமொழிந்தார்.

1. செல்வி. சுலோசனா நாயக் (அம்ராட்டி)
2. செல்வி வீரேந்திர பாய் தீர்த்தங்கர் (நாக்பூர்)

3. சந்திரபாகாபாட்டில் (கோண்டியா)

4. கௌசல்யா நந்தேஷ்வர் (நாக்பூர்)

ஆகியோர் இந்தத் தீர்மானத்தை ஆதரித்தனர்.,

இந்தத் தீர்மானம் ஒருமனதாக நிறைவேறியதாக தலைவர் அறிவித்தார்.

ஆறாவது தீர்மானத்தை திருமதி. ராதாபாய் காம்பிளே முன்மொழிந்தார்.

## தீர்மானம் 6: ஆலைகளில் பெண் மேற்பார்வையாளர்களை நியமிக்கச் சட்டம்

பல ஆலைகளில், பெண் தொழிலாளர்களின் வேலையை மேற்பார்வையிட ஆண் மேற்பார்வையாளர்கள் நியமிக்கப்டுவது காணப்படுகிறது. இது பல இடங்களில் மிகவும் விரும்பத்தகாத விளைவுகளை ஏற்படுத்துகிறது. ஆகவே, அந்த இடங்களில் பெண் மேற்பார்வையாளர்களை நியமிக்கும் வகையில் சட்டத்தில் வழிவகைகள் மேற்கொள்ளுமாறு இம்மாநாடு மத்திய அரசைக் கேட்டுக் கொள்கிறது. இந்தத் தீர்மானத்தை திருமதி. இந்திராபாய் பாட்டில் வழிமொழிந்தார். தீர்மானம் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டது தலைமைப் பீடத்திலிருந்து ஏழாவது எட்டாவது தீர்மானங்களை தலைவர் திருமதி. டோங்கரே முன்மொழிந்தார்.

## தீர்மானம் 7: சட்டமன்றங்களில் தாழ்த்தப்பட்ட பிரிவுப் பெண்களுக்குப் பிரதிநிதித்துவம்

மத்திய மற்றும் மாநில சட்டமன்றங்களுக்கு பெண் தொகுதிகளிலிருந்து பெண் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுவதைப் போல, தாழ்த்தப்பட்ட வகுப்புப் பெண்களின் பொதுவான மேம்பாடு மற்றும் முன்னேற்றம் கருதி அனைத்துச் சட்டமன்றங்களிலும் மற்றும் பிரதிநிதித்துவ அமைப்புக்களிலும் பெண்களுக்கு இட ஒதுக்கீடு செய்ய வேண்டும் என்று இந்த மாநாடு விரும்புகிறது.

இந்தத் தீர்மானத்தை நான் இப்போது வாக்கெடுப்பிற்கு விடுகிறேன். இதனை ஆதரிப்பவர்கள் கைகளை உயர்த்தித் தங்கள் ஆதரவைத் தெரிவிக்கவும். (அனேகமாக அனைவருமே கைகளை உயர்த்தினர்). எதிர்ப்பவர்கள் இப்போது கைகளை உயர்த்தி எதிர்ப்பினைத் தெரிவிக்கவும். எதிர்ப்பே இல்லை என்பதைப் பார்க்கிறேன். இந்தத் தீர்மானம் ஒருமனதாக நிறைவேறியதாக அறிவிக்கிறேன்.

## தீர்மானம் 8: அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினர் பெண்கள் கூட்டமைப்பு

அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பெண்கள் கூட்டமைப்பு உருவாக்கப்பட வேண்டுமென்றும், அதன் பணிகளைச் செய்ய ஒரு நிதி திரட்டப்பட வேண்டுமென்றும் இந்த மாநாடு தீர்மானிக்கிறது.

இந்தத் தீர்மானத்தை நான் வாக்கெடுப்பிற்கு விடுகிறேன். இதனை ஆதரிப்பவர்கள் கைகளை உயர்த்தி தங்கள் ஆதரவை தெரிவிக்கவும். (அனேகமாக அனைவருமே கைகளை உயர்த்தினர்). எதிர்ப்பவர்கள் இப்போது கைகளை உயர்த்தி எதிர்ப்பினை தெரிவிக்கவும். எதிர்ப்பே இல்லை என்பதைப் பார்க்கிறேன். இந்தத் தீர்மானம் ஒருமனதாக நிறைவேறியதாக அறிவிக்கிறேன்.

மாண்புக்கு டாக்டர் பி.ஆர். அம்பேத்கரை மாநாட்டில் உரை நிகழ்த்துமாறு தலைவர் திருமதி. டோங்கரே கேட்டுக் கொண்டார்.

## டாக்டர் அம்பேத்கர் உரை:

## மகளிர் மாநாட்டில் உரை நிகழ்த்திய டாக்டர் அம்பேத்கர் கூறியதாவது:-

உங்களிடையே உரையாற்றும் இந்த வாய்ப்பினைப் பெற்றமைக்காக நான் மிகவும் மகிழ்கிறேன். தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் முன்னேற்றத்தில் நாட்டங்கொண்ட எவருக்கும் இங்கு கூடியிருக்கும் பெண்களின் கூட்டத்தைக் காண்பதைவிட வேறெந்த நிகழ்ச்சியும் இதைவிடப் பெருமகிழ்ச்சியை அளித்துவிட முடியாது.

20, 000 முதல் 25, 000 வரையிலான எண்ணிக்கையில் இப்போது நீங்கள் கூட முடிகிறது. பத்தாண்டுகளுக்கு முன்னால் இதனை எண்ணிப் பார்க்கவே முடியாது. பெண்களின் அமைப்பில் மிகுந்த நம்பிக்கையுடையவன் நான். அவர்களை மனம் ஒப்பச் செய்துவிட்டால், சமூகத்தின் நிலையை உயர்த்திட அவர்களால் என்ன செய்யமுடியும் என்பது எனக்குத் தெரியும். சமூக அவலங்களை ஒழிப்பதில் அவர்கள் மிகப்பெரும் சேவை செய்திருக்கிறார்கள். எனது சொந்த அனுபவத்திலிருந்தே அதை நான் நிரூபிப்பேன். தாழ்த்தப்பட்ட வகுப்பினரிடையே நான் பணியாற்ற ஆரம்பித்த காலத்திலிருந்தே ஆண்களோடு பெண்களையும் உடன்இட்டுச் செல்லும் பழக்கத்தைக் கட்டியமாக மேற்கொண்டேன். அதனால் தான் நமது மாநாடுகளெல்லாம் ஆணும் பெண்ணும் கலந்த மாநாடுகளாக இருப்பதை நீங்கள் காணமுடிகிறது. பெண்கள் அடைந்திருக்கும் முன்னேற்ற அளவை வைத்துத்தான் ஒரு சமுதாயத்தின் முன்னேற்றத்தை நான் அளவிடுகிறேன். இந்தக் கூட்டத்தைப் பார்க்கும் பொழுது, நாம் முன்னேறியிருக்கிறோம் என்பதை நான் நம்புகிறேன். மகிழ்ச்சி அடைகிறேன். நீங்கள் உங்கள் மனதில் நிறுத்த வேண்டும் என்று நான் நினைக்கிற சில செய்திகளை உங்களுக்குச் சொல்கிறேன்.

சுத்தமாக இருக்கக் கற்றுக் கொள்ளுங்கள். அனைத்து தீயொழுக்கங்களிலிருந்தும் விலகி இருங்கள். உங்கள் குழந்தைகளுக்கு கல்வி கொடுங்கள். உயர்ந்த குறிக் கோளை அவர்களின் உள்ளங்களில் விதையுங்கள். அவர்கள் உயர்ந்த நிலைக்குச் செல்ல விதிக்கப் பட்டவர்கள் என்று அவர்களின் உள்ளங்களில் பதியவையுங்கள். அவர்களிடமிருந்து எல்லாத் தாழ்வு மனப்பான்மைகளையும் விலக்குங்கள். திருமணம் செய்ய அவசரப்படாதீர்கள். திருமணம் என்பது ஒரு பொறுப்பு. திருமணத்தின் விளைவாக ஏற்படும் கடன்பொறுப்புக்களை அவர்கள் பணரீதியாகச் சமாளிக்கும் தகுதி ஏற்படும் வரை உங்கள் குழந்தைகளின் மீது அதனைத் திணிக்காதீர்கள். திருமணம் செய்து கொள்கிறவர்கள், அதிகக் குழந்தைகளைப் பெறுவது குற்றம் என்பதை மனதில் கொள்ள வேண்டும். பெற்றோர்கள் இருந்த நிலையைவிட ஒரு நல்ல ஆரம்பத்தை ஒவ்வொரு குழந்தைக்கும் கொடுக்க வேண்டியது பெற்றோரின் கடமையாகும். எல்லாவற்றிற்கும் கொடுக்க வேண்டியது பெற்றோரின் கடமையாகும். எல்லாவற்றிற்கும் மேலாக, மணம்

செய்துகொள்ளும் ஒவ்வொரு பெண்ணும் கணவனோடு நிமிர்ந்து நிற்கவேண்டும். கணவனுக்கு நண்பனாக, சமமாக உரிமைபெற வேண்டும். அவனுடைய அடிமையாக இருக்க மறுக்க வேண்டும். இந்த ஆலோசனைகளை நீங்கள் பின்பற்றினால், உங்களுக்கும் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் மதிப்பும் மரியாதையும் சேர்த்தவர்களாவீர்கள்.

வரவேற்புக்குழுவின் தலைவர் திருமதி. கீர்த்திபாய்பாட்டீல் நன்றி கூறினார். அதன் பின் அந்த அமர்வு முடிவுற்றதாகத் தலைவர் அறிவித்தார்.

---

## (77)

# அஹிம்சையையும் பணிதலையும் நான் வேறுபடுத்திப் பார்க்கிறேன் சமதா சைனிக் தள மாநாடு

## (தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் மாநாட்டுத் தொண்டர்படை)

## முதல் அமர்வு - 1942 ஜூலை 20 அன்று நாக்பூரில் நடைபெற்றது

*நாக்பூரில் உள்ள மோகன்பார்க்கில் பிரத்தியேகமாக அமைக்கப்பட்ட பந்தலில் 70,000 பார்வையாளர்கள் முன்னிலையில் 1942 ஜூலை 20 அன்று பகல் 12. 30 மணிக்கு சமதா சைனிக் தள மாநாடு தனது அமர்வைத் தொடங்கியது. மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் உள்ளிட்ட முன்னணித் தலைவர்கள் மேடையில் அமர்ந்திருந்தனர்.*

*தலைவராகத் தேர்வு செய்யப்பட்டிருந்தவர், வரவேற்புக்குழுத் தலைவரால் அவரது இருக்கைக்கு அழைத்துவரப் பட்டார். தேர்வுபெற்ற தலைவரும் பிற பிரதிநிதிகளும் தங்கள் இருக்கைகளில் அமர்ந்ததும், வரவேற்புப் பாடல்களுடன் நிகழ்ச்சிகள் ஆரம்பித்தன.*

*வரவேற்புக்குழுவின் தலைவர் திரு. ஏ. எல். கொசாரே, பி. ஏ., தனது உரையை நிகழ்த்தினர்.*

*பிறகு பொதுச் செயலாளர் திரு. ஆர்.ஆர். பிள்ளை தனது அறிக்கையை வாசித்தார்.*

*தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் பஞ்சாபைச் சேர்ந்த திரு. கோபால் சிங் எம். எல். ஏ. வைத்தனது இருக்கையில் அமரக் கோரும் தீர்மானத்தை முன்மொழியுமாறு பம்பாய் சமதா சைனிக்*

தளத்தின் பொதுச் செயலாளர் எம். எம். சசலேகரை, திரு. ஏ. எல் கொசாரே அழைத்தார்.

அவ்வாறே திரு. எம்.எம். சசலேகர் தீர்மானத்தை முன் மொழிந்தார்.

சமதா சைனிக் தள மாநாட்டுப் பொதுச் செயலாளர் திரு. ஆர். ஆர். பாட்டில் அத்தீர்மானத்தை வழிமொழிந்தார்.

எதிர்ப்பு ஏதுமில்லாததால், தீர்மானம் ஒருமனதாக நிறைவேறியதாக வரவேற்புக்குழுவின் தலைவர் திரு. ஏ.எல் கொசாரே அறிவித்தார். திரு. கோபால் சிங்கை தமது இருக்கையில் அமரும் படி இப்பொழுது நான் கேட்டுக்கொள்கிறேன்.

சந்தார் கோபால் சிங் தலைவர் இருக்கையில் அமர்ந்தார். தலைமையுரையாற்றினார்.

முதல் தீர்மானத்தை முன்மொழியும்படி திரு. யு. எல் கரண்டி கரை (பம்பாய்) தலைவர் திரு. கோபால் சிங் அழைத்தார்.

திரு. யு. எல். கரண்டிகர் கூறியதாவது:

தலைவர் அவர்களே, என்னுடைய பெயரில் இருக்கும் தீர்மான வாசகங்களாவது:-

## தீர்மானம் 1: அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் மாநாட்டிற்கு ஆதரவு

1 (அ) அகில இந்திய தாழ்த்தப்ப வகுப்பினரின் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களை அகில இந்திய சமதாசைனிக் தள் மாநாடு ஆதரிக்கிறது. அத்தீர்மானங்களில் கூறப்பட்டுள்ள பிரிவுகளை, உடலாலும் உள்ளத்தாலும் பணத்தாலும் ஆகிய அனைத்து வழிகளிலும் நிறைவேற்றுவதற்குத் தனது பின்வாங்காத உறுதியை அறிவிக்கிறது.

## தளத்தின் கிளைகள்

சமதா சைனிக் தளத்தின் கிளைகளை ஒவ்வொரு மாநிலத்திலும், மாநிலங்களிலுள்ள முக்கிய நகரங்களிலும் அமைக்குமாறு சமதா சைனிக் தளத்தின் ஆர்வலர்களையும் ஆதரவாளர்களையும் இந்த மாநாடு வேண்டிக் கேட்டுக் கொள்கிறது.

## அமைப்புவிதி

அகில இந்திய சமதா சைனிக் தளத்திற்கு அமைப்புவிதிகள் வகுக்கப்பட வேண்டுமென்றும் அதற்காக, கீழ்க்கண்ட பெருமக்களைக் கொண்ட ஒரு குழ அமைக்கப்பட வேண்டுமென்றும் இந்த மாநாடு தீர்மானிக்கிறது. இக்குழுவால் வகுக்கப்பட்ட அமைப்புவிதி, சி. பி. மற்றும் பிரார், பம்பாய் மாநிலங்களின் சமதா சைனிக் தள அலுவலகப் பொறுப்பாளர்கள் அடங்கிய கூட்டு துணைக் குழுவிடம் சமர்ப்பிக்கப்பட வேண்டும். அவர்களின் அங்கீகாரத்திற்குப்பிறகு அது நடைமுறைக்கு வரும்.

(1) திரு. எம்.எம். சசலேகர், பம்பாய்

(2) திரு. எஸ்.பி. ஜாதவ்

(3) திரு. ஆர்.ஆர். பாட்டில், நாக்பூர்

(4) திரு. ஏ.எல். கொசாரே, பி. ஏ., நாக்பூர்

(5) திரு. பி.எல்.கே. தலிப், பிஹெச். டி., லக்னோ

இத்தீர்மானம் மிகத் தெளிவாக இருப்பதால் பேச்சுத் தேவையில்லை. உங்களின் ஒருமித்த ஒப்புதலுக்கா நான் இதைப் பரிந்துரைக்கிறேன்.

திரு. எம்.எம். சசலேகர் அதனை வழிமொழிந்தார்.

(1) திரு. பி.ஜே. ரோஹம், எம். எல். ஏ., (பம்பாய்)

(2) திரு. பார்மர் (சிந்து)

(3) திரு. பி.எல்.கே தலிப், எம். ஏ., எல். எல்., பி பிஹெச். டி (லக்னோ)

(4) திரு. டி. ஜி. ஜாதவ், பி. ஏ., எல்எல். பி., எம்.எல். ஏ (ஜல்கோவன்)

(5) திரு. கெய்க்குவாடு, எம். எல். ஏ (நாசிக்)

ஆகியோரால் இந்தத் தீர்மானம் ஆதரிக்கப்பட்டது.

எதிர்ப்பு ஏதுமில்லாததால் இந்தத் தீர்மானம் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டதாக தலைவர் திரு. கோபால் சிங் அறிவித்தார்.*

இரண்டாவது தீர்மானத்தை முன்மொழியுமாறு திரு. எஸ். பி. ஜாதவை தலைவர் அழைத்தார்.

அதற்கேற்ப, ஒருமனதான ஒப்புதலுக்காக தீர்மானத்தை திரு. எஸ். பி. ஜாதவ் முன்மொழிந்தார்.

## தீர்மானம் 2: பாசிச ஆக்கிரமிப்பிற்கெதிராக ஐக்கிய முன்னணி

2. பாசிச ஆக்கிரமிப்பினால் இந்தியா நேரடியாக அச்சுறுத்தப் படுகிறது. ஜெர்மன்மற்றும் ஜப்பானிய இராணுங் களினால் நமது தாய்நாடு படையெடுக்கப்படுவது தவிர்க்கமுடியாதது. இத்தகைய நெருக்கடியான காலகட்டத்தில், உடனடியாக பாசிச ஆக்கிரமிப்பு எதிர்ப்பை ஊருவாக்குவதுதான் நாடு எதிர்நோக்கியிருக்கும் முக்கியப் பணியாகும். மக்களைக் கொண்டு அத்தகைய ஐக்கியமுன்னணியை உடனடியாக உருவாக்க வேண்டுமென்று இந்த மாநாடு இந்திய மக்களுக்கு அறைகூவல் விடுக்கிறது.

திரு. எஸ்.வி. கெய்க்வாடு இத்தீர்மானத்தை வழிமொழிந்தார். இந்தத் தீர்மானம் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டதாக தலைவர் திரு. கோபால் சிங் அறிவித்தார்.

## தீர்மானம் 3: அடுத்த கூட்டத் தொடர்

தலைமைப் பொறுப்பிலிருந்து கீழ்வரும் தீர்மானத்தைத் தலைவர் முன்மொழிந்தார்:

3. அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் மாநாடு பஞ்சாபில் நடைபெறும் பொழுது, அங்கேயே அகில இந்திய சமதா சைனிக் தளத்தின் இரண்டாவது மாநாடு நடைபெறும் என்று இம்மாநாடு தீர்மானிக்கிறது.

எதிர்ப்பு ஏதுமில்லை. இந்தத் தீர்மானம் ஒருமனதாக நிறை வேறியதாக அறிவிக்கிறேன்.

இப்போது மாண்புமிகு டாக்டர். பி. ஆர். அம்பேத்கரை மாநாட்டில் உரையாற்றக் கேட்டுக் கொள்கிறேன்.

மாண்புமிகு டாக்டர். அம்பேத்கர் பேச எழுந்த போது அவருக்கு எழுச்சி மிகு ஆரவார வரவேற்பு கொடுக்கப்பட்டது.

## டாக்டர் அம்பேத்கரின் உரை

சமதா சைனிக் தளத்தில் டாக்டர் அம்பேத்கர் பேசியதன் சாரம் வருமாறு:-

சி. பி. மாநிலத்தில் மிகப்பெரும் தொண்டர் படை எழுப்பப் பட்டிருப்பதைக் கண்டு பெருமகிழ்ச்சி அடைகிறேன். இந்தத் தொண்டர் படை 1926 வாக்கில் பம்பாயில் முதலில் ஆரம்பிக்கப் பட்டது. சமதாசைனிக் தளம், நமது பொதுஅமைப்பின் பிரிக்க முடியாத அங்கமாகும். உண்மையிலேயே அதன் மிக வலிமைவாய்ந்த கருவியாகும். நமது இயக்கத்தின் நோக்கமும் குறிக்கோளும் முற்றிலுமாகத் தீவிர மாறுதலடைந்துள்ளது. நமது மக்களுக்கு இந்து சமுதாயத்தின் இன்றியமையாக் கூறாக, சமமான இடத்தைப் பெற்றுத் தருவதே நமது குறிக்கோளாகும்; தனித்த, மாறுபட்ட கூறாக இந்துக்களுடன் சம அந்தஸ்திற்காக நாம் நிற்கிறோம். நமது இயக்கத்தின் நோக்கங்கள், குறிக்கோள்களில் ஏற்பட்ட மாற்றத்தோடு சமதா சைனிக் தளத்தின் நோக்கங்களிலும் குறிக்கோள்களிலும் கூட மாற்றம் ஏற்பட்டிருக்கிறது. இந்தத் தொண்டர் படை அமைக்கப் பட்டதற்கு, நமது இயக்கத்தின் மூல நோக்கமே காரணமாகும். அதாவது தாழ்த்தப்பட்ட வகுப்பினரிடையே இந்துக்களுடன் சமூக சமத்துவம் என்ற கோரிக்கையை ஊட்டி வளர்ப்பதுதான் அந்த நோக்கம். அதன் பெயரே குறிப்பிட்டுக் காட்டுவதுபோல, இந்து

சமுதாயத்தில் தாழ்த்தப்பட்டோரின் மறுசீரமைப்பைக் கொண்டுவர இந்த அமைப்பு உருவாக்கப்பட்டது. இன்று, இந்துக்களிலிருந்து முற்றிலுமான பிரிவினையைக் கொண்டுவருவதன் மூலம், இந்துக்களுடன் சமூக சமத்துவத்தைப் பெறுவதே நோக்கமாகும். மதத்திலிருந்து பிரிவதன் மூலம் அதை அடைய விரும்புகிறோம். நாம் படிப்படியாகச் செல்ல வேண்டியிருக்கிறது. அரசியல் பிரிவினையைக் கோருவதன் மூலம் அரசியல் சமத்துவக் கோரிக்கையை முன்வைத்து நமது போராட்டத்தைத்துவக்க வேண்டியிருந்தது. தாழ்த்தப்பட்ட வகுப்பினர், தங்களது அரசியல் கோரிக்கைகளை வெளியிடுவதற்குத் தகுந்த பாதுகாப்பான மேடையை அவர்கள் பெற முடியாவில்லை யாதலால், இது மிகவும் கடினமான வேலையாக இருந்தது. இது முடியவே முடியாத காலம் ஒன்று இருந்தது. காங்கிரஸ் இயக்கம் மிகவும் வலுப்பெற்றதாக இருந்தது. அதனால் பம்பாய் நகரில் அவர்கள் வேறு எந்தக் கட்சியும் எந்த அரசியல் கூட்டமும் நடத்த அனுமதிக்கமாட்டார்கள். அத்தகைய கூட்டங்களை காங்கிரஸ் தொண்டர்கள் வந்து கலைத்துவிடுவார்கள். யாரும் கூட்டம் நடத்த முன்வரமாட்டார்கள். இந்த அச்சுறுத்தலைச் சமாளிக்க, தொண்டர் படையின் முதலாவது பணியோடு ஒரு புதிய பணியையும் சேர்க்க முடிவு செய்தோம். அதாவது அவர்கள் அரசியலில் பங்கேற்க வேண்டும். காங்கிரஸ் தொண்டர்களின் கொந்தளிப்பான அடக்கு முறை நடவடிக்கைகளிலிருந்து நமது மேடைகளைக் காக்க வேண்டும். இது காங்கிரஸ் தொண்டர்களின் அச்சுறுத்தலைச் சமாளிக்க, மிகவும் பயனுள்ள திட்டமாக அமைந்தது. முதல் வட்ட மேஜை மாநாட்டிற்கு நான் புறப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் பம்பாயில் நடைபெற்ற ஒரு சம்பவம் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. வட்ட மேஜை மாநாட்டில் நான் கலந்து கொள்ளச் செல்வதைக் கண்டனம் செய்யவும், நான் தாழ்த்தப்பட்ட மக்களின் உண்மையான பிரதிநிதி அல்ல என்று அறிவிக்கவும், பம்பாயில் நான் வசித்த இடத்திற்கு அருகாமையிலேயே தாழ்த்தப்பட்ட மக்களின் பெயரால் ஒரு பொதுக்கூட்டத்தை காங்கிரஸ் நடத்தியது. அது தாழ்த்தக்கப்பட்ட வகுப்பினரின் கூட்டமாக இருந்தால் எந்தத் தீர்மானம் நிறைவேற்றப்படுவதைப் பற்றியும் நான் கவலைப்பட மாட்டேன் என்றும், அவர்களின் கூட்டம் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் கூட்டம் அல்ல என்றும், கூட்ட அமைப்பாளர்களிடம் கூறினேன். அவர்கள் முடிவு செய்திருந்த நிலையிலிருந்து விலகிச் செல்ல மறுத்துவிட்டார்கள். மாலையில் கூட்டம் நடைபெற்றது.

நமது தொண்டர்கள் பெருங்கூட்டமாக வந்தார்கள். காங்கிரஸ் தொண்டர்கள் பெரும் ஏமாற்றத்திற்குள்ளாகும் வகையில் அந்தக் கூட்டத்தைக் கைப்பற்றிக் கொண்டார்கள். மேஜை, நாற்காலி, மணி ஆகியவற்றையெல்லாம் நமது தொண்டர்கள் வெற்றிச் சின்னமாக எடுத்து வந்து விட்டார்கள். நமது தொண்டர்படை பம்பாயில் மிகவும் வலிமையானது. எப்பொழுதும், எவரும் நமது தொண்டர்களுக்குச் சவால் விடத் துணிந்ததில்லை. யாருடைய தொந்தரவும் இல்லாமல் நாம் நமது அரசியல் செயல்பாடுகளை நடத்திக் கொண்டு வருகிறோமென்றால், அது நமது தொண்டர் படையின் வலிமையினால்தான். நாம் அவர்களுக்குப் பெரிதும் நன்றிக் கடன் பட்டிருக்கிறோம்.

இந்தக் கருத்தை நீங்கள் பம்பாயிடமிருந்து இரவல் வாங்கியிருக்கிறீர்கள். ஆனால் மிகப்பெருமளவிலான உங்கள் அமைப்பினால் பம்பாயைமிகவும் பின்தங்க வைத்து விட்டீர்கள் என்பதைக் காண்கிறேன். இதில் எனது ஆர்வத்தை நீங்கள் தூண்டி விட்டுள்ளீர்கள். உங்களுடைய நிலைக்கு வருவதற்கு பம்பாய் தன்னூக்கம் பெற வேண்டும். இந்தத் தொண்டர்படையின் தேவை பற்றி நான் முழு நம்பிக்கை உடையவனாக இருக்கிறேன். இது தொடர்ந்து நடத்தப்பட வேண்டும் என்பது மட்டுமல்ல, ஒவ்வொரு மாநிலத்திலும் இது தொடக்கப்பட வேண்டும். தாழ்த்தப்பட்ட வகுப்பில் உறுப்பினராக இருக்கும் ஒவ்வொரு இளைஞனையும் இணைத்துக் கொள்ளும் விதத்தில் அது விரிவாக்கப்பட வேண்டும்.

இத்தகைய தொண்டர் படைகளை எதிர்க்கிறவர்களும் இருக்கிறார்கள். அவர்கள் அஹிம்சையில் நம்பிக்கை கொண்டவர்கள். இத்தகைய அமைப்புக்களையும் அவற்றின் வலிமை வெளிக்காட்டப்படுவதையும் அவர்கள் எதிர்க்கிறார்கள். நான் என்னளவில் அஹிம்சையை நம்புகிறவன். ஆனால் அஹிம்சையையும் பணிதலையும் நான் வேறுபடுத்திப் பார்க்கிறேன். பணிதல் என்பது வலிவற்றதன்மை. தனக்குத்தானே புகுத்திக் கொள்ளும் வலிவற்றதன்மை சிறப்பானதல்ல. ஒரு உபநிடதத்தில் ஆட்டுக்குட்டி பற்றிய கதை ஒன்று இருக்கிறது. அந்த ஆட்டுக்குட்டி கடவுளிடம் சென்று, அனைத்து உயிரினங்களுக்கும் தானே தந்தை என்றும், ஆகவே அனைத்து உயிரினங்களும் சகோதரர்களென்றும், அப்படியிருந்தும் கூட சகோதர பாசத்தை மறந்து ஒவ்வொரு

உயிரனமும் தன் உயிருக்கு அச்சுறுத்தல் தந்து கொண்டிருக்கின்றன வென்றும் ஒரு புகாரைப் பதிவு செய்தது. இதற்கு என்ன பதில் கூறப் போகிறீர்கள் என்று அந்த ஆட்டுக்குட்டி கடவுளைக் கேட்டது. கடவுள் கொடுத்ததாகச் சொல்லப்படும் பதில் அறிவு கொளுத்துவதாக இருந்தது. நீ மிகவும் பணிவாக இருக்கிறாய், எனக்குக்கூட உன்னை விழுங்கிவிடலாம் என்று ஆசையாய் இருக்கிறது என்று கடவுள் கூறினார். நாமும்கூட இந்தக் கதையில் வரும் ஆட்டுக்குட்டியைப் பெரிதும் ஒத்திருக்கிறோம். அதனால்தான் ஒவ்வொருவரும் நம்மை விழுங்கிவிடுவதாக அச்சுறுத்துகிறார்கள். தனக்குத்தானே புகுத்திக் கொள்கிற வலிவற்றதன்மை என்ற கருத்தில், பணிவு என்பது சிறப்பானதல்ல என்பதை நான் உறுதியாக நம்புகிறேன். உங்கள் சிறந்த ஞானி துக்காராம் வரையறுத்திருக்கிற வடிவில், நான் அஹிம்சையின் மீது நம்பிக்கை உடையவன். (1) அனைத்து உயிர்களிடத்தும் அன்பும் கருணையும் காட்டுதல் (2) கேடு செய்பவர்களை அழித்தல் என அஹிம்சையில் இரண்டு பிரிவுகள் இருக்கின்றன என்று துக்காராம் மிகச் சரியாகவே சொல்லியிருக்கிறார். அஹிம்சை பற்றிய வரையறையின் இரண்டாவது பகுதி அடிக்கடி மறைக்கப்பட்டு விடுகிறது. கேடு விளைவிப்பவர்களை அழிப்பது என்பது அஹிம்சை தத்துவத்தின் மூலாதாரமான கூறாகும். அது இல்லாமல் அஹிம்சை என்பது வெறும் கூடு. பேரின்பம் மட்டுமே. அது ஆக்கப்பணி அற்றுப் போகிறது. யாருக்கும் தீங்கு செய்யும் கெட்ட எண்ணம் நமக்கில்லாத வரையில், கேடு செய்பவர்களை அழிக்கும் பணியில் நம்மை நாம் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கும் வரையில், கையகப்படுத்துற்கோ வலுவைக்கூட்டிக் கொண்டிருப்பதற்கோ யாரும் அற்பத்தடை விதிக்க முடியாது. எந்தவிமரிசனத்திற்கும் நீங்கள் அஞ்ச வேண்டாம். வேண்டுமென்றே எவருக்கும்தீங்கு செய்வதைத் தவிர்த்து விடுங்கள். உங்கள் உதவியை நாடுகிற ஒவ்வொருவருக்கும் முனைப்போடு உதவுங்கள். நீங்கள் நமது மக்களுக்குப் பெரும் தொண்டாற்றி யவர்களாவீர்கள். இதுவரை உங்கள் நடவடிக்கைகளெல்லாம் பெரும்பாலும் நமது அரசியல் வாழ்வை ஆதாரமாகக் கொண்டிருந்தன. உங்கள் நடவடிக்கைகளை விரிவுபடுத்த வேண்டிய வேறு களங்களும் இருக்கின்றன. நகரங்களில் சில அயோக்கியர்கள் பெண்களை கடத்திக் கொண்டு போவதாக அடிக்கடி கேள்விப் படுகிறோம். கிராமங்களில் நமது மக்கள் ஜாதி இந்துக்களால் கொடுமைப்படுத்தப்படுவதாக அடிக்கடி கேள்விப்படுகிறோம்.

இத்தகைய நிகழ்வுகளில் நீங்கள் முனைப்புடன் தலையிட வேண்டும். இவையெல்லாம் மோசமான நிகழ்வுகளாகும். இவற்றில் உங்கள் அமைப்புக்கள் போன்றவைதான் உதவ முடியும்.

அனைத்து தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் தொண்டர் படையின் அகில இந்திய மாநாட்டை நடத்தத் தீர்மானம் நிறைவேற்றி யிருப்பதில் எனக்கு மிக்க மகிழ்ச்சி. அது மிக்க மகிழ்ச்சி தரும் யோசனையாகும். அது வெற்றி பெற்றால் மிக நல்ல பலனையளிக்கும். உங்களனைவரையும் வெற்றி பெற வாழ்த்துகிறேன்.

இக்கருத்துக்களை உங்களிடையே பேச அனுமதித்த உங்களுக்கும் உங்கள் தலைவருக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

திரு. எஸ். வி. ராம்டெக்கே நன்றி நவின்றார். அதன் பின் அந்த அமர்வு முடிவுற்றதாகத் தலைவர் அறிவித்தார்.

---

# (78)

## நான் உங்களுடன் இருப்பேன்

*பம்பாய், செவ்வாய்க்கிழமை*

*“ 1942 ஜூலை 21 செவ்வாய்க்கிழமை மாலை, தாஜ்மஹால் ஹோட்டலில் தேசிய கடற்பணியாளர்கள் சங்கத் தலைவரும், உறுப்பினர்களும் அவரைப் பாராட்டிக் கொடுத்த தேனீர் விருந்தில் பேசும் போது, இந்த நாட்டுத் தொழிலாளிவர்க்கத்தின் வாழ்க்கைத் தரம் உயர, தன்னாலான அனைத்தையும் செய்யமுயற்சிப்பதாக, இந்திய அரசின் தொழிலாளர் துறை உறுப்பினர் டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் உறுதியளித்தார்.*

*தான் இணைந்திருக்கும் இந்த அரசு யுத்தத்திற்கு உதவும் நோக்கத்துடன்தான் முக்கியமாக அமைக்கப்பட்டது என்றும், நாட்டின் பொருளாதார சமூக வாழ்க்கையை திருத்தியமைக்கும் நோக்கத்துடன் இந்த அரசு திரும்ப அமைக்கப்படவில்லை என்றும் டாக்டர் அம்பேத்கர் கூறினார்.*

*இந்தியக் கடற்பணியாளர்களின் நிலையைப் பொறுத் தவரையிலும், இந்தியத் தொழிலாளி வர்க்கத்தினரிடையே, இந்தியக் கடற்பணியாளர்கள் மிகவும் முக்கியமான பகுதியினருள் ஒருவராக இருக்கப் போகிறார்கள் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். மிகப்பெரும் கடற்கரையுடைய இந்தியாவின் மாபெரும் தேவை கடற்படையாகும். இந்தியக் கடற்படை மற்றும் இந்திய வியாபாரக் கப்பல்களில் இந்திய கடற்பணியாளர்களின் இடம் உண்மையிலேயே உயர்ந்ததாகும்.*

*மனித ஆற்றலைக் கணக்கிடுதல், கப்பல்களில் வேலை நேரத்தை நிர்ணயித்தல், இயற்கை மரணமடையும் கடற்பணியாளர்களுக்கு உரிய ஈட்டுத் தொகை கொடுப்பதற்கான வழிவகைகள் போன்றவை இல்லாத குறைபாடுகள் இந்திய கடல் பணியாளர்களுக்கு இருப்பதை தேசிய கடற்பணியாளர்கள் சங்கத்தைச் சேர்ந்த திரு. ஏ. ஹெச். மிர்ஸா மற்றும் கான் சாஹிப் எம். இ. செராங் ஆகியோர் குறிப்பிட்டனர்.*

இந்தயுத்தத்தில் 20,000-க்கும் மேலான இந்திய கடற்பணியாளர்கள் நடுக்கடலில் ஆற்றிய பணிகளைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். 1936 ஆம் ஆண்டு நடைபெற்ற சர்வதேச கடல் சார்ந்தவர்கள் மாநாட்டு முடிவுகளை உறுதிசெய்ய வேண்டுமென்று வற்புறுத்தினார்கள்.

திரு சுல்தான் சினாய், திரு. ஆஸ்கார் ஹெச். ப்ரெளன், மாநில முதன்மை மாஜிஸ்டிரேட் திரு. ஆர். மதாலோனே, டாக்டர் மற்றும் திருமதி. ஜே. ஏ. கொல்லாகோ, பம்பாய் ஷெரிஃப் டாக்டர் எம். ஆர் ஏ. பெய்க் மற்றும் கப்பல் கம்பெனிகளின் அதிகாரிகள் ஆகியோர் தேநீர் விருந்தில் கலந்து கொண்டனர்."[1]

---

1. பாம்பே கிரானிக்கிள், 1942, ஜூலை 22.

## (79)

# இந்த நாட்டின் விடுதலைக்கான எனது விருப்பத்தில் யாருக்கும் நான் விட்டுக்கொடுக்க மாட்டேன்

*1942 ஜூலை 22 இரவு, பம்பாய் பாரத் உயர்நிலைப் பள்ளி அரங்கில் நடைபெற்ற சமதா சைனிக் தள வரவேற்பில் பேசிய டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் கூறினார்:*

*"பெருங்குழப்பத்தை விளைவித்து, அதன் மூலம் சந்தேகமே இல்லாத வகையில் இந்த நாடு அடிமைப்படுவதற்கேதுவான உதவிகளைச் செய்யும் வகையில், இந்தத் தருணத்தில் காங்கிரஸ் காரர்கள் தொடங்க முயற்சிக்கும் ஒத்துழையாமைப் போராட்டத்தை எல்லாக் கட்சிகளையும் சார்ந்த அனைத்து இந்தியர்களும் தங்கள் முழு வலிமையையும் ஒன்று திரட்டி தடுக்க வேண்டியது அவர்களின் தேசபக்தக் கடமையாகும்.*

*முந்திய ஒத்துழையாமை இயக்கத்தில் நாங்கள் தலையிட வில்லை. ஏனென்றால் அந்தச் சமயத்தில் இருந்த சூழ்நிலை முற்றிலும் வேறுபாடானது.*

*இன்று ஆக்கிரமிக்கும் ஜப்பான் இந்தியாவின் தலைவாசலில் நின்று கொண்டிருக்கிறது. எகிப்து மற்றும் ரஷ்ய முனைகளிலும் நிலைமை மகிழ்ச்சி தருவதாக இல்லை. இத்தகைய தருணத்தில் ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பிப்பதென்பது, எதிரிகளுக்கு ஆதரவாக நடந்துகொள்வதாகும் என்பதில் எனக்குச் சிறிதளவும் சந்தேகம் இல்லை. இந்த விளையாட்டை காங்கிரசோ அல்லது வேறெவருமோ விளையாட நாங்கள் அனுமதிக்க மாட்டோம். இது இந்தியாவிற்குத் துரோகமிழைக்கும் விளையாட்டாகும்.*

*இந்த நாட்டின் விடுதலைக்கான எனது விருப்பத்தில் யாருக்கும் நான் விட்டுக்கொடுக்க மாட்டேன். ஆனால், இந்த நாட்டில் ஜப்பானியர்கள் ஆட்சியை ஏற்படுத்த உதவும் வகையில் ஆங்கிலே யர்களை விரட்ட நான் விரும்பவில்லை.*

காங்கிரஸ் செயற்குழுவின் தீர்மானம் வெறும் ஏமாற்றாகக்கூட இருக்கலாம். அவ்வாறிருக்குமாயின் இந்த விஷயத்தில் ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. ஆனால், இந்த அச்சுறுத்தல் உண்மையிலையே நடைமுறைப் படுத்தப்படுமானால், தனது அமைப்பைப் பயன்படுத்தி, காங்கிரசுக்குப் புத்தி புகட்டி, நகரில் எவ்விதக் குழப்பமும் ஏற்படாமல் தடுப்பது சமதா சைனிக் தளத்தின் வேலையாகும்.

நான் டில்லிக்குப் புறப்படுவதற்கு முன்னால், இந்த விஷயத்தில் சுதந்திர தொழிற்கட்சியும் அதன் தோழமை அமைப்புக்களும் கடைப்பிடிக்க வேண்டிய கொள்கை விளக்க அறிக்கையை வெளியிடுவேன். அந்த அறிக்கையை நீங்கள் படித்து, அதில் கொடுக்கப்பட்டிருக்கும் அறிவுரைகளை கராறாகக் கடைப்பிடிக்க வேண்டும் என விரும்புகிறேன். டாக்டர் அம்பேத்கர் பேச்சினை முடித்தார்"[1]

---

1. திபாம்பே கிராணிக்கிள், 1942, ஜூலை 23.

## (80)

# இந்த அரசின் ஆட்சி அதிகாரம் உங்கள் கையில் இருக்க நான் விரும்புகிறேன்

*"1942 ஆகஸ்ட் 23 மாலை, டில்லி தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் நலச்சங்கம் அவரைப் பாராட்ட அளித்த வரவேற்பால், இந்திய அரசின் தொழில்துறை உறுப்பினர் டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் பேசும் போது, தனது சமுதாயத்தின் எதிர்காலம் பற்றிய முக்கிய அறிவிப்பை அதாவது இந்திய அரசியலமைப்பின் குறிக்கோளை வெளியிட்டார்.*

*அவர் கூறினார்:*

*"இந்தியாவிலுள்ள மற்ற சமுதாயத்தினருக்குச் சமமான நடைமுறைகளோடு தாழ்த்தப்பட்ட வகுப்பினரை வைக்க விரும்புகிறேன். மற்ற சமுதாயத்தினருக்கு அடிமைகளாக நீங்கள் நீடித்திருப்பதை நான் விரும்பவில்லை. ஆனால் அரசாங்கத்தின் ஆட்சியதிகாரங்களை உங்கள் கைகளில் வைக்க விரும்புகிறேன். முஸல்மான்களுக்குச் சமமான நிபந்தனைகளோடு இந்த நாட்டின் அரசியல் அதிகாரத்தை நீங்கள் பகிர்ந்து கொள்ள வேண்டும்."*

*அரசாங்கத்தின் அதிகாரம், உரிமை ஆகியவற்றைப் பிரித்து பகிர்ந்து கொள்ள தாழ்த்தப்பட்ட வகுப்புனருக்கான உரிமை ஆங்கில அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்டிருந்தது.*

*1940லிருந்து தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் நிலைமை பின்னடைவைச் சந்தித்தது. முதலாவதாக, கிரிப்ஸின் முன்மொழிதல்கள், மற்றவற்றிக்கிடையில், காங்கிரஸ் மற்றும் முஸ்லிம்களோடு ஒரு உடன்பாடுகாண எதிர்நோக்கியிருந்தது. அந்த உடன்பாடு அடைகிற வரைக்கும், தாழ்த்தப்பட்ட மக்கள் ஒரு பொருட்டாகவே இல்லை. "இது தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு இழைக்கப்படும் மாபெரும் அநீதி" என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.*

கிரிப்ஸ் தூதுக்குழு தோல்வியடைந்ததனால், இந்தியாவிலும் வெளிநாடுகளிலுமுள்ள பொது மனிதர்கள், காங்கிரஸ் மற்றும் முஸ்லிம் லீகிற்கிடையேயான உடன்பனாடு பற்றி மட்டுமே பேசினார்கள் என்று தொடர்ந்து பேசிய அவர் குறிபிட்டார். முஸ்லிம் லீகோடு ஒரு உடன்பாட்டிற்கு வர காங்கிரஸ் முயற்சித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் தாழ்த்தப்பட்ட வகுப்பினரோடு உடன்பாட்டுக்கு வர அக்கறையே காட்டவில்லை. காந்திஜி கைது செய்யப்படுவதற்குச் சற்றுமுன்னால், தாழ்த்தப்பட்ட வகுப்பினரை தனித்தன்மையுடைய பிரிவாகத் தான் அங்கீகரிக்கவில்லை என்று அறிவித்தார். "ஆகவே இந்த நாட்டின் அரசியல் வாழ்வில் நமது நிலையை, முழுநிறைவான சமத்துவம் மற்றும் இறையாண்மை நிலையை அடைய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டிருக்கிறது. அத்தகைய நிலையை நாம் அடையாவிட்டால் நாம் நமது பழைய கீழான அடிமைநிலைக்குத் தள்ளப்படுவோம்."

முன்னதாக, ஆட்சிப் பொறுப்பின் மீது தனக்கு நாட்டம் இல்லை என்றும், தனது சமூகத்தினரை முன்னேற்ற தானெடுக்கும் முயற்சிகள் பலனளிக்காவிட்டால். தனது பணிக்குத் திரும்புவதில் மகிழ்ச்சி அடைவதாகவும் டாக்டர். அம்பேத்கர் அறிவித்தார்."[1]

இருப்பினும், 'தி இந்தியன் ஸ்டேட்ஸ்' பத்திரிகை வெளியிட்ட டாக்டர் பி. ஆர் அம்பேத்கர் பேசிய செய்தியில், மேலும் கூடுதலான கூறுகள் இருந்தன. அக்கூறுகளாவன:

தனது சமூகத்தினர் சார்பாக அவர் மேற்கொண்ட போராட்டம் பற்றி டாக்டர் அம்பேத்கர் குறிப்பிட்டார். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இந்துக்களின் உட்பிரிவினர் அல்ல என்றும், அவர்கள் தங்களுக்கென வேறான முக்கியமான தனித்துவம் உடையவர்கள் என்றும் வட்டமேஜை மாநாட்டில் உரிமையை வலியுறுத்தியதாக அவர் கூறினார். அந்தக் கோரிக்கையை மகாத்மா காந்தி எதிர்த்து வாதாடினார். கடைசியில் அம்முயற்சியில் அவர் தோற்றார்.

வகுப்பு வாரித் தீர்ப்பானது தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் வேறான தனித்துவத்தை அங்கீகரித்து வழங்கப்பட்ட உரிமைச்

1. தி பாம்பே கிரானிக்கிள் 1942, ஆகஸ்டு 24.

சான்றாகும். ஆகவே, உண்ணாவிரதம் இருந்துகொண்டு இரண்டாம் முறையாக இந்தக் கேள்வியை காந்தி எழுப்பினார். இறுதியாக பூனா ஒப்பந்தம் ஏற்பட்டது. அதில் தனது சமுதாயத்தின் தனித்துவத்தை நிலைநிறுத்துவதில் அவர் மீண்டும் வெற்றிபெற்றார்.

மூன்றாவது முக்கிய நிகழ்வு, ஆங்கில அரசால் முன்வைக்கப் பட்ட ஆகஸ்ட் சலுகையாகும். தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் ஒப்புதலும் உடன்பாடும் பெறாத எந்த ஒரு இந்திய அரசியலமைப்புச் சட்டமும் ஆயீகல அரசுக்கு ஏற்புடையதல்ல என்று அதில் தெளிவாகக் குறிப் பிடப்பட்டிருந்தது."[1]

---

1. தி இந்தியன் ஸ்டேட்ஸ், 1942, செப்டம்பர் 12.

# (81)

# இன்றைய சீர்குலைவுகள் இந்தியர்களுக்கே தீங்காகும்

*"1942 நவம்பர் 3 காலையில் ஃபிரான்டியர் மெயிலில் வந்திறங்கிய, இந்திய அரசின் தொழில்துறை உறுப்பினர் டாக்டர் பி. ஆர். அம்பேத்கரை வரவேற்பதற்கு மிகப்பெரும் எண்ணிக்கையி லான தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பெருங்கூட்டம் பம்பாய் மத்திய ரயில்வே நிலையத்தை அனேகமாக முற்றுகையிட்டது.*

*மாலை அணிவிக்கும் நிகழ்ச்சிகளெல்லாம் முடிந்தபின், தாதரில் உள்ள தனது இல்லத்திற்கு டாக்டர் அம்பேத்கர் பயணமானார். அவரின் வருகைக்காக அங்கு ஒரு கூட்டம் காத்திருந்தது.*

*நவம்பர் 10 ஆம் தேதி டாக்டர் அம்பேத்கர், மஹத்திற்குப் பயணமாவார் என்றும், மூன்று நாட்கள் கழித்துத் திரும்புவார் என்றும் அறியப்பட்டது"*[1]

*"1942 நவம்பர் 8 ஞாயிறு மாலை, பம்பாய் பரேலில் உள்ள காம்கார் மைதானத்தில் அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் கூட்டமைப்பு சார்பாக நடைபெற்ற கூட்டத்தில் இந்திய அரசின் தொழிற்துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் பேசும்போது, சர் ஸ்டாஃபோர்டு கிரிப்ஸ் சலுகை அறிவித் திருப்பதன் காரணமாக, இந்தியாவில் இப்போது ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பிப்பதற்குச் சிறிதளவும் நியாயமே இல்லை என்று திரு. காந்தியையும், காங்கிரஸையும் அவர் குற்றம் சாட்டினார். கைக்கூலிகளால் நிகழ்த்தப்படும் இன்றைய சீர்குலைவுகள் அரசாங் கத்திற்கோ ஆங்கிலேயர்களுக்கோ எவ்விதத் தீங்கையோ இழப்புக் களையோ ஏற்படுத்தப் போவதில்லை. மாறாக இந்தியர் களுக்குத்தான் ஏற்படும். இந்த நாட்டிலுள்ள பெரும்பாலான முக்கியமான பகுதியினர் இந்த இயக்கத்திற்கு ஆதரவாக இல்லை.*

---

*1. திபாம்பே கிராணிக்கிள், 1942, நவம்பர் 4.*

எனவே இது தோல்வியுறும் என்பதில் அவருக்குச் சந்தேகமே யில்லை.

தாழ்த்தப்பட்ட வகுப்பினரைப் பொறுத்தவரையில் அவர்கள் இந்த இயக்கத்தில் பங்கெடுக்கவில்லை. பங்கேற்கவும் முடியாது. முஸ்லிம்களைச் சமாதானப்படுத்துவதில் காங்கிரஸ் தலைவர்கள் மிகுந்த அக்கறை காட்டினார்கள். ஒரு உடன்பாடு காண்பதற்காக முஸ்லிம் தலைவரைப் பலமுறை சந்தித்தார்கள். ஆனால், இந்த நாட்டின் எதிர்கால அரசியலமைப்பில் தங்களுக்கு உயரிய இடம் வேண்டும் என்று தாழ்த்தப்பட்ட வகுப்பினர் முன்வைத்த கோரிக்கையை அவர்கள் புறக்கணித்து விட்டார்கள். முஸ்லிம்கள் வலுவாகவும் அமைப்பு சார்ந்தவர்களாகவும் இருப்பதனால் அவர்களைச் சமாதானப்படுத்த காங்கிரஸ்காரர்கள் முனைப்புக் காட்டினார்கள். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் போதுமான அளவு வலிமை பெற்றவர்களாகவோ அமைப்பு சார்ந்தவர்களாகவோ இல்லாததனால் அவர்கள் புறக்கணிக்கப்பட்டனர். அகில இந்திய தாழ்த்தப்பட்டோர் கூட்டமைப்பை ஒருமுகப்படுத்துவதன் மூலமும் அவர்களது தொண்டர் படையை வலுப்படுத்துவதன் மூலமும் தங்களை அரசியல் ரீதியாக வலுப்படுத்திக் கொள்ளுமாறு டாக்டர் அம்பேத்கர் அவர்களை வலியுறுத்தினார். தற்போதைய அரசியல் இயக்கத்திலிருந்து ஒதுங்கியிருக்குமாறு அவர்களுக்கு அறிவுரை கூறினார்.

தலைமை வகித்த கூட்டமைப்பின் தலைவர் ராவ் பகதூர் என். சிவராஜ், வைஸ்ராயின் குழு உறுப்பினர் என்ற முறையில் டாக்டர் அம்பேத்கர் ஆற்றிய சில பணிகளைக் குறிப்பிட்டார். அமெரிக்காவி லுள்ள பசிபிக் உறவு அமைப்பிற்குச் செல்லும் இந்தியத் தூதுக் குழுவின் ஒரு உறுப்பினராகத் தான் தேர்ந்தெடுக்கப்பட் டிருப்பதாகவும் விரைவில் அந்நாட்டிற்குத் தான் செல்லப் போவதாகவும் அவர் தெரிவித்தார்.

கூட்டம் முடிந்த பின் அம்பேத்கருக்கு ஏராளமான மாலைகள் அணிவிக்கப்பட்டன”[1]

---

1. தி டைம்ஸ் ஆப் இந்தியா, 1942, நவம்பர் 9.

# (82)

## பிராமணரல்லாதார் கட்சி புனரமைக்கப்பட வேண்டும்

*"1943 ஜனவரி 12 காலையில், இந்திய அரசின் தொழிற்துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் பம்பாய் வந்து சேர்ந்தார். அவர் பம்பாயில் ஒருவார காலம் தங்கியிருப்பாரெனத் தெரிகிறது. ஏ. பி"*[1]

*1943 ஜனவரி 17 ஞாயிரன்று, பம்பாய் பரேலில் உள்ள ஆர். எம். பட் உயர்நிலைப் பள்ளியில் மராத்தா மற்றும் அவர்கள் தொடர்பான சமூகத்தினர் சார்பாக அளிக்கப்பட்ட விருந்தில், இந்திய அரசு தொழில்துறை உறுப்பினர் டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் பேசும் போது, இந்தியாவில் உண்மையான ஜனநாயகம் பிராமணரல்லாதார் கட்சியின் கைகளில் மட்டுமே பத்திரமாக இருக்க முடியும் என்ற கருத்தை வெளியிட்டார். மெட்ராஸ் மற்றும் பம்பாய் மாநிலங்களில் ஆட்சியிலிருந்து பிராணரல்லாதார் கட்சி பல்வேறு காரணங்களால் இபோது சிதைந்து போயிருப்பது குறித்து வருத்தம் தெரிவித்தார். கடந்தகாலத் தவறுகளிலிருந்து படிப்பினை பெற்று, அதன் பல்வேறு பிரிவினரிடையே காணப்படும் சிறு சிறு வேறுபாடுகளையெல்லாம் மறந்து, ஒன்றுபட்ட வலுவான சக்தியாக மீண்டும் உருவாக்கப்பட வேண்டும் என்ற தனது விருப்பத்தை வெளியிட்டார்.*

ஒரு தலைவர், ஒரு நல்ல அமைப்பு, ஒரு தெளிவான உறுதியான குறிக்கோள் மற்றும் திட்டம் ஆகிய மூன்றும் ஒரு கட்சியின் வெற்றிக்கு இன்றியமையாதவை என்று அவர் குறிப்பிட்டார். பிராமணரல்லாத கட்சியின் பல உறுப்பினர்கள் அதிலிருந்து வெளியேறி காங்கிரசில் சேர்ந்தது வருந்தத்தக்கது. ஆனால், அவர்கள் தங்களது தவறுக்கு இப்போது வருந்திக்கொண்டிருக் கின்றனர். குறிப்பிட்ட சமுதாயத்திலுள்ள உறுப்பினர்களுக்காக மட்டுமல்லாமல், இந்திய ஜனநாயக நலனுக்காகவும், பிராமண

1. திபாம்பே கிரானிக்கிள், 1943, ஜனவரி 13.

ரல்லாதார் கட்சி மீண்டும் புனரமைக்கப்பட்டு வலுவான சக்தியாக வேண்டும் என்பது அத்தியாவசியமாகும்.

மராத்தியர்கள் மற்றும் அவர்களோடிணைந்த பிற சமூகத்தவர்களுக்கிடையிலான ஒற்றுமை, அவர்களுக்கும் டாக்டர் அம்பேத்கர் தலைமையிலான கட்சிக்குமிடையிலான ஒத்துழைப்பு ஆகியவற்றின் முக்கியத்துவத்தை தலைமை வகித்த ராவ் பகதூர் ஆர். எஸ். அஸவ்லே மற்றும் உரைநிகழ்த்திய ராவ்பகதூர் எஸ். கே. போலே ஆகியோர் வலியுறுத்தினர்"[1]

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா, 1943, ஜனவரி 18.

## (83)

# தரைப்படை, கப்பல் படை, விமானப்படையில் சேருங்கள்

*பம்பாய் நகரசபைப் பள்ளிகளின் கண்காணிப்பாளர்களாக நியமிக்கப்பட்ட எஸ்.ஏ. உப்ஷாம் மற்றும் ஷிண்டே ஆகியோரைப் பாராட்டும் விதமாக நய்காமில் நடந்த தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் 1943 ஜனவரி 17ஆம் நாள் மாலை பேசினார்.*

*தரைப்படை, கப்பல்படை, விமானப்படை ஆகியவற்றில் சேருவதற்கு அவர்களுக்குக் கிடைத்துள்ள வாய்ப்புகளை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளும்படி அவர்களை டாக்டர் அம்பேத்கர் வலியுறுத்தினார்!*

---

*1. டைம்ஸ் ஆப் இந்தியா, ஜனவரி 18 , 1943.*

# (84)

## ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனம்

வைஸ்ராயின் நிர்வாகக் கவுன்சிலின் தொழில்துறை உறுப்பினரான மேதகு டாக்டர் அம்பேத்கர் இன்று,1943 மே 2ஆம் தேதி பிராண்டியர் மெயில் மூலம் பம்பாய் வந்து சேர்ந்தார். மே 7,8 தேதிகளில் தொழிலாளர்கள், மில் உரிமையாளர்கள், அரசாங்கம் ஆகியோரின் பிரதிநிதிகளின் மாநாட்டிற்கு டாக்டர் அம்பேத்கர் தலைமை தாங்கினார்![1]

பம்பாயின் நய்காம் பகுதியில் மே 9, 1943 அன்று நடந்த தாழ்த்தப்பட்ட மக்களின் கூட்டத்தில் பேசிய இந்திய அரசின் தொழில்துறை உறுப்பினரான டாக்டர் அம்பேத்கர் திரு. காந்தியும் காங்கிரசும் திவாலாகிவிட்டன என்று குறிபிட்டு, திரு. காந்தி அரசியல் பணிகள் செய்வதிலிருந்து ஓய்வு பெற்று விட வேண்டும் என்றார். இதே போல், அசாத்தியமான நிலைப்பாடுகளை எடுத்துள்ள அகில இந்திய முஸ்லீம் லீகின் தலைவரான திரு. ஜின்னாவும் அரசியலிலிருந்து ஓய்வு பெற வேண்டும் என்று கூறினார். இவ்விரு தலைவர்களும் அரசியல் அங்கத்திலிருந்து நீங்கினாலொழிய படுகுழியில் வீழ்ந்துள்ள இந்திய அரசியலை தூக்கி நிறுத்துவது அறவே முடியாத காரியம் என்று அவர் அழுத்தந் திருத்தமாகக் கூறினார்.

இதுவரை இந்தியாவில் தோன்றியுள்ள அரசியல் வாதிகளிலேயே மிகவும் அதிருஷ்டசாலி. திரு. காந்திதான் என்றார் அம்பேத்கர். பயனுள்ள அரசியல் நடத்துவதற்குத் தேவையான அனைத்து அம்சங்களும் அவருக்குக் கேட்ட மாத்திரத்தில் கிடைத்தன. மற்ற அரசியல் தலைவர்களோ இவற்றை அடைவதற்கு தமது வாழ்நாளில் பாதிக் காலத்தைச் செலவிட வேண்டியதாயிற்று. திரு. காந்தியிடம் ஆள் பலமும், பண பலமும் ஏராளமாக இருந்தன. ஆனால் காலஞ்சென்ற திலகர், ரானடே போன்றவர்களிடம் பணபலமே இருக்கவில்லை. ஆள்பலம் திரட்டுவதற்கோ தமது ஆயுட்காலம் முழுவதையும் அவர்கள் செலவிட்டனர்.

---

1. சண்டே கிரானிக்கிள், 2 மே, 1943.

இதெல்லாமிருந்தும் கடந்த 25 ஆண்டுகால காந்தியின் அரசியல் வாழ்க்கையில் தொடர்ந்து தோல்விகளே ஏற்பட்டன. கோகலே. ரானடே ஆகியோரின் அமைதியான அரசியலை ஒப்பிடும் பொழுது காந்தியின் அரசியல், எழுச்சி மிக்கதாக இருந்தது என்பதில் சந்தேகமில்லை, ஆனால் ஒரு விஷயம் மட்டும் நிச்சயம். அதாவது கோகலே, ரானடே ஆகியோரின் வழிமுறைகள் நாட்டைப் பிரிக்கும் அளவுக்கு இட்டுச் சென்றிருக்காது. திரு. காந்தியின் அரசியல் இத்தகைய வேதனை மிக்க கட்டத்துக்குக் கொண்டு வந்துள்ளது. சுயராஜ்யம் பெறுவதையும் அந்த ஒரே பிரச்சினையை விவாதிப்ப திற்குப் பதிலாக, பயணத்தின் இறுதியில் வேறுவேறு பிரச்சினைகள் நம்மை எதிர் கொண்டுள்ளன. இந்தப் பிரச்சினைகள் தோன்றுவதற்கு கோகலேயோ ரானடேயோ அனுமதிக்க மாட்டார்கள்.

"திரு காந்தியின் மீதும் காங்கிரஸ் மேலிடத்தின் மீதும் இந்திய மக்கள் குருட்டு நம்பிக்கை வைத்துள்ளனர்" என்றார் டாக்டர் அம்பேத்கர். தமது விமர்சனத் திறமையை இம்மக்கள் இழந்து விட்டனர், காந்தி எந்த இடத்தில் தவறு செய்துள்ளார் என்று சுட்டிக்காட்டும் தைரியம் அவர்களுக்கு இல்லை.

கிரிப்ஸ் கமிஷன் யோசனைகளை காங்கிரஸ் நிராகரித்ததைக் குறிப்பிட்ட டாக்டர் அம்பேத்கர் அந்த யோசனைகள் பற்றி என்ன தான் சொல்லப்பட்ட போதிலும் காங்கிரசிற்குத் தேவையானதை அது 100 சதவீதமும் வழங்கிவிட்டது. இந்த யோசனைகள், எத்தகைய அரசியல் சட்டம் இருக்கலாம் என்பதை அரசியல் நிர்ணய சபை முடிவு செய்யும் என்று கூறி டொமினியன் அந்தஸ்து தேவையா அல்லது சுதந்திரம் வேண்டுமா என்பதையும் முடிவு செய்ய காங்கிரசுக்கு அதிகாரம் வழங்கியது. உடனடியான அரசாங்கம் பற்றிய பிரச்சினையில், போர் நிலைமைகளில் அது எவ்வளவு பெரிதாக இருக்க முடியுமோ அவ்வளவு பெரிதாக இருக்கலாம் என்று அந்த ஆலோசனையில் தெரிவிக்கப்பட்டது. பாதுகாப்பு விஷயங்கள் மட்டும் தனியாகப் பிரிக்கப்பட்டு மற்றவை எல்லாம் அதிகார மாற்றம் செய்யப்பட்டன.

"பதினைந்து மனிதர்கள் ஒரு புறமும் மறுபுறத்தில் பாதுகாப்புத் துறை உறுப்பினர் ஒருவர் மட்டும் இருந்து, இருசாராருக்கும் இடையில் நடக்கும் சச்சரவு, ஒருபுறம் சாய்வதாகவே இருக்கும்

என்பது அரசியல் அரிச்சுவடி அறிந்தோருக்கும், தெரியும்" என்றார் டாக்டர் அம்பேத்கர். 'இது தவிர, இன்றைய நிலைமைகளுக்கான ஆலோசனைகளை விட எதிர்காலம் பற்றிய பிரேரணைகள் அதிக முக்கியத்துவம் வாய்ந்தவை என்பது அறிவுள்ள எவருக்கும் விளங்கும், எதிர்காலத்துக்கான ஆலோசனைகள் தேசத்துக்கு முழு அதிகாரத்தையும் வழங்கும் என்கிற நிலையில், உடனடி இன்றைய நிலைக்கு ஒத்துக் கொள்ளாத சில விஷயங்கள் அவற்றில் இருக்கின்றன என்பதற்காக அவற்றை அறிவுள்ள ஒருவர் நிராகரிக்க மாட்டார்'. சுதந்திரம் அடைவதற்கு ஒரே வழி பாதுகாப்புத்துறை என்று வலியுறுத்திக் கூறினார் அவர்.

அகில இந்திய அரிஜன வகுப்பினர் சம்மேளனத்தில் சேரும்படி அரிஜனங்களுக்கு வேண்டுகோள் விடுத்த டாக்டர் அம்பேத்கர், தம்மை அமைப்பு ரீதியில் ஒழுங்கமைத்துக் கொள்வதுதான் அவர்களின் நலன்களுக்குப் பாதுகாப்பாக அமையும் என்றார் டாக்டர் அம்பேத்கர். இந்திய அரசியல் சாசனம் வரையப்பட்டவுடன், தமது அரசியல் அதிகாரத்துக்காகப் போராட அவர்கள் தயாராக இருக்க வேண்டும். அரசியல் சாசனம் முத்தரப்பு சாசனமாக இருக்க வேண்டும் என்பதே நமது நிலை. தேச வாழ்வின் சுதந்திரமான, முக்கியமான சக்திகளால் கட்டுப்படுத்தப்படுகிற, அரசியல் சாசனமாக அது விளங்க வேண்டும்.. அரிஜனங்களை தவிக்கவிட்டு விட்டு, இந்துக்களும் முஸ்லீம்களும் ஓர் ஒப்பந்தம் செய்து கொள்வதை நாம் அனுமதிக்க முடியாது. எனவே தாழ்த்தப்பட்ட மக்களின் அரசியல் அபிலாஷைகளை நிறைவேற்றத்தக்கவாறு. அகில இந்தியாவிலும் செயல்படும் அகில இந்திய அரிஜன வகுப்பார் சம்மேளனம் என்ற அமைப்பை உருவாக்க நாம் முடிவு செய்துள்ளோம்.

தொழிற் பயிற்சியின் முக்கியத்துவத்தை வலியுறுத்திய டாக்டர் அம்பேத்கர் எந்த நாடும் "கருவி மனிதன்" இல்லாமல் முன்னேற முடியாது என்றார். தவிரவும் நாட்டின் தொழில் வளர்ச்சியில் தொழில் நுட்பப் பயிற்சிக்கு ஏராளமான வாய்ப்புகள் உண்டு![1]

---

1. திடைம்ஸ் ஆஃப் இந்தியா, மே 10, 1943.

# (85)

# போருக்கு பிந்தைய காலத்தில் வறுமையைச் சகித்துக் கொள்ள முடியாது

*1943 ஆம் ஆண்டு மே 10 ஆம் தேதி, மகாராஷ்டிர வர்த்தகக் கழகத்தின் கூட்டத்தில் அம்பேத்கர் உரை நிகழ்த்துகையில் "போருக்குப் பிந்திய காலத்தில் நாட்டில் வறுமை தாண்டவமாடுவதைச் சகித்துக் கொள்ள முடியாது என்று கூறினார். நிலைமைகள் எப்படி உருவெடுக்கும் என்று அவரால் ஆரூடம் கூற முடியவில்லை என்றாலும், நிலைமைகள் வேகமாக முன்னேறும், போருக்குப் பிந்தைய காலத்தில் ஏழை மனிதன் பண்பாடுள்ள நாகரிகமான வாழ்க்கை வாழ முடியும் என்று அவர் கருதினார். அவரது கருத்தில் நிரந்தரமான அமைதி மூன்று விஷயங்களைப் பொறுத்து இருக்கும். ஏகாதிபத்தியம், நிற வேற்றுமை, வறுமை, ஏகாதிபத்தியம் என்பது போல, இப்போது ஒரு மரியாதைக் குறைவான ஒரு சொல்லாகி விட்டது நிறப்பாகுபாடு என்பது. ஏகாதிபத்தியம் என்பது ஒரு முக்கியமான விஷயம். மனித குலத்தின் அமைதி எதிர்காலத்தில் பாதிக்கப்படாத வகையில் இந்தப் பிரச்சினையைச் சமாளிக்க வேண்டும்.*

*மகாராஷ்டிரா வர்த்தகக் கழகத்தின் தலைவர் திரு. எம். எல். தஹனூகர் திங்கள் 'கிழமை மாலை தாஜ்மஹால் ஹோட்டலில் டாக்டர் அம்பேத்கருக்குத் தேநீர் விருந்து அளித்தார்."*[1]

---

*1. பாம்பே கிராணிக்கிள், 11 மே, 1943.*

# (86)

# சுயராஜ்யம் உழைப்பாளர் கையில் இருக்க முடியும்

*1943 ஆம் ஆண்டு மே 10 ஆம் நாள், திங்கள் மாலை பம்பாய் மகாணத்தின் இந்தியத் தொழிலாளர் சம்மேளனம் அளித்த தேநீர் விருந்தில் இந்திய அரசின் தொழில்துறை உறுப்பினரான டாக்டர் அம்பேத்கர் பேசும் போது, இந்தியத் தொழிலாளர் இயக்கம் ஆழமற்று மேம்போக்கானதாக இருப்பதற்கு கண்டனம் தெரிவித்தார்.*

*டாக்டர் அம்பேத்கரை வரவேற்றுப் பேசிய உறுப்பினர் காரா, தொழிலாளர் இயக்கத்தில் பிளவுண்டாகி இருப்பது வருத்தமளிக்கிறது என்றார். டாக்டர் அம்பேத்கர் தொழிற்துறை பதவி ஏற்ற சிறிது காலத்திற்குள்ளாகவே செய்துள்ள சீர்படுத்தும் வேலைகள் குறித்து அவர் பாராட்டுத் தெரிவித்தார்.*

*பின்னர் பேசிய டாக்டர் அம்பேத்கர், அங்கிருந்த தொழிற் சங்கத் தலைவர்களிடம், அவர்களிடையே உள்ள கருத்து வேறுபாடுகளைக் களைந்தெறிந்து விட்டு முதலாளித்துவத்துக்கு எதிராக ஓரணியில் திரளுமாறு ஆலோசனை கூறினார்.*

*பிரிட்டனில் தொழிற்சங்க இயக்கத்தின் வளர்ச்சி பற்றிக் குறிப்பிட்டு, எப்போதும் ஆதிக்கம் செலுத்தி வந்த கன்சர்வேடிவ் கட்சியினரிடமிருந்து தொழிற்கட்சி இரண்டு முறை ஆட்சியைக் கைப் பற்றியது எப்படி என்று விளக்கினார்.*

*இந்தியத் தொழிற்சங்க இயக்கம் இந்த உதாரணத்தைப் பின்பற்ற வேண்டும்.*

*பிரிட்டிஷ் தொழிற்கட்சியைப் போல இந்தியாவிலும் ஒன்றிணைந்த தொழிற்கட்சி அமைக்க வேண்டியது அவசியம் என்று அவர் வலியுறுத்திக் கூறினார்.*

ஜனநாயகம் பிரிட்டனில் தோல்வியடைந்ததற்கு கன்சர்வேடிவ் கட்சி அங்கு அதிகாரத்தில் இருந்ததே காரணம். எனவே யாருடைய கையில் சுயராஜ்யம் இருக்க வேண்டும் என்பது முக்கியம் ஆகும்.

இந்தியாவிற்கு சுயராஜ்யம் வரும்போது அது இந்தியத் தொழிற் சங்க இயக்கத்தின் கைகளில் இருக்க வேண்டும் என்று தொழிற்சங்கத் தலைவர்களிடம் அவர் கூறினார்.[1]

---

1. பாம்பே கிரானிக்கிள், 11 மே, 1943.

# (87)

## உரிமைகளை அனுபவிக்கும் தகுதி பெறுங்கள்

1943 டிசம்பர் 5 ஆம் நாள் மாலை வைஸ்ராயின் நிர்வாகக் குழு உறுப்பினரான டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு, தாதரில் கோகுல் தாஸ் பாஸ்தாரோடுக்கு அருகாமையிலுள்ள மைதானத்தில், அரிஜன வகுப்பினர் சம்மேளனம் வரவேற்பளித்தது. திரு. பி.வி. ஜாதவ் தலைமை வகித்தார்.

பல்வேறு பின்தங்கிய வகுப்பினர் அமைப்புகளின் சார்பில் டாக்டர். பி.ஆர். அம்பேத்கருக்கு மாலை அணிவிக்கப்பட்டது.

பாராட்டுகளுக்கு பதிலளித்துப் பேசிய டாக்டர் அம்பேத்கர், வைஸ்ராயின் நிர்வாகக் குழு உறுப்பினராய் இருந்து தான் ஆற்றி வரும் பணிகள் பற்றி எடுத்துச் சொல்லி, முஸ்லீம்களுக்கும் இந்துக்களுக்கும் இணையான அந்தஸ்தை அரிஜனங்கள் பெறுவதற்கும் சட்டப் பேரவையில் அவர்களுக்கு அதிக இடங்கள் கிடைப்பதற்கும் தாம் செய்து வரும் முயற்சிகள் பற்றி குறிப்பிட்டார். அரிஜன வகுப்பாரின் முன்னேற்றத்திற்காக அரசாங்கத்திடமிருந்து ரூபாய் மூன்று லட்சம் தாம் பெற்றுள்ளதாகவும் குறிப்பிட்டார்.

தங்களுக்குக் கிடைக்க வேண்டிய அரசியல் அதிகாரங்களுக்காக போராடுகிற ஒரே அமைப்பான சம்மேளனத்தில் அரிஜனங்கள் பெரும் எண்ணிக்கையில் சேர வேண்டும் என்று வற்புறுத்திய டாக்டர் அம்பேத்கர், அவர்கள் பெற விரும்பும் உரிமைகளை அனுபவிக்கும் விதத்தில் அவர்கள் தங்களைத் தாங்களே பயிற்று வித்துக் கொள்ள வேண்டும் என்றும் பொது நன்மைக்காக அவர்கள் ஒன்றுபட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்![1]

---

1. பாம்பே கிரானிக்கிள், 6 டிசம்பர், 1943.

# (88)

## தாழ்த்தப்பட்டோர் ஆட்சி புரியும் இனமாக மாற வேண்டும்

1944 ஜனவரி 31ஆம் நாள் கான்பூரில் நடந்த தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் மாநாட்டில் தீர்மானங்கள் நிறைவேறிய பின்பு தமக்கு அளித்த வரவேற்புக்கு பதிலளித்துப் பேசிய டாக்டர் அம்பேத்கர், எதிர்காலத்தில் இவ்வகுப்பினர் ஏற்றுக் கொள்ள வேண்டிய பணிகள் குறித்துப் பேசினார். அபோது சம்மேளனத்தை அமைப்பு ரீதியில் இளைஞர்கள் வலுப்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். எந்த ஒரு கட்சியும், ஏன் பிரிட்டிஷ் அரசே கூட, சட்ட ரீதியான வளர்ச்சியில் இந்த வகுப்பாருக்கு கொடுக்க வேண்டிய முக்கியத் துவத்தை அப்பொழுதுதான் மறுக்க முடியாது என்று கூறினார்.

“எதிர்கால இந்தியாவில் நாம் ஒரு ஆட்சி புரியும் இனமாக இருப்போம் என்று உறுதி கொள்ள வேண்டும். பணிந்து நடப்போ ராகவோ, வேலைக்காரர்களாகவோ இருக்க மறுப்போம், எஜமான் களாகவே விளங்குவோம்.” என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

சுயராஜ்ய அரசு இந்தியாவில் அமைக்கப்படும் பொழுது, இந்துக்கள், முஸ்லீம்கள், அரிஜனங்கள் என்ற மூன்று கட்சிகள் அரசியல் அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்ளும்.

ஒரு நாளைக்கு ரூ 30/- ஊதியமும், தொழிலாளர்களுக்கு வீடும், அவர்கள் வயதான காலத்தில் வாழ்க்கை நடத்த வசதியாக ஒரு பென்ஷன் திட்டமும் கொண்ட ஒரு எதிர்காலத்தைக் கனவு கண்டார் அவர்.

காங்கிரசில் சேருமாறு அவருக்குச் சொல்லும் விமர்சகர் களுக்கு டாக்டர் அம்பேத்கர் எளிய பதில் தந்தார். “2000 வருடங் களுக்கும் மேலாக ஆதிக்கத்துக்கு உட்பட்டும், ஒடுக்கப்பட்டும் வந்த அரிஜன மக்களின் சுதந்திரம்தான் எனக்கு எல்லாவற்றையும் விட மேலானது” என்றார் அவர். தனது வகுப்பினரை மேம்படுத்துவது,

சுயராஜ்யம் அடைவதற்காகச் செய்கிற பணியை விட முக்கியமானது என்று அவர் கருதினார்.

2000 ஆண்டுகளுக்கும் மேலாகத் தொடர்ந்து அவர்கள் துன்பப்படுவதற்கு என்ன காரணம் என்று சிந்தித்துப் பார்க்கும் படி அவர்களிடம் டாக்டர் அம்பேத்கர் கேட்டுக் கொண்டார். இந்து தர்மம்தான் இதற்கு முக்கியக் காரணம் என்று வன்மையாகக் கூறினார் அவர். உலகத்திலுள்ள அனைத்து மதங்களிலும் இந்து மதம் ஒன்று தான் சாதி வேறுபாடுகளையும், தீண்டாமையையும் அங்கீகரிக்கிறது. அரிஜன வகுப்பினர் மீது இந்துக்கள் இழைக்கும் அநீதிகள் அனைத் துக்கும் இது ஒரு திரையாகவும் போர்வையாகவும் இருக்கிறது. இன்றும் கூட கிராமத்தில் அரிஜனங்கள் சுயமரியாதையுடன் வாழ முடியவில்லை என்ற நிலை கண்டு அவர் வருந்தினார்.

எனவே, இந்து மதத்தை அவர்கள் விட்டுவிட வேண்டும், அவமானங்களை இனியும் சகித்துக் கொள்ளக் கூடாது என்ற தமது மனவுறுதியை அவர் மீண்டும் வலியுறுத்திக் கூறினார்.

சாதி இந்துக்கள் தொடர்ந்து அவர்கள் மீது ஆதிக்கம் செலுத்துவதன் காரணமாகவே தாம் அவமதிக்கப்படும் நிலையை அவர்கள் இன்னும் ஏற்றுக் கொள்கிறார்கள் என்பதை அவர் தெளிவாகக் கண்டார். எந்தவொரு வகுப்பினருக்கும் எந்த வகையிலும், தாம் தாழ்ந்தவர் இல்லை என்பதை உணர்ந்து தமது சொந்த வலிமையை நம்பியிருக்கும்படி அரிஜன மக்களுக்கு அவர் அறிவுரை சொன்னார்.

தமது அரசியல் அமைப்பான அரிஜன வகுப்பார் சம்மேள னத்துக்கு அமைப்பு ரீதியாக வலிமை சேர்க்க வேண்டிய அவசியத்தை அழுத்தம் திருத்தமாக வெளியிட்டார் அம்பேத்கர். முஸ்லீம்களுக்கு சலுகைகள் காட்ட பிரிட்டிஷ் அரசாங்கம் எப்போதும் தயாராக இருக்கிறது. சிறையிலிருந்து வெளிவந்தவுடன் காங்கிரஸ் தலைவர்கள், பாகிஸ்தான் பிரச்சினையில் முஸ்லீம்களுடன் 50-50 விகித ஒப்பந்தம் செய்து கொண்டால் அரிஜன வகுப்பாரின் நிலை என்னவாகும்? நாட்டை ஆட்சி செய்யும் அரசியல் அதிகாரத்தில் பங்கு பெற வேண்டுமானால், ஓர் உறுதியான அமைப்பாக அவர்கள் ஒன்று சேர வேண்டும்.

பெண்களின் பங்களிப்பு பற்றி வலியுறுத்திப் பேசிய அவர், பெண்கள் தமது பணிகளை தீவிரப்படுத்தினால் ஒழிய அவர்களது இயக்கம் வெற்றி பெறாது என்றார். ஒவ்வொரு நகரிலும் ஒவ்வொரு கிராமத்திலும் தன்னார்வத் தொண்டர் படை அமைத்து மாநாட்டின் முடிவுகள் பற்றி 200 மைல்களுக்கும் அப்பாலுள்ள கிராமங்களுக்குக் கூட சென்று எடுத்துக் கூறுவது மிகவும் முக்கியம் என்றார் அவர். தீண்டாமையை அகற்றும்படி மற்றவர்களிடம் கோரும்போது, அரிஜன வகுப்பினர் தம்மிடையே உள்ள பிரிவினையை அகற்றுவது அவர்களது பொறுப்பு என்று உணர வேண்டும்.

மாநாட்டினை முடித்து வைத்துப் பேசிய திரு. சிவ்ராஜ் அரிஜன வகுப்பினருக்கு டாக்டர் அம்பேத்கர் செய்துள்ள சேவைகளைப் பாராட்டினார்!

---

1. பிரீ பிரஸ் ஜர்னல் 1944, பிப்ரவரி.

## (89)

# தாழ்த்தப்பட்ட வகுப்பினர் "இப்போதே செயல்பட வேண்டும்"

1944 ஆகஸ்டு 26 ஆம் நாள் அரிஜன வகுப்பு அமைப்புகள் பல தமக்கு அளித்த வரவேற்புக்கு கல்கத்தாவில் பதிலளித்துப் பேசிய வைஸ்ராயின் நிர்வாகக் கவுன்சில் உறுப்பினரான டாக்டர் அம்பேத்கர் "இப்போதே செயல்படுங்கள், இந்த வாய்ப்பை நழுவ விடாதீர்" என்று கூறினார்.

இந்திய அரசியல் சாசனம் இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்தை வழங்கும் என்று அம்பேத்கர் சொன்னார். இதனால் ஏற்படுகிற அடிப்படை விளைவுகளில் ஒன்று என்னவென்றால், டொமினியன் அந்தஸ்து பெற்ற இந்தியாவின் அரசியல் சாசனத்தைத் தயாரிப்பதில், இனி பிரிட்டிஷ் அரசு தலையிடாது என்றார். எனவே அரிஜன வகுப்பினரின் குறைகள் எதுவாக இருந்தாலும் அவற்றை இப்போதே நிவர்த்தி செய்து கொள்ளவில்லை என்றால், எதிர் காலத்தில் எந்தவொரு அரசியல் கோரிக்கையையும் இந்தியாவில் முன்வைக்க முடியாது. எனவே நம்முன் உள்ள பிரச்சினை "இப்போது செயல்படு, இல்லையேல் எப்போதும் கிட்டாது" என்றும், "வெற்றி நமக்கு அருகில் வந்து விட்டது" என்றும், "இப்போதைய தேவை எல்லாம் நம்மிடையே ஒற்றுமைதான்" என்றும் அவர் கூறினார்.

காந்தியின் வாழ்க்கையும் அவரது அனைத்து அரசியல் நடவடிக்கைகளும் சிறுபான்மையினரின் கோரிக்கைகளை நிராகரிக்கவே முயன்றன. ஒத்துழையாமை இயக்கம், உப்புச் சட்டத்தை எதிர்த்து நடந்த போராட்டம், இதுபோன்ற தமாஷ்கள் பலவும் இந்த நோக்கத்துக்காகவே நடத்தப்பட்டன. இனிமேலும் சிறுபான்மையினரின் அரசியல் கோரிக்கைகளை புறந்தள்ள முடியாது என்றுணர்ந்த காந்தி முஸ்லீம்கள், கிறித்தவர்கள் ஆகியோருடன் ஒரு உடன்பாடு காண்பது அவசியம் என்று தற்போது தெரிந்து கொண்டார். என்றாலும் அரிஜன வகுப்பாரின் கோரிக்கைகளை மட்டும் அவர் ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். அரிஜன மக்கள் ஒரு வலுவற்ற

வகுப்பினர். எனினும் தெய்வத்தின் அருள் அவர்களுக்குக் கிடைத்து வருகிறது. "கிரிப்ஸ் கமிஷன் மட்டும் வெற்றி பெற்றிருத்தால் நமக்கு எத்தகைய பேரிடர் உண்டாகி இருக்கும் என்று நினைத்துப் பாருங்கள். அது தோல்வியடைந்ததற்காக நான் ஒவ்வொரு நாளும் கடவுளுக்கு நன்றி கூறுகிறேன்."

அண்மையில் வைஸ்ராய், காந்திக்கு எழுதியுள்ள கடிதத்தில் ஒரு முக்கிய நிபந்தனை விதித்துள்ளார் என்று டாக்டர் அம்பேத்கர் சொன்னார். அதாவது இந்தியர்களின் கைகளில் பிரிட்டிஷ் அரசு ஆட்சியதிகாரத்தை மாற்றிக் கொடுப்பதற்கு இந்துக்கள், முஸ்லீம்கள் ஆகியோருக்கிடையில் ஏற்படுகிற ஒப்பந்தம் மட்டும் போதாது. ஒரு முத்தரப்பு ஒப்பந்தம் ஏற்பட வேண்டும், அரிஜன வகுப்பினருடன் ஆட்சியதிகாரம் மாற்றப்படுவதற்கு முன்னால் இது செய்து கொள்ளப் பட வேண்டும் என்று அக்கடிதத்தில் கூறப்பட்டிருந்தது. இத்தகைய அறிவிப்பு செய்யப்பட்டதற்காக இவ்வகுப்பினர் நன்றிக் கடன் பட்டிருக்கிறார்கள்.

அரிஜன வகுப்பினரின் நியாயமான கோரிக்கைகளை இந்து மகாசபா ஏற்றுக் கொள்வதாக இருந்தால் தானும் இந்து மகா சபாவில் சேர்ந்து கொள்ளத் தயார் என்றார் டாக்டர் அம்பேத்கர். இத்தகைய நியாயமான அரிஜனங்களின் கோரிக்கையை காங்கிரஸ் கட்சி ஏற்றுக் கொண்டாலும் அக்கட்சியில் சேர்ந்து கொள்ள தமக்கு எவ்விதத் தயக்கமும் இல்லை என்றார் டாக்டர் அம்பேத்கர்.

ஆனால், இந்த அமைப்புகள் அரிஜன வகுப்பினருக்கு நண்பர்களா, அல்லது எதிரிகளா என்பதுதான் கேள்வி.[1]

---

1. தி பாம்பே கிரானிகிள், 28 ஆகஸ்டு, 1944.

# (90)

## தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இந்து சமூகத்தின் ஒரு அங்கம் அல்ல

வைஸ்ராயின் நிர்வாகக் கவுன்சில் உறுப்பினரான டாக்டர் அம்பேத்கர் இன்று மதியம் (20- 9- 1944) பம்பாயிலிருந்து மெட்ராஸ் எக்ஸ்பிரஸ் மூலம் ஹைதராபாத் செல்லுகிறார். அவருடன் தாழ்த்தப் பட்ட மக்களின் தலைவர்கள் பலரும் செல்கின்றனர்.

ஹைதராபாத்தில் ஒரு நாள் தங்கியிருந்து விட்டு டாக்டர் அம்பேத்கர் மதராசுக்குச் செல்வார் என்று அறியப்படுகிறது. மதராசில் எதிர்கால இந்திய அரசியல் சாசனத்தில் தாழ்த்தப்பட்ட மக்களின் நிலை எப்படி இருக்கும் என்பது பற்றி ஒரு முக்கிய அறிவிப்புச் செய்வார்.

காந்தி - ஜின்னா 'ஆகியோருக்கு இடையில் நடைபெறும் பேச்சுவார்த்தைகளின் முடிவுகளின்படி இந்த அறிவிப்பு செய்யப் படும் என்று தெரிகிறது.'[1]

டாக்டர் அம்பேத்கர் தென்னிந்தியாவில் சுற்றுப் பயணம் செய்த போது நிஜாம் ஆட்சிக்குட்பட்ட ஹைதராபாத் மாகாணத்திற்கு 20 - 9 - 1944 அன்று முதல்முறையாக விஜயம் செய்தார். நாம்பள்ளி, செகந்தராபாத் ஆகிய நகரங்களில் அவருக்கு சிறப்பான வரவேற்பு கொடுக்கப்பட்டது. பீகம்பேட் ரயில் நிலையத்தில் ஹைதராபாத் மாநில அரிஜன வகுப்பினர் சம்மேளனத்தின் தலைவரான திரு. ஜே. சுப்பையா, திருமதி சுப்பையா, திருமதி ராஜ்மணி தேவி, திரு. மத்ரே ஆகியோர் அவரை வரவேற்றனர்.'

ஹைதராபாத் மாகாண அரிஜன வகுப்பு சம்மேளனத்தைச் சேர்ந்த பெண்களும் ஆண்களும் அவருக்கு உற்சாகமாக வரவேற் பளித்தது என்றும் நினைவில் நிற்கும். டாக்டர் அம்பேத்கருக்கு அளித்த மரியாதை அணிவகுப்பு மிகச் சிறந்ததாக இருந்தது,

---

1. பாம்பே கிரானிக்கிள், 20 செப்டம்பர், 1943.

இத்தகைய அணிவகுப்பு மரியாதை வைஸ்ராயுக்குக் கூட ஒரு போதும் கிடைத்திராது. "அம்பேத்கர் வாழ்க" என்ற முழக்கம் வானில் எங்கும் எதிரொலித்தது. செகந்தரபாத் ரயில் நிலையத்திலிருந்து பாச் - பந்து - சேவாஹாலுக்கு அவர் அழைத்துச் செல்லப்பட்டார், அதன்பின் நிகழ்ச்சி நடந்த பந்தலுக்கு இட்டுச் செல்லப் பட்டார். இந்த நிகழ்ச்சியில் வரவேற்புக் குழுத் தலைவரான பிரேம்குமார் டாக்டர் அம்பேத்கரை வரவேற்றுப் பேசினார். அரிஜன வகுப்பினர் சம்மேளனத்தின் சார்பில் ஜே.எச். சுப்பையா உரை நிகழ்த்தினார்.

பெருத்த கரவொலிக்கிடையே டாக்டர் அம்பேத்கர் பேச எழுந்தார். அவர் 45 நிமிடம் இந்தியில் பேசினார். அவரது கருத்தாழம் மிக்க இதயத்தைத் தொடும் அழகான பேச்சினால் வந்திருந்தோர் கட்டுண்டனர். அரிஜன வகுப்பினர் சம்மேளத்தின் கீழ் அனைவரும் ஒன்றுபட்டு நிற்குமாறு வந்திருந்தோர் அனைவரையும் கேட்டுக் கொண்டார் அம்பேத்கர்.

அரிஜன வகுப்பு மக்களுக்கு நியாயம் வழங்கப்படவில்லை என்றால், அவர்களது உரிமைகளும் சலுகைகளும் அங்கீகரிக்கப் படவில்லை என்றால். தமது உயிரையும் கொடுத்து அவர்கள் போராடுவார்கள் என்று டாக்டர் அம்பேத்கர் எச்சரிக்கை விடுத்தார். அரசியல் அதிகாரம் எப்பொழுதாவது யாருக்காவது கிடைக்கும் என்றால் அது இந்துக்கள், முஸ்லீம்கள். அரிஜனங்கள் ஆகிய மூன்று பிரிவினருக்கே சொந்தமாக இருக்கும் என்று தெளிவு படுத்தினார் டாக்டர் அம்பேத்கர். அரிஜனங்களுக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டியதை யாரும் மறுக்க முடியாது என்று அவர் கூறினார்.

இரண்டாவது வட்டமேஜை மாநாட்டில் நடந்தவற்றை நினைவு கூர்ந்த டாக்டர். அம்பேத்கர் முதல் வட்டமேஜை மாநாட்டில் கலந்து கொண்ட வேறுவேறான கட்சிகளின் கொள்கைகளையே வழிமுறை களையோ காந்தி அறிந்திருக்கவில்லை என்று குறிப்பிட்டார். எனவே "நம் முன்னுள்ள பிரச்சினை பற்றி காந்தியை எச்சரிக்க விரும்பினேன்" என்றார் அம்பேத்கர், இதை மனதில் கொண்டு, சமஷ்டி அமைப்பின் உபகமிட்டியில் பேச வாய்ப்புக் கிடைத்தவுடன் பிரச்சினை முழுதையும் அங்கு வெளிப்படுத்தினார். இவருக்குப் பின் பேசிய காந்தி "எனது இதயம் அம்பேத்கரிடம் உள்ளது. எனது தலை அவரிடம் இல்லை" என்றார். அடுத்த நாள் நிகழ்ச்சிகள் தொடங்குவதற்கு முன்பு

சில கேள்விகளை அம்பேத்கர் காந்தியிடம் கேட்டார். இவை இருவருக்குமிடையில் சச்சரவு எழுவதற்குக் காரணமாயின.

இந்திய மன்னர்களை நியமனம் மூலம் நாடாளுமன்றத்துக்கு அனுப்பலாம் என்று கூறுவதற்கு காங்கிரஸ் கட்சி காந்திக்கு அனுமதி அளித்துள்ளதா என்றும் மறைமுகத் தேர்வுக்கு காங்கிரஸ் எதிர்ப்புத் தெரிவிக்க வில்லையா என்றும் அம்பேத்கர் கேட்டதற்கு தமக்கு இதில் ஆட்சேபமில்லை என்று காந்தி தெரிவித்தார். ஹோம்ரூல் மசோதாவை இதே காரணத்துக்காக காங்கிரஸ் கட்சி எதிர்க்கவில்லையா என்று கேட்டதற்கு காந்தி பதிலளிக்க மறுத்து விட்டார்.

"இதையெல்லாம் சொல்லுவதன் மூலம் நான் நிரூபிக்க முயல்வதெல்லாம், இந்தியா கைவிடப்பட்டால் அதற்கு அரிஜன வகுப்பினர் காரணமாக இருக்க மாட்டார்கள், திரு காந்தியும் திரு. சீனிவாச சாஸ்திரியும்தான் இதற்குக் காரணமாக இருப்பார்கள் என்று காட்டுவதற்காகத்தான்" என்று டாக்டர் அம்பேத்கர் மேலும் சொன்னார்.

அரிஜன வகுப்பினர் இந்திய தேசிய வாழ்வில் ஒரு அங்கம் என்பதை ஜாதி இந்துக்கள் ஏற்றுக் கொள்வது நல்லது. இந்த நாடு சுதந்திரம் பெற வேண்டும் என்பதை நாங்கள் அவர்களைப் போலவே முழுமையாக விரும்புகிறோம். ஆனால் எந்தப் புதிய அரசிற்கும் (சுயராஜ்ய அரசில்) இந்துக்கள், முஸ்லிம்கள், அரிஜன வகுப்பினர் மூன்று சாராருமே வாரிசுகள் ஆவர்.

"நாட்டின் மிகப்பெரிய கட்சியாகத் திகழ்கிற காங்கிரசின் பின்புலத்தில் செயல்படும் காந்தியின் கொள்கை பிரிட்டிஷ் அரசு அரிஜன வகுப்பினரின் கோரிக்கைகளை ஏற்றுக் கொள்ளாமலே காந்தியின் கோரிக்கைகளை ஒத்துக் கொள்ளுமாறு அதனைக் கட்டாயப்படுத்துவதே என்று எனக்குத் தோன்றுகிறது. சிறுபான்மை யினர் பிரச்னை பெரிதாக எழுந்த காலத்திலிருந்து, அரிஜன வகுப்பினரை அசட்டை செய்வதும் அவர்களைக் கண்டு கொள்ளாமல் இருப்பதுமே தனது அரசியல் வாழ்வின் முக்கிய நோக்கமாக காந்தி கொண்டுள்ளார். இந்த விஷயத்தில் காந்தியின் தந்திரங்களால் எனக்கு சில கசப்பான அனுபவங்கள் ஏற்பட்டுள்ளன."

வட்டமேஜை மாநாட்டில் தன்னை காந்தி தனிமைப்படுத்த முயன்றதாகத் தனக்குக் கிடைக்கக் கூடிய ஆதரவைத் தடுத்து விடவும் காந்தி முயன்றார் என்று அம்பேத்கர் சொன்னார். ஒவ்வொரு முறையும் காந்தி தோற்றார். ஆனால் இறுதியில் அவர் ஒரு ஆயுதத்தைப் பயன்படுத்தினார். "எந்த நேர்மையான மனிதனும் இதைப் பயன்படுத்த மாட்டார் என்று நான் வருத்தத்துடன் சொல்கிறேன். அவர் முஸ்லீம்களிடம் சென்று, ஜின்னாவின் 14 கோரிக்கைகளையும் தாம் ஏற்றுக் கொள்ளவதாயும், இதற்கு மாறாக முஸ்லீம்கள், கீழ்த்தர நாய்களான தீண்டத்தகாதவர்களை ஆதரிக்கக் கூடாது என்றும் சொன்னார்"

"வட்ட மேஜை மாநாட்டில் காந்திக்கும் ஜின்னாவுக்கும் இடையில் ஏற்பட்ட ஒரு ஒப்பந்தத்தின் நகல் என்னிடம் உள்ளது" என்றார் டாக்டர் அம்பேத்கர். "அதிருஷ்டவசமாக வெட்க உணர்ச்சி சிறிது பெற்றிருந்த முஸ்லீம்கள் காந்தியை ஆதரிக்கவில்லை."

எனினும் அம்பேத்கரின் பேச்சில் வேறு சில அம்சங்களும் இருந்தன. இதனை "டைம்ஸ் ஆப் இந்தியா" பதிவு செய்துள்ளது. அந்த அம்சங்கள் கீழே தரப்பட்டுள்ளன- ஆசிரியர்.

உண்மையான தேசிய அரசு என்பது இந்துக்கள், முஸ்லீம்கள், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஆகிய முத்தரப்பும் பங்கு கொள்வதுதான் என்று பிரிட்டிஷ் அரசுக்கு அவர் தெளிவுபடுத்த விரும்பினார். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இந்துக்களின் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல. அவர்கள் தனி தேசத்தினர். தமது நோக்கங்களை எட்டுவதற்காக கிளர்ச்சி செய்யவும் போராடவும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தயாராக இருக்கின்றனர்.

ஏராளமான இடையூறுகள் அவர்களது பாதையில் இருக்கின்றன என்று டாக்டர் அம்பேத்கர் எச்சரித்தார். முஸ்லீம்கள் தமக்கு ஆட்சியதிகாரத்தில் பங்கு கோருவதை காந்தியும் இந்துக்களும் ஒத்துக் கொள்கிற போது, இத்தகைய கோரிக்கையை தாழ்த்தப்பட்ட வகுப்பினர் எழுப்பும் போது அதனை ஒத்துக் கொள்ள மறுக்கிறார்கள்.

இந்திய சுதந்திரத்தை மற்ற வகுப்பினரைப் போலவே தாழ்த்தப் பட்ட வகுப்பினரும் நேசிக்கிறார்கள், ஆனால், நாட்டிற்கு விடுதலை

கிடைக்கும் போதே தமது வகுப்பினருக்கும் விடுதலை கிடைக்க வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள்.

ஹைதராபாத் மாநில அரிஜன வகுப்பினர் சம்மேளனம் டாக்டர் அம்பேத்கருக்கு அளித்த வரவேற்புரையில், காந்தி - ஜின்னா பேச்சுவார்த்தைகள் பற்றிக் குறிப்பிட்டு, வெளிப்படையாகவோ, ரகசியமாகவோ செய்து கொள்ளப்படும் எந்த ஒப்பந்தமும், ஏற்பாடும் தங்களின் மரியாதைக்குரிய தலைவரான டாக்டர் அம்பேத்கரின் சம்மதத்துடன் ஏற்படவில்லை என்றால் அது தாழ்த்தப்பட்ட வகுப்பினரைக் கட்டுப்படுத்தாது என்று தெரிவிக்கப்பட்டது.[1]

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா, செப்டம்பர் 22, 1944.

# (91)

# தேசியவாதத்துக்கு நான் எதிரியல்ல. ஆனால் . . .

இந்திய அரசின் தொழில்துறை உறுப்பினரான டாக்டர் அம்பேத்கருக்கு மதராஸ் நகரசபை, 1944 ஆம் ஆண்டு செப்டம்பர் 24ஆம் நாள் வரவேற்பளிக்கத் தீர்மானித்தது. ரிப்பன் மாளிகையில் இதற்கு ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது.

பிரதான விருந்தினரை மேயர், கமிஷனர், உறுப்பினர்கள் வரவேற்றனர், பெரிய கூட்டம் கூடியிருந்தது. பிரதான கட்சியான காங்கிரஸ் கட்சியின் உறுப்பினர்கள் வராமலிருந்தது நன்கு தெரிந்தது.

நகர மேயர் டாக்டர் சையது நிஜமத்துல்லா வாசித்தளித்த வரவேற்புரை அழகான ஒரு வெள்ளிப் பேழையில் வைத்து அளிக்கப்பட்டது. டாக்டர் அம்பேத்கருக்கு மாலை அணிவித்து அங்கிருந்த கவுன்சிலர்களுக்கு அவரை அறிமுகப்படுத்தினர்.

வரவேற்புக்கு பதிலளித்துப் பேசிய டாக்டர் அம்பேத்கர் சொன்னார்: இந்த நாட்டில் ஆட்சியதிகாரத்தில் இருப்பவர்கள் பிராமண சமூகத்தினர் 1937ல் நடந்த தேர்தல்களில் ஏழு மாகாணங் களில் பிராமண பிரதம மந்திரிகள் ஆட்சிக்கு வந்துள்ளனர். இந்த அரசாங்கங்களில் பாதியளவு மந்திரிகளும் பிராமணர்களாகவே உள்ளனர்.

ஒரு தேசிய அரசாங்கம் அமைக்கப்பட்டு, அது ஆட்சி செய்யும் வகுப்பாரின் கைகளுக்கே போய்ச் சேர்ந்தால், தற்போது வெகுவாக விமர்சனத்துக்கு உள்ளாகியிருக்கும் இந்திய அரசாங்கத்தை விட சிறப்பாகச் செயலாற்றும் என்று நீங்கள் உண்மையாவே நம்புகிறீர்களா?

உங்கள் நகரின் சார்பில் எனக்கு வரவேற்புப் பத்திரம் அளித்தமைக்கு நான் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். மதராஸ் நகரத்தில் நான் வசிக்கவில்லை, எனவே இந்நகரின் பொது வாழ்வில்

எனது பங்களிப்பு ஏதுமில்லை, தங்களிடம் நான் அன்பைக் கோர முடியாது. எனினும் எனக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்து அளித்துள்ளீர்கள். எனது பங்களிப்பு எதுவுமில்லாமல் எனக்கு அளிக்கப்பட்ட இந்த வரவேற்புக்காக ஆழ்ந்த நன்றி பாராட்டுகிறேன். இந்தப் பாராட்டுப் பத்திரம் நகரசபையில் ஏகமனதாக நிறைவேற வில்லை என்றும், சில எதிர்ப்புகள் இருந்ததாகவும் (சிரிப்பு) நான் பத்திரிகைகளில் படித்தேன் என்பதை ஒரு சர்ச்சையை எழுப்புவதற் காகவோ, ஒரு விமர்சனமாகவோ அன்றி, குறிப்பிட விரும்புகிறேன். இது ஏகமனதாக நிறைவேறவில்லை என்பதற்காக அதிகம் மகிழ்ச்சி யடைகிறேன் என்று சொல்லவே இதனை நான் குறிப்பிட்டேன். ஏகமனதாகச் செய்யப்படுகிற காரியங்கள் பலவும் ஒரு சடங்குக்காக செய்யப்படுவதாகவோ, நாகரிகத்தின் வழி சார்ந்த பொய்மை யாகவோ விளங்குகின்றன. இதனை நாம் ஒவ்வொரு நாளும் ஒரு அர்த்தமும் இல்லாமல் செய்து வருகிறோம் (சிரிப்பு), எனினும் நகர சபையின் ஒரு பிரிவினர் கடமைப் பற்றுடன் இருந்து இந்த வரவேற்புப் பத்திரத்தை எனக்கு அளித்துள்ளனர் என்பதை இது காட்டுகிறது.

எனது பல்கலைக்கழகப்பணி, ஆசிரியப்பணி, வழக்கறிஞ ராகவும், பம்பாய் சட்டமேலவை உறுப்பினராகவும் நான் ஆற்றிய பணிகளையும் நீங்கள் புகழ்ந்து குறிப்பிட்டது சற்றே மிகைப்படுத்தப் பட்டது. உங்கள் புகழ் மொழிகளுக்கு எல்லாம் நான் ஏற்புடையவன் என்று கருதுமளவுக்கு கர்வம் கொள்பவன் அல்ல நான் என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். நீங்கள் பயன்படுத்திய புகழ்ச்சி மொழிகள், நான் நீண்டகாலமாக எந்தக் குறிக்கோளுக்காகப் போராடி வருகிறேனோ அதற்குத் தனிப்பட்ட முறையில் நீங்கள் பாராட்டுத் தெரிவிக்கவில்லை என்றும் எனது குறிக்கோளுக்குத் தாங்கள் பாராட்டளிக்கிறீர்கள் என்றும் கருதுகிறேன்.

சேரி ஒழிப்பு, தொழிலாளர் குழந்தைகளுக்கு உணவு வழங்குதல் போன்ற, மதராஸ் கார்பரேஷன் செய்துள்ள பணிகள் பற்றிக் குறிப்பிடப்பட்டது. இந்திய அரசாங்கம் இந்த விஷயங்கள் பற்றி என்ன செய்துள்ளது என்பது பற்றி நான் பட்டியலிடுவது இங்கு பொருத்தமாக இருக்காது. எனினும் இந்திய அரசாங்கம் பற்றி அது ஒரு மெதுவான இயந்திரம் எனவே அது மெல்ல மெல்லத்தான்

அரைக்கும் என்று அவ்வப்போது விமர்சிப்பது சரியல்ல என்று நான் எடுத்துக் காட்ட வேண்டும். ஒவ்வொரு அரசாங்கமும் செய்ய வேண்டிய சில முக்கியமான சீர்திருத்தங்களை, வாய்ப்புக் கிடைத்த வுடன் நிறைவேற்றுகிற ஒரு சிறப்பான அரசாக இந்திய அரசாங்கம் கடந்த சில ஆண்டுகளாக விளங்கவில்லைதான். எனினும் கடந்த சில ஆண்டுகளில் உழைக்கும் மக்களுக்காக இந்திய அரசாங்கம் செய்துள்ள பெரும்பணி பற்றி நான் குறிப்பிட விரும்புகிறேன். தொழில் திறன் ஏதுமற்றிருந்த 68,000 பேருக்கு தொழில் நுட்பம் பயிற்சியளித்துள்ள திட்டம் பற்றி நான் குறிப்பிட விரும்புகிறேன்.

முந்நூறு முதல் நானூறு தொழிற்பயிற்சி மையங்கள் இந்தியா முழுதும் உள்ளன. நாம் நிறுவியுள்ள இந்த தொழிற்பயிற்சி மையங்களை போர் முடிந்தவுடன் மூடிவிடக் கூடாது என்பது எங்கள் அவா. இந்த மையங்கள் நிரந்தரமான கல்விமையங்களாகத் திகழ்ந்து, பல்கலைக் கழகங்களில் சேர முடியாத உழைக்கும் மக்களுக்கு வாய்ப்பு மையங்களாக விளங்கி, அவர்கள் சிறந்த தொழிற் திறன் பெற்று அதன் மூலம் சம்பாதிக்கும் திறமையை அவர்கள் பெருக்கிக் கொள்ள இவை வழி வகுக்க வேண்டும். (கரவொலி) போர்க்காலத்தில் எத்தனையோ சட்டங்களை அரசாங்கம் இயற்றியுள்ளது. உதாரணத்திற்கு, தொழில் தகராறுகளை நடுவர் மன்றத்தின் தீர்ப்புக்கு கட்டாயம் விட வேண்டும் என்ற சட்டத்தைச் சொல்லாம். பணியாளர்களின் வேலை நிலைமைகளில் இருக்க வேண்டிய விதி முறைகளை நெறிப்படுத்த அரசாங்கத்துக்கு இதுவரை அதிகாரம் இருக்கவில்லை. தனிநபர் ஒருவர் தனியார் காண்டிராக்டராக முதலாளி, தொழிலாளிக்கு இடையே செய்து கொள்கிற ஒப்பந்தமே பணிக்கான ஊதியத்தை நிர்ணயித்து வந்தது. இன்றைக்கோ, பணிக்கால நிபந்தனைகளோ, விதிமுறைகளோ இந்திய அரசாங்கத்துக்கு திருப்தியளிக்கவில்லை என்றால், தான் சரியானது என்று நினைக்கிற நிபந்தனைகளையும் விதிமுறைகளையும் அரசு தினிக்க முடியும். இந்தச் சட்டம் போரின் விளைவாக ஏற்பட்டதே ஆனாலும், போருடன் இது முடிந்து விடாது, நமது சட்ட அமைப்பின் ஒரு அங்கமாக அது எப்போதும் இருந்து வரும் (கரவொலி). நாம் இதுவரை செய்துள்ள காரியங்கள் மிகவும் குறைவானவையே என்று நாங்கள் உணர்ந்துள்ளோம். சட்ட

மியற்றும் விஷயத்தில், வேண்டியபடி செய்யும் நிலையில் இந்திய அரசு இல்லை என்பதை பொது மக்கள் உணர்ந்து கொள்ள வேண்டும்.

முதலாவதாக, வரையப்பட்டுள்ள தொழிலாளர் நலச் சட்டங்களில் பெரும் பகுதி மாகாணங்களின் அதிகார எல்லைக்குள் வருகிறது. மாகாணங்கள்தான் தொழிலாளர் நலச் சட்டங்களை இயற்றுகின்றன. இவற்றுக்கு ஒத்திசைவான சட்டங்களைத்தான் இந்திய அரசு இயற்ற முடியும். ஒத்திசைவான தொழிலாளர் நலச் சட்டம் இயற்றும் அதிகாரம் இந்திய அரசுக்கு இருந்த போதிலும், இந்தச் சட்டம் மாகாண அதிகாரத்தினால் உண்டானதாக இருந்தாலும், அல்லது ஒத்திசைவான அதிகார வரம்பில் மத்திய அரசினால் இயற்றப்பட்டதாக இருந்தாலும், தொழிலாளர் நலச் சட்டங்களைஅமல்படுத்தும் அதிகாரம் அனைத்தும் மாகாண அரசாங்கத்தின் கைகளிலேயே உள்ளது என்று இந்திய அரசின் சட்டப்பிரிவு ஒன்று கூறுகிறது. இதன் விளைவு என்னவென்றால், சட்டமியற்றும் ஒத்திசைவான அதிகாரத்தைக் கொண்டு ஒரு சட்டம் கொண்டு வருவதற்கு இந்திய அரசு விரும்பினால் அதற்கு முன்னால் மாகாண அரசாங்கங்களை கலந்தோசிக்க வேண்டும். எப்படியும் ஒரு சட்டம் இயற்றப்பட்டால் அதனை மாகாண அரசாங்கம் தான் அமல் படுத்த வேண்டும், எனவே மாகாண அரசாங்கத்தின் முன் அனுமதி இல்லாமல் ஒரு சட்டத்தை இயற்றுவதால் ஒரு பயனும் இல்லை என்று இந்திய அரசு கருதுகிறது. இவையெல்லாம் எமக்குள்ள கஷ்டங்கள். மக்கள் எதிர்ப்பார்க்கிற அளவுக்கு சட்டமியற்றும் வேகம் நம்மிடம் இல்லை. என்றாலும், அரசாங்கம் இதயமற்றதாக இருக்கவில்லை என்று நான் உறுதி கூறுகிறேன். தொழிலாளர் விவகாரங்களை மறுசீரமைப்பது பற்றி அது தீவிரமாகச் சிந்தித்து வருகிறது. (கரவொலி)

இந்திய அரசாங்கத்தை பலரும் குறை சொல்லுகிறார்கள், ஆனால் இதனால் ஒரு பயனுமில்லை என்பது என் கருத்து. இந்திய அரசாங்கம் அதிகமாக ஏதும் செய்யவில்லை என்று சொல்லலாம். ஆனால் அது ஒரு விஷயமே அல்ல. நிகழ்காலம் பற்றி நாம் கவலைப்படக் கூடாது என்று நான் நினைக்கிறேன். புதிய அரசாங்கம் ஏதும் செய்திருக்கிறதா, இனிமேல் செய்யுமா என்பதைவிட தேசிய அரசாங்கம் என்று நாம் கூறுகிறோமே, அது மேலும் சிறப்பாகச் செயல்படும் என்று நான் நம்புகிறேன்.

நாம் அனைவரும் நினைப்பதை விட மிகவும் முக்கியமான பிரச்சினை இது என்று நான் தாழ்மையுடன் கூற விரும்புகிறேன், ஒரு விவாதத்திற்காக, தற்போதைய இந்திய அரசாங்கம் ஒரு காபந்து அரசாங்கம்தான் என்று நான் ஏற்றுக் கொள்கிறேன். புதிய அரசாங்கம் உதயமாவதை நாம் ஆவலுடன் எதிர்ப்பார்க்கிறோம். ஆனால், மிக முக்கியமான கேள்வி என்னவென்றால் இந்திய தேசிய அரசு மேலும் சிறப்பாகச் செயல்படுமா? இந்தக் கேள்விதான் எனக்குக் கவலையளிக்கிறது. இதில் ஓரளவுக்கு எனது ஐயப் பாட்டையும் நான் வெளிப்படுத்துகிறேன். நமக்கு அதிகாரம் வந்துவிட்டால், வயதானோர்க்கு வாக்குரிமை கிடைத்துவிட்டால் நாம் எல்லாக் கேடுகளையும் ஒழித்து விடுவோம், என்று நாம் சொல்லிக் கொண்டிருக்கிறோம். இதில் எனக்கு பெருத்த சந்தேகம் உண்டு.

ஐரோப்பிய அரசாங்கம் பற்றிய வரலாறை நான் போதுமான அளவுக்குப் படித்துள்ளேன். வயது வந்தோர் வாக்குரிமை அடிப்படையில் நாடாளுமன்ற அரசாங்கம் ஒன்று தோன்றிவிட்டால் மனிதனைப் பீடித்துள்ள அனைத்துக் கேடுகளும் மறைந்துவிடும் என்று அவ்வப்போது சொல்லப்படுவதை ஒரு மாயை என்று நான் கருதுகிறேன், இத்தகைய கருத்துக்கு எந்தவிதமான அடிப்படையையோ ஆதரத்தை வரலாறு வழங்கவில்லை. நாம் ஏமாற்றம் அடைந்து பொய்யான கேள்விகளை எழுப்பிக் கொண்டிருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது.

வயது வந்தோர் வாக்குரிமை நமக்கு இருக்கிறதோ இல்லையோ, மக்கள் தேர்வு செய்த அரசாங்கம் இருக்கிறதோ அல்லது வேறு வகைப்பட்ட அரசாங்கம் அமைந்துள்ளதோ, ஒவ்வொரு சமூகத் திலும் ஒவ்வொரு நாட்டிலும் ஆளும் வர்க்கம் ஆளப்படுகிற வர்க்கம் என்ற இரண்டு வர்க்கங்கள் எப்போதும் இருந்து வந்துள்ளன. இது மேலே தெரிகிறதோ அல்லது திரைமறைவாக இருக்கிறதோ அது ஒரு பொருட்டல்ல. வயது வந்தோர் வாக்குரிமை மூலமோ அல்லது வேறு வகை தேர்தலோ நடந்தால் என்ன நேர்கிறது? ஆள்வதற்கு ஒரு வர்க்கம் தேர்ந்தெடுக்கப்படுகிறது. ஆளப்படுகிற வர்க்கத்திற்கு வாய்ப்பே கிட்டுவதில்லை. நான் பொருத்தமின்றிப் பேசுவது போலத் தோன்றுகிறதா? நான் அவ்வாறு நினைக்கவில்லை. நான் சொல்வதற்கு அடிப்படை உண்டு.

1937ஆம் ஆண்டு நடந்த தேர்தலை எடுத்துக் கொள்வோம். பரவலான வாக்குரிமை இருந்தது, தேர்தல் முடிவுகள் வந்தன, ஓட்டு விபரம் தெரிந்தது. ஏழு காங்கிரஸ் மாநிலங்களில் நடந்தது என்ன? நான் அதைப் பற்றி பேச விரும்பவில்லைதான். நான் அன்றைக்கு சொன்னது இன்றைக்கு உண்மையானது. அதாவது நீங்கள் என்ன தான் செய்தாலும், இந்த நாட்டில் பிராமண வகுப்பினர்தான் ஆள்கிற வகுப்பாக இருக்கிறார்கள் (சிரிப்பு). அது இன்று நிதர்சனம் ஆனது. வேறொன்றும் நடக்கவில்லை.

ஏழு மாகாணங்களில் பிராமண பிரதமர்கள் ஆட்சி செய்கின்றனர். இங்குள்ள அமைச்சரவையில் பாதிப் பேர் பிராமண அமைச்சர்கள். இதனை ஒரு குறைபாடாக நான் விமர்சனம் செய்ய வில்லை. உண்மைகளை எடுத்துச் சொல்கிறேன். ஏதாவது ஒரு விஷயத்தை இந்த தேர்தல்கள் நிரூபித்துள்ளன என்று சொன்னால், இந்த நாட்டின் பிரதான பகுதியாக ஒரு வகுப்பினர் மட்டும் ஆளும் வர்க்கமாக இருக்கிறார்கள் என்பதே அது. இது ஆளும் வர்க்கமாக மாறி விட்டது. ஒவ்வொரு நாடும் சுய ஆட்சிக்குத் தகுதி உள்ளதா இல்லையா என்ற கேள்வியை நாம் இப்போது எழுப்ப வேண்டாம். ஆனால் அந்த நாட்டின் ஆட்சியுரிமையை பெற்றுக் கொள்ளும் அளவுக்கு அந்த ஆளும் வகுப்பாருக்கு தகுதி இருக்கிறதா என்றுதான் நாம் கேட்க வேண்டும். ஆட்சி செய்யும் வர்க்கத்தின் பொறுப்புத் தன்மையினைக் கொண்டே ஆள்வதற்கான உரிமை முடிவு செய்யப்பட வேண்டு என்பதை நாம் மறந்து விடலாகாது.

ஆளும் வர்க்கம் ஆட்சிக்கு வருவதனால், அந்த 'ஆளும் வர்க்கத்தின் கண்ணோட்டம் என்ன, அதன் தத்துவம் என்ன, அது எதை நம்புகிறது என்று நாம் கேட்க வேண்டும். ஆளும் வர்க்கம் மனிதர்களை பல மட்டங்களாகப் பிரித்து, ஒன்றின் மீது மற்றொன்றை வைத்து, சமத்துவத்தில் நம்பிக்கை இன்றி, எல்லா மனிதர்களும் மனிதர்கள் அல்ல, சிலரைத் தொடவும் கூடாது, சில வகுப்பார் மட்டும் கல்வி பெற, சொத்துரிமை பெற தகுதி உள்ளவர்கள். மற்ற வகுப்பாருக்கு இத்தகுதி இல்லை, தகுதியற்ற இவர்கள் அடிமைகளாகப் பிறந்தவர்கள் அடிமைகளாகவே அவர்கள் சாக வேண்டும் என்று நம்பினால் நான் கேட்கிற கேள்வி இதுதான். ஒரு தேசிய அரசு அமைத்து, அந்த அரசு இத்தகைய ஆளும் வர்க்கத்தின் கைகளுக்குள் போனால்; தற்போது பதவியில் உள்ள அரசை விட தேசிய அரசு சிறப்பாகச் செயல்படுமா?

தேசிய அரசுக்கு நான் எதிரி அல்ல. சுயராஜ்யத்துக்கு நான் எதிரி அல்ல, சுதந்திரத்துக்கு நான் எதிரி அல்ல, எனக்கும் சுதந்திரம் கிடைக்கும், கல்வியும் நலவாழ்வும் கிட்டும், அதாவது தேசத்துக்கு கொடுக்கப்பட்ட உறுதிமொழிகள் எனக்கும் கிட்டும் எனக்கும் வாக்களிக்கப்பட்டால், நானும் சுதந்திரத்துக்காகவும், தேசியவாதத்துக் காகவும், விடுதலைக்காகவும் போராடத் தயார் (கரவொலி). நெடிய பேச்சுக்களும் பெரிய தத்துவங்களும் மற்ற காரியங்களுடன் சேர்ந்து வரவில்லை என்றால், "ஒரெட்டு நடனமாக" இது அமையுமானால் ஆளும் வர்க்கம் மட்டும் அனுபவிக்கும் என்றால், அரசியல் அதிகாரம் ஆளும் வர்க்கத்தை பலப்படுத்த மட்டும் பயன்படும் என்றால், மற்ற வகுப்பாரின் உரிமைகள் நசுக்கப்படும் என்றால், தற்போதைய அரசை இப்போது விமர்சிப்பது போல விமர்சிக்கவே வேண்டாம் (பலத்த கரவொலி)

---

# (92)

## ஒற்றுமை மிகவும் முக்கியம்

*1944 ஆம் ஆண்டு செப்டம்பர் 23ஆம் நாள் மதராஸ் கன்னிமேரா ஹோட்டலில், சண்டே அப்சர்வர் ஆசிரியரான திரு. பி. பாலசுப்பிரமணியம் அளித்த மதிய விருந்தின் போது டாக்டர் அம்பேத்கர் உரை நிகழ்த்தினார்.*

*டாக்டர் அம்பேத்கர் சொன்னார்,*

*நான் ஆய்வு செய்த அளவில், பிராமணர் அல்லாதார் கட்சி ஒன்று தோன்றியிருப்பது இந்திய வரலாற்றில் ஒரு முக்கிய நிகழ்ச்சி ஆகும். பிராமணர் அல்லாதோர் கட்சியின் அடிப்படைக் கோட்பாடு, அந்தச் சொல் குறிப்பிடுவது போல ஒரு வகுப்புவாதத் தன்மை கொண்டதல்ல. பிராமணர் அல்லாதார் கட்சியை நடத்துபவர்கள் யார் என்பது முக்கியம் அல்ல. பிராமணர்களுக்கும் தீண்டத் தகாதவர் களுக்கும் இடைப்பட்ட ஒரு வகுப்பார் இதனை வழி நடத்துகின்றனர். ஜனநாயக வழிபட்டதாக அந்தக் கட்சி செயல்படவில்லை என்றால் அதனால் ஒரு பயனும் இல்லை. எனவே, ஜனநாயகத்தில் நம்பிக்கை கொண்ட அனைவரும் இக்கட்சியின் வளர்ச்சியை கவலையுடனும் அக்கறையுடனும் கவனித்து வருகின்றனர். ஒரு பிராமணரல்லாதார் கட்சியின் தோற்றம் நாட்டின் வரலாற்றில் ஒரு மைல்கல் ஆகும். அக்கட்சியின் வீழ்ச்சியும் வேதனையுடன் காண வேண்டிய ஒரு நிகழ்ச்சியே. 1937 தேர்தல்களில் ஏன் அக்கட்சி படுதோல்வி அடைந்தது என்பதை அக்கட்சித் தலைவர்கள் தமக்குத் தாமே கேட்டுக் கொள்ள வேண்டும். தேர்தலுக்கு முன்னால் 24 ஆண்டு காலம் மதராசில் பிராமணர் அல்லாதார் கட்சியின் ஆளுமை இருந்து வந்தது.*

*நீண்ட காலம் அதிகாரத்தில் இருந்த அக்கட்சி அட்டைவீடு போலச் சரிந்து போனது எதனால்? பிராமணர் அல்லாதார் மத்தியிலேயே இக்கட்சியின் செல்வாக்கு கெட்டது எதனால்? இந்த வீழ்ச்சிக்கு இரண்டு காரணங்கள் உள்ளன என்று நான் கருதுகிறேன்.*

முதலாவதாக, பிராமணர் பிரிவுக்கும் இவர்களுக்கும் இடையில் உள்ள வேறுபாடு என்ன என்பதை இவர்கள் உணரவில்லை பிராமணர்களுக்கு எதிராக தீவிரமாக அவர்கள் பிரச்சாரம் செய்த போதும், இவர்களுக்கு இடையிலுள்ள வேறுபாடுகள் கொள்கை வழிப்பட்டவை என்று இவர்கள் கூற முடியுமா? பிராமணர் தன்மை அவர்களிடமே எவ்வளவு இருந்தது? அவர்கள் 'நவாப்'களாக இருந்தார்கள். இரண்டாம் தர பிராமணர்களாக தங்களை எண்ணிக் கொண்டார்கள். பிராமணியத்தை விட்டொழிப்பதற்கு பதிலாக, எட்டத் தகுந்த இலக்காக கருதி அதன் ஆத்மாவை இவர்கள் இறுகப் பற்றியிருந்தார்கள். பிராமணர்களுக்கு எதிரான அவர்களது கோபம் எல்லாம் தங்களுக்கு அவர்கள் இரண்டாந்தரப் பட்டம் தருகிறார்கள் என்பதே.

ஒரு கட்சியைச் சேர்ந்தவர்களை, இன்னொரு கட்சியை எதிர்க்கச் சொல்லும் போது இவ்விரு கட்சிகளுக்கிடையே உள்ள கொள்கை ரீதியான வேறுபாடுகள் என்ன என்று அவர்கள் தெளிவாகத் தெரிந்து கொள்ளவில்லை என்றால் அந்தக்கட்சி எப்படி வேரூன்றும்? எனவே பிராமணிய வகுப்பினருக்கும் பிராமணரல்லா தோருக்கும் இடையிலுள்ள கொள்கை வேற்றுமைகளை ஒழுங்குற எடுத்துக் கூறாததே அந்தக் கட்சியின் வீழ்ச்சிக்குக் காரணம். கட்சியின் வீழ்ச்சிக்கு இரண்டாவது காரணம் அதனுடைய வேலைத் திட்டம் மிகக் குறுகலானதாக இருந்தது ஆகும். இக்கட்சியின் எதிரிகள் "வேலை தேடிகள்" என்று இக்கட்சியை வர்ணித்தனர். இந்தச் சொல்லைத்தான் 'ஹிந்து' பத்திரிகை அடிக்கடி பயன் படுத்தியது. இந்தக் குற்றச்சாட்டை நான் பெரிதாக எடுத்துக் கொள்ள வில்லை. ஏனென்றால் அடுத்த கட்சியினரும் இதே வகைப்பட்டவர் தானே. பிராமணரல்லாதார் கட்சியின் வேலைத்திட்டத்திலுள்ள ஒரு குறை என்னவென்றால், அவர்கள் தமது இளைஞர்களுக்கு ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையில் வேலை வாய்ப்புகள் கிட்ட வேண்டும் என்று கூறுவதே. இது மிகவும் நியாயமானதுதான். ஆனால், பிராமணரல்லாத இளைஞர்கள் - இவர்களுக்கு வேலை கிடைப்ப தற்காக கட்சி 20 வருட காலம் போராடியிருக்கிறது - தமக்கு வேலையும் ஊதியமும் கிடைத்த பின்னர் தமது கட்சியை நினைத்துப் பார்த்தார்களா? கடந்த இருபது வருடங்களாக பதவியிலிருந்த கட்சியை, கிராமங்களில் வசிக்கும் 90 சதவீத மக்களை மறந்து

விட்டனர். இவர்கள் வசதி சிறிதுமற்ற வாழ்க்கை வாழ்ந்து கொண்டு கடன்காரர்களின் பிடியில் சிக்கி அல்லல் படுகின்றனர்.

இந்தக் காலகட்டத்தில் இயற்றப்பட்ட சட்டங்களை நான் பரிசீலித்தேன். நிலச்சீர்திருத்தம் என்ற ஒரேயொரு நடவடிக்கை தவிர, குத்தகைதாரர்கள் விவசாயிகள் பற்றி இவர்கள் ஒரு சிறிதும் கவலைப்படவில்லை. அதாவது "காங்கிரஸ் பேர் வழிகள் இவர்களது ஆடைகளையே திருடிச் சென்று விட்டனர்" என்று தான் இது காட்டுகிறது.

நடந்துள்ள சம்பவங்கள் என்னைப் பெரிதும் வருத்துகின்றன. ஒரு கட்சி மட்டும்தான் அவர்களைக் காப்பாற்றும் என்று மட்டும் நான் அழுத்திச் சொல்ல விரும்புகிறேன். ஒரு கட்சிக்கு நல்ல தலைவர் வேண்டும், ஒரு கட்சிக்கு நல்ல அமைப்பு வேண்டும், ஒரு கட்சிக்கு அரசியல் மேடை வேண்டும்.

தலைவர்களை நாம் நன்றாகவே விமர்சிக்கலாம். காங்கிரஸ் கட்சியை எடுத்துக் கொள்வோம். மகாத்மா காந்தியை மற்றெந்த நாடு தமது தலைவராக ஏற்றுக் கொண்டிருக்கும்? அவருக்கு தொலை நோக்கோ, விஷய ஞானமோ, ஆய்வுத் திறனோ இல்லை. தனது வாழ்க்கை முழுதும் பொது வாழ்வில் தோல்வியே கண்டவர் அவர். இந்தியா வெற்றியடைய இருந்த தருணங்களில் காந்தியால் எதுவும் நன்மை விளைந்ததாகக் கூற முடியாது. மூன்று வருடங்களுக்கு முன்பு ஜின்னா பாகிஸ்தான் பிரச்சினையை எழுப்பியபோது அதை ஒரு பாவம் என்று கூறி அதற்குச் செவி மடுக்க மறுத்தார். இறுதியில் பிரச்சினை பெரிதாக வளர்ந்தது. திரு காந்தி திகிலடைந்தார். இப்போது குட்டிக்கரணம் போட்டு அதனுடன் மல்லாடி வருகிறார். எனினும் அவர் இன்னும் தேச தலைவராக இருந்து வருகிறார். ஏனென்றால், தனது தலைவர்களை காங்கிரஸ் கட்சி கேள்வி கேட்பதில்லை.

ஜின்னாவை எடுத்துக் கொள்ளுங்கள். அவர் ஒரு எதேச்சாதிகாரத் தலைவர். முஸ்லீம் லீக் என்பது அவரின் தனிச் சொத்து. ஆனால் முஸ்லீம்கள் அவர் மீது நியாயமான நம்பிக்கை வைத்துள்ளனர்.

காந்தியின் மீது எத்தகையதொரு குற்றச்சாட்டு செய்யப் பட்டாலும் கட்சி அமைப்பை அது சீர்குலைக்கும் என்பதால் ஜனநாயத்துக்கு முரணான பல விஷயங்களை காங்கிரஸ் சகித்துக் கொள்கிறது. எனவே பிராமணரல்லாதோருக்கு நான் சொல்லிக் கொள்வதெல்லாம் "ஒற்றுமை என்பது மிகவும் முக்கியமானது. எனவே தாமதமின்றி பாடம் கற்றுக் கொள்ளுங்கள்" என்பதுதான்.

---

## (93)

# இந்திய தேசபக்தர்களை விட . . . நான் வெகு முன்னால் இருக்கிறேன்

*1944 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 24ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை மதராஸ் பார்க் டவுன் மெமோரியல் ஹாலில் ராவ் பகதூர் என். சிவராஜ் தலைமையில் தீண்டத் தகாதவர்களின் கூட்டம் நடந்தது. கூட்டத்துக்கு டாக்டர் அம்பேத்கர் வந்தபோது பெருத்த கரவொலி எழுந்தது.1. மதராஸ் ஆதி திராவிடர் தொழிலாளர் சங்கம் 2. தென்னிந்திய புத்தமத சங்கம் 3. பெங்களூர் சிவில், மிலிடரி நிலைய அரிஜன வகுப்பார் சம்மேளனம், 4. மதராஸ் அரிஜன வகுப்பு மாணவர் சங்கம் 5. ஆந்திர மாகாண அரிஜன வகுப்பார் நல்வாழ்வு சங்கம் ஆகியவையும் பிறவும் டாக்டர் அம்பேத்கரை கூட்டத்தில் வரவேற்றுப் பேசினர். இந்த சந்தர்ப்பத்தில், தானே வரைந்த ஒரு அழகான புத்தர் சித்திரத்தை ஒரு இளைஞர் டாக்டர் அம்பேத்கரிடம் வழங்கினார்.*

*தமக்களித்த வரவேற்புக்கு பதிலளித்து டாக்டர் அம்பேத்கர் பேசினார்:*

இந்த நகரின் மிகவும் பிரபலமான பிரமுகர் ரைட் ஆனரபிள் சீனிவாச சாஸ்திரி. இவர் என்னைப் பற்றி இகழ்ச்சியாக இரண்டு கருத்துக்கள் கூறியுள்ளதாக நான் கேள்விப்பட்டேன். அதைப் பற்றி முதலில் கூறி எனது பேச்சைத் தொடங்குகிறேன். பாகிஸ்தான் பற்றிய பிரச்சினையால் சாஸ்திரியின் மனம் பாதிக்கப்படாமலிருந்தபோது, காந்தியை இந்திய ஆன்மாவின் உருவகம் என்று நினைத்து, அவர் மட்டுமே சர்வதேச அமைப்புகளின் எந்தக் கூட்டத்திலும் இந்தியாவை முழுமையாகப் பிரதிநிதித்துவப்படுத்த முடியும் என்றும் கருதிக் கொண்டு, என்ன நடந்தாலும் நான் (அம்பேத்கர்) எந்தவொரு சர்வதேச மாநாட்டிலும் கலந்து கொள்ளாமல் பொது மக்கள் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று கூறியுள்ளார். இத்தகைய வார்த்தைகளை வயதான, மதிப்பிற்குரிய ஒரு அரசியல்வாதியிட மிருந்து கேட்பது எனக்கு சற்றே வியப்பாக இருந்தது. ரைட் ஆனரபிள் சாஸ்திரியின் பொது வாழ்க்கையைப் போல எனது பொதுப் பணி

அவ்வளவு விரிவானதல்ல என்று நான் ஒத்துக் கொண்டு, அவரது பணியின் சிறப்புக்கு எனது பணி ஈடாகுமா என்று நானே எனது மனதைக் கேட்டுக் கொண்டேன். குறுகிய காலத்தில் நான் செய்துள்ள பொதுப் பணிகளில், நான் மிகவும் அவமான கரமான செயல்களில் ஈடுபட்டேனா? அதன் மூலம் சர்வதேசக் கூட்டங்களில் நான் கலந்து கொண்டால் நாட்டிற்கு பெருத்த வெட்கம் உண்டாகி விடுமா? வசைச் சொற்கள் எதையும் கூற நான் விரும்பவில்லை. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் 'செல்ல நாய்' என்று அவரை நான் சொல்லியிருக்க முடியும்.

இத்தனை காலமும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மடியில் சாஸ்திரி உட்கார்ந்து கொண்டிருந்தார். எனவே இவர் இந்தியாவிலோ, வெளியிலோ, அவப்பெயரோ, பெரும் புகழோ பெற்றிருக்கிறார் என்றால் அதற்குப் பிரதானமான காரணம் பிரிட்டிஷ் அரசாங்கம் இவரை ஒரு "காட்சிப் பையனாக" மடியில் வைத்துக் கொண்டிருந்ததே ஆகும். வயிற்று வலியால் துடிக்கிற வயதான காகம் எழுப்பும் குரல் தான் சாஸ்திரியின் குரல் என்று நான் சொல்ல விரும்பவில்லை.

பெரும்பாலான காங்கிரஸ்காரர்கள் சொல்வதுதான் என்ன? நாட்டின் பொதுவான நலன்களுக்கு அரிஜன வகுப்பினர் பகையாக விளக்குகிறார்கள் என்று சொல்லப்படுகிறது. நமது நாட்டின் பெரிய மனிதர்களை காந்தி, ரைட் ஆனரபிள் சாஸ்திரி, தேஜ் பகதூர் சாப்ரு இன்னும் இது போன்ற, இந்திய அரசியலில் முன்னணியில் உள்ள தலைவர்களின் அருகில் தான் அமர்ந்து இருந்துள்ளேன். தேசிய வாதிகள் என்ன செய்வார்கள் என்று எதிர்பார்ப்பார்களோ அதை அவர்கள் செய்து கொண்டிருந்ததை நான் கவனித்து வந்துள்ளேன். வட்டமேசை மாநாட்டில் எந்தவொரு பொதுப் பிரச்சினை வந்த போதும் அங்கிருந்த பெரிய மனிதர்களை விட பலபடிகள் நான் முன்னணிப் பாத்திரம் வகித்தேன் என்பதை நம்பிக்கையுடன் ஏன் பெருமையுடன் கூட நான் கூறுவேன்.

## வட்ட மேசை மாநாட்டில் காந்தியின் செயல்கள்

இங்கு கூடியுள்ள பெரும்பாலோருக்கு வட்ட மேசை மாநாட்டில் காந்தி என்ன செய்தார் என்று தெரியாது. நாங்கள் அங்கு

செய்த பணிகள் பிரமாதமானவை என்று நீங்கள் நினைப்பீர்கள். அதுதான் உண்மைக் கதையா? காந்தி செய்தது என்ன? 1931ல் காந்தி வட்டமேசை மாநாட்டில் பங்கெடுத்துக் கொண்ட போது, இந்தியாவுக்குச் சுதந்திரம் கோர வேண்டும், சுதந்திரத்துக்குக் குறைவாக எதையும் இந்தியா ஏற்றுக் கொள்ளக் கூடாது என்று அவரிடம் கூறப்பட்டிருந்தது. இதை எந்த சூப்பர் இந்திய அரசியல்வாதியும் கேட்கத் தயாராக இருக்கவில்லை. அவர் செய்தது என்ன? வட்டமேசை மாநாட்டில் நான் (அம்பேத்கர்) ஒரு "கருங்காலி" யாக நடந்து கொண்டேன் என்று என்னை இகழ்ந்து பேசினார். உண்மையாக நடந்ததை நான் சொன்னால் நீங்கள் அது கேட்டு ஆச்சரியம் அடைவீர்கள். சுதந்திரத்தைத் தவிர வேறெதையும் கேட்கக் கூடாது என்று சொல்லியனுப்பட்ட இந்த வயதான அன்பார்ந்த சீமான் என்ன செய்தார்? வெளியுறவு மந்திரியான சர். சாமுவேல் ஹோரிடம், மாநில சுயாட்சி கொடுத்தால் இந்தக் கட்டத்தில் தான் திருப்தி அடைவதாக அவர் சொன்னார். இது அசாதாரணமான செயல். காங்கிரஸ் கட்சியினைச் சாராத நாங்கள் எடுத்த நிலை என்ன? 1931ல் டொமினியன் அந்தஸ்து பெற இந்தியா தயாராக உள்ளதோ, இல்லையோ, மத்திய அரசில் தமக்கும் ஒரு பங்கு வேண்டும் என்று எப்போதும் இந்திய மக்கள் கோருவார்கள் என்று நாங்கள் சொன்னோம்.

மாநில சுயாட்சி மட்டும் பெற்றுக் கொள்ள இந்திய மக்கள் திருப்தியடைய மாட்டார்கள், மத்திய அரசில் சில பொறுப்புக்கள் பெற வேண்டும் என்று அவர்கள் வற்புறுத்துவார்கள். வயதான சீமானோ (காந்தி) இதைவிட வலுத்த கோரிக்கை வைப்பார் என்று எதிர்ப்பார்க்கப்பட்டது. ஏனென்றால் சுதந்திரம் கோர வேண்டும் என்பதே அவருக்கு இடப்பட்ட கட்டளை.

விந்தையாக, துரதிருஷ்டமாக அதே நேரத்தில் இந்தியாவுக்கு ஒரு பேரிழப்பாக, 1931ல் நிலவுகின்ற சூழ்நிலைகளால், சைமன் கமிஷனின் சிபாரிசுகளை ஒத்துக் கொள்ளுமாறு தந்திரமாக அவர் சிக்க வைக்கப்பட்டார். பெரியோர்களே, அந்த நிலைமையைச் சமாளித்தது யார்? அப்போது வெளியுறவு அமைச்சராக இருந்த சர். சாமுவேல் ஹோரும் அதிகாரத்தில் இருந்த கன்சர்வேடிவ் கட்சியும் வட்டமேசை மாநாட்டை உடனடியாக முடித்து விட ஆர்வம் காட்டினர். ஒரு முக்கியமான விஷயம் என்னவென்றால்,

லிபரல் கட்சி, லேபர் கட்சி, கன்சர்வேடிவ் கட்சி ஆகிய மூன்று கட்சிகளையும் கொண்ட ஒரு முத்தரப்பு கமிஷனை அமைத்திருந்தனர்.

பார்லிமென்ட் சைமன் கமிஷன் தந்த சிபாரிசுகளை ஒத்துக் கொண்டதை ஒரு பெரிய கவுரவமாகக் கருதிய சர் சாமுவேல் ஹோரே, அந்த சிபாரிசுகளுக்கும் அப்பால் செல்லக் கூடாது என்று கருதினார். திரு. காந்தியின் அணுகுமுறை கடவுள் அளித்த வரம் போலாயிற்று. அப்போது சர். சாமுவேல் ஹோரே சொன்னார்: "இந்தியாவின் மிகப்பெரிய மனிதர் காந்தி அல்ல என்றால் அவரைவிடப் பெரிய மனிதர் யார்? சாப்ரு யார்? அம்பேத்கர் யார்? ஜின்னா யார்? திரு. காந்தி மாநில சுயாட்சிக்கு ஒத்துக் கொண்டால் நடவடிக்கைகளை இறுதி செய்து மாநாட்டை முடித்து விடலாம், சைமன் கமிஷன் சிபாரிசுகளின்படி பார்லிமென்ட் மசோதாவை நிறைவேற்றட்டும்" என்றார்.

இத்தகைய ஏற்பாட்டுக்கு ஆட்சேபம் தெரிவித்தவர்களில் நானும் ஒருவன். இது மாதிரியான ஏற்பாட்டை நாங்கள் ஏற்றுக் கொள்ள மாட்டோம், இதற்கு நாங்கள் உடந்தையாக இருக்க மாட்டோம் என்றோம். நாங்கள் செய்த இந்த பெரிய ஆர்ப்பாட்டத்தால் பிரிட்டிஷ் அமைச்சரவை ஒரு சிறு கமிட்டி அமைத்து, வட்டமேசை மாநாட்டின் உண்மையான பிரதிநிதித்துவத்தன்மை என்ன என்று கண்டறிய முடிவு செய்தது. கருத்துக்கள் சொல்ல அனைவரும் அழைக்கப்பட்டனர். அமைச்சரவைக் கமிட்டியின் முன் கருத்துக் கூற அழைக்கப்பட்ட பொறுமைசாலிகளில் நானும் ஒருவன். லார்ட் சான்சலர் கமிட்டித் தலைவராகவும் பிரதமரும் வெளியுறவு அமைச்சரும் மற்ற இரண்டு கமிட்டி உறுப்பினர்களும் இருந்தனர். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் கூட, நாடாளுமன்றம் வாக்குறுதியிலிருந்து பின்வாங்குவதை சகித்துக் கொள்ள மாட்டார்கள் என்று அமைச்சரவைக் கமிட்டியின் முன் சொன்னவர்களில் நானும் ஒருவன் என்பதில் நான் பெருமைப்படுகிறேன். நான் செய்தது அசட்டை செய்யத்தக்க ஒரு பணி என்று யாராவது சொல்ல முடியுமா?

மத்திய அரசில் பதவிப் பொறுப்புகள் கோருவதற்கு அரிஜன வகுப்பினர் தடையாக இருந்தார்கள் என்று சொல்ல முடியுமா? இன்னொரு சம்பவத்தையும் நான் சொல்ல விரும்புகிறேன். நமது நாட்டில் ஏராளமான சிறு ராஜ்யங்கள் இருக்கின்றன. சொல்லப்

போனால் நமது மக்கள் தொகையில் மூன்றில் ஒரு பகுதியினர் இந்திய மன்னர்களின் ஆட்சியின் கீழ் உள்ளனர். இங்கு சட்டம் என்ற ஒன்று இல்லை. இங்கு எல்லாமே தனியொருவன் அதிகாரத்தில், மன்னரின் விருப்பு வெறுப்புகளுக்கு ஏற்ப நடக்கின்றன. வட்டமேசை மாநாட்டின் ஒரு முடிவின்படி இந்த மன்னர் ராஜ்யங்கள் அனைத்தும் அகில இந்தியக் கூட்டமைப்பில் ஒரு அங்கமாகக் கொண்டுவரப்படும். இதில் ஒரு முக்கியப் பிரச்சினை என்னவென்றால் இந்த மன்னர் ராஜ்யங்களின் பிரதிநிதிகள் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவார்களா அல்லது இந்தப் பிரதிநிதிகள் மன்னர்களால் நியமிக்கப்படுவார்களா என்பதே. இந்த ஒரு பெரிய பிரச்சினையின் மீது நீண்ட சர்ச்சை பல நாட்கள் நடந்தது. இவ்வளவு முக்கியமான இந்தப் பிரச்சினையில் காந்தியின் அணுகுமுறை என்ன?

மன்னர்கள் மாநாட்டுக்குப் பிரதிநிதிகளை நியமிக்கட்டும் என்று காந்தி சொன்னார் என்பதை நீங்கள் அறிந்தால் ஆச்சர்யப் படுவீர்கள். இந்தப் பிரச்சினையில், வட்ட மேசை மாநாட்டில் நான் ஒருவனே தனியாக முதலிலிருந்து இறுதிவரை போராடினேன் (கரவொலி). ரைட் ஆனரபிள் சாஸ்திரி கூட - இந்தச் சீமானைப் பற்றி சில வேடிக்கைக் கதைகளை நான் சொல்ல முடியும் (குரல்கள் : நாங்கள் அவற்றைக் கேட்க விரும்புகிறோம்). நாங்கள் அனைவரும் சமஷ்டி ஆட்சிக்கு எதிர்ப்புத் தெரிவித்தோம். பிரிட்டிஷ் இந்திய அரசியலையும், இந்திய மாநில அரசியலையும் ஒன்றாய் போட்டுக் குழப்பக் கூடாது என்று நான் முதலிலிருந்து கடைசி வரை சொல்லி வந்தேன். பிரிட்டிஷ் இந்தியா இந்திய இந்தியாவிலிருந்து கடந்த 150 ஆண்டுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. நாம் அனைவரும் ஒரே பிணைப்பால் கட்டுள்ளோம். இருந்தாலும் பிரிட்டிஷ் இந்தியாவி லுள்ள நாம் வேறு பாதையில் பயணம் செய்துள்ளோம். இந்திய மாநிலங்கள் (மன்னராட்சிக்குட்பட்டவை) வேறு பாதையில் சென்றுள்ளன. நமக்குக் கிடைத்த வித்தியாசமான அரசியல் கல்வி அவர்களுக்குக் கிடைக்கவில்லை.

## மன்னராட்சிப் பகுதிகளின் பிரச்சினைகள்

நாம் வேறு விதமான ஒரு அரசியல் மரபு வழிவந்துள்ளோம். எனவே அரசியல் விடுதலைக்காக பிரிட்டிஷ் இந்தியா தனது பாதையில் செல்ல அனுமதிக்க வேண்டும் என்று நான்

வற்புறுத்துகிறேன். இந்திய மன்னர் ராஜ்யங்களை இத்துடன் இணைத்து சிக்கல் உண்டாக்கக் கூடாது. ரைட் ஆனரபிள் சீனிவாச சாஸ்திரி எங்கள் தோழர்களில் ஒருவர், ஒரு "சதிகாரர்", நாங்கள் மூவர்தான் இருந்தோம். சர் சிந்தாமணி, சீனிவாச சாஸ்திரி, நான், நாங்கள் தான் பிரிட்டிஷ் இந்தியாவின் இதயங்கள். ஒரு இளைஞனை விட அதிகம் மதிக்கத்தக்க பிரகாசமான மனிதரான சாஸ்திரியை எங்கள் சாம்பியன் ஆக்கினோம். பிளீனரி கூட்டத்தில் அவர் பேசுவதற்கு முதல் நாள் அவரை மதிய உணவு அருந்த அழைத்துச் சென்றோம். அவரது மன உளைச்சல் தீர்ந்து விட்டதா என்றறிவது எங்கள் நோக்கம். அவர் இன்னும் அப்படியே இருந்தார் என்று கண்டோம். ஜெர்மி தெருவிலிருந்து ஜேம்ஸ் மன்னர் அரண்மனைக்கு நாங்கள் சென்றோம். இங்குதான் 3 மணிக்கு சாஸ்திரி பேச வேண்டும். ஓ, நண்பர்களே! அவர் என்ன சொன்னார். அவர் இருக்கையிலிருந்து எழுந்து கூறினார். "எனது அன்புள்ள பிரதம மந்திரி அவர்களே, நான் ஒரு சாம்பியன்" என்றார். நானும் சிந்தாமணியும் பலமான இதயம் பெற்றிருந்தால் தப்பித்தோம், இல்லையேல் அப்போது செத்தே போயிருப்போம்.

கூட்டாட்சி அமைப்பை ஏற்றுக் கொள்வதாகச் சொன்னார். சாஸ்திரி என்னிடம் வந்து என்னை ஒரு தேசபக்தன் என்று கூறி அதே நேரத்தில் நான் திட்டங்களைப் பாழாக்கி விடுவதாகவும் சொன்னார். நான் பேசாமல் இருப்பதே நல்லது என்றும் என்னிடம் கூறினார்.

காந்தி ஒரு கடமைப் பற்றுள்ளவராக இருந்தால், மன்னராட்சி மாநிலங்களின் மேம்பாடு பற்றிய அக்கறை அவருக்கு இருந்தால், மன்னர்களின் தனிப்பட்ட ஆட்சியின் கொடுமைகளையும் அடக்கு முறைகளையும் ஒழித்துக்கட்டி அம்மக்களை விடுவிப்பதாக அவர் குரல் கொடுக்க வேண்டும். பிரதிநிதிகளை தேர்தல்களின் மூலம்தான் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று அவர்தான் முதலில் குரல் கொடுத்திருக்க வேண்டும். இதற்கு மாறாக, மன்னர்களே பிரதிநிதிகளை நியமிக்கலாம் என்று சொன்னார். நான் உங்களுக்கு ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். அரசியல் பற்றி காந்திக்கு ஒன்றும் தெரியாது (சிரிப்பு) அவரைக் குறை சொல்வதற்கோ, அவரைப் பற்றி ஒரு தீர்ப்பு சொல்லவோ, உங்களிடம் மலிவான கைத்தட்டல்கள் பெறவோ இதை நான் சொல்லவில்லை. ஆனால் இது உண்மை என்பதை நான் அறிவேன். நடந்ததை அப்படியே

உங்களிடம் சொல்லுகிறேன். முதல் வட்டமேசை மாநாட்டில் நான் கலந்து கொண்டேன். பல விஷயங்களும் மேடு பள்ளங்களும் எனக்குத் தெரியும் என்பதை காந்தி அறிய மாட்டார். பல்வேறு கட்சிகளும் எத்தகைய அணுகுமுறைகளைக் கையாள்கின்றன என்பது தெரியும். எனவே காந்தி வாயைத் திறப்பதற்கு முன்னால் அவர் என்ன பேசலாம் என்ன பேசக் கூடாது என்று அவரை எச்சரிக்க விரும்பினேன்.

இரண்டாவது வட்டமேசை மாநாட்டின் போது, சமஷ்டி அமைப்புக் கமிட்டியில் நானும் ஒரு உறுப்பினராக இருந்தேன். அரிஜன வகுப்பாரின் பிரதிநிதியாக நான் இருந்ததால், மாநாட்டிற்குத் தலைமை வகித்த சான்சலரின் அருகில் நான் அமர முடியாது என்பது தெளிவு (சிரிப்பு). வந்திருந்தோரின் வரிசைப்பட்டியலின்படி நான் ஏதோ ஒரு கடைக்கோடியில் இருந்தேன். முதல் நாள் காந்தி வந்த போது எங்கள் முன்னால் ஒரு விவாதத்துக்கான நிகழ்ச்சி நிரல் வைக்கப்பட்டிருந்தது. காந்தியின் அரசியல் பக்குவமின்மை பற்றித் தெரிந்திருந்த நான், முதல் வட்டமேசை மாநாட்டில் அவர் கலந்து கொள்ளவில்லை என்று தெரிந்திருந்த நான், விஷயங்களை வெளிப் படுத்தி, நிலைமைகள் என்ன என்று காந்தி புரிந்து கொள்வதற்காக பேசும் வாய்ப்பு முதலில் எனக்குக் கிடைக்க வேண்டும் என்று மிகவும் விரும்பினேன்.

தனக்கு சிறிதளவு காய்ச்சல் கண்டிருப்பதாக சான்லரிடம் சொல்லி தன்னை முதலில் பேச அனுமதிக்குமாறு கேட்டுக் கொண்டதாக டாக்டர் அம்பேத்கர் குறிப்பிட்டார். லார்ட் சான்சலர் இந்த கோரிக்கைக்கு எதிராக ஏதும் 'ஆட்சேபம் 'உண்டா எனறூ காந்தியிடம் கேட்டார். தனது பெருந்தன்மையைக் காட்ட வேண்டி 'இல்லை' என்று காந்தி பதிலளித்தார். நான் சுமார் ஒன்றறை மணி நேரம் பேசினேன். அந்த மாநாட்டில் நான் நிகழ்த்திய நீண்ட உரைகளில் இதுவும் ஒன்று. எனது பேச்சை முடித்துக் கொண்டு, பொய்ச் சாக்குச் சொல்லி விட்டு நான் மாநாட்டிலிருந்து வெளியேறினேன். லண்டனிலேயே, காந்தி என்ன பேசினார் என்று தெரிந்து கொள்வதற்காக, மாலை நேரத்துக்காகக் காத்துக் கொண்டிருந்த ஒரே நபர் நான்தான். சரியாக நடுநிசி நேரத்தில் மாநாட்டின் நடவடிக்கைகள் பற்றிய அறிக்கை எனக்குக் கிடைத்தது. தபால்காரரால் எனக்குத் தரப்பட்ட பாக்கெட்டைப் பிரித்துப் பார்த்த

நான் காந்தி பேச்சின் முதல் வாக்கியத்தைக் கண்டேன். "எனது உள்ளம் அம்பேத்கரிடம் உள்ளது, எனது தலை அவரிடம் இல்லை" நான் முன்வைத்த யோசனைகள் அனைத்துக்கும் அவர் மாற்றுக் கருத்துச் சொன்னார். எனக்கு மிகுந்த கோபம் உண்டாயிற்று. உண்மையிலேயே காய்ச்சலும் வந்துவிட்டது, காலையில் எனக்குக் காய்ச்சல் இருக்கவில்லை. (வெட்கம், வெட்கம் என்ற குரல்கள்)

அடுத்த நாள் நான் மாநாட்டுக்குப் போனேன். காந்தியும் மற்றவர்களும் அங்கிருந்தனர். மாநாட்டு நடவடிக்கைகள் தொடங்க இருந்தன. நான் இடை மறித்து காந்தியிடம் சில கேள்விகள் கேட்க அனுமதிக்குமாறு லார்ட் சான்சலரிடம் கேட்டுக் கொண்டேன். இதுதான் எனக்கும் காந்திக்கும் இடையே சச்சரவு தோன்றக் காரணமாயிற்று.

நான் காந்தியிடம் மூன்று கேள்விகள் கேட்டேன். முதல் கேள்வி இந்திய மன்னராட்சிப் பிரதேசங்களின் பிரதிநிதிகளை மன்னரே நியமிக்கலாம் என்று கூறுவதற்கு காங்கிரஸ் கட்சி அவருக்கு அனுமதி அளித்துள்ளதா? இந்த விஷயம் காங்கிரஸ் கட்சிக்குள் விவாதிக்கப் பட்டதா? காங்கிரஸ் இதுபற்றி ஏதும் தீர்மானம் நிறைவேற்றி யுள்ளதா? அதுபற்றி ஏதாவது செய்வதற்கு அவருக்கு அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறதா? என்பது, அடுத்த கேள்வி மறைமுகத் தேர்தல்கள் பற்றியது. மறைமுகத் தேர்தல்களை ஏற்றுக் கொள்ளலாம் என்பதில் கன்சர்வேடிவ் கட்சி தீவிரம் காட்டுகிறது. இதற்கு நாங்கள் அனைவரும் எதிர்ப்புத் தெரிவிக்கிறோம். மறைமுகத் தேர்தல் என்ற கொள்கை ஹோம் ரூல் மசோதாவில் அன்னிபெசன்டினால் தயாரித்து அளிக்கப்பட்டதா? இந்தக் காரணத்துக்காகவே காங்கிரஸ் அதை நிராகரித்ததா? இதெல்லாம் நடந்து வெகுகாலம் ஆகி விட்டதால் மூன்றாவது கேள்வி மறந்து போய் விட்டது. லார்ட் சான்சலர் காந்தியைப் பார்த்து என்ன பதில் அவர் தருகிறார் என்று கேட்டார். காந்தி பதில் சொல்ல மறுத்து விட்டார்.

கடந்த காலம் விலை பேசப்பட்டு விட்டது என்றால், இந்தியா கைவிடப்பட்டு விட்டது என்றால், அதற்குக் காரணம் நான் அல்ல, அரிஜன வகுப்பினர் அல்ல. அதற்கு காரணம் காந்தியும் சாஸ்திரியும் மற்றவர்களும்தான்.

## அயர்லாந்துடன் ஒப்பீடு

அயர்லாந்தில் நடந்தவற்றையும், அந்த நாட்டை ஒன்றிணைப்பதற்கு 1916 ஆம் ஆண்டு செய்யப்பட்ட இறுதி முயற்சியையும் பார்ப்போம். தென்பிராந்திய ஐரிஸ் கத்தோலிக்கப் பிரதிநிதியான ரெய்மாண்ட் என்பவருக்கும், ஐரிஸ் தலைவரான எட்வர்ட் கார்சன் என்பவருக்கும் இடையில் நடைபெற்ற பேச்சு வார்த்தையின் போது, கார்சன் " உங்களுக்கு என்ன பாதுகாப்பு வேண்டும்?" என்று கேட்டதைக் குறிப்பிட்டார்.

"உங்கள் பாதுகாப்பு நாசமாய்ப் போகட்டும்" என்று நியாய பூர்வமாக நாங்கள் இந்துக்களைப் பார்த்துச் சொல்லியிருக்க முடியும். ஆனால் நாங்கள் அப்படிச் சொன்னோமா? அப்படிச் சொல்வதற்கு எல்லா நியாயங்களும் உரிமைகளும் எமக்கிருந்த போதும் நாங்கள் அப்படிச் சொல்லவில்லை. நாங்கள் எங்கள் பங்குப் பணியை எளிய முறையில் செய்துள்ளோம். இந்து மகாசபையின் தலைவர் ஹோம் ரூல் வேண்டும் என்று கேட்கிறார். நாட்டின் முழு நலனையும் கருத்தில் கொண்டு தாராள மனப்பான்மையுடன் "உங்களுக்கு ஹோம் ரூல் தேவையென்றால் அப்படியே ஆகட்டும், நாங்கள் உங்களை ஆதரிக்கிறோம், நாங்கள் விதிப்பது ஒரே ஒரு நிபந்தனைதான். நியாயமான பாதுகாப்பு எங்களுக்குக் கொடுங்கள் என்பதே அந்த நிபந்தனை. இது கார்சனின் அணுகுமுறையை விட பெருந்தன்மை வாய்ந்ததுதான்."

இந்த அணுகுமுறை தேசபக்தி பூர்வமானதல்லவா? இது பெருந்தன்மை கொண்டதல்லவா? தாராள மனம் படைத்ததல்லவா? என்று சாஸ்திரியையும், காந்தியையும் பிற காங்கிரஸ்காரர்களையும் நான் கேட்கிறேன். கடந்த 2000 ஆண்டுகளாக பிராமணர்களின் ஆட்சியில் நாங்கள் எப்படிப்பட்ட கொடுமைகளை அனுபவித்தோம் என்பதை எந்த அளவுக்கு மறந்துவிட முடியும். எங்களுக்கு இருந்த நம்பிக்கையெல்லாம், எங்களுக்கு பாதுகாப்பு அளிக்கப்பட்டால் தாராள மனம் கொண்ட மற்றவர்களின் உதவியுடன் ஒரு ஒழுங்குமுறையை ஏற்படுத்தி எம்மை முன்னேற்றிக் கொள்கிற அதே நேரத்தில் நாட்டின் வளர்ச்சிக்கும் நாங்கள் முழு மனதுடன் பாடுபட முடியும் என்பதே. அனைத்து அரசியல் சர்ச்சைளிலும் நாங்கள் வெளிப்படுத்திய தாராள மனப்பான்மையையும், பெருந்தன்மையையும் விட அதிகமாக

நீங்கள் எதிர்பார்க்க முடியுமா? எனவே எனது இந்து சகோதரர்களைப் பார்த்து நான் சொல்லுவேன்: உங்கள் மனப்பான்மையை மாற்றிக் கொள்ளுங்கள், நாங்கள் தியாகங்கள் புரியவும் ஆபத்துகளை சமாளிக்கவும் தயாராக இருக்கிறோம் என்பதைக் கருத்தில் கொள்ளுங்கள். இந்தப் பிரச்சினையை முடிவுக்குக் கொண்டு வருவதென்று தீர்மானம் செய்வோம். நான் அதற்குத் தயார், சம்மதம் தெரிவிக்கிறேன். துரதிருஷ்டவசமாக இதற்கு இந்து சமூகத்திடமிருந்து போதுமான பதிலில்லை. நாங்கள் தலைதூக்கும் போதெல்லாம் அவர்கள் உதாசீனப் படுத்துகிறார்கள்.

1932 ஆம் ஆண்டு அரிஜன வகுப்பாரின் பிரச்சினை எழுந்தது, முஸ்லீம் பிரச்சினையைப் போலவே இது முன் வைக்கப்பட்டது. குடியுரிமைக் கமிட்டி, அரிஜன வகுப்பு மக்களின் எண்ணிக்கை பல்வேறு மாகாணங்களில் எவ்வளவு உள்ளது என்று உறுதி செய்து கொள்ள விரும்பிய போது, தாராள மனம் கொண்ட இந்துக்களும், குறுகிய மனம் கொண்ட இந்துக்களும் ஒன்று சேர்ந்து தாழ்த்தப் பட்ட வகுப்பு என்றோ, அரிஜன வகுப்பு என்றோ இந்த நாட்டில் எதுவும் இல்லை என்று சொன்னார்கள் (வெட்கம், வெட்கம்), உ.பி. பீகார், பஞ்சாப் மற்ற மாகாணங்களிலும் இதே கதைதான். ஏன்? காரணம் மிகவும் எளிமையானது, மேதகு மன்னரின் அரசாங்கம், சட்டப்பேரவையில் அரிஜன வகுப்பினருக்கு தனிப்பிரநிதித்துவம் கொடுப்பது என்று முடிவு செய்து, எத்தனை பிரதிநிதிகள் என்று முடிவு செய்வதற்கு அரிஜன வகுப்பாரின் எண்ணிக்கை என்ன என்று கண்டறிய முயல்கிறது என்று அறிந்த எமது இந்து சகோதரர்கள், மேதகு மன்னர் அரசின் திட்டத்தை முறியடிக்க அவர்களால் முடியாதாகையால், இந்த அடிமட்ட வேலைகளில் ஈடுபட்டு இத்திட்டத்தை தோற்கடிக்க அரிஜன வகுப்பு என்று ஒன்று இல்லவே இல்லை என்று சாதிக்கிறார்கள். இத்தகைய அற்பத்தனமான தந்திரத்தை 1932ல் இந்துக்கள் கையாண்டார்கள். இன்றைக்கோ இந்துக்கள் வேறு தந்திரங்களைக் கையாள்கிறார்கள்.

## காந்தி - வேவல் கடிதப் போக்குவரத்து

காந்தி - வேவலின் கடிதப் போக்குவரத்தை நான் குறிப்பிட விரும்புகிறேன். 1944 ஜூலை 15ம் தேதிய கடிதத்தைத் தனியாகச் சுட்டிக் காட்ட வேண்டும். இதுமிக முக்கியமானது. போர் முடிந்தவுடன்

இந்தியாவிற்கு சுதந்திரம் வழங்குவதற்கு மேதகு மன்னரின் அரசு தயாராக இருக்கிறது என்று அக்கடிதத்தில் வைஸ்ராய் குறிப்பிட்டு, மேதகு மன்னர்களின் அரசு இந்திய தேசிய வாழ்வின் முக்கிய அங்கம் என்று நீங்கள் அழைக்கிற பிரிவினரின் ஒப்புதலுடன்தான் அரசியல் சாசனம் அமலுக்கு வரும் என்று வற்புறுத்துகிறது. இந்த முக்கிய அங்கம் என்ன என்று வைஸ்ராய் சுட்டிக் காட்டினார். எங்கள் அதிருஷ்டமாகவும் இந்துக்களின் துரதிருஷ்டமாகவும், இந்திய தேசிய வாழ்வின் முக்கிய அங்கமாக அரிஜன வகுப்பினர் குறிப்பிடப்பட்டனர் (கரவொலி)

## அரிஜன வகுப்பினருக்கு தனிப் பிரநிதித்துவம்

பத்திரிகைகளில் சிலர் சர்ச்சை ஒன்றைக் கிளப்பி விட்டுள்ளது பற்றி நான் குறிப்பிட வேண்டும். அதாவது வைஸ்ராயின் யோசனை புதியது என்றும், மேதகு மன்னர் அரசின் சார்பில் சர். ஸ்டிராபோர்ட் கிரிப்ஸ் தெரிவித்த யோசனைகளிலிருந்து இது மாறுபட்டது என்றும் பத்திரிகைகள் கூறின. இது என்னைக் கவலையுறச் செய்தது. பொய்யான கெடு நோக்கத்துடன் இப்பிரச்சாரம் செய்யப்படுவதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

இந்து சார்பு பத்திரிகையாளர்கள் அவர்கள் என்ன எழுது கிறார்கள் என்பதைப் புரிந்து கொண்டு எழுத வேண்டும் என்று நான் எதிர்பார்த்தேன். அதன் பின்னர் எத்தகைய விமர்சனங்களையும் அவர்கள் செய்யலாம். அரிஜன வகுப்பாருக்கும் பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டியது அவசியம் என்று சைமன் கமிஷன் பலமாக வலியுறுத்தியிருந்தது. அரிஜன வகுப்பினர் ஒரு தனியான முக்கியமான பிரிவினர் அல்ல என்று யாராவது சொல்ல முடியுமா?

வட்டமேசை மாநாட்டில் மேதகு மன்னரின் அரசாங்கம் அரிஜன வகுப்பினருக்குத் தனிப்பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டும் என்று ஏன் முடிவு செய்தது? அவர்கள் இந்து சமூகத்தின் ஒரு துணைப் பிரிவோ, கிளையோ அல்ல. மேதகு மன்னரின் அரசாங்கம் ஏன் அவர்களுக்கு தனிப் பிரதிநிதித்துவம் கொடுத்தது? அரிஜன வகுப்பாருக்கு ஏன் தனிப் பிரதிநிதித்துவம் கொடுத்தார்கள் என்றால், அவர்களை தனிப் பிரிவினராக அரசு அங்கீகரித்ததே அதற்குக் காரணம். பின்னர் வந்தது ஜே.பி.சி. அறிக்கை. அதெல்லாம் பழைய கதை. அதன் பின் பல விஷயங்கள் நடந்துள்ளன.

அரிஜன வகுப்பினர் தேசிய வாழ்வில் ஒரு தனி அங்கம் என்கிற உண்மையை ஒத்துக் கொள்ள வேண்டும் என்று எமது இந்து சகோதரர்களை நான் கேட்டுக் கொள்கிறேன். மிகவும் திட்ட வட்டமாகவும் கறாராகவும் நான் அவர்களுக்குச் சொல்லிக் கொள்வேன்: "இந்த விஷயத்தில் தவறு செய்யாதீர்கள்"

## ஜின்னா - காந்தி பேச்சு வார்த்தை

பிரதான பிரச்சினை பற்றி நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. ஜின்னா - காந்திக்கு இடையில் நடைபெறுகிற பேச்சு வார்த்தைகள் பற்றி ஏன் நான் எதுவும் சொல்லாமலிருக்கிறேன் என்று பலரும் கேட்டு வருகிறார்கள். இந்தப் பேச்சு வார்த்தைகள் பற்றி யாராவது ஏதாவது சொல்ல வேண்டுமா என்று எனக்குத் தெரியவில்லை. வயோதிகர்களான இரண்டு கண்ணியமான சீமான்களிடையே நீண்ட காலமாக நடந்து வரும் இந்தப் பேச்சு வார்த்தைகளில் என்ன பேசப்படுகிறது என்பது யாருக்கும் புரியவில்லை. ஆனால் ஒரு விஷயத்தை நான் உங்களுக்கு சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இந்தப் பேச்சு வார்த்தைகளில் எனக்கு அக்கறை இல்லை. அதற்கான காரணங்கள் சிலவற்றையும் நான் சொல்கிறேன். வகுப்புவாதப் பிரச்சினை என்பது இந்துக்கள் முஸ்லீம்களுக்கு இடையில் உள்ள பிரச்சினை மட்டுமல்ல. வகுப்புவாதப் பிரச்சினை மேலும் விரிவான தொரு பிரச்சினை, இந்தப் பிரச்சினையில் இந்துக்கள் முஸ்லீம்கள் மட்டுமின்றி, கிறிஸ்தவர்கள் அரிஜன வகுப்பினர் மற்றும் பிற வகுப்பினரும் சம்பந்தப் பட்டிருக்கிறார்கள்.

எனவே இத்தகைய ஒரு பிரச்சினையில் மிகவும் புத்திசாலித் தனமானதாயும், அனைவருக்கும் பாதுகாப்புத் தருவதாகவும் உள்ள நேர்மையான வழி, எல்லா சிறுபான்மை வகுப்பினரின் பிரதிநிதி களும் அமர்ந்து, தங்களின் கருத்துக்களைச் சொல்லி, ஒருவர் மற்றவர் என்ன கேட்கிறார்கள் என்பதைப் புரிந்து கொண்டு, ஒவ்வொரு சாராரின் நியாயமான கோரிக்கைகள் பற்றியும் பேசி, ஒரு முடிவெடுத்து அது அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். இரண்டு பிரிவினர் மட்டும் செய்து கொள்ளும் ஒப்பந்தம் துர்நாற்றம் வீசுகிற ஒன்றாகத்தான் அமையும். இரண்டு மனிதர்கள் சேர்ந்து மூன்றாம் ஆளைக் கொள்ளையடித்து தமது நிலைமைகளை மேம்படுத்திக் கொள்கிறதைப் போன்றது இவர்களின் நடவடிக்கைகள்.

ஜின்னா காந்தியிடம் என்ன கேட்கிறார் என்று எனக்குத் தெரியாது. காந்தி, ஜின்னாவுக்கு என்ன கொடுக்க விரும்புகிறார் என்பதும் எனக்குத் தெரியாது.

ஜின்னாவுக்கு உரியதை விட அவருக்கு காந்தி அதிகமாக ஏதும் கொடுத்தார் என்றால் அந்த அதிகப்படியானது என்னுடைய பங்கிலிருந்துதான் அவர் கொடுப்பார் என்று நான் கவலைப் படுகிறேன். எனவேதான் நான் அவர்களின் பேச்சு வார்த்தைகள் பற்றி மிகவும் கவலைப்படுகிறேன் என்பது உங்களுக்குப் புரியும், காங்கிரசுக்கு எப்படியாவது வலு சேர்க்க வேண்டும் என்பதே காந்தியின் மிக முக்கிய கொள்கையாக இருக்கிறது. மிகப் பெரியதான கட்சியின் வலிமையைக் காட்டி பிரிட்டிஷாரை காந்தி நிர்ப்பந்திக்க விரும்புகிறார்.

வகுப்புவாதப் பிரச்சினை தலை தூக்கிய காலத்திலிருந்து, அரி ஜனங்களை அசட்டை செய்து, அவர்கள் இருந்த இடத்திலேயே இருக்குமாறு பார்த்துக் கொள்வதுதான் காந்தி செய்து வருகிற ஒரே காரியமாக இருந்து வருகிறது (வெட்கம், வெட்கம் என்ற குரல்கள்) இந்த விஷயத்தில் காந்தியின் தந்திரம் பற்றி எனது கசப்பான அனுபவம் ஒன்றைக் குறிப்பிட்டிருந்தேன். வட்டமேசை மாநாட்டில் காந்தி என்னைத் தனிமைப்படுத்த முயன்றார். ஹிட்லரின் பாணியில் அவர் என்னைச் சுற்றி வளைத்துக் கொண்டார் என்று நான் சொல்ல மாட்டேன் (சிரிப்பு). ஆனால் அதுதான் சரியான வார்த்தையாக இருந்திருக்கும். அவர் என்னைத் தனிமைப் படுத்தியதுடன், அரிஜன வகுப்பாரின் சார்பாக நான் பெற்றிருந்த ஆதரவையும் துண்டித்து விட்டார்.

நீண்ட காலம் அவர் தோல்வியுற்றார். இறுதியில் அவர் ஒரு ஆயுதத்தைப் பயன்படுத்தினார். நேர்மையான யாரும் இப்படிச் செய்ய மாட்டார் என்று நான் வருத்தத்துடன் கூறுகிறேன். அவர் ஜின்னா விடம் சொன்னார்: ஜின்னாவின் 14 கோரிக்கைகளையும் தாம் ஏற்றுக் கொள்வதாக சொல்லி அதற்குப் பதிலாக ஒரு சலுகை கேட்டார். "தீண்டத்தகாத கழிசடை நாய்களுடன்" ஜின்னா ஒத்துப் போகக் கூடாது என்றார். வட்டமேசை மாநாட்டில் காந்திக்கும் ஜின்னாவுக்கும் இடையில் ஏற்பட்ட ஒப்பந்த ஆவணத்தின் நகல் ஒன்று என்னிடம் உள்ளது. நான் சான்றுகள் இல்லாமல் பேச

வில்லை. அதிருஷ்டவசமாக முஸ்லீம்கள் சிறிது வெட்க உணர்ச்சி கொண்டவர்களாக இருந்தார்கள். இந்த முறை ஜின்னாவை காந்தி சந்திக்கும் போது இத்தகைய முறையைப் பின்பற்ற மாட்டார் என்று நம்புகிறேன்.

நமது நோக்கம் என்ன என்று நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். நமது நோக்கமும் அபிலாஷையும் என்னவென்றால் நமது சமூகம் ஆட்சி செய்யும் வகுப்பாக விளங்க வேண்டும் என்பதே. நாம் கொண்டிருக்கிற அபிலாஷையும் நோக்கமும் அற்பத் தன்மை வாய்ந்தது அல்ல என்பதை நினைவில் கொள்வதற்காக எப்போதும் இதை நினைவில் கொள்ளுங்கள், உங்கள் வீட்டுச் சுவர்களில் எழுதி வையுங்கள், நமது இதயங்களில் பொறிக்கப்பட்டுள்ள மிகப்பெரிய குறிக்கோள் இதுதான். நாம் ஒரு ஆளும் வகுப்பாக இருக்க வேண்டும் என்பதே அது. இதனை நீங்கள் புரிந்து கொண்டால் இதனை எட்டுவதற்கு எத்தகைய பெருமுயற்சிகளை நாம் செய்ய வேண்டியிருக்கும் என்பது விளங்கும். வெறும் வார்த்தைகளோ, வெட்டித் தீர்மானங்களோ எதையும் தரமாட்டா. நாம் கூறுவதை வெறும் சவடால் என்று காந்தி கருதலாம்.

இந்த முறை வேண்டியதை அடையாமல் விடமாட்டோம் என்று காந்தியாரிடமும், மேதகு மன்னரின் அரசிடமும், திரும்பவும் சொல்கிறேன். மேதகு மன்னரின் அரசிடம் நாம் நிரூபித்துக் காட்டுவோம். (கேளுங்கள், கேளுங்கள் என்ற குரல்கள்). மேதகு மன்னரின் அரசிடமிருந்து இந்த முறை தீர்மானமான உடன்பாடு வேண்டும் என்று கோருவோம். இதில் தில்லு முல்லு செய்வதற்கு யாரையும் நாம் அனுமதிக்க மாட்டோம். மேதகு மன்னரின் அரசு வாக்குக் கொடுத்தால் அந்த வாக்கை அரசு காக்கும் என்று எதிர் பார்க்கிறோம். மேதகு மன்னர் அரசினது நல்லெண்ணத்தையோ நமது நற்பண்புகளையோ மட்டும் நாம் இனி நம்பப் போவதில்லை. நமது வலிமையை நாம் பெருக்கிக் கொள்ள வேண்டும். மற்ற குறுக்கீடுகளையெல்லாம் நாம் களைந்தெறிய வேண்டும்.

## ஒரே பதாகையின் கீழ் அணி திரள்வீர்

அரிஜன வகுப்பாரிடையே பெருத்த உற்சாகத்தை நான் காண்கிறேன். நான் இந்நகருக்கு வந்துள்ளது இதற்கு ஒரு காரணமாக

இருக்கலாம். உள்ளூர் பணிகளை, உள்ளூர் பாணியில், உள்ளூர் மனநிலையில் செய்வதன் மூலம் நீங்கள் ஒரு போதும் வலிமை பெற முடியாது. நீங்கள் அனைவரும் ஒரே பதாகையின் கீழ் ஒன்று திரள வேண்டும். ஒரே சங்கத்தின் கீழ், ஒரே அரசியல் அமைப்பின் கீழ் ஒன்று சேர்ந்து "அகில இந்திய அரிஜன வகுப்பார் சம்மேளனம்" என்ற அமைப்பின் கீழ் நீங்கள் நிற்கிறீர்கள் என்று உலகுக்கு எடுத்துக் காட்டுங்கள்.

கூட்டத்தில் சிலர் எனது பேச்சைத் தமிழில் மொழி பெயர்க்க வேண்டும் என்று கேட்டனர். எனது பேச்சின் தமிழ் மொழி பெயர்ப்பு அச்சடிக்கப்பட்டு அனைவருக்கும் இலவசமாக வழங்கப்படும் என்று உறுதியளிக்கிறேன்.

"டாக்டர் அம்பேத்கர் நீடூழி வாழ்க!" என்ற முழக்கத்துடன் கூட்டம் முடிவு பெற்றது.

---

# (94)

# புத்த மதத்துக்கும் பிராமணியத்துக்கும் இடையிலான போராட்டம்தான் இந்திய வரலாறு

டாக்டர் அம்பேத்கர் மதராசில் இருக்கும் போது, பல நிறுவனங்கள் அவரை உரை நிகழ்த்த வருமாறு அழைத்தன. இந் நிறுவனங்களில் ஒன்றான 'மதராஸ் பகுத்தறிவு சங்கம்' "இந்தியாவில் பகுத்தறிவுவாதம்" என்ற பொருள் பற்றி பேச அம்பேத்கரை அழைத்திருந்தது. மதராஸ் பிராட்வேயில் உள்ள பிரபாத் டாக்கீசில் 1944ஆம் ஆண்டு செப்டம்பர் 24ஆம் நாள் கூட்டம் நடந்தது. முந்நாள் மந்திரி ராமநாதன் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. எம்.எம். முத்து டாக்டர் அம்பேத்கரை வரவேற்றார். டாக்டர் அம்பேத்கர் பிறகு பேசினார்.

இந்தியாவில் பகுத்தறிவு வாதம் என்ற விஷயம் பற்றி மக்கள் பலரும் ஆர்வம் கொண்டுள்ளனர். மக்கள் மத்தியில் ஆழ்ந்த செல்வாக்கு செலுத்துகிற விஷயம் இது. இந்திய சமுதாயமும், இச் சமுதாய வாழ்வும் இந்த விஷயத்தைக் கண்டு கொள்ளவே இல்லை. இந்திய வரலாறு பற்றி பல போலிக் கருத்துக்கள் உள்ளன. இலக்கியத் துறையில் பெரிய வல்லுனர்களாக திகழ்பவர்களை பாதிக்கும் வகையில் இக்கருத்துக்கள் உலா வருகின்றன. ஆழமான கருத்துக் களுடன் எழுதும் வரலாற்று ஆசிரியர்கள் கூட, இந்தியாவில் அரசியலே இருந்ததில்லை என்றும், பண்டைக்கால எழுத்தாளர்கள் தத்துவியல், சமயம், மெய்விளக்க இயல் பற்றித்தான் எழுதினார்களே தவிர, அரசியல் பற்றி அவர்கள் கவலைப்படவில்லை என்றும் கூறுகிறார்கள்.

பண்டைக்கால இந்திய மக்கள் வரலாற்று இனத்தையோ, அரசியல் இனத்தையோ சார்ந்தவர்கள் அல்ல என்று சொல்லப் படுகிறது. இன்று வரை இக்கருத்து நிலவி வருகிறது. இந்தியாவிற்கு ஒரு வரலாறே இல்லை என்றும், இந்திய சமூகமும் இந்திய வாழ்க்கையும் ஒரு இரும்புச் சட்டத்துக்குள் இருந்து கொண்டே

நகருகிறது என்றும் கூறுகிறார்கள். ஒரு முறை பொருத்தப்பட்ட இச்சட்டம் அப்படியே இருக்கிறது, எனவே இந்த இரும்புச் சட்டம் எப்படி இருக்கிறது என்று வருணிப்பதே வரலாற்றாசிரியர்களின் வேலையாக இருந்தது. அரசியல் புரட்சியின் எல்லைகளை மாற்றி அமைக்கும் முயற்சியில் சில சிறப்பான அரசியல் புரட்சிகளை சில நாடுகள் செய்திருக்கின்றன என்றும் சொல்லப்படுகிறது.

நான் ஒரு அரசியல்வாதி மட்டுமே. எனவே, இலக்கியத்திலோ, வரலாற்றிலோ, தத்துவவியலிலோ எனக்கு ஆழ்ந்த ஞானம் இருப்பதாக நான் சொல்ல முடியாது. எனினும் பண்டைக்கால வரலாற்றைப் பயில்வதில் நான் சில காலம் செலவிட்டிருக்கிறேன். பல நிபுணர்களும் கொண்டுள்ள கருத்துக்கு மாறான முடிவுக்கு நான் வந்துள்ளேன். எனது ஆராய்ச்சியின் மூலம் பண்டைக்கால இந்தியர்கள் அரசியல் இனமாகத்தான் இருந்திருக்கிறார்கள் என்று கண்டேன்.

பண்டைக்காலத்தில் எந்தவொரு நாட்டிலும் சமுதாய ஒழுக்கங்களையே பாதிக்கும் விதமாக இத்தகைய புரட்சி நடந்த தில்லை. பண்டைக்கால இந்தியர்களிடம் அரசாங்கமும், தத்துவ வியலும்தான் முக்கியத்துவம் பெற்றிருந்தன. உலகில் எங்குமே இல்லாத வகையில் இந்தியாவில் பகுத்தறிவு வாதம் பிரசாரம் செய்யப்பட்டது. பிரெஞ்சுப் புரட்சியையே ஒரு சுண்டைக்காய் என்று சொல்லுமளவுக்கு இந்தியா ஒரு புரட்சி பூமியாக விளங்கியது.

இந்திய வரலாற்றைப் பயில்கிறவர்கள் ஒரு உண்மையைக் கணக்கில் கொள்ள வேண்டும். இந்திய வரலாற்று ஆசிரியர்கள் அனைவருமே இதைக் கண்டு கொள்ளவில்லை. இந்த அடிப் படையான உண்மையை மனதில் கொள்ளவில்லை என்றால் இந்திய வரலாற்றை ஒருவரும் புரிந்து கொள்ள முடியாது. அந்த அடிப்படை உண்மை என்னவென்றால் பண்டைக்கால இந்தியாவில் புத்த மதத்துக்கும் பிராமணியத்துக்கும் இடையில் ஒரு பெரும் போராட்டம் நடந்து வந்தது. இப்பெரும் போராட்டம்தான் இந்திய வரலாற்றை நிர்ணயம் செய்தது. தத்துவவியல் பேராசிரியர்கள் திரும்பத் திரும்பச் சொல்வது பற்றிய சச்சரவு இது. கோட்பாடு பற்றிய புரட்சியாக மட்டுமன்றி அரசியல், சமூகத் தத்துவவியல் புரட்சியாகவும் இது விளங்கியது.

பிராமணர்களுக்கும் புத்த மதத்தினருக்கும் நடந்த சச்சரவு ஒரு விஷயம் பற்றியதே. அந்த விஷயம் என்னவென்றால் "உண்மை என்பது என்ன? உண்மை என்று எதனை ஏற்றுக் கொள்வது?" பகுத்தறிவு வாதம் இந்தப் பிரச்சினையைத்தான் அலசுகிறது. உண்மை என்ன என்பதற்கு புத்தர் கொடுத்த விளக்கம் பிராமணர்கள் இந்தக் கேள்விக்கு கொடுத்த பதிலிலிருந்து அடிப்படையிலேயே வேறுபட்டதாகும். பத்து இந்திரியங்களில் ஏதாவது ஒன்றுகூட இதற்குச் சான்று சொல்லும். வேதங்கள் பிரகடனப்படுத்தியதே உண்மை என்று பிராமணக் கோட்பாடு கூறுகிறது. இதுதான் பிராமணியத்தின் மிக முக்கியமான கோட்பாடு. புத்த மதத்தினர் புரட்சி வீரர்கள், பிராமணர்களோ எதிர்ப் புரட்சிக்காரர்கள். இதுதான் புத்த மதத்தினருக்கும் பிராமணியத்துக்கும் உள்ள வேறுபாடு ஆகும். எல்லாவிதமான சமுதாய, சமய கோட்பாடு களுக்கும் உச்சமட்ட அதிகாரம் கொண்டது வேதங்கள்தான் என்று பண்டைக் காலத்திலிருந்து பிராமணர்கள் ஏன் சொல்லி வருகிறார்கள்? இது ஏன் என்று சொல்வது கஷ்டம். திறமைசாலி களாக இருந்த பண்டைக்கால பிராமணர்கள், கோமாளித்தனமான விஷயங்களைத் தவிர வேறேதும் இல்லாத இந்தப் புத்தகங்களுக்கு இத்தகைய அதீதமான புனிதத் தன்மையும் அதிகாரமும் எப்படிக் கொடுத்தார்கள் என்பதை நினைத்து நான் ஆச்சரியப் படுகிறேன்.

## வேதங்களில் போலித் திருத்தங்கள்

வேதங்களின் சில அம்சங்களை ஆய்வு செய்த டாக்டர் அம்பேத்கர், சில உதாரணங்களை எடுத்துக்காட்டி, இவையெல்லாம் பிற்காலத்தில் செய்யப்பட்ட போலித் திருத்தங்கள் என்றார். தமது கோட்பாட்டுக்கு, ஒரு புனிதத் தன்மையை ஏற்படுத்துவதற்காக இத்தகைய திருத்தங்களை இவர்கள் செய்துள்ளனர். சமூகக் கோட்பாடுகள் பற்றி பகுத்தறிவுக்கு ஒவ்வாத அணுகுமுறையை இதனால் தான் அவர்கள் மேற்கொள்கிறார்கள் என்று தோன்றுகிறது. புத்த மதத்தினருக்கும் பிராமணர்களுக்கும் இடையில் நடந்த போராட்டம் மேலாதிக்கத்துக்காக நடந்ததுதான். புத்தமதம் செல்வாக்கு இழந்த போது அதற்குப் பெரும் பின்னடைவு ஏற்பட்டது. உலக சரித்திரத்திலேயே முதன்முதலாக சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற செய்தியைச் சொன்னவர் புத்தர்தான். ஆனால், அவர்கள் தோற்றுப் போனார்கள், ஏனென்றால் புரட்சி, எதிர்ப்

புரட்சியால் தோற்கடிக்கப்பட்டுவிட்டது. பகுத்தறிவுவாதமும் அவர்களிடமிருந்து போய்விட்டது. இந்த காரணமாகத்தான் இந்து சமூதாயம் மிக மோசமான மூடநம்பிக்கையில் உழல்கிறது. உருவ வழிபாடும் மற்ற கெட்ட பழக்கங்களும் மதத்தின் பெயரால் கடைப் பிடிக்கப்படுகின்றன. உண்மையை அணுகும் புத்தரின் பகுத்தறிவு பூர்வ அணுகுமுறை மறைந்து போனது. இன்று அவர்கள் எதிர்ப் புரட்சியாளர்களின் கைகளில் சிக்கியுள்ளனர். எதிர்ப்புரட்சியாளர் களின் வேதவாக்கு பகவத் கீதையும் மனுஸ்மிரிதியும்தான்.

பகுத்தறிவுக்கு ஒவ்வாத கோட்பாடுகள் இன்று அரசியலிலும் புகுந்துள்ளன என்பதுதான் துயரமான விஷயம். ஒவ்வொரு நாட்டிலும் உள்ள அரசியல்வாதிகள் பரிசோதனைக்கு உள்ளாகின் றார்கள். இதற்கெல்லாம் இந்தியாவில் பரிகாரம்தான் என்ன? திரு. காந்தி மட்டும் எப்போதும் பரிசோதனைக்கு ஆளாவதில்லை. (சிரிப்பு). அவர் பரிசோதனைக்கு உள்ளானாரா? இல்லை. அவர் ஏதாவது சொன்னால் அதை வேதவாக்கு என்று அனைவரும் ஒத்துக் கொள்ள வேண்டும். அவரே தான் சொன்னதற்கு எதிர் மாறாக சொன்னால் அதையும் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு பாகிஸ்தானை உருவாக்குவது ஒரு பாவச் செயல் என்று சொன்னார். காங்கிரஸ்காரர்கள் ஆமாம், அது பாவம் என்றனர். நான் பாகிஸ்தான் பற்றி ஒரு புத்தகம் எழுதினேன். இதற்காக, எனது அறிவை நான் முஸ்லீம் லீகுக்கு அடகு வைத்து விட்டதாகவும், விபசாரம் செய்து விட்டதாகவும் என்னைக் கேவலமாகத் தூற்றினர். இன்றோ, பாகிஸ்தான் என்பது பாவமல்ல என்கிறார் காந்தி. பகுத்தறிவின்மை நமது சமூக, அறிவார்ந்த விஷயங்களில் மட்டுமின்றி அரசியல் துறையிலும் நுழைந்துள்ளது என்பதற்கு இது ஒரு உதாரணம்.

நாம் உடனடியாக ஏதாவது செய்யவில்லை என்றால், நமது நாட்டுக்கு ஒரு பேரிடர் வந்து சேரும்.....[1]

---

1. தி மெயில், 26, செப்டம்பர், 1944

## (95)

# மாநில சுயாட்சியை காந்தி ஏற்றுக் கொண்டார்

1944ஆம் ஆண்டு செப்டம்பர் 24ஆம் நாள், மதராஜ் சிவ்ராஜ் மெமோரியல் ஹாலில் நடந்த கூட்டத்தில் சீனிவாச சாஸ்திரியையும் அம்பேத்கர் கடுமையாகத் தாக்கினார்.

அவர் சொன்னார்:

“ ..... சமீபத்திய சில உரைகளில் ரைட் ஆனரபிள் சீனிவாச சாஸ்திரி பேசும் போது, காந்தி இந்தியாவின் ஆன்மா என்றும், எனவே எந்தவொரு சர்வதேசக் கூட்டத்திலும் இந்தியப் பிரதிநிதியாக காந்தியே கலந்து கொள்ள வேண்டும் என்றும் கூறியதுடன், எந்தவொரு சந்தர்ப்பத்திலும் அம்பேத்கரைப் போன்றவர்கள் எந்த சர்வதேசக் கூட்டத்திலும் கலந்து கொள்ளாமல் மிகுந்த எச்சரிக்கை யுடன் பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும் கூறினர்.”

“ ..... ஆனரபிள் சாஸ்திரியின் சிறந்த பொது வாழ்க்கையின் விஸ்தாரம் போல எனது பொது வாழ்க்கை அமையவில்லை என்று நான் ஒத்துக் கொள்ளத் தயார். எனினும் சர்வதேச கூட்டங்களில் நான் கலந்து கொள்வதால் இந்தியா வெட்கப்பட நேரிடும் என்கிற அளவுக்கு கேவலமாக நான் என்ன செய்திருக்கக் கூடும் என்று எனது மனதைத் தொட்டுக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். நான் அவருக்கு எதிராக அவதூறான வார்த்தைகளைப் பயன்படுத்த விரும்பவில்லை. நான் அவரை பிரிட்டிஷ் அரசின் செல்ல நாய் என்று கூறியிருக்க முடியும். இத்தனை காலமும் பிரிட்டிஷ் அரசின் மடியில்தான் சீனிவாச சாஸ்திரி உட்கார்ந்து கொண்டிருந்தார். அவர் ஏதாவது அவப்பெயரோ நற்புகழோ பெற்றிருப்பாரோயானால் அதற்குக் காரணம் பிரிட்டிஷ் அரசாங்கம் தான். பிரிட்டிஷ் அரசாங்கம் அவரை ஒரு காட்சிப் பையனாக வைத்திருப்பதுதான். திரு. சாஸ்திரி சொன்னது, வயிற்றுநோய் கண்ட ஒரு வயோதிகக் காகத்தின் கூச்சல் என்று நான் சொல்ல விரும்பவில்லை. சீனிவாச சாஸ்திரி சொன்னது மற்ற காங்கிரஸ்காரர்கள் வழக்கமாகச் சொல்வதுதான். அதாவது

அம்பேத்கரின் தலைமையின் கீழுள்ள அரிஜன வகுப்பினர் இந்தியாவின் பொது நலன்களுக்கு விரோதமானவர்கள் என்று சொல்கிறார்கள்."

வட்டமேசை மாநாட்டில் காந்தி என்ன செய்தார் என்று பெரும்பாலான மக்களுக்குத் தெரியாது. அங்கு அவர் செய்த பணிகள் மகத்தானவை என்று அவர்கள் நினைத்தார்கள். சுதந்திரம் கோர வேண்டும் என்ற தாக்கீதுடன் அவர் வட்டமேசை மாநாட்டுக்குச் சென்றார். நிதானமிக்க இந்திய அரசியல் வாதிகளின் கோரிக்கையை விட மிக அதிகமானது இது. ஆனால் காந்தி அங்கு என்ன செய்தார். இந்த மத்தியகால வயோதிக சீமான் சுதந்திரத்துக்கு குறைவாக வேறு எதுவும் கோரக்கூடாது என்ற தாக்கீதுடன் மாநாட்டுக்கு சென்று, சர். சாமுவேல் ஹோரிடம் தாம் மாநில சுயாட்சிக்கு முற்றிலும் தயார் என்று சொன்னார். (வெட்கம் என்ற குரல்கள்)[1]

---

1. தி மெயில், 26, செப்டம்பர், 1944

# (96)

## நாட்டின் எதிர்காலத்தை நிர்ணயிப்பவர்கள் நாங்கள்தான்

அரிஜன வகுப்பினர் சம்மேளனத்தின் பொதுச் செயலாளர் பி.என். ராஜ்போஜ், தொழில்துறை ஏசிளம் வி. ராமகிருஷ்ணன் ஆகியோர் உடன்வர 1944 செப்டம்பர் 28ம் நாள் வியாழக்கிழமை அன்று ராஜ மகேந்திரியை வந்தடைந்தார் டாக்டர் அம்பேத்கர். மியூசியம் ஹாலில் நகரசபையின் சார்பில் வரவேற்பு அளிக்கப் பட்டது. நகரசபைச் சேர்மன் சோமினா காமேஸ்வர ராவ், நகரசபை ஆணையர் வியன்காதத்ரி சவுத்ரி ஆகியோர் டாக்டர் அம்பேத்கரை வரவேற்றனர்.

வரவேற்புக்கு பதிலளித்து டாக்டர் அம்பேத்கர் பேசியதாவது:

ஒரு துயரச் செய்தியின் நிழலிலே நாம் இங்கு கூடியிருக்கிறோம். காந்திக்கும் ஜின்னாவுக்கும் இடையில் நடைபெற்ற பேச்சு வார்த்தைகள் தோல்வியடைந்தன என்று கூறப்படுகிறது. நாம் இதுவரை ஒன்று திரளவே முடியவில்லை. நமது வேறுபாடுகளைக் களைந்து முன்னேற நம்மால் முடியவில்லை. மிகவும் நெருக்கடியான நேரத்தில் ஏதாவது சிக்கல் வந்துவிடுகிறது. பழைய ஏற்பாடு சொல்கிறது: “தொலைநோக்குத் திட்டம் இல்லாத தேசம் அழிந்து விடும்.” நான் காந்தியிடம் காண்கிற குறைபாடு அவரிடம் தொலை நோக்கு இல்லாததுதான். காங்கிரஸை அமைத்தவர்கள் இந்த பாகிஸ்தான் பற்றி என்ன நினைத்திருப்பார்கள்?

1885 ஆம் ஆண்டு முதன்முதலில் நாம் சந்தித்தபோது, படிப் படியாக ஹோம் ரூல் அந்தஸ்தை இந்தியா அடைய வேண்டும் என்று விரும்பினோம். ஆனால் இந்த இயக்கம் இந்த முறையில், இந்த மனப்பாங்குடன் கொண்டு செல்லப்படும் என்றோ, தனது குறிக் கோளை எட்டுகின்ற நிலையை இந்தியா அடையும் நேரத்தில் இந்தியா இரண்டாகத் துண்டாடப்படும் என்றோ யாரும் நினைத் திருக்க மாட்டார். வெறும் சாய்வு நாற்காலி அரசியல்வாதிகளாக இருந்து கொண்டு, வைஸ்ராய்க்குக் கடிதங்கள் மட்டும் எழுதிக்

கொண்டிருந்தார்கள். அந்த வழிகளெல்லாம் இந்தியாவுக்கு ஒத்து வராது என்று கூறப்பட்டது.

மிகுந்த செயல் விரைவுடைய இயக்கம் காந்தியின் தலைமையில் நடக்க வேண்டியதாயிற்று. வெகுஜன இயக்கங்களும் ஆர்ப்பாட்டங்களும் நடந்தன. நம்மிடம் தெளிவும் தொலைநோக்கும் தவிர மற்ற அனைத்தும் இருந்தன. ஆப்ரகாம் லிங்கனுடன் காந்தியை ஒப்பிட்டார்கள். அடிமைகள் பிரச்சினையில் ஆப்ரகாம் லிங்கன் என்ன நிலை கொண்டிருந்தாரோ, அதே அணுகுமுறையைத்தான் சிறுபான்மையினர் பிரச்சினையில் காந்தி இந்தியாவில் மேற்கொண்டார். நாட்டின் ஐக்கியத்துக்கு லிங்கன் மிகுந்த முக்கியத்துவம் அளித்தார். அடிமை முறையை ஆதரித்தவர்தான் அவர். எனினும் அடிமைகளுக்கு விடுதலை தரும் பிரகடனம் ஆப்ரகாம் லிங்கனால் 1863 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. வடக்குப் பகுதி ராணுவத்துக்கு உதவி தேவை என்பதற்காக நீக்ரோக்களின் தயவை நாடி அவர் அப்படிச் செய்தார். காந்தியின் அணுகுமுறையும் அதே போலத்தான் உள்ளது. "எனக்கு விடுதலை வேண்டும், அதே போதில் சதுர்வர்ணாஸ்ரம தர்மமும் வேண்டும்" என்று காந்தி எப்போதும் சொல்லி வந்திருக்கிறார், தொடர்ந்து தோல்விகளை காந்தி தழுவியதற்குக் காரணமே இதுதான். காந்தி தனது தவறை உணர்வார் என்று நம்புகிறேன்.

ஒவ்வொருவரும் தமது நாடு சுதந்திரம் பெற வேண்டும் என்றுதான் விரும்புகிறார்கள். ஆனால், அரசியல் சமத்துவம் என்பது பல படிகளாக இருக்கிறது என்று அவர்கள் உணரவில்லை. சமத்துவம், விடுதலை, சிறுபான்மையினர் சுதந்திரம் ஆகியவற்றை அவர்கள் விரும்புகிறார்கள். சிறுபான்மையினரின் நலன்களைக் காக்கும் விதிகளுக்கு எதிராக இருக்கும் எந்த இந்தியனும் நமது நாட்டின் நண்பனாகவோ ஜனநாயகவாதியாகவோ இருக்கமுடியாது. அவன் நாட்டின் விரோதி ஆவான்.

இந்த நாட்டுக்குக் கிடைத்துள்ள அற்புதமான சந்தர்ப்பம் இதுவே என்று மீண்டும் நான் சொல்கிறேன். போருக்குப் பின்னால் இந்தியாவின் நிலை என்ன என்று பிரிட்டிஷ் அரசாங்கம் அறிவிப்பு எதுவும் வெளியிடாததால், இந்தியாவில் என்ன நடக்கும் என்று பல நண்பர்கள் கவலைப்படுகிறார்கள். பிரிட்டிஷ் பேரரசில் ஒருவர்

எவ்வளவுதான் பெரியவராக இருந்தாலும் அந்த ஒருவரின் முடிவைச் சார்ந்து இந்தியா இருக்கலாகாது. இந்த நாட்டின் தலைவிதியை நிர்ணயிப்பவர்கள் நாம்தான். நம்மிடையே எவ்வளவு ஒற்றுமையை நாம் வளர்த்துக் கொள்கிறோம் என்பது மிகவும் முக்கியம், நமக்குள் உள்ள சர்ச்சைகளை நாம் தீர்த்துக் கொண்டால், நாம் வரைகிற அரசியல் சாசனத்தில் இந்நாட்டின் பல்வேறு வகுப்பாரின் பிரதி நிதிகளும் அதில் கையொப்பம் இடுவர். பிரதம மந்திரியிடமோ வேறு எவரிடமோ நமது ஏகப் பிரதிநிதியாக காந்தியை நாம் அனுப்பலாம். இது காந்தி என்ன கருத்துக் கொண்டிருக்கிறார் என்பதைப் பொருத்திருக்கிறது.[1]

---

1. தி ஹிந்து, அக்டோபர், 2, 1944.

# (97)

# கல்லூரிப்பட்டம் பயன்தரும் அறிவாக இருக்க வேண்டும் என்று மாணவர்கள் உணர்வார்களாக

*1945ஆம் ஆண்டு ஜனவரி 2ஆம் நாள் பேராசிரியர் ஜே.சி. மோண்டல் தலைமையில் ஸ்டூடன்ட்ஸ் ஹால், கல்கத்தாவில் நடந்த அரிஜன வகுப்பு மாணவர்கள் கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் பேசும்போது, இப்போதையை தலைமுறை மாணவர்கள் கல்விப் பயிற்சியில் அடைந்து வருகிற சாதனைகளின் அளவு குறைந்து கொண்டு வருகிறது என்று குறிப்பிட்டார்.*

*அகில இந்திய மாணவர் சம்மேளனத்தைத் தாக்கிப் பேசிய டாக்டர் அம்பேத்கர் மாணவர்கள் அதிலிருந்து பிரிந்து அரிஜன வகுப்பு மாணவர்கள் அமைப்பை ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.*

*அகில இந்திய மாணவர் சம்மேளனம் யாவரும் அறிந்த ஒன்று, அதன் நடவடிக்கைகள் பற்றி அனைவரும் படித்துள்ளனர். ஏதோ காரணத்திற்காக ஒரு முஸ்லீம் மாணவர் அமைப்பும் அங்கு தோன்றியுள்ளது. அதற்குக் காரணங்கள் தெரியாது, ஆனால் முஸ்லீம்கள் தமக்கென்று ஒரு அமைப்பு தேவை என்று உணர்ந்துள்ளனர்.*

*தமது துறை அரசியல்தான் என்று பலருக்கும் தெரியாது என்று கூறினார் பேச்சாளர். இந்தத் துறைக்கு அவர் தள்ளப் பட்டிருக்கிறார். இந்தத் துறை அவருக்கு மகிழ்ச்சி தருகிறது. தனது கல்விப் பணிக் காலம் முடிந்தபின் இதற்குத்தான் அவர் திரும்புவார். பொருளாதாரம், சட்டம் ஆகிய துறைகளில் அவர் பேராசிரியராக இருப்பதால், தாம் நெருக்கமான அனுபவம் கொண்டிருந்த அகில இந்திய மாணவர் சம்மேளனம் பற்றி சில கூர்மையான கருத்துக்களைச் சொல்ல அவர் விரும்பினார்.*

இந்தியாவில் கல்வியின் தரம் தற்போது குறைந்து விட்டதாக டாக்டர் அம்பேத்கர் கருதினார். தான் பேராசிரியர் பணி ஏற்ற ஆரம்ப காலத்துடன் ஒப்பிடும் போது தற்போது மாணவர்களின் கல்விச் சாதனை பெருமளவு குறைந்துள்ளது என்று தயக்கமின்றி அவர் கூறினார். ஜஸ்டிஸ் ரானடே, பால கங்காதர திலகர், கோகலே, சர் சுரேந்திர நாத், சர் சிவசாமி ஐயர் ஆகியோரைக் குறிப்பிட்டு "இந்தத் தலைமுறையைச் சேர்ந்த உங்களில் ஒருவர் கூட அவர்களின் முழங்கால் அளவு கூட எட்ட மாட்டீர்கள் என்று நான் சொன்னால் உங்களுக்கு விரோதமாகப் பேசுகிறேன் என்று நீங்கள் நினைக்கக் கூடாது" என்றார் அம்பேத்கர்.

அரசாங்கம் கல்விக்காக முன்பு செலவழித்ததை விட இப்போது அதிகமாகச் செலவிடுகிறது என்று குறிப்பிட்ட டாக்டர் அம்பேத்கர், தரம் தாழ்ந்ததற்கான காரணங்களில் ஒன்று மாணவர்கள் இப்போது கல்வியை விட அரசியலில் அதிகம் ஆர்வம் காட்டுகிறார்கள் என்பது தான். கல்வித் துறையில் இது ஒரு கேடு என்றார் அவர். மாணவர் செயல்பாடுகளில் அரசியல் ஒரு முக்கிய துறை என்று சில அரசியல்வாதிகள் கூறுவதை அவர் திட்டவட்டமாக மறுத்தார்.

அகில இந்திய மாணவர்கள் சம்மேளனத்தின் செயல்பாடுகள் பற்றிக் குறிப்பிட்ட டாக்டர் அம்பேத்கர், பத்திரிகைகளில் பரபரப்பான செய்திகளைத் தரும் அந்த விவாதங்கள் எல்லாம், சம்மேளனம் செய்வதெல்லாம், காங்கிரஸ் தீர்மானங்களை உப்பு சப்பில்லாமல் ஆதரிப்பதுதான். அவர்களின் விவாதத்தில் புதிதாக ஒன்றும் இல்லை.

அரிஜன வகுப்பு மாணவர்கள் என்ன செய்ய வேண்டும் என்று ஆலோசனை சொன்ன டாக்டர் அம்பேத்கர், அவர்கள் அரசியலி லிருந்து ஒதுங்கி இருக்கும் வகையில் அவர்கள் தனி அமைப்பை உருவாக்கிக் கொள்ள வேண்டும் என்றார். அகில இந்திய மாணவர் சம்மேளனத்திலிருந்து பிரிந்து வந்து, மாணவர்களைப் பாதிக்கிற பிரச்சினைகளைப் பற்றி கவலைப்பட வேண்டும். தமது கல்வியின் போது எதிர்ப்படும் கஷ்டங்களைப் பற்றி அவர்கள் அதிகம் அக்கறை கொள்ள வேண்டும். தனியார் கல்லூரிகளில் அரிஜன வகுப்பாரின் பொருளாதார, சமுதாய கஷ்டங்களைக் கணக்கில் எடுத்துக் கொள்வதில்லை என்று குறிப்பிட்டார். சேர்க்கையின் போதோ,

ஸ்காலர்சிப் வழங்கும் போதோ அவர்களுக்கு, எந்தச் சலுகையும் வழங்கப்படுவதில்லை. பணக்காரர்கள், ஏழைகள், கோடீஸ்வரர்கள், பிச்சைக்காரர்கள் அனைவருமே ஒரே மாதிரியாக நடத்தப் படுகிறார்கள்.

அரிஜன வகுப்பு மாணவர்களுக்கென்று ஒரு தனி அமைப்பு இருந்தால், தமது கஷ்டங்களை பற்றி தேவையான புள்ளி விவரங்களைத் திரட்டி, அரசாங்கத்தையோ ஆளும் வர்க்கத்தையோ நிர்ப்பந்தித்து இந்த விஷயத்தில் கவனம் செலுத்த வைத்திருக்க முடியும். கல்லூரிப் பட்டம் வாங்குவதை மட்டும் குறிக்கோளாகக் கொள்ளாமல் சாதனைக்கான ஒரு அறிவாக, தகுதிச் சாதனமாக பட்டம் விளங்க வேண்டும் என்றார்.

ஆழ்ந்த அக்கறையுள்ள விஷயமாகக் கல்வியைக் கருத வேண்டும். தேநீர் நேர அனுபவிப்பு போல அதனை நினைக்கக் கூடாது.

அகில இந்திய அமைப்பை உருவாக்கும்படி கோரிய அவர், அகில இந்திய உணர்வு அவர்களிடம் இன்னும் இல்லை என்று கூறினார். மாகாண மட்ட வாழ்க்கையையே அவர்கள் இன்றுவரை வாழ்ந்து வருகிறார்கள்![1]

---

1. பீப்பிள்ஸ் ஹெரால்டு, 10, ஜனவரி, 1945

# (98)

# வறுமையால் பீடிக்கப்பட்டுள்ள கோடிக்கணக்கான மக்களுக்கு வளமை சேர்க்கும் அமைப்புக்கு அடிக்கல் நாட்டுவீர்

*வங்காளத் தலைமைச் செயலகத்தில், கல்கத்தாவில் 1945 ஜனவரி 3ஆம் தேதி நடந்த மாநாட்டில் டாக்டர் அம்பேத்கர் பேசினார்.*

*அவர் சொன்னார்:*

*இந்திய நாட்டின் நீர்வளத்தை அனைவருக்கும் பயனுள்ள வகையில் உபயோகப் படுத்தும் ஒரு திட்டத்தைத் தயாரிக்க இந்திய அரசு விரும்புகிறது. மற்ற நாடுகளில் எவ்வாறு நீர் பயன்படுத்தப் படுகிறதோ அதே போல் இங்கும் செய்யப்பட வேண்டும். அமெரிக்காவில் ஐக்கிய நாடுகளின் டென்னசே பள்ளத்தாக்குத் திட்டம் இந்திய அரசின் மனதில் உள்ளது. அந்தத் திட்டத்தை அவர்கள் பரிசீலித்து வருகிறார்கள். தமது முன்னேற்றத்தையும் வளமையையும் பெருமளவுக்குத் தடுத்து நிற்கும் மாகாணக் குறுகிய மனப்பான்மையை விட்டு மாகாணங்கள் ஒத்துழைத்தாலே இது சாத்தியமாகும்.*

*நீர் ஆதராங்களை மிகவும் பயனுள்ள வகையில் பயன்படுத்த ஏதுவாக, முதல் கட்ட நடவடிக்கையாக மத்திய தொழில்நுட்ப ஆற்றல் வாரியம் என்ற அமைப்பை ஏற்படுத்தியுள்ளது இந்திய அரசு. “மத்திய நீர்வழிப் பாசனம், நீர்வழிப்போக்குவரத்து கமிஷன்” ஏற்படுத்தவும் அரசு எண்ணியுள்ளது.*

*நீர் ஆதாரங்களை எப்படிப் பயனுள்ள வகையில் உபயோகப் படுத்துவது, பாசனத்தைத் தவிர வேறு எப்படி நீராதாரங்களைப் பயன்படுத்தலாம் என்று மாகாணங்களுக்கு ஆலோசனை கூறுவதற்கு இவ்விரு அமைப்புகளும் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. இந்த வகையில் தாமோதர் நதி முதலில் ஆராயப்படுகிறது. இது ஒரு பலநோக்குத் திட்டம். இது தாமோதர் நதியில் வெள்ளத்தைக் கட்டுப்படுத்து வதுடன், பாசனம், நீர்வழிப் போக்குவரத்து மின் உற்பத்தி*

ஆகியவற்றை நோக்கமாகக் கொண்டிருக்கும். தாமோதர் பள்ளத் தாக்குத் திட்டத்தின் அதிகார அமைப்பு டென்னசி பள்ளத்தாக்கு அதிகார அமைப்பின் மாதிரியிலேயே இருக்கும். வங்காளமும், பீகாரும் உறுப்பினர்களாக இருக்கும் ஒரு கூட்டுறவுத் திட்டமாக இது விளங்கும்.

இந்த மாநாடு தனித்தனி அம்சங்களை விட்டுவிட்டு தீர்க்கமான முடிவுடன் முன்செல்ல வேண்டும். சிறந்ததான தீர்வு கண்டு, புதிய கொள்கையை அமல்படுத்தி, நீராதாரங்களை பயன்படுத்தி, வறுமையில் உழலும் கோடிக்கணக்கான மக்களுக்கு வளமை சேர்க்கும் திட்டத்துக்கு அடிக்கல் நாட்டுவீர்.

இந்திய அரசு புதிய திட்டத்துக்கு உருவமும் உயிரும் கொடுப்பதற்கு ஆர்வமாக உள்ளது. இதைச் செய்ய எந்த கால விரயமும் ஆகக்கூடாது என்பதிலும் அது அக்கறை கொண்டுள்ளது.

---

## (99)

# ஜனநாயக அமைப்பின் புதிய ஆட்சிமுறைக்கு செய்திப் பத்திரிகைகள் ஒரு அடிப்படை ஆகும்

*1945 ஆம் ஆண்டு ஜனவரி 3 ஆம் நாள் வைஸ்ராயின் நிர்வாகக் குழு உறுப்பினரான டாக்டர் அம்பேத்கர், அகில இந்திய அரிஜன வகுப்பினர் சம்மேளனத்தின் வாரப் பத்திரிகையான "பீப்பிள்ஸ் ஹெரால்டு" என்ற பத்திரிகையைத் துவக்கி வைத்தார். சம்மேள னத்தின் அலுவலகத்தில் இந்நிகழ்ச்சி நடந்தது. அலுவலகம் கல்கத்தா நகரில் 1-2, சீதாராம் கோஷ் வீதியில் அமைந்துள்ளது. மேதகு ஜே. என்.மோண்டல் மற்றும் திரு. ஆர்.எல். பீஸ்வாஸ் ஆகியோர் சம்மேளனத்தின் சார்பில் டாக்டர் அம்பேத்கரை வரவேற்றனர்.*

*வங்காள மாகாண அரிஜன வகுப்பினர் சம்மேளனத்தின் தலைவரான மேதகு ஜே.என் மோண்டல் டாக்டர் அம்பேத்கரை வரவேற்றுப் பேசினர். டாக்டர் அம்பேத்கரின் வாழ்க்கை பூராவும் அரிஜன மக்கள் மட்டுமின்றி, தாழ்த்தப்பட்ட மக்கள் அனைவரின் மேம்பாட்டுக்காக அர்ப்பணிக்கப்பட்டிருக்கிறது என்று குறிப் பிட்டார். அரிஜன மக்கள் மற்றும் தாழ்த்தப்பட்ட மக்களின் மேம்பாடு டாக்டர் அம்பேத்கரின் தலைமையிலும் வழிகாட்டு தலிலும் மட்டுமே நடைபெறும் என்றார் அவர்.*

*முன்னர் பேசிய ரசிக்லால் பீஸ்வாஸ் இந்த வாராந்திரப் பத்திரிகை "பீப்பிள்ஸ் ஹெரால்டு" தோன்றியதற்கான காரணம் தெரிந்ததுதான் என்று கூறினார்.*

போருக்குப் பின்னால் உருவாகப் போகிற புதிய இந்தியாவில் இந்து சமூகத்தினர்தான் அதில் பிரதான கூறாக இருப்பார்கள், இந்த இந்து சமூகத்தில் அரிஜன வகுப்பினரின் எண்ணிக்கை கணிசமாகவே இருக்கும். இந்த ஜாதியினருக்கு சில விசேஷத் தன்மைகளும், வழக்கங்களும், உரிமைகளும், சடங்குகளும் உண்டு. இவை மற்ற இந்துக்களிடமிருந்து அவர்களைப் பிரித்துக் காட்டும். அரிஜன

வகுப்பினரின் இந்த தனித்தன்மைகளை அங்கீகரிக்க வேண்டும் என்றும், கல்வி, வேலைவாய்ப்புகள் போன்ற, அரசு தனது குடிமக்களுக்கு வழங்கும் உரிமைகள் அனைத்தும் அம்மக்களுக்கும் கிடைக்க வேண்டும் என்றும் கோருவதற்கும் அவர்களுக்கு உரிமை உண்டு. எனவே, அரிஜன மக்களின் உணர்வுகளையும் அவர்களது சட்ட பூர்வ அபிலாஷைகளையும் அவர்களின் குறைகளையும், கோரிக்கைகளையும், அதே போல இந்தியா தற்போது எதிர் கொண்டுள்ள பிரச்சினைகளைப் பற்றியும் எதிர்கால இந்திய அரசின் உள்ளடக்கம் பற்றியும் தங்கள் கருத்துக்களை எடுத்துச் சொல்லும் அவர்களது பத்திரிகையாக இது விளங்கும் என்று கூறினார் பீஸ்வாஸ்.

டாக்டர் அம்பேத்கர் தனது உரையில் இந்திய தேசிய காங்கிரசின் எதிர்காலம் பற்றிக் குறிப்பிட்டு மகாத்மா காந்தியின் மறைவுக்குப் பின்னால் அது துண்டு துண்டாகச் சிதறுண்டு போகும் என்றார். சில நூறு நிலப்பிரபுக்களும், முதலாளிகளும், தவறான வழியில் செல்லும் சில தொழிலாளர் தலைவர்களும் ஒரு கட்சி ஆகிவிட முடியாது.

பிரிட்டிஷாரை எதிர்த்துப் போராடும்போது எல்லோரும் ஒன்று சேருவார்கள். ஆனால் பிரிட்டிஷார் வெளியேறும் போது, ஒரு வெற்றிடம் ஏற்படும்போது; அவர்கள் ஆட்சிக் கட்டிலில் ஏறி அமரும் போது, சமூக, பொருளாதார நிலைமைகளை மறு ஆய்வு செய்யும் போது நிலப்பிரபுக்களும் விவசாயத் தொழிலாளர்களும், முதலாளிகளும் தொழிலாளர்களும் ஒன்று சேர்ந்து செயல்பட முடியுமா? சுயராஜ்யம் வந்த மறுகணமே காங்கிரஸ் கட்சி சிதறி விடும்.

ஆனால், அரிஜன வகுப்பினரின் கட்சி எப்போதும் இருக்கும், அது ஒரு நிரந்தரக் கட்சி, சில அடிப்படைக் கொள்கைகளின் ஆதாரத்தில் இது நிற்கிறது. ரொட்டிக்காகவும் மீன்களுக்காகவும் அவர்கள் போராடுகிறார்கள் என்று கூறுவது முட்டாள் தனமானது. விடுதலை, சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றுக்காக அவர்கள் போராடுகிறார்கள். அரிஜன வகுப்பினர் நலன்கள் என்ற குறுகிய வட்டத்தை தாண்டி நிற்கின்றன அவர்களது கொள்கைகள். அவர்களது கொள்கைகள் இந்தியாவை மட்டுமல்ல உலகையே மறு சீரமைக்கக் கூடியவை.

அரிஜனங்களை மேம்படுத்துவதைவிட இந்தியாவில் வேறொரு சிறந்த காரியம் இருப்பதாக நான் நினைக்கவில்லை. காங்கிரசில் எனக்கு பலப்பல நண்பர்கள் உள்ளனர். அவர்கள் எனது அரசியலை வெறுக்கிறார்கள். ஆனால் என்மீது அன்பு கொண்டுள்ளனர். நான் காங்கிரசுக்குள் இருந்தபடி நாட்டின் பரந்துபட்ட நலன்களுக்காக உழைத்தால் நான் ஒரு நாள் காங்கிரசின் தலைவராகலாம் என்று சொல்லுகிறார்கள். இத்தகைய யோசனைகள் என்னை எப்போதும் கவர்ந்ததில்லை. நான் இந்த வகுப்பினரிடையில் பிறந்துள்ளதால் இவர்களுக்காக நான் ஏதாவது முதலில் செய்ய வேண்டும் என்று நினைக்கிறேன்.

அரிஜன மக்களின் நலன்களுக்காக பாடுபடும் திறனுள்ள நானோ மற்றவர்களோ இந்தப் பணியை விட்டு விட்டு வேறு பணிக்குச் சென்று விட்டால், வேறு யாரும் இப்பணிக்கு வரமாட்டார், எனவே அரிஜன மக்களின் நிலைமை கடந்த 2000 வருடங்களாக எத்தகைய அழுகிய நிலையிலுள்ளதோ அதே போல அது தொடரும் என்று நான் எப்போதும் கருதி வந்துள்ளேன். ஆனால் அது ஒரு குறுகிய கருத்துத்தான். இந்தப் பணியை நான் மேற்கொண்டதற்கு மற்றொரு காரணம் இது உயர் பண்புள்ள பணி என்பது. இந்துக்களின் பணிக் குறிக்கோள் என்ன? காங்கிரசின் பணிக் குறிக்கோள் என்ன? தேசிய விடுதலை என்கிறார்களே, அது என்ன? இந்துக்களின் பணி நோக்கம் ஒட்டுண்ணி வகுப்பாரின் பணிநோக்கம் போன்றது. நாட்டிலுள்ள கோடிக்கணக்கான உழைக்கும் மக்களின் இரத்தத்திலும், பணத்திலும் உழைப்பிலும் இவர்கள் வாழ்கின்றனர்.

அரசியல் தத்துவத்தையும் ஒழுங்கு ரீதியான கோட்பாடு களையும் அறிந்தவர்கள் உலகிலுள்ள ஒவ்வொரு சமுதாயத்தின் பொருளாதார, சமுதாய அமைப்பும் சுதந்திரம், சமத்துவம், சகோதரத் துவம் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்தாலன்றி உலகம் உய்யாது என்று நம்புவார்கள். அரிஜன வகுப்பாரின் மேம்பாட்டுக்கு உழைக்காமல் நாம் இந்துக்களின் மேம்பாட்டுக்குப் பாடுபட வேண்டும் என்று இவர்கள் சொல்வார்களா?

அம்பேத்கர் மேலும் சொன்னார்: “தேச சுதந்திரம் என்ற பணியை எடுத்துக் கொள்ளுங்கள். வலிமையானவர்கள் எளியவர்களை ஒடுக்குவதற்கான சுதந்திரத்திற்கும் பலவீனமானவர்கள் முழு

மனிதனாக வளர்வதற்கு வாய்ப்பு தரும் சுதந்திரத்திற்கும் இடையில் பெருத்த வேறுபாடு உள்ளது. சுதந்திரம் பற்றிப் பிதற்றுகிற இந்து தேசபக்தர்களிடம் நான் கேட்பேன்: அவர்கள் இந்த சுதந்திரத்தை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறார்கள். சமுதாய விடுதலை அப்படியே இருக்குமானால், மனிதர்களின் மனநிலை அப்படியே இருக்குமானால், பிரிட்டிஷாரிடமிருந்து அவர்கள் பெறப்போகும் சுதந்திரம் ஒடுக்கப்பட்ட, அடக்கப்பட்ட மக்களுக்கு எதிராகப் பயன்படுத்தப்படும் என்றால், ஒருவர் ஏன் சுதந்திரத்திற்காகப் போராட வேண்டும். எனக்குப் புரியவில்லை. மாறாக, எமது குறிக்கோளை நீங்கள் பரிசீலித்தால், நாங்கள் எந்தக் கொள்கைக்காகப் போராடுகிறோம் என்று பார்த்தால் எங்கள் நோக்கம் குறுகியது அல்ல என்று புரிந்து கொள்வீர்கள்."

"இன்றைய ஜனநாயக அமைப்பில் ஒரு செய்திப் பத்திரிகை என்பது நல்லதொரு ஆட்சிமுறைக்கு அடிப்படைத் தேவையாகும். மக்களுக்கு கல்விப் பயிற்சியளிப்பதற்கு இது ஒரு சாதனம். எனவே, ஒப்பிடற்கரிய துன்பதுயரங்களில் சுழல்கிற அரிஜன ஜாதியினரான நாம், இந்த நிலைமைகளைக் களைந்தெறியப் பாடுபடும்போது, தீண்டாமைக்கு ஆட்பட்ட எட்டு கோடி மக்களும் அரசியல் விழிப்புணர்ச்சி பெற்றால் ஒழிய நமது பணியில் நாம் வெற்றி பெற முடியாது....."

மேலும் அவர் பேசுகையில் கூறியதாவது: "இந்தப் பத்திரிகை தனது பக்கங்களில், நமது எம்.எல்.ஏக்கள் பல்வேறு சட்டப் பேரவைகளிலும் ஏன் ஒன்றைச் செய்தார்கள், ஏன் ஒன்றைச் செய்யவில்லை என்கிற செய்திகளை வெளியிட்டால், நமது எம்.எல்.ஏக்களின் நடத்தையில் ஒரு பெரிய மாற்றம் ஏற்படும். நமது வகுப்பினருக்கு அவமான மிழைக்கும் அராஜக நிலை மாறும். எனவே, தமது அரசியல் வாழ்க்கையில் தடம் புரண்டு போனவர்களைப் பரிசுத்தப்படுத்தும் பணிக்கு இந்தப் பத்திரிகை ஒரு சிறந்த கருவியாக விளங்கும் என்று நான் நம்புகிறேன்."

1937ஆம் ஆண்டு தனக்காக தேர்தல் பிரச்சாரம் செய்த மராத்திப் பத்திரிகை பற்றி பின்னர் குறிப்பிட்ட டாக்டர் அம்பேத்கர், வாக்காளர்களைப் பயிற்றுவிப்பதுடன், வாக்காளர்களால் தேர்ந் தெடுக்கப்பட்ட நபர்கள் மக்களுக்காக சேவை செய்யுமாறும், தமது

கடமைகளை ஒழுங்குறச் செய்யுமாறும், அவர்கள் நடத்தை தவறாது இருக்குமாறும் பத்திரிகை பார்த்துக் கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்தினார்.

அரிஜன வகுப்பாரின் தலைவர்களும் தொண்டர்களும் அடங்கிய ஒரு பெரிய கூட்டத்தில் தலைமை தாங்கிப் பேசுகையில் இத்தகைய கூட்டத்தில் பேசுவது தனக்கு பெரும் மகிழ்ச்சி தருகிறது என்றும் தனது மனப்பாரத்தை இறக்கி வைப்பதற்கு இது ஒரு சந்தர்ப்பமாக அமைகிறது என்றும் டாக்டர் அம்பேத்கர் கூறினார். "பீப்பிள்ஸ் ஹெரால்ட்டு" வெற்றிகரமாக முன்னேற வேண்டும் என்று வாழ்த்திய டாக்டர் அம்பேத்கர், அரிஜன ஜாதியினரின் முன்னேற்றத்திற்கு உழைப்பதுடன் மக்கள் பணியில் இப்பத்திரிகை மாபெரும் பங்காற்ற இருக்கிறது என்றும் குறிப்பிட்டு, இத்தகைய அரசியல் பத்திரிகையின் முக்கியத்துவத்தை எப்போதும் குறைத்து மதிப்பிட முடியாது என்று கூறினார்.

பம்பாயில் 16 ஆண்டுகளுக்கும் மேலாக தாம் ஒரு வாரப் பத்திரிகையின் ஆசிரியராக இருந்து பணியாற்றியது பலருக்குத் தெரியாது என்றார் டாக்டர் அம்பேத்கர். இப்பத்திரிகையின் செல்வாக்கு அடுத்து வந்த பொதுத் தேர்தலிலேயே தெளிவானது. அங்கு ஒரு பொதுத் தொகுதியில் எல்லா வகுப்பினரின் வாக்கு களையும் பெற்று, எதிர்த்து நின்ற காங்கிரஸ் வேட்பாளரை மிகப் பெரும்பான்மை வாக்குகள் வித்தியாசத்தில் அவர் தேர்ந்தெடுக்கப் பட்டார். அவரது வெற்றிக்கு இந்தப் பத்திரிக்கை உருவாக்கிய அரசியல் செல்வாக்கு ஒரு முக்கிய காரணமானது. எனவே, "பீப்பிள்ஸ் ஹெரால்டு" விரைவாக வளர்ச்சி பெற்று வெற்றியடைய வேண்டும் என்று வாழ்த்திய அவர், அரிஜன வகுப்பினர் ஒவ்வொரு வரும் இப்பத்திரிகையைத் தனது சொந்தப் பத்திரிகையாகப் பாவித்து வளர்ச்சியடையச் செய்ய வேண்டும் என்றார்.

அரிஜன வகுப்பினருக்குச் சேவை செய்யும் பொறுப்புமிக்க பணியை மேற்கொண்டுள்ள பத்திரிகை ஆசிரியரான பி.சி.டேயை வாழ்த்திப் பேசிய டாக்டர் அம்பேத்கர், நாட்டு மக்கள் பலரும் அரிஜன வகுப்பினரை மேம்படுத்தும் பணி என்பது, தெருப் பெருக்குகிற வேலையும் மற்ற அசிங்கமான வேலைகளும் தான் என்று எண்ணிக் கொண்டிருக்கின்றனர்.

இந்து மகாசபையை விமர்சித்துப் பேசிய டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நோக்கமெல்லாம் கோடிக் கணக்கான உழைக்கும் மக்களின் வேர்வைப் பணத்திலும் உழைப்பிலும் வாழ்கிற ஒட்டுண்ணிகளின் பிழைப்புத்தான் என்றார். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய கோட்பாடுகளின் அடிப்படையில் பொருளாதார, சமூக அமைப்புகள் அமைந்தாலொழிய உலகம் உய்ய வழியில்லை என்று கூறினர்.[1]

---

1. பீப்பிள்ஸ் ஹெரால்டு, 10, ஜனவரி, 1945.

# (100)

## தாழ்த்தப்பட்டோர் அமைப்பு ரீதியில் ஒன்றுபட வேண்டும்

பம்பாயில் நடந்த ஒரு பெரிய பொதுக் கூட்டத்தில் அண்மையில் பேசிய இந்திய அரசின் தொழில்துறை உறுப்பினர் டாக்டர் அம்பேத்கர், நாட்டின் பெரும்பான்மை வகுப்பினருடன் சமூக, பொருளாதார, அரசியல் சமத்துவம் பெறுவதற்கு, அரிஜன வகுப்பினர் ஒன்று சேர்ந்து அகில இந்திய அரிஜன வகுப்பினர் சம்மேளத்தின் பதாகையின் கீழ் நிற்பது மிகவும் அவசியம் என்று கூறினார்.

வைஸ்ராயின் நிர்வாகக் குழுவில் சேர்ந்த பின்னர், இவ் வகுப்பாரின், முன்னேற்றத்துக்காக தாம் செய்துள்ள பணிகளை அவர் ஆய்வு செய்தார். அரிஜன வகுப்பாருக்கு பதவிகளில் ஒரு பகுதியை ஒதுக்குவதற்கு அரசாங்கம் ஒத்துக் கொண்டதற்கு அவர் மகிழ்ச்சி தெரிவித்தார். இவ்வகுப்பாரின் நலன்களை எடுத்துச் சொல்வதற்கு மத்திய சட்டசபையில் மேலும் இரண்டு இடங்கள் அவரால் பெற முடிந்தது. இவ்வகுப்பு மாணவர்கள் வெளி நாட்டில் படிப்பைத் தொடருவதற்காக ஆண்டுதோறும் மூன்று லட்சம் ரூபாயை ஒதுக்குவதற்கு அரசு சம்மதித்துள்ளது. இவ்வகுப்பாருக்காகச் செய்ய வேண்டியது நிறைய உள்ளது. ஆனால் இது இவ்வகுப்பினர் எந்த அளவுக்கு கோரிக்கைகளுக்காக ஒன்றுபட்டு நிற்பார்கள் என்பதைப் பொருத்திருக்கிறது.

இவ்வகுப்பாருக்கு முடிந்த அளவு நன்மை செய்ய வேண்டும் என்பதற்காகவே நிர்வாகக் குழு உறுப்பினராக தாம் ஒத்துக் கொண்டதாக தொழில்துறை உறுப்பினர் கூறினார். உண்மையில், வைஸ்ராயை அவர் முதன் முதலில் சந்தித்த போதே தமது வகுப்பினரின் சில குறைகளையும் கோரிக்கைகளையும் அவர் முன் வைத்தார். தனது கோரிக்கைகள் பலவும் ஏற்றுக் கொள்ளப் பட்டதற்காக அவர் மகிழ்ச்சி அடைந்தார். முஸ்லீம் வகுப்பாருடன் அரிஜன வகுப்பார் சில விஷயங்களில் சமத்துவம் பெற்று விட்டனர் என்றும் அவர் கூறினார்![1]

---

1. பீப்பிள்ஸ் ஹெரால்டு, 10, ஜனவரி, 1945.

# (101)

## ஆதிவாசிகளுக்காக சட்டபூர்வ கமிஷன் தேவை

அகில இந்திய அரிஜன வகுப்பினர் சம்மேளனத்தின் மூன்றாவது மாநாடு 1945 மே 5, 6 தேதிகளில் மும்பையில் நடந்தது. தேசிய அளவிலும், சர்வதேச அளவிலும் மகத்தான பணிகள் நடந்து வரும் போது, தீண்டத்தகாதவர்களான 8 கோடி மக்களின் பிரச்சினைகளை அறிந்து கொள்ள இந்த மாநாடு முயலும். இந்தியா முழுவதிலுமிருந்து சுமார் ஆயிரம் பிரதிநிதிகள் வந்து இம் மாநாட்டில் கலந்து கொண்டனர். இவர்களில் 50 பெண்கள் உட்பட 500 பேர் நாகபுரியிலிருந்து வந்தார்கள், இருநூறு பேர் குஜராத்தி யர்கள். நாரே பார்க் என்ற பரந்த மைதானத்தில் மாநாடு நடந்தது. மாநாட்டுத் திடலுக்கு "சாத்வி ராமாபாய் அம்பேத்கர் நகர்" என்று பெயரிடப்பட்டிருந்தது.

மைதானம் கூட்டத்தால் நிரம்பி வழிந்தது. மாநாட்டில் நுழைவதற்கு ரூபாய் ஒன்று கட்டணம் வைக்கப்பட்டிருந்த போதும் ஐயாயிரம் பெண்களுடன் ஐம்பதாயிரத்துக்கும் மேற்பட்டோர் கலந்து கொண்டனர். மும்பையில் அப்போது வசித்து வந்த 2 முதல் 2½ லட்சம் தீண்டத்தகாதோர் குடும்பங்களில், ஐம்பது சதவீதம் குடும்பங்களிலிருந்து குடும்பத்துக்கு ஒருவர் வீதம் கலந்து கொண்டனர். பலர் வயதானவர்கள், இன்னும் பலர் குழந்தைகளுடன் வந்திருந்தனர்.

முதலில் இந்த மாநாடு மும்பை அரிஜன வகுப்பார் சம்மேளனத் திற்காக மட்டும் ஏப்ரல் 1945 -ல் நடத்த திட்டமிடப்பட்டிருந்தது. மும்பை அரிஜன வகுப்பார் சம்மேளனத்தின் செயலாளரான எஸ்.பி. ஜாதவ் டில்லிக்கு சென்று டாக்டர் அம்பேத்கரை சந்தித்த போது மாநாட்டின் தன்மையை மாற்றி, மும்பைக்கு மட்டுமல்லாமல் அகில இந்திய அளவில் இதை நடத்த வேண்டும் என்று அம்பேத்கர் ஆலோசனை கூறினார். இருபது கமிட்டி உறுப்பினர்களும் ஒத்துக்

கொண்டனர். சம்மேளன உறுப்பினர் எண்ணிக்கை ஆறாயிரத்திலிருந்து இருபதாயிரமாக குறுகிய காலத்தில் உயர்ந்தது.

1945 மே 5ஆம் நாள் மாலை மாநாடு தொடங்கியது. மைதானத்தின் ஒரு மூலையில் பெரிய மேடை அமைக்கப் பட்டிருந்தது. சமுதாய ஏற்றத் தாழ்வுகளை முதன்முதலில் எதிர்த்துத் தாக்கிய கௌதம புத்தரின் படம் மேடையில் நடுவில் வரையப் பட்டிருந்தது, அலங்கார வளைவுகளும் அங்கிருந்தன.

வரவேற்புப் பாடல்கள் பல மொழிகளில் பாடப்பட்டன. முந்தைய ஆண்டின் செயல் அறிக்கையை சம்மேளனத்தின் பொதுச் செயலாளர் பி.என். ராஜ்போஜ் படித்தார். மாநாட்டுக்காக அனுப்பப்பட்ட செய்திகளை வரவேற்புக் குழுவின் பொதுச் செயலாளர் படித்தார். இந்தச் செய்திகளில் ரிசர்வ் வங்கியின் கவர்னர் திரு.சி. டி. தேஷ்முக் ஐ.சி.எஸ், மும்பை மேயர் டாக்டர் ஆல்பன் டிசவ்சா, நகர இஞ்சினீயர் மொடாக், தேசிய போர் முன்னணியின் சர்ருஸ்தயம் மசானி, மதன் ஐசி.எஸ், டவுன்டன் ஐ.சி.எஸ், மும்பை கவர்னரின் ஆலோசகர் கௌசாஜி ஜஹாங்கிர், மும்பை மண்டல முந்நாள் தலைமைச் செயலாளர் பாபா சாகோப் கேர், அஸ்ஸாம் முந்நாள் அமைச்சர் கேச்சியா, மதராஸ் ஜஸ்டிஸ் கட்சியின் இ.ஆ.பெ. விஸ்வநாதன், கான்பூர் பிரன்தாத், மும்பை பாரின் வேலங்கர், பரோடாவின் மான் மற்றும் மணிலால் ஆகியோர் வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தனர்.

பல மாநாடுகள் இந்நிகழ்ச்சியின் போது நடத்தப்பட்டன. மீனாபாய் சிவராஜ் தலைமையில் மாதர் மாநாடு, மும்பை நகராட்சி தொழிலாளர்கள் சம்மேளனம், பியாரிலால் தலீப் தலைமையில் மாணவர் சம்மேளனம், ஜே.எச். சுப்பையா தலைமையில் "சம்தா சைனிக் தளம்" ஆகிய மாநாடுகள் இவற்றில் அடங்கும். இந்த மாநாடுகளில் அரிஜன வகுப்பினர் மீது ஜாதி இந்துக்கள் புரியும் கொடுமைகள் பற்றி பிரதிநிதிகள் பேசினர்.

1945 மே 5 ஆம் நாள் சுமார் ஒன்றறை லட்சம் மக்கள் கலந்து கொண்ட கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் தனது வரலாற்றுச் சிறப்புமிக்க உரையை நிகழ்த்தினார்.

(டாக்டர் அம்பேத்கர் இம்மாநாட்டுக்காகத் தயாரித்த உரை பின்னர் "வகுப்புகளுக்கு இடையில் முட்டுக்கட்டை நிலையும் அதைத் தீர்க்கும் வழியும்" என்ற தலைப்பின் கீழ் வெளியிடப்பட்டது. அதிலிருந்து ஒரு பாராவைக் கீழே கொடுத்துள்ளோம் - ஆசிரியர்கள்)

ஆதிவாசிகளின் மேம்பாட்டுக்காக, ஒரு திட்டத்தை டாக்டர் அம்பேத்கர் வெளியிட்டார்:

சீக்கியர்கள், ஆங்கிலோ - இந்தியர்கள், கிறிஸ்தவர்கள், பார்சிகள் ஆகியோரை விட ஆதிவாசிகள் அதிக எண்ணிக்கையில் இருந்த போதும் அவர்களைப் பற்றிய திட்டம் எதையும் நான் வெளியிட வில்லை. அவர்களை எனது திட்டத்தில் ஏன் சேர்க்கவில்லை என்பதற்கான காரணத்தை இப்போது விளக்குகிறேன். தமக்குக் கிடைத்துள்ள அரசியல் வாய்ப்புகளை ஆதிவாசிகள் போதுமான அளவுக்கு பயன்படுத்திக் கொள்ளவில்லை. எனவே, பெரும்பான்மை சமூகத்தினரின் அல்லது சிறுபான்மை சமூகத்தினரின் கைப் பாவையாக அவர்கள் ஆகிவிடக்கூடும். தமக்கு எந்தவித நன்மையும் செய்து கொள்ளாமல் சமநிலையை அவர்கள் குலைத்து விடலாம், தற்போதைய அவர்களது வளர்ச்சி நிலையில், அவர்களது மேம்பாட்டுக்காகச் சட்ட பூர்வ கமிஷன் ஒன்று அமைப்பதே சிறந்த வழி என்று நான் கருதுகிறேன். தென் ஆப்பிரிக்க அரசியல் சாசனத்தின் அடிப்படையில் விடுபட்ட பிரிவினர் என்றழைக்கப் படுகிற இவ்வகுப்பினரை நிர்வகிக்க வேண்டும். இந்த விடுபட்ட பிரிவினர் வசிக்கும் மாகாணங்கள் ஒவ்வொன்றும், இந்தப் பிரிவினரை மேம்படுத்துவதற்காக ஆண்டுதோறும் ஒரு தொகை செலுத்த வேண்டும் என்று கட்டாயப் படுத்தலாம்.

பம்பாய் காங்கிரசின் ஒரு பிரபல தலைவரும், அரிஜன சேவா சங்கத்தின் பொதுச் செயலாளரும், காந்திஜிக்கு நெருக்கமான வருமான ஏ.வி. தாக்கர், டாக்டர் அம்பேத்கரின் உரையில் கண்டுள்ள "வகுப்புகளிடையே ஒப்பந்தம்" என்பதை விமர்சித்திருந்தார். அவரது விமர்சனம் 1945ஆம் ஆண்டு "டைம்ஸ் ஆப் இந்தியா" பத்திரிகையில் வெளியானது.

# ஏ.வி. தாக்கரின் விமர்சனத்துக்கு டாக்டர் அம்பேத்கரின் பதில்

பெறுநர்:

ஆசிரியர், "டைம்ஸ் ஆப் இந்தியா"

ஐயா,

டைம்ஸ் ஆப் இந்தியாவில், எனது ஆலோசனைகளை விமர்சித்து ஏ.வி. தாக்கர் எழுதியுள்ள கடிதத்துக்கு பதிலளிக்க தங்கள் பத்திரிகையில் இடம் தருவீர்களா? ஆதிவாசிகளுக்கு ஆதரவாக ஆயுதம் தாங்கியுள்ள திரு. தாக்கர், நான் முன்வைத்த யோசனைகளின் மூலம் இந்த இனத்தவரின் நன்மையை நான் முற்றிலும் புறக்கணித்து விட்டேன் என்று கூறுகிறார். "ஒடுக்கப்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்களின் உரமிக்க சாம்பியன்" என்று என்னை அழைக்கிறார் தாக்கர். அல்லலுறும் மக்களின் உலகத் தலைவராக நான் என்னை அழைத்துக் கொண்டதில்லை என்று தாக்கருக்கு நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். என்னுடைய எளிய வலிமைக்கு தீண்டத் தகாதோர் பிரச்சினை ஒன்றே போதும். அவருடைய பிடியிலிருந்தும் காந்தியின் பிடியிலிருந்தும் இவர்களைக் காப்பாற்ற முடிந்தால் அதுவே எனக்கு மகிழ்ச்சி அளிப்பதாகும்.

மற்ற குறிக்கோள்கள் எல்லாம் உன்னதமானவை அல்ல என்று நான் சொல்லவில்லை. மனித ஆயுள் மிகவும் குறுகியது என்று அறிவேன். எனவே, தாக்கரே சொல்கிறபடி ஆதிவாசிகள் கூட இழிவாகக் கருதுகிற தீண்டத்தகாதவர்களுக்கு சேவை செய்ய மட்டுமே விரும்புகிறேன்.

பத்திரிகைகளில் எனது உரையின் சில பகுதிகளைப் பார்த்து விட்டு தாக்கர் விமர்சனம் செய்யப் புகுந்ததுதான் எனக்கு வருத்த மளிக்கிறது. என்னுடைய உரையை அவர் முழுதும் படித்திருப் பாரானால், ஆதிவாசிகள் நலன்களைப் புறக்கணிப்பதற்கு நேர் மாறாக, அவர்களின் மேன்மைக்காக சிறந்த பயனுள்ள ஆலோசனை களைதான் முன்வைத்துள்ளேன் என்பதை அவர் உணர்வார். இந்த யோசனைகளைப் பற்றி விரிவாகச் சொல்ல இங்கு இடமில்லை. எனினும், ஒருதலைப் பட்சமானவன், சிறுமதியாளன் என்று என்மீது குற்றம் சுமத்துவதற்கு முன்னால், ஆதிவாசிகளுக்காக நான்

முன்வைத்துள்ள யோசனைகள் பற்றி தாக்கர் சிந்தித்துப் பார்ப்பது நல்லது.

சட்ட சபையில் இட ஒதுக்கீடுப் பிரச்சினையில் ஆதிவாசி இனத்தவரை நான் ஏன் சேர்க்கவில்லை என்றால் அதற்குக் காரணம் எனக்கு அவர்கள் மீதுள்ள வெறுப்பு அல்ல. தமது நன்மைக்காக அரசியல் அதிகாரத்தைப் பயன்படுத்திக் கொள்ளும் திறன் அவர்களுக்கு இன்னும் இல்லை என்று நாம் நம்புவதே அதற்குக் காரணம். இந்த ஆதிவாசி இனத்தாருக்காகவும் மற்றோருக்காகவும் சமூக சேவகராக இருந்து அவர் பணியாற்றிய இத்தனை காலத்திலும், அவர்கள் தமது நிலையை உணர்ந்து கொள்கிற விதத்தில், உயர் மட்டத்தில் இருக்கும் இந்துக்களின் மட்டத்துக்கு உயர வேண்டும் என்று அவர்கள் அபிலாஷை கொள்ளும்படிக்கு ஆதிவாசிகள் கல்வித் தரத்தை உயர்த்துவதற்கு இவர் ஏதாவது செய்திருக்கிறாரா என்று நான் கேட்க விரும்புகிறேன். கடந்த 20 ஆண்டுகளில் ஆதிவாசிகளின் மத்தியிலிருந்து ஒரு பட்டதாரி கூட உருவாகவில்லை என்பது தாக்கரின் சேவையிலுள்ள வேதனை தரும் குறைபாடு அல்லவா?

இரண்டாவதாக, சட்டசபைகளில் ஆதிவாசி இனத்தாருக்கு அதிக பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டும் என்று அவருக்கு திடீரென்று தோன்றியதேன் என்று தாக்கர் எனக்குச் சொல்ல வேண்டும். 1935 இந்திய அரசுச் சட்டத்தின்படி ஆதிவாசி இனத்தாருக்கு அவர்களின் ஜனத்தொகையுடன் ஒப்பிடும் போது கொடுக்கப்பட்டுள்ள பிரதிநிதித்துவம் மிகக்குறைவே. இந்திய அரசின் இந்தச் சட்டத்தில் உள்ள இத்தகைய சமத்துவமின்மைக்கு எதிராக தாக்கர் குரல் கொடுத்தாரா? சப்ரூ கமிட்டியின் சிபாரிசுகள் பற்றி தாக்கர் என்ன சொல்கிறார். என்மீது அவர் காட்டுகிற வன்மம் அவர்கள் மீது அவருக்கு இல்லை போலும்.

மூன்றாவதாக, ஆதிவாசி இனத்தவர், தமது மக்கள் தொகைக்கு ஏற்ப பிரதிநிதித்துவம் பெற வேண்டும் என்று தாக்கர் விரும்பினால், அவர்கள் அதிகமாகக் கூடப் பிரதிநிதித்துவம் பெறட்டும், முஸ்லீம் களின் பிரதிநிதித்துவத்தைக் குறைப்பதன் மூலமே இது நிகழ முடியும் என்று அவருக்குத் தெரிய வேண்டும். ஆதிவாசிகளின் நலனுக்காக அவர் முஸ்லீம்களுடன் போராடத் தயாரா? தீண்டத்தகாதவர்களின்

பிரதிநிதித்துவத்தைக் குறைத்து அவர்கள் மீது தாக்கர் அன்பு காட்ட வேண்டியதில்லை. கடந்த காலத்தில் நியாயமான பிரதிநிதித் துவத்தைப் பெறாத பலவீனமான தீண்டத்தகாதார் சமூகத்துக் கெதிராக கத்தியைத் தூக்குவதன் மூலம் தன்னை ஒரு வீரன் என்று தாக்கர் நிரூபித்துக் கொள்ள முடியாது. தன்னை ஆதிவாசிகளின் நண்பன் என்றும் அவர்களது வீரன் என்றும் அவர் காட்டிக் கொள்ள விரும்பினால் அதீத பிரதிநிதித்துவம் பெற்றுள்ள முஸ்லீம்களுடன் இவர் போராட வேண்டும்.[1]

பம்பாய் 17, மே, 1945 - டாக்டர் அம்பேத்கர்

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா, மே 18, 1945.

## (102)

# இந்தியா சுதந்திரம் அடைய வேண்டும் என்பதில் எந்த சர்ச்சையும் இல்லை

இந்திய அரசின் தொழில்துறை உறுப்பினரான டாக்டர் அம்பேத்கர், பம்பாய் "கபே மாடலில்" 20 மே 1945இல் அவருக்கு அளிக்கப்பட்ட விருந்தின் போது, வகுப்புவாதப் பிரச்னை தவிர வேறு பிரச்னை எதுவும் இந்திய அரசியல் கட்சிகளிடையே இல்லை என்று கூறினார். நமது இறுதிக் குறிக்கோள் இந்திய அரசியல் சுதந்திரம் என்பதில் அரசியல் கட்சிகளுக்கிடையே கருத்து வேறுபாடு இல்லை.

இன்றைய நிலைமையை ஆய்வு செய்த டாக்டர் அம்பேத்கர் "பெரும்பான்மையோரே ஆட்சி செய்யலாம் என்பது சரியா?" என்ற கேள்விக்குள் இதனை அடைத்து விடலாம் என்று சொன்னார். அது தவறு என்பதே அவரது கருத்து. அரசாங்கத்தின் தேவைகளை நிறைவு செய்வதே அதிமுக்கியம், தனிநபர் நலன் முக்கியமே அல்ல என்று கருதுவது பாசிசக் கோட்பாடு ஆகும், தனிநபரைப் பாதுகாப்பது அரசின் முதல்பெரும் கடமை என்றும் தனிநபரை ஒடுக்குவதை சகித்துக் கொள்ள முடியாது என்றும் அவர் மேலும் சொன்னார்.

பெரும்பான்மை என்பதை, அரசியல் பெரும்பான்மை என்றும், வகுப்பு ரீதிப் பெரும்பான்மை என்றும் வகைப்படுத்தலாம். அரசியல் பெரும்பான்மை மாறிக்கொண்டே இருக்கும். இத்தகைய பெரும் பான்மை சகித்துக் கொள்ளக் கூடியதே. ஆனால் பிறப்புவழிப் பெரும்பான்மை சகிக்க முடியாதது என்றார் அம்பேத்கர், "வெறும் பெரும்பான்மை" என்ற கோட்பாட்டிலிருந்து விலகிச்சென்றுதான் இந்தப் பிரச்சினையைத் தீர்க்க முடியும். இதைத் தீர்த்தால் அவர்களைப் பாதிக்கும் பிற பிரச்சினைகளுக்கு விரைவில் தீர்வு கிட்டும்.

'டொமினியன் அந்தஸ்தா', 'சுதந்திரமா' இதில் எதை ஒத்துக் கொள்வது என்ற கேள்வி பற்றிக் குறிப்பிட்ட டாக்டர் அம்பேத்கர் இது சர்ச்சைக்குரிய ஒரு பிரச்னையே அல்ல என்றார். முதலில் சொன்னது இரண்டாவதை எட்டுவதற்கான முதல்படி என்றார்.

டொமினியன் அந்தஸ்தை இந்தியா ஒத்துக்கொள்ளலாம் என்பது அவரது தனிப்பட்ட கருத்தாக இருந்தது. தக்க வைத்துக் கொள்ள முடியாத விடுதலையால் என்ன பயன் என்றார் அவர். பிரிட்டிஷாரின் தளையிலிருந்து விடுவித்துக்கொள்ள வேண்டும் என்பதைவிட, அமைந்துவிட்ட சுதந்திரத்தை எப்படித் தக்கவைத்துக் கொள்வது என்பதில்தான் அவர்கள் உறுதியான முடிவு காண வேண்டும்.

சுதந்திர இந்தியா சமாளிக்க வேண்டிய இரண்டு பிரச்சினைகள் தொழில் மயமாக்குதலும் பாதுகாப்பும்தான் என்று டாக்டர் அம்பேத்கர் சொன்னார். இந்த இரண்டு துறைகளிலும் ஒரே சமயத்தில் முன்னேறுவதற்குப் போதுமான வளம் இந்தியாவில் உள்ளதா என்பதில் பெரும் சந்தேகம் கொண்டார் அவர். டொமினியன் அந்தஸ்து பிரிட்டனின் மீது எந்தப் பொறுப்பையும் சுமத்தாது. சர்வதேசச் சட்டப்படி இதற்கு முழு மேலாண்மை என்றுதான் பொருள்.

போருக்குப் பிந்தைய காலத்தில் தொழிலாளர் நலனுக்காக அரசாங்கம் என்ன செய்துள்ளது என்பது பற்றிக் குறிப்பிட்டு, சமூகப் பாதுகாப்பு உண்மை அறியும் கமிட்டி அமைக்கப்பட்டிருக்கிறது, அது தனது அறிக்கையை அடுத்த ஆகஸ்டில் சமர்ப்பிக்கும். அதன் பின் கமிட்டியின் சிபாரிசுகள் பற்றிப் பரிசீலிக்க நிபுணர்கள் நியமிக்கப்படுவர் என்று கூறினார்.

ஜி.என். சஹஸ்ரபுதே நன்றி கூறினார்![1]

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா, மே 21, 1945.

# (103)

# மனிதனை அரசியல் உணர்வுள்ளவனாக மாற்றுவதற்கு முழு முயற்சி செய்யுங்கள்

1945ஆம் ஆண்டு அக்டோபர் 3ஆம் தேதி புதன் இரவு புனாவில் ஒரு கூட்டத்தில் பேசிய டாக்டர் அம்பேத்கர், இந்தியா எதிர்கொள்ளும் மிக முக்கியமான பிரச்சினைகளைச் சமாளிக்க முடியாமல் காங்கிரஸ் கட்சி திணறுவதற்குக் காரணம், அவர்கள் அரசியல் அறியாமையில் உழலுவதும் அரசியலை கற்றுக் கொள்ள மறுப்பதுமே.

புனாவின் அரசியல் பள்ளிக்கூடத் திறப்பு விழாவில் அப்போது டாக்டர் அம்பேத்கர் பேசினார். இந்தப் பள்ளியில் பயில்பவர்கள் அரசியலில் ஆர்வம் கொண்ட அரிஜன வகுப்பினர். காந்திஜி இந்திய அரசியல் வானில் நுழைவதற்கு முன்னால் இரண்டு அரசியல் சிந்தனைகள் நிலவிவந்தன என்று சொன்னார் டாக்டர் அம்பேத்கர். தாராள சிந்தனை படைத்தவர்கள் கோகலே, ரானடே தலைமையில் இயங்கினர். அடுத்த சிந்தனையோட்டம் வங்காளப் புரட்சியாளர்கள் பங்கு கொண்டது. இந்த இரு சிந்தனை ஓட்டங்களும் விஷய மறிந்த திறமைசாலிகளைக் கொண்டிருந்தன. முட்டாள்களோ, திறமையற்ற வர்களோ உள்ளே நுழைய முடியாதபடி உயர் தகுதிகளைக் கோரியது தாராள சிந்தனையோட்டம். கற்பது, அறிவு பெறுவது இதுவே அவர்களின் நோக்கம். இந்த மேடையில் நுழைய அரசியலில் தெளிந்த அறிவு வேண்டும்.

புரட்சிகர சிந்தனையோட்டமும் உயர்ந்த தரம் கொண்டிருந்தது. தனது உயிரைப் பயணம் வைக்கத் தயாராக இல்லாத எவரும் இந்தக் கட்சியில் உறுப்பினராக முடியாது. திரு. காந்தியின் மேடையோ முட்டாள்கள், குறும்புக்காரர்கள் இருவருக்குமே திறந்திருந்தது. காங்கிரஸ் அமைப்புக்கு, இதுவரை போற்றப்பட்டு வந்த கற்றலும் ஞானமும் தேவையானவையாகக் கருதப்படவில்லை. இந்தியாவில் பொது வாழ்வில் இதனால் பல துன்பங்கள் நேர்ந்துள்ளன. காங்கிரஸ் கட்சியால் முக்கிய பிரச்சினை எதையும் தீர்க்க முடியவில்லை. வகுப்புவாதப் பிரச்சினை அவைகளில் ஒன்று.

காலத்துக்கும், சூழ்நிலைகளுக்கும் ஏற்ப மாறுதல்கள் செய்யாத எந்த நிறுவனமும் எந்த அமைப்பும் நீண்டநாள் வாழ முடியாது.

இதே போல ஒரு சில பண்டைக் கருத்துக்களைப் புனிதமாகக் கருதும் சமுதாயமும் மாற்றங்கள் செய்து கொள்ளாது. இத்தகைய சமுதாயங்கள் இறுதியில் அழிந்துபடும். சொந்தக் கருத்தோட்டத்தையோ, கோட்பாட்டையோ நிறுவுவது தமது நோக்கமல்ல என்றார் டாக்டர் அம்பேத்கர். தனது மறைவுக்குப் பின்னர் இத்தகைய ஒரு பள்ளி தோன்றினால் அதற்காக வருந்த நேரும் என்றார்.

அரசியல் கோட்பாடுகளை உருவாக்குவதால் துன்பங்கள் வருவதை அவர் அறிவார். மஹாராஷ்டிராவில் அவர் ஒரு அக்கறை யுள்ள அரசியல் மாணவன். ஒரு புதிய பிரச்னை தோன்றினால், மக்கள் கமிட்டிகளில் கூடி, சிந்தனைகளை வழிநடத்தி, கற்பனை செய்து, இத்தகைய நிலைமைகளில் திலகர் என்ன செய்திருப்பார் என்று கணிக்க முயல்வது கண்டு தாம் வியப்படைவதாக டாக்டர் அம்பேத்கர் கூறினார். நீண்ட காலத்துக்கு முன்னால் இறந்து போன மனிதர்களின் உயிர்த் தூண்டுதலுக்காகக் காத்திருப்பது ஒரு விளிம்பு நிலை வாழ்க்கையாகும்.

ஒருவர் சரியான பாதையில் செல்கிறார் என்று உறுதி கொண்டால் மட்டும் மாணவர்கள் அவரைப் பின்தொடர வேண்டும் என்று மாணவர்களிடம் அவர் கேட்டுக் கொண்டார். அரசியல் கல்விக்கு வழிசெய்துள்ள நிறுவனத்தின் நோக்கத்தையும் பாராட்டினார் டாக்டர் அம்பேத்கர். மனிதன் ஒரு அரசியல் விலங்கு என்று சிலர் நம்புவதை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. மனிதன் அரசியல் உணர்வு பெறுவதற்காக முனைப்புடன் முயலவேண்டும் என்று கூறினார் டாக்டர் அம்பேத்கர்.[1]

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா, அக்டோபர் 4, 1945.

## (104)

# 1942 ஆகஸ்டில் அரசாங்கம் எடுத்த நடவடிக்கைகள் நியாயமானதே

*1945 நவம்பர் 30ஆம் நாள் அகமதாபாத் நகரசபை டாக்டர் அம்பேத்கருக்கு வரவேற்பளித்தபோது, 1942 ஆகஸ்டு மாதம் அரசாங்கம் எடுத்த அதிதீவிர, நடவடிக்கைகள் நியாயமானவையே என்று குறிப்பிட்டார். இல்லையென்றால் இந்தியா ஜப்பானியர்களாலும் ஜெர்மானியர்களாலும் கைப்பற்றப்பட்டிருக்கும் என்றார். "வெள்ளையனே வெளியேறு" இயக்கத்தின்போது அடக்குமுறை பயன்படுத்தப்பட்டதை நியாயப்படுத்தியதனால் மக்களின் உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டு ஏற்கனவே அவர்களிடமிருந்த வெறுப்புணர்வை அதிகப்படுத்தியது. சுதந்திரப் போராட்ட காலத்தில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் மற்றவர்களுக்கும் மத்தியில் அடைக்க முடியாத இடைவெளி தோன்றுவதற்கு இதுவே மூல காரணமாயிற்று.*

---

# (105)

## காந்திஜி ஏற்க மறுத்தார்

இந்திய அரசின் தொழில்துறை உறுப்பினரான டாக்டர் அம்பேத்கர் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சம்மேளனமும், ஷோலாபூர் நகராட்சித் தொழிலாளர்கள் சம்மேளனமும் ஜனவரி 16, 1946இல் அளித்த வரவேற்புக்குப் பதிலளித்துப் பேசியபோது, பம்பாயில் நடந்த காந்தி - ஜின்னா பேச்சு வார்த்தைகள் பற்றிக் குறிப்பிட்டு, தான் மகாத்மா காந்திக்கு சுமார் 6 மாதங்களுக்கு முன் ஒரு கடிதம் எழுதியதாகவும், இருவர் கண்ணோட்டங்களிடையில் பொதுத் தன்மை இல்லாததால் அவர் தம்மைச் சந்திக்க மறுத்துவிட்டதாகவும் சொன்னார்.[1]

---

1. பாம்பே கிரானிகிள், ஜனவரி 17, 1946.

# (106)

# தாழ்த்தப்பட்டோரின் கோரிக்கைகளை ஒரு சர்வதேச நடுவர் மன்றத் தீர்ப்புக்கு விடலாம்

1946ஆம் ஆண்டு பிப்ரவரி 17இல், பம்பாய் நாரே பார்க்கில் நடந்த கூட்டத்தில், தேர்தல் பிரச்சாரத்தைத் துவக்கி வைத்துப் பேசுவதற்காக டாக்டர் அம்பேத்கர் எழுந்தபோது அங்கிருந்த 70,000 மக்களும் உற்சாக ஆரவாரம் செய்தனர்.

கூட்டத்தில் நுழைவுக் கட்டணமாக வசூலிக்கப்பட்ட ரூ 17,000/- தேர்தல் பிரச்சாரத்திற்காக டாக்டர் அம்பேத்கரிடம் வழங்கப் பட்டது. சம்மேளனத்தின் பம்பாய் கிளைத் தலைவர் ஜி.எம். ஜாதவ், தேர்தல் பிரச்சாரத்திற்காக வசூல் செய்யப்பட வேண்டிய தொகை ரூ 50,000/- மே மாதம் எட்டப்படும் என்று தெரிவித்தார்.

தாழ்த்தப்பட்ட வகுப்புத் தொண்டர்கள் அளித்த அணிவகுப்பு மரியாதையை ஏற்றுக் கொண்ட டாக்டர் அம்பேத்கர், தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் கொடியை ஏற்றிவைத்து பிரசார விழாவைத் தொடங்கி வைத்தார். கூட்டம் பெருமளவு கூடியிருந்த போதும் கூட்டம் முடியும் வரை ஒழுங்கு நிலவியது. டாக்டர் அம்பேத்கரின் பேச்சின்போது அவ்வப்போது பெருத்த ஆரவாரம் எழுந்தது.

பம்பாய் நாரே பார்க்கில் ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் தேர்தல் பிரசாரத்தைத் துவக்கி வைத்துப் பேசிய டாக்டர் அம்பேத்கர், தாழ்த்தப்பட்டோரின் கோரிக்கைகள் நியாய மற்றவை என்று காங்கிரஸ் கட்சி கருதினால் அதனை ஒரு சர்வதேச நடுவர் மன்றத்தின் தீர்ப்புக்கு விடலாம் என்றும் அதன் தீர்ப்புக்கு தாம் கட்டுப்படுவதாகவும் தெரிவித்தார். காங்கிரசார் கூச்சலிட்டும் கேட்டும் சுயராஜ்யத்தை அடைந்தபின் தேசத்தின் மீது பிரிட்டி ஷாருக்கு பதில் இந்துக்கள் ஆதிக்கம் செலுத்துவர் என்றார்.

கடந்த சில நாட்களில் காங்கிரசார் நிகழ்த்திய பேச்சுகளைக் கேட்டால், மத்தியில் ஒரு தேசிய அரசு அமைக்கப்பட்டால் உணவுப்

பிரச்சினை உடனடியாகத் தீர்க்கப் பட்டு விடும் என்று தோன்றும். கண்டிப்பாக காங்கிரசார் ஒன்றும் அற்புதம் நிகழ்த்தி விட முடியாது என்று கூறினார் டாக்டர் அம்பேத்கர். உணவுப் பிரச்சினையைத் தீர்த்துவிடப் போவதாகப் பேசுவது வெறும் பேச்சு.

தாழ்த்தப்பட்டோரின் இயக்கத்தை வலுப்படுத்த வேண்டிய அவசியத்தை வலியுறுத்திய டாக்டர் அம்பேத்கர், காங்கிரசார் சுயராஜ்யம் கோரிக் கூச்சலிடுகிறார்கள் என்றார். ஆனால், காங்கிரசார் கோரும் சுயராஜ்யம், பிரிட்டிஷாரின் ஆதிக்கத்துக்குப் பதிலாக இந்துக்களின் ஆதிக்கத்தை ஏற்படுத்தும். தாழ்த்தப்பட்டோர் இவ்வாறு நேருவதை அனுமதிக்கக் கூடாது. அவர்களும் சுதந்திரமாக இருக்க வகை செய்யும் உரிமைகள் அனைத்தையும் பெற்றாக வேண்டும்.

தாழ்த்தப்பட்டோர் முஸ்லீம்களைப் போல நாட்டைப் பிரித்துக் கொடுக்கும்படி கேட்கவில்லை. நியாயமான ஏற்பாடு ஒன்று தேவை என்றுதான் அவர்கள் கோருகிறார்கள். பல நூறு ஆண்டு களாக அவர்கள் ஒடுக்கப்பட்டிருந்தார்கள். இப்போது அவர்கள் சுரண்டப்படுவதை ஒத்துக் கொள்ள மாட்டார்கள்.

அவர்கள் விரும்புவதெல்லாம் சமமான அரசியல் உரிமைகள் தான்; அதீத சலுகைகள் அல்ல. அவர்களின் கோரிக்கைகள் நியாய மற்றவை என்று காங்கிரசார் நம்பினால் இந்த விஷயத்தை சர்வதேச நடுவர் மன்றத்தின் தீர்ப்புக்கு விடலாம். அந்த மன்றத்தின் தீர்ப்புக்கு அவர் கட்டுப்படத் தயார்.

இந்த இலக்கை எட்டுவதற்கு எந்தத் தியாகமும் புரிய அவர்கள் தயாராக இருக்கிறார்கள் என்று டாக்டர் அம்பேத்கர் சொன்னார். காங்கிரசாரோ, மற்றெந்த அரசியல் அமைப்போ அவர்களைப் பயமுறுத்த முயல வேண்டாம். பம்பாய் சட்டசபையின் ஆரம்ப கட்டத் தேர்தலின் போது தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஒரு வாக்காளர் கொல்லப்பட்டார். இந்தச் சாவுக்குக் காங்கிரசாரே பொறுப்பு என்று குற்றஞ் சாட்டிய டாக்டர் அம்பேத்கர், கொல்லப் பட்ட வாக்காளரின் சவ ஊர்வலத்தின் போது போலீசார் தடியடி நடத்தியதைக் கண்டித்தார்.

நாட்டின் அரசியல் களம் முழுவதையும் காங்கிரஸ் ஆக்கிரமித்துக் கொள்ள முயல்கிறது. இதற்காக ஊழல் செய்யக் கூட அது தயங்குவதில்லை என்று கூறினார் டாக்டர் அம்பேத்கர். தனிநபர்களை உயர்த்தி வைத்து, ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனம் போன்ற அமைப்புகளை மட்டந் தட்ட அது முயல்கிறது.

ஆயினும் இத்தகைய முயற்சிகளை முறியடிக்கும் அளவுக்கு சம்மேளனமும் இப்போது வலுப்பெற்றுள்ளது. அதன் பலம் மேலும் மேலும் அதிகரித்தும் வருகிறது. தாழ்த்தப்பட்டோருக்கு அரசியல் உரிமைகள் அளிக்கப்பட்டால் ஒழிய அவர்கள் இந்துக்களிடம் எந்த சம்பந்தமும் வைத்துக் கொள்ள மாட்டார்கள்.

மத்தியில் ஒரு தேசிய அரசு அமைந்தால் உணவுப் பிரச்சினை தீர்க்கப்பட்டுவிடும் என்று கடந்த சில நாட்களாகக் கூறி வருகிறார்கள். காங்கிரஸ்காரர்கள் அற்புதம் ஒன்றும் நிகழ்த்திவிட முடியாது. நிர்வாகக் குழுவில் சில உறுப்பினர்கள் பதவிக்கு இந்துக்கள் வந்துவிடுவதால் மட்டுமே இப்பிரச்னையைத் தீர்வு கண்டுவிடலாம் என்பதெல்லாம் வெட்டிப் பேச்சு.

மக்களிடையே பிளவுண்டாக்கி நாட்டை ஆள்கிற கொள்கையை பிரிட்டிஷார் கடைப்பிடிக்கிறார்கள் என்று காங்கிரசார் குற்றஞ் சாட்டுகிறார்கள். கடந்த பொதுத் தேர்வில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரைப் பொறுத்தவரை, இதே வேலையைத்தான் காங்கிரஸ் செய்து சில வெற்றிகளையும் பெற்றது. வருகின்ற தேர்தல்களிலும் இதே தந்திரத்தைத்தான் காங்கிரஸ் கடைபிடிக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் தாழ்த்தப்பட்ட மக்கள் இம்முறை பலிகடா ஆக மாட்டார்கள்.

தேர்தல்களின்போது முதலாளிகளின் ஆதரவு காங்கிரசுக்கு கிடைக்கும் என்பதால் அமைப்பு ரீதியில் காங்கிரசுடன் தாழ்த்தப் பட்ட வகுப்பார் போட்டியிட முடியாது என்றார் அவர். வாக்காளர்களை வாக்குச் சாவடிக்கு அழைத்துச் செல்வதற்கு கார்களை எங்களால் ஏற்பாடு செய்ய முடியாது. அரிஜன வகுப்பைச் சேர்ந்த ஒவ்வொருவரும் வாக்குச் சாவடிக்கு நடந்துசென்று, தனது வாக்கைச் செலுத்தி, சம்மேளனத்தின் பின்னால் உறுதியாக நிற்பதை உலகுக்கு காட்டுவர் என்று நம்பிக்கை தெரிவித்தார் அம்பேத்கர். காங்கிரஸ்

ஆதரவாளர்களை விட மிக அதிக அளவில் சம்மேளன ஆதர வாளர்கள் ஆரம்ப கட்டத் தேர்தல்களில் பணியாற்றியதன் மூலம் சம்மேளனத்தின் பலம் நிரூபிக்கப்பட்டு விட்டது. அந்த முடிவுகளைக் கண்ட காங்கிரசார், அவர்களுக்கு ஜனநாயக நேர்மை இருந்திருந்தால், போட்டியிலிருந்து விலகியிருக்க வேண்டும்.

தம்மிடம் அளிக்கப்பட்ட தேர்தல் நிதி பற்றிக் குறிப்பிட்டு, இத்தொகை சிறியதாக இருந்த போதிலும் அதற்காக தாம் சிறிதும் கவலைப்படவில்லை என்றும், ஏனென்றால் தேர்தல்கள் "சுத்த மாகவும், நேர்மையாகவும், அப்பழுக்கின்றியும் நடைபெறும்" என்றார். "காங்கிரஸ் தலைவர்கள் வாக்குகளை விலைக்கு வாங்குவதற்காக ஏராளமான பணம் வசூலித்து வருகின்றனர்."

முன்னர் பேசிய பி.கே. கெய்க்வாட் அரிஜன வகுப்பினருக்கு காந்தி எதுவுமே செய்யவில்லை என்றார். ராவ் பகதூர்களாக மாறி, நல்ல வேலைகள் பெற வேண்டும் என்பதற்காக அரசாங்கத்தை அரிஜன வகுப்பினர் அணுகுகிறார்கள் என்று மதராசில் காந்தி பேசியதை அவர் கண்டனம் செய்தார்.

சத்தாரா, பெல்காம் மாவட்டங்களில் தேர்தல் பயணத்தை முடித்துக் கொண்டு ஞாயிறு காலை பம்பாய் திரும்பிய டாக்டர் அம்பேத்கர் திங்கள் காலையில் புதுடில்லிக்குப் புறப்பட்டுச் சென்றார்.

எனினும் இந்த விஷயத்தைப் பற்றிய டாக்டர் அம்பேத்கரின் பேச்சில் சில புதிய பரிமாணங்கள் இருந்தன. அவற்றை 'ப்ரீ ப்ரஸ் ஜர்னல்' வெளியிட்டுள்ளது. அப்பரிமாணங்களாவன:

2000 ஆண்டுகளாக நம்மைக் கொடுமையாகவும் கேவல மாகவும் நடத்திய இந்துக்களிடம் எங்களுக்கு நம்பிக்கை இல்லை. எங்களை நாங்களாகவே அமைப்பு ரீதியில் ஒன்றுபடுத்தும் சக்தி எம்மிடம் இருக்கிறது. எங்களின் உரிமைகளைப் பெறுவதற்கு நாங்கள் அனைத்து முயற்சிகளையும் செய்வோம் என்றார் இந்திய அரசின் தொழில்துறை உறுப்பினரான டாக்டர் அம்பேத்கர். இன்று மாலை நாரே பார்க்கில் நடைபெற்ற மாபெரும் பொதுக்கூட்டத்தில் பேசும் போது இவ்வாறு சொன்னார்:

"'சுயராஜ்யம்' என்பதும், தேசிய அரசு என்பதும் இந்துக்களின் ஆட்சிதான், இதை நாங்கள் ஏற்றுக்கொள்ள முடியாது. எனவே, பிரிட்டிஷார் வெளியேறுவதற்கு முன்னால் உரிமைகளைப் பிரித்துக் கொடுத்துவிட வேண்டும்" என்று அவர் கோரினார்.[1]

---

1. பிரீ பிரஸ் ஜர்னல் பிப்ரவரி 18, 1946.

# (107)

# தாழ்த்தப்பட்ட வகுப்பினர் புறக்கணிக்கப்பட்டனர்

*1946 மார்ச் 12ஆம் தேதி டாக்டர் அம்பேத்கர் சென்னையில் பேசினார். முதல் வட்டமேசை மாநாட்டிலிருந்து இன்றுவரை, தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் மேம்பாட்டுக்காகத் தாம் செய்து வந்துள்ள முயற்சிகளை எடுத்துச் சொன்னார். இந்த முயற்சிகளை காங்கிரஸ் முறியடித்தது என்று குற்றஞ் சாட்டினார்.*

*தாழ்த்தப்பட்ட மக்களைப் புறக்கணிப்பதற்காகவே தனது சக்தியை காங்கிரஸ் பயன்படுத்தியது. தீண்டத்தகாதோரைப் புறக்கணிப் பதற்காக ஒரு திட்டம் தீட்டி அது முஸ்லீம்களை அணுகியது. முஸ்லீம்கள் தாழ்த்தப்பட்டோரை ஆதரிக்கக் கூடாது என்ற நிபந்தனையின் பேரில் முஸ்லீம்களின் 14 அம்சக் கோரிக்கைகளை காந்தி ஏற்றுக்கொண்டார். ஆனால் முஸ்லீம்களிடம் இருந்த நற்குணத்தினால் இந்த யோசனையை அவர்கள் நிராகரித்து தாழ்த்தப்பட்டோரைத் தனிமைப்படுத்த அவர்கள் ஒத்துக் கொள்ள வில்லை.*

---

# (108)

## தாழ்த்தப்பட்ட வகுப்பினர் எங்கே இருந்தனரோ அங்கேயே விடப்பட்டனர்

வங்காள அமைச்சர் ஜே.என். மன்டல் தலைமையில் இங்கு இன்று நடந்த ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனக் கூட்டத்தில் பேசிய டாக்டர் அம்பேத்கர், இந்தியாவில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரை பிரிட்டிஷ் அமைச்சரவைத் தூதுக்குழு நடத்திய விதம் அவர்களின் மீது அணுகுண்டுத் தாக்குதல் நடத்தியதாக இருந்தது என்று வர்ணித்து அதற்காக ஆழ்ந்த வேதனை அடைந்தார்.

ஆறு கோடி மக்களைக் கொண்ட தாழ்த்தப்பட்ட வகுப்பாருக்கு இடைக்கால அரசில் ஒரே ஒரு இடம் மட்டும் ஒதுக்கப் பட்டுள்ளது கண்டு டாக்டர் அம்பேத்கர் வியப்படைந்தார். 30 அல்லது 40 லட்சம் மக்கள் கொண்ட மற்ற வகுப்பினருக்கும் தலா ஒரு இடம் தரப்பட்டிருக்கிறது.

இந்தியாவில் பிரிட்டிஷார் ஆட்சி நிறுவ உதவியர்கள் பீகார் மற்றும் பம்பாயைச் சேர்ந்த தாழ்த்தப்பட்ட வகுப்பார்தான் என்று அறிவித்த டாக்டர் அம்பேத்கர், ஆனால், கடந்த 150 ஆண்டுக் கால பிரிட்டிஷ் ஆட்சியில்இந்துக்களும் முஸ்லீம்களும்தான் இந்த ஆட்சியின் பலனை அனுபவித்து வந்துள்ளனர் என்றார். தாழ்த்தப் பட்ட வகுப்பினர் தொடக்கத்தில் எந்த இடத்தில் இருந்தார்களோ அதே நிலையில் இன்னும் இருக்குமாறு விடப்பட்டுள்ளனர் என்றார். கிணறுகளும் கோயில்களும் அவர்களுக்கு மூடப்பட்டுள்ளன. தர்மசாலைகள், அலுவலகங்கள், கச்சேரிகளிலும் நுழைய அவர்களுக்கு அனுமதி இல்லை. அமைச்சரவை விஜயம், பாதையை இரு வழிகளாகப் பிரித்து விட்டது.

நடக்க இருக்கும் போராட்டத்தில் அரசியல் அதிகாரம் அவர்களுக்குக் கிட்டவில்லை என்றால் தாழ்த்தப்பட்ட வகுப்பி னருக்கு எதிர்காலமே இல்லை என்று டாக்டர் அம்பேத்கர் எச்ச ரித்தார். மற்ற வகுப்பினர் ஏராளமான அதிகாரங்களை வைத்துக்

கொண்டு "பறைய நாய்"களாக நம்மைப் பாவித்து நசுக்கிவிடுவர் என்றார்.

மகாண சட்டமன்றங்களில் உள்ள தாழ்த்தப்பட்ட வகுப்புப் பிரதிநிதிகளிடம், இந்தச் சோதனைக் காலத்தில் தமது கடமையைச் சிந்தித்துப் பார்த்து, தமது நிலையை மேம்படுத்திக் கொள்ள முன்னேறிச் செல்ல உதவுமாறு கேட்டுக் கொண்டார்.

அகில இந்திய ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் தலைவரான டி.என். ராஜ்போஜும் கூட்டத்தில் பேசினார்.[1]

---

1. ஜெய் பீம், ஆகஸ்டு 13, 1946.

# (109)

# எமது மக்களுக்கும் இந்த நாட்டுக்கும் நான் விசுவாசமாய் இருக்கிறேன்

தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் ரட்சகரான டாக்டர் அம்பேத்கரின் 55 வது பிறந்தநாள் விழா டில்லி முழுதும் பெரும் மகிழ்ச்சியுடனும் உற்சாகத்துடனும் கொண்டாடப்பட்டது. பொதுக் கூட்டங்கள் டில்லி நகரில் தடை செய்யப்பட்டுள்ளதால் கூட்டம் நடத்தும் யோசனை இந்த ஆண்டு கைவிடப்பட்டது. ஆனால், அகில இந்திய ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் கொடி நகரின் முக்கிய பகுதிகளில் ஏற்றப்பட்டது. டாக்டர் அம்பேத்கர் நீண்ட காலம் வாழ வேண்டும் என்று பிரார்தனைகள் நடத்தப்பட்டன. தாழ்த்தப்பட்டோரின் வீடுகள் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டன.

1947 ஆம் ஆண்டு ஏப்ரல் 14 ஆம் நாள் டில்லி தாழ்த்தப்பட்ட வகுப்பு நல்வாழ்வு சங்கத்தின் கரோல்பாக் கிளை சார்பாக பாபா சாஹேப்புக்கு 1001 ரூபாய் பணமுடிப்பு அளிக்கப் பட்டது. ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் சில தனிநபர்களும் ஒரு பண முடிப்பு அளித்தனர்.

தமக்கு அளிக்கப்பட்ட வாழ்த்துக்களுக்கு பதிலளித்துப் பேசிய டாக்டர் அம்பேத்கர் பின்வருமாறு சொன்னார்:

“இன்று நான் பம்பாயில் இருந்திருந்தால் நமது மக்கள் என்னைச் சூழ்ந்து கொண்டிருப்பார்கள். அத்தகைய பெரிய கூட்டத்திலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக, அமைதியும், சாந்தியும் வேண்டி 13 ஆம் தேதி நான் இங்கு வந்தேன்.”

ஒரு கோணத்தில் பார்த்தால் பிறந்தநாள் கொண்டாட்டங்கள் என்பவை மகிழ்ச்சி தரும் விஷயமல்ல. மனிதன் சாகக் கூடியவன், என்றைக்கோ ஒரு நாள் அவன் காலமாகியே தீருவான். வாழ்க்கையில் பல கழிவுகள் உண்டு என்பதை நினைவூட்டுவதே பிறந்த நாட்கள். இந்தக் கழிவுகளுக்காக ஒருவன் வருத்தப்பட வேண்டியதில்லை. ஏனென்றால் ஒவ்வொருவனும் வாழ்க்கையை கழித்தே ஆக

வேண்டும். என்றாலும் பொது நோக்கத்துக்காக வாழ்கிற நபரின் வாழ்க்கை பொருட்படுத்தத் தக்கதாக இருக்கிறது.

நிலைமைகளைக் கணக்கில் கொண்டால், இந்தியா முழுவதும் உள்ள தாழ்த்தப்பட்டோர் தமது இயலாமை நிலையை முற்றிலும் உணர்ந்துள்ளார்கள் என்பதும், அவர்கள் தம்மை முழுவதுமாக ஒழுங்கமைத்துக் கொண்டு தமது வாழ்க்கையின் முழுமையை அடைவதற்குத் தீர்மானித்துள்ளார்கள் என்பதும் எனக்கு மகிழ்ச்சி அளிக்கிறது. அன்றைக்கு நான் வைஸ்ராயிடம் சொன்னதை இன்று நான் உங்களுடன்பகிர்ந்து கொள்கிறேன்: "நீங்கள் என்னை அழைத்திரா விட்டால் நான் உங்களைப் பார்க்க வந்திருக்க மாட்டேன். பிரிட்டிஷார் பின்னால் ஓடிக் கொண்டிருக்க நான் தயாராக இல்லை என்று நான் அவரிடம் சொன்னேன். ஒரு காலத்தில் அரிஜன வகுப்பார் நலன்களைப் பாதுகாக்கும் பொறுப்பை பிரிட்டிஷார் ஏற்றுக் கொண்டிருந்தனர். அந்தப் பொறுப்பை நிறைவேற்றுவதற்காகச் சில சிறப்பான நடவடிக்கைகளை அவர்கள் எடுப்பார்கள் என்று நான் நினைத்திருந்தேன்."

பிரிட்டிஷார் வெளியேறுகிறார்கள் என்றால் அது பற்றி எனக்குக் கவலையில்லை. ஆனால் அரசியல் சாசனத்தில் நமக்குத் தேவையான பாதுகாப்புகளைச் செய்து கொடுக்காமல் அவர்கள் வெளியேறுகிறார்கள். அவர்களது செயல் சரியா தவறா என்பதை அவர்களே முடிவு செய்யட்டும். அது என் வேலையல்ல. தீண்டத் தகாததோர் நலன்களைக் காப்பதற்காக அவர்கள் ஏதாவது செய்ய வேண்டும் என்று ஒரு நூறு முறை நான் அவர்களை வற்புறுத்தினேன். பிரிட்டிஷார் தமது கடமையைச் செய்ய மறுத்து விட்டார்கள் என்பதால் 6 கோடி தீண்டத்தகாதோரின் தலைவிதி முடிந்து போய்விடவில்லை என்று நான் உறுதியாக நம்புகிறேன். தொழிற்கட்சி தீண்டத்தகாதோருக்குரிய உரிமைகளை தர விரும்பவில்லை என்ற போதிலும், எந்த ஆதரவும், எந்த அதிகாரமும் இல்லாமல் 6 கோடி தீண்டத்தகாத மக்களும் தாம் விரும்புவதை அடைந்தே தீருவர்.

உணர்வோ, அமைப்போ இல்லாத வயோதிகர்களால், இன்று நாம் வழி நடத்தப்பட வில்லை. இன்று நாம் வேறு மாதிரியான மக்களாக இருக்கிறோம் என்பதை நாட்டிலுள்ள அனைவரும் அறிவர். எனவே, நாம் மேலும் அதிக வலிமையும் அதிகாரமும் பெறுவதற்காக உழைக்க வேண்டும். காங்கிரசும் முஸ்லீம் லீகும்,

இருதரப்பினருமே நமது ஆதரவைக் கோரி அதற்காகச் சில ஆலோசனைகளை முன்வைக்கின்றனர். நாம் அமைப்பு ரீதியில் ஒன்று பட்டிருக்கவில்லை என்றால் இதெல்லாம் ஒருபோதும் நடந்திருக்காது. பிரிட்டிஷ்ஷார் 1948 ஜூன் மாதம் வெளியேறப் போவதாக அறிவித்திருப்பதால் நம்முடைய பிரச்சினை துரதிருஷ்டவசமாக முற்றிலும் பின்னுக்குத் தள்ளப்பட்டு விட்டது என்று கூற விரும்புகிறேன். அடுத்து என்ன நடக்கும் என்று எனக்குத் தெரியவில்லை. நான் சில மதிப்பீடுகள் செய்துள்ளேன். அது பற்றி இப்போது நான் அறிவிக்க விரும்பவில்லை.

முற்றிலும் மாறுபட்ட சூழ்நிலைகளில் பிரிட்டிஷார் இங்கு தொடர்ந்து இருக்கலாம். ஆனால், வெளியேறுவது என்ற பிரிட்டிஷாரின் முடிவு பொதுமக்களிடையே சில பிரச்சினைகளைத் தோற்றுவித்துள்ளது. இதனால் அரசியல் சாசன நீதியான பாதுகாப்பு தேவை என்ற நமது கோரிக்கை ஓரளவுக்கு மறைந்து போயிற்று என்றே சொல்ல வேண்டும். இந்தப் பிரச்சினை இப்போது மங்கிப் போனாலும் நமக்குத் தேவையான அரசியல் பாதுகாப்பு முழுமையாக இல்லையென்றாலும் அதைப் பெருமளவுக்குப் பெறுவதில் வெற்றியடைவோம் என்று நான் நம்புகிறேன்.

அடிப்படை உரிமைகளைத் தொகுப்பதற்காக அமைக்கப்பட்ட கமிட்டியில் நாம் பெருமளவு வெற்றி பெற்றிருக்கிறோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். அடிப்படை உரிமைகளின் துணைக் குழுவிடம் நான் சமர்பித்த அறிக்கை ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளது. ஒரு பிரச்சினையில் சில கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. நிர்வாகத்திலும் பொதுப்பணித் துறையிலும் காட்டப் படுகிற பாகுபாடுதான் அது. இத்தகைய பாகுபாடுகளைக் களை வதற்கு சில ஆலோசனைகளை நான் முன்வைத்துள்ளேன்; இதில் நான் வெற்றியடைவேன் என்று நம்புகிறேன். இவ்வாறு நடந்தால் சட்டசபை, நிர்வாகக் கமிட்டி ஆகியவற்றைப் பொறுத்தவரை நமக்கு அரசியல் சாசனத்திலேயே முழுப் பாதுகாப்பு கிடைக்கும். சிறு பான்மையினர் துணைக் கமிட்டி ஏப்ரல் 17 ஆம் தேதி கூடி சில நாட்கள் வேலை செய்யும், சிறுபான்மையினர் துணைக் கமிட்டியிலுள்ள இரண்டு தாழ்த்தப்பட்ட உறுப்பினர்கள், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் கொண்டுள்ள பொதுவான கருத்துக்கு முரண்பாடான கருத்துக்கள் அடங்கிய அறிக்கை அளித்துள்ளனர் என்று வருத்தத்துடன் கூறிக்

கொள்கிறேன். தனிப்பட்ட வாக்காளர்களுக்குப் பதிலாக இணை வாக்காளர்கள் என்ற யோசனையை ஒருவர் முன்வைத்துள்ளார். வினியோக முறை வாக்குப் பதிவு மூலம் இணை வாக்காளர்கள் என்று அவர் பிரேரேபித்துள்ளார். இது அரசியல் அடிமைத்தனமே அன்றி வேறொன்றுமல்ல (வெட்கம், வெட்கம் என்ற கூக்குரல்கள்). விளிம்பில் நின்று போராடிக் கொண்டிருக்கிற நான் துணைக் கமிட்டியிலுள்ள மற்ற சிறுபான்மை வகுப்பினரின் ஆதரவு எனக்கு கிடைக்கும் என்று நம்புகிறேன்.

இறுதியில் என்ன நேரும் என்று என்னால் சொல்ல முடியாது. கமிட்டியிலுள்ளோர் பெரும்பான்மை மூலம் இதனை முடிவு செய்வார்களா அல்லது பேச்சுவார்த்தை நடத்துவார்களா என்பது பற்றி திட்டவட்டமாக எனக்குத் தெரியவில்லை. ஆனால் இந்த விஷயத்தை பெரும்பான்மையின் மூலம் முடிவு செய்வார்கள் என்றால், அரசியல் நிர்ணய சபையிலிருந்து முற்றிலும் வெளியேறி விடத் திட்டவட்டமான முடிவு எடுப்பேன். (பெருத்த ஆரவாரம்). அதன் பின் என்ன செய்யலாம் என்று நாம் முடிவு எடுப்போம். இந்த அரசியல் விவகாரத்தில் நாம் குறைந்தபட்சம் நான், இரட்டை விசுவாசத்தில் இருக்கிறேன். இந்த நாட்டில் வாழும் சிரமங்களை எல்லாம் அரசியல் பாதுகாப்புகள் மூலம்தான் சமாளிக்க முடியும். இந்த நாட்டுக்கு விசுவாசமானவனாக இருக்கிறேன். நாம் அனைவரும் நாடு விடுதலை அடைய வேண்டுமென்று விரும்புகிறோம். அமைச்சரவை அதுக்கு முன்வைத்துள்ள யோசனைகள் நம்மைப் புறக்கணித்துள்ள போதிலும், நாடு விடுதலை அடைவதற்காக செய்யப்படும் முயற்சிகளுக்கு நாம் பெருந் தடங்கலாக இருக்க மாட்டோம் என்கிற எண்ணத்துடன்தான் எனது நடத்தை இருந்து வந்துள்ளது.

இந்த நாடு விடுதலை பெற வேண்டும் என்ற எண்ணத்திலேயே நான் பலப்பல முறை உரையாற்றியிருக்கிறேன். அதே நேரத்தில் ஆறு கோடி தீண்டத்தகாத மக்களுக்கு அரசியல் உரிமைகள் வழங்கி பாதுகாக்கப்படவில்லை என்றால், அரிஜன மக்களின் பாதுகாப்புக் காக ஒப்பந்தம் செய்துகொள்வதற்குக் காங்கிரசார் போதுமான சமிஞ்ஞைகள் காட்டவில்லை என்றால், நான் அரசியல் நிர்ணய சபையிலிருந்து விலகிக் கொள்ளுவதை யாரும் குறை சொல்ல மாட்டார்கள் என்று நம்புகிறேன்.

எனினும் நீங்கள் ஒரு விஷயத்தை நினைவில் கொள்ளுங்கள். அரசியல் நிர்ணய சபையிலுள்ள 292 பேரில் நான் தனி ஒருவன். ஒருவன் எவ்வளவு பெரிய மனிதனாக இருந்தாலும், வாதம் செய்வதற்கும் தற்காத்துக் கொள்வதற்கும் எவ்வளவு அறிவும் திறமையும் கொண்டு வாதாடவல்லவனானாலும் அவன் ஒருவன் தான், ஒரேயொரு தனிமனிதன்தான். மற்ற 291 பேரும் அந்த ஒருவன் கூறும் நியாயத்தைப் பார்க்காமல், அவன், பேச்சையே கேட்காமல் அவனை எதிர்ப்பதிலேயே குறியாய் இருந்தால், 292 பேர் அடங்கிய அரசியல் நிர்ணய சபையில் நான் உதவியற்றவனாக தனியாக நிற்க நேரும் என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

நியாய புத்தி மேலோங்கி நின்று நமது விருப்பம் இறுதியில் நிறைவேறும் என்று நம்புகிறேன். நமக்கு முக்கியமானது நமது அமைப்புதான். நமது விடா முயற்சியால் நமக்குக் கிடைக்கப் போகும் அரசியல் உரிமைகள் ஒரு கால அளவுக்குத்தான் இருக்கும் என்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். நமக்கு மட்டுமல்ல நாட்டிலுள்ள ஒவ்வொருவருக்கும் இந்த உரிமைகள் மறைந்து போகும் காலம் வரும். இந்த உரிமைகள் மறைந்து போகும் போது நமது அமைப்பையும், நமது வலிமையையும் ஒற்றுமையும்தான் நான் நம்பியிருக்க முடியும். எனவே, ஒற்றுமையாயிருக்க உறுதி கொள்ள வேண்டும். (இங்கு ஜெய் பீமுக்கு அனுப்பிய செய்தியைக் குறிப்பிட்டு, அதில் கண்டுள்ள விஷயங்களை எடுத்துச் சொன்னார்)*

கஷ்டங்கள் வரும், மேலும் கஷ்டங்கள் வரும் என்கிற ஒரு செய்தியைத்தான் நான் உங்களுக்குக் கொடுக்க முடியும். சில கிராமங்களில் உள்ள நமது மக்கள் சிரமங்களை அனுபவித்தனர், அனுபவிக்கின்றனர். எனவே சிரமங்களின் வழி சென்றுதான் வெற்றி பெற முடியும். இதற்கு நீங்கள் சுணக்கம் காட்டக் கூடாது. தமது குறிக்கோளை உறுதியுடன் செயல்பட்டு எட்ட முயல வேண்டும். அமைப்பு ரீதியில் ஒழுங்கு பட வேண்டும். சிரமங்கள் பற்றிய பயம் இந்நாட்டில் இருத்தலாகாது.

பணமுடிப்பை உங்களிடமிருந்து பெற்றுக் கொள்வதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன். இந்தப் பணத்தை என்ன செய்வது என்பது பற்றி நான் யோசித்து வருகிறேன். இரண்டு விஷயங்களில் ஒன்றைச் செய்யலாம் என்று கருதியுள்ளேன். டில்லியில் ஒரு நிலம்

வாங்குவதற்கு நான் ஏற்பாடு செய்துள்ளேன். அங்கு ஒரு கிளப் கட்ட நினைத்துள்ளேன். இதற்காக இந்தப் பணத்தை யாரிடமாவது கொடுத்து வைப்பது என்பது எனது முதல் திட்டம். இந்தத் தொகை சிறியதுதான் என்றாலும் இந்த நோக்கத்திற்காக மேலும் பணம் திரட்டலாம். அடுத்த திட்டம் பணத்தை சங்கத்துக்கே திரும்பக் கொடுத்து, அவர்கள் ஏதாவதொரு நோக்கத்திற்காக இதனைச் செலவிட வழி செய்தல். (பணத்தைத் திரும்ப பெற்றுக் கொள்ள சங்கம் மறுத்து விட்டது). சரி, அப்படியானால் இப்பணத்தை கிளப் கட்டுவதற்காகக் கொடுத்து விடலாம்.[1]

---

1. ஜெய்பீம் 25. 5 . 1947

## (110)

# சிறுபான்மையினரை சமாதானம் செய்து சேர்த்துக்கொள்ளவேண்டும்; அவர்களுக்கு ஒரு போதும் கட்டளையிடக்கூடாது

பம்பாயில் 1947 செப்டம்பர் 25இல் சித்தார்த காலேஜ் பார்லிமெண்டை டாக்டர் அம்பேத்கர் தொடக்கி வைத்தார்.

அந்த நிகழ்ச்சியின் போது அவர் சொன்னார்: இப்போதைக்கு நடைமுறைச் செயலுக்காகத் தெளிவான வழி எதுவும் என்முன் இல்லை. எனவே, ராணுவ முறையில் நான் பேச நினைக்கிறேன். இந்த சுதந்திரம் நமக்குத் திடீரென்று வந்து விட்டது, எனவே நமது சக்திகளை வரவழைக்கவோ, அவற்றை ஒழுங்கமைக்கவோ நமக்கு நேரமே இருக்கவில்லை.

கடந்த 50 ஆண்டுகளாக பிரிட்டிஷார் வாக்குறுதிகள் தந்தார்கள். ஆனால் இறுதியில், அரிஜன வகுப்பினரை ஓர் அரசியல் பிரிவாக அங்கீகரிக்காமல் நம்மை ஏமாற்றி விட்டனர். நமது பணியில் அவர்கள் உதவவில்லை. முஸ்லீம்களுக்கும், சீக்கியர்களுக்கும் உதவி புரிந்த பிரிட்டிஷார் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு ஏன் உதவ வில்லை என்பதை இந்த நேரத்தில் நினைக்கும்போது வியப்பாக இருக்கிறது. நமது சக்தியைத் தவிர வேறெதையும் நாம் நம்பியிருக்க முடியாது. இந்த சக்தியும் கூட, தூதுக் குழுவில் வந்த கிரிப்சுக்கும் அவரது நண்பர்களின் கண்களுக்கும் பிளவுபட்ட ஒன்றாகத் தென்பட்டது. அரிஜன கட்சி என்றழைக்கப்பட்ட தனி அமைப்பு ஒன்றைக் கண்டு பிளவு இருப்பதாக அவர்கள் கருதினர். ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனம் மட்டுமே தாழ்த்தப்பட்டோரின் ஒரே அமைப்பு என்பது இப்போதும் எப்போதும் உண்மையாக இருந்து வருகிறது.

நான் இங்கிலாந்துக்குச் சென்றபோது, அங்குள்ள பல்வேறு அரசியல் தலைவர்களுடன் பேசும் போதும், இந்தியாவின் அன்றாட நிலைமைகளுடன் தொடர்புள்ள நிரந்தர பார்லிமெண்ட் செயல் அமைப்பு என்னும் இந்த ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனந்தான்

அரிஜன வகுப்பாரின் பிரதிநிதித்துவ அமைப்பு என்றும் நான் கூறியதை முற்றிலும் ஏற்றுக்கொண்டார்கள் என்பதைச் சொல்லிக் கொள்வதில் நான் மகிழ்ச்சியடைகிறேன். இது மட்டுமல்ல, கிரிப்சும் அவரைப் போன்ற மற்றோரும் நான் சொல்லியதை நம்பினார்கள். இப்படியெல்லாம் இருந்தும் பிரிட்டிஷ் தூதுக் குழு எல்லாவற்றையும் ஒதுக்கித் தள்ளியது. தமது பாதுகாப்புக்காக அவர்கள் அரசியல் முடிவு எடுக்க வேண்டியிருந்தது. உண்மைக்குப் புறம்பான முறையில் இருந்தும் நம்மைப் புறந்தள்ளி இந்த அரசியல் முடிவை அவர்கள் எடுத்துள்ளனர். ராஷ்டிரிய ஹரிஜன் என்ற அமைப்பின் வெட்கக் கேடான அணுகுமுறையே இந்த நஷ்டத்துக்குக் காரணம்.

சிறுபான்மையினரின் துணைக் குழுவில் நான் நமது கோரிக்கையை வலியுறுத்தி தனி வாக்கு வங்கி என்ற யோசனையை முன்வைத்து, ஒருவர் எந்த வகுப்பைப் பிரதிநிதித்துவப்படுத்து கிறாரோ அந்த வகுப்பினரின் 35 % வாக்குகளைக் குறைந்த பட்சம் பெற்றால்தான் அவர் வெற்றி பெற்றதாக ஆகும் என்று தெரிவித்தேன். ஆனால் வாக்களிப்பின் போது முஸ்லீம் குழுவினர் அவசரமாக ஹாலை விட்டு வெளியேறியதால், எனது யோசனைக்கு சரிசமமாக, அதாவது ஏழுக்கு ஏழு என்ற விகிதத்தில் வாக்கு கிடைத்தது, ஆலோசனைக் கமிட்டியில் நான் மீண்டும் முயற்சி செய்தேன். இங்கு ஒரு விநோதம் நடந்தது. மதராஸ் அசெம்பிளியின் சபாநாயகர் முனுசாமி பிள்ளை எனது யோசனைக்கு ஆதரவு தந்தார். சர்தார் வல்லபாய் பட்டேலும் அதற்கு எதிராக வாக்களிக்கவில்லை. ஆனால், பொது அரசியல் நிர்ணய சபையில் எனது ஆதரவாளராக இருந்த திரு. பிள்ளை, இந்த யோசனைக்கு எதிராகக் கையெழுத் திட்டவர்களில் ஒருவராக இருந்தார். இவற்றால் நான் ஆச்சர்ய மடைந்தேன். அரிஜன வகுப்பாரின் பொதுநலன்களுக்கு எதிராக நிரந்தரத் தொந்திரவாக விளங்கி இவ்வாறு இரண்டாம் முறையாகச் சூழ்ச்சி செய்தது ராஷ்டிரிய ஹரிஜன அமைப்பு. இந்தக் காரணங் களால்தான் என்னிடம் செயலுக்கான ஒரு தெளிவான வழிமுறை இல்லாமல் இருக்கிறது.

இப்போது நான் உங்களுக்கு ஒரு விஷயம் சொல்ல வேண்டும்

தனிவாக்கு வங்கி என்பது ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மே ளனத்தின் ஆரம்பமும் முடிவும் அல்ல. நமக்குள்ள வசதிகளுக்கு தனிவாக்கு வங்கி நல்லதுதான். ஆனால் அதை மட்டும் நாம்

நம்பியிருக்கக் கூடாது. தனி வாக்கு வங்கி உங்களுக்குக் கிடைத்து விட்டாலும், அரசியல் பாதுகாப்பு உங்களுக்கு இல்லை. அவர்களுக்கு என்னதான் நேரும் என்று எனக்குத் தெரியாது. சட்ட மன்றங்களிலும், பணிகளிலும் சில அரசியல் பாதுகாப்புக்களை உங்களுக்கு நான் பெற்றுத்தர முடியும். என்னுடைய முயற்சிகளினால் தான் சிறுபான்மையினரான சீக்கியர்களுக்கும் கிறித்தவர்களுக்கும் முஸ்லீம்களுக்கும் சில பாதுகாப்புக்கள் கிடைத்துள்ளன. இந்தக் கோரிக்கையில் நான்தான் விடாப்பிடியாக இருந்தேன். இந்தக் கட்டத்தில் என்னை அதிருப்திப்படுத்த அரசியல் நிர்ணய சபைக்கு தைரியமில்லை. சிறுபான்மையினருக்கு, என்னால் உண்மையான சேவை செய்ய முடிந்துள்ளது என்று சொல்வதால் நான் மகிழ்ச்சி யடைகிறேன்.

நீங்கள் ஏமாற்றம் அடைந்திருப்பீர்கள் என்பது சாத்தியமே. நானும் இதில் பெரிய மகிழ்ச்சி அடைந்து விடவில்லை. என்றாலும் எதிர்காலத்தில் நமது பணியைச் செய்தே தீர வேண்டும். பிரிட்டிஷ் தொழிற்கட்சியின் வரலாறை உங்களுக்கு நான் சொல்ல விரும்பு கிறேன். அது கடந்த 24 ஆண்டுகளாகப் பெரிய வளர்ச்சியடைந்து இன்று ஆட்சிக்கே வந்துவிட்டது. இதே கட்சி முதலில் தொடங்கப் பட்ட போது நாடாளுமன்றத்தில் அதற்கு ஒரு உறுப்பினர் கூட இருக்கவில்லை. இது எதைக் காட்டுகிறது? தேர்தல்களில் கட்சி ஜெயித்தது அதன் வெற்றியல்ல, மாறாக, கட்சியின் வேலைத் திட்டங் களும் கொள்கைகளும்தான் வெற்றியடைந்துள்ளன என்பதையே இது காட்டுகிறது. இதே போல ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனம் அதன் கோட்பாடுகளுக்காக வெற்றிபெறும் என்பதில் எனக்கு சந்தேகமில்லை. இதனால்தான், நான் ஏமாற்றமே அடைய வில்லை. இதே காரணத்துக்காக நாம் பின்வரும் மூன்று விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

1. ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனம் எந்த நிலைமையிலும் தனது ஸ்திரத் தன்மையை காப்பாற்றி வர வேண்டும். பிராமணர் அல்லாதார் கட்சி பற்றிய சரித்திரம் நம்முன் உள்ளது. காங்கிரஸ் கட்சி பிரபலமடைவதற்கு முன்னால் அகில இந்திய கட்சித் தலைவர்கள் காங்கிரசுக்குத் தனித்தனியாகச் சென்ற போது, அவர்கள் தம்முடைய தனித்தனிக் குறிக்கோள்களுடன் சென்றனர். அவர்கள் விலைக்கு வாங்கப்பட்டவர்களாகிவிட்டனர். எனவே காங்கிரசில் இவர்

களுக்குச் செல்வாக்கே அன்றும் இல்லை, இன்றும் இல்லை. அவர்கள் மிகப் பெரும்பான்மையினராக இருந்த போதும் அவர்கள் ஆளப்பட்டுதான் வந்தார்கள்.

2. உங்களுக்குத் திறமையான தலைவர்கள் இருக்க வேண்டும். வேறெந்தக் கட்சியிலும் உள்ள பெரிய தலைவர்களின் தைரியமும் துணிவும் உங்களுக்கு இருக்க வேண்டும். திறமையான தலைவர்கள் இல்லாத கட்சி ஒன்றுமில்லாமல் போகும். 1931ஆம் ஆண்டு பிரிட்டிஷ் தொழிற்புரட்சி தோல்வியடைந்ததற்கு இதுவே காரணம். இந்தியாவிலுள்ள பிராமணர் அல்லாதார் கட்சிக்கும் இது பொருந்தும்.

3. ஒரு காலத்திலும் விலை போகாத தலைமை எந்தவொரு கட்சிக்கும் மிக முக்கியம். இதே போன்று கடமைப் பொறுப்புள்ள ஊழியர்கள் கட்சியின் வளர்ச்சிக்கு இரண்டாது முக்கிய அம்சம் ஆகும். அரிஜன வகுப்பார் சம்மேளனம் பல தலைவர்களை உருவாக்க வேண்டும். ஒருவர் கூட எனக்குத் திருப்தி தருபவராக இதுவரை இல்லை. ஒருவிதத்தில் ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனம் கவலை கொள்ளத் தேவையில்லை. ஏனென்றால் அவர்களின் தலைவர் எந்த நேரத்திலும் எதற்காகவும் விலை போக மாட்டார். மற்ற அமைப்புகளின் தன்மை என்ன? அவர்கள் எப்போது தேர்ச்சி பெறுவார்கள்? எனது தேவையை நீங்கள்தான் நிறைவு செய்ய வேண்டும். ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனம் தனது அரசியல் ஸ்திரத் தன்மையைக் காத்து வர வேண்டும். இது எனது தனிப்பட்ட நலனுக்காக அல்ல, உங்களுக்காகவும் எனக்காகவும்தான்.

இறுதியாக நான் சொல்ல விரும்புவது, சித்தார்த்த கல்லூரியில் உள்ள வசதிகளை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். தாழ்த்தப்பட்டோருக்குத் தலைமையேற்று தனது திறமையை நிரூபிக்கும் உதய சூரியன்கள் எழுவதை நான் கண்ணால் காண முடியும் என்று நம்புகிறேன். ஒவ்வொரு மனிதனுக்கும் இரண்டு கவர்ச்சிகள் உண்டு. முதலில் பணம். பிறகு மனைவி மக்கள். இதுவே இயற்கை. ஆனால் சில குழந்தைகள் எதற்கு என்பதை நமது மக்கள் புரிந்து கொள்ளவில்லை. ஷெட்யூல்டு ஜாதிகள் எந்த நிலையில் இருக்கிறார்கள் என்று காண அவர்களுக்கு நேரமில்லை. எனவே, ஷெட்யூல்டு ஜாதிகளின் நலன்களைப் பேணுவது உங்கள் கடமை. கடமைப் பொறுப்புள்ள தொழிலாளர்களை நீங்கள் உருவாக்க

வேண்டும். நமது படைகள் எப்போது தேவைப்படும் என்று எனக்குத் தெரியாது. ஆனால் நாம் எப்போதும் கவனமாகவும் எச்சரிக்கை யாகவும் இருக்க வேண்டும்.

இதுவரை, நமது மாணவர்களில் பெரும்பான்மையோர் அரசியல் இயக்கங்களில் அக்கறை கொண்டிருந்தபோதிலும், அரசியல் என்றால் என்ன என்று அவர்களுக்கு தெளிவாகத் தெரிய வில்லை என்பதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அதிலுள்ள பொறுப் புக்கள் என்ன, அரசியல் செயல்பாடுகளை நடைமுறைப்படுத்த என்ன வழிமுறைகளைக் கையாள வேண்டும் என்னும் நிஜ வாழ்க்கையின் பிரச்சினைகளுக்கு இடையில் தொடர்பு அறுந்து கிடக்கிறது என்று நான் சொல்லுவேன். நீங்கள் இரண்டு காரியங்கள் செய்ய வேண்டும்:

1. உங்கள் மனம், தொலைநோக்கு, சிந்தனைத் திறன், சிக்கலைத் தீர்க்கும் உங்கள் திறமை ஆகியவற்றை அதிகரித்துக் கொள்ள வேண்டும்.

2. பெரும்பான்மையான மக்களுக்கு இன்று எதிர்ப்படுகிற எதார்த்தப் பிரச்சினைகளைப் பற்றிய தீர்வு காணுவதற்கு உங்கள் திறன், தொலைநோக்கு, வல்லமை ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும்.

தன்னந்தனியறையில் இயற்பியல், வேதியல் சோதனைக் கூடத்தில் இருந்துகொண்டு அடைகாப்பது போன்றதல்ல இது. அதைவிட மிக விரிவான ஒன்று இது. மக்களின் எதார்த்த வாழ்க்கையைத் தொடுகின்ற அரசியல், பொருளாதாரம், விஞ்ஞானம், வரலாறு, வர்த்தகம், செலாவணி ஆகிய அனைத்துத் துறைகளையும் நீங்கள் கற்றுக் கொள்வது மட்டுமின்றி, இந்தப் பயிற்சியை உங்களுக்கும், நாட்டின் பிரச்சினைகளுக்குப் பொறுப்பு வகிக்கும் நபர்களுக்கும், பிரச்சினைகளுக்குச் சரியான தீர்வு என்ன என்று சொல்லி அவர்கள் எங்கே தவறு செய்கிறார்கள் என்று சுட்டிக் காட்ட அவை பயன்பட வேண்டும்.

நீங்கள் இன்னொரு விஷயத்தையும் நினைவில் கொள்ள வேண்டும். ஒரு சர்வாதிகாரியோ, மன்னரோ தமது விருப்பப்படி செய்கிறதுதான் சட்டம் என்றிருக்கிற எதேச்சாதிகார ஆட்சியில், மேடைப் பேச்சுத்திறன் தேவையில்லை. எந்த எதேச்சாதிகாரியும்,

மன்னரும் உங்களின் பேச்சு வன்மைக்குச் செவிமடுக்கத் தேவையில்லை. ஏனெனில் அவன் விருப்பமே சட்டம். ஆனால் நாடாளு மன்றத்தில் சந்தேகத்துக்கிடமின்றி, மக்களின் விருப்பம் சட்டமாக்கப் படும்போது, எதிராளியை இணங்க வைக்கும் பேச்சுத் திறன் உள்ளவரே, எதிரணியை வெற்றி கொள்பவர் ஆவார். எதிராளியைப் பார்த்து திருதிருவென்று விழிப்பவன் மன்றத்தின் பெரும் பான்மையை எப்படி இணங்கச் செய்ய முடியும்? சிறுபான்மையினர் பெரும்பான்மையினரைக் குண்டர்களைக் கொண்டு அடக்கி விட முடியாது; அதே போல பெரும்பான்மையினர் சிறுபான்மையினரைக் கீழே தள்ளி வெற்றியைச் சம்பாதித்துவிடவும் முடியாது.

உங்கள் யோசனையை அவர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டு மானால் பேச்சுக் கலையினால் அதை நீங்கள் சாதிக்க வேண்டும். உங்கள் வாதங்களின் மூலம் எதிராளியை ஏற்றுக்கொள்ளச் செய்ய வேண்டும். உங்கள் வாதங்கள் மென்மையாகவோ, வலிமையாகவோ இருக்கலாம். ஆனால் எப்போதும் அவை தர்க்கவியல் பூர்வமானவையாக, தகவல் நிறைந்ததாக இருக்க வேண்டும். எனவே நாடாளுமன்ற அமைப்பில் வெற்றி பெறுவதற்கு மிக முக்கியமானதொரு தகுதி பேச்சுத்திறமை. அதை உங்கள் வசம் கொண்டு வர வேண்டும். எனவே நாடாளுமன்றத்தில் பொருள் பொதிந்த பணியை நீங்கள் செய்வ தற்கும் முழுமையான தயாரிப்புடன் நீங்கள் செல்ல வேண்டும். பொது மேடைகளில் பேசும் கலையை நீங்கள் மிக நுட்பமாகக் கற்றுக் கொள்ள வேண்டும்.

இது ஒரு கடினமாக கலை அல்ல. எனது அனுபவத்தில் இதைத் தான் சொல்ல முடியும். நான் ஒரு பெரிய பேச்சாளன் அல்ல. இந்திய மக்களின் வரலாற்றை எழுதப் புகும் எவரும், இந்திய அரசியலில் பங்குப் பணியாற்றியோர் பற்றி எழுதும் போது என்னை ஒரு பெரிய பேச்சாளர்கள் மத்தியில் பட்டியலிட மாட்டார். எனக்கு அத்தகைய பெருமை இல்லை. சைடன்ஹாம் கல்லூரியில் நான் பேராசிரியராக இருந்தபோது மாணவர்கள் என்னைக் கேலி செய்து விடுவார்கள் என்ற ஒரே பயத்தினால் கூச்சப்பட்டு பதட்டமடைந்து எனது வேலையையே விட்டுவிடலாமா என்று எண்ணியதுண்டு. இத்தகைய அச்சமுள்ளவர்கள் அதனை விட்டொழித்து மொழிப் பாண்டித்தியம் பெற வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இது ஒரு சிரமமான காரியமே அல்ல.

அடுத்தாக, சபாநாயகருக்கு நிபந்தனையின்றி முழுமையாகக் கீழ்ப்படிய வேண்டும். சபாநாயகரின் தீர்ப்பைப் பற்றி நீங்கள் கேள்வி கேட்கக் கூடாது. ஒரு சிக்கலான ஒழுங்குப் பிரச்சினை முன்னுதாரண மின்றி இருந்தால், அதன் மீது உடனடியாக சபாநாயகர் தீர்ப்பு சொல்ல முடியாமல் இருக்கலாம். அப்போது சபையின் பல பகுதிகளைச் சேர்ந்த உறுப்பினர்களிடமும் அதுபற்றிக் கருத்தைக் கூறும்படி கேட்கலாம். அவ்வாறு எல்லோரிடமும் அபிப்ராயம் கேட்டு அவர் ஒரு தீர்ப்புச் சொல்லிவிட்டால் அதனைப் புனிதமானதாக நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும். அந்தத் தீர்ப்பு மிகவும் தவறானதாகக் கூட இருக்கலாம். 1926 முதல் 1946 வரை ஒரு சிறிய இடைவெளி விட்டு, நான் நாடாளுமன்ற நிறுவனத்தில் இருந்து வருகிறேன். எத்தனையோ விதமான சபாநாயகர்களை நான் பார்த் துள்ளேன். திறமையானவர்கள், அப்படியில்லாதவர்கள் அவர்களில் உண்டு. எனினும் தீர்ப்புகளுக்கு நாங்கள் கட்டுப்பட்டு வந்துள்ளோம். குறிப்பிட்ட உத்திரவை மாற்ற வேண்டும் என்று நீங்கள் மசோதா கொண்டு வரலாம்.

நாடாளுமன்றம் எப்படி வேலை செய்கிறது என்று உங்களுக்கு படங்கள் மூலம் காட்ட வசதி இல்லாமலிருக்கிறது. நீங்கள் பாரிசுக்குச் சென்று அங்கு நாடாளுமன்றக் கூட்டம் எப்படி நடக்கிறது அல்லது லண்டன் காமன்ஸ் சபையிலோ, அமெரிக்காவில் பிரதிநிதிகள் சபையிலோ கூட்டங்கள் எப்படி நடக்கின்றன என்று பார்த்தீர்களேயானால் இவற்றுக்கிடையே ஆச்சர்யம் தரும் வித்தியாசங்களைக் காண்பீர்கள். பாரிசில் அதிசயிக்கத் தக்க சட்டமன்றம் உண்டு. ஒருமுறை பாரிஸ் சென்றிருந்த போது மூன்று நாட்கள் நான் தொடர்ந்து சட்ட மன்றம் சென்றேன். அந்தச் சட்ட மன்றதுக்கும் கிராபோர்டு மார்க்கெட்டுக்கும் ஒரு வித்தியாமும் இல்லை. மன்றத்தில் ஆட்கள் ஓரிடத்திலிருந்து வேறோர் இடத்துக்கும் ஒரு மூலையிலிருந்து மறு மூலைக்கும் போய் வந்து கொண்டிருந்தனர். ஓர் ஒழுங்கும் இல்லை. சபாநாயகர் கூறுவதை யாரும் கேட்கவில்லை சபாநாயகர் தனது மேசையின் மீது ஒரு மரக்கட்டையும் மரத்தாலான ஒரு சுத்தியலும் வைத்திருந்தார். சுத்தியலால் மேசையின் மீது தட்டிக் கொண்டே யிருந்தார். யாரும் அதற்கெல்லாம் செவி மடுக்கவில்லை.

ஆனால் காமன்ஸ் சபையிலோ எல்லாம் இதற்கு நேர்மாறாக நடந்தன. சபாநாயகர் நிற்கும் போது வேறு யாரும் நிற்கக் கூடாது

என்ற விதி அங்கு உண்டு. ஒவ்வொரு உறுப்பினரும் அமர்ந்தேயிருக்க வேண்டும். அவர் உட்கார்ந்து நடவடிக்கைகளை கவனிக்க வேண்டும். காமன்ஸ் சபையில் சபாநாயகர் அழைத்தாலொழிய எந்த உறுப்பினரும் பேச முனையக் கூடாது. எந்த குறிப்பிட்ட உறுப்பினரையும் அழைத்தாக வேண்டும் என்று சபாநாயகரை கட்டுப்படுத்த முடியாது. "சபாநாயகரின் கண்ணைக் கவருகிற ஒருவரைத்தான் அவர் பேச அழைப்பார்" என்ற ஒரு சொற்றொடரே அங்கு உண்டு. இந்தச் சொற்றொடர் கொஞ்சம் மறை பொருளானது. சபாநாயகர் கண்ணில் ஒருவர் படலாம்; ஆனால் அவர் கண்சிமிட்டி விட்டு கண்டு கொள்ளாமலிருக்கலாம். இதற்குக் காரணம் தெரிந்ததுதான். சபாநாயகர் பல ஆண்டுகள் நாற்காலியிலிருப்பதால் ஒவ்வொரு தனி நபரையும் அவருக்குத் தெரியும் அந்த நபரின் நல்ல அம்சம் என்ன, மோசமான அம்சம் என்ன என்று அறிவார். விஷயங்கள் எதையும் சொல்லாமல் போரடிக்கிற நபர்களை அவர் பேச அழைப்பதில்லை.

நாடாளுமன்ற ஜனநாயகம் என்றழைக்கப்படுகிற ஒரு அமைப்பு நம்மிடம் உள்ளது. இந்தச் சொல்லை நாம் நன்கு புரிந்து கொள்ள வேண்டும். இது தனிச் சிறப்பு வாய்ந்த ஒரு அமைப்பு. எதேச்சாதிகாரம் அல்லது அளவற்ற மன்னராட்சி என்பனவற்றிலிருந்து இது மாறுபடுகிறது. எதேச்சாதிகார அமைப்பிலோ அளவற்ற மன்னராட்சி அமைப்பிலோ நாடாளுமன்றம் என்ற ஒன்றே இல்லை. மக்களின் விருப்பங்களுக்கு ஒரு மரியாதையும் அங்கு கிடையாது. மன்னரோ, எதேச்சாதிகாரியோதான் ஒரே எஜமானன். மக்களின் விருப்பத்தின்படியே ஆட்சி நடத்துவதாக அவர் சொல்லுவார், ஆனால் உண்மையிலோ தனது விருப்பப்படிதான் அவர் ஆட்சி செய்வார்.

இன்னொரு அரசியல் அமைப்பும் இப்போது இருக்கிறது. அதற்கு பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் என்று பெயர். மேற்சொன்ன இரண்டு அமைப்புகளுக்கும் இடையில் உள்ள வித்தியாசம் மிகவும் சிறியது. பொது மக்களுக்குச் சேவை செய்கிற ஆட்சி நடத்துவதாக எதேச்சாதிகாரம் சொல்லுகிறது. முழுமையான மன்னராட்சி அமைப்பிலிருந்து பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் அடிப்படையில் ஒரு வித்தியாசமும் கொண்டதல்ல. ஏனென்றால் இவ்விரண்டிலுமே மக்கள் பங்கு எதுவுமே இல்லை. நாடாளுமன்ற ஜனநாயகம் இந்த இரண்டுக்கும் இடைப்பட்ட ஒன்று. இது ஒரு நுட்பமான அமைப்பு,

அதன் பண்புகளை வெகு கவனமாகக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். பல்வேறு தத்துவஞானிகளும் பல்வேறு விதமாக இதன் வன்முறை பற்றி விவரிப்பதை இது தடுக்கும். நாடாளுமன்ற ஜனநாயகம் என்பதைச் சட்டத்தின் ஆட்சி என்று வர்ணிக்கலாம். நாடாளுமன்ற ஜனநாயகத்தைப் பற்றிய இத்தகைய கணிப்பு மிகவும் முக்கியமானது; மிகவும் உண்மையானது. ஐரோப்பாவில் மன்னராட்சி ஒழிக்கப்பட்டு நாடாளுமன்ற ஜனநாயகம் அமலுக்கு வந்தபோது, முழுமையான மன்னராட்சியிலிருந்து நாடாளுமன்ற ஜனநாயகத்துக்கு அங்கு மாற்றம் வந்ததைக் கண்டவர்கள் நாடாளுமன்ற ஜனநாயம் என்பது சட்டத்தின் ஆட்சி என்ற வர்ணணையை மிகவும் உண்மையானது; மிகவும் முக்கியமானது என்று உணர்ந்தனர்.

ஏனென்றால், இதற்கு முன்னால் இருந்தது ஒரு தனிநபரின் ஆட்சி. தனது விருப்பத்தைச் சார்ந்தே அவர் எதுவும் செய்வார். இரண்டாவதாக, தான் சட்டத்திற்கும் அப்பால் பட்டவர் என்று அவர் கருதினார். சட்டம் என்பது மக்களுக்குத்தானே தவிர, தனக்கு அல்ல என்று அவர் நினைத்தார். நாம் தற்போது அனுபவிக்கிற சட்டத்தின் ஆட்சி என்பது நன்கு நிறுவப்பட்ட ஒரு கொள்கை. இதற்கு நாம் தற்போது மிகவும் பழகிப் போனதால் அது ஒரு சிறந்த பண்புடையது என்று அதை பார்ப்பதில்லை ஒரு சட்டத்தை நாம் இயற்றும் போது சட்டத்தை இயற்றுபவரையும் அந்தச் சட்டத்தின் கீழே தான் நாம் இருக்கிறோம் என்பது ஒரு முக்கியமான உண்மை.

நாடாளுமன்ற ஜனநாயகம் என்பது பெரும்பான்மையோரின் ஆட்சி என்றும் ஒருவர் சொன்னார். நாம் சட்டமியற்றும் போது எழுகின்ற எல்லாப் பிரச்சினைகளும் பெரும்பான்மை மூலமே முடிவாகிறது என்பது உண்மையே. இது மிக அபாயமான ஒரு கொள்கைதான். பெரும்பான்மை என்பது ஒரு வசதிக்காக ஏற்படுத்தப்பட்ட விதிதான். ஆனால் விதியை மிக நீளத்துக்கு இழுக்க வேண்டாம் என்று நான் கேட்டுக் கொள்வேன். இல்லையேல் ஏராளமான சிக்கல்கள் உண்டாகக் கூடும். ஒரு அர்த்தத்தில் பார்த்தால் பெரும்பான்மை ஆட்சி என்ற விதி ஒரு தவறான கொள்கை என்றும் ஆகும். இந்த விஷயத்தை நான் விவாதிக்கத் தயாராக இருக்கிறேன். இதை நான் படம் பிடித்துக் காட்ட முடியும். நாம் ஒரு அரசியல் சாசனத்தை இப்போது உருவாக்கி வருகிறோம். இதை உருவாக்குகிற குழுவுக்கு நான் தலைவராக நியமிக்கப் பட்டிருக்கிறேன்.

சிறுபான்மையினரின் அடிப்படை உரிமைகளை நாம் பாது காக்க வேண்டும். சிறுபான்மையினரின் அடிப்படை உரிமை என்பது என்னவென்றால், பெரும்பான்மை சில விஷயங்களைச் செய்வதற்கு அனுமதிக்கப்பட மாட்டார்கள் என்று அர்த்தம். இதுதான் அடிப்படை உரிமை என்பதற்குப் பொருள். அரசியல் சாசனத்தில் அடிப்படை உரிமையின் காரணமாக பெரும்பான்மையினர் சில விஷயங்களில் செயல்பட எல்லைக்கோடு வகுக்கப்பட்டிருக்கிறது. சொல்லப் போனால் பெரும்பான்மை ஆட்சி என்பது எதிர்பாராமல் வந்த ஒன்று என நான் சொல்வேன்.

ஆயிரத்து நானூறு, ஐநூறாம் ஆண்டுகளின் வரலாற்றைப் பார்த்தால் காமன்ஸ் சபையில் ஒரு மசோதா தாக்கல் செய்யப்பட்ட போது. அதற்கு ஆதரவாக இருந்தவர்கள் ஒரு வராந்தாவில் போய் அமர்ந்தனர், அதற்கு எதிர்ப்புத் தெரிவித்தவர்கள் வேறொரு வராந்தாவில் அமர்ந்தனர். "ஆமாம் சாமிகள்" வராந்தாவில் எத்தனை பேர் உள்ளனர், 'இல்லை சாமி' வராந்தாவில் எத்தனை பேர் உள்ளனர் என்று பார்த்து வரும் படி ஒரு குமாஸ்தாவை அனுப்பினார். சபாநாயகர். "இல்லை சாமி" வராந்தாவில் இருபது பேரும் "ஆமாம் சாமி" வராந்தாவில் 50 பேரும் உள்ளனர் என்று குமாஸ்தா சொன்னார். மசோதாவின் முடிவை சபாநாயகர் அறிவிக்கவில்லை. சபாநாயகர் என்ன செய்தார் என்றால் "ஆமாம் சாமி" வராந்தாவில் இருந்தவர்களிடம் அவர்கள் "இல்லை சாமி"களின் வராந்தாவிற்குச் சென்று அங்குள்ளவர்களை சபைக்கு வருமாறு வற்புறுத்தச் சொன்னார். அனைவரும் வந்தவுடன்தான் வாக்கெடுப்பின் முடிவை சபாயநாயகர் அறிவித்தார்.

இதற்கு ஒரு முக்கியமான அர்த்தம் உண்டு அதாவது சிறு பான்மையினர், தீவிரமாக இல்லையென்றாலும் அவர்கள் ஒரு அனுமதியை யாவது தந்துள்ளார்கள் என்று சபாநாயகர் நம்பினால் தான் பெரும்பான்மையினருக்கு ஆதரவாக முடிவு வெளியிடப்படும் என்பதே அது. இதுதான் ஆரம்பகால செயல்முறையாக இருந்தது. பிற்காலத்தில் பெரும்பான்மையினர் சிறுபான்மையினரை வற்புறுத்தி சபைக்கு அழைத்து வரும் வழக்கம் ஏனோ கைவிடப்பட்டுவிட்டது. சிறுபான்மையினரை நல்ல மனத்தோடு உடன் அழைத்துச் செல்ல வேண்டும். இல்லையேல் பெரிய சிக்கல்கள் உண்டாகி விடும். அவர்களுக்கு சர்வாதிகார உத்திரவுகள் இடக்கூடாது.

வேறொரு அரசியல் தத்துவமும் உண்டு - வால்டர் பகெஹாட் என்பவரின் தத்துவம். நாடாளுமன்ற ஜனநாயகம் என்பதை விவாதங்களின் ஜனநாயகம் என்று அவர் வர்ணித்தார். நாடாளுமன்ற ஜனநாயகத்தைப் பற்றிய உண்மையான வர்ணனை இது என்று நான் நினைக்கிறேன். நாடாளுமன்ற ஜனநாயகத்தில் திரைக்குப் பின்னால் எதுவும் நடப்பதில்லை. ஒரு குறிப்பிட்ட தனி நபரின் விருப்பப்படி எதுவும் நடைபெறுவதில்லை. ஒவ்வொரு விஷயமும் மன்றத்தினுள் ஒரு மசோதாவாகவோ தீர்மானமாகவோ கொண்டுவரப்படுகிறது.

சபையில் வைக்கப்பட்ட விஷயம் விவாதிக்கப்படும். "இணைப்பு" என்றழைக்கப்படுகிற தீர்மானத்தை, மாபெரும் நாடாளுமன்ற நடைமுறையை, நாம் பின்பற்றாமலிருப்பது பெரும் துரதிருஷ்டம். பேச்சாளர், இங்கு பார்னெல் எப்படி கிளாட்ஸ்டோனையும், நார்த்ப்ரூக்கையும் 48 மணி, 36 மணி, 24 மணி நேரம் என்று கூறி எப்படி தொந்திரவு படுத்தினார் என்பதை எடுத்துக்கூறி "இணைப்புக்கு" எதிர்ப்பை எவ்வாறு கொண்டு வந்தார் என்பதை விளக்கினார்.

என்றாலும் விவாதத்தை முடித்துக் கொள்ளலாம் என்கிற விதி எல்லா சபை உறுப்பினர்களுக்கும் இருப்பதால், கருத்து வாதங் களுக்கு போதுமான நேரம் இருக்கிறது. நாடாளுமன்றத்தில் நடை பெறும் விவாதம் அந்த விஷயத்தைத் தீர்மானிப்பது மட்டுமின்றி, அதற்கு மேலும் அதிக முக்கியத்துவம் உள்ளது. இந்த விவாதம் உயர்ந்த தரத்தில் நடந்து அது பத்திரிகைகயில் நல்ல முறையில் வெளியிடப்பட்டால், மக்களுக்கு அரசியல் கல்வியளிப்பதற்கு இதுவே பெரிய சாதனமாக அமையும். காமன்ஸ் சபை விவாதத்தை விட இது முக்கியத்துவம் அதிகம் பெறும். எனவே, இது ஒரு முக்கியமான அம்சம் ஆகும்.

நாடாளுமன்ற அரசாங்கம் என்பது சுயமான - ஆட்சி என்று சொல்லப்படுகிறது. தர்க்கவியல் பூர்வமாக இது உண்மையே. ஆனால், நீங்கள் முக்கியமாக நினைவில் கொள்ள வேண்டிய விஷயம் என்னவென்றால் நாட்டுக்கு ஒரு நல்ல அரசாங்கம் வேண்டும் என்பதே. உங்களுக்கு நல்லதொரு அரசாங்கம் எவ்வாறு கிடைக்கும்? என்பதே கேள்வி. ஒன்றிரண்டு கருத்துக்களை உங்கள் பார்வைக்குக் கொண்டு வருகிறேன், ஆமாம், இவை ஆழ்ந்த கவனத்திற்கு உரியவை. நல்ல அரசாங்கம் என்பது என்ன என்று வறட்டுத்தனமாக எதையும்

சொல்ல முடியாது. நல்ல அரசாங்கம் என்பது பற்றி வேறு வேறு மக்கள் பல விதமான கருத்துக்களைக் கொண்டிருப்பார்கள்.

முதலாளிகள், சந்தைப்படுத்தல் வசதிகளைச் செய்து தரும் முதலாளித்துவ அரசாங்கமே நல்ல அரசாங்கம் என்று கூறுவர். சோஷலிஸ்டுகளோ, இதற்கு மாறாக, சோஷலிச வடிவம் கொண்ட அரசாங்கம்தான் நல்ல அரசாங்கம் என்று சொல்லுவர். இன்னும் பல்வேறு மாதிரிகளில் அரசாங்கத்தை வேறு பலர் உருவகப் படுத்தலாம். எது நல்ல அரசாங்கம் என்பது பற்றி பல்வேறு அபிப் பராயங்கள் இவ்வாறு இருப்பது உண்மை. சிக்கலான ஒரு சமுதாய அமைப்புக் கொண்ட நமக்கு முழுமையான ஒரே அபிப்பிராயமாக நல்ல அரசாங்கம் பற்றிய கருத்து இருக்க முடியாது.

---

## (111)

# மேடைப் பேச்சுக் கலையை வளர்த்துக் கொள்ள வேண்டும்

*சித்தார்த்தா கல்லூரி வளாகத்தில், தோபி தலாவோ உயர் நிலைப் பள்ளியின் மாணவர்களிடையே நடந்த பேச்சுப் போட்டியில் கலந்து கொண்டவர்களுக்குப் பரிசளிக்கும் விழா 1948 ஆம் ஆண்டு ஜனவரி 14 ல் நடந்தது. இவ்விழாவில் டாக்டர் அம்பேத்கர் பேசினார்.*

பெரு முயற்சி செய்து, பொது மக்கள் மத்தியில் பேசும் கலையை வளர்த்துக் கொள்ள வேண்டிய அவசியத்தை வலியுறுத்தினார் டாக்டர் அம்பேத்கர். முதல் முறையாக மேடையில் பேசும்போது கோபால கிருஷ்ண கோகலே எப்படித் தடுமாறினார் என்று எடுத்துக் கூறினார் டாக்டர் அம்பேத்கர். பிரோஷா மேத்தா எப்படி ஒரு அறையில் பல கண்ணாடிகளின் முன் நின்று பேசி தமது உடல் அசைவுகளும் கையசைவுகளும் எப்படி இருக்கின்றன, தனது முகபாவம் எவ்வாறெல்லாம் மாறுபடுகிறது என்று பார்த்துப் பார்த்து எவ்வாறு தனது பேச்சுத் திறனை வளர்த்துக் கொண்டார் என்று எடுத்துச் சொன்னார். தனது தோற்றமும் தான் அணிந்துள்ள ஆடைகளும் பார்ப்போர் கவனத்தைக் கவருவதாக அமைய வேண்டும் என்பதில் பெரும் அக்கறை எடுத்துக் கொண்டார் மேத்தா. சிறந்த பேச்சாளரான சர்ச்சில் தயாரிப்புகள் செய்யாமல் பேச வரமாட்டார் என்று அம்பேத்கர் சொன்னார்.[1]

---

1. கீர், ப. 401.

# (112)

# மனு, யாக்ஞவல்கியர் ஆகிய இருவரின் நூல்கள் காரணமாக, இந்து சமூகம் தன்னை பழுது நீக்கிக் கொள்ளவில்லை

*1948 ஆம் ஆண்டு ஏப்ரல் 10ஆம் நாள், டில்லி பல்கலைக் கழகத்தின் சட்டக் கல்லூரியில் டாக்டர் அம்பேத்கர் உரை நிகழ்த்தினார்.*

*அவர் சொன்னார்:*

பண்டைக்கால சமூகங்கள் தமது அமைப்பில் உள்ள குறைபாடுகளைக் களையத் தவறியதுதான் சமுதாயச் சீரழிவுக்குக் காரணம். தம்மிடமுள்ள குறைபாடுகளைக் களைந்தெறிவதற்கு பதிலாக, மனுவைப் போன்றவர்கள் இயற்றிய சட்டத்தின்படி தாம் ஆளப்படுவதற்கு அவர்கள் ஒத்துக் கொண்டார்கள். ஒரு சட்டத்தின் உண்மையான நடைமுறை, சமுதாயத்தின் குறைபாடுகளைத் திருத்துவதுதான்.

நாகரிக வளர்ச்சி என்பது ஒரு தொடர் நிகழ்ச்சி அல்ல. ஒரு சில அரசுகளும் சமூகங்களும் ஒரு காலத்தில் நாகரிக வளர்ச்சி பெற்றிருந்தன. காலப்போக்கில் ஏதோ காரணத்தால் அவை தேக்கமடைந்தன, சீர்குலைந்தன. இந்திய வரலாற்றைக் கொண்டே இதை வர்ணிக்கலாம்.

வளர்ச்சியடைந்த பண்டைய நாகரிகம் எமது நாட்டில் இருந்தது என்று சொல்லக் கூடிய நாடுகளின் வரிசையில் ஐயமின்றி இந்தியா இருக்கிறது. ஐரோப்பிய வாசிகள் காட்டுமிராண்டிகளாகவும் நாடோடிகளாகவும் திரிந்து கொண்டிருந்தபோது, இந்த நாடு நாகரிகத்தின் உச்சியில் இருந்தது.

நாடாளுமன்ற நடைமுறையை ஐரோப்பிய நாடுகளிலிருந்து, குறிப்பாக பிரிட்டனிலிருந்து நாம் பெற்றுள்ளோம் என்று சாதாரண மக்கள் நினைப்பர். ஆனால், "வினாய் பிதாகா" என்ற நூலைப் படிக்கும் எவரும் இந்தக் கருத்தை ஒத்துக் கொள்ளமாட்டார்.

தற்போதைய நாடாளுமன்ற செயல்பாடுகளுக்கான விதி முறைகள் பலவும் "வினாய் பிதாகா"வில் காணப்படுகின்றன. ஒரு மசோதாவை நாடாளுமன்றத்தில் தாக்கச் செய்தால்தான் விவாதம் சாத்தியம் என்றும், அந்த மசோதா வாக்கெடுப்புக்கு விடப்பட்டால் தான் வாக்களிப்பு சாத்தியம் என்பதெல்லாம் புதிய கண்டுபிடிப்புகள் என மக்கள் கருதுவர். ஆனால் இது மக்களிடம் உள்ள தவறான தகவல். "பிக்குகளின் சங்க" கூட்டங்களை ஒழுங்குபடுத்தும் "வினாய் பிதாகா"வில் 'நேதி' மசோதா தாக்கலாகாமல் விவாதம் சாத்தியமல்ல என்ற பிரபலமான விதி உள்ளது.

ரகசிய வாக்கெடுப்பு என்பதை பிரிட்டிஷ் மக்கள்தான் கண்டுபிடித்தார்கள் என்று நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். இதுவும் ஒரு தவறான கருத்தே. "வினாய் பிதாகா" வில் ஒருவர் வாக்குகளை எண்ணுவது பற்றிய பிரிவு ஒன்று உள்ளது. அவர்களுக்கு "சல்பத்ரக க்ரஹாஸ்" என்று பெயர். சல்பத்ரகா (மரப்பட்டை) வாக்குச்சீட்டாக பயன்பட்டது. ஒருபிக்கு தன்னுடைய "சல்பத்ரகா" வை வாக்குப் பெட்டிக்குள் போடுகிற ஒரு முறையும் அப்போது இருந்துள்ளது.

அரசியல் விஷயங்களை இப்போது நான் பேசுவதற்கு ஒரு காரணம் உண்டு. இந்திய மக்கள் எத்தனையோ துறைகளில் சாதனைகள் செய்த பொதெல்லாம், வரலாற்றாசிரியர்கள் இந்திய மக்கள் அரசியலில் மிகவும் பின்தங்கியிருந்தனர் என்று கூறுகிறார்கள். இத்தகைய கருத்தை நான் மறுக்கிறேன்.

அந்த அரசியல் ஞானத்தை நாம் இடையில் இழந்து விட்டோம் என்று நான் ஒத்துக் கொள்கிறேன். நாடாளுமன்ற அமைப்புகளை எல்லாம் இழந்து விட்டு எதேச்சாதிகார மன்னன் ஒருவனின் ஆட்சிக்கு உட்பட்டு விட்டோம். நாகரிகத்தின் சரிவை இது காட்டுகிறது. இந்திய சமூகம் அவ்வப்போது சீர்கேடு அடைந்து வந்தது. இது உலகத்திலுள்ள அனைத்து சமூகங்களுக்கும் பொருந்தும்.

நவீன காலங்களில் சமூகங்கள் தொடர்ச்சியாக முன்னேறி வருவது எப்படி? போர்க் காலங்களுக்கு மட்டும் இது பொருந்தாது. பண்டைக் காலத்துச் சமூகங்கள் ஏன் இவ்வாறு முன்னேறவில்லை?

பண்டைச் சமூகத்துக்கும் நவீன சமூகத்துக்கும் இடையில் உள்ள வித்தியாசம் என்னவென்றால், பண்டைக்காலத்தில் சட்ட மியற்றுவதில் மக்களின் பங்கு எதுவுமில்லை. சட்டத்தை கடவுள் இயற்றினார் அல்லது மன்னர் இயற்றினார். கடவுளாலோ, மன்னராலோ இயற்றப்பட்ட சட்டத்துக்கு கீழ்ப்படிந்து நடப்பது தான் சமூகத்தின் வேலையாக இருந்தது. பண்டைய சமூகங்கள் தொடர்ச்சியாக வளர்ச்சியடையாமல் போனதற்கு இதுதான் அடிப்படைக் காரணம்.

சட்டத்தின் உண்மையான செயல்பாடு சமூகத்தின் குறை பாடுகளை நீக்குவதுதான். தம்மிடமுள்ள குறைகளை நிவர்த்தி செய்து கொள்ளும் துணிவு பண்டைய சமூகத்தில் இருக்கவில்லை. அதனால்தான் அவை சீர்குலைந்தன. இந்து சமூகத்தின் சீர்குலைவுக்கு முக்கிய காரணம் அச்சமூகமும் மனு, யஞ்ஞுவல்யர் ஆகியோர் இயற்றிய விதிகளின் அடிப்படையில் ஆட்சி செய்யப்பட்டது. இவர்கள் இயற்றிய சட்டங்கள் தெய்வீகச் சட்டங்களாகக் கருதப் பட்டன. இதன் விளைவாக இந்து சமூகம் தன்னை பழுது நீக்கிக் கொள்ளவில்லை.

சில காலத்துக்குப் பிறகு, இறைவன் தந்ததாகக் கருதப்பட்ட விதிகளை, மதச்சார்பற்ற சட்டவிதிகள் எதிர்த்தன. இதன் விளைவாக மேலை நாடுகளில் சட்டங்கள் மதற்சார்பற்ற தன்மை கொண்டுள்ளன. திருச்சபையின் சட்டங்கள் பாதிரிமார்களை மட்டுமே கட்டுப் படுத்தும்.

இந்தியாவின் கடந்த காலத்தை ஆய்வு செய்தனர் பல ஆசிரியர்கள், அவர்களில் ஒருவர் பேராசிரியர் மாக்ஸ்முல்லர், இந்திய சட்டங்கள் மாறவே இல்லை என்று கருதுவது துரதிருஷ்டம். பழமைவாதப் போக்கு கொண்ட பண்டிதர்களும் இப்படித்தான் சொல்லுகிறார்கள். நான் செய்துள்ள ஆராய்ச்சிகளின் அடிப்படையில் இக்கருத்துக்கள் முற்றிலும் தவறானவை என்ற முடிவுக்கு நான் வந்துள்ளேன்.

இந்த நாட்டில் நடந்துள்ள புரட்சிகள் பலவற்றைப் போல வேறெந்த நாடும் கண்டதில்லை. ஐரோப்பியர்கள் போப்பின் அதிகாரத்தை எதிர்ப்பதற்கு வெகு காலத்துக்கு முன்பே, தெய்வீகச் சட்டத்துக்கும் மதச் சார்பற்ற சட்டத்துக்கும் இடையில் இந்த

நாட்டில் சர்ச்சை நடந்து வந்தது. கௌடில்யரின் அர்த்த சாஸ்திரம் மதச்சார்பற்ற சட்டங்களுக்கு அடித்தளம் அமைத்தது. ஆனால், துரதிருஷ்டவசமாக மதச்சார்பற்ற சட்டங்களை தெய்வீக சட்டங்கள் வெற்றி கொண்டன. இது ஏன் நிகழ்ந்தது? இந்தியாவில் நிகழ்ந்த பேரிடர்களில் இதுவும் ஒன்று. சட்டம் மாற்றப்பட முடியாதது என்ற எண்ணமே இந்து சமூகத்தின் முற்போக்கற்ற தன்மைக்கும் காரணம் ஆகும்.

---

# (113)

## ஒருதலைவர், ஒருகட்சி, ஒரு வேலைத்திட்டத்தின் கீழ் ஒன்றுபடுங்கள்

*லக்னோவில் 1948 ஏப்ரல் 24, 25 தேதிகளில் ஒன்றுபட்ட மாகாண அரிஜன வகுப்பார் சம்மேளனத்தின் ஐந்தாவது மாநாடு நடந்தது.*

*மனிதர்கள் அனைவருக்கும் சமத்துவ உரிமையும் அரசியல் உரிமையும் வேண்டும் என்று கோரி அரிஜன வகுப்பார் சம்மேளனம் கடந்த ஆண்டு இதே இடத்தில் ஆர்ப்பாட்டம் நடத்தியது. இந்த ஆர்ப்பாட்டத்தில் பெண்களும் ஆண்களுமாக 2000- க்கும் மேற்பட்ட அரிஜன மக்கள் கலந்து கொண்டனர். இவர்கள் அனைவரும் கைது செய்யப்பட்டு லக்னோ சிறையில் அடைக்கப்பட்டனர். இவர்கள் அனைவருக்கும், அரிஜனங்களுக்கு வாழ்வளிப்பவரான டாக்டர் அம்பேத்கரை காண வேண்டும் என்ற ஆவல் மிகுந்திருந்தது. அந்த முயற்சிகளின் விளைவுதான் இந்த சொற்பொழிவு.*

*பொதுச் செயலாளரான கயாபிரசாத், மற்றும் பால் கோவிந்த், கன்ஹயலால், சோன்கர், புத்ததாஸ் சௌத்திரி, மேவலால் கோன்கர் ஆகியோரின் முயற்சிகளால் மாநாடு வெற்றிகரமாக நடந்தது. இந்த மாநாட்டில் ஒரு லட்சத்துக்கும் மேற்பட்ட தலித்துகள் கலந்து கொண்டனர். அகில இந்திய அரிஜன வகுப்பார் சம்மேளனத்தின் பொதுச் செயலாளர் பி.என். ராஜ்போஜ் மாநாட்டில் கலந்து கொண்டார். ஐக்கிய மாகாணத்தின் தலைவரான கோபிசந்த் விப்பால், சாந்தா சைனிக்கால், ஐக்கிய மாகானங்களின் அரிஜன வகுப்பார் சம்மேளனத்தின் திலக் சந்த் குரில் அகியோர் மாநாட்டு ஏற்பாடு களின் தூண்கள் ஆவர்.*

*இரண்டு காரணங்களால் மாநாடு முக்கியத்துவம் பெற்றது. 1. காங்கிரஸ் ஆளும் மாநிலங்களில் தீண்டத் தகாதோர் படும் துன்பங்களுக்கு முடிவே இல்லை என்று மாநாட்டில் தெளிவாகத் தெரிந்தது. 2. தீண்டத்தகாதோர் முன்னேற்றத்துக்காகத் தேவையான எதையும் செய்ய ஷெட்யூல்டு ஜாதிகள் ஒரு போதும் தயங்காது. 1948*

ஏப்ரல் 25ஆம் நாள் டாக்டர் அம்பேத்கர் மாநாட்டில் உரையாற்றினார்![1]

அவர் சொன்னார்:

சமுதாய முன்னேற்றம் அனைத்துக்கும் திறவுகோல் அரசியல் அதிகாரமே. தாழ்த்தப்பட்டோரின் மேன்மைக்கு அவர்கள் இந்த அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும். இவர்களுக்கு எதிர்க்கட்சிகளாக இயங்கும் காங்கிரஸ் கட்சிக்கும், சோஷலிஸ்டு கட்சிக்கும் இடையில் ஒரு மூன்றாவது சக்தியாக இது விளங்க வேண்டும்.

காங்கிரஸ் கட்சியுடன் சேர்வதன் மூலம் அரசியல் அதிகாரத்தை தாழ்த்தப்பட்டோர் கைப்பற்ற முடியாது. காங்கிரஸ் ஒரு பேரியக்கம். நாம் அதற்குள் புகுந்தால் சமுத்திரத்துக்குள் ஒரு துளியாகி நாம் கரைந்து போவோம். காங்கிரஸ்காரர்கள் கர்வம் பிடித்தவர்கள். அவர்களுடன் சேர்ந்தால் நாம் மேலே எழ முடியாமல் போய்விடும். காங்கிரசுடன் நாம் சேர்ந்தால் நமது எதிரிகளான அவர்களுக்குத் தான் பலம் கூடும்.

பற்றியெறியும் வீடான காங்கிரசுக்குள் நுழைந்தால் நாம் வளமடைய மாட்டோம். அக்கட்சி இன்னும் இரண்டு வருடங்களில் அழிந்து போனால் நான் ஆச்சரியமடைய மாட்டேன். சோஷலிஸ்டுகள் காங்கிரசிலிருந்து வெளியேறிவிட்டனர். இது காங்கிரசை நிச்சயம் பலவீனமாக்கும்.

நாம் ஒரு மூன்றாவது கட்சியாக வளர வேண்டும். சோஷலிஸ்டுகளும் காங்கிரசும் முழுமையாக பெரும்பான்மை பெறாமல் போனால் அவர்கள் நமது கால்களில் விழுந்து கெஞ்சி நமது வாக்குகளைக் கோருவார்கள். அதிகாரத்துக்கு யார் வருவது என்பதை அப்போது நாம்தான் முடிவு செய்ய வேண்டிய நிலையில் இருப்போம். அந்த நேரத்தில் அரசியல் ஆதரவைத் தருவதற்கு நாம் நமது நிபந்தனைகளை விதிப்போம்.

பனிரெண்டு ஆண்டுகளுக்கு முன்பு லோதியன் கமிட்டி உறுப்பினராக நான் லக்னோ வந்தேன். இப்போது தாழ்த்தப்

1. ஜனதா, 1, மே, 1948.

பட்டோரிடம் அரசியல் உணர்வு அதிகம் இருப்பதைக் காண்கிறேன். உ.பி.யில் சத்தியாக்கிரகம் நடத்தினோம். நீங்கள் அனைவரும் நமது வகுப்பினருக்காக செய்துள்ள சேவைகளுக்காக நான் உங்களைப் பாராட்டுகிறேன். நமது குறிக்கோள்களை அடைய வேண்டும் என்று நாம் உறுதி கொண்டு செயல்பட்டால் எவ்விதத் தடை வந்தாலும் அதை அடைந்தே தீர்வோம் என்பதை இது காட்டுகிறது.

காங்கிரஸ் அரசாங்கத்தில் நான் சேர்ந்துள்ள விஷயம் அரிஜன வகுப்பாரிடம் பெரும் குழப்பத்தை உண்டாக்கியுள்ளது. எனவே இது பற்றிய சந்தேகங்களை நான் தீர்க்க வேண்டும். பிரிட்டிஷ்காரர்கள் தமது பிரகடனத்தைக் காப்பாற்றவில்லை. இந்துக்கள், முஸ்லீம்கள், சீக்கியர்கள் ஆகிய வகுப்புகளை மட்டும் அங்கீகரித்து அவர்கள் வசம் ஆட்சியதிகாரத்தை ஒப்புவிக்க முடிவு செய்தனர்.

25 வருடங்களாகக் காங்கிரசுக்கு எதிராகப் போராடிய நான், முக்கியமான ஒரு காலக்கட்டத்தில் ஏன் மௌனமாக இருக்கிறேன் என்று என்னைக் கேட்டார்கள். எல்லா நடவடிக்கைகளிலும் ஈடுபடத்தான் வேண்டும்.

பிரிட்டிஷ்காரர்கள் நம்மை நட்டாற்றில் விட்டுச் சென்று விட்டனர் நமது வகுப்பினரும் பிளவு பட்டுள்ளனர். நமது அணியிலேயே காட்டிக் கொடுப்போர் பலர் இருந்தனர். எனவே ஒரு பெரும்பலம் கொண்ட ஸ்தாபனத்துடன் போரிடுவது நமது நலனுக்கு உகந்ததல்ல.

நாம் சமரசக் கொள்கையைக் கடைப்பிடித்தோம், அதன் மூலம் பெருமளவு வெற்றிகளும் பெற்றுள்ளோம், நாம் விரும்பியதெல்லாம் நமக்குக் கிடைக்கவில்லையென்றபோதிலும் நமக்கு கிடைத்துள்ளன சலுகைகளும் கணிசமானவையே. சட்டப் பேரவைகளில் நமக்கு ஒதுக்கீடுகள் கிடைத்துள்ளது. வேலை வாய்ப்புகளிலும் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது, மேலும் நமது கோரிக்கைகள் பலவும் ஒத்துக் கொள்ளப்பட்டுள்ளன. நமக்கென்று தனி வாக்காளர் தொகுதி கிடைக்கவில்லை. இதற்காக நாம் வெட்கப்பட வேண்டியதில்லை, ஏனென்றால் மற்ற சிறுபான்மையினருக்கும் இது கிடைக்கவில்லை. காங்கிரசிடம் தகராறு செய்ய இது தருணம் அல்ல. மாறாக சமரசம், ஒத்துழைப்பு மூலமாக நமக்கு வேண்டியதை முடிந்த அளவு பெற்றுக் கொள்ள வேண்டும்.

நான் மத்திய அரசில் சேர்ந்திருக்கிறேனே தவிர, காங்கிரசின் உறுப்பினராகி விடவில்லை, அத்தகைய எண்ணமும் எனக்கு இல்லை. மத்திய அரசில் சேர்ந்து கொள்ளும்படி எனக்கு அழைப்பு விடுக்கப் பட்டது, நானும் எவ்வித நிபந்தனையும் விதிக்காமல் சேர்ந்து கொண்டேன். நான் எப்போது வேண்டுமானாலும் வெளியே வந்து விடலாம். நமது வகுப்பினர் இருக்கிற நிலைமையில் நாம் அரசு இயந்திரத்தில் இருப்பது அவசியமாகிறது.

மோசமான சட்டங்களைப் பற்றி மட்டும் நாம் பயப்பட்டால் போதாது. தாழ்த்தப்பட்டோரின் நலன்களுக்கு எதிராகவே செயல் படுகிற நபர்களால் அரசாங்கம் நிறைந்திருந்தால் நல்ல சட்டங்கள் கூட மோசமாக அமல்படுத்தப்படும். அப்போது நமக்கு விமோசனமே இருக்காது. வலுக்கட்டாயமாக வேலை வாங்குகிற பேகார் என்ற முறைக்கு சட்டபூர்வ அனுமதி இல்லை. ஆனால் ஜமீன்தாரர்கள் அந்த முறையைக் கடைப்பிடிக்கிறார்கள். தாழ்த்தப்பட்டோர் இதை எதிர்த்துச் செய்கிற விண்ணப்பங்கள் அசட்டை செய்யப் படுகின்றன. ஏனென்றால், இந்த விண்ணப்பங் களைப் பெற்றுக் கொள்கிற அதிகாரிகள் அடக்கு முறையைக் கடைப் பிடிக்கிறவர்களின் உறவினர்களாக இருக்கிறார்கள். தாழ்த்தப் பட்டோர்களில் சிலர் அதிகாரிகளாக இருந்தால் தமது சகோதரர் களுக்கு அவர்களால் பாதுகாப்புத் தர முடியும்.

நான் காங்கிரஸ் கட்சியில் சேருவதாக இருந்தால், எனது விருப்பத்தை வெளியிட்ட பின்தான் அவ்வாறு செய்வேன். தாழ்த்தப் பட்டோரின் நலன்களுக்கு அது ஏற்புடையதாக இருக்கும் என்றால் அவ்வாறு செய்யும்படி நான் உங்களிடமும் கூறுவேன். நான் வெளிப்படையாக உங்களை காங்கிரசில் சேரும்படி கேட்டுக் கொண்டாலன்றி நீங்கள் அவ்வாறு செய்யாதீர்கள்.

தனிமையிலிருப்பதால் தான் பின் தங்கிய வகுப்பினர் இன்னலுக்கு உள்ளாகின்றனர். அவர்கள் ஒரு ஐக்கிய முன்னணி அமைத்து உயர் வகுப்பினரிடமிருந்து அரசியல் அதிகாரத்தைத் தட்டிப் பறிக்க வேண்டும். வயது வந்தோருக்கு வாக்குரிமை வழங்கப் பட்டுள்ளதால் வெகு ஜனங்களுக்கு அரசியல் அதிகாரம் வந்துள்ளது. ஒன்றறை கோடி அரிஜனங்களும், ஒரு கோடி, பின்தங்கிய வகுப்பினரும் பொது இலக்குக்கு எதிராக ஒன்று சேர்ந்தால், தமது உறுப்பினர்களை

சட்டசபையில் பாதி உறுப்பினர்களாக்கி அரசியல் அதிகாரத்தைப் பறிக்கலாம் என்று நான் கருதுகிறேன். பின்தங்கிய வகுப்பார் உயர் வகுப்பினருக்கு எதிராக ஒரு தனி அணியை உருவாக்கினால் அதை நான் ஆட்சேபிக்க மாட்டேன். தாழ்த்தப்பட்டோரும் பின்தங்கிய வகுப்பாரும் தங்கள் சக்தியை உணராமல் இருப்பது கண்டனத்துக் குரியது. இதன் விளைவாக நிர்வாகத்தில் உயர் வகுப்பினர் ஆதிக்கம் செலுத்துகிறார்கள்.

ஒரு தலைவரின் கீழ், ஒரு கட்சியின் கீழ், ஒரு வேலைத் திட்டத்தின் கீழ் நீங்கள் ஒன்றுபட வேண்டும். ஜாதி வித்தியாசங்களை விலக்கி வைத்துவிட்டு சம்மேளனத்தின் கீழ் ஒன்றுபடுங்கள்.

## டாக்டர் அம்பேத்கரின் அறிக்கை

தனது லக்னோ உரையில் கண்டுள்ள சில விஷயங்களைத் தெளிவு படுத்தும் பொருட்டு டாக்டர் அம்பேத்கர் கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டுள்ளார்:

லக்னோவில் - ஏப்ரல் 25ஆம் நாள், ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் மாநாட்டில் நான் நிகழ்த்திய உரையைத் திரித்தும் சிதைத்தும் வெளியிட்டிருப்பதைக் கண்டேன். உள்ளூர் பத்திரிகை ஒன்றில் எனது தோழர்களுக்கு எதிராக நான் பண்பற்ற வார்த்தை களைக் கூறியதாகச் சொல்லப்பட்டுள்ளது கேட்டு மனம் புண் பட்டுள்ளேன் என்பதைச் சுருக்கமாகக் கூறுவது அவசியமாகிறது.

அங்கு நான் நிகழ்த்திய உரை தயாரிப்பின்றி நிகழ்த்தப்பட்டது. எனது உரையில் கண்ட அம்சங்களை கீழே தருகிறேன். எனக்கெதி ராகத் தொடுக்கப்பட்டுள்ள விமர்சனங்களுக்கு பதில் சொல்லுவது இதன் நோக்கம்.

1. அமைச்சரவைக் குழு வந்து சென்றபின் நான் ஏன் மௌனம் சாதிக்கிறேன்?
2. காங்கிரஸ் அரசில் நான் ஏன் சேர்ந்து கொண்டேன்?
3. எதிர்காலத்தில் நான் செய்யப் போவது என்ன?

முதல் கேள்விக்கு எனது பதில்: ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனம் அரசியல் பாதுகாப்பு கோரியது, இதில் முக்கியமானது என்னவென்றால் தனி வாக்காளர் தொகுதி. ஆரம்ப கட்டத் தேர்தல் முடிவுகளைப் பார்த்தால், தாழ்த்தப்பட்டோர் முழுமையும் இந்தக் கோரிக்கையை ஏற்றுக் கொள்கிறது என்று புரியும். இப்படி இருந்தும் நமது அமைச்சரவைக் குழுவினால் நிராகரிக்கப்பட்டது. இதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. 1. முஸ்லீம்களுடனோ, சீக்கியர் களுடனோ ஒப்பிட்டு பார்க்கும் போது நாம் ஒரு பலவீனமான கட்சியாக இருந்தோம். 2. நமது அணி பிளவு பட்டிருந்தது, இதில் காட்டிக் கொடுப்போர் பலர் இருந்தனர்.

அமைச்சரவைக் குழுவின் முடிவுகள் தாழ்த்தப்பட்டோரை ஒழித்துக்கட்டிவிடக் கூடியதாக இருந்தது, ஒரு தனி அமைப்பாக அது இல்லாமல் போகும் சாத்தியம் இருந்தது. அரசியல் பாதுகாப்பு இல்லாமல் தாழ்த்தப்பட்டோர் துடைத்தெறியப் பட்டிருப்பர். எனக்கு முன்னால் தெரிந்தது பேரிருள்தான். இதன் காரணமாகத்தான் நான் எந்த அறிக்கையும் வெளியிடவில்லை.

இரண்டாவது கேள்விக்கு எனது பதில்:

நான் காங்கிரசை எதிர்ப்பவனாகவும் தாக்கிப் பேசுபவனாகவும் இருந்தது உண்மைதான். அதே நேரத்தில் எதிர்ப்புக் காட்டுவதற் காகவே எதிரியாக இருக்கவும் நான் விரும்பவில்லை. ஒத்துழைப்பு மனப்பான்மை இருத்தல் வேண்டும். காங்கிரசை எதிர்த்துப் போராடுவதில் பயனில்லை என்று நான் கருதினேன். எனவே காங்கிரசுடன் ஒத்துழைப்பது என்று முடிவு செய்தேன். இந்த ஒத்துழைப்பு மூலமாக அரசியல் சாசனத்தில் நமக்கு சில பாதுகாப்புகள் கிடைத்தன. இந்த ஒத்துழைப்பு இல்லையென்றால் நமக்கு இப்பாதுகாப்புகள் கிடைத்திருக்காது.

நான் அமைச்சரவையில் சேர்ந்துள்ளது பற்றி:

இந்த அழைப்பை ஏற்றுக் கொள்வதற்கு என்னிடம் இரண்டு காரணங்கள் இருந்தன என்று நான் சொன்னேன். 1. இந்த அழைப்பின் போது எனக்கு எந்தவித நிபந்தனையும் விதிக்கவில்லை. 2. தாழ்த்தப் பட்டோருக்கு வெளியிலிருந்து செய்வதை விட அரசாங்கத்தின் உள்ளிருந்து சிறப்பான சேவை செய்ய முடியும்.

தாழ்த்தப்பட்டோருக்கு பாதகமாக மோசமான சட்டங்கள் இயற்றப்படும் என்று அவர்கள் பயப்படத் தேவையில்லை. அவர்கள் எதற்காக பயப்பட வேண்டும் என்றால் மோசமான நிர்வாகத்துக்குத் தான். நிர்வாகத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் பங்கு பெறவில்லை என்றால் மோசமான நிர்வாகம் அமையும்.

நிர்வாகம் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு எதிராக செயல் படுவதற்குக் காரணம் அதில் ஜாதி இந்து அதிகாரிகள் இருந்து கொண்டு, கிராமத்திலுள்ள ஜாதி இந்துக்களுக்கு ஆதரவாக செயல்பட்டு, தாழ்த்தப்பட்டோரிடம் பேகார் முறையில் வலுக் கட்டாய வேலை வாங்கி ஒவ்வொரு நாளும் கொடுமையாக அவர்களை அடக்கி ஒடுக்கி வந்தனர். இந்தக் கொடுமையையும் ஒடுக்கு முறையையும் ஒழிக்க வேண்டுமானால் தாழ்த்தப்பட்டோர் பொது நிர்வாகப் பணியில் இருக்க வேண்டும். இதற்கு வசதியாக நாம் அரசாங்கத்திற்கு உள்ளிருந்து செயல்பட வேண்டும், வெளியி லிருந்தல்ல.

மூன்றாவது விஷயத்தைப் பொருத்தவரை, காங்கிரசில் சேர்வதில் பயனில்லை. இரண்டு கட்சிகள் இருப்பதே நமக்குப் பாதுகாப்பு, அரசாங்கத்தை விமர்சிப்பதற்கு இரண்டு கட்சிகள் இருப்பது அவசியம். இல்லையேல் அரசாங்கம் எளிதில் சர்வாதிகாரி யாகி விடும். பற்றியெரிகிற மன்றம் அது. காங்கிரசிற்குள் இருக்கும் பலரும் ஒரு எதிர்க்கட்சி அமைக்கும் யோசனையில் உள்ளனர். இது மிகவும் அவசியம் என்று அவர்கள் நினைக்கின்றனர்.

இரண்டாவதாக காங்கிரஸ் இப்போது பிளவு பட்டு வருகிறது. சோஷலிஸ்டுகள் அதிலிருந்து வெளியேறி விட்டனர். அவர்கள் எவ்வளவு பெரிதாக வளர்ச்சி அடைவார்கள் என்பதை இப்போது சொல்ல முடியாது. அவர்கள் பெரிய வளர்ச்சி பெறுவதற்கு வாய்ப்புகள் உண்டு. இனிமேல் இரண்டு கட்சிகள் இருக்கும் 1. காங்கிரஸ் 2. சோஷலிஸ்டு. நாம் காங்கிரசில் சேர வேண்டுமா என்பது பிரச்சினை அல்ல. நாம் காங்கிரசில் சேரலாமா, சோஷலிஸ்டுகளுடன் இணையலாமா என்பதுதான் கேள்வி.

நாம் மூன்றாவது கட்சி அமைக்க வேண்டும் என்றும், இதன் மூலம் ஆட்சி அமைவதற்கு நமது துணை தேவை என்ற நிலை

ஏற்படும் அப்போது பேரம் பேச நமக்கு வாய்ப்பு கிட்டும். எனவே அரசியல் கட்சி ஒன்றில் சேர்ந்து கொள்வதில் பயனில்லை. அதனால் வருகின்ற பயனெல்லாம் பதவி கிடைக்கும் என்பதே. ஆனால் இது அதிகாரத்தைத் தராது. பந்த் அரசாங்கம் பணி வாய்ப்புகளில் 10 சதவீத ஒதுக்கீடு மட்டும் நமக்கு வழங்கியிருப்பதற்கு எதிராக நீங்கள் தீர்மானம் இயற்றியுள்ளீர்கள். மக்கள் தொகை அடிப்படையில் 22% நமக்குக் கிடைக்க வேண்டும்.

உங்களுக்கு கிடைக்க வேண்டிய 22% ஒதுக்கீட்டை பந்த் அரசு ஏன் வழங்கவில்லை என்றால் ஐக்கிய மாகாண சட்டமன்றத்தில் பெரும்பான்மைக்காக அவர் உங்களைச் சார்ந்து இல்லை. பேச்சு வார்த்தைக்கு அழைக்கப் படுகிற அளவுக்கு நாம் ஒரு தனி அமைப்பாக உருவானால்தான் நீங்கள் 22% ஒதுக்கீடு கேட்க முடியும். அப்போது அவர் அதைத் தந்தே ஆக வேண்டும்.

பின்னர் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் பின்தங்கிய வகுப்பினருக்கும் இடையில் ஒற்றுமை இருக்க வேண்டும் என்று சொன்னேன். மாநாட்டில் கலந்து கொண்ட பின்தங்கிய வகுப்புப் பிரதிநிதிகளின் வேண்டுகோளுக்கு இணங்கியே நான் இதைக் கூறினேன். இரண்டு வகுப்பினரின் தேவைகளும் ஒன்றாக இருக்கும் போது அவர்கள் ஒன்றுபடாமல் இருப்பது துரதிருஷ்டமே. பின்தங்கிய வகுப்பினர் தாழ்த்தப்பட்டோருடன் சேருவதற்கு ஏன் தயாராக இல்லை என்றால் இந்த ஒற்றுமையினால் தாழ்த்தப்பட்ட மக்களின் மட்டத்துக்கு அவர்களும் தாழ்ந்து போக நேருமோ என்ற பயம்தான்.

தாழ்த்தப்பட்டோருக்கும் பின்தங்கிய வகுப்பாருக்கும் இடையில் விருந்துகளும் திருமணங்களும் நடக்க வேண்டும் என்று நான் விரும்பவில்லை. தனித்தனி சமுதாய அமைப்புகளாகவே அவை இருக்கும். ஆனால் தங்களது பின்தங்கிய நிலைமையை போக்கிக் கொள்வதற்காக அவர்கள் ஏன் ஒரு அரசியல் கட்சி அமைத்துக் கொள்வதற்கு ஒன்றுபடக் கூடாது? தமது நிலைமைகளை அரசியல் பணிகள் மூலம் ஓரளவுக்கு தாழ்த்தப்பட்டோரும் முன்னேற்றிக் கொண்டுள்ளது போல பின்தங்கிய வகுப்பினரும் ஏன் செய்து கொள்ளக் கூடாது?

இந்த நாட்டின் மக்கள் தொகையில் பெரும்பான்மையினர் தாழ்த்தப்பட்டோரும் பின்தங்கிய வகுப்பாரும்தான் என்று நான்

சுட்டிக் காட்டினேன். அவர்கள் இந்த நாட்டை ஏன் ஆளக்கூடாது என்பதற்கு காரணம் ஏதுமில்லை. வயது வந்தோர் வாக்குரிமை உள்ளதால் உங்களுக்கு சுலபமாக கிடைக்கக் கூடிய ஆட்சியதி காரத்தைக் கைப்பற்றுவதற்கு நீங்கள் அமைப்புரீதியில் ஒன்றுபடுவது மிகவும் அவசியம். காங்கிரஸ் அரசாங்கம் நிரந்தரமாக இருக்கும் என்று மக்கள் நம்புவதால் அவர்கள் துணிந்து செயல்படவில்லை. இது ஒரு தவறான கருத்து என்று நான் கூறினேன். மக்கள் ஜனநாயக அமைப்பில் எந்த அரசாங்கமும் நிரந்தரம் அல்ல. காங்கிரசின் மிக உயர்ந்த தலைவர்களான நேரு - படேல் அரசுக்கும் இது பொருந்தும். நீங்கள் அமைப்பு ரீதியில் ஒன்று பட்டால் அரசாங்கத்தைக் கைப்பற்றலாம்.

நான் காங்கிரஸ் அரசையோ, எனது சக தோழர்களையோ தாக்கிப் பேசினேன் என்று சொல்வது உண்மைக்கு முற்றிலும் புறம்பானது என்பதை வாசகர்கள் உணர்வார்கள் என்று நம்புகிறேன்.

---

# (114)

# ஒரு வகுப்பாரின் முன்னேற்றம் எப்போதும் அவர்களின் கல்வித் தரத்தைப் பொறுத்தே இருக்கிறது

*மண்ணாரு நகரில் டாக்டர் அம்பேத்கரிடம் 1949 ஆம் ஆண்டு ஜனவரி 15 ல் ஒரு பணமுடிப்பு வழங்கப்பட்டது. அப்போது பேசிய அவர் சொன்னார்:*

*"நமது மக்கள், தொழிலாளர்கள் விவசாயிகள் ஆட்சியின் மூலம் உண்மையான சோஷலிசத்தைக் கொண்டு வருவார்கள்" என்றார். ஒரு வகுப்பினரின் முன்னேற்றம் அவர்கள் பெற்றுள்ள கல்வியின் தரத்தையே எப்போதும் பொருத்திருக்கிறது என்றும் அவர் வலியுறுத்தினார்![1]*

---

*1. கீர், ப. 410.*

# (115)

# பொதுச்சட்டம் கொண்டு வருவதற்கு இந்துச் சட்டமே சரியான முதல் படி

*சித்தார்த்தா கல்லூரி மாணவர்கள் 1950 ஜனவரி 11 ஆம் நாள் மாணவர் நாடாளுமன்றக் கூட்டம் ஒன்று நடத்தினர். பம்பாயில் அப்போது டாக்டர் அம்பேத்கர் இருந்தார். 'இந்துச் சட்ட மசோதா' பற்றிப் பேசுவதற்காக அவர் சிறப்பாக அழைக்கப்பட்டிருந்தார். சுந்தர்பாய் மண்டபத்தில் நிகழ்ச்சி நடந்தது. நிகழ்ச்சி தொடக்கம் காலை 9 மணி என்ற போதிலும் 8 மணிக்கே மண்டபம் நிறைந்து விட்டது. வெளிப்பிரமுகர்கள் பலர் டாக்டர் அம்பேத்கரின் பேச்சைக் கேட்க வந்திருந்தனர். ஒலி பெருக்கிகளுக்கு விசேஷ ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.*[1]

*தமது உரையில் டாக்டர் அம்பேத்கர் சொன்னார்:*

*இந்துச் சட்ட மசோதாவை தீவிரமானது என்றோ புரட்சி கரமானது என்றோ வர்ணிக்க முடியாது. முன்னேற்றத்திற்கான புதிய வழிமுறைகளை அனுமதிக்கிற இந்த மசோதா பழைமைவாத நடைமுறைகளை எதிர்க்கவில்லை. புதிய குடியரசின் அரசியல் சாசனமானது நாட்டு மக்கள் அனைவரும் பயன் பெறும் வகையில் ஒரு சிவில் சட்டத்தைக் கொண்டு வருவதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுப்பதற்கு ஒரு திசை வழியைக் காட்டியிருக்கிறது என்றார் டாக்டர் அம்பேத்கர். இந்துச் சட்டத்தின் சில பிரிவுகளை ஒழுங்குபடுத்துவதும்திருந்துவமே இந்த மசோதாவின் நோக்கம். அதன் முக்கியத்துவத்தைப் பற்றிக் குறிப்பிட்டு, நாட்டின் ஒற்றுமையைக் கருத்தில் கொண்டு பார்க்கும் போது, இந்துக்களின் சமூக வாழ்க்கையையும் சமய வாழ்க்கையையும் ஒரே விதமான சட்டங்கள் தான் நிர்வகிக்க வேண்டும் என்றார். சட்டம் ஒரே சீராக இருக்க வேண்டும் இந்துச் சட்டம் திருத்தப் படுகிறதே தவிர, இந்து மக்கள் பலவீனமானவர்கள் என்பதற்காக அல்ல என்று அவர் மேலும் கூறினார். பொது சிவில் சட்டம் கொண்டு வருவதற்கு ஒரு*

---

*1. ஜனதா, 14, ஜனவரி, 1950.*

முன்னோடிதான் இந்துச்சட்டம். சட்டங்கள் புரிந்து கொள்ளக் கூடியதாக இருக்க வேண்டும், பிராந்திய எல்லைகளுக்கும் அப்பால் நாடு முழுவதும் இது அமலாக வேண்டும். மேலும் இந்து மதத்தைச் சேர்ந்த ஒருவர் இந்து சமூகத்திலிருந்து யாரை வேண்டுமானாலும் தத்து எடுத்துக் கொள்ளலாம், தனது மகளுக்கு சொத்துரிமை வழங்காமல் உயில் எழுதி வைக்கலாம்.

எந்த அடிப்படையில் சட்ட மசோதா வரையப்பட்டிருக்கிறது என்பதைப் பொருத்தவரை, இந்து சாஸ்திரங்கள், ஸ்மிருதிகள் ஆகியவற்றின் அடிப்படையிலேயே அவை திருத்தப் பட்டுள்ளன. சொத்துரிமைக்கு வகை செய்வது தயாபாக் முறை. ப்ரித்தீஸ்வரன்யா அடிப்படையில் குழந்தை, தந்தையின் ஜாதியைப் பெறுகிறது. கௌடில்ய, பராஷரா ஸ்மிருதிகள் விவாகரத்துக்கு ஆதரவு தருகின்றன. ப்ருஹஸ்பதி ஸ்மிருதி பெண்களுக்கு சொத்துரிமை வழங்குகிறது என்று முடித்தார் டாக்டர் அம்பேத்கர்.[1]

---

# (116)

# இந்தியா மீண்டும் அடிமைப்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்

*1950 ஆம் ஆண்டு ஜனவரி 11 ஆம் தேதி பரேல் நரேல் பார்க்கில் நடந்த ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் கூட்டத்தில் மக்கள் உற்சாகம் நிரம்பி வழிந்தது. இந்திய அரசியல் சாசனத்தை வரைவதில் செயல் வீரராக இருந்த டாக்டர் அம்பேத்கருக்கு வரலாற்றுச் சிறப்பு மிக்க அந்த ஆவணம் புத்தக வடிவில் உருவாக்கப்பட்டிருந்த தங்கப் பேழையில் வைத்துக் கொடுக்கப்பட்டது.*

*அந்தக் கூட்டத்தில் இரண்டு லட்சத்துக்கு மேற்பட்ட பெண் களும் ஆண்களும் கலந்துகொண்டனர். ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் இக்கூட்டம் சம்மேளனத்தின் வரலாற்றில் ஒரு மைல்கல்லாக அமைந்தது. பார்க்கிலிருந்து பிரதான சாலை வரை வழிந்து நின்ற அந்தக் கூட்டத்தைப் போன்றதொரு கூட்டம் அந்தப் பார்க்கில் அதுவரை நடைபெறவில்லை.*

*நீல வண்ணக் கட்சிக் கொடியைச் சுமந்து வந்த தாழ்த்தப்பட்ட மக்களின் மாபெரும் பேரணி, வெற்றி முழக்கங்கள் செய்தபடி, பல பகுதிகளிலிருந்தும் வந்து மதியம் முதலே அந்தப் பார்க்கில் கூடத் தொடங்கியது. தொண்டர்கள் கூட்டத்தை ஒழுங்கு படுத்தினர். சிறந்த கட்டுப்பாடு நிலவியது. கடந்த ஐந்து வருடங்களில் முதல் முறையாக அளிக்கப்படுகிற வரவேற்புக் கூட்டத்தின் மேடையின் மீது டாக்டர் அம்பேத்கர் ஏறியவுடன் மக்களிடையில் உற்சாகம் பொங்கியது. "அம்பேத்கர் வாழ்க" என்ற கோஷம் வானை எட்டியது. சுமார் 50 மாலைகள் அவருக்கு அணிவிக்கப்பட்டன. சற்று நேரத்தில் டாக்டர் சவிதா அம்பேத்கரும் வந்து சேர்ந்தார். கூட்டம் அவருக்கும் உற்சாக வரவேற்பு நல்கியது.*

*பெரிய வடிவிலான பேழை, சம்மேளனம் வசூலித்த சந்தாத் தொகையைக் கொண்டு செய்யப்பட்டது. அந்தப் பேழை செய்ய ஆன செலவு போக மீதியிருந்த ரூபாய் இரண்டாயிரத்தை, சம்மேளனத்தின்*

செயலாளரான ஜே.ஜி. படன்கார் டாக்டர் அம்பேத்கரிடம் வழங்கினார்.

பரிசைப் பெற்றுக் கொண்டவுடன் பேசிய டாக்டர் அம்பேத்கர் கடந்த காலம் பற்றி விரிவாகப் பேசினார். அவர் சொன்னார்:

கடந்த எல்லாத் தேர்தல்களிலும் நாம் காங்கிரசை எதிர்த்து போராடியதால், அரசியல் நிர்ணய சபையில் என்னைவிட எவர் வேண்டுமானாலும் இருக்கலாம் என்று சொல்லுமளவுக்கு காங்கிரஸ் காரர்கள் எனக்கு எதிராக இருந்தார்கள். நமது கட்சிக்கு இங்கு போதுமான வலிமை இல்லாததால் நான் அரசியல் நிர்ணய சபைத் தேர்தலுக்கு வங்காளத்தில் நிற்க வேண்டியதாயிற்று.

நான் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது மட்டுமின்றி, அரசியல் சாசனத்தை வரைகின்ற தனிச்சிறப்பான பொறுப்பும் எனக்கு அளிக்கப்பட்டது. இது எனக்கு வழங்கப்பட்ட கவுரவமாக அன்றி கட்சிக்குத் தரப்பட்ட பெருமையாக நான் கருதுகிறேன். பிரிட்டிஷார், முஸ்லீம்கள் ஆகியோரின் கைக்கூலிகள் என்று நம்மை அழைத் தார்கள். நாம் சுதந்திரமாக இல்லாததால் பிரிட்டிஷாருடன் நாம் பேரம் செய்ய வேண்டியதாயிற்று.

அரசியல் நிர்ணய சபையில் தாம் நுழைந்தது அரசியல் சாசனத்தை வரையும் நோக்கத்துடன் அல்ல என்றும், தாழ்த்தப்பட்டோரின் நலன்களைப் பாதுகாப்பதற்காகத்தான் அதனுள் நுழைந்துள்ளதாகவும் அம்பேத்கர் குறிப்பிட்டார். என்றாலும் சில சூழ்நிலைகள் எற்பட்டதன் காரணமாக அரசியல் சாசனத்தை வரையும் பொறுப்பு தனது தோள்களின் மீது விழுந்தது என்றார் டாக்டர் அம்பேத்கர். அரசியல் சாசனத்தை வரைந்த வர்களின் பெயர்ப் பட்டியலில் தமது பெயரும் இடம் பெற்றுள்ள தற்காக தாம் பெருமைப் படுவதாகவும், ஏனெனில், இத்தகைய தனிச்சிறப்பு ஒருவரின் வாழ்க்கையில் ஒருமுறைதான் கிட்டும் என்றார்.

தன்னைப் பற்றி தனிப்பட்ட முறையில் குறிப்பிட்ட டாக்டர் அம்பேத்கர் “நான் தலைநகரில் இருப்பதால் சம்மேளனத்துடன் எனக்குத் தொடர்புகள் விட்டுப் போயின என்றும், எனவேதான் சம்மேளனத்தில் செல்வாக்கு இழந்து வருவதாகவும் சொல்லு

*கிறார்கள். ஆனால் இன்றைய கூட்டம் சம்மேளனத்தில் நான் முன்னை விட வலுவுள்ளவனாக இருப்பதையே காட்டுகிறது" என்றார்.*

*அப்பெருங்கூட்டத்தில் ஆழ்ந்த கருத்துக்களை சீராக வெளியிட்ட டாக்டர் அம்பேத்கர், கடந்த காலத்தில் தனக்கும் காங்கிரசுக்கும் இடையில் இருந்த கசப்புணர்ச்சிகளைக் குறிப்பிட்டார். தாழ்த்தப் பட்டோர் மற்ற அரசியல் குழுக்களிடமிருந்து தம்மைத் தனிமைப் படுத்திக் கொள்ளக் கூடாது என்றும் மாறாக நாட்டின் நலனுக்காக அவர்களது ஒத்துழைப்பை அவர்கள் நாட வேண்டும் என்றும் கூறினார்.*

*"அரசியல் நிலைமைகள் தற்போது தெளிவாக இல்லை. எனவே எந்தக் கட்சியுடன் நாம் அணி சேர்வோம் என்று இப்போதைக்குச் சொல்ல முடியாது" என்றார் அவர். சுதந்திரத்துக்கு முன்பு அவர் பேசிய பேச்சுக்களுடன் ஒப்பிடுகையில் இப்போதைய பேச்சு சற்றே வியப்பைத் தந்தது. தாழ்த்தப்பட்டோர் தம்மைப் பற்றி மட்டும் எண்ணாமல் நாட்டின் மொத்த நலனையும் கருத்தில் கொள்ள வேண்டும் என்றார். "முஸ்லீம்களும் பிரிட்டிஷ்காரர்களும் இந்தியாவை அடிமைப்படுத்தினர். இன்று நாம் சுதந்திரமானவர்கள். வரலாறு மீண்டும் திரும்பி, நாம் அடிமைப்படக் கூடாது என்பதை நாம் உறுதி செய்ய வேண்டும்" என்றார் அவர்.*

*"காங்கிரஸ் கட்சியுடன் நாம் நீண்டகாலமாகப் போராடி வந்தது போதும், தற்போதைய அரசு தாழ்த்தப்பட்டோருக்கு சில நன்மை களைச் செய்துள்ளது. ஒரு ஜனநாயக நாட்டில் சிறுபான்மையினர் தனித்து நின்று எதையும் சாதிக்க இயலாது. நாம் சிறுபான்மை யினராக இருக்கிறோம், சிறுபான்மையினராகவே தொடர்ந்து இருப்போம், எனவே சில கட்சிகளின் ஒத்துழைப்பை நாம் கோரிப் பெற வேண்டும்."*

*அம்பேத்கர் பின்னர் தேர்தல் பற்றிப் பேசினார், "நாம் ஒரு ஏழை வகுப்பினர், எனவே பெரும் தொகையை தேர்தலுக்காக நம்மால் செலவிட முடியாது. எனவே ஒவ்வொருவரும் மாதத்திற்கு நான்கு அணா கொடுத்து கட்சியின் தேர்தல் நிதியைப் பெருக்க வேண்டும். இந்தப் பணியை நாம் உடனே துவக்கியாக வேண்டும். அப்பொழுது தான் தேர்தல் வருவதற்கு முன் போதிய தொகை நம்மிடம் இருக்கும்"*

கூட்டம் முடித்து நான்கு மணிநேரம் கழித்தும், மத்திய, வடக்கு பம்பாய் தாழ்த்தப்பட்டோர், வீடு திரும்பும் போது அம்பேத்கருக்கு ஆதரவாக அமைதியாக, ஆனால் உரக்கமாக உரையாடி தெருக்களை உயிர்ப்புடன் வைத்திருந்தனர்.

எனினும் அம்பேத்கரின் உரையில் வேறு சில பரிமாணங்களும் இருந்ததை "பம்பாய் கிராணிகில்" வெளியிட்டிருந்தது அப்பரிமாணங் களாவன:

அரசியல் சாசன வரைவுக் கமிட்டியின் தலைவராகத் தான் நியமிக்கப்பட்டிருப்பது தனக்கு மட்டும் அளிக்கப்பட்ட தனிக் கவுரவம் அல்ல, மாறாக, கணக்கில் கொள்ள வேண்டிய சக்தியாகத் திகழ்கிற சம்மேளனத்துக்கும் அளிக்கப்பட்ட கவுரவம் என்றார் டாக்டர் அம்பேத்கர்.

கடந்த காலத்தில் எத்தனையோ தடைகளை அவர்கள் கடக்க வேண்டியிருந்தது. எத்தனையோ பேர் அவரை பிரிட்டிஷார், முஸ்லீம்கள் ஆகியோரின் கைக்கூலி என்று அழைத்தனர். கடந்த இருபது ஆண்டுகளாக சம்மேளனத்துடன் காங்கிரசார் போராடி வருகின்றனர். தாழ்த்தப்பட்டோருக்கு அரசியல் நிர்ணய சபையில் ஒரு இடம் கூட கிடைத்து விடாமல் செய்ய வேண்டும் என்று அவர்கள் உறுதி கொண்டிருந்தனர்.

நாட்டின் அரசியல் சாசனத்தை வரையும் பொறுப்பு அவரிடம் ஒப்படைக்கப்படும் என்று அவர் கனவிலும் நினைத்ததில்லை. இப்பொழுதோ, சம்மேளனம் ஒரு அரசியல் சக்தி என்றும் அதை அலட்சியப் படுத்தவோ கேவலப்படுத்தவோ இனி இயலாது என்றும் எதிராளிகள் உணர்ந்துள்ளனர்.

இன்று வரை சம்மேளனம் ஒரு குறிபிட்ட பாதை வழியாகவே சென்றது என்றும், நாட்டின் நலனுக்கும் அப்பால் தனது நலனே முக்கியம் என்று அது கருதி வந்தது என்றும், தானும் அதற்கு ஓரளவு பொறுப்பாளி என்றும் டாக்டர் அம்பேத்கர் கூறினார். இந்தியா தற்போது சுதந்திரம் பெற்று விட்டதால், தமது அணுகுமுறையை அவர்கள் மாற்றிக் கொள்ள வேண்டும். தமது நலன்களைப் பாதுகாக்கும் அதே வேளையில் தேச நலன்களுக்காகப் பாடுபட வேண்டும் என்றார் டாக்டர் அம்பேத்கர்.

பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் வேறெந்தக் கட்சியுடனும் சேராமல் தனியாக இருந்தது சம்மேளனம். நாம் சிறுபான்மையினர். மற்ற அரசியர் கட்சிகளின் ஆதரவின்றி நாம் தேர்தல்களில் வெற்றி பெற முடியாது. எனவே அடுத்த தேர்தலின் போது வேறு கட்சியின் ஆதவை தமது அமைப்பு நாடும் என்றார். தேர்தல் நிதிக்கு தாராளமாக நன்கொடை வழங்குமாறு கூட்டத்தினரிடம் டாக்டர் அம்பேத்கர் கேட்டுக் கொண்டார்.[1]

---

1. பாம்பே கிரானிக்கிள், 12 - 1- 1950.

# (117)

# மகாராஷ்டிரர்கள் தேசத்தின் மீது ஆழ்ந்த கடமைப் பற்றும் விசுவாசமும் கொண்டவர்கள்

புதிய மகாராஷ்டிர பணிமனையிலும், புதுடில்லி மகாராஷ்டிரா நிறுவனத்திலும் 27.1.1950 ல் குடியரசு தினம் மிகுந்த குதூகலத்துடன் கொண்டாடப்பட்டது.[1] அப்போது பல நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. டாக்டர் அம்பேத்கர் அப்போது சிறப்பு விருந்தினராக அழைக்கப்பட்டு கவுரவப்படுத்தப் பட்டார். ககா சாஹேப் காட்கில் டாக்டர் அம்பேத்கரையும் அவரது துணைவி யையும் வரவேற்றார். வரவேற்புக்கு பதிலளித்து டாக்டர் அம்பேத்கர் பேசினார்.

அவர் சொன்னார்:

தேசத்தின் பால் ஆழ்ந்த கடமைப் பற்றும், விசுவாசமும் கொண்டவர்கள் மகாராஷ்டிரர்கள், தேசத்திற்காக எந்தத் தியாகத் தையும் செய்ய அவர்கள் தயங்க மாட்டார்கள். மத்திய அமைச்ச ரவையில் இரண்டு மகாராஷ்டிரர்கள் இடம் பெற்றதுடன் ரிசர்வ் வங்கியின் கவர்னராகவும் ஒருவர் இருக்கிறார் என்பதில் தான் பெருமைப்படுவதாகச் சொன்னார். அரசியலிலும் சரி, கல்வி கற்பதிலும் சரி, அல்லது தியாக உணர்விலும் சரி மகாராஷ்டிரர்கள் மிக முன்னணியில் உள்ளனர் என்றார் டாக்டர் அம்பேத்கர்.[2]

---

1. ஜனதா, 4, பிப்ரவரி, 1950.

2. கீர், ப. 419.

## (118)

# மதம் இனியும் பரம்பரைபூர்வமாக ஏற்றுக் கொள்ளப் படமாட்டாது. பகுத்தறிவு பூர்வமாக சோதிக்கப்பட வேண்டும்

மிகுந்த தேசிய முக்கியத்துவம் வாய்ந்ததும், தென் கிழக்கு ஆசியாவில் ஆழ்ந்த அக்கறைக்கு உள்ளானதுமான ஒரு சம்பவம் புதுடில்லியில் நடந்தது. 1950 மே 2ஆம் நாள், இந்தியாவின் சட்ட அமைச்சரான டாக்டர் அம்பேத்கர் 7 கோடி தாழ்த்தப்பட்ட மக்களும் புத்த மதத்தில் சேர்ந்து விட வேண்டும் என்று அறிவுறுத்தினார்.

"பாரத்" பிரதிநிதியிடம் தாம் புத்த மதத்தில் சேர விருப்பதாகச் சொன்னார். அப்போது அம்பேத்கரின் துணைவியார் உடனிருந்தார்.

நாளைக்கு சுமார் 15 தாழ்த்தப்பட்டோர் புத்த மதத்தைத் தழுவப் போவதாக அதிகார பூர்வமாக அறிவிக்கப்பட்டது. இத்தகைய அறிவிப்பு இந்தியா முழுவதும் உள்ள அம்பேத்கரின் ஆதர வாளர்களுக்கு அனுப்பப்பட்டுள்ளது.

உயர்மட்ட புத்த பிக்கு ஒருவரின் கூற்றுப்படி டாக்டர் அம்பேத்கர்

*புத்தம் சரணம் கச்சாமி,*
*தம்மம் சரணம் கச்சாமி,*
*சங்கம் சரணம் கச்சாமி,*
*என்று பிரார்த்தித்தார்.*

புத்த மதத்தின் 5 கோட்பாடுகளையும் அவர் ஏற்றுக் கொண்டார். இவற்றைக் கொண்டு அவர் ஞானஸ்நானம் செய்யப் பட்டதாகச் சொன்னார்.

## புத்த புத்தெழுச்சி

டாக்டர் அம்பேத்கர் பேசும் பொழுது உடனிருந்த உயர் மட்ட புத்த பிக்கு "இந்தியா சுதந்திரம் அடைந்துவிட்டது. புத்த மதம் இனி எழுச்சி பெற வேண்டும்" என்றார். இந்தியாவில் நிகழவிருக்கும் புத்தமத எழுச்சியும் அதன் அரசியல் முக்கியத்துவம் பற்றியும் குறிப்பிட்டு இந்தியா தனது சுதந்திரத்தையும் ஆன்மிக வலிமையையும் காத்துக் கொள்ள அதற்கு புத்த மதம் தேவை என்று அறிவித்தார்.

சுத்தமான இந்தியில் சுமார் அரை மணி நேரம் பேசிய டாக்டர் அம்பேத்கர், புத்த மதத்தின் புத்தெழுச்சி மீண்டும் இந்தியாவில் தொடங்கிவிட்டது என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினார். இதற்கு ஆதரவாகப் பேசிய அவர் இந்திய தேசியக் கொடியில் அசோகச் சக்கரத்தைப் பொறிப்பதற்காக இந்திய குடியரசுத் தலைவர் புத்த மதத்தினரை அணுகியதை ஒரு உதாரணமாகக் குறிப்பிட்டார். பிராமணியத்திலிருந்து அவர்களால் ஒன்றும் கண்டுபிடிக்க முடியவில்லை. மூன்று சிங்கங்களை தனது அரசுச் சின்னத்தில் பொறித்துக் கொள்ளவும் இந்திய அரசுக்கு அனுமதி வழங்கியது புத்தமதம். இந்தியக் குடியரசின் முதல் ஜனாதிபதி பிரமாணம் எடுத்துக் கொள்கிற அந்த வரலாற்றுச் சிறப்பு மிக்க சம்பவத்தின் போது, எண்ணிறந்த இந்தியக் கடவுளர்களின் சிலை எதற்கும் முன்னால் இந்த நிகழ்ச்சி நடைபெறவில்லை. மாறாக அவ்வேளையில் ஒரு புத்தர் சிலையே அங்கு நிறுவப்பட்டிருந்தது.

ராமனோ, கிருஷ்ணனோ அல்லது வேறு எந்தக் கடவுளோ புத்தருக்கு இணையாகவில்லை. இவரை விடப் பெரிய துறவியோ தலைவரோ இனிப் பிறக்கப் போவதில்லை என்றார் அவர்.

ராமாயணம், மகாபாரதம் ஆகியவற்றிலிருந்து பல நிகழ்ச்சி களை எடுத்துக்காட்டி, ராமனும், கிருஷ்ணனும் நடந்து கொண்ட விதத்திலிருந்து அவர்கள் பெருமைக்குரியவர்களா என்று டாக்டர் அம்பேத்கர் வினவினார். இரண்டு கோட்பாடுகளை இந்துமதம் பற்றி நிற்கிறது. உண்மை ஒன்றே என்பதும், தன்மீது தாம் வைக்கும் பாசம் ஒரு மதவெறி என்றும் சொல்லி சச்சரவுகளைத் தவிர்த்து, தமது ஆதரவாளர்கள் வெளியேறிவிடாமல் பாதுகாக்கிறது என்றார் அவர்.

அரச மகுடத்தைத் தவிர எல்லாஉரிமைகளையும் மிகவும் பாதுகாப்பாக தாமே வைத்துக் கொண்டுள்ள பிராமணர்களை அவர் ாடினார். இந்து சாஸ்திரத்தின் படி மகுடம் தரிப்பவர் நரகத்திற்குப் போவார். மதத்தால் நிரந்தரமாகக் கொடுமைகளுக்கு உள்ளாகுமாறு விதிக்கப்பட்ட கோடிக் கணக்கான மக்கள் எப்படி அந்த மதத்தை நேசிக்க முடியும்?

அசையும், அசையாச் சொத்துக்கள் தந்தையிடமிருந்து மகனுக்குச் செல்வது போல மதமும் தந்தையிடமிருந்து மகன் பெற்றுக் கொள்ளும் நிலை மாற வேண்டிய காலம் வந்து விட்டது. ஒவ்வொருவரும் மதத்தை ஏற்றுக் கொள்வதற்கு முன்பு பகுத்தறிவு பூர்வமாக அதனை சோதித்துப் பார்க்க வேண்டும்.

சோஷலிஸ்டுகளும் கம்யூனிஸ்டுகளும் சொல்வது போல மதமே தேவையில்லை என்று தான் நம்பவில்லை என்று டாக்டர் அம்பேத்கர் சொன்னார். மனிதனுக்கு மதம் கண்டிப்பாகத் தேவை என்று அவர் திட்டவட்டமாகக் கூறினார். நீதி, தர்ம சாஸ்திரங்களைப் போல மனித குலத்தை எந்த அரசாங்கமும் பாதுகாக்கவோ, ஒழுங்குப்படுத்தவோ இயலாது என்று கூறினார் டாக்டர் அம்பேத்கர்.

கூட்டத்துக்குத் தலைமை தாங்கிய பர்மாவின் தூதுவர் சர்மௌங் ஜீயே துன்பங்களாலும் தொல்லைகளாலும் அவதிப்படும் உலகம் புத்தமதத்தில்தான் அமைதியும் ஆறுதலும் அடையும் என்று கூறினார். மகாபோதி சமூகத்தின் ஒரு அதிகாரி, "டாக்டர் அம்பேத்கர் தமது அணியில் சேர்ந்துள்ளது" கேட்டு மகிழ்ச்சி தெரிவித்தார்.

டாக்டர் அம்பேத்கர் நாளை பம்பாய் வந்து சேர்கிறார்![1]

---

1. தி பாரத் 3 மே , 1950.

# (119)

# கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள் எட்டுவழிப்பாதைக்கு மாறிவிட வேண்டும்

உலக பௌத்தர்களின் (புத்த மதத்தினர்) மாநாடு கண்டியில் (சிலோன்) 1950 மே 25 முதல் ஜூன் 6 வரை நடைபெற்றது. டாக்டர் அம்பேத்கர் மாநாட்டில் கலந்து கொண்டார்.

1950ஆம் ஆண்டு மே 26ஆம் நாள் 27 நாடுகளிலிருந்து வந்திருந்த பிரதிநிதிகள் புத்தமதத்துக்கு புத்துயிர் கொடுப்பது பற்றி விவாதிப்பதற்காக "உண்மையின் கோயி"லில் கூடினர். உலகத்தில் சகோதரத்துவம் பற்றிய தீர்மானம் மாநாட்டில் நிறைவேற்றப்பட்டது.

அதன் பின் டாக்டர் அம்பேத்கர் மாநாட்டில் பேசினார்.[1]

அம்பேத்கர் சொன்னார்:

நான் ஆர்வமுள்ள ஒரு பார்வையாளன், பிரதிநிதி அல்ல. நான் சில முக்கியமான குறிக்கோள்களுடன் இங்கு வந்துள்ளேன். இந்தியாவில் புத்த மதத்துக்கு மீண்டும் புத்துயிர் கொடுக்க வேண்டும் என்று நினைப்பவர்கள் பலர் இந்தியாவில் இருக்கிறார்கள் என்று உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். அப்படி நினைப்பவர்களில் நானும் ஒருவன். எனது முதல் நோக்கம் புத்தமதச் சடங்குகளைப் பார்க்க வேண்டும் என்பது. சடங்குகள் என்பவை மதத்தின் ஒரு முக்கிய அங்கம். பகுத்தறிவுவாதிகள் என்னதான் சொன்ன போதும் மதத்தில் சடங்குகள் ஒரு முக்கிய அம்சம்தான். இங்கு வருவதன் மூலம் புத்த மதத்தின் ஒரு பிரிக்க முடியாத அம்சமாகத் திகழும் சடங்குகளைக் காணும் வாய்ப்பு எனக்குக் கிட்டும் என்று நான் கருதினேன்.

இரண்டாவதாக, புத்த மதம் எந்த அளவுக்கு பரிசுத்தமாக இங்கு பின்பற்றப்படுகிறது என்பதையும், புத்தரின் போதனைகள் எந்த

1. தலித் பந்து, 28 மே, 1950.

அளவுக்கு மூட நம்பிக்கைகளால் சூழப்பட்டிருக்கின்றன என்பதையும், புத்தரின் கொள்கைகளுக்கும் புத்த மதத்துக்கும் பொருந்தாத மூட நம்பிக்கைகள் பற்றியும் அறிந்து கொள்வது எனது நோக்கம்.

எனது மூன்றாவது நோக்கம் என்னவென்றால், புத்தர் நிறுவிய பிக்குகளின் அமைப்பு எந்த அளவுக்கு சமுதாயத்துக்கு சேவை செய்கிறது, "வாழ்க்கையில் சுத்தம்" என்பதைப் பாதுகாத்துக் கொள்கிற வேலையை மட்டும் அது செய்து வருகிறதா, அல்லது பொது மக்களுக்குச் சேவை செய்வதிலும் ஈடுபடுகிறதா, புத்தர் விரும்பியபடி அவர்களுக்கு ஆலோசனை கூறி அவர்களை முழுமைப்படுத்த முயல்கிறதா என்றும் நான் அறிந்து கொள்ள விரும்பினேன். எந்த அளவுக்கு புத்தரின் மதம் ஒரு உயிருள்ள சக்தியாக விளங்குகிறது, இந்த நாட்டு மக்கள் பௌத்தர்களாக இருப்பதால் அது அமலில் இருக்கிறதா, அல்லது தலைமுறை தலைமுறையாக அது வருகிறதா, தேசத்தைப் பொருத்தவரை மதம் ஒரு இயக்க விசையாக இருக்கிறதா என்றெல்லாம் நான் அறிய விரும்பினேன்.

மதம் தேக்கமடைந்துள்ளதா, அல்லது அது இயக்கவிசையுடன் உள்ளதா என்பதை, நாட்டின் இளைஞர்கள் மதத்தின் மீது எவ்வளவு அக்ககறை கொண்டுள்ளனர், அவர்கள் தமது நேரத்தை எந்த அளவுக்கு மதத்துக்கு ஒதுக்குகிறார்கள், மத நம்பிக்கை தமக்கு முக்தி தரும் என்று எந்த அளவு அவர்கள் நம்புகிறார்கள் (இறப்புக்குப்பின் வரும் முக்தி அல்ல, இன்றைய உலக வாழ்க்கையில்) என்பதைக் கொண்டு அறியலாம்.

புத்த மத நாட்டில் தோழமைக் குழுக்கள் இருந்தால் மட்டும் போதாது. அவர்கள் மதத்தை முன்னேற்ற வேண்டும், தியாகங்கள் புரிய வேண்டும். புத்தரின் கொள்கைகளைப் பற்றி சொற்பொழிவுகள் நிகழ்த்துவதற்கு பிக்குகளை அனுப்புவதன் மூலம் மட்டும் மக்கள் அவரது வாழ்க்கையை ஒத்துக் கொள்ள மாட்டார்கள்.

உலகத்தில் அமைதி உறுதி செய்யப்பட வேண்டுமானால், அது வெறும் சொற்பொழிவுகளால் நிகழ்ந்து விடாது. அவரது வழியின்

சிறப்புத் தன்மை பற்றி அறியாதவர்கள் அந்த வழியை ஒத்துக் கொள்ளச் செய்ய வேண்டும். புத்த மதம் பரவியுள்ள நாடுகள் தியாகங்கள் செய்ய வேண்டும் என்பது தெளிவு. மத நிறுவனங்களை நிறுவ வேண்டும். நிதி தேடிக் கொள்ள வேண்டும். இதன் மூலம் அவர்கள் புத்தரின் போதனைகளைப் பரப்புவதுடன் பெண்களையும் ஆண்களையும் எட்டுவழிப் பாதைக்கு மாற்றம் செய்ய வேண்டும்.

---

# (120)

# ஜனநாயகமும் சோஷலிச பாணி சமுதாயமும் அமைய புத்த மதம் வழி வகுத்தது

பௌத்தர்களின் உலகத் தோழமை மாநாடு இலங்கையில் 1950 ஆம் ஆண்டு மே 25 முதல் ஜூன் 6 வரை நடைபெற்றது. டாக்டர் அம்பேத்கர் இம் மாநாட்டில் கலந்து கொண்டார்.

கொழும்பில் நடந்த சர்வதேசக் கூட்டத்தில் 1950 ஜூன் 6 ல் டாக்டர் அம்பேத்கர் பேசும்போது சொன்னார்:

இந்தியாவில் புத்த மதத்தின் எழுச்சியும் தோற்றமும் பற்றி ஆய்வு செய்பவர்கள் இந்த விஷயம் எந்த அளவுக்குப் பயிலப் பட்டிருக்க வேண்டுமோ அந்த அளவுக்கு பயிலப்படவில்லை என்று ஒத்துக் கொள்வார்கள். புத்த மதம் இந்தியாவில் எப்படி உச்சநிலைக்கு போயிற்று, ஏன் அது மறைந்து போயிற்று என்பதை விளக்கும் அதிகாரப் பூர்வ நூல்கள் எனக்கு எதுவும் கிடைக்கவில்லை.

ஆய்வுக்கான ஒரு விஷயத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமானால், அது சம்பந்தமான மரபுகளை சரியாகவும் துல்லியமாகவும் தெரிந்திருக்க வேண்டும். இதே போல, புத்த மதம் தோன்றிய சூழல்களை சரியாகத் தெரிந்து கொண்டால்தான் அதன் முக்கியத்துவத்தை நாம் உணர முடியும். இந்து மதம்தான் இந்தியாவில் எப்போதும் இருந்து வந்துள்ளது என்பதை நான் ஒத்துக் கொள்ள மாட்டேன். இந்தியாவின் சமுதாயச் சிந்தனையின் இறுதி வளர்ச்சி தான் இந்துமதம்.

இந்தியாவில் மதம் மூன்று மாறுதல்களைப் பெற்றுள்ளது. முதலில் அமலில் இருந்தது வேதவழி மதம், இது பின்னர் பிராமணியமாக உருவெடுத்து அதன் பின் இந்து மதம் ஆனது. பிராமணர்களின் ஆதிக்கத்தின் போதுதான் புத்த மதம் தோன்றியது. சமத்துவமின்மை, ஆதிக்கம் செலுத்துதல், பல வகுப்புகளாக

சமுதாயத்தை பிராமணர்கள் இந்தியாவில் பிரித்து வைத்தது ஆகியவற்றுக்கு எதிர்ப்பாக புத்த மதம் தோன்றியது.

வேத வழி மதத்தைக் கடைபிடிப்பது எளிது. யாகம் செய்வதுதான் அதில் பிரதான பூசை. வேதகால ஆரியர்கள் எண்ணற்ற கடவுளர்களைக் கும்பிட்டார்கள். அக்கடவுளர்களை யாகம் செய்து மகிழ்வித்தார்கள். இக்கடவுளர்களுக்கு செய்யப்படும் பூசை புனிதமானதாகவும், உயர்ந்த தன்மை கொண்டதாகவும் இருப்பது அவசியம். அந்த விவசாய காலத்தில் பசுமாடுகளே ஆரியர்களின் சொத்தாக இருந்தது. எனவே தமது கடவுளர்களை கவுரவப்படுத்த பசுக்களைப் பலியிட்டனர். இந்த வகையில் வேதகால தர்மம் வன்முறைக்கு ஊக்கமளித்தது. வேதமுறை யாகங்களைச் செய்து பிராமணர்கள் சமுதாயத்தை ஒழுங்கமைத்தார்கள். பிராமணர்கள் சமுதாயத்தை நான்கு பகுதிகளாக, வர்ணங்களாக, பிரித்தனர். பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் என்ற பிரிவுகள் அவை. இது சமுதாயத்தை நான்கு வர்ணங்களாக (ஜாதிகளாக) பிரித்து சமுதாயத்தில் பெரிய ஏற்றத் தாழ்வுகளை உண்டு பண்ணியது. பிராமணர்கள் பிரம்மாவின் வாயிலிருந்தும் சூத்திரர்கள் அவரது கால்களிலிருந்தும் பிறந்தனர் என்று அவர்கள் சொன்னார்கள்.

எந்த ஒரு மதத்தின் அடிப்படைக் கொள்கையும் சமுதாயத்தைப் பிரிப்பதாக இருக்கும் என்பதை நீங்கள் நம்புவீர்களா? என்றாலும் இதைத்தான் பிராமணர்கள் நிரந்தர உண்மையெனச் செய்தனர். இதற்கு மாறாக புத்தமதத்தின் பிரதான அம்சமே சமத்துவம்தான். சிந்தனைச் சுதந்திரத்தையும், சுயவளர்ச்சியையும் எல்லோருக்கும் வழங்குகிறது புத்த மதம்.

வன்முறையை வெறுத்தொதுக்குதல் புத்தமத போதனையில் அடுத்த முக்கிய அம்சம் ஆகும். பிராணிகளையோ வேறு எந்த உயிரையோ பலியிட்டு கடவுள்களைத் திருப்திப் படுத்தி மோட்சம் பெறலாம் என்று எப்போதும் அது போதிக்கவில்லை. பிரெஞ்சுப் புரட்சியைப் போலவே இந்தியாவில் புத்த மதத்தின் எழுச்சி அதி முக்கியத்துவம் பெற்றதாகும். புத்த மதம் தோன்றுவதற்கு முன்னால், ஒரு சூத்திரன் ஆட்சிக் கட்டில் ஏற முடியும் என்பது நினைத்துப் பார்க்க முடியாததாக இருந்தது. புத்த மதம் தோன்றிய பின்னர் சூத்திரர்கள் ஆட்சிக்கு வந்தததை இந்திய வரலாறு வெளிப்

படுத்துகிறது. இது ஜனநாயகமும் சோஷலிச பாணி சமுதாயமும் இந்தியாவில் தோன்றுவதற்கு உண்மையாகவே வழி வகுத்தது.

இத்தகைய உயர்ந்த இடத்தை பெற்றிருந்த புத்தமதம் எப்படி இந்தியாவிலிருந்து மறைந்தது என்பது புரியாத புதிர். கி.மு. 274க்கு முன்னால் புத்த மதம் எப்படி இருந்தது என்பதைக் காட்ட எந்த ஆதாரமும் நம்மிடம் இல்லை. இருந்த போதிலும் அசோகரின் ஆட்சிக்காலத்தில் புகழின் உச்சியில் அது இருந்தது. இத்தகைய பிரபலமான மாபெரும் மதம் மறைந்து போனது ஒரு வேதனையான விஷயம்.

மௌரிய வம்சத்தின் கடைசி மன்னன் அவரது தலைமைத் தளபதியாலேயே கொல்லப்பட்ட பின் புத்த மதத்துக்குப் பெரிய எதிர்ப்புத் தோன்றியதாகத் தெரிகிறது. பிராமணர்கள் தங்கள் மதத்தைக் காத்துக் கொள்ள அவர்களுக்குக் கிடைத்த சட்டப் பூர்வ சம்பவம் இது. ஆனால் இந்தச் சம்பவத்துக்கு வரலாற்றாசிரியர்கள் தகுந்த முக்கியத்துவம் கொடுக்க வில்லை. புத்த மத இலக்கியங்களை நான் படித்துப் பார்த்த போது, புத்தரின் சீடர்களில் 90% பேர் பிராமணர்கள் என்று கண்டேன். பிராமணர்கள் புத்தரிடம் விவாதம் நடத்தவும் வாதம் புரியவும் வந்தனர். அவர்கள் வாதத்தில் தோற்ற போது புத்தருக்கு ஆதரவாளர்களாக மாறினர், இறுதியில் புத்த மதத்தை ஏற்றுக் கொண்டனர். புத்த மத இலக்கியங்கள் இத்தகைய பல சம்பவங்களை நமக்கு எடுத்துச் சொல்கின்றன. இவ்வாறாக, பிராமணர்கள் பெரும்பாலாரின் மத்தியிலே தழைத்துச் செழித்திருந்த புத்த மதம் எப்படி பிராமணர்களாலேயே அழிக்கப்பட்டது என்பது புரியவில்லை.

இதற்குப் பிரதானமான காரணம் குலதெய்வ வழிபாடுதான் என்று நான் நினைக்கிறேன். இந்தியாவில் கிராம தெய்வம், தேசிய தெய்வம் ஆகியவை தவிர, குடும்ப தெய்வங்கள் இருக்கின்றன. பிராமணர்கள் மூலம் இந்தத் தெய்வங்கள் வழிபாடு செய்யப் படுகின்றன. இந்த தெய்வங்களுக்கு பூசை செய்வதற்காகச் செல்லு கின்ற பூசாரிகள் ராணிகளின் மூலமாக அரசாங்க விஷயங்களில் செல்வாக்குச் செலுத்தத் தொடங்கினர். புத்த மதத்தைத் தழுவிய அசோகர் இந்தப் பழக்கத்தை ஒழித்து இக்கடவுளர்களின் சிலைகளையும் அகற்றிவிட்டார்.

"ஞானம் பெற்றவரான புத்தரை நான் வழிபடுவதால் வேறு தெய்வங்களை வழிபடத் தேவையில்லை" என்று அசோகர் சொன்னார். அசோகரின் இந்தச் செய்கையால் அநியாயமாக பெற்று வந்த தமது வாழ்க்கை வருமானத்தை இழந்த பிராமணர்கள் கோப முற்றனர். தமது இந்த இழப்புக்கு அவர்கள் பழிவாங்க உறுதி கொண்டனர்.

மன்னர்கள் தாம் இழைத்த தவறுகளின் காரணமாக, இறந்த பின் அவர்கள் நரகத்துக்குப் போவார்கள் என்று பிராமணர்கள் கருதினர். எனவே அவர்கள் ஆட்சி செய்யும் மன்னர்களாக இருக்காமல் மன்னர்களின் ஆலோசகர்களாகவே இருக்க விரும்பினர். குல பூஜை முறை ஒழித்துக் கட்டப்பட்டதால் பழிவாங்கத் துடித்துக் கொண்டிருந்த பிராமணர்கள், ஆலோசகர்களாக மட்டுமே இருப்பது என்ற தமது கொள்கையை விட்டுவிட்டு ஆட்சியைக் கைப்பற்ற முயன்றனர். இவர்களது நலம் விரும்பிகளான க்ஷத்திரியர்களுடன் சேர்ந்து, புத்த மதத்துக்கு எதிராக பிராமண - க்ஷத்திரிய கூட்டணியை உருவாக்கினர். பிராமணியம் மேல் நிலைக்கு வந்ததால் புத்த மதம் வீழ்ச்சியுற அது ஒரு காரணமாயிற்று.

புத்த மதம் இந்தியாவில் வீழ்ச்சியுற வெளிநாட்டு ஆக்கிர மிப்புகளும் ஒரு காரணமாக இருந்தது. கிரேக்கர்கள் புத்த மதத்துக்கு இடையூறு செய்யவில்லை. புத்தமத நடவடிக்கைகளுக்கு கிரேக்கர்கள் தாராளமாக நிதியுதவி செய்தனர் என்பதற்கு போதுமான ஆதாரங்கள் உள்ளன. ஹூணர்கள் இந்தியாவைத் தாக்கினர். அவர்கள் குப்தர்களால் தோற்கடிக்கப்பட்ட பின் இந்தியாவிலேயே தங்கி விட்டனர். இதற்கு முன்பு ஹூணர்கள் புத்த மதத்தை அழித்துவிட முயன்றனர். முஸ்லீம் ஆக்கிரமிப்பின் காரணமாகத்தான் புத்த மதத்துக்கு பெரிய அடி விழுந்தது. அவர்கள் புத்தரின் சிலைகளை அகற்றி பிக்குகளைக் கொன்று குவித்தனர். நாளந்தா பல்கலைக் கழகத்தை புத்தர்களின் கோட்டை என்று கருதிய முஸ்லீம்கள், ஏராளமான துறவிகளை அவர்கள் ராணுவ வீரர்கள் என்று கருதி கொன்று விட்டனர். இக்கொடிய தாக்குதலிலிருந்து தப்பிய சில பிக்குகள் அண்டை நாடுகளான, நேபாளம், திபேத், சீனா ஆகிய நாடுகளுக்கு தப்பியோடினார்.

உருவ வழிபாடு கொண்டிருக்கும் இந்து மதம் எப்படித் தப்பியது, புத்த மதம் மட்டும் ஏன் அழிந்தது என்று சில நண்பர்கள்

கேட்கிறார்கள், ஒரு மதம் என்னவாக இருந்த போதும் அதனைப் பாதுகாப்பதற்கு புரோகிதர் வகுப்பு ஒன்று அவசியமாகும் என்பதே எனது பதில். புத்தத் துறவிகள் குறைந்து போனதால் புத்த மதம் வீழ்ந்தது. பின்னர் புரோகிதர் சமூகம் ஒன்றை உருவாக்குவதற்கு புத்த மதத்தின் சிலர் முயற்சி செய்த போதிலும் அம்முயற்சி தோல்வி யடைந்தது.

இந்து மதத்திற்கு இந்த நிலை வரவில்லை. பிராமணனின் மகன் பிறவியிலேயே புரோகிதன் ஆகிவிடுகிறான். எனவே தனியாக ஒரு புரோகிதர் வகுப்பு அவர்களது மதத்தைக் காப்பாற்றுவதற்கு தேவையில்லை. இதன் காரணமாகத்தான் முஸ்லீம் தாக்குதலைச் சமாளித்து இந்துமதம் நிலை கொண்டது. மேலும் புத்த மதத்தைப் பின்பற்றுவது கஷ்டமான காரியம். இந்து மதத்தைப் பின்பற்றுவ்து சுலபம். மேலும் இந்தியாவில் நிலவிய அரசியல் சூழலும் புத்த மதத்தின் வளர்ச்சிக்குத் தடையாக இருந்தது.

இந்தியாவிலுள்ள பலர் சங்கராச்சாரியரின் வாதத் திறமையால் தான் புத்த மதம் அழிந்து விட்டது என்று சொல்வதை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். சங்கராச்சாரியார் இறந்தபின் பல நூறு ஆண்டுகள் புத்த மதம் வாழ்ந்திருக்கிறது. எனது அபிப்ராயத்தில் சங்கராச்சாரியாரே புத்த மதத்தைச் சேர்ந்தவர்தான். அவரது குருவும் ஒரு பௌத்தர்.

வைஷ்ணவத்தின் எழுச்சியால் சைவ மதமும் எழுச்சி பெற்று புத்த மதம் வீழ்ச்சியடைந்தது. இந்த இரண்டு பிரிவினரும் புத்த மதத்தின் பல நல்ல அம்சங்களைத் தமதாக்கிக் கொண்டனர். இன்றைய இந்து மதம் பெருமளவுக்கு மாறிய வடிவத்தில் உள்ளது. முன்னர் வன்முறையைக் கடைப்பிடித்தும் போதித்தும் வந்த இந்து மதம் தற்போது அகிம்சையைப் போதிக்கிறது. இது புத்த மதத்தி லிருந்து காப்பியடிக்கப்பட்டது. புத்த மதம் மறைந்து போயிருக்கலாம். ஆனால் அதன் ஆன்மீக வலிமை இன்னும் இந்தியாவில் இருக்கிறது.

---

# (121)

## எனது வாழ்க்கையின் எஞ்சிய பகுதியை புத்த மதத்தை புதுப்பிக்கவும் பரப்பவும் அர்ப்பணிப்பேன்

இந்திய அரசின் சட்ட மந்திரியான டாக்டர் அம்பேத்கர், புத்த மதத்தைத் தழுவும் படி மக்களைக் கேட்டுக் கொண்டார்.

"ஆயிரம் வருஷத்துக்கு முன்பு இருந்த இந்து மதம்தான் இப்போதும் இருக்கிறது" என்றார் டாக்டர் அம்பேத்கர். இது புத்த மதம்தானே தவிற வேறல்ல, ஆனால் முகமதியர்களின் படையெடுப் பாலும் வேறு காரணங்களாலும் இந்து மதம் தனது பரிசுத்த தன்மையை இழந்து மாசு பட்டுள்ளது.

1950 ஆம் ஆண்டு செப்டம்பர் 20ஆம் நாள் அம்பேத்கர் பம்பாயிலுள்ள புத்தர் ஆலயத்தில் பேசினார். சுதந்திரம் அடைந்து விட்டதால் நாட்டிலுள்ள கஷ்டங்கள் எல்லாம் தீர்ந்து விடும் என்று சொல்வதைக் கண்டித்தார். மனதில் சுத்தமில்லாமல் இருப்பதும், தீமை செய்வதும், ஒழுக்கத்தை விட்டொழித்ததும், மனிதன் மற்றவனிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று அறியாமல் மனிதர்களிடையில் தடைகளை ஏற்படுத்துவது இருந்து வருகிற வரையில் இந்தியா வளமை பெறவே முடியாது என்று கூறினார் அம்பேத்கர்.

"இந்தச் சிக்கல்களிலிருந்து விடுபட இந்தியா புத்தமதத்தைத் தழுவ வேண்டும், நல்லொழுக்கத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரே மதம் புத்த மதம்தான். சாமானிய மக்கள் நன்மைக்காவும் நல் வாழ்வுக்காகவும் பாடுபட வேண்டும் என்று போதிப்பதும் புத்த மதம் மட்டுமே."

தனது வாழ்க்கையின் எஞ்சிய பகுதியை புத்த மதத்தை புதுப் பிக்கவும் பரப்பவும் அர்ப்பணிக்கப் போவதாக டாக்டர் அம்பேத்கர் பிரகடனம் செய்தார்!

---

1. தி சன்டே நியூஸ், 1 அக்டோபர், 1950.

# (122)

## பெண்களின் சமுதாய முன்னேற்றத்தை நோக்கமாக கொண்ட மசோதா

*ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் பெல்காம் கிளையின் சார்பில் நடந்த 50,000 பேருக்கு மேல் கலந்து கொண்ட பேரணியில், 1950 ஆம் ஆண்டு டிசம்பர் 26 ஆம் நாள் டாக்டர் அம்பேத்கர் பேசினார். அப்போது சொன்னார்:*

*"ஒழுக்கத் துணிவும், பண்பு வலிமையும் இந்தியப் பெண்களிடம் இல்லாமலிருப்பது, தாம் வரைந்த மசோதாவுக்கு (இந்துச் சட்டம்) குறுக்கே நிற்கிறது என்றார். பெண்களின் சமுதாய முன்னேற்றத்தில் எந்தவொரு பிரபலமான பெண் தலைவரும் அக்கறைகாட்டவில்லை" என்று குறிப்பிட்டார்.*

*"ஸ்மிருதிகள் பல உரிமைகளை பெண்களுக்கு வழங்கியுள்ளன. இவற்றுக்கு ஏற்ற வகையில் மசோதாவை நான் வரைந்துள்ளேன். பெண்களின் சமுதாய முன்னேற்றத்திற்கு குறுக்கே நிற்கிற தடைகளை அகற்றுவதே இம்மசோதாவின் நோக்கம். சுதந்திரம் என்பது செல்வத்தைப் பொருத்திருக்கிறது. தனது சுதந்திரத்தை தக்க வைத்துக் கொள்வதற்கு தனது சொத்துக்களையும் உரிமைகளையும் ஒரு பெண் தக்க வைத்துக் கொள்ள வேண்டும்."*

*கார அமிலத்தின் கலவையால், கெட்டுப் போன பாலுக்கு இந்துச் சட்டத்தை ஒப்பிட்டார் டாக்டர் அம்பேத்கர். சில பழைமை வாதிகளும், மசோதா எவரின் நலன்களுக்காகத் தாக்கல் செய்யப் பட்டுள்ளதோ அந்தப் பெண்களும் கூட செய்கிற ஆர்ப்பாட்டங்கள் பற்றிக் குறிப்பிட்ட டாக்டர் அம்பேத்கர், " இந்த மசோதாவின் எந்தவொரு பகுதியாவது ஸ்மிருதிகளின் அடிப்படையில் அமைய வில்லை என்று யாராவது எனக்குக் காட்ட முடியுமா?" என்று கேட்டார்.*

---

# (123)

# அரசியல் தனிமையை தாழ்த்தப்பட்டோர் கைவிட வேண்டும்

*1951 ஆம் ஆண்டு ஜூன் 12 ல் பம்பாயில் டாக்டர் அம்பேத்கர் உரை நிகழ்த்தினார்:*

தாழ்த்தப்பட்டோர் தங்களது தனிமையை விட்டுவிட்டு மற்ற வகுப்பினருடன் ஒத்துழைப்பதன் மூலம் புதிதாகப் பெற்ற நமது சுதந்திரத்தை வலுப்படுத்த வேண்டும். ஆனால் அந்த ஒத்துழைப்பின் போது தாழ்த்தப்பட்டோர் தங்களது தனித்தன்மையைக் காத்து வர வேண்டும். காங்கிரசைப் பற்றிய உங்கள் கொள்கைகளை நீங்கள் தீவிரமாக மாற்றிக் கொள்ள வேண்டும். இன்று வரை காங்கிரசிற்கு நாம் எதிராகவே செயல்பட்டு வந்திருக்கிறோம். அரசியல் களத்தில் நாம் ஒருவருக்கொருவர் எதிரியாகவே இருக்கிறோம். இதுவரை நாம் குறுகிய மனப்பான்மை கொண்டிருந்தோம். நமது வகுப்பினரின் நலனில் மட்டும் நாம் அக்கறை கொண்டிருந்தோம். தற்போது நாம் சுதந்திரம் பெற்று விட்டதால் நமது கண்ணோட்டத்தை முழுவதுமாக மாற்றிக் கொண்டுள்ள அதே வேளையில் புதிதாகப் பெற்ற நமது சுதந்திரத்தை வலுப்படுத்த வேண்டும்.

நமது சம்மேளனத்தின் அஸ்திவாரமே இடிந்து விழுந்து கொண்டிருப்பதாகச் சொல்லுவது தவறு. உண்மையில் நாம் வலுப்பெற்றிருக்கிறோம், நாம் உறுதியுடன் ஒன்றுப்பட்டிருக்கிறோம். 1946 ஆம் ஆண்டு தேர்தலில் சம்மேளனம் மிக மோசமான தோல்வியைச் சந்தித்தது. அரசியல் நிர்ணய சபைக்குள் நாம் சிலர் நுழைவதன் மூலம் நமது வகுப்பினர்களின் நலன்களைப் பாதுகாக்க முடியும் என்று நான் நம்பினேன். அப்போது நமக்கெதிராக எல்லா கதவுகளும் ஜன்னல்களும் அடைக்கப்பட்டிருந்தன. எனது வெற்றியிலேயே எனக்கு நம்பிக்கை இல்லை. எனினும் வங்காளத்துத் தொகுதி ஒன்றில் நான் போட்டியிட்டு, வெற்றி பெற்றேன்.

அந்த நேரத்தில், பொதுவாக தேசத்துக்காக நான் எதுவும் செய்ய முடியும் என்ற எண்ணமே என்னிடம் இல்லை. தேசத்தின் அரசியல்

சாசனத்தை வடிவமைக்கும் பணி எனது தோள்களில் விழுந்தது. எனக்கும் எனது வகுப்பினருக்கும் ஒரு பொன்னான வாய்ப்பாக அது அமைந்தது என்று இப்பொழுது நான் கருதுகிறேன். என்னையும் எனது வகுப்பிரையும் கடந்த 20 ஆண்டுகளாக வசைபாடி வந்த இந்துக்கள் தவறு செய்துவிட்டனர் என்று நான் அரசியல் சாசனத்தை வரைந்ததன் மூலம் நிரூபித்தேன். மற்ற எவரையும் போலவே நாமும் ஒரு தேசிய அமைப்பே.

காலம் மாறிவிட்டது, இந்துக்கள் ஆதிக்கம் செலுத்திய காலம் போய்விட்டது, முன்பு நமது எதிர்காலம் பற்றி நமக்கு நம்பிக்கையே இருக்கவில்லை. இப்பொழுது நமது இறுதிக் குறிக்கோள் புதிதாய்ப் பெற்ற சுதந்திரத்தைப் பேணிக்காப்பது தான்.

சம்மேளனம் தனது தனிமையைக் கைவிட்டு விட வேண்டும். நமது வகுப்பு சிறியது. நாம் நமது இப்போதைய நிலைமையைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டும் என்றால் வரவிருக்கின்ற தேர்தலில் ஏதாவது ஒரு அரசியல் கட்சியுடன் கூட்டுச் சேர்ந்து கொள்ள வேண்டும்.

எனினும் இந்தப் பிரச்சினை தேர்தல்கள் வரும்போது, அப்போது நிலவும் சூழல்களுக்கு ஏற்ப முடிவு செய்யப்படும்.

---

## (124)

# உருகி மறையாமல் உயர்ந்து நின்று போக்கையே மாற்றுகிற ஆற்றின் பாறை நான்

*1951 அக்டோபர் 27 ல் ரம்தாஸ்பூர், ஜலந்தர், பஞ்சாபில் நடந்த தேர்தல் பிரசாரக் கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் பேசினார்:*

அவர் சொன்னார்:

அன்பிற்குரிய சகோதரர்களே, சகோதரிகளே,

இதற்கு முன்னால் நான் பஞ்சாபில் சுற்றுப் பயணம் செய்ய வேண்டும் என்று கருதியிருந்தேன். ஆனால் நான் இங்கு வர முடியவில்லை. ஜலந்தரில் மக்கள் பெருமளவில் கூடியிருந்தனர் என்றும் அங்கு நான் வராததால் அவர்கள் ஏமாற்றம் அடைந்தனர் என்றும் அறிந்தேன். உங்களுக்கு ஏற்பட்ட இந்த அசௌகர்யத் துக்காக நான் வருந்துகிறேன். நான் இங்கு வராமல் போனது பலருக்கு அசௌகர்யத்தை ஏற்படுத்தியது. சில காரணங்களால் நான் எதுவும் செய்ய முடியாமல் போனது. முதலாவதாக, கடந்த நான்கு ஆண்டுகளாக காங்கிரஸ் அரசில் இருந்து வரும் எனக்கு வேலைச் சுமை அதிகம். எனவே இங்கு வர முடியவில்லை. இரண்டாவதாக இந்த ஆண்டுகளில் எனது உடல் நலத்திலும் குறைவேற்பட்டது. இப்போது கூட முழு நலத்துடன் நான் இல்லை. மூன்றாவதாக இந்தியாவிலுள்ள தாழ்த்தப்பட்டோர் அனைவருமே நான் இந்தியா முழுதும் சுற்றுப் பயணம் செய்து அவர்களிடம் பேச வேண்டும் என்று கருதுகிறார்கள்.

உங்களுக்கே தெரியும் நமது நாடு மிகப் பெரிய கண்டம் போன்றது, இரண்டு வருட காலத்தில் கூட ஒரு தனி நபர் நாடு முழுவதையும் சுற்றி வந்துவிட முடியாது. எனவே மக்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய என்னால் இயலவில்லை. அவர்கள் விரும்புகிற நேரத்தில் இங்கு வர முடியவில்லை. ஆகவே, நமது மக்கள்

அனைவரும் தமது சொந்தக்காலில் நின்று ஒன்றுபட்டிருக்க வேண்டும். அப்போதுதான் எதிர்ப்படும் இன்னல்களைச் சமாளித்துக் கொள்ள முடியும். அப்போது எனது உதவி உங்களுக்குத் தேவைப் படாது. என்னையும் நீங்கள் வற்புறுத்த மாட்டீர்கள்.

55 வயதான பின் ஒருவன் அரசியலிலிருந்து ஓய்வு பெற்றுவிட வேண்டும், ஏனெனில் அரசாங்கம் கூட தனது ஊழியர்களுக்கு அவர்கள் 55 வயதை எட்டியவுடன் அவர்கள் இனி வேலைக்குத் தகுதியில்லை என்று நோட்டீஸ் கொடுத்து ஓய்வளித்து விடுகிறது. ஆனால் இன்றைய அரசியல்வாதிகளோ 55 வயது கடந்து பின்தான் தமது அரசியல் வாழ்க்கையைத் துவக்குகிறார்கள். அதை ஒரு வருமானம் ஈட்டும் தொழிலாகப் பாவிக்கிறார்கள். நாட்டுக்கு அவர்களால் சேவை செய்ய முடியுமா முடியாதா என்பது பற்றி அவர்களுக்குக் கவலையில்லை. அவர்களுக்கு இருப்பதெல்லாம் ஒரே நோக்கம்தான், அதாவது தமக்கு எதாவது லாபம் கிட்டும் என்பதே அது. எனக்கு சுயநல நோக்கம் எதுவும் இல்லை. எனது நன்மைக்காக நான் அரசியலில் இருக்கவில்லை. நமது வகுப்பினருக்கு சேவை செய்யவே நான் அரசியலில் ஈடுபட்டுள்ளேன். நான் 1920ஆம் ஆண்டு அரசியலில் குதித்தேன். அன்று முதல் இன்றுவரை தொடர்ந்து அரசியல் பணி செய்து வருகிறேன். எனது வகுப்பினருக்காக நான் 30 நீண்ட ஆண்டுகள் சேவை செய்து வந்துள்ளேன். எனக்கு அரசியலி லிருந்து விலகி விட வேண்டும் என்று தோன்றுகிறது. ஆனால் எனது வகுப்பினரை ஒழுங்கமைக்க வேண்டியுள்ளது, இந்த 30 ஆண்டுகளில் 8 ஆண்டுக் காலம் அரசில் ஒரு அங்கமாக இருந்துள்ளேன். இவ்வளவு நீண்ட காலத்துக்கு வேறெந்த அரசியல்வாதியாவது அரசியலில் இருந்திருக்கிறாரா என்று எனக்குத் தெரியாது. நான் அரசாங்கத்தில் எட்டாண்டு காலம் இருந்தேன். விரும்பியிருந்தால் நிரந்தரமாக அரசில் நான் அங்கம் வகிக்க முடியும். ஒரு பெருமைக்காக இதை நான் சொல்லவில்லை. எனக்குள்ள தகுதிகளைக் கணக்கில் கொண்டால், நான், அரசில் இருக்க வேண்டும் என்று விரும்பினால் என்னை ஒருவராலும் வெளியேற்றியிருக்க முடியாது. எனினும் எனது வகுப்பினரின் நலன் கருதி காங்கிரஸ் அரசிலிருந்து நான் ராஜினாமா செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. நான் எங்கு சென்றாலும் எனது வகுப்பாரின் நலன்களே என் மனதில் இருக்கும் என்று நான் உங்களுக்கு உறுதியளிக்கிறேன்.

நான் இங்கிலாந்தில் தத்துவவியல் டாக்டர் பட்டம் பெற்று இந்தியா திரும்பிய போது இத்தகைய தகுதியுடையவர் எவரும் இந்தியாவில் இருக்கவில்லை. நான் பம்பாய் வந்து சேர்ந்து மொகல்லாவில் குடியேறினேன். நான் எங்கே வசிக்கிறேன் என்று எவருக்கும் தெரியாததால் வெகு சிரமப்பட்டு என் இருப்பிடத்தைக் கண்டுபிடித்த பம்பாய் அரசாங்கம் அரசியல் பொருளாதாரத் துறையின் பேராசிரியர் பதவியை ஏற்றுக் கொள்ளும்படி என்னிடம் கேட்டுக் கொண்டது. அந்த வேண்டுகோளை நான் நிராகரித்தேன். நான் அந்தப் பதவியை ஒத்துக் கொண்டிருந்தால் பொதுப் பயிற்சித் துறையின் இயக்குனராகவாவது ஆகியிருப்பேன். மூன்று அல்லது நான்கு ஆயிரம் எனக்கு மாதச் சம்பளம் கிடைத்திருக்கும். எனது வகுப்பினருக்குச் சேவை செய்ய வேண்டும் என்ற உணர்வு என்னிடம் மேலோங்கியிருந்ததால் அந்தப் பதவியை நான் ஏற்கவில்லை. அப்பணியில் சேர்ந்திருந்தால் இந்தச் சேவை செய்ய முடியாது. ஏனென்றால் அரசாங்க விருப்பத்தின்படி நடக்க வேண்டும், அரசாங்கக் கொள்கைகளையே பின்பற்ற வேண்டும்.

இரண்டு மூன்று வருடங்கள் சிறிது சம்பாதித்த நான் மீண்டும் இங்கிலாந்து சென்று மேல்படிப்பு படித்து பாரிஸ்டராக இந்தியா திரும்பினேன். பம்பாய்க்கு நான் திரும்பிய போது மாவட்ட நீதிபதி பதவியை ஏற்றுக் கொள்ளும்படி பம்பாய் அரசாங்கம் என்னிடம் மீண்டும் கேட்டுக் கொண்டது. எனக்கு 2000 ரூபாய் சம்பளம் தருவதாகவும் சில காலத்தில் நான் உயர் நீதிமன்ற நீதிபதியாகி விடலாம் என்றும் கூறினார்கள். அதையும் நான் ஏற்றுக் கொள்ள வில்லை. மற்ற வழிகளில் அப்போது எனக்குக் கிடைத்த வருமானம் ரூ 200/- தான்.

1942 ஆம் ஆண்டு என் முன்னால் இரண்டு வழிகள் இருந்தன. ஒன்று உயர்நீதி மன்ற நீதிபதி பதவி ஏற்பது. அடுத்தது இந்திய அரசில் சேர்ந்து வைஸ்ராயின் நிர்வாகக் குழு உறுப்பினர் ஆவது, உயர் நீதி மன்ற நீதிபதியாகி இருந்தால் எனக்கு மாதம் ரூ 5000/- சம்பளமும் ஓய்வுக்குப் பின் ரூ 1000/- பென்ஷனும் கிடைத்திருக்கும், ஆனாலும் அதை நான் செய்யவில்லை. நான் அரசியலில் நுழைந்தேன். நான் அச்சூத் வகுப்பில் பிறந்தேன். அந்த வகுப்பாருக்காகவே நான் உயிர் விடுவேன். இந்த வகுப்பாரின் நலனே எனக்கு உயிருக்கும் மேலானது. நான் எந்தக் கட்சியிலும் அமைப்பிலும் சேரவில்லை. நான் சுதந்திரமானவனாக இருந்தேன்.

நான் காங்கிரஸ் அரசில் இருக்கும் போது எனது வகுப்பாருக்கு நான் விசுவாசமாக இருந்தேன். நான் காங்கிரஸ் அரசில் அமைச்சராக சேர்ந்துள்ளதால் காங்கிரஸ் கட்சியிலும் சேர்ந்து விட்டேன் என்று பலர் நினைத்தனர். டாக்டர் அம்பேத்கர் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து விட்டார், எனவே, தாழ்த்தப்பட்டோர் ஏன் ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தில் இருக்க வேண்டும் என்று வினவினார். இதுபற்றி நான் லக்னோவில் விளக்கிக் கூறினேன். மண்ணும் கல்லும் வெவ்வேறானவை. அவை ஒரு போதும் கலந்து ஒன்றாகி விடாது. நான் ஒரு பாறை போன்றவன். இது கரைந்து போகாது, மாறாக ஆற்று நீரோட்டத்தையே இது மாற்றிவிடும். நான் எங்கே இருந்தாலும், நான் யாருடன் இருந்தாலும் எனது தனித்தன்மையை ஒரு போதும் இழந்து விட மாட்டேன். யாராவது என்னிடம் ஒத்துழைப்பு கோரினால், நல்ல காரியத்துக்காக அதனை நான் தருவேன். நான்காண்டுக் காலம் காங்கிரஸ் அரசில் இருந்தபடி என்னுடைய வல்லமை முழுவதையும் பயன்படுத்தி என் தாய்நாட்டுக்காக பணியாற்றினேன். எனினும் இந்த ஆண்டுகளில் காங்கிரஸ் ஸ்தாபனத்துடன் நான் கலந்து விடவில்லை.

தாழ்த்தப்பட்டோரின் மீது அனுதாபம் காட்டி, எமது மக்களின் குறைகளைத் தீர்ப்பதற்கு நம்மைப் போலவே பாடுபடும் கட்சியில் நான் சேர விரும்புகிறேன். ஆனால் எமது மக்களிடம் அனுதாபம் காட்டும் கட்சி ஒன்று கூட இல்லை. எல்லாமே சுயநலமிகள்.

நான் இங்கு தேர்தல் சம்பந்தமாக வந்துள்ளேன். நீங்கள் ஒன்றுபடவில்லை என்றால் உங்களுக்கு வெற்றி கிட்டாது என்று உங்களிடம் கூற விரும்புகிறேன். வெற்றி காண வேண்டுமானால் ஒன்று பணக்காரராக இருக்க வேண்டும் அல்லது வலிமையுள்ள வனாக இருக்க வேண்டும். இந்த இரண்டில் ஏதாவது ஒன்றுதான் நமக்கு வெற்றியைத் தரும், நம்மிடமோ பணமும் இல்லை, பெரும்பான்மையும் இல்லை, மார்வாடிகளும் பணியாக்களும் வலுவுள்ளவர்கள் அல்ல. ஆனால் அவர்களிடம் பணம் இருக்கிறது. அதனால் அவர்கள் எதை வேண்டுமானாலும் விலைக்கு வாங்கி விடலாம். அவர்கள் போலீசை விலைக்கு வாங்கலாம்; நீதி மன்றங் களையும் விலை பேசலாம். நமது மக்களிடம் பணமும் இல்லை; பலமும் இல்லை. கிராமங்களில் நமது மக்கள் சிறுபான்மையினராக இருப்பதால் ஜாதி இந்துக்களின் தயவில்தான் அவர்கள் வாழ முடியும். நமது மக்களுக்கு பலவித இன்னல்கள் இழைக்கப்படுகின்றன.

அவர்கள் போலீசில் புகார் செய்தால் போலீசார் செவி மடுப்ப தில்லை. புகார் கொடுக்கச் செல்பவர்களுக்கு இடையூறுகள் செய்கின்றனர் போலீசார். இந்த நிலைமைகளிலும் நாம் ஏதாவது சாதித்திருக்கிறோம் என்றால் அது சில அரசியல் உரிமைகள்தான். ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் பதாகையின் கீழ் நாம் ஒன்று பட்டு நின்றால் நமக்கு அந்த உரிமைகள் கிட்டும், நமது வகுப்பினர் அராஜக நிலையிலிருந்து மீளவும் முடியும்.

நமக்கு ஒரு அதிகாரம் வேண்டும். அதுதான் அரசியல் அதிகாரம்.

இந்த அதிகாரத்தை நாம் வென்று பெற வேண்டும். இந்த அதிகாரம் எனும் ஆயுதம் இருந்தால் நமது மக்களை நாம் காப்பாற்ற முடியும்.

இந்த நாடு சுதந்திரம் அடைந்துள்ள நிலையில் உங்களுக்கு இந்த அதிகாரம் கண்டிப்பாகக் கிடைக்குமா? நமது நாடு சுதந்திரம் அடைவதை நாம் ஒரு போதும் எதிர்க்க வில்லை. ஆனால், ஒரேயொரு கேள்விக்கு நமக்கு நேரிடையாக பதில் வேண்டும் என்று விரும்பினோம். சுதந்திர இந்தியாவில் நமது தலைவிதி என்ன? இந்தக் கேள்வியை காந்திஜியிடமும் மற்ற காங்கிரஸ் தலைவர்களுடனும் நான் எழுப்பினேன். சுயராஜ்யம் பெற்றபின் நமது மக்களின் நிலை என்ன? நாம் இன்று இருப்பது போல பாங்குகளாகவும், சாமர்க ளாகவுமே தொடர்ந்து இருப்போமா? நமது பிள்ளைகள் இன்று போலவே பள்ளிக்குள் நுழைய அனுமதிக்கப்பட மாட்டார்களா? இன்றைக்கு நமது மக்கள் கிராமங்களில் அல்லல் படுவது தொடருமா? எமது மக்களுக்கு என்னதான் ஆகும்?

வட்ட மேஜை மாநாட்டில் இந்தக் கேள்வி மீண்டும் கேட்கப் பட்டு சுதந்திரம் நமக்கு வேண்டுமா என்றும் கேட்கப்பட்டது. நாம் சுயராஜ்யம் பெற்றால் இந்த மக்களின் நிலை எப்படி இருக்கும் என்று காந்திஜியிடம் கேட்டேன். முஸ்லீம்களுக்கும், கிறித்தவர்களுக்கும், சீக்கியர்களுக்கும், ஆங்கிலோ இந்தியர்களுக்கும் தரப்படுகிற பாது காப்பு நமக்கும் தரப்படுமா? ஆனால் 1932ஆம் ஆண்டு தாழ்த்தப் பட்டோர்களுக்கு தனி உரிமைகள் வழங்கி, தாழ்த்தப் பட்டோர் தனி வாக்குத் தொகுதி அளித்த போது, சாகும் வரை உண்ணாவிரதத்தை காந்திஜி தொடங்கினார். அந்த நேரத்தில் நமக்கிடையே ஒரு

ஒப்பந்தம் ஏற்பட்டது. ஆனால் இன்று நடப்பதோ அந்த ஒப்பந்தத் துக்கு மாறான விஷயங்களே. ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்து வேட்பாளருக்கு எதிராக காங்கிரஸ் கட்சியின் சார்பில் யாரையும் நிறுத்த மாட்டோம் என்று அவர் உறுதி அளித்திருந்தார். ஒதுக்கப் பட்டிருந்த தொகுதிகளில் நமது மக்களை நிறுத்த முயன்றோம். ஆனால் காங்கிரஸ் கட்சி இடையூறு செய்கிறது. இந்தத் தொகுதி களில், முட்டாள்களாகவும், சுயநலமிகளாகவும் உள்ள நமது மக்களையே நமது சம்மேளன வேட்பாளருக்கு எதிராக நிறுத்த முயல்கிறார்கள். இவர்கள் காங்கிரசின் ஆமாம் சாமிகள். ஒரு பிராமணனோ, பணியாவோ காங்கிரஸ் சீட் கேட்டால் அவரிடம் ஒரு கேள்வி கேட்கிறார்கள். அவர் எத்தனை முறை சிறைக்குச் சென்றுள்ளார் என்பதே அந்தக் கேள்வி. தாழ்த்தப்பட்ட மக்கள் காங்கிரஸ் டிக்கட் கேட்கும் போது அவர்களிடமும் இந்தக் கேள்வியை அவர்கள் ஏன் கேட்பதில்லை என்று காங்கிரஸ்காரர் களிடம் நான் வினவ விரும்புகிறேன். கல்வியறிவுவற்றவர்களையும், பிரபலமாகாதவர்களையும் மட்டுமே ஏன் அவர்கள் தேர்வு செய்கிறார்கள்?

நாடாளுமன்றத்தில் 30 தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இருக் கின்றனர். அவர்கள் என்ன செய்துள்ளனர் என்று நான் கேட்கிறேன். அவர்கள் ஒரு கேள்வியையும் கேட்கவில்லை, ஒரு தீர்மானத்தையும் முன்மொழியவில்லை; எந்த மசோதாவையும் விவாதத்துக்கு முன் வைக்கவில்லை. வெளியிலிருந்து வருகிற ஒருவர் நாடாளுமன்றத்தில் நமது உறுப்பினர் 30 பேரும் எந்த ஒரு குறையையும் எடுத்துச் சொல்லாமல் இருப்பதைக் காணும் போது, நமது மக்கள் நல்லபடியாக வாழ்கிறார்கள்; எனவே அவர்கள் மீது தனி கவனம் செலுத்தத் தேவையில்லை என்றுதானே நினைப்பார். இதன் காரணமாகத்தான் சட்டப் பேரவைகளுக்கு உண்மையான நிவாரணம் பெற நாம் விரும்புகிறோம்.

தேவையின்றி நமது உரிமைகளில் காங்கிரசார் தலையிடு வதால்தான் முதல் தேர்தலிருந்தே நாம் காங்கிரசை எதிர்த்துப் போராடி வருகிறோம். காங்கிரஸ் கட்சியின் தலைவரான பண்டிட் நேருவைப் பாருங்கள். கடந்த 20 வருடங்களில் அவர் 2000 உரை நிகழ்த்தியுள்ளார். ஆனால் ஒரு முறை கூட தாழ்த்தப்பட்ட மக்களின் நலன் பற்றி அவர் பேசியதில்லை. இத்தகைய பிடிவாதம் கொண்ட

தலைவர்களைக் கொண்ட காங்கிரஸ் கட்சி நமது மக்களின் மீது எத்தகைய அனுதாபம் கொண்டிருக்கும் என்பதை நீங்கள் அறியலாம். பண்டிட் நேரு எப்போதும் முஸ்லீம்களின் பக்கம் நிற்பார். முஸ்லீம்கள் அலட்சியப் படுத்தப்பட வேண்டும் என்று நான் சொல்ல வில்லை. ஆனால் அவர்களை விட அதிகப் பாதுகாப்பு தேவைப் படுகிற மற்ற வகுப்பினருக்குக் கிடைக்க வேண்டிய உரிமைகளை அவர்கள் தட்டிச் செல்லக் கூடாது என்றுதான் கூறுகிறேன். சில பேர் பண்டிட் நேருவிடம் சென்று தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஏதாவது செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டதாக அறிந்தேன். ஆனால் நேருவோ, அவர்களுக்காக செய்ய வேண்டியதெல்லாம் செய்தாயிற்று. இனி அவர்களுக்கு விஷேசமாக எதுவும் தேவையில்லை என்று சொல்லி விட்டார்.

பிரிவினையின்போது, பாகிஸ்தான் அதிகாரிகள் எம்மிடம், பாகிஸ்தானிலே இருந்துவிடுங்கள் அப்போதுதான் நீங்கள் கேவலமாக வேலை செய்ய வேண்டியது இருக்காது என்று சொன்னார்கள். ஆனால் அப்போது நான் பண்டிட் நேருவிடம் ஏழை தாழ்த்தப்பட்டோர் வெளியேறுவதற்கு உதவும்படி கேட்டுக் கொண்டேன். நமது மக்கள் வெளியேறுவதற்கு வசதி செய்வதற்காக இரு நபர்களை நான் அனுப்பினேன், அத்துடன் நமது மகர் படை களையும் அனுப்பினேன், நமது மக்களின் பாதுகாப்புக்காக அங்கு அனுப்பி வைத்தேன். நமது மக்களின் மீது காங்கிரஸ்காரர்களுக்கு அனுதாபம் இல்லாததால் நமது மக்களுக்காக காங்கிரஸ் என்ன செய்யும்?

120 இடங்கள் கொண்ட பஞ்சாப் சட்டப் பேரவையில் 21 இடங்களும், நாடாளுமன்றத்துக்கு 3 இடங்களும் தாழ்த்தப் பட்டோருக்கு ஒதுக்கப்பட்டுள்ளன. இந்த ரிசர்வ் தொகுதிகளுக்கு வேட்பாளர்களை நிறுத்த விரும்பும் அனைத்துக் கட்சியினரையும் பார்த்து நான் ஒரு கேள்வி கேட்கிறேன். நீங்கள் தாழ்த்தப்பட்ட மக்கள் மீது அனுதாபம் கொண்டிருந்தால் இந்த ரிசர்வ் தொகுதி களில் மட்டும் நீங்கள் ஏன் வேட்பாளர்களை நிறுத்த வேண்டும்? பொதுத் தொகுதிகளில் நீங்கள் ஏன் தாழ்த்தப்பட்டோரை நிறுத்தவில்லை? அவர்கள் நேர்மையாளர்களாக இருந்தால் பொதுத் தொகுதியில் நமது மக்களுக்கு இடம் கொடுக்கட்டும். பெரும் கஷ்டங்கள் பட்டு நாம் பெற்றுள்ள வசதிகளை இவர்கள் தட்டிச் செல்ல முயல்கின்றனர்.

அரசியல் அதிகாரம் இல்லாமல் நாம் இந்த உலகில் வாழ முடியாது என்று நான் உங்களிடம் சொல்லிக் கொள்ள விரும்பு கிறேன். மாகாண சட்ட சபைகளிலும் மத்திய நாடாளுமன்றத்திலும் நமக்கு ஒதுக்கீடுகள் கிடைத்துள்ளன. ஆனால் இது வெறும் 10 வருடங்களுக்கு மட்டுமே. 10 ஆண்டுகளுக்குப் பின் என்ன நடக்கும் என்று ஒருவருக்கும் தெரியாது. நமது உண்மையான பிரதிநிதிகளைச் சட்டசபைக்கும் நாடாளுமன்றத்துக்கும் அனுப்பிவைத்தால் ஏதோ சிறிது பலன் ஏற்படும். இல்லையேல் அரசாங்கத்திலோ உள்ளூர் நிர்வாகங்களிலோ நமது குரல் ஒலிக்காது.

இந்திய அரசியல் வரைபடமே மாறிவிட்டது. முதலில் காங்கிரஸ் சுயராஜ்யத்துக்காகப் போராடியது. அதனால்தான் அனைத்து மக்களும் அதில் சேர்ந்தனர். காங்கிரசுக்கு எதிராக செயல் பட்டவர்கள் எல்லாம் தேச விரோதிகள் என்று அழைக்கப்பட்டனர். ஆனால், நிலைமை இப்போது மாறிவிட்டது. பஞ்சாபில் காங்கிரஸ் பார்கவான்களைப் பாருங்கள். பார்கவா இனத்தவரும் கசார் இனத்தவரும் ஒரு காலத்தில் சகோதரர்களாக இருந்தனர். இருவருக்கும் இடையில் அமைதி காப்பதாக அவர்கள் உறுதி கொண்டிருந்தனர். ஆனால் இன்றோ, அவர்கள் கொடிய எதிரிகள்.

வேட்பாளர் மனு தாக்கல் செய்ய கடைசி நாள் நவம்பர் 5. ஆனால் அக்டோபர் 27 ஆம் தேதியான இன்றுவரை காங்கிரஸ் வேட்பாளர் பட்டியல் பஞ்சாபிலிருந்து அனுப்பப்படவில்லை. இவ்விரு மக்களுமே பிரதமராகிவிட முயல்கிறார்கள். பீகாரிலும் இதே நிலைமைதான். பிரினையின் போது மிகவும் பலம் பொருந்தி யதாக விளங்கிய காங்கிரஸ், குறுகிய காலத்தில் இவ்வாறு வலுவிழந்து நிற்பது எனக்கு ஆச்சரியத்தைத் தருகிறது. காந்திக் குல்லாய்ப் போட்டிருக்கிற ஒருவரை இன்று கனவான் என்று கருதுவதில்லை. காங்கிரஸ்காரன் அல்லது கனவான் என்றுதான் மக்கள் பிரித்துப் பார்க்கிறார்கள். யாரும் இருவராகவும் இருக்க முடியாது. இதுதான் இன்றைய காங்கிரசின் நிலைமை. காங்கிரஸ் வயோதிகம் அடைந்து விட்டது. எனவே மற்றவர்களுடன் அதனால் போரிட முடியாது. அது இயற்கையான மரணத்தை விரைவில் எட்டும்.

நீங்கள் ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளன வேட்பாளர்களுக்கு வாக்களித்தால் நமது வேட்பாளர்கள் வெற்றி பெற்றுவிடுவர் என்று

நான் உங்களுக்கு உறுதியளிக்கிறேன். அதில் சந்தேகமில்லை. நீங்கள் நமது உண்மைப் பிரதிநிதிகளுக்கு வாக்களியுங்கள். வாக்களிப்பு தினத்தன்று பெண்களும் ஆண்களும் தமது பணிகளை விட்டுவிட்டு வாக்குச்சாவடிக்குச் செல்லுங்கள்.

தாழ்த்தப்பட்டோருக்கு அளிக்கப்பட்டிருக்கும் ரிசர்வேஷன் முறை 10 ஆண்டுகளுக்கு மட்டும்தான். தீண்டாமை ஒழியும் வரை ரிசர்வேஷன் முறை இருக்க வேண்டும் என்று நான் கூறினேன். ஆனால் காலஞ்சென்ற சர்தார் வல்லபாய் படேல் இதை எதிர்த்தார். மற்ற கமிட்டி உறுப்பினர்களும், அவர்கள் காங்கிரசார் என்பதாலும் வல்லபாய் படேல் தலைவர் என்பதாலும் அவர் கூறியதை ஆதரிக்க வேண்டியதாயிற்று. எனவே சட்ட மன்றங்களுக்கு நமது பிரதி நிதிகளை அனுப்ப வேண்டும். அவர்கள் நமது உரிமைகளைப் பாதுகாத்து, இந்த ரிசர்வேசன் முறையை 10 ஆண்டுகளுக்குப் பின்னாலும் நீடிக்கச் செய்வார்கள். மற்ற கட்சிகளில் சீட் கேட்கும் தாழ்த்தப்பட்டோர் 10 ஆண்டுகளுக்குப் பிறகு அதை மறந்து விட வேண்டும். அவர்கள் காணாமல் போவார்கள். வேறு எந்தக் கட்சியும் அவர்களைத் தேடி வந்து தமது கட்சியின் சார்பில் போட்டியிடும்படி அவர்களிடம் கோரப் போவதில்லை. இன்று மற்ற கட்சிகள் எல்லாம் நமது வாக்குகளைப் பெறுவதில் ஆர்வம் காட்டுகின்றனர். இப்படி அந்த இடங்களைப் பிடிக்கப் பார்க்கிறார்கள். நம்மீது அவர்களுக்கு எந்த அனுதாபமும் இல்லை.

பல்வேறு கட்சிகளுக்கு சின்னங்கள் வழங்கும் போது, நமது கட்சியான ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனமும் ஒரு அகில இந்தியக் கட்சியாகக் கருதப்பட்டது. மற்ற கட்சிகள் காளை மாடுகள், குதிரைகள், கழுதைகள் போன்ற சின்னங்களைக் கோரிப் பெற்றன. உங்கள் வசதிக்காக நமது சின்னமாக நான் யானையைப் பெற்றுள்ளேன். இதன் மூலம் நமது கட்சி வேட்பாளர்களை சுலபமாக வேறுபடுத்திப் பார்க்க முடியும்.

இப்போது அடுக்குமுறை வாக்களிப்பு, வினியோக முறை வாக்களிப்பாக மாற்றப்பட்டிருக்கிறது. ரிசர்வ் தொகுதிகள் இருக்கு மிடங்களில் அத்தொகுதி மக்கள் இரண்டு வாக்குகள் செலுத்தலாம். ரிசர்வ் தொகுதியில் நிற்கிறவருக்கு ஒரு வாக்கு, பொதுக் இடத்தில் நிற்கிற வேட்பாளருக்கு ஒரு வாக்கு. எனவே நாம் ஏதாவது ஒரு

கட்சியுடன் கூட்டணி வைத்துக்கொள்ள வேண்டும். அதன் மூலம் அந்தக் கட்சிக்காரரின் வாக்கு நமக்குக் கிடைக்கும். எந்தக் கட்சியுடன் நாம் உடன்பாடு வைத்துக் கொள்கிறோம் என்பது சில நாட்களில் அறிவிக்கப்படும். நீங்கள் அந்தக் கட்சிக்கு வாக்களிக்க வேண்டும். பதிலுக்கு அந்தக் கட்சி நமது வேட்பாளர்களை ஆதரிக்கும். இந்த முறையில் நமது வேட்பாளர்கள் வெற்றி பெறுவர். நமக்குப் பெரிய பலம் இல்லை. மேலும் இணை வாக்குத் தொகுதி நமது நிலையை இன்னும் மோசமாக்குகிறது. எனவே ஏதோ ஒரு கட்சியுடன் நாம் கூட்டணி வைத்தே ஆக வேண்டும்.

இறுதியாக நான் உங்களுக்கு ஒன்று சொல்ல விரும்புகிறேன். ஒரேயொரு கட்சிதான் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு நன்மை செய்யும். அந்தக் கட்சி ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனம்தான். நான் உங்களுக்கு ஒரு வீடு கட்டிக் கொடுத்துள்ளேன். நீங்கள்தான் அதை ஒழுங்காகப் பராமரிக்க வேண்டும். நான் ஒரு மரம் நட்டுள்ளேன். அதற்கு நீங்கள் நீரூற்றி வளர்த்தால் அதன் நிழலும் பழங்களும் உங்களுக்குக் கிடைக்கும். இல்லையேல் நீங்கள் வெயிலில் காய வேண்டியதுதான். நமது வகுப்பு அழிந்து விடும். எனவே அரிஜன மக்கள் அனைவரும் தாழ்த்தப்பட்டோர் சம்மேளனத்தின் பதாகையின் கீழ் வர வேண்டும். அதனை மேலும் வலுவுள்ளதாக்க வேண்டும். நாம் ஒன்றுபட்டால்தான் நம்மால் எதையாவது சாதிக்க முடியும். ஒன்றுபட்டால் உயர்ந்து நிற்கலாம்; பிளவுபட்டால் கீழே தான் விழுவோம்.

---

## (125)

# நாடாளுமன்ற ஜனநாயகம் தோற்றுப் போனால் கலகம், அராஜகம், கம்யூனிசம் வரும்

*1951 ஆம் ஆண்டு அக்டோபர் 21ஆம் நாள் ஜலந்தர் நகரிலுள்ள டி.ஏ.வி. கல்லூரியில் நடைபெற்ற " மாணவர் நாடாளுமன்ற"த்தில் பேசும் போது, டாக்டர் அம்பேத்கர் நாடாளுமன்ற ஜனநாயகத்தை விளக்கிப் பேசினார்.*

*அவர் சொன்னார்:*

உங்களுடைய சிறப்பு நாடாளுமன்றத்தின் கூட்டத்தில் உரையாற்றுமாறு கேட்டுக் கொண்டு என்னை கவுரவித்தமைக்காக உங்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். எனது வாழ்க்கை முழுவதும் ஒரு துறையிலிருந்து இன்னொரு துறைக்கும் ஒரு தொழிலிலிருந்து இன்னொரு தொழிலுக்குத் தாவுகிற நாடோடியாக இருந்து வந்துள்ளேன். நான் இங்கிலாந்திலிருந்து 1919 ஆம் ஆண்டு திரும்பிய பின் அரசாங்க வர்த்தகக் கல்லூரியில் பம்பாய் நகரில் அரசியல் பொருளாதார பேராசிரியராக எனது பணியை நான் துவக்கினேன். பொதுப்பணி செய்ய விரும்புகிற ஒருவனுக்கு அரசாங்க வேலை ஒத்து வராது என்று சீக்கிரமே புரிந்து கொண்டேன். ஒரு அரசு ஊழியர், அரசு விதிகள், கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டவர். பொதுப் பணி செய்ய அவர் முனைந்தால் அவர் ஒவ்வொரு கட்டத்திலும் இடைஞ்சலுக்கு ஆளாவார். பின்னர் மீண்டும் இங்கிலாந்து சென்று வழக்கறிஞர் தகுதி பெற்றேன். அங்கிருந்து திரும்பிய பிறகு சில காலம் தொழில் செய்தேன். பின்னர் பம்பாய் அரசுச் சட்டக் கல்லூரியின் முதல்வர் பதவியை ஏற்றேன். போதனைத் தொழிலுக்கு திரும்பிய நான் சட்டக் கல்லூரியின் பிரின்சிபாலாக 5 ஆண்டுகாலம் இருந்தேன். பின்னர் 1935 இந்திய அரசுச் சட்டம் அமலுக்கு வந்தது. இதனால் மக்களின் சட்ட மன்றங்கள் தோன்றின. பின்னர் அரசியலில் குதிக்க வேண்டும் என்று முடிவு செய்து அரசியலுக்கு வந்தேன். அதிலிருந்து வழக்கறிஞர் பணியையும், மக்கள்

பணியையும் மாறி மாறிச் செய்து வருகிறேன். இவ்வாறாக சட்டத் தொழிலும் மக்கள் சேவையும் மாறி மாறி என்னை இழுத்துச் செல்கின்றன. எந்த கரண்ட் என்னை இறுதிக்கு இழுத்துச் செல்லும்? ஏ.சி.யா, டி.சி.யா என்று எனக்குத் தெரியாது.

ஆசிரியர் தொழில் எனக்கு விருப்பமான பணி; மாணவர்களின் மீதும் எனக்கு நேசம் உண்டு. அவர்களுடன் நான் பழகியுள்ளேன். அவர்களுக்கு நான் பாடம் சொல்லித் தந்திருக்கிறேன். அமைச்சரவையிலிருந்து நான் ராஜினாமா செய்தபின் மாணவர்களிடம் பேசுவதற்கு எனக்குக் கிடைத்துள்ள முதல் வாய்ப்பு இதுதான். நான் மாணவர்களிடையே பேசுவதில் மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன். இந்த நாட்டின் எதிர்காலம் இளைஞர்களின் கைகளில்தான் பெருமளவுக்கு இருக்கிறது. சமுதாயத்தின் அறிவார்ந்த பகுதி மாணவர்கள்; மக்கள் கருத்தை அவர்கள் உருவாக்க முடியும். எனவே நான் நாடாளுமன்ற உறுப்பினர் களிடம் பேசுவதில் விசேஷமான ஈடுபாடு கொண்டுள்ளேன். இந்த வாய்ப்பை எனக்குத் தந்தமைக்காக உங்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

உங்கள் கல்லூரி முதல்வர், உங்களிடையே வந்து பேச வேண்டும் என்று என்னை அழைத்த போது எந்த ஒரு குறிப்பிட்ட தலைப்பும் எனக்குக் கொடுக்கவில்லை. உங்களிடம் என்ன தலைப்பில் பேச வேண்டும் என்று எனக்கும் எதுவும் தோன்றவில்லை எனக்கு வழக்கமாக நடக்கிறபடி, இன்ன தலைப்பில் பேசுவது என்று திடீரென்று என் மனதில் உதித்தது. நாடாளுமன்ற ஜனநாயகம் பற்றி சில வார்த்தைகளை உங்கள் மத்தியில் பேசப் போகிறேன். எனக்குத் தரப்பட்ட நேரம் சிறிதுதான் என்பதால் இந்த விஷயம் பற்றி சுருக்கமான பகுப்பாய்வை உங்களுக்குத் தருகிறேன்.

அரசியல் நிர்ணய சபையில் விவாதங்கள் நடந்தபோது, நமக்கு எத்தகைய அரசியல் சாசனம் இருக்க வேண்டும் என்பது பற்றி பலவிதமான அபிப்ராயங்கள் சொல்லப்பட்டன. சிலர் பிரிட்டிஷ் முறை தேவை என்றனர். சிலர் அமெரிக்க முறையே சிறந்தது என்றனர். இந்த இருவிதமான அரசாங்கமும் வேண்டாம் என்றும் சிலர் கூறினர். நீண்ட விவாதத்துக்குப் பிறகு மிகப் பெரும்பான்மையோர், பிரிட்டனில் உள்ள நாடாளுமன்ற அரசாங்கம்தான் நமக்கு மிகவும் ஏற்றது என்ற முடிவுக்கு வந்தனர்.

நாடாளுமன்ற அரசாங்கத்தை விரும்பாத சில பிரிவினரும் இருந்தனர். கம்யூனிஸ்டுகள் ரஷ்ய மாதிரி அரசாங்கம் வேண்டும் என்றனர். தற்போதைய அரசியல் சாசனத்துக்கு சோஷலிஸ்டுகளும் எதிர்ப்புத் தெரிவித்தனர். இதற்கு எதிராக ஆர்ப்பாட்டம் செய்கிறார்கள். என்னைப் பொருத்தவரை நாடாளுமன்ற முறை அரசாங்கத்துக்கு நான் பெரும் முக்கியத்துவம் தருகிறேன். இந்த அரசியல் சாசனத்தின் பொருள் என்ன என்று அறிந்து கொண்டு அதனை நாம் பேணி வர வேண்டும்.

நாடாளுமன்ற ஜனநாயகம் என்பது என்ன? வால்டர் பாகெஹாட் என்பவர் ஆங்கிலேய அரசியல் சாசனம் பற்றி ஒரு புத்தகம் எழுதியுள்ளார். மிகச் சிறந்த ஆய்வு நூல் அது. லக்ஷி போன்றவர்கள் அரசியல் ஜனநாயகம் என்ற கருத்தினை ஒரே வாக்கியத்தில் வர்ணித்தனர். "நாடாளுமன்ற அரசாங்கம் என்பது விவாத அடிப்பயையிலான நிர்வாகம், முஷ்டிகளின் அடிப்படையில் அல்ல. பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் எந்தவொரு முடிவெடுப்ப தற்கும் முஷ்டிகளை உயர்த்துவதில்லை என்று நீங்கள் காண்பீர்கள். விவாதங்களுக்குப் பிறகே எப்போதும் முடிவு எடுக்கப்படுகிறது. பிரிட்டிஷ் நாடாளு மன்றத்தில் யாரும் இடையூறுகள் செய்வதில்லை."

பிரெஞ்சு அரசியலைப் பாருங்கள். நாக் அவுட்கள் மூலமாகத் தான் அங்கு முடிவுகள் எட்டப் படுகின்றன. இத்தகைய முறையிலேயே பிறந்து வளர்ந்தவர்களுக்குத்தான் இது ஏற்புடையதாக இருக்கும். மற்றவர்களுக்கு இது ஒரு அன்னிய முறை ஆகும். நாம் இம்முறையை கற்றுக் கொண்டு, புரிந்து கொண்டு, இதனை வெற்றிபெறச் செய்ய வேண்டும்.

நாடாளுமன்ற ஜனநாயகம் தற்போது நமக்குத் தெரியாத ஒன்று. ஆனால் ஒரு காலத்தில் நாடாளுமன்ற அமைப்புகள் இந்தியாவில் இருந்தன. பண்டைக் காலத்தில் இந்தியா மிகவும் முன்னேற்றம் அடைந்திருந்தது. மகாபரிநிபானாவிலுள்ள 'சுகாசை' நீங்கள் படித்துப் பார்த்தால் நான் சொல்கிற விஷயத்துக்கு ஏராளமான ஆதாரங்களைக் காண்பீர்கள். குசிநாராவில் பகவான் புத்தர் இறந்து கொண்டிருந்தபோது, அந்த வேளையில் கூட்டம் நடத்திக் கொண்டிருந்த மல்லாக்களுக்கு இத்தகவல் அனுப்பப்பட்டது.

அவர்கள் நாடாளுமன்ற அமைப்பில் ஈடுபாடு கொண்டவர்கள். புத்தரைப் பற்றிய இந்த தகவல் அறிந்த அவர்கள், கூட்டத்தை உடனே முடிக்க வேண்டாமென்று தீர்மானித்து, தமது வேலைகளைத் தொடர்ந்து செய்து, தமது நாடாளுமன்ற பணிகள் முடிந்த பின் குசிநாரா செல்வதென்று முடிவு செய்தார்கள். நாடாளுமன்ற முறைமை நமக்கு ஏற்கனவே தெரிந்த ஒன்றுதான் என்று எடுத்துக் காட்டுவதற்கு நமது இலக்கியங்களில் ஏராளமான ஆதாரங்கள் உள்ளன.

நாடாளுமன்ற நடைமுறை பற்றி பல விதிகள் இருந்தன. மேபினுடைய நாடாளுமன்ற நடைமுறை பொதுவாக கடைப் பிடிக்கப் படுகிறது. ஒரு தீர்மானம் தாக்கல் செய்யப் படாமல் விவாதம் நடைபெற முடியாது என்ற விதி பொதுவாக பின்பற்றப்படுகிறது. எனவேதான் ஒரு பிரச்னை பற்றி உடனே விவாதம் நடைபெற வில்லை. பண்டைக் காலத்தில் இந்த விதி பின்பற்றப்பட்டு வந்தது. ரகசிய வாக்குமுறை இப்போது நடைமுறையில் உள்ளது. இதுவும் நமக்குப் புதியது அல்ல. புத்த சங்கங்களில் இது பின்பற்றப்பட்டது. சிலபத்ரகா க்ராகஹா என்ற பெயரில் வாக்குச் சீட்டுகள் அங்கு பயன்படுத்தப்பட்டன. துரதிருஷ்ட வசமாக கடந்த காலத்து நல்ல அம்சங்களை எல்லாம் நாம் இழந்து விட்டோம். இந்த நாடாளுமன்ற அமைப்புகள் நமது நாட்டிலிருந்து எப்படி மறைந்து போயின என்பதை வரலாற்றாசிரியர்கள் ஆய்வு செய்ய வேண்டும். ஆனால் அவர்களுக்கு இந்தக் காரணத்தை கண்டுபிடிக்க முடியவில்லை அல்லது விருப்பமில்லை என்றே நான் கருதுகிறேன். உலகத்துக்கே இவ்வியூகங்களில் எஜமானனாக இந்தியா விளங்கியது. நமது இந்தியாவில் நிலவிய அறிவுச் சுதந்திரம் உலகில் வேறெங்கும் இருக்கவில்லை.

அப்படியானால் இந்தப் பண்டைய நாகரிகம் ஏன் அழிந்து பட்டது? இந்தியாவிற்கு எதேச்சாதிகார மன்னர்களின் ஆட்சிமுறை எப்படி வந்து சேர்ந்தது? நமக்கு நாடாளுமன்ற நடைமுறை நன்கு தெரிந்திருந்தது. நாடாளுமன்ற அமைப்புகளைச் சேர்ந்த வாக்குகள், வாக்களிப்பு கமிட்டிகள் போன்ற விஷயங்கள் நமக்குத் தெரியும், இன்றைக்கோ நாடாளுமன்ற அமைப்பு நமக்கு அன்னியமானதாக இருக்கிறது. கிராமங்களுக்கு நாம் சென்று பார்த்தால் கிராம வாசிகளுக்கு வாக்கு என்பதோ கட்சி என்பதோ என்னவென்று

தெரியவில்லை. அது ஏதோ வினோதமானதாக அன்னியமானதாக அவர்களுக்குத் தோன்றுகிறது. எனவே இந்த அமைப்பு முறையை எப்படி கட்டிக் காப்பது என்பது பெரிய பிரச்சினை ஆகும். நாம் பொது மக்களுக்குக் கற்பிக்க வேண்டும். நாடாளுமன்ற ஜனநாயகம், நாடாளுமன்ற ஆட்சி முறை பற்றியும் அவற்றினால் கிட்டும் பயன்கள் பற்றியும் நாம் எடுத்துச் சொல்ல வேண்டும்.

நாடாளுமன்ற அரசாங்கம் என்று பாகெஹாட் சொல்வது என்ன என்று நமக்குத் தெரியும். ஆனால் அவரது விளக்கம் இன்று போதவே போதாது. நாடாளுமன்ற அமைப்பு ஆட்சி முறையில் மூன்று பிரதான அம்சங்கள் உள்ளன.

நாடாளுமன்ற அரசாங்கம் என்பது பரம்பரை ஆட்சியை மறுக்கிறது. ஒருவரும் தன்னை பரம்பரை ஆட்சியாளர் என்று சொல்லிக் கொள்ள முடியாது. ஆட்சி செய்ய விரும்புகிற மக்களால் அவ்வப்போது ஆட்சியாளர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். மக்களின் அனுமதியை அவர்கள் பெற வேண்டும். நாடாளுமன்ற ஆட்சி முறையில் வாரிசு ஆட்சிக்கு இடமே இல்லை.

இரண்டாவது - எந்தச் சட்டமும், மக்களைப் பற்றிய எந்த நடவடிக்கையும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவரின் ஆலோசனையின் அடிப்படையிலேயே அமைய வேண்டும். தனக்கு எல்லாம் தெரியும் என்று எந்தத் தனிநபரும் சொல்லிக் கொண்டு சட்டங்கள் செய்து ஆட்சி நடத்த முடியாது. நாடாளுமன்றத்தில் உள்ள மக்கள் பிரதிநிதிகளே சட்டமியற்ற முடியும். எவரின் பெயரால் சட்டம் பிரகடனப் படுத்தப் படுகிறதோ அவருக்கு இப்பிரதிநிதிகள்தான் ஆலோசனை வழங்குவர். மன்னராட்சி அமைப்பு முறைக்கும் ஜனநாயக ஆட்சி முறைக்கும் இடையில் உள்ள வேறுபாடு இதுதான். மன்னராட்சியின் போது, மன்னரின் பேரால் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன. ஜனநாயகத்திலோ மக்கள் பற்றிய விஷயங்கள் அரசுத் தலைவரின் பெயரால் நடத்தப்படுகின்றன. ஆனால் ஆட்சியை நடத்துவது சட்டங்களும் நிர்வாக அதிகாரமும் தான். அரசுத் தலைவர் என்பது வெறும் பெயருக்குத்தான். அவர் ஒரு அடையாளம் மட்டுமே. அவர் புனிதம் வாய்ந்த தெய்வம். அவர் வணங்கப்படலாம். நாட்டின் அரசாங்க நிர்வாகத்தை நடத்த அவர் அனுமதிக்கப்படவில்லை. ஆனால், அவருடைய பெயரால் மக்கள் பிரதிநிதிகள் அரசு நிர்வாகம் நடத்தப்படுகிறது.

மூன்றாவதும் கடைசியுமாக, நாடாளுமன்ற அரசாங்கத்தில், அரசுத் தலைவருக்கு ஆலோசனை சொல்ல விரும்பும் நபர்கள் ஒரு குறிப்பிட்ட காலத்தில் மீண்டும் தங்கள் மீது மக்கள் வைத்துள்ள நம்பிக்கையை புதுப்பித்துக் கொள்ள வேண்டும். முன்னர் பிரிட்டனில் நாடாளுமன்றத்திற்கு ஏழாண்டுகளுக்கு ஒரு முறை தேர்தல் நடத்தப் பட்டு வந்தது. சார்டிஸ்டுகள் இதற்கு எதிராக கிளர்ச்சி செய்தனர். ஒவ்வொரு ஆண்டும் தேர்தல் நடத்த வேண்டும் என்று அவர்கள் விரும்பினர். இந்தக் கிளர்ச்சிக்குப் பின்னுள்ள நோக்கம் புகழத் தக்கது. ஆண்டு தோறும் தேர்தல் நடத்த முடிந்தால் அதுவே மக்கள் நலனுக்கு மிகவும் ஏற்றதாக இருக்கும். ஆனால் நாடாளுமன்ற தேர்தல்கள் மிகவும் செலவு பிடிப்பவை. எனவே ஒரு சமரசம் செய்து கொள்ளப் பட்டு ஐந்தாண்டுக்கு ஒருமுறை தேர்தல் நடத்துவது என்று ஒத்துக் கொள்ளப்பட்டது. சட்ட மன்ற உறுப்பினர்களும் அமைச்சர் களும் மக்களிடம் திரும்பிச் சென்று அவர்களிடம் நம்பிக்கை வாக்குப் பெறுவதற்கு அது ஒரு பொறுப்பான கால அளவு என்று நிர்ணயம் செய்யப்பட்டது.

இதுவும் போதாது. நாடாளுமன்ற அரசாங்கம் என்பது வாதம் மூலம் நிர்வாகம் என்பதைவிட இன்னும் மேலானது. நாடாளுமன்ற ஆட்சிமுறை என்பது இரண்டு பிரதான தூண்களின் மீது நிற்கிறது. அரசு இயந்திரம் வேலை செய்வதற்கு உந்து சக்திகள் இவைதான். 1. எதிர்க்கட்சி. 2. சுதந்திரமான நேர்மையான தேர்தல்கள் என்பவையே அவை.

கடந்த 20, 30 வருடங்களாக ஒரேயொரு கட்சிக்கு நாம் பழகிவிட்டோம். நாடாளுமன்ற ஜனநாயகம் நல்லமுறையில் நடை பெறுவதற்கு எதிர்கட்சி தேவை என்பதை நாம் மறந்து விட்டோம். எதிர்க்கட்சி என்பது ஒரு கேடு என்று நமக்கு சொல்கிறார்கள். இதில் கூட கடந்த கால வரலாறு நமக்கு என்ன போதிக்கிறது என்பதை மறந்து விட்டோம். வேதங்களுக்கும் ஸ்மிருதிகளுக்கும் விளக்கம் சொல்ல நிபந்த்காராக்கள் இருக்கின்றனர். பூர்வ பட்ச என்ற பிரச்சினையின் ஒரு பக்கம் என்ற விஷயத்தில் தொடங்கி ஸ்லோகங் களுக்கும் சூத்திரங்களுக்கும் விளக்கம் தருகின்றனர். நாம் எழுப்புகிற கேள்வி சுலபமான கேள்வி என்று இதன் மூலம் அவர்கள் காட்டு கிறார்கள். சர்ச்சை, விவாதம், சந்தேகம் ஆகியவற்றைக் கொண்டதே அந்தக் கேள்வி. பின்னர் 'அதிகாரம்' என்ற ஒன்றின் மூலம் இரண்டு

"பட்சங்"களையும் அவர்கள் விமர்சிக்கிறார்கள். இறுதியாக 'சித்தாந்தம்' என்கிற அவர்களது முடிவைத் தெரிவிக்கின்றனர். இதிலிருந்து நமது பண்டைய போதகர்கள் அனைவரும் இரண்டு கட்சி ஆட்சி முறையில் நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பது விளங்கும்.

ஒரு பிரச்சினைக்கு இரண்டு பக்கங்கள் உண்டு என்றால், மக்கள் மற்றொரு பக்கத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பது நாடாளுமன்ற ஜனநாயக அமைப்பில்ஒரு முக்கிய அம்சம் ஆகும். எனவே செயல்படும் ஒரு எதிர்க்கட்சி அவசியமாகிறது. சுதந்திரமான அரசியல் வாழ்க்கைக்கு எதிர்க்கட்சியே ஒரு திறவு கோல். எந்த ஜனநாயகமும் எதிர்க்கட்சி இல்லாமல் இயங்க முடியாது. நாடாளுமன்ற அமைப்பின் முன்னோடிகளான பிரிட்டனும் கனடாவும் இந்த முக்கியத்துவத்தை உணர்ந்து, எதிர்க்கட்சித் தலைவருக்கு அரசாங்கம் சம்பளம் வழங்குகிறது. எதிர்க்கட்சி ஒரு முக்கியமான அம்சம் என்று அவர்கள் அங்கீகரித்துள்ளனர். அரசாங்கத்தைப் போலவே எதிர்க்கட்சியும் உயிர்ப்புடன் இருக்க வேண்டும் என்று இந்நாடுகளின் மக்கள் விரும்புகிறார்கள், அரசாங்கம் உண்மைகளை மறைத்து விடலாம், ஒரு தலைப்பட்சமாக அது பிரச்சாரம் செய்யலாம். இத்தகைய போக்குகளை எதிர்த்துப் போராட அம்மக்களுக்கு வசதிகள் உண்டு.

இப்பொழுது ஒரு கேள்வி எழுகிறது. ஆட்சியிலிருக்கும் கட்சி ஒரு எதிர்க்கட்சி உருவாவதை விரும்புமா? காங்கிரசுக்கு எதிர்க்கட்சி தேவையில்லை. எல்லாவிதக் கருத்துக்களையும் கொண்டவர்களை ஒரே குடையின் கீழ் கொண்டு வர காங்கிரஸ் முயல்கிறது. இந்த நாட்டின் அரசியல் வாழ்வில் இது ஒரு விரும்பத்தக்க போக்கா என்று நான் உங்களிடம் கேட்க விரும்புகிறேன். சுதந்திரமான நேர்மையான தேர்தல்கள் என்ற மற்றொரு தூணின் மீதும் நாடாளுமன்ற ஜனநாயகம் நிற்கிறது. ஒரு வகுப்பாரிடமிருந்து மற்றொரு வகுப்புக்கு அமைதியான முறையில், ரத்தம் சிந்தாமல் அதிகார மாற்றம் செய்வதற்கு நேர்மையான சுதந்திரமான தேர்தல்கள் தேவை. பழைய காலங்களில் நாட்டின் மன்னர் இறந்து போனால், குறைந்த பட்சம் ஒரு கொலையாவது அரண்மனையில் நிகழும். அரண்மனையில் புரட்சி ஏற்பட்டு கொலைகள் நடக்கும். அதன்பின் புதிய மன்னர் ஆட்சியதிகாரத்தைத் தன் கைகளில் எடுத்துக் கொள்வார். இதுதான்

இந்திய வரலாறாக இருந்து வந்துள்ளது. தேர்தல்கள் முற்றிலும் சுதந்திரமாகவும் நேர்மையுடனும் நடத்தப்பட வேண்டும். சட்ட மன்றத்திற்கு யாரை அனுப்புவது என்பதை மக்களே தேர்ந்தெடுக்கும் படி விட்டுவிட வேண்டும்.

சுதந்திரமான, நேர்மையான தேர்தல்கள் எப்படி இருக்க வேண்டும்? இந்த நாட்டின் அரசியல் வாழ்வில் பெரும் தொழிலதி பர்கள் முக்கிய பங்கு வகிக்க முயல்கிறார்கள் என்பதை நாம் கண்டு கொள்ளாமல் இருக்க முடியாது. பெரு முதலாளிகள் காங்கிரஸ் கட்சிக்கு அளித்து வரும் நன்கொடைகள் வெகு ஆபத்தானவை. பணம் படைத்தவர்கள் கட்சிகளுக்குத் தேர்தல் நிதி கொடுப்பதன் மூலம் தேர்தலில் செல்வாக்குச் செலுத்தினால் அதன் விளைவு என்னவாகும்? அவர்கள் பொருளாதார ரீதியில் ஆதரவு தருகின்ற கட்சி ஆட்சிக்கு வந்தால் என்ன நடக்கும்? அவர்கள் தமக்கு வேண்டிய சலுகைகளைப் பெற முயல்வார்கள். அமலிலுள்ள சட்டங்களைத் திருத்தியோ, அல்லது தமது நலன்களுக்கு ஏற்ப புதிய சட்டங்கள் இயற்றச் செய்தோ தமது விருப்பத்தை இவர்கள் நிறைவேற்றிக் கொள்ள முயல்வார்கள்.

இத்தகைய நிலைமைகளில், நாடாளுமன்ற ஜனநாயக முறை நாட்டுக்கு ஏதும் நன்மை செய்யும் என்று நம்பிக்கை ஏற்படுமா என்று நான் உங்களிடம் கேட்கிறேன். மகாபாரதத்தைப் படித்துப் பாருங்கள் என்று நான் கேட்டுக் கொள்வேன். பாண்டவர்களுக்கும் கவுரவர் களுக்கும் நடந்த சண்டையின் போது பீஷ்மரும் துரோணரும் கவுரவர்கள் பக்கம் இருந்தனர். பாண்டவர்கள் நீதியின் பக்கம் நின்றனர். கவுரவர்கள் அநீதி செய்தனர். பீஷ்மர் இதை ஒத்துக் கொண்டார், பாண்டவர்கள் நீதியின் பக்கம் நிற்கிறார்கள் என்று பீஷ்மர் கருதினால், அவர் ஏன் கவுரவர்களை ஆதரிக்கிறார் என்று ஒருவர் கேட்டார். என்றென்றும் நினைவில் நிற்கத்தக்க வார்த்தைகளை அப்போது பீஷ்மர் சொன்னார்:

“தின்ற உப்புக்கு நன்றியுடையவனாக நான் இருக்க வேண்டும். நான் கவுரவர்கள் அளித்த உணவைச் சாப்பிட்டதால், அவர்கள் அநீதியின் பக்கம் நின்றாலும் அவர்கள் பக்கம் நான் நிற்கத்தான் வேண்டும்.”

அதேதான் இன்னும் நடக்கிறது. பணியாக்கள், மார்வாடிகள் மற்றும் பிற கோடீஸ்வரர்களிடமிருந்து காங்கிரஸ் பண உதவி பெறுகிறது. அவர்கள் அளிக்கும் உணவை காங்கிரஸ் சாப்பிடுகிறது. எனவே அவர்கள், பெரு முதலாளிகளின் பக்கம் எல்லா முக்கிய கட்டங்களின் போதும் காங்கிரஸ் நிற்கும்.

தமக்கும் தம்மைச் சார்ந்திருப்பவர்களுக்கும் உணவளிக்கிற கட்சிக்கு ஆதரவாக அரசாங்க ஊழியர்கள் செயல்படுவதையும் நாம் பார்க்கின்றோம். பாரதிய ஜனசங்கத்தைச் சேர்ந்த சியாம பிரசாத் முகர்ஜியே, கட்சியின் துவக்க விழாக் கூட்டத்தில் பேசும் போது, அரசாங்க ஊழியர்கள் காங்கிரசுக்கு உதவி செய்கிறார்கள், இதன் மூலம் சுதந்திரமான நேர்மையான தேர்தல்கள் நடக்காமல் செய்கிறார்கள் என்று வெளிப்படையாகவே குற்றம் சாட்டினார். நண்பர்களே, இத்தகைய சூழ்நிலைமைகளில் நாடாளுமன்ற ஜனநாயகம் வெற்றிபெறும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

இந்த நாட்டில் நாடாளுமன்ற ஜனநாயகம் தோற்றுப் போனால் - நான் குறிப்பிட்ட காரணங்களால் அது தோற்றுத்தான் போகும் - அதன் விளைவாக கலகம், அராஜகம், கம்யூனிசம் தோன்றும். வாரிசு வழி அதிகாரத்தை மக்கள் சகித்துக் கொள்ள மாட்டார்கள் என்று ஆட்சியிலுள்ளவர்கள் புரிந்து கொள்ளவில்லை என்றால் இந்த நாடு அழிந்தே போகும். கம்யூனிசம் இங்கு வரலாம். ரஷ்யா நமது நாட்டில் மேலாண்மை பெற்று தனிமனித சுதந்திரத்தை நசுக்கி, நமது சுதந்திரத்தையும் ஒழித்து விடும். அல்லது, ஆட்சியதிகாரத்திலிருக்கும் கட்சி தோல்வியடைந்தால் அதிருப்தியுற்ற ஒரு பிரிவு மக்கள் கலகத்தில் ஈடுபடலாம், அராஜகம் அப்போது தலைதூக்கும்.

நண்பர்களே, உறுதியாக நடக்க விருக்கும் சம்பவங்களைக் கருத்தில் கொண்டு, இந்த நாட்டில் நடாளுமன்ற ஜனநாயகம் தழைக்க வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், பேச்சு, சிந்தனை, செயல்பாடு ஆகியவற்றில் நமக்கு சுதந்திரம் வேண்டும் என்று நீங்கள் உறுதி செய்து கொள்ள விரும்பினால், நமது சுதந்திரத்தை நாம் பேணிக் காக்க வேண்டும் என்றால், ஒருவன் தனது பிறப்புரிமையான தனி நபர் சுதந்திரத்தை நாம் போற்றிவர விரும்பினால், மாணவர்களாகிய

நீங்கள், நாட்டின் அறிவார்ந்த வகுப்பினரான நீங்கள், இந்த நாடாளு மன்ற ஜனநாயகத்தை அதன் உண்மையான அர்த்தத்தில் கட்டிக் காப்பதற்காக உங்களால் ஆன அனைத்தையும் செய்ய வேண்டும்.

நண்பர்களே, நான் முடித்து விட்டேன். இந்த மாபெரும் சபையில் பேசுவதற்கு வாய்ப்பளித்த உங்களுக்கு நான் நன்றி கூறுகிறேன்![1]

---

1. லோக்ராஜ்யா. டாக்டர் பாபா சாஹேப் அம்பேத்கர் சிறப்புப் பதிப்பு ஏப்.16, 1981, பக். 45,48.

# (126)

# உண்மையான நமது பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படவில்லையானால் சுதந்திரம் என்பது கேலிக்கூத்தாகிவிடும்

*1951 அக். 28 ஆம் தேதி லூதியானாவில் நடந்த தேர்தல் கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் நிகழ்த்திய உரை:*

*அவர் சொன்னார்:*

*அன்புள்ள சகோதர, சகோதரிகளே!*

*லூதியானானவுக்கு வந்து நமது மக்களிடம் நான் பேசுவது இதுவே முதல் தடவை. முன்னர் பலமுறை இந்த நகரத்துக்கு விஜயம் செய்ய நான் திட்டமிட்டேன். என்றாலும் தவிர்க்க முடியாத சில காரணங்களால் அது இயலாமல் போய்விட்டது. நீங்களெல்லாம் இங்கு கூடியிருக்கும் நாள் எத்தகைய புனிதமான நாள்!*

*இன்னும் சில மாதங்களில் தேர்தல்கள் நடக்கவிருக்கின்றன என்றும் பல கட்சிகள் அதில் பங்கு கொள்ளப் போகின்றன என்றும் உங்களுக்குத் தெரியும், ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனமும் தேர்தல்களில் தனது வேட்பாளர்களை நிறுத்துகிறது. மாகாண சட்டசபைகளிலும் மத்திய நாடாளுமன்றத்திலும் தாழ்த்தப்பட்ட வகுப்பாருக்காக ஒதுக்கப்பட்டுள்ள அனைத்துத் தொகுதிகளிலும் நாம் போட்டியிடுவோம். இதே போல, நமக்குக் கணிசமான வாக்குகள் உள்ள சில பொதுத் தொகுதிகளிலும் நாம் போட்டி யிடுவோம். நமது வேட்பாளர்கள் வெற்றியடைவார்கள் என்று நான் நம்புகிறேன். நமது மக்கள் அனைவரும் நம் வேட்பாளருக்கு வாக்களித்தால் நாம் வெற்றி பெறுவது நிச்சயம். நமது வெற்றியில் எனக்கு நம்பிக்கை உண்டு. எனவே, தாழ்த்தப்பட்ட மக்கள் அனைவரும் ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனம் நிறுத்துகிற வேட்பாளருக்கே வாக்களிக்க வேண்டும். இந்த அமைப்புதான் எல்லா தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் மற்ற பின்தங்கிய வகுப்பாருக்கும் உள்ள ஒரே அமைப்பு ஆகும்.*

பிரிட்டிஷார் இந்தியாவை ஆண்டு வந்த போது நம்மையெல்லாம் எப்படி ஏமாற்றி வந்தார்கள் என்று நான் உங்களிடம் சொல்ல விரும்புகிறேன். ஆயிரக் கணக்கான மைல்களுக்கு அப்பாலிலிருந்து வந்த அவர்கள் ஹிந்துஸ்தானத்தில் அவர்களது ராஜ்யத்தை எவ்வாறு ஸ்தாபிக்க முடிந்தது? கிழக்கிந்திய கம்பெனி முதலில் இந்தியாவிற்கு வந்த போது அவர்களின் நோக்கம் வியாபாரம் மட்டுமே. மெல்ல மெல்ல தமது ராஜ்யத்தை இங்கு நிறுவ வேண்டும் என்ற ஆசை அவர்களிடம் வளர்ந்தது. இந்த நோக்கத்தை அவர்களால் எப்படி அடைய முடிந்தது? அவர்களுக்குத் தனியாக ஒரு ராணுவம் இங்கு இருக்கவில்லை. தமது சொந்த ராணுவமே இல்லாமல் ராஜாக்களையும் மகாராஜாக்களையும் எப்படி அவர்கள் அடக்கினார்கள் என்பதை எவராலும் சொல்ல முடியவில்லை. இந்தக் கேள்விக்கு நான் இப்போது பதில் சொல்லப் போகிறேன். அரிஜன வகுப்பு மக்களின் உதவியால்தான் பிரிட்டிஷார் இந்தியாவின் ஆட்சியாளர்கள் ஆனார்கள். தீண்டத்தகாதவர்கள் என்றழைக்கப் பட்ட தாழ்த்தப்பட்டவர்கள் கல்வியறிவற்றவர்களாக இருந்தார்கள். இவர்களை ஜாதி இந்துக்கள் கேவலமாக நடத்தினர். அவர்களின் வாழ்க்கைக்கு வழி ஏதும் இல்லை. எப்போதும் இந்த ஜாதி இந்துக்களின் தயவில்தான் அவர்கள் இருந்தனர். எனவே பிரிட்டிஷாருடன் சேர்ந்து பிழைப்பு நடத்துவதைத் தவிர அவர்களுக்கு வேறு வழியிருக்கவில்லை. நடந்தது நல்லதுதான் என்று உங்களுக்கு நான் சொல்லவில்லை. வேறொரு விஷயத்தை அழுத்திக் கூற விரும்புகிறேன். நாம் யாருக்கு உதவி செய்து அவர்கள் ஆட்சிக்கு வந்தார்களோ அவர்களும் நம்மை அப்படியே நடத்தினர். நமது மக்கள் இந்த பிரிட்டிஷாருக்காக அவர்களது ராணுவத்தில் சேவை செய்து செத்து மடிந்தார்கள். ஆனால் பதிலுக்கு நமக்குக் கிடைத்தது என்ன? இதில் பயனடைந்தது யார்? அரிஜன வகுப்பு மக்கள் பிரிட்டிஷாருக்கு உதவி செய்த போதிலும் பிராமணர்களும் மற்ற உயர் ஜாதியினரும்தான் பலன்களை அனுபவித்தனர். பிரிட்டிஷார் அவர்களின் குழந்தைகளுக்குக் கல்வி அளித்தனர், அவர்களுக்கு எல்லா நிதியுதவிகளும் செய்தனர். நமது மக்களுக்கு அவர்கள் ஒன்றுமே செய்யவில்லை. இதன் விளைவு என்ன? உயர் ஜாதியினர் நல்வாழ்வு வாழ்ந்தனர். தாழ்த்தப்பட்டோர் ஒதுக்கப்பட்டு முன்பு போலவே இன்னல் பட்டனர்.

இதன் காரணமாகத்தான் இன்றுவரை வசதிபடைத்த அரிஜனக் குடும்பங்களே எங்கும் இல்லை. இவர்களின் குழந்தைகள் கல்வி

கற்கவில்லை. அவர்கள் பொதுவாகப் பின்தங்கியே உள்ளனர். இதன் விளைவாக, ராணுவம், போலீஸ், நிர்வாகம் ஆகிய அனைத்துத் துறைகளிலும் உள்ள முக்கிய பதவிகளில் உயர் ஜாதியினரே இன்றைக்கும் இருந்து வருகின்றனர். நமது மக்கள் மேம்பாட்டுக்காக பிரிட்டிஷார் ஏதாவது செய்திருக்க வேண்டும். ஆனால் அவர்கள் நமக்காக எதுவுமே செய்யவில்லை. 1857ல் கலகம் நடந்ததல்லவா? அதற்குக் காரணம் என்ன? பிரிட்டிஷார் நமது மக்களுக்காக எதுவுமே செய்யாததால் ராணுவத்திலிருந்த நம்மவர்கள் புரட்சி செய்ய வேண்டியதாயிற்று. கலகம் ஒடுக்கப்பட்ட பின்னர், நமது மக்கள்தான் பிரிட்டிஷாருக்கு எதிராக புரட்சி செய்தனர் என்று கண்டு ராணுவத்தில் மேற்கொண்டு நமது மக்களைச் சேர்ப்பதை நிறுத்தி விட்டனர். இதற்கு பதிலாக இந்துக்களும் ராஜபுத்திரர்களும் ராணுவத்தில் சேர்க்கப்பட்டனர். இவ்வாறு நமது மக்களுக்குக் கிடைத்து வந்த பிரதான வருமான ஆதாரமும் நின்று போயிற்று.1947 ல் பிரிட்டிஷார் இந்தியாவை விட்டு வெளியேறும்போது, நமது நிலைமைகள் அவர்கள் இங்கு வருவதற்கு முன் எப்படி இருந்தனவோ அப்படியே இன்னும் இருந்தன. பிரிட்டிஷார் அதிகார மாற்றம் செய்த போது உயர்ஜாதியினரிடமே அதிகாரத்தை வழங்கினார்கள். நமக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. இந்தக் கொடுங்கோலர்களின் தயவில் நாம் விடப்பட்டோம்.

மற்ற மக்கள் தாழ்த்தப்பட்டோரை எப்படி நடத்தினர் என்பதை இதன் மூலம் நீங்கள் தெரிந்து கொள்ளலாம். இன்றுவரை நாம் மிகவும் பின்தங்கியுள்ள நிலையில், இருப்பதற்கு இதுதான் காரணம். நான் உங்களிடம் ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். நீங்கள் இன்னும் பின்தங்கிய நிலையிலேயே இருக்க விரும்புகிறீர்களா? இந்த உயர் ஜாதி மக்களின் அடிமைகளாகவே இருக்க விரும்புகிறீர்களா?

ஆரியர்கள் இந்தியாவுக்கு வந்தபோது வர்ணாசிரம முறை அமலுக்கு வந்தது, மனிதர்களின் பிறப்பைப் பொருத்தே சமுதாயத்தில் அவர்களின் தகுதி நிர்ணயிக்கப்பட்டது. சிலரை பிராமணர்கள் என்றனர். சிலரை க்ஷத்திரியர்கள் என்றனர். சிலரை வைசியர்கள் என்றும் இன்னும் சிலரை சூத்திரர்கள் என்றும் அழைத்தனர். மற்றவர்களை 'தீண்டத்தகாதவர்கள் என்று கூறினர். இந்தப் பிரிவுகளின் படி தீண்டத் தகாதவர்கள் மிகவும் துண்டிக்கப்பட்டு விட்டனர். ஒரு ஜாதி இந்துவுக்கும் ஒரு தீண்டத் தகாதவனுக்கும்

இருக்கிற உறவு பாதத்துக்கும் பாத அணிக்கும் இடையில் உள்ள உறவுதான். நாம் வீட்டிற்குள் நுழைகிற போது செருப்பை வெளியே கழற்றி வைத்து விடுகிறோம். இதே போல 'அச்சுத்' துகள் சமூகத்திற்கு வெளியில் வைக்கப்பட்டு அவர்களுக்கு ஒரு உரிமையையும் தரப் படுவதில்லை. நூற்றுக் கணக்கான வருடங்களாக நாம் இவ்வாறு நடத்தப்பட்டு வந்திருக்கிறோம். இன்றும்கூட சமுதாய ரீதியில், பொருளாதார ரீதியில், அரசியல் ரீதியில் நாம் இன்னல்பட்டு வருகிறோம்.

பலப்பல ஆண்டுகளாக நாம் நடத்திய போராட்டத்தின் விளைவாக, சில அரசியல் உரிமைகள் நமக்குக் கிடைத்துள்ளன. இது அரசியல் சாசனத்திலும் சேர்க்கப்பட்டுள்ளது. 20 ஆண்டு காலமாக மகாத்மா காந்தியுடன் நான் போராடி வந்துள்ளேன். நமக்கு எந்த தனி உரிமையும் தர அவர் மறுத்தார். தீண்டத்தகாதவர்களுக்கு என்று தனி உரிமைகள் வழங்கினால் அவர்கள் ஒருபோதும் இந்து அமைப்புக்குள் வர முடியாது என்பது அவரது வாதம், நமக்கு தனிவாக்குத் தொகுதி வேண்டும் என்ற கோரிக்கையை வட்டமேசை மாநாட்டிலும் மகாத்மா காந்திஜி எதிர்த்தார். பலப்பல ஆண்டுகள் நடந்த போராட் டத்துக்குப் பின் சில அரசியல் உரிமைகள் நமக்குக் கிட்டியுள்ளன, தாழ்த்தப்பட்டோருக்காக ஒதுக்கப்பட்டுள்ள இடங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டு நமது பிரதிநிதிகள் மாகாண சட்டசபை களுக்கும் மத்திய நாடாளுமன்றத்திற்கும் இப்போது போக முடியும்.

இந்த உரிமைகளை தட்டிப் பறிப்பதற்கு பல கட்சிகள் ஆர்வமுடன் காத்திருக்கின்றன. நமது ஓட்டுக்களை பெற்று, நமது மக்களுக்காக ஒதுக்கப்பட்டிருக்கிற தொகுதிகளிலிருந்து தமது அடியாட்களை சட்ட மன்றங்களுக்கு அனுப்ப அவர்கள் முயல் கின்றனர். அவர்கள் நோக்கங்களை நீங்கள் சுலபமாகப் புரிந்து கொள்ளலாம். தாழ்த்தப்பட்ட மக்கள் அவர்கள் இப்போது இருக்கிற நிலையிலேயே இருக்க வேண்டும் என்று இக்கட்சிகள் விரும்பு கின்றன. அவர்களுக்கு அதிகாரம் எதுவும் கிடைத்துவிடக் கூடாது, அப்போதுதான் நமது மக்கள் இப்போது செய்துவருகிற அடிமை வேலை நடக்கும் என்று அவர்கள் நினைக்கின்றனர். எனவே உங்கள் வாக்குகளை செலுத்தும் போது வெகு எச்சரிக்கையுடன் இருங்கள். நமது உண்மையான பிரதிநிதிகள்தான் நமது வாக்குகளைப் பெற்று வெற்றி பெற வேண்டும், வேறு எவரும் அல்ல என்பதை உறுதி

செய்யுங்கள். அரசியல் சாசனத்தில் உங்களுக்குக் கொடுக்கப் பட்டுள்ள உரிமைகள் அப்பொழுதுதான் பாதுகாக்கப்படும்.

நமது உண்மையான பிரதிநிதிகள் சட்ட மன்றங்களுக்கும் நாடாளுமன்றத்துக்கும், தேர்ந்தெடுக்கப்படவில்லை என்றால் நாம் சுதந்திரத்தை அனுபவிக்க முடியாது. அது உயர் ஜாதி வகுப்பினரின் சுதந்திரமாக இருக்கும், நம்முடைய சுதந்திரம் ஆகாது. ஆனால் நமது உண்மையான பிரதிநிதிகள் நாடாளுமன்றத்திலும் மாகாண சட்டசபைகளிலும் இருந்தால் நமது உரிமைகளுக்காக அவர்கள் போராடி நம் குறைகளைக் களைய முடியும். அதன்பின்தான் நமது பிள்ளைகள் சரியான கல்வி கற்றுக் கொள்ள முடியும். அதன்பின் தான் நமது வறுமை ஒழியும், அதன் பின்தான் எல்லாத் துறைகளிலும் நமக்கு சம பங்கு கிடைக்கும். அரசியல் சாசனத்தில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு சிறப்புச் சலுகைகள் வழங்கப்பட்டுள்ள போதிலும் மற்ற கட்சிகள் - குறிப்பாக காங்கிரஸ் கட்சி - அவற்றில் தலையிடுகின்றன. தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக ஒதுக்கப்பட்டுள்ள தொகுதிகளில் தமது அடியாட்களை அவர்கள் நிறுத்துகிறார்கள். காங்கிரஸ் டிக்கட்டில் போட்டியிட்டு வெற்றி பெறுபவர்கள் நமது நலன்களை எப்படிப் பாதுகாப்பர்? அவர்களது எஜமானின் விருப்பப்படிதானே அவர்கள் செயல்பட வேண்டும்? அவர்கள் நமக்காக என்ன செய்ய முடியும்?

தாழ்த்தப்பட்டோருக்காக ஒதுக்கப்பட்ட தொகுதிகளிலிருந்து காங்கிரஸ் டிக்கட்டில் போட்டியிட்டு வெற்றி பெற்றவர்கள் பற்றி நான் உங்களுக்குச் சொல்லப் போகிறேன். நாடாளுமன்றத்தில் அத்தகையவர்கள் சுமார் 30 பேர் இருக்கிறார்கள். இந்த 30 பேரிலும் ஒருவராவது, தாழ்த்தப்பட்டோரின் குறைகள் பற்றி ஒரு கேள்வி கூட எழுப்பியதில்லை. எப்பொழுதாவது யாராவது அதுபற்றிக் கேட்டால் கூட சபாநாயகர் தாராள மனம் கொண்டு கேள்வியை அனுமதித்து விட்டால், அலுவல் திட்டத்தில் சேர்க்கப்பட்டு விட்டால், பின்னர் காங்கிரசின் பிரதான கொறடா சம்பந்தப்பட்ட உறுப்பினரிடம் சென்று, கேள்வி அச்சிடப்படுவதற்கு முன்னால் அதனைத் திரும்பப் பெற்றுக் கொள்ள வற்புறுத்துவார். ஒரு வேளை கேள்வி அச்சிடப்பட்டு விட்டால் பிரதம கொறடா உறுப்பினரை கேள்விக்கு பதிலளிக்கும் நேரத்தில் சபையை விட்டு வெளியேறி விடும்படி கூறுவார். எனவே, கேள்வி எழுப்பிய உறுப்பினரே சபையில் இல்லாததால் அப்பிரச்சினை பற்றி விவாதம் நடக்காது.

பட்ஜெட் பற்றி ஒரு மாத காலம் நாடாளுமன்றத்தில் விவாதம் நடக்கிறது. அந்த நேரத்தில், எந்த உறுப்பினரும் பட்ஜெட் பற்றிப் பேசலாம், தனது வகுப்பினருக்கோ கட்சியினருக்கோ இன்னின்ன சலுகைகள் தேவை என்று சுட்டிக் காட்டலாம். எத்தனையோ தேவையற்ற திட்டங்களுக்குப் பணம் வாரியிறைக்கப் படுகிறது, அதே நேரத்தில் முக்கியமான திட்டங்கள் புறக்கணிக்கப் படுகின்றன என்று சுட்டிக் காட்டலாம். இந்த நான்கு வருடங்களில் ஒருவராவது வெட்டுத் தீர்மானம் கொண்டுவரவில்லை. இவற்றுக்கெல்லாம் காங்கிரஸ்கட்சியின் கட்டுப்பாடுதான் காரணம். ஒரு மெம்பர் தீர்மானம் ஒன்றைக் கொண்டு வர வேண்டுமானால், அவர் தலைமைக் கொறடாவின் அனுமதியை, அது கொண்டு வரப்படுவதற்கு நீண்ட நேரம் முன்பே பெற்றுவிட வேண்டும். இந்த நான்கு ஆண்டுகளில் இந்த உறுப்பினர்கள் ஒரு மசோதா கூட கொண்டு வரவில்லை. அரசியல் சாசனத்தில் வழங்கப்பட்டுள்ள சலுகைகளை தீண்டத்தகாதவர்கள், இந்திய கிறிஸ்தவர்கள், ஆங்கிலோ இந்தியர்கள் எவ்வாறுதான் பெற முடியும்? அவர்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ள தொகுதிகளைத்தான் இவர்களின் எதிரிகள் காங்கிரஸ் சீட் மூலம் பெற்று விடுகிறார்களே!

ஒரு விஷயத்தை நான் உங்களுக்குத் தெளிவு படுத்த வேண்டும். நீங்கள் காங்கிரஸ் கட்சிக்கு வாக்களித்தால் நீங்கள் எப்போதும் துன்புறுவீர்கள். காங்கிரஸ் கட்சி மூலம் வெற்றி பெறும் நமது சமூகத்தினர் மாகாண சட்டசபைகளிலும் நாடாளுமன்றத்திலும் மௌனம் சாதிப்பார்கள். தாழ்த்தப்பட்டோரின் ஒரே அமைப்பான ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்துப் பிரதிநிதிகள் தேர்தலில் வெற்றி பெற்றால் தான் நமது நலன்கள் பாதுகாக்கப்படும். காங்கிரஸ் கட்சியின் மூலம் நமது குறைகள் தீர்க்கப் படுவதற்கு வாய்ப்பு ஏதாவது இருந்திருந்தால், நான் காங்கிரசை விட்டு வெளியேறியே இருக்க மாட்டேன். காங்கிரசிடம் ஏராளமான பணம் இருக்கிறது, அது பணத்தின் மூலம் வாக்குகளை விலைக்கு வாங்கிவிடும் என்று எனக்குத் தெரியும். எனவே நீங்கள் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். நான் விரும்பியிருந்தால் எப்போதும் நான் காங்கிரஸ் அரசில் இருந்திருக்கலாம், அங்கு எனக்கு நல்ல பதவியும் கிடைத்திருக்கும். எனக்குச் சுயநலம் மேலோங்கி எனது சமூகத்தைப் பற்றி நான் அக்கறைப்படாமல் இருந்திருந்தால் நான் அவ்வாறு செய்திருக்க முடியும். எனக்கு ஏதாவது லைசன்சோ, பர்மிட்டோ தேவைப்

பட்டிருந்தால் நான் அங்கேயே இருந்திருப்பேன். லைசன்சும், பர்மிட்டும் வேண்டுகிற மனிதன் தனது சமுகத்துக்குத் தீங்கிழைத்து அவற்றைப் பெற முடியும். அவன் தனக்காக எதையும் செய்து கொள்வான். தனது சமூகத்துக்காக ஒன்றும் செய்யான். நான் காங்கிரஸ் அரசில் இருந்த காலத்தில் இந்த அனுபவத்தைத்தான் கற்றுக் கொண்டேன்.

பிரிட்டிஷார் விரும்பியிருந்தால் நமது சமூகத்துக்கு நன்மைகள் செய்திருக்கலாம். அவர்களும் நம்மை ஏமாற்றி விட்டார்கள். அந்தக் காலம் முடிந்து போயிற்று, அடுத்த கட்டம் தொடங்கியுள்ளது. இந்த நேரத்தில் நாம் எச்சரிக்கையாக இருக்காமல் நமது கண்களை மூடிக் கொண்டால் நாம் அழிந்து போவோம். இனிவரும் புதிய தலை முறையினர் உங்களைப் போல துன்பப்படாமலிருக்க வேண்டும் என்று நீங்கள் விரும்பினால் நீங்கள் அதற்காக இப்பொழுதே ஏதாவது செய்தாக வேண்டும். நீங்கள் ஒரு மரக்கன்றை நட்டால் அதன் பழங்கள் சில காலம் கழித்தே உங்களுக்கு கிடைக்கும். நாடாளு மன்றத்திலும் மாகாண சட்ட சபைகளிலும் நமக்குத் தரப்பட்டுள்ள ஒதுக்கீடுகள் வெறும் பத்து ஆண்டுகளுக்குத்தான் என்று உங்களுக்கு கோடிட்டுக் காட்ட விரும்புகிறேன். தீண்டாமை இந்நாட்டில் ஒழியும் வரை இந்த ஒதுக்கீடு நீடிக்க வேண்டும் என்று நான் கோரிய போதும், காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த நமது வகுப்பு உறுப்பினர்களே என்னை எதிர்த்தார்கள். மேல் ஜாதிக்காரர்களைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். ஒன்றுமில்லாமல் போவதற்கு பதிலாக ஏதாவது கிடைத்தால் கூடப் பரவாயில்லை என்று நினைத்த நான் 10 வருடங் களாவது ஒதுக்கீடுகள் இருக்கட்டும் என்று கருதி நமது மக்களுக்காக சிறு சலுகை பெற்றேன்.

ரிசர்வேஷன் முறை இரண்டு தேர்தல்களுக்கு மட்டும்தான். அந்தக் காலம் வரைதான் காங்கிரசார் உங்களிடம் வந்து வாக்குக் கேட்பார்கள். இவ்வாறு இந்த பத்து ஆண்டுகளும் ஓடி விடும். அதன் பின் இந்த ஒதுக்கீட்டுக் காலத்தை நீட்டிக்கும்படி கோருவதற்கு ஒருவரும் இருக்க மாட்டார்கள். காங்கிரஸ்காரர்கள் உங்களிடம் வந்து காங்கிரஸ் கட்சியின் சார்பில் நீங்கள் போட்டியிடுங்கள் என்று கேட்டுக் கொள்வார்களா? நிச்சயமாக இல்லை. அவர்கள் அவ்வளவு முட்டாள்கள் அல்ல. அவர்கள் உங்களை முட்டாளாக்க முயல் வார்கள். இன்று காங்கிரஸ் டிக்கட் கோரும் நபர்களின் முகத்தில்

காங்கிரசார் காரித்துப்புவர். இந்தப் பிரச்சினை பற்றி நீங்கள் நன்கு சிந்தித்து எந்த வேட்பாளருக்கு வாக்களிப்பது என்று முடிவு செய்யுங்கள்.

ஒவ்வொரு கட்சிக்கும் ஒன்று அதிகாரம் இருக்க வேண்டும் அல்லது பணம் இருக்க வேண்டும். நமது வகுப்பினரிடம் பணமும் இல்லை, அதிகாரமும் இல்லை. உயர்ஜாதி வகுப்பினரின் தயவில் சிறு தொகையினராக நாம் கிராமங்களில் வசித்து வருகிறோம். மார்வாடிகள், பனியாக்கள் போன்றோர் வலிமையுள்ளவர்கள் அல்லர், ஆனால் அவர்களிடம் பணம் இருக்கிறது. பணத்தைக் கொண்டு அவர்களால் எதையும் வாங்க முடியும். எனவே உங்களுக்காக நீங்களே ஏதாவது செய்து கொள்ள இதுவே நல்ல தருணம். நீங்கள் ஒற்றுமையுடன் இருந்தால், உங்கள் நலன்களைக் காப்பதற்காக சட்டமன்றங்களுக்கும் நாடாளுமன்றத்திற்கும் உங்கள் சமூகத்தினரை அனுப்புவதற்கு ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேள னத்தின் பதாகையின் கீழ் நீங்கள் ஒன்றுபட்டு நிற்க வேண்டும். ஒவ்வொரு 'அச்சூத்'தும் தங்கள் உண்மைப் பிரதிநிதியைத் தேர்வு செய்ய சம்மேளனத்துக்கு உதவ வேண்டும். உங்களிடம் வாக்குக் கோரி பல கட்சிகள் வரும், அதனால் வழிதவறிப் போகாதீர்கள்.

சில தினங்களுக்கு முன்பு பண்டிட் நேரு இங்கு வந்திருந்தார். இரண்டு மூன்று லட்சம் பேர் அவர் பேச்சைக் கேட்கக் கூடினர் என்று கூறப்பட்டது. உண்மையில் அங்கு எத்தனைபேர் வந்திருந்தனர் என்று எனக்குத் தெரியாது. நேற்று நான் ஜலந்தருக்கு விஜயம் செய்த போது இரண்டு லட்சத்துக்கும் மேற்பட்டோர் அங்கு கூடினர். ஆனால் பத்திரிகைகள் அங்கு 30 ஆயிரம் பேரே கூடியிருந்தனர் என்று செய்தி வெளியிட்டன. நான் என்ன சொல்ல விரும்புகிறேன் என்றால், ஏதாவது ஒரு காங்கிரஸ் மாநாடு நடந்தால், அங்கு கூடியிருந்தோர் மிக சொற்பமே என்ற போதும், பத்திரிகைகள் அங்கு மாபெரும் கூட்டம் கூடியிருந்தததாகச் செய்தி வெளியிடுகின்றன. ஐந்து பேர் இருந்தால் ஐம்பதுபேர் என்றும், ஐம்பதுபேர் இருந்தால் ஐநூறுபேர் என்றும், ஐநூறு பேர் என்றால் ஐந்தாயிரம் பேர் என்றும், ஐந்தாயிரம் பேர் கூடி யிருந்தால் ஐந்து லட்சம் பேர் என்றும் செய்தி போடுகிறார்கள். பத்திரிகையாளர்களின் விமர்சனங்களுக்கு நான் கவலைப்படுவ தில்லை.

அவர்கள் எல்லோரும் எத்தனையோ ஆண்டுகளாக என்னை விமர்சித்து வருகிறார்கள். என்றாலும் உடல் ரீதியாகவும் உள்ள ரீதியாகவும் நான் முன்னேறியே இருக்கிறேன். எனக்கு பெரிய கூட்டங்கள் வர வேண்டும் என்பதில்லை. ஜாதி இந்துக்கள் புரியும் கொடுமைகளை எதிர்த்துப் போராடுவதற்கு நமது மக்கள் அமைப்பு ரீதியில் ஒன்றுபட வேண்டும் என்பதே எனது அவா. நான் கூறுவதை நமது மக்கள் கேட்க வேண்டும் என்று விரும்புகிறேன். அவர்கள் பெரும் கூட்டமாகக் கூடுகிறார்களா, சிறு கூட்டமாகக் கூடுகிறார்களா என்பது முக்கியமல்ல.

ஒவ்வொரு அரசியல் கட்சியும் தனது தேர்தல் அறிக்கையை வெளியிட்டுள்ளது. ஒவ்வொரு கட்சியும், தான் ஆட்சிக்கு வந்தால் இதைச் செய்வேன் அதைச் செய்வேன் என்று சொல்லுகிறது. ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனமும் ஏராளமான பக்கங்கள் கொண்ட தேர்தல் அறிக்கையை வெளியிட்டது. ஆனால் இதனை சாதாரண மக்கள் புரிந்து கொள்ள மாட்டார்கள் என்பதைத் தெரிந்து கொண்டு, அறிக்கையைத் திருத்தி சுருக்கமாக வெளியிட்டுள்ளது. இந்த தேர்தல் அறிக்கை நாளாவட்டத்தில் சிறுத்து வரும், ஒரு காலத்தில் இத்தகைய அறிக்கையே இல்லாமல் போகும்.

இத்தகைய கொள்கை விளக்க அறிக்கையில் என்ன இருக்க வேண்டும், என்ன இருக்கக் கூடாது என்று கூற விரும்புகிறேன். எல்லா அரசியல் கட்சிகளுக்கும் நான் சவால் விடுவேன், இந்த கொள்கை விளக்க அறிக்கைகளில் எது சிறந்தது என்று அறிய ஒரு கமிட்டி அமையுங்கள், அப்போது நமது அறிக்கையே அனைத்திலும் சிறந்தது என்பது விளங்கும். எல்லாக் கட்சிகளும் மக்களுக்கு பல வாக்குறுதிகள் அளிக்கின்றன. வாக்குக் கொடுப்பது சுலபம், ஆனால் நடைமுறைப் படுத்துவது கடினம். ஒரு வாக்குறுதி கொடுப்பது போலவே ஒரு நூறு வாக்குறுதிகளும் நீங்கள் தரலாம். வாக்குறுதிகளின் பட்டியலாக கொள்கை விளக்க அறிக்கைகள் அமைத்து விடலாகாது. நாட்டின் முன்னுள்ள பிரச்சினைகள் என்னென்ன என்று பார்த்து அவற்றைச் சமாளிக்கிற வழிகளைச் சொல்ல வேண்டும். இத்தகைய விஷயங்கள் ஏதாவது காங்கிரஸ் கட்சியின் தேர்தல் அறிக்கையில் உண்டா? காங்கிரஸ் அறிக்கையில் அழுத்தமாகக் கூறப்பட்டுள்ள விஷயம் முஸ்லீம் பிரச்சினை மட்டுமே. இதைத் தவிர வேறு பிரச்சினையே நாட்டில் இல்லை என்கிறார்கள். இதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்

களா? இந்தியா ஒன்றுபட்டிருந்து பாகிஸ்தான் பிரியாத காலத்திலேயே முஸ்லீம் பிரச்சினை இருந்தது. அப்போது கூட இந்த ஒன்று மட்டுமே பிரச்சினையாக இருக்கவில்லை.

முஸ்லீம்கள் பாகிஸ்தானுக்குக் குடி பெயர்ந்து சென்று விட்டனர். இந்துக்களும், சீக்கியர்களும் இதர சிறுபான்மையினரும் தான் இந்தியாவில் உள்ளனர். இந்தியாவில் இப்போது முஸ்லீம் பிரச்சினையா உள்ளது? முஸ்லீம்களை விட பத்து மடங்கு ஏழ்மை யாகவும் பின்தங்கியும் உள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக எதுவுமே செய்ய வேண்டுவதில்லை என்று நீங்கள் ஒத்துக் கொள்வீர்களா? தாழ்த்தப்பட்டோர், அட்டவணை வகுப்பினர் குற்றப் பரம்பரையினர் ஆகியோர் உள்ளனர். இவர்களுக்கு அரசாங்கம் விசேஷ சலுகைகள் கொடுக்க வேண்டும். ஆனால் காங்கிரசாரோ, மக்கள் வகுப்பு உணர்வு கொண்டவர்களாக இருக்கக் கூடாது என்று கூறி, இந்தப் பின் தங்கிய வகுப்பினர் விசேஷ சலுகைகள் எதுவும் கோரக்கூடாது என்கின்றனர்.

இந்தியாவிலுள்ள வறுமை மற்றொரு பிரச்சினை. இந்திய மக்கள் மிகவும் ஏழ்மையானவர்கள். இவர்களில் 90 சதவீதத்தினருக்கு சரியான உணவு கிடைப்பதில்லை. அணிவதற்கு ஆடைகளும் அவர்களுக்குக் கிடையாது. கோடிக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள உணவுப் பொருட்கள் ஆண்டு தோறும் இறக்குமதி செய்யப் படுகின்றன. வெளியிலிருந்து உணவுப் பொருட்கள் கூட இறக்குமதி செய்து அதற்காக ஏராளமாக செவிட்டால் சமாளிப்பது எப்படி? ஆனால், இவை பற்றியெல்லாம் காங்கிரசார் கவலைப்படுவதில்லை. அவர்களுக்கு தீர்க்க வேண்டியது ஒரே பிரச்சினைகள்தான், அதுதான் முஸ்லீம் பிரச்சினை.

ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் சார்பில் நாம் வேட்பா ளர்களை நிறுத்துகிறோம். தாழ்த்தப்பட்ட மக்கள் அனைவரும் பின் தங்கிய வகுப்பினர். ஒவ்வொரு பின்தங்கிய வகுப்பாருக்கும் பிரதிநிதித்துவம் கொடுக்கப்படும். ஒருவரும் இதுபற்றி அச்சப்படத் தேவையில்லை. 'சாமர்' களும் 'பங்கி' களும் எல்லோரும் சமமே. நாம் அனைவரும் ஒன்றுபட்டிருக்க வேண்டும். நம்மில் சிலர் தனித்தன்மை பெற்றுள்ளதாக கூறக் கூடாது. நான் பெண்கள் ஆண்கள் அனைவரையும் கேட்டுக் கொள்வது என்னவென்றால், தேர்தல்

நாளன்று தமது வேலைகள் அனைத்தையும் ஒதுக்கி வைத்துவிட்டு வாக்குச் சாவடிக்குச் சென்று வாக்களியுங்கள். ஏற்கனவே, வெற்றிபெற நமது வாக்குகள் மட்டும் போதாது. இந்த நிலையில் நம்மவர்கள் வாக்குச் சாவடிக்குச் செல்லவில்லை என்றால் நிலைமை மோசமாகும். நமக்குப் பிரதிநிதித்துவம் கிடைக்காமல் போகும். வாக்களிப்பு தினம் தாழ்த்தப்பட்டோருக்கு வாழ்வா சாவா என்பதை நிர்ணயிக்கும் தினம்.

இந்தத் தேர்தலில் பங்கு பெறுகிற ஒவ்வொரு கட்சிக்கும் ஒரு சின்னம் ஒதுக்கப்பட்டுள்ளது. நமது சம்மேளனத்தின் சின்னம் 'யானை', இந்தச் சின்னத்தை நான் தேர்ந்தெடுத்தற்குக் காரணம் நமது மக்களிடையில் குழப்பம் வரக்கூடாது என்பதற்காகத்தான். மாடுகள், குதிரைகள், கழுதைகள் ஆகியவற்றைத் தங்களது சின்னமாக சில கட்சிகள் கொண்டிருக்கின்றன. இவற்றிலிருந்து வேறுபடுத்திக் காட்டத்தான் யானையைத் தேர்வு செய்துள்ளேன்.

இந்தத் தடவை ஒட்டு மொத்த வாக்களிப்பு முறை இல்லை. எனவே நமது வாக்குகள் அனைத்தையும் ஒருவருக்கே போட வேண்டியதில்லை. வினியோக முறை வாக்களிப்பு உள்ளதால் நமது வாக்குகளை இரு வேட்பாளர்களுக்கு வினியோகிக்கலாம். தாழ்த்தப் பட்டோருக்கு ஒதுக்கப்பட்டுள்ள தொகுதிகளில் ஒவ்வொருவருக்கும் இரண்டு வாக்குகள் இருக்கும். ஒரு வாக்கு பொதுத் தொகுதிக்கும் மற்றொன்று ஒதுங்கீட்டுத் தொகுதிக்கும். ஒதுக்கீடு செய்யப்பட்ட தொகுதியில் நிற்கிற நமது வேட்பாளருக்கு நீங்கள் இரு வாக்கு களையும் அளிக்க முடியாது. நீங்கள் நமது வேட்பாளருக்கு ஒரு ஓட்டுதான் போட முடியும், மற்றொரு ஓட்டை பொது சீட்டில் நிற்கிற வேட்பாளர் ஒருவருக்குப் போட வேண்டும். எனவே தமது இரண்டாவது வாக்கை நமக்கு அளிக்க விரும்பும் கட்சியுடன் நாம் கூட்டுச் சேர்ந்து கொள்ள வேண்டும். எந்தக் கட்சியுடன் கூட்டுச் சேரலாம் என்பதை நாம் இன்னும் முடிவு செய்யவில்லை. பல கட்சிகள் நம்முடன் கூட்டு சேருவதற்கு முன்வந்துள்ளன. ஆனால் இன்னும் இறுதி முடிவு எடுக்கவில்லை. பேச்சுவார்த்தைகள் நடைபெறுகின்றன. எந்தக் கட்சியுடனும் சேருவதற்கு முன்னால் நாம் பலமுறை யோசிக்க வேண்டும். ஆனால் ஏதேனும் ஒரு கட்சியுடன் கூட்டு சேர்ந்தே ஆக வேண்டும்.

இறுதியாக ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். தொலை தூரப் பிரதேசங்களான டெல்லி, பஞ்சாப், உ.பி. ஆகிய இடங்களி லிருந்து ஆயிரக் கணக்கானோர் தங்களது குறைகளைக்கூற என்னிடம் வருகிறார்கள். ஜமீன்தார்களால் அடித்து உதைக்கப்பட்ட தாக சிலர் புகார் செய்கின்றனர். அதிகாரிகளிடம் முறையிட்டால், இவர்களுக்கு எதிராகவே அவர்கள் செயல்படுகிறார்கள். ஏனென்றால் அதிகாரத்தில் இருப்பவர்கள் உயர் ஜாதியினர். இத்தகைய புகார்கள் ஏராளமாக வருகின்றன. இவற்றையெல்லாம் நான் ஒருவனாக கவனிக்க முடியாது. பலர் ஏமாற்றத்துடன் வீடு திரும்புகிறார்கள். எனவே டில்லியில் ஒரு கட்டிடம் கட்டி அங்கு ஒரு வழக்கறிஞரை அமர்த்த முடிவு செய்துள்ளேன். அவர் புகார் தருபவரிடம் விசாரித்து அவர் என்ன செய்ய வேண்டும் என்று ஆலோசனை வழங்குவார்.

நாம் ஏற்கனவே ஒரு சிறு இடம் டில்லியில் வாங்கியுள்ளோம். அங்கு ஒரு கட்டிடம் கட்டுவோம். அது சம்மேளனத்தின் தலைமையகமாக இருக்கும். வெளியிலிருந்து வருபவர்களை அங்கு உபசரித்து அவர்களின் குறைகள் கவனமாகக் கேட்கப்படும். மிக அவசியமான இந்தக் கட்டிடத்தைக் கட்டுவதற்கு நம்மிடம் போதுமான பணம் இல்லை. எனவே உங்களால் முடிந்த தொகையை இதற்காக நன்கொடையாக அளிக்கும்படி நான் கேட்டுக் கொள்கிறேன். இந்த வழியில் நமது நோக்கத்தை அடைய முடியும். பாவா துலா தாஸ் பஞ்சாப் முழுதும் சுற்றுப் பயணம் செய்து இந்தக் கட்டிடத்துக்கு நிதி திரட்டுவார். இந்தப் புனிதக் காரியத்துக்காக தாராளமாய் வழங்கும்படி உங்களிடம் நான் மீண்டும் கேட்டுக் கொள்கிறேன்.

---

# (127)

# தமது குறிக்கோள்களை எட்டுவதற்காக ஏழைகள் தனியாக ஒன்று சேர வேண்டும்

*1951 ஆம் ஆண்டு அக்டோபர் 20ல் பஞ்சாபிலுள்ள பாடியாலா நகரில் ஒரு தேர்தல் கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் பேசினார். அவர் சொன்னார்:*

அன்புக்குரிய சகோதரர்களே!

எனது நண்பர் திரு. ராஜ்போஜ் கூறியபடி நான் இன்று உடல் நலமின்றி இருக்கிறேன். ரோடு வழியாக நீண்ட தூரம் பயணம் செய்ய நேர்ந்ததால் நலக்குறைவு ஏற்பட்டுள்ளது. எனவே நான் நீண்ட நேரம் பேச இயலாது. எனினும் சில முக்கியப் பிரச்சினைகள் பற்றிக் கூற வேண்டும்.

இந்தியாவிலுள்ள ஒவ்வொருவரும் இன்று தேர்தல் வேலைகளில் மும்முரமாக ஈடுபட்டுள்ளனர். பல அரசியல்வாதிகளும் கட்சிகளும் தேர்தல் வேலையைத் தவிர வேறெதுவும் செய்வதில்லை. தேர்தலில் மக்கள் காட்டும் ஆர்வம் கண்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். ஒரு கட்சிக்கோ தனிநபருக்கோ வாக்களிப்பதற்கு முன்பாக நாம் பல முறை யோசிக்க வேண்டும் இப்போது தேர்ந்தெடுக்கப்படுகிற நபர்கள் ஐந்து வருடங்களுக்குப் பதவி வகிப்பார்கள். நாம் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். அரசியல் கட்சிகளுக்கும் தனிப்பட்டவர்களுக்கும் இது வாழ்வா, சாவா என்ற பிரச்சினை. தேர்தலில் ஒவ்வொரு கட்சியும் நபரும் பங்கெடுத்துக்கொள்ள வேண்டும். ஏனென்றால் அவர்களின் வாழ்வே ஆபத்தில் இருக்கிறது.

இந்தியாவில் இப்போது காங்கிரஸ் கட்சிதான் ஆட்சியதிகாரத்தில் உள்ளது என்று உங்களுக்குத் தெரியும். அக்கட்சிக்கு நாற்பது வயது. அதன் கைகளில் எராளமான நிதி உள்ளது. கடந்த நான்கைந்து ஆண்டுகளாக இந்தியாவை காங்கிரஸ்தான் ஆண்டு வருகிறது. இப்போது காங்கிரஸ் கட்சிக்கு வாக்களிக்கும்படி காங்கிரசார் கோருகிறார்கள். கடந்த காலத்தில் காங்கிரஸ் செய்த

சாதனைகளையோ, எதிர்காலத்தில் அது சாதிக்கப் போவதையோ வேறெந்தக் கட்சியும் அரசாங்கத்தை ஏற்று சாதிக்க முடியாது என்று அவர்கள் கூறுகிறார்கள், காங்கிரஸ் ஆட்சியின் கீழ்தான் இந்தியா வளமை பெறும் என்கிறார்கள் அவர்கள். எனவே அனைத்து மக்களும் அவர்கள் எந்த மதத்தை, ஜாதியை, இனத்தைச் சேர்ந்த வராயினும் காங்கிரஸ் வேட்பாளருக்கே வாக்களித்து அவர்கள் வெற்றி பெறச் செய்ய வேண்டும் என்றும் கோருகிறார்கள். இப்படித் தான் காங்கிரசார் பிரசாரம் செய்கின்றனர்.

காங்கிரசிடம் பிரச்சார வசதிகள் ஏராளமாக உள்ளன என்பது உண்மை. காங்கிரஸ் வேட்பாளர் ஒவ்வொருவருக்கும் நூறு ஏஜெண்டுகளுக்கும் மேலாக உள்ளனர். காங்கிரஸ் தலைமையகத்தில், அரசாங்க உத்தியோகஸ்தர்கள் போல ஏராளமானோர் பணி புரிகின்றனர். ஒவ்வொரு கிளையிலும் அவர்களுக்கு அலுவலகம் உண்டு. இதேல்லாம் பண வசதியால் வருபவை. இந்தியாவிலேயே மிகப்பெரிய பணக்காரக் கட்சி காங்கிரஸ்தான். பணத்தைக் கொண்டு விரும்பியதை யெல்லாம் அதனால் அடைய முடிகிறது. பண மில்லாமல் ஒரு கட்சியும் வளர முடியாது. பிரச்சாரத்தின் மூலமாக மக்கள் மனத்தைப் பெருமளவுக்கு மாற்றியுள்ள காங்கிரஸ் இதன் மூலம் என்ன வெல்லாமோ செய்ய முயல்கிறது.

காங்கிரஸ் இப்போது நான்கு வருடங்களாகப் பதவியில் இருக்கிறது. அது மக்களுக்கு என்ன செய்திருக்கிறது என்று உங்களுக்கு தெரியும். உணவோ, உடையோ, இருப்பிடமோ ஏழைகளுக்கு இல்லை. இந்த நான்கு ஆண்டுகளில் காங்கிரஸ் எதுவும் செய்யவில்லை. அது மீண்டும் பதவிக்கு வந்தால் உருப்படியாக ஏதும் செய்யும் என்று எப்படி நம்புவது? ஊழல்கள், உறவினர்களுக்குச் சலுகைகள், கள்ள மார்க்கெட் ஆகிய தொழில்கள் காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் செழிப்படைந்துள்ளன. பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலத்தில் இருந்ததைவிட ஊழலும் மற்ற கேடுகளும் காங்கிரசார் காலத்தில் பல மடங்கு அதிகரித்துள்ளன. நாம் பட்டினியால் செத்துக் கொண்டிருக்கிறோம். பணக்காரர்களுக்கும் ஏழைக்கும் இடையில் உள்ள வித்தியாசம் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் போன்றது. இந்த ஐந்தாண்டு காலத்தில் இந்த வேறுபாட்டைக் களைய காங்கிரசால் முடியவில்லை என்றால், இதை எதிர் காலத்தில் எப்படிச் செய்வார்கள்? பணக்காரர்கள் மேலும்

பணக்காரர்களாகிறார்கள்; ஏழைகளோ மேலும் ஏழ்மை யடைகிறார்கள். இந்த விஷயத்தில் காங்கிரஸ் செய்துள்ளது என்ன?

காங்கிரஸ் அரசு ஊழல் அரசு. காங்கிரஸ் மந்திரிகள் லஞ்சம் வாங்குகிறார்கள். கள்ள மார்க்கெட் மூலம் அவர்கள் பணம் பெறுகிறார்கள். அவர்கள் ஊழல் நிறைந்தவர்கள். நமது மந்திரிகள் இவ்வாறு ஒழுங்கங்கெட்டவர்களாக இருந்தால், அவர்களுக்குக் கீழே வேலை செய்பவர்கள் எப்படி இருப்பார்கள் என்று நீங்கள் ஊகித்துக் கொள்ளலாம். முதலாளிகளின் கீழுள்ள தொழிலாளிகளின் நிலை என்னவாகும்? நமது பிரதம மந்திரி இந்த விஷயத்தில் ஏதாவது செய்து லஞ்சம், ஊழல், கள்ள மார்க்கெட் ஆகியவற்றை ஒரேயடியாக ஒழிப்பார் என்று எதிர்ப்பார்த்தேன்.

ஆனால் பண்டிட் நேருவோ அகில இந்திய காங்கிரஸ் மாநாட்டில் தலைமையுரை ஆற்றுகையில், ஊழல் மற்ற நாடுகளிலும் மேலோங்கியுள்ளது. என்றும் எனவே இது இந்தியாவிலும் இருக்கிறது என்பதற்காக நாம் அதிகம் கவலைப்பட வேண்டிய தில்லை என்றும் பேசுகிறார். மற்ற நாடுகளுடன் ஒப்பிடுகையில் ஊழலும், லஞ்சமும் நமது நாட்டில் மிகவும் குறைவே என்றும் அவர் கூறுகிறார். ஊழல் இங்கு சிறு அளவிலேயே இருக்கிறது என்று சொல்லி அதை ஊக்குவிக்கிற பிரதம மந்திரி அதை எப்படி ஒழிக்கப் போகிறார் என்று எனக்குத் தெரியவில்லை. அது சிறு அளவில் இருந்தாலும் அதனை ஒழித்துத்தானே ஆக வேண்டும். பிரதம மந்திரி இந்த வகையில் என்ன செய்திருக்கிறார்? மந்திரிகளும் அரசு உயர் அதிகாரிகளும் ஊழல் மிகுந்தவர்களாக இருந்தால் நாம் சும்மா யிருந்துவிட வேண்டுமா?

நான் இப்போது சொன்னவையெல்லாம் என்னுடைய விமர்சனம் அல்ல. காங்கிரசாரே காங்கிரசைப் பற்றிக் கூறுகிற விமர்சனம்தான் இது. மதராஸ் மாகாணத்தில் டி. பிரகாசம் சில காலம் பிரதமராக இருந்தார். அவர் பதவியை விட்டுப் போனபின் பதவியேற்ற ராஜே என்பவர், திரு. பிரகாசம் மீது சில புகார்கள் கூறினார். ஒரு விசாரணை நடத்தப்பட்ட போது அவர் லஞ்சம் பெற்று பெருந்தொகை சேர்த்துள்ளது தெரியவந்தது. அவர் ஆயிரக் கணக்கில் லைசென்சுகளும் பர்மிட்டுகளும் வழங்கினார். இதுவேதான் மத்திய பிரதேசத்திலும் நடந்தது. எத்தனையோ மந்திரிகள் லஞ்சம்

பெற்றுள்ளனர். எனினும் மந்திரி பதவியில் அவர்கள் தொடரு கின்றனர். அவர்கள் மீது எவரும் நடவடிக்கை எதுவும் எடுக்க வில்லை என்பது மட்டுமல்ல. அவர்கள் இச்செயலை ஊக்குவிக்கவும் செய்கிறார்கள்.

இந்த மந்திரிகளின் மீது புகார் கூறுகிறவர்களைச் சிறைக்கு அனுப்புகிறார்கள். பஞ்சாபில் நடப்பது என்ன? திரு. சச்சாரும் டாக்டர் பார்கவாவும் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொள்கிறார்கள். இருவருமே பஞ்சாபில் பிரதமர்களாக இருந்தவர்கள். ஒவ்வொருவரும் அடுத்தவர் மீது விசாரணை நடத்த வேண்டும் என்று கோருகிறார்கள். இருவருமே லஞ்சம் பெற்றவர்கள் என்பதை எவரும் மறுக்க முடியாது. அவர்கள் ஆட்சிக் காலத்தில் கள்ள மார்க்கெட்டை ஊக்குவித்தார்கள் என்பதும் உண்மை. எனினும் எந்தவித விசாரணையும் நடைபெறவில்லை. இப்போது மீண்டும் இருவரும் பிரதமர் பதவிக்கு முயல்கிறார்கள். வருகின்ற தேர்தல்களில் தம்மை பிரதமர் பதவிக்கு ஆதரவளிக்கும் அளவுள்ள எண்ணிக்கையில் தமது அணியிலிருந்து இருவருமே வேட்பாளர்களை நிறுத்தி வருகின்றனர். பஞ்சாபில் வேட்பு மனு தாக்கல் செய்ய நவம்பர் 5ஆம் தேதி கடைசி நாள். ஆனால் அக்டோபர் 29, 1951 வரை ஒரு வேட்பாளர் பட்டியலும் தயாராகவில்லை. இவர்களுக்கிடையிலுள்ள வேறுபாடுகள்தான் இதற்குக் காரணம். எப்போதாவது அவர்கள் ஒத்துப் போவார்களா என்பதும் சந்தேகமே.

ஒரு அமைச்சர் மீதோ, அதிகாரி மீதோ அவர் லஞ்சம் பெற்றுள் ளதாக ஒருவர் குற்றம் சுமத்தினால், ஒரு விசாரணை நடத்தி குற்றவாளியைத் தண்டிக்க வேண்டியது அரசின் கடமை. தனது அமைச்சர்களையும், அதிகாரிகளையும் இவ்வாறு லஞ்சம் வாங்கு வதற்கு அனுமதிக்கிற அரசு தொடரக் கூடாது. ஒவ்வொரு அரசாங்க மந்திரியும் பணம் பண்ணுவதாக இருந்தால் அரசாங்கம்தான் எதற்கு? இங்கிலாந்தில், காமன்ஸ் சபையில் ஒரு மந்திரி லஞ்சம் பெற்றதாக குற்றம் சாட்டப்பட்டது. அப்போது பிரதம மந்திரியாக இருந்த அட்லி உடனடியாக ஒரு விசாரணைக்கு உத்திரவு இட்டார். விசாரணைக் கமிஷன் தனது அறிக்கையில், இந்த மந்திரி தனது வியாபாரி நண்பர் ஒருவரிடமிருந்து சில துணிகள் பெற்றதாகவும் இதனை லஞ்சம்என்று கருத முடியாது என்றும் குறிப்பிட்டது. எனினும், அந்த வியாபாரியிடமிருந்து - அவர் நண்பரோ, எதிரியோ

- பணம் கொடுக்காமல் துணி பெற்றுக்கொண்டது தவறு என்று கூறி அமைச்சரவையிலிருந்து அந்த நபரை அட்லி நீக்கினார். ஆனால், நமது காங்கிரஸ் அரசாங்கமோ, மந்திரிகளின் மீது கூறப்பட்ட புகார்களை விசாரிப்பது தனது கடமை என்று கருதுவதில்லை, அவர்களை வெளியேற்றுவது பற்றிப் பேசவே தேவையில்லை.

காங்கிரசுக்கு வாக்களிக்கும் படியும் அவர்கள் மக்களின் நலனுக்காகப் பாடுபடுவார்கள் என்றும் காங்கிரஸ்காரர்கள் கூறுகிறார்கள். வறுமையை அவர்கள் ஒழித்துக்கட்டி, பின்தங்கிய வகுப்பினருக்கு உதவிசெய்து அவர்கள் சிறந்த வாழ்க்கைத் தரத்தை அடைவதற்கு உதவப் போவதாகவும் அவர்கள் சொல்கிறார்கள். நான் உங்களிடம் கேட்கிறேன்: கீரியும் பாம்பும் சேர்ந்து வாழுமா? எலி பூனையுடன் கூட்டுச் சேருமா? கீரியுடன் சேர்ந்து பாம்பு லாபம் அடையும் என்று கருதும் கீரி தவறு செய்யும். கீரி பாம்பை விழுங்கிவிடும். பூனையுடன் சேர்ந்து வாழ விரும்பும் எலியைப் பூனை கபளீகரம் செய்யும். கீரி பாம்புக்கு எதிரி, பூனை எலிக்கு எதிரி. இவைகள் கூட்டுக் கம்பெனி எதுவும் துவக்க முடியாது.

இதே போல, மனித உலகிலும் பலமுள்ளவர்கள் பலமில்லாதவர்கள் என்று இருக்கிறது. ஒருவர் மற்றவர்க்கு எதிரி. பலமில்லாதவர்களும் பலசாலிகளும் அமைதியாகச் சேர்ந்து வாழ முடியாது. கடன் கொடுப்பவரும் கடன் வாங்குபவரும் அமைதியுடன் சேர்ந்து வாழ முடியாது. கடன் கொடுப்பவன் கடன் பெறுபவனை தனது அனுகூலத்துக்காக சுரண்டுவான். ஏழைகளிடமிருந்து முடிந்த அளவு பிடுங்குவான் பனியா. ஏழைகளான தாழ்த்தப்பட்டோர் மீது பிராமணர்கள் ஒரு போதும் அனுதாபம் காட்ட மாட்டார்கள். உலகில் எத்தனையோ பிரிவுகள் ஒன்றுக்கொன்று எதிரிகளாக இருக்கின்றன. ஏழைப் பிரிவினர் இருக்கின்றனர். பணக்காரர்கள் உள்ளனர். ஏழைகளைச் சுரண்டுவதே பணக்காரர்களின் வேலை. நான் இப்போது உங்களிடம் ஒன்று கேட்கிறேன். இப்போது, பாம்பு, கீரி, பூனை, எலி ஆகியவற்றைக் கொண்டு நாம் ஒரு கட்சி அமைத்தால் பாம்பும் எலியும் அங்கு பாதுகாப்பாக இருக்குமா? கண்டிப்பாக இல்லை. அவர்கள் எப்போதும் அவர்களது எஜமானர்களின் தயவில் தான் இருந்து வரவேண்டும்.

இதே போல, தாழ்த்தப்பட்ட மக்கள் பிராமணர்களுடன் சேர்ந்து ஒரு கட்சி அமைத்தால், தாழ்த்தப்பட்ட மக்கள் அங்கு

பாதுகாப்பாக இருக்க முடியுமா? நான் எச்சரிக்கையுடன் இருக்குமாறு உங்களிடம் கூறி இது பற்றி நன்கு சிந்திக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். காங்கிரஸ் விரித்துள்ள வலையில் போய் சிக்கிக் கொள்ளாதீர்கள். உயர்ஜாதி வகுப்புகளுடன் சேர்ந்தால் மேன்மை யடையலாம் என்று நீங்கள் நினைத்தால் அது பெரும் தவறு.

உயர் ஜாதியினர் பின்தங்கிய வகுப்பினரை எப்போதும் நசுக்கியே வருவார்கள். உயர் ஜாதியினர் எல்லா சுதந்திரத்தையும் அனுபவிப்பர். நமது மக்களோ இருந்த இடத்திலேயே இருப்பர். செல்வந்தர்களின் கீழ் ஏழைகள் செழிக்க முடியாது. அவர்கள் தனியாக ஒன்றுபட்டுத்தான் தமது நோக்கத்தை எட்ட முடியும்.

தாழ்த்தப்பட்ட வகுப்பினர் நலன்களைப் பாதுகாப்பதற்காகவே ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனம் என்ற ஒரு அரசியல் கட்சியை நாம் துவக்கியுள்ளோம். நமது முயற்சிகளினால் நாம் சில சலுகைகளைப் பெற்றுள்ளோம். இது அரசியல் சாசனத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. மாகாண சட்ட சபைகளிலும் நாடாளு மன்றத்திலும் சில தொகுதிகளிலிருந்து தாழ்த்தப்பட்டோர் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட முடியும். சட்டசபைகளுக்கு நமது உண்மையான பிரதிநிதிகள் தேர்வு செய்யப்படவில்லையென்றால், அந்தத் தொகுதி களில் காங்கிரஸ்காரர்களின் பிரதிநிதிகள் தேர்வு செய்யப்பட்டால் நமது உரிமைகள் பாதுகாக்கப்பட மாட்டாது. காங்கிரஸ் சீட்டுகளில் வெற்றி பெறுகிற நமது தாழ்த்தப்பட்ட மக்கள், காங்கிரசின் கைக்கருவியாக இருந்து தமக்கு மட்டும் வசதிகள் செய்து கொள்வர்.

நேரு அமைச்சரவையிலிருந்த, இரண்டு அரிஜன வகுப்பு துணை மந்திரிகளை எடுத்துக்கொள்ளுங்கள். அவர்கள் காங்கிரஸ் சார்பில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். அவர்கள் உங்களுக்கு என்ன செய்துவிட்டார்கள்? நமது குழந்தைகளுக்குக் கல்வியறிவு இல்லை. நாம் முன்பு இருந்த மாதிரி இப்போதும் ஏழைகளாகத்தான் இருக்கிறோம். நமக்கு நிலம் எதுவும் இல்லை. கிராமங்களில் நம்மை மனிதர்களாகவே நடத்துவதில்லை. இந்த விஷயத்தில் அவர்கள் ஏதேனும் செய்துள்ளனரா? நான் பாட்டியாலாவிற்கு வருகிறேன் என்று தெரிந்தவுடனேயே எனக்கெதிராக அவர்கள் பிரச்சாரம் தொடங்கிவிட்டனர் என்று நான் அறிந்தேன். தாழ்த்தப்பட்டோரிடம் மாநாட்டைப் புறக்கணிக்கும்படி அவர்கள் கூறினார்கள். காங்கிரஸ்

சீட்டில் ஜெயித்தவர்கள் நமது சமூகத்துக்கு என்ன செய்கிறார்கள் என்று நீங்கள் தெரிந்து கொண்டிருப்பீர்கள். காங்கிரசிடமும் சீட்டுக் கேட்பார்கள் சுயநலமிகள். மற்றவர்கள் பற்றி சுயநலமிகள் யோசிக்கவே மாட்டார்கள். அவர்களிடமிருந்து எதையும் நீங்கள் எதிர்பார்க்க முடியாது.

காங்கிரசில் சேர்ந்துகொள்வது சுலபம். என்னுடைய தகுதிகளில் எனக்கு இது இன்னும் எளிது. தமக்கு லாபம் கிட்டும் என்று கருதுகிற எவரும் க்ாங்கிரசில் சேருவார். ஆனால் நாம் காங்கிரசில் சேருவதால் நமது வகுப்பினருக்கு லாபமில்லை என்றால் காங்கிரசில் போய்ச் சேருவதால் என்ன பயன்? ஆம், நான் காங்கிரஸ் அரசில் இருந்தேன். நான் ஒருபோதும் லஞ்சம் வாங்கியதில்லை. நியாயமற்ற வழியில் பணம் வசூலிக்க நான் என்றுமே முயன்ற தில்லை. என்மீது எந்தக் குற்றச்சாட்டும் இல்லை என்று நான் சவால் விட்டுக் கூற முடியும்.

காங்கிரஸ் கட்சி ஆட்சிக்கு வந்த பின்பு நமது நிலைமைகள் மேலும் மோசமாகியுள்ளன. நமது நிலைமைகளை மேம்படுத்து வதற்காக ஒரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. எல்லாம் சொல்லுகிறார்கள். ஆனால் நமது மக்களுக்காக இதுவரை ஒன்றுமே செய்ய இல்லை. நாம் மிகவும் தாழ்த்தப்பட்டுள்ளோம் என்பதையும் இந்த நிலை மேலும் தொடர்ந்தால் ஒரு புரட்சி தவிர்க்க முடியாததாகி விடும் என்பதையும் தெளிவுபடுத்த விரும்புகிறோம். நமது இந்து சகோதரர்கள் நம் மக்களுக்காக ஏதாவது நன்மை செய்வார்கள் என்று நம்பினோம், இந்த நம்பிக்கைகள் வீணாயின. சில தொகுதிகள் தாழ்த்தப்பட்டோருக்காக ஒதுக்கப்பட்டிருக் கின்றன. ஆனால் உண்மையான நமது பிரதிநிதிகள் அங்கிருந்து தேர்ந் தெடுக்கப்பட அனுமதிக்கப்படுவதில்லை. இந்த ரிசர்வேஷனும் 10 ஆண்டுகளுக்கு மட்டும்தான். அதன் பின் என்ன ஆகும்? 10 வருடங்களுக்குப் பிறகு மேல்சாதி வகுப்பினருடன் போட்டியிடும் அளவுக்கு நாம் செல்வந்தர்கள் ஆகிவிடுவோமா? உயர் ஜாதி வகுப்பினருக்கு நான் எச்சரிக்கை விடுக்க விரும்புகிறேன்; எமது நிலைமைகள் இப்படியே தொடர்ந்தால் நாம் வேறு வழிகளைக் கையாள வேண்டி வரும். ஒன்று அவர்கள் இங்கு வாழ வேண்டும் அல்லது நாம் இங்கு வாழ்வோம். இத்தகைய வாழ்க்கை எங்களுக்கு வெறுத்துப் போயிற்று. நாங்கள் இனியும் இதைச் சகித்துக்கொள்ள மாட்டோம்.

பிராமணர்களும் பனியாக்களும் சுந்திரப் போராட்டத்தில் உயிர் விட்டதில்லை. ஆனால் அவர்கள் அனைத்து ஆதாயங்களையும் இப்போது அனுபவித்து வருகின்றனர். இவர்களில் எத்தனை பேர் கடந்த போரில் மடிந்தனர் என்று நான் கேட்க விரும்புகிறேன். அவர்கள் எத்தனை பேர் ராணுவத்தில் இருக்கின்றனர். ராணுவத்திற்கு ஆள் எடுக்கும் போது நமது மக்கள்தான் அங்கு முதலில் போகிறார்கள். அவர்கள் தமது கடமைகளைச் செவ்வனே செய்வர். அப்படி அவர்கள் முன்னரும் செய்திருக்கிறார்கள். ஏழைகள் எப்போதும் செல்வந்தர்களைக் காத்து வந்துள்ளனர். ஆனால் செல்வந்தர்கள் ஒரு போதும் ஏழைகள் மீது அனுதாபம் காட்டியதில்லை. எனவே நான் இந்த உயர்ஜாதி மக்களை எச்சரிக்கிறேன் - பின்தங்கிய வகுப்பினரின் மேம்பாட்டிற்கு உடனடியாக ஏதாவது செய்யவில்லை என்றால் புரட்சி ஒன்று வந்தே தீரும்.

முப்பது நீண்ட ஆண்டுகளாக நமது மக்களுக்காக நான் போராடி வந்துள்ளேன். எனக்கு சுயநல நோக்கம் எதுவுமே இல்லை. நான் மந்திரி இல்லை. எனவே, எனக்கு ஒரு பதவி கொடுங்கள் என்று நான் கேட்டதும் இல்லை. எனக்காக எதுவும் நான் கோரியது இல்லை. காந்தி சுயராஜ்யம் கேட்டபோது நான் அவரை முற்றிலும் ஆதரிப்பதாகச் சொன்னேன். ஆனால் ஒரு கேள்வி அவரிடம் கேட்டேன், அவர் சொல்கிற சுயராஜ்யத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பாரின் நிலை என்ன? எமது மக்களுக்கு நல்ல தரமுள்ள வாழ்க்கைக் கிடைக்குமா? அவர்கள் கல்வி பெறுவார்களா? சுயராஜ்யத்தில் அவர்களுக்கு இன்னல்கள் இழைக்கப்படாமல் இருக்குமா? இன்று இந்திய மக்கள் சுதந்திரமானவர்கள். இதன் மூலம் நமக்குக் கிடைத்த பலன் என்ன? நாம் இன்று பின்தங்கி இருக்கிறோம் என்றால், இந்த உயர் ஜாதி வகுப்பினர்தான் அதற்குக் காரணம். அவர்கள் நம்மை சமுதாயத்திலிருந்து ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். அவர்கள் நம்மை ஒரு சிறிதும் முன்னேற விடுவதில்லை, காரணம் அவர்களுக்குச் செய்ய வேண்டிய சேவைகளை நம்மைத் தவிர யாரும் செய்ய மாட்டார்கள். நாம் அவர்களைப் போலவேதான் இருக்கிறோம். ஆயினும் அவர்களின் தர்மப்படி நாம் அவர்களுக்கு சேவை செய்யத்தான் இருக்கிறோம், எனவே நமக்கு சம உரிமை கிடையாது. நமக்கு முன்னால் மலை போன்ற தடைகளை அவர்கள் ஏற்படுத்துகிறார்கள். நாம் எந்த முன்னேற்றமும் அடைந்து விடக் கூடாது என்பதற்காகவே இத்தடைகள் ஏற்படுத்தப்படுகின்றன.

நமக்குச் சில உரிமைகள் கிடைத்துள்ளன. ஆனால் இந்த உரிமைகளை நாம் அனுபவிக்க முடியாதபடி செய்து கொண்டிருக் கிறார்கள். அரிஜன வகுப்பினருக்காக ஒதுக்கப்பட்டுள்ள தொகுதி களில் அவர்கள் தமது வேட்பாளர்களை நிறுத்துகிறார்கள். உயர் ஜாதியினருக்கு காங்கிரசின் பொதுத் தொகுதிச் சீட் கொடுக்கும் போது அவர்களிடம் ஏராளமான கேள்விகள் கேட்கிறார்கள். பின்னர் சுதந்திரப் போராட்டத்தில் அவர் எத்தனை அக்கறை கொண்டிருந்தார் என்று அறிய விரும்புவார்கள்.

இந்தக் கேள்விகளை, தாழ்த்தப்பட்ட மக்களுக்காக ஒதுக்கப் பட்டுள்ள தொகுதிகளில் காங்கிரஸ் சார்பில் போட்டியிட முன் வருப வர்களிடம் காங்கிரஸ்காரர்கள் இத்தகைய கேள்விகளை ஏன் கேட்பதில்லை என்று அறிய விரும்புகிறேன். அவர் தேசத்திற்காகச் செய்துள்ள சேவைகள் ஏன் கணக்கில் எடுத்துக்கொள்வதில்லை. பிரபலமற்ற, கல்வியற்றவர்களையே ஒதுக்கீடு தொகுதிகளின் வேட்பாளர்களாக ஏன் அவர்கள் தேர்வு செய்கிறார்கள். அவர்கள் தேர்வு பெறுவதற்கு வைக்கப்பட்டுள்ள தகுதிகள் என்ன? ஒத்து ழையாமை இயக்கத்தின் போது காங்கிரசுக்கு அவர்கள் உதவி னார்களா என்று கேட்க வேண்டும். மாறாக, ஏன் முட்டாள்களையே பொறுக்கி எடுக்கிறார்கள்.

ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் மூலம் நமது உண்மை யான பிரதிநிதிகளைச் சட்டமன்றக்ளுக்கு நாம் அனுப்பினால் நமது குறைகள் நிவர்த்தி செய்யப்படும். அவர்கள் நமக்காக எதுவும் செய்யா மலிருந்தால் நாம் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கலாம். நான் 30 வருடங்களாக அரசியலில் இருந்து வருகிறேன். நானும் காந்தியும் ஒரே சமயத்தில் அரசியலில் நுழைந்தோம். எட்டு ஆண்டுகள் நான் மந்திரியாக இருந்தேன். நான் விரும்பியிருந்தால் எனது வாழ்நாள் முழுவதும் மந்திரியாக இருந்திருக்க முடியும். ஆனால் எனக்கு சுயநல நோக்கம் எதுவும் இல்லை. எனவே, அரசாங்கத்தில் இருந்தபடி எனது சமூகத்துக்கு நான் எதுவும் செய்ய முடியாது என்று உணர்ந்து அரசாங்கத்திலிருந்து வெளியேறினேன். என்னுடைய வேண்டு கோளை ஏற்று நமது உண்மையான பிரதிநிதிகளை நீங்கள் தேர்ந்தெடுக்காவிட்டால் நாம் என்றென்றும் துன்பப்பட்டுக் கொண்டே இருக்க நேரிடும். இந்த ரிசர்வேஷன் முறை பத்து ஆண்டுகளுக்கு, அதாவது இரண்டு தேர்தல்களுக்குத்தான் என்று

நான் உங்களுக்கு நினைவூட்டுகிறேன். பத்து ஆண்டுகளுக்குப் பின்னர் இந்த ரிசர்வேஷன் முறை போய்விடும். தீண்டாமை இருக்கிறவரை ரிசர்வேஷன் முறையும் இருக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். ஆனால், காங்கிரஸ் டிக்கெட்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட நமது உறுப்பினர்களே என்னை மற்ற இந்து ஜாதி உறுப்பினர்களைப் போல எதிர்த்தார்கள். காங்கிரஸ் டிக்கட் கோருகிற இவர்களைப் பார்த்து நான் கேட்கிறேன், பத்து ஆண்டுகளுக்குப் பின் ரிசர்வேஷன் முறை இல்லாத போது, இவர்கள் என்ன செய்வார்கள்? பொதுத் தொகுதிகளில் காங்கிரசார் இவர்களைப் போட்டியிட அனுமதிப் பார்களா? இவர்களது முகத்தில் அவர்கள் காறித் துப்புவார்கள். கடந்த காலத்தில், இந்த உயர்ஜாதி மக்கள் நம்மைக் கீழ்த்தரமாக நடத்தினார்கள். ரிசர்வேஷன் போனபின் அதையே அவர்கள் மீண்டும் செய்வார்கள். இப்போது நம்மீது அனுதாபம் காட்டு கிறார்கள் என்றால் அதற்குக் காரணம் நம்மை அவர்கள் முட்டாள்களாக்கி, ரிசர்வ் தொகுதிகளில் அவர்களது "ஆமாம் சாமிகளை" தேர்வு செய்யத்தான். ரிசர்வேஷன் முறை ஒழிந்தபின் எச்சரிக்கையுடன் இருந்து ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் பதாகையின் கீழ் ஒன்றுபட வேண்டும். சம்மேளனத்தின் வேட்பாளர் களுக்கு வாக்களிப்பது உங்கள் கடமை. அவர்கள் உங்கள் நலனுக்காக உயிரையும் விடுவார்கள்.

இப்போது சில முக்கியமான விஷயங்களை நான் உங்களுக்குச் சொல்லப் போகிறேன். முதலாவாக, ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேள னத்தின் சின்னம் 'யானை'. இதே சின்னத்தை வேறொரு கட்சியும் தேர்வு செய்துள்ளதாக அறிகிறேன். நமது சின்னம் யானை மட்டுமே, ஆனால் அவர்கள் சின்னத்தில் யானையுடன் ஒரு இராட்டையும் இருக்கிறது. எனவே இந்த விஷயத்தில் எச்சரிக்கையாக இருங்கள். தவறு செய்துவிடாதீர்கள். நமது கட்சி சின்னம் இராட்டை இல்லாத வெறும் யானை மட்டுமே.

அடுத்ததாக, நாம் எண்ணிக்கையில் மிகவும் குறைவானவர்கள். நாம் வேட்பாளர்களை நிறுத்தினால் நம்மை மற்ற கட்சியினர், அவர்கள் பெரும்பான்மையாக இருப்பதால் தோற்கடித்து விடுவார்கள். நமது பலமோ கிராமங்களில் 10 சதவீதம்தான். இத்தனை குறைவான வாக்குகள் உள்ள நாம் வெற்றியடைய முடியாது என்று உங்களுக்குத் தெரியும். எனவே, ஒவ்வொரு பெண்ணும், ஆணும் தனது

வேலைகள் அனைத்தையும் ஒதுக்கி வைத்துவிட்டு வாக்குப் பதிவு அன்றைக்கு வாக்குச் சாவடிக்குச் சென்று தனது வாக்கைச் செலுத்த வேண்டும். இதன் பயனாக நமது வாக்குகளாவது நமக்குக் கிடைக்கும். ஒரு சில வாக்காளர்கள் வாக்குச் செலுத்தாவிட்டால்கூட நாம் தோல்வியடைய நேரலாம்.

மூன்றாவதாக, நாம் சிறுபான்மையினராக இருக்கிற காரணத்தால், நாம் வேறொரு கட்சியுடன் தேர்தலுக்காகக் கைக் கோர்த்துக் கொள்ள வேண்டும். வினியோக முறை வாக்களிப்பு இத்தடவை இருக்கும். ரிசர்வ் தொகுதிகளில் அனைவருக்கும் இரண்டு வாக்குகள் இருக்கும். பொதுத் தொகுதியில் நிற்பவருக்கு ஒரு வாக்கு, மற்றொரு வாக்கு ரிசர்வ் தொகுதிகளில் நிற்கிற வேட்பாளருக்கு. ஒரு வாக்கை ரிசர்வ் தொகுதியில் நிற்கிற வேட்பாளருக்குப் போடுவோம். நமது இரண்டாவது வாக்கை எந்தக் கட்சி தனது இரண்டாவது வாக்கை நமது வேட்பாளருக்கு அளிக்கிறதோ அந்தக் கட்சி வேட்பாளருக்கு நாம் அளிப்போம். நாம் எந்தக் கட்சியுடன் கூட்டணி வைக்கப் போகிறோம் என்பது இன்னும் முடிவு செய்யப்படவில்லை. பேச்சு வார்த்தைகள் நடந்து வருகின்றன. இன்னும் சில தினங்களில் முடிவு எடுக்கப்படும். ஆனால், ஒரு விஷயம் மட்டும் நிச்சயம். நாம் காங்கிரஸ் கட்சியுடன் எக்காரணம் கொண்டும் கூட்டு வைத்துக்கொள்ள மாட்டோம். நீங்கள் காங்கிரசைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை. அது தற்போது வலுவிழந்து விட்டது; அதன் உறுப்பினர்கள் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள். காங்கிரஸ் கட்சி தனது இயற்கைச் சாவை விரைவில் அடையும்.

இறுதியாக நான் மீண்டும் கேட்டுக் கொள்கிறேன் - ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் சார்பில் நிற்கிற நமது வேட்பாளருக்கு உங்கள் வாக்குகளை அளியுங்கள். சம்மேளன வேட்பாளர்கள் உங்களின் உண்மைப் பிரதிநிதிகள். அவர்கள் நமது வகுப்பின் நலனுக்காக அனைத்தையும் செய்வார்கள். அவர்கள் சுயநலமிகளாக இருக்க மாட்டார்கள். இறுதிவரை தமது சமூகத்துக்கு அவர்கள் சேவை செய்வார்கள்.

---

# (128)

## நமது உற்றார் உறவினர்களை நாம் பாதுகாப்போம்

*1951 நவம்பர் 7ஆம் தேதியன்று லக்னோ பல்கலைக்கழக மாணவர்களிடையே டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் உரையாற்றினார். பின்தங்கிய வகுப்பினர்பால் அலட்சியப்போக்கு கடைப்பிடிக்கப் படுவது குறித்து தாழ்த்தப்பட்டோரை சட்டமேதைத் தலைவரான டாக்டர் பிஆர். அம்பேத்கர் எச்சரித்தார். சமத்துவ அந்தஸ்து பெறும் தங்கள் முயற்சியில் தாழ்த்தப்பட்டோர் ஏமாற்றமடைந்தால் அவர்கள் கம்யூனிச அமைப்பு முறையை விரும்பக் கூடும்; அப்போது நாட்டின் கதி அதோ கதியாகிவிடும் என்று கூறினார்.*

*டாக்டர் அம்பேத்கர் மேலும் குறிப்பிடுவது; "இத்தகைய ஓர் புரட்சியை நாம் தவிர்க்க வேண்டுமானால் இந்தப் பிரச்சினையை அரசியல்வாதிகள் உடனடியாகப் புரிந்து கொள்ள வேண்டும்; இதுவே அவர்களது கவனத்துக்கு நான் கொண்டுவர விரும்பும் முதல் விஷயமாகும். ஒருவருக்கு ஒரு வாக்கு என்னும் கோட்பாட்டை அங்கீகரிக்கும் வயது வந்தோர் வாக்குரிமை முறையை அரசியல் சாசனம் பிரகடனம் செய்திருந்த போதிலும் அந்தக் கோட்பாடு நடை முறைப்படுத்த படாதது குறித்து டாக்டர் அம்பேத்கர் வருத்தம் தெரிவித்தார். காஷ்மீர் பிரச்சினையைக் குறிப்பிட்டு டாக்டர் அம்பேத்கர் பேசும் போது, காஷ்மீர் ஓர் ஒன்றிய அரசல்ல என்று கூறினார். அது இந்துக்கள், பௌத்தர்கள், முஸ்லீம்கள் முதலியோரைக் கொண்ட ஒரு கலப்பு வகுப்பாகும். ஜம்முவும் லடாக்கும் முஸ்லீமல்லாத பகுதிகள்; ஆனால் காஷ்மீர் பள்ளத்தாக்கோ முஸ்லீம் பிரதேசம்; அவர் மேலும் கூறியதாவது; " "காஷ்மீரிகள் எவ்வாறு வாக்களிப்பார்கள் என்பது நமக்குத் தெரியாது. ஆனால் சர்வஜன வாக்கெடுப்பு நடத்த ஐக்கிய நாடுகள் சபைக்கு இந்தியா கட்டுப் பட்டுள்ளது. இந்த வாக்கெடுப்பு பாகிஸ்தானுக்குச் சாதகமாக இருக்குமானால் முஸ்லீம்கள் அல்லாத 20 சதவிகித மக்களின் கதி என்னவாகும்? இது ஒரு மிகப் பெரிய கேள்வியாகும். காஷ்மீரிகள் அனைவரையும் காப்பாற்ற முடியாவிட்டாலும் குறைந்த பட்சம் நமது உற்றார் உறவினர்களையாவது காப்பாற்றுவோம். இது தெள்ளத்*

தெளிவான உண்மை நிலவரமாகும். இதனை எவரும் மறுக்க முடியாது"

## இருண்ட எதிர்காலம்.

ஒரு மாணவர் கேட்ட கேள்விக்கு டாக்டர் அம்பேத்கர் பதிலளிக்கும்போது பின்வருமாறு கூறினார். இந்தியாவின் எதிர்காலம் குறித்து நான் மிகவும் நம்பிக்கை இழந்து போயிருக்கிறேன். ஏனென்றால் அயல்நாடுகள் இந்தியாவை ஒரு முக்கியமான தேசமாகக் கருதவில்லை. பிரிட்டிஷ் ஆட்சியோடு ஒப்பிடும்போது உள்நாட்டு நிர்வாகம் படுமோசமடைந்துள்ளது. எங்கும் லஞ்ச லாவண்யம் கோலோச்சுகிறது. காங்கிரஸ் அமைச்சர்கள் பெரும் தவறு இழைத்த போது காங்கிரஸ்! தலைமை அவர்களுக்கு எதிராக எந்த நடவடிக்கையும் எடுக்க வில்லை; எத்தகைய விசாரணையும் மேற்கொள்ள வில்லை; இதற்கு மாறாக அவர்களைப் பாதுகாக்கவே செய்தனர்.

பிரிட்டிஷ் ஆட்சியின்போது 15 முதல் 20 ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலங்களில்தான் பஞ்சங்கள் தோன்றின. ஆனால் இப்போது ஒவ்வோர் ஆண்டும் பஞ்சம் தலைவிரித்தாடுகிறது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். இந்த நாட்டின் பொருளாதாரத்திற்கு என்ன நேர்ந்தது? ஈக்கள் போல் நாம் சாகப்போகிறோமா? என்று அவர் வினாவினார்.[1]

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா நவம்பர் 10, 1951.

# (129)

## முன்பே நான் ஏன் பதவி விலகவில்லை?

1951 நவம்பர் 20 ஆம் தேதி டாக்டர் பி ஆர் அம்பேத்கர் பம்பாய் வரும்போது மாநில சோஷலிஸ்டுக் கட்சியும் ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனமும் அவருக்குக் கூட்டாக வரவேற்பு அளிக்கும். ஆறுநாள் சுற்றுப் பயணத்தை முன்னிட்டும், ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேள னத்தின் தேர்தல் பிரசாரத்தைத் தொடங்கி வைப்பதற்காகவும் டாக்டர் அம்பேத்கர் பம்பாய் வருகிறார். நவம்பர் 22ஆம் தேதி பம்பாயில் நடைபெறும் ஒரு பொதுக்கூட்டத்தில் இந்தப் பிரசாரம் தொடங்கும்.[1]

அமைச்சரவையிலிருந்து பதவி விலகிய பிறகு முதல் தடவையாக நகரத்துக்கு விஜயம் செய்யும் முன்னாள் சட்ட அமைச்சரை வரவேற்பதற்காக 6,000க்கு மேற்பட்ட மக்கள் விக்டோரியா டெர்மினஸ் ரயில் நிலையத்துக்குத் திரண்டு வந்திருந்தனர்; இவர்களில் ஏராளமான பெண்களும் அடங்குவர்; அவர் பம்பாயில் ஒருவார காலம் தங்குவார்; சம்மேளனத்தின் சார்பில் தேர்தல் பிரசாரத்தைத் தொடங்கி வைப்பார்.

மக்களவைக்கு பம்பாய் நகர வடக்குத் தொகுதியிலிருந்து (ஒதுக்கீடு செய்யப்பட்ட இடம்) போட்டியிடும் டாக்டர் அம்பேத்கர் வியாழனன்று நடைபெறவிருக்கும் தேர்தல் கூட்டத்தில் பேசுவார்.

அவர் பயணம் செய்த பஞ்சாப் மெயில் ரயில் நிலையத்தில் நுழைந்ததும் "அம்பேத்கர் ஜிந்தாபாத்" என்ற கோஷங்கள் விண்ணைப் பிளந்தன. ரயில் நிலையத்தின் நடைமேடையில் பம்பாய் சோஷலிஸ்டுக் கட்சியும் சம்மேளனமும் அவருக்குக் கூட்டாக வரவேற்பு அளித்தன. கட்சியின் பொதுச் செயலாளரான திரு. அசோக் மேத்தா டாக்டர் அம்பேத்கரை வரவேற்றார். அவரது புகைவண்டிப் பெட்டியில் சுமார் 15 நிமிட நேரம் அவருடன் மனம் விட்டுப் பேசினார்.

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா நவம்பர் 12, 1951.

அதிகாரப் பூர்வமான வரவேற்புக்குப் பிறகு 8 வது நடை மேடைக்கும் 9வது நடைமேடைக்கும் இடையே உள்ள சாலையின் முடிவிடத்துக்கு தமது காரை ஓட்டிச் செல்லச் செய்தார். பம்பாயில் இயங்கும் சம்மேளனத்தின் பல்வேறு தாலுகா கமிட்டிகளின் சார்பில் அங்கு அவருக்குத் தனியாக வரவேற்பு நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. தாலுகா கமிட்டிகள் சார்பிலும் ஏனைய அமைப்புகள் சார்பிலும் இங்கு டாக்டர் அம்பேத்கருக்கு ஏராளமான மாலைகள் அணிவிக்கப்பட்டன.

இந்த வரவேற்பில் பங்கு கொண்டவர்களில் டாக்டர் அம்பேத்கரின் பழைய தோழர்களில் ஒருவரான திரு. எஸ்.கே. போலேயும் ஒருவர். இங்கு ஒரு வேடிக்கையான நிகழ்ச்சி நடைபெற்றது. அவர் அமர்வதற்கு ஒரு தனி நாற்காலி ஏற்பாடு செய்யப்படவில்லை எனவே, தமது மடியில் வந்து அமரும்படி போலேயை டாக்டர் அம்பேத்கர் கேட்டுக் கொண்டார். பலத்த சிரிப்பொலிக்கு இடையே அவ்வாறே போலே டாக்டர் அம்பேத்கரின் மடியில் போய் அமர்ந்து கொண்டார்![1]

“தாழ்த்தப்பட்டோர் சம்மேளனத்தின் பம்பாய் கிளை சார்பில் 1951 நவம்பர் 22ஆம் தேதி மாலை 6.30 மணி அளவில் பம்பாய் போய்வதாவிலுள்ள விளையாட்டு அரங்கில் டாக்டர் பி.ஆர் அம்பேத்கருக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது. திரு. ஆர்.ஜி. காரத் தலைமைத் தாங்கினார். ஏறத்தாழ 5,000 பேர் இந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்டனர். டாக்டர் அம்பேத்கருக்கு வரவேற்பு அளித்த ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் பம்பாய் கிளை சார்பில் இந்தக் கூட்டம் நடைபெறுவதாக கூட்டத் தலைவர் கூறினார். டாக்டர் அம்பேத்கரின் வழிகாட்டுதலில் நீலநிறக் கொடியின் கீழ் நாங்கள் எங்களிடையே வலுவான ஒற்றுமையைக் கட்டி வளர்ந்து வருகிறோம். ஏனைய மக்களும் கூட இதே நீலநிறக் கொடியின் கீழ் ஏராளமாக அணி திரண்டு வருகின்றனர் என்றும் அவர் குறிப்பிட்டார். டாக்டர் அம்பேத்கர் நாடாளுமன்றத்துக்கு நடைபெறவிருக்கும் தேர்தலில் போட்டியிட உள்ளார். இந்தப் பொதுத் தேர்தலில் நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை அவர் எடுத்துரைப்பார். அவரது

1. டைம்ஸ் ஆப் இந்தியா நவம்பர் 20, 1951.

ஆணைகளை நாம் முறையாக ஒழுங்காக நிறைவேற்றவேண்டும் என்று அவர் கூட்டத்தினரைக் கேட்டுக் கொண்டார்.

டாக்டர் அம்பேத்கருக்கும் திருமதி அம்பேத்கருக்கும் திரு ஜே.ஜி. பதாங்கர் மாலைகள் அணிவித்தார். டாக்டர் அம்பேத் கருக்கு ரூ 25,000 பணமுடிப்பு அளிப்பதெனத் தீர்மானிக்கப்பட்டது. ஆனால் இந்த அளவுக்கு நிதி திரட்ட நம்மால் முடியவில்லை; இதுவரை வசூலிக்கப்பட்ட பணம் இரண்டு பைகளில் உள்ளன. மீதிப் பணமும் விரைவில் திரட்டப்பட்டு தேர்தலுக்கு முன்னதாக அவரிடம் வழங்கப்படும் என்று பதாங்கர் கூறினார்.

தமக்கு அளிக்கப்பட்ட வரவேற்புக்குப் பதிலளித்து டாக்டர் அம்பேத்கர் பேசும் போது பின்கண்டவாறு கூறினார்: என்னிடம் இரண்டு கேள்விகளைக் கேட்கின்றனர். நீங்கள் முன்னமே ஏன் பதவி விலகவில்லை, அவ்வாறு செய்து இருந்தால் காங்கிரசுக்கு எதிராக ஒரு வலுவான கட்சியை கட்டி உருவாக்கி இருக்க முடியும் என்பது அவர்களது வாதம். காங்கிரசுடன் கூட்டுச்சேர நீங்கள் ஏன் தவறிவிட்டீர்கள் என்பது அவர்களது இரண்டாவது கேள்வி. இக்கேள்விகளுக்கு எனது பதில் இதுதான். காங்கிரஸ் அரசாங்கத்தில் கடந்த நான்கு வருடங்களாக நான் ஓர் அமைச்சராக இருந்து வந்திருக்கிறேன். தாழ்த்தப்பட்ட மக்களுக்கு நல்லது செய்ய மேல்மட்ட காங்கிரஸ் தலைவர்கள் உண்மையிலேயே விரும்புகிறார் களா என்பதை அவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொள்வதன் மூலம் அறிந்து கொள்ள விரும்பினேன். எனவேதான் அமைச்சரவையில் சேர்ந்தேன். ஆனால் தாழ்த்தப்பட்டோருக்கு நன்மை செய்ய உண்மையில் காங்கிரஸ் விரும்பவில்லை என்பதை அனுபவ ரீதியாகக் கண்டேன் என்றார் டாக்டர் அம்பேத்கர். அவர் மேலும் கூறியதாவது: நாடாளுமன்றத்திலும் சட்ட சபைகளிலும் 10 ஆண்டுக் காலத்துக்கு இட ஒதுக்கீடுகள் செய்யப்பட்டன. தீண்டாமையை அகற்றுவதற்கு அரசாங்கம் சட்டங்கள் இயற்றியிருந்தாலும், பத்தாண்டுகளுக்கு பிறகும் கூட தீண்டாமை என்னும் சாபக்கேடு நீடிக்கவே செய்யும், தீண்டப்படாதவர்களின் அவலநிலைமை முன்போலவே இருக்கும் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. அரசாங்க இலாகாக்களில் தாழ்த்தப்பட்டோருக்கு 12 1/2 சதவிகிதம் இட ஒதுக்கீடு செய்யப்பட வேண்டும் என்று அரசியல் சாசனத்தில் கூறப்பட்டுள்ளது. ஆனால் திரு. முன்சியும் ஏனைய பல காங்கிரஸ்காரர்களும் இந்தச் சலுகைக்கு

ஒரு காலவரம்பு நிர்ணயிக்க வேண்டும் என்று கூப்பாடு போட்டனர். ஆனால் என்னுடைய கடுமையான எதிர்ப்பின் காரணமாக அவர்களது முயற்சி வெற்றி பெறவில்லை. அரசுப் பணிகளில் தாழ்த்தப்பட்டோர் எத்தனை சதவிகிதம் இருக்கின்றனர் என்று ஒரு சமயம் திரு. ராஜகோபாலாச்சாரியைக் கேட்டேன். இது சம்பந்தமாக பல்வேறு இலாகாக்களுக்கும் அவர் ஒரு சுற்றறிக்கை அனுப்பினார். எந்த இலாகாவிலும் தாழ்த்தப்பட்டோர் பணியமர்த்தப்படவில்லை என்பதை இந்த சுற்றறிக்கைக்குக் கிடைந்த பதிலிலிருந்து அவர் தெரிந்து கொண்டார். பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் நான் நிர்வாகக் கவுன்சிலில் இருந்தேன். தொழிலாளர் துறை போன்றவை அப்போது என் பொறுப்பில் இருந்தன; தாழ்த்தப்பட்டோர் அயல் நாடுகளில் கல்வி கற்பதற்காக பிரிட்டிஷ் அரசாங்கம் 3 லட்ச ரூபாய் வழங்கிற்று. பிரிட்டிஷ் ஆட்சி காலத்தில் தொழில் கற்றுக் கொள்வதற்காக ஏராளமான தாழ்த்தப்பட்டோர் அயல்நாடுகளுக்கு அனுப்பப் பட்டனர். தேசப் பிரிவினை சமயத்தில் சாதி இந்துக்கள் இந்தியாவுக்குச் செல்ல பாகிஸ்தான் அரசாங்கம் அனுமதித்தது. ஆனால் தாழ்த்தப் பட்டோர் பாகிஸ்தானை விட்டுச் செல்ல அனுமதிக்கப்படவில்லை; இவர்களில் பலர் முஸ்லீம்களாக மதமாற்றம் செய்யப்பட்டனர். மகர்சேனை சில தாழ்த்தப்பட்டோரை இந்தியாவுக்குக் கொண்டு வருவதில் வெற்றி பெற்றது. ஆனால் இந்திய அரசாங்கம் அவர் களுக்கு எந்த உதவியும் செய்யவில்லை. அவர்களில் சிலர் ராஜ் காட்டில் உண்ணாவிரதம் மேற்கொண்டனர். ஆனால் எவரும் அவர்களது போராட்டத்தில் அக்கறை காட்டவில்லை. காங்கிரஸ் அரசாங்கம் அவர்களது குறைகளைத் தீர்க்க முன்வராது என்பதை அவர்களுக்கு எடுத்துரைத்தேன். இன்றைய நிலைமையில் தாழ்த்தப் பட்டோருக்கு என்னால் நன்மை எதுவும் செய்ய இயலாது என்பதை உணர்ந்தேன். எனவே பதவி விலகுவதென முடிவு செய்தேன். பண்டிட் நேரு எந்தப் பதிலும் எனக்குத் தரவில்லை. இவைதான் காங்கிரஸ் அரசாங்கத்துக்கு எதிரான எனது குற்றச்சாட்டுகள். நாங்கள் சுமார் 8 சதவிதமே இருந்ததால், வேறு எந்த அரசியல் கட்சியின் துணையு மில்லாமல் எங்களால் தேர்தலில் போட்டியிட இயலாது. எனவே சோஷலிஸ்டுகளுடன் கைகோர்க்க முடிவு செய்தோம். நமக்கு உள்ள தனித்தன்மை வாய்ந்த குறைபாடுகளைக் களைய நமது சம்மேளனத்தைத் தொடர்ந்து வளர்த்து வலுப்படுத்த வேண்டும். தேர்தல்களில் நாம் கைகோர்த்துள்ள கட்சியிடம் நேர்மையாக நடந்து கொள்ள வேண்டும் என்று உங்களை கேட்டுக் கொள்கிறேன். சமதா சைனிக்

டாலின் பணி திருப்திகரமாக உள்ளது. அடுத்த பொதுத்தேர்தல்களில் அதன் பணி பெரிதும் பயனுள்ளதாக இருக்கும் என்று நம்புகிறேன். நான்கு தினங்களுக்குப் பிறகு பம்பாயைவிட்டுச் செல்லவிருக்கிறேன். மீண்டும் உங்களிடம் தோன்றுவது சாத்தியமில்லை என்று கருது கிறேன். ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் வேட்பாளர் களுக்கு உங்கள் பொன்னான வாக்குகளை வழங்குமாறு கேட்டுக் கொள்கிறேன். தேர்தல் நாளன்று உங்களில் எவரும் வீட்டில் அடைந்து கிடக்கக் கூடாது![1]

---

1 காவல்துறை தகவல், தொகுதி I, பக். 388 - 389.

# (130)

# சம்மேளனம் தனது அரசியல் தனித்தன்மையை விட்டுக் கொடுக்காது

ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் தலைவரான டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அச்சம்மேளனத்தின் தேர்தல் பிரசாரத்தை 1951 நவம்பர் 22 ஆம் தேதி செயின்ட் சேவியர் கல்லூரி மைதானத்தில் நடைபெற்ற ஒரு பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தில் தொடங்கி வைத்தார். ஏற்கெனவே அரசாங்கத்தின் மீது தாம் கூறியுள்ள குற்றச் சாட்டுகளை அப்போது ஊர்ஜிதம் செய்தார்; நான்காண்டு காலம் தாம் பணியாற்றிய அரசாங்கத்திலிருந்து தாம் விலகியதற்கான காரணத்தை அப்போது எடுத்துரைத்தார்; தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மற்றும் பின்தங்கிய வகுப்பினரின் சேம நலத்திலும் முன்னேற்றத் திலும் அரசாங்கம் அறவே அலட்சியம் காட்டியதாலேயே அரசாங்கப் பதவியைத் தாம் துறந்ததாக அவர் கூறினார்.

அரசாங்கத்துக்கும் காங்கிரஸ் கட்சிக்கும் எதிராகத் தாம் தெரிவித்த குற்றச் சாட்டுகளுக்குப் பதிலளிக்காமல் நேரு வேண்டு மென்றே தட்டிக் கழித்தார். இந்தக் குற்றச்சாட்டுகள் உண்மையான வையாகவும் பதிலளிக்க முடியாதவையாகவும் இருந்ததே இதற்குக் காரணம் என்று இந்திய அரசாங்கத்தின் முன்னாள் சட்ட அமைச்சரான டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

சென்ற மாதம் அரசாங்கத்திலிருந்து விலகிய போது நான் விடுத்த அறிக்கையை மறுதளிக்க திரு. நேருவுக்கு எத்தனையே சந்தர்ப்பங்கள் இருந்தன. எனினும் எனது குற்றச்சாட்டுகள் மறுக்க முடியாதவை என்பதை முற்றிலும் தெரிந்தே பிரதமர் மௌனம் சாதித்தார் என்று டாக்டர் அம்பேத்கர் குற்றம் சாட்டினார்.

நெருங்கிய தூரத்திலிருந்து காங்கிரசைக் கண்காணிக்க எனக்குப் பல வாய்ப்புகள் கிடைத்தன. ஒடுக்கப்பட்ட பின்தங்கிய வகுப்பினர் பால் காங்கிரசுக்கு எத்ததைய அனுதாபமோ, பரிவோ பாசமோ இல்லை என்பதை இதனடிப்படையில் தம்மால் திட்டவட்டமாக தீர்மானமாகக் கூறமுடியும் என்றார் டாக்டர் அம்பேத்கர்.

காங்கிரஸ் அரசாங்கத்தில் தாம் ஓர் அமைச்சராக இருந்தபோது பிரதமர் வாக்களித்தபடி தமக்கு இலாகாக்காக்கள் அளிக்காதது மட்டுமல்லாது கொள்கைகளைத் தீர்மானிக்கும் அமைச்சரவைக் கமிட்டிகளின் கதவுகளும் தமக்கு மூடப்பட்டு விட்டன என்று அவர் குறை கூறினார்.

ஓர் அமைச்சர் என்ற முறையில் அரசாங்கத்தின் கொள்கையை தம்மால் விமர்சிக்க முடியாத நிலையில் இருந்தது மட்டுமல்ல, தாழ்த்தப்பட்ட சாதியினர் குறித்து நாடாளுமன்றத்தில் எந்தக் கேள்வியும் கேட்க இயலாத நிலையிலும் இருந்ததாக டாக்டர் அம்பேத்கர் வேதனையோடு குறிப்பிட்டார்.

அரசியல் சாசனத்தைத் தயாரிப்பதில் தாம் மிகக் குறைந்த பங்கே ஆற்றியதாக சில காங்கிரஸ்காரர்கள் தம்மீது சுமத்தும் குற்றச் சாட்டையும் அவர் வன்மையாக மறுத்தார். இதுபோன்ற பொய் வேறு எதுவும் கிடையாது என்று அவர் அழுத்தம் திருத்தமாகக் கூறினார். வரைவுக் குழுவில் இருந்த தம்முடைய சகாக்கள் அரசியல் சாசனத்தைத் தயாரிப்பதில் மிகக்குறைந்த அக்கறையே காட்டினர் என்பதை ஏராளமான ஆதாரங்களோடு தம்மால் நிரூபிக்க முடியும் என்று அவர் கூறினார். குழுக்கூட்டத்தில் அவர்கள் அரிதாகவே கலந்து கொண்டனர். இதனால் முழுச் சுமையும் என்மீதும் குழுச் செயலாளர் மீதுமே விழுந்தது என்று வருத்தப்பட்டுக் கொண்டார்

தாழ்த்தப்பட்ட சாதியினருக்குள்ள மனக்குறைகளை எடுத்து ரைக்கும் ஒரு நீண்ட பட்டியலையே அவர் முன்வைத்தார். அந்நிய பிரிட்டிஷ் அரசாங்கம் கூட தாழ்த்தப்பட்ட மக்களிடம் பெரிதும் பரிவோடும் தாராள மனப்பான்மையுடனும் நடந்து கொண்டதையும் அவர்களது வாழ்வுக்காக, உயர்வுக்காக மனமார்ந்த முறையில் பாடுபட்டதையும் அவர் சுட்டிக் காட்டினார்.

சோஷலிஸ்டுக் கட்சிக்கும் சம்மேளனத்துக்கும் இடையே அண்மையில் ஏற்பட்ட தேர்தல் உடன்பாட்டை டாக்டர் அம்பேத்கர் சுட்டிக் காட்டினார்; சோஷலிஸ்டு வேட்பாளர்களுக்கும் சம்மேளன வேட்பாளர்களுக்கும் வாக்களிக்கும்படிக் கேட்டுக் கொண்டார். தமது சமூகம் இந்தக் கூட்டணிக்கு உறுதியாக ஆதரவளிக்கும். சட்ட மன்றங்களுக்கு இரு கட்சிகளும் நிறுத்தியுள்ள வேட்பாளர்களுக்கு வாக்களிக்கும் என்று நம்பிக்கை தெரிவித்தார்.

*பரஸ்பரம் விட்டுக் கொடுக்கும் உணர்வோடு இந்தக் கூட்டணி உருவாகியுள்ளது. இந்த உணர்வின்படி இவை நடந்து கொள்ள வேண்டும் என்று அவர் கேட்டுக் கொண்டார். எனினும் சம்மேளனம் எந்தச் சந்தர்ப்பத்திலும் தனது அரசியல் தனித்தன்மையை விட்டுக் கொடுக்காது என்று அவர் உறுதிப்படக் கூறினார்.*

*கூட்டத்தில் டிக்கெட் விற்பனையின் மூலம் கிடைத்த பணம் டாக்டர் அம்பேத்கரிடம் அளிக்கப்பட்டது. ஆனால் எவ்வளவு தொகை என்பது அறிவிக்கப்படவில்லை.*[1]

---

*1. டைம்ஸ் ஆப் இந்தியா நவம்பர் 23, 1951.*

# (131)

# இந்து சட்டத் திருத்த மசோதா பெண்களின் நிலைமையை மேம்படுத்தும்

*1951 நவம்பர் 21 ஆம் தேதி பம்பாயில்பெண்களின் கூட்டமொன்றில் டாக்டர் அம்பேத்கர் உரை நிகழ்த்தினார். இந்து சட்டத்திருத்த மசோதா பெண்களின் நிலைமையை மேம்படுத்தும் என்றும் அவர்களுக்கு அதிக உரிமைகளை வழங்குமென்றும் கூறினார். எனவே இந்த மசோதாவை ஆதரிக்கும்படியும், நாட்டில் உண்மையான ஜனநாயகத்தை நிலை நிறுத்த பாடுபடும் வேட்பாளர்களுக்கு வாக்களிக்கும்படியும் கேட்டுக்கொண்டார். சில காங்கிரஸ் காரர்கள் இந்த மசோதாவுக்கு எதிராக இருப்பது குறித்தும் ஏதேனும் ஒரு வகையில் இதனை தாமதப்படுத்த அவர்கள் முயன்று வருவது குறித்தும் வருத்தம் தெரிவித்தார்.[1]*

---

*1. பம்பாய் கிராமியத் தகவல் டிசம்பர் 1, 1951.*

# (132)

# மக்கள் சோம்பேறித்தனமாகவும் மெத்தனமாகவும் இருப்பது மோசம்

1951 நவம்பர் 25ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை பம்பாயில் தேர்தல் கூட்டமொன்றில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் உரை நிகழ்த்தினார். காங்கிரஸிலிருந்து விலகி நாட்டின் நன்மைக்காக சோஷலிஸ்டு களுடனும் தன் போன்றோருடனும் கைக்கோர்க்குமாறு நேருவிற்கு அழைப்பு விடுத்தார்.

சோஷலிஸ்டு கட்சியும் ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனமும் சிவாஜி பூங்காவில் எற்பாடு செய்திருந்த இந்தக் கூட்டத்தில் இரண்டு லட்சத்துக்கு, மேற்பட்ட மக்கள் கலந்து கொண்டனர்.

நட்சத்திரச் சின்னம் பொறிக்கப்பட்ட சம்மேளனத்தின் நீலநிறக் கொடிகளும் சோஷலிசக் கட்சியின் செங்கொடிகளும் எங்கெங்கும் வானளாவ பறந்து கொண்டிருந்தன.

இரண்டு கட்சியினரையும் சேர்ந்து, நீலநிறத் தொப்பிகளும் சிவப்பு தொப்பிகளும் அணிந்த நூற்றுக்கணக்கான தொண்டர்கள் சிவாஜி பூங்கா அருகே போக்குவரத்து நெரிசலை உண்டுபண்ணிக் கொண்டிருந்த கூட்டத்தினை ஒழுங்குப்படுத்திக் கொண்டிருந்தனர்.

தமக்கு வாக்களிக்கும்படி மக்களை சட்ட அமைச்சர் கேட்டுக் கொண்டிருந்தார். தாம் தேர்ந்தெடுக்கப்பட்டால் ஐக்கிய மகாராஷ்டிரம் உருவாக நாடாளுமன்றத்தில் குரல் எழுப்ப பாடுபடப்போவதாக உறுதியளித்தார். தாழ்த்தப்பட்ட மக்களின் நலன் பேணுவதும் நாட்டுக்கு நல்லதோர் அரசியல் சாசனத்தை உருவாக்கித் தருவதுமே தமது வாழ்க்கையின் இரண்டு இலட்சியங்கள் என்று அவர் தெளிவு படுத்தினார்.

தாம் கூறிய குற்றச்சாட்டுகளை மறுத்த பிரதமர் நேரு சௌபாத்தியில் நிகழ்த்திய உரையைக் குறிப்பிட்டு டாக்டர் அம்பேத்கர் பேசும்போது தாழ்த்தப்பட்ட சாதியினரின் நிலையை

காங்கிரஸ் மேம்படுத்தவில்லை என்றார்; சீனா, ரஷ்யா சம்பந்தமாக அரசாங்கம் கடைப்பிடித்துவரும் அரசியல்துறைக் கொள்கை வெவ்வேறானது என்று அவர் குற்றம் சாட்டினார்.

இரண்டரை மாதங்களுக்கு முன்னர் அமைச்சரவையிலிருந்து நான் விலகிய போது இந்தக் குற்றச்சாட்டுகளை எல்லாம் தெரிவித்தேன். ஆனால் திரு. நேரு அவற்றைக் கவனத்தில் எடுத்துக் கொள்ளவில்லை. வெள்ளிக் கிழமை வெளியான பத்திரிகைகள் தமது குற்றச்சாட்டுகளை மீண்டும் வெளியிட்ட பிறகே இவற்றுக்கு அவர் மறுப்பு தெரிவித்தார் என்றார் டாக்டர் அம்பேத்கர்.

அயல்துறைக் கொள்கை குறித்து தமக்குள்ள கருத்துவேறுபாடு பற்றிக் கூறும்போது ஓர் அமைச்சரவைப் பிரச்சினையாக மாற்றும் அளவுக்கு இது முக்கியத்துவம் வாய்ந்ததல்ல என்று தாம் அபிப் பிராயப்படுவதாக டாக்டர் அம்பேத்கர் கூறினார். மேலும் அரசியல் சாசனத்தைத் தயாரிக்கும் மிக முக்கியமான கடுமையான உழைப்பு தேவைப்படுகிற பணியில் தற்போது தாம் ஈடுபட்டிருப்பதை அவர் சுட்டிக் காட்டினார்.

நான் கூறிய குற்றச்சாட்டுகளை மறுத்த போது பிரதமர் மிகவும் பரிதாபமாகத் தோற்றமளித்தார் என்றார் டாக்டர் அம்பேத்கர்.

தாழ்த்தப்பட்ட மக்களிடம் அரசாங்கம் அலட்சியப் போக்கைக் கடைப்பிடிக்கிறது என்ற குற்றச்சாட்டை நேரு மறுத்தாலும் இது அப்பட்டமான உண்மை என்பதில் ஐயமில்லை. தாழ்த்தப்பட்ட மக்களின் நலன்களுக்காக அரசாங்கம் என்ன நடவடிக்கைகள் எடுத்துள்ளது என்பதை பட்டியல் போட்டு வெளியிடுவதே சரியான செயலாக இருக்கும். தாம் கூறுவது சரியா, அல்லது அரசாங்கம் கூறியது சரியா என்பதை மக்கள் முடிவு செய்யட்டும் என்றார் டாக்டர் அம்பேத்கர்.

காங்கிரஸ் கட்சியால் மட்டும்தான் நாட்டில் ஒரு நிலையான அரசாங்கத்தை அமைக்க முடியும் என்ற நேருவின் கூற்றை டாக்டர் அம்பேத்கர் ஆணித்தரமாக மறுத்தார். காங்கிரசில் எத்தனையோ உட்கட்சிப் பூசல்கள் இருக்கின்றன என்று கூறி இதற்குப் பல காரணங்களையும் அவர் எடுத்துரைத்தார். "நேருதான் காங்கிரஸ்" என்ற ஒப்பீட்டை அவர் மறுத்தார்.

நேரு கனவு உலகில் வாழ்ந்துவருகிறார். இதனை அவர் எவ்வளவு விரைவில் புரிந்து கொள்கிறரோ அது நல்லது. காங்கிரஸ் காரர்கள் திரு தாண்டனை ஓரங்கட்டிவிட்டு திரு நேருவைத் தேர்ந்தெடுப்பது தேர்தலை மனதில் வைத்துதான்.

"சூதுவாதற்ற திரு.நேருவால் இதைப் புரிந்துகொள்ள முடியாது. இதனை அவர் விரைவிலேயே புரிந்து கொள்வது நல்லது. தேர்தல்கள் முடிந்த பிறகு அவரது நிலைமை என்னவாகுமோ என்று அஞ்சு கிறேன். "ஏனென்றால் நான் எதார்த்தவாதி நேருவைப் பற்றி ஏனைய காங்கிரஸ்காரர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதை அவரைவிட நான் நன்கறிவேன்" என்றார் டாக்டர் அம்பேத்கர்.

இந்தியக் குடியரசின் தலைவர் (ஜனாதிபதி) தேர்தல் நடை பெற்றுவுள்ள நிலையில் பிரதமர் ஒன்று தமது தோல்வியை ஒப்புக் கொள்ள வேண்டும் அல்லது காங்கிரஸ்கட்சி வெளியிலிருந்து தமக்கு வேண்டியவர் எவரையேனும் தேர்வு செய்துகொள்ள வேண்டிவரும் என்று தாம் நினைத்தாக டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

திரு ரபி அகமது கித்வாய் காங்கிரசிலிருந்து விலகியபோது "நேரு போன்றவர்களை உங்கள் பக்கம் இழுத்துக் கொள்ளுங்கள் அப்போது நான் உங்களுடன் இருப்பேன்"என்று அவரிடம் தாம் கூறியதாக கூட்டத்தினருக்கு டாக்டர் அம்பேத்கர் தெரிவித்தார்.

ஒரு வலுவான எதிர்க்கட்சி இருக்க வேண்டிய அவசியத்தை டாக்டர் அம்பேத்கர் வலியுறுத்தினார். எந்தக் கட்சிக்கும் வரையறை யற்ற அதிகாரம் இருக்கக் கூடாது என்று அவர் கூறினார். இத்தகைய ஒரு நிலைமை ஏற்படும்போது அதை மக்கள் மௌனமாக சகித்துக் கொண்டிருப்பது மிகவும் தவறு என்பதை அவர் சுட்டிக் காட்டினார்.

சோஷலிஸ்டுக் கட்சியும் தாழ்த்தப்பட்டோர் சம்மேளனமும் ஜனநாயக சோஷலிசத்துக்காகவும், சுதந்திற்காகவும் சமத்துவத்துக் காகவும், தேர்தல்களில் போட்டியிடுகின்றன என்றார் டாக்டர் அம்பேத்கர்.

அரசாங்கம் அமைக்கத் தங்களால் முடியாவிட்டாலும் வலுவான எதிர்க்கட்சி அமைக்கத் தங்களால் முடியும் என்று அவர் நம்பிக்கை தெரிவித்தார்.

எண்ணிக்கை முக்கியமல்ல, எதிர்க் கட்சியின் தரமே முக்கியம் என்று அவர் வலியுறுத்தினார். சோஷலிஸ்டுகளும் சம்மேளனமும் நிறுத்தும் எல்லா வேட்பாளர்களையும் தேர்ந்தெடுக்காவிட்டாலும் அவர்களில் மிகச் சிறந்தவர்களையாவது தேர்ந்தெடுங்கள் என்று அவர் மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தார். அப்போதுதான் எதிர்த் தரப்பு சிறந்ததாக இருக்க முடியும் என்றார்.

சுகவீனம் காரணமாக அசோக் மேத்தா கூட்டத்தில் பேச முடியவில்லை. அவருக்குப் பதிலாக திரு ஹாரிஸ் உரையாற்றினார். சோஷலிஸ்டுகள் சம்மேளனத்துடன் கூட்டு சேருவது குறித்து சில கட்சிகள் துஷ்பிரசாரம் செய்துவருவதை அவர் குறிப்பிட்டார்.

முன்னதாக குர்லாவிலிருந்த ஜாலாபாவுக்கு ஏராளமான தொகுதிகளிலிருந்து ஊர்வலங்கள் நடத்தப்பட்டன. அவை சிவாஜி பூங்காவில் முடிவடைந்தன. இரண்டு பிரதான ஊர்வலங்கள் பைகுல்லா பாலத்திலிருந்தும் துறைமுகப் பகுதியிலிருந்தும் புறப்பட்டன![1]

---

1. நேஷனல் ஸ்டாண்டர்டு, டிசம்பர் 26, 1951.

# (133)

# மக்களின் சுபிட்ச நலனுக்கு நிர்வாகத் தூய்மை இன்றியமையாதது

பிரஜா சோஷலிஸ்டுக் கட்சியும் ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனமும் கூட்டாக நடத்திய ஒரு மாபெரும் கூட்டத்தில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஒரு முக்கிய உரை நிகழ்த்தினார். இந்தக் கூட்டம் 1951 நவம்பர் 26ஆம் தேதி பம்பாய் சர் கவாஸ்ஜி ஜெஹாங்கீர் மண்டபத்தில் நடைபெற்றது. திரு. புருஷோத்தம் திரிசம்தாஸ் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார்.

நேரு அரசாங்கமும் காங்கிரஸ் கட்சியும் தூய்மையான லஞ்சலாவண்யமற்ற ஓர் கட்சியை மக்களுக்கு வழங்கத் தவறிவிட்டன என்று இந்திய அரசாங்கத்தின் முன்னாள் சட்ட அமைச்சரான டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் திங்களன்று குற்றம் சாட்டினார்.

மக்களுக்கு உணவும் உடையும் வழங்க காங்கிரஸ் தவறிவிட்டது என்பதில் எத்தகைய ஐயமும் இல்லை. இது நியாயமான குற்றச் சாட்டேயாகும். எனினும் உணவையும் உடையையும் விட முக்கிய மான மற்றொன்றையும் வழங்க அது தவறிவிட்டது. அதுதான் லஞ்சலாவண்ய மற்ற, உற்றார் உறவினர்களுக்குத் தனிச்சலுகைகள் வழங்காத அப்பழுக்கற்ற தூய்மையான நிர்வாகம்.

டாக்டர் பி. ஆர் . அம்பேத்கர் தமது குற்றச்சாட்டுகளுக்கு ஆதாரமாக உத்திரபிரதேசம், பீகார், ஒரிஸா ஆகிய மாகாணங்களில் நடைபெற்றுவந்த லஞ்ச ஊழல்களைப் பட்டியலிட்டுக் கூறினார் இந்த மாகாணங்களின் அமைச்சரவைகள் மீது காங்கிரஸ் சட்ட மன்ற உறுப்பினர்கள் கூறிய குற்றச்சாட்டுகள் குறித்து விசாரனை நடத்துவது உசிதமானது; உகந்தது என்று ஏன் கருதவில்லை என காங்கிரஸ் தலைமையை அவர் கேட்டார்.

நாட்டை ஆளும் காங்கிரஸ் கட்சி தனது சொந்த கௌரவம், நற்பெயர், நேர்மை முதலியவை குறித்து இவ்வளவு அலட்சியமாக இருப்பதும், அரசாங்கத்தின் மீது அதன் உறுப்பினர்களே சுமத்தும்

குற்றச்சாட்டுகள் பற்றி விசாரிக்க ஒரு குழு அமைக்காதிருப்பதும் அசாதாரணமானதாகத் தோன்றுவதாக அவர் கூறினார்.

மக்களுக்கு உணவும் உடையும் வழங்குவது சிரமமானதாக இருக்கலாம். ஆனால் மக்களுக்கு ஒரு தூய்மையான அரசை அளிப்பதில் என்ன கஷ்டம் இருக்கிறது என்று அவர் வினவினார். இது முற்றிலும் அரசாங்கத்தின் பொறுப்பு சம்பந்தப்பட்ட விஷய மாகும். அரசாங்கம் தனது நிர்வாகத்தை நேர்மையானதாக தீங்கிழைக் காததாக உருவாக்க முடிவு செய்யுமானால் இந்தப் பாதையில் முன்னேறுவதில் எந்தச் சிரமமும் இருக்காது. இதனால் இந்தப் பாதையில் முன்னேறுவதற்கு உண்மையில் முட்டுக்கட்டையாக இருப்பது காங்கிரசேயாகும், ஏனென்றால் நிர்வாகம் தூய்மையாக இருக்க வேண்டும் என்பதில் அதற்கு அக்கறை இல்லை என்றார் டாக்டர் பி. ஆர். அம்பேத்கர்.

அண்மையில் டில்லியில் நடைபெற்ற மாநாட்டில் காங்கிரஸ் கட்சியின் தலைவர் என்ற முறையில் திரு. நேரு நிகழ்த்திய சொற் பொழிவு, குறிப்பாக என்னைப் பெரிதும் வேதனைப்படுத்தியது. நாட்டில் நிலவும் லஞ்சலாவண்யத்துக்கு அவர் வக்காலத்து வாங்கிப் பேசினார். இந்தியாவில் இலஞ்ச ஊழல் என்பது உடனடியாகக் கவனம் கொள்ள வேண்டிய அவ்வளவு பெரிய ஒரு தீமையல்ல என்று திரு. நேரு. வாதிட்டது தம்மைத் திடுக்கிட வைத்ததாக டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் கூறினார்.

மக்கள் பிரதிநிதித்துவ சட்டத்தில் சில தகுதியின்மை சட்டக் கூறுகளைச் சேர்ப்பதற்குத் தாம் விரும்பியபோது காங்கிரஸ் நாடாளுமன்ற உறுப்பினர்கள் தமக்கு எதிராகப் பெரும் புயலைக் கிளப்பியதை அவர் குறிப்பிட்டார். கள்ள வாணிகர்கள், பெர்மிட்டுகள் வைத்திருப்பவர்கள் முதலானோர் ஒப்பந்தக்காரர்களைப் போன்றே தேர்தலில் போட்டியிடுவதைப் தடைசெய்ய வேண்டும் என்று நான் விரும்பினேன், ஆனால் இதற்கு காங்கிரஸ் கடும் எதிர்ப்பு தெரிவித்ததால் இந்த விதியை நான் கைவிடவேண்டியதாயிற்று என்றார். தாம் கடுமையாகப் போராடியும் முடிவில் தோற்றுப்போன மற்றொரு போராட்டத்தைப் பற்றியும் அவர் குறிப்பிட்டார். தேர்தல்களின் போது சம்பந்தப்பட்ட தரப்பினர் செய்யும் செலவினங்களைப் பற்றியது அப்போராட்டம்.

காங்கிரசின் இந்தப் போக்கு நிர்வாகத்தைத் தூய்மைப்படுத்தும் இலட்சியத்துக்கு உகந்தது தானா? என்று டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் வினவி விட்டுப் பின்வருமாறு கூறினார். நிர்வாகத்தில் தூய்மையைக் கடைப்பிடிக்கும் விஷயத்தில் மிகவும் மெத்தனத்தோடு நடந்து கொள்ளும் ஒரு கட்சியின் மீது எவரும் நம்பிக்கையும் நல்லெண் ணமும் கொள்ள முடியாது."

நிர்வாகத் தூய்மை மக்களின் சுபிட்ச நலனுக்கு இன்றியமையாதது. ஏனென்றால் ஒரு சட்டம் எவ்வாறு இயற்றப்படுகிறது என்பதை விட அது எவ்வாறு நடைமுறைப் படுத்தப்படுகிறது என்பதில்தான் மக்கள் பெரிதும் ஆர்வமும் அக்கறையும் கொண்டுள்ளனர்.

மாவட்டங்களில் உள்ள காங்கிரஸ் ஊழியர்கள் நீதிமன்ற அதிகாரிகளைத் தங்கள் வசப்படுத்துவதில் முனைந்து ஈடுபட்டிருப்பதாகத் தமக்கு ஏராளமான புகார்கள் வந்துள்ளதாக டாக்டர் பிஆர். அம்பேத்கர் கூறினார்.

இந்தியாவில் ஒரு வலுவான எதிர்க்கட்சி இருக்க வேண்டிய அவசியத்தை டாக்டர் அம்பேத்கர் வலியுறுத்திக் கூறும்போது ஏனைய அரசியல் கட்சிகள் எதிர்க்கட்சிகளாகச் செயல்பட காங்கிரஸ் அனுமதிக்க வேண்டும். மக்களின் அரசியல் கருத்து வெளியீட்டு உரிமையை அடக்கி ஒடுக்க அது முனையக் கூடாது என்று குறிப்பிட்டார். காங்கிரஸ் கட்சிக்கு நிதி வழங்காதீர் என்று செல்வந்தர் வர்க்கத்தை அவர் எச்சரித்தார்.

அமைச்சரவையிலிருந்து விலகிவிட்டதால் தாம் (டாக்டர் அம்பேத்கர்) நன்றி கெட்டவராக இருப்பதாக திரு. எஸ்.கே. பட்டீல் கூறிய குற்றச்சாட்டையும் முன்னாள் சட்ட அமைச்சர் இந்த சந்தர்ப்பத்தில் குறிப்பிட்டார். நன்றி உணர்வு குறிந்து திரு. பட்டீல் விநோதமான கண்ணோட்டங்களைக் கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது என்று கூறிய அவர் அயர்லாந்தின் தத்துவமேதை கூறிய கருத்தை மேற்கோள் காட்டினார். அதாவது, எந்த ஆணும் தனது நன்மதிப்பைப் பலிகொடுத்து தன் நன்றி உணர்வைக் காட்டமுடியாது. எந்தப் பெண்ணும் தனது கற்பைப் பறிகொடுத்து தன் நன்றி உணர்வைக் காட்ட முடியாது. அதேபோல் எந்த நாடும் தனது சுதந்திரத்தைப் பலி கொடுத்து நன்றி உணர்வைக் காட்ட முடியாது"

நன்றி உணர்வுக்கும் ஒரு வரையறை உண்டு; எல்லை உண்டு என்றார் டாக்டர் அம்பேத்கர். இந்திய அரசாங்கத்தில் தாம் ஓர் அடிமையாக இருக்க விரும்பவில்லை என்றார் அவர்.

தனது முயற்சியின் மூலமாகத்தான் டாக்டர் அம்பேத்கர் மத்திய அமைச்சரவையில் இடம் பெற்றார் என்று திரு. பட்டீலின் கூற்றுக்குப் பின் கண்டவாறு அம்பேத்கர் பதிலளித்தார். அரசியல் நிர்ணயசபை நுழைவாயிலில் கூட என்னை அனுமதிக்க மாட்டோம் என்று காங்கிரஸ் உறுதி பூண்டிருந்த நிலையில் மத்திய அமைச்சரவையில் நான் இடம் பெற்றது என் வாழ்க்கையின் மிகப் பெரும் அதிசயங்களில் ஒன்றாகும்.[1]

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா நவம்பர் 27, 1951.

# (134)

## காங்கிரசை எதிர்க்கவே கூட்டணி

சோஷலிஸ்டுக் கட்சியின் பொதுச் செயலாளரான திரு. அசோக் மேத்தா 1951 டிசம்பர் 23ஆம் தேதி சௌப்பட்டியில் நடைபெற்ற ஒரு தேர்தல் கூட்டத்தில் பேசினார். ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்துடன் தங்கள் கட்சி கூட்டணி சேர்ந்திருப்பது ஒரு புதிய சக்தியை, வலுவை தோற்றுவித்துள்ளது என்று அப்போது அவர் கூறினார்.

அவரை அடுத்து சம்மேளனத்தின் தலைவரான டாக்டர் அம்பேத்கர் பேசினார். காங்கிரசை எதிர்ப்பதற்கு மட்டுமே இந்தக் கூட்டணி என்று அவர் கூறினார்.

கூட்டணியை நேரு குறை கூறியதை திரு. மேத்தா கண்டித்தார்.

கடந்த நான்கு ஆண்டுக் காலத்தில் காங்கிரஸ் எந்த சாதனையும் புரியவில்லை என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

நகரின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் புறப்பட்ட பல ஊர்வலங்கள் சௌபாத்யில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் முடிவடைந்தன.[1]

---

1. பாரத் டிசம்பர் 24, 1951.

## (135)

# நாட்டின் நலனுக்கு எப்போதுமே என் இதயத்தில் இடம் உண்டு

"சுதந்திர இந்தியாவின் அரசியல் சாசனத்தை உருவாக்கித் தருவதில் மிக முக்கிய பங்காற்றியமைக்காக டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு சிறப்புமிக்க எல்எல். டி (LL. D) பட்டம் வழங்கி அவரைக் கௌரவிப்பதென புகழ்பெற்ற அமெரிக்க கொலம்பிய பல்கலைக் கழகம் 1950இல் தெள்ளத் தெளிவான முடிவினை மேற்கொண்டது. தாம் பயின்று 1915இல் எம். ஏ. பட்டமும், 1917ல் பிஎச். டி. பட்டமும் பெற்ற பல்கலைக் கழகத்திலிருந்து வந்த இந்தத் தகவலை அறிந்தபோது டாக்டர் அம்பேத்கர் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. ஆனால் புதிதாக உருவாக்கப்பட்ட இந்திய அரசாங்கத்தின் முன்னால் எத்தனையே பிரச்சினைகள் இருந்தன. இவை அரசியல் சாசனம் சம்பந்தப் பட்ட பிரச்சினைகள்; டாக்டர் அம்பேத்கரின் தனித்திறமையின் மூலம் தீர்வுகாண வேண்டிய பிரச்சினைகள். தமக்கு அளிக்கப்பட உள்ள பொறுப்பை உணர்ந்த டாக்டர் அம்பேத்கரால் அதனை ஏற்க இயலவில்லை. தவிரவும் அவரது உடல் நலம் சரியில்லாததால் அவரால் அமெரிக்காவுக்குச் செல்ல இயலாது. எனவே, பட்டம் பெறும் வைபவத்தில் தம்மால் கலந்து கொள்ள இயலாது என்பதைப் பல்கலைக் கழகத்துக்கு மிகவும் பணிவோடு தெரிவித்துவிட்டார். அச்சமயம் ஜெனரல் ஐசன் ஹோவர்தான் கொலம்பியா பல்கலைக்கழகத்தின் தலைவராக இருந்தார்; பின்னாளில் அவர் அமெரிக்காவுக்கு ஜனாதிபதியாகவும் ஆனார். அவர்தான் பட்டமளிப்பு விழாவுக்குத் தலைமைதாங்கி இருந்தார். டாக்டர் அம்பேத்கர் நேரில் வர இயலாவிட்டாலும் அவருக்குப் பட்டம் வழங்க கொலம்பியா பல்கலைக் கழகம் தயாராக இருந்தது. ஆனால் ஒன்று அல்லது இரண்டு ஆண்டுகளில் தாமே நேரில் வந்து பட்டத்தைப் பெற்றுக் கொள்வதாக பல்கலைக் கழகத்துக்கு அம்பேத்கர் தெரிவித்தார். இந்தியாவின் இந்தப் புகழ்மிக்க புதல்வரைக் கௌரவிப்பதை பல்கலைக் கழகம் பெரும் பேறாகக் கருதிற்று; எனவே, அவரது வேண்டுகோளை ஏற்று 1952 ஜூன் 5ஆம் தேதி பட்டமளிப்பு நிகழ்ச்சியை நடத்த ஒப்புக் கொண்டது. இந்தப் பல்கலைக் கழகத்தின் சிறப்பு மிக்க பட்டங்கள் பெறுவோரின்

பட்டியலில் மே நான்காவது வாரத்தில் டாக்டர் அம்பேத்கரின் பெயரும் இடம் பெற்றது. இதனை அறிந்த அவருடைய நண்பர்கள், ரசிகர்கள், நலவிரும்பிகளிடமிருந்து மலைமலையாகக் கடிதங்கள் வந்து குவிந்தன. அச்சமயம் இந்தியாவின் துணை ஜனாதிபதியாக இருந்த டாக்டர் சர்வ பள்ளி இராதாகிருஷ்ணன் கூட டாக்டர் அம்பேத்கரின் சாதனை அறிந்து பெருமிதமடைந்தார்; பின் கண்டவாறு டாக்டர் அம்பேத்கரைப் பாராட்டினார்; தமது கடிதத்தில் அவர் குறிப்பிட்டிருந்ததாவது:

2, மன்னவர் எட்வர்ட் சாலை,
புதுடில்லி,
மே 26, 1952

என் அன்பார்ந்த டாக்டர் அம்பேத்கர் அவர்களே,

கொலம்பியா பல்கலைக்கழகம் தங்களுக்கு சட்டத்துறை டாக்டர் பட்டம் அளிக்கவிருக்கிறது என்பதை அறிந்து மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். நமது அரசியல் சாசனத்தைத் தயாரிப்பதில் நீங்கள் மகத்தான பங்காற்றியிருக்கிறீர்கள் என்பதை உரிய முறையில் இது அங்கீகரிப்பதாகும். உங்களுக்கு எனது மனமார்ந்த பாராட்டுகள். இன்றும் நாளையும் முதலில் பேசுவதற்குக் காலவரம்பு எதுவும் கிடையாது. எனவே பொது வரவு செலவுத் திட்டம் பற்றி நீங்கள் பேச விரும்பினால் இன்று அல்லது நாளை முற்பகலில் பேசுவது வசதியாக இருக்கும்.

உங்கள் உள்ளார்ந்த,
(கையொப்பம்) எஸ். இராதாகிருஷ்ணன்.

டாக்டர் பி. ஆர். அம்பேத்கர்,
உறுப்பினர், மாநிலங்கள் அவை,
நாடாளுமன்ற வளாகம், புதுடில்லி,
4001-4003.

## டாக்டர் பி. ஆர். அம்பேத்கரின் பதில்

26, கலிப்பூர் சாலை,
டில்லி,
மே 27, 1952.

அன்பார்ந்த டாக்டர் இராதகிருஷ்ணன் அவர்களே,

1952 மே 26ஆம் தேதியிட்ட தங்கள் கடிதம் கிடைத்தது. கொலம்பியா பல்கலைக்கழகம் சட்டத்துறையில் எனக்கு டாக்டர் பட்டம் வழங்கிக் கௌரவித்திருப்பதைத் தாங்கள் பாராட்டியிருக்கிறீர்கள்.

எனக்கு அளிக்கப்பட்ட கௌரவத்தைப் பாராட்டுவதற்கு இந்தியாவில் ஒரு சிலரேனும் தயாராக இருக்கிறார்களே என்பதைக் கூற மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்; அதைத்தான் அவர்கள் தற்போது செய்துள்ளார்கள்.

உங்கள் உள்ளார்ந்த,
(கையொப்பம்) பி.ஆர். அம்பேத்கர்

டாக்டர் எஸ். இராதகிருஷ்ணன்,
இந்திய துணை ஜனாதிபதி,
புதுடில்லி.

டாக்டர் அம்பேத்கரை அவருடைய சாதனைக்காக போலக்ஸ் பாராட்டினார்; 1952 ஜூன் 15ஆம் தேதியிட்ட இல்லஸ்ட்டிரேடட் வீக்லி ஆப் இந்தியாவில் அந்தப் பாராட்டுப் பின்கண்டவாறு பிரசுரிக்கப்பட்டது.

## "இந்த செய்திகள் செய்திகளைத் தோற்றுவிக்கின்றன"

பதவியில் இருந்தாலும் சரி இல்லாவிட்டாலும் சரி டாக்டர் பீமராவ் ராம்ஜி அம்பேத்கர் எப்போதுமே செய்திகளாகத் திகழ்கிறார். இந்த வாரத் தொடக்கத்தில் மேலவையில் அவர் நிகழ்த்திய காரசாரமான சொற்பொழிவு மீண்டும் தலைப்புச் செய்தியாக இடம்பெற்றது; அரசாங்கத்தின் காஷ்மீர் கொள்கையை அவர் தமது சொற்பொழிவில் காரசாரமாகத் தாக்கியிருந்தார். இந்தக் கொள்கையின் உருவாக்கத்தில் கடந்த அமைச்சரவையில் ஓர் அமைச்சராக இருந்தவகையில் இவருக்கும் பங்குண்டு என்று கூறப்படுகிறது. இந்த வல்லமை மிக்க டாக்டர், ஜூன் 1ஆம் தேதி வெளிநாடு செல்கிறார் என்ற செய்தி அறிந்து அரசாங்கத் தரப்பினர் நிம்மதிப் பெருமூச்சு விட்டிருப்பர் என்பதில் ஐயமில்லை. தமது

பழைய கொலம்பியா பல்கலைக்கழகத்திலிருந்து எல்எல்.டி டாக்டர் பட்டம் பெறுவதற்ககவே நியூயார்க்குக்கு விமானத்தில் செல்ல விருந்தார்.

இந்தப் பட்டத்தை அவர் மூன்றாண்டுகளுக்கு முன்பே, அப்போது பல்கலைக்கழகத்தின் தலைவராக இருந்த ஜெனரல் ஐசன்ஹோவரிடமிருந்து பெற்றிருக்க வேண்டும்; ஆனால் அமைச்சரவைப் பொறுப்பும், தேர்தல் பணியும் அவரது பயணத்துக்கு முற்றுக் கட்டை போட்டன. மேலும் அவர் நேரில் வராமல் பட்டம் வழங்கப் பல்கலைக்கழகமும் தயக்கம் காட்டிற்று. டாக்டர் அம்பேத்கர் 20 ஆண்டுகளுக்குப் பிறகு அமெரிக்கா செல்கிறார். போதிய டாலர்கள் வழங்கப்படாததால் இந்தப் பயணத்தில் திருமதி அம்பேத்கர் தம்முடன் வரவில்லை என்று அவர் போலக்சிடம் தெரிவித்தார். நியூயார்க்கில் இருக்கும்போது மருத்துவ சிகிச்சைக்காக ஒரு மருத்துவ மனைக்குச் செல்ல அவர் திட்டமிட்டுள்ளார். (1. 6. 1952ஆம் தேதி இல்லஸ்டிரேடட் வீக்லி ஆப் இந்தியாவில் போலக்ஸ் எழுதிய கட்டுரையின் 4ஆம் பத்தி, பக்கம் 8)

1952 ஜூன் 1ஆம் தேதி ஞாயிறு இரவு டாக்டர் அம்பேத்கர் நியூயார்க் செல்லுவதாக இருந்தார். அவர் புறப்படுவதற்கு முதல் நாளன்று அதாவது 1952 மே 31ஆம் தேதி சனிக்கிழமை இரவு அவருடைய நண்பரும், நலவிரும்பியும், ஆதரவாளர்களும், மக்கள் கல்விக் கழகத்தின் ஊழியர்களும் கிரிக்கெட் கிளப்பின் பிரம்மாண்டமான திறந்த புல்வெளியில் அவருக்கு ஒரு மாபெரும் விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தனர். கல்லூரி முதல்வர் டாக்டர் வி. ஆர். பதன்கர், உயர்மட்டக் கல்விக் கழகத்தின் செயலாளர் திரு. கே.வி. சித்ரே, திரு. பிரபாகர் பத்யே, திரு. பி.எச். ராவ் பத்திரிகையாளர் சங்கத்தின் தலைவர் திரு. டபிள்யூ ஆல்பர்ட் முதலான பிரமுகர்கள் விருந்தில் கலந்து கொண்டனர். டாக்டர் அம்பேத்கர் அமெரிக்காவில் இருக்கும் போது இந்தியாவில் நிலவும் தீண்டாமைக் கொடுமையை மிகக் கடுமையாகச் சாடுவார்; இந்த அநீதியான பழக்கத்தை உலகின் கவனத்திற்குச் கொண்டுவருவார்; இந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதில் இந்திய அரசாங்கம் தவறிவிட்டதை அம்பலப்படுத்துவார் எனப் பல இந்தியர்கள் அச்சமடைந்தனர். ஆனால் இந்தப் பயம் ஆதாரமற்றதாகும் ஏனென்றால், டாக்டர் அம்பேத்கர் முதலில் ஒரு இந்தியர். எனவே தமது அரசாங்கத்தின் நற்பெயருக்குக் களங்கம் விளைவிக்கும் எதையும் செய்யமாட்டார்.

டாக்டர் அம்பேத்கர் தமக்கு அளிக்கப்பட்ட விருந்துக்கு நன்றி தெரிவித்துப் பேசும்போது, அமெரிக்காவில் சொற்பொழிவாற்றும் திட்டம் ஏதும் தமக்கில்லை என்றும், எனவே இந்த நாட்டைப் பற்றிக் கடுமையாக எதுவும் பேசிவிடுவேன் என்று கருத வேண்டியதில்லை என்றும் கூறினார்.

நான் மிகவும் கோபக்காரன் என்றும், பல சந்தர்ப்பங்களில் வரம்புமீறி நடந்து கொண்டு அதிகாரத்தில் இருப்போருடன் சச்சர விட்டேன் என்றும் கூறப்பட்டாலும் எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் நான் இந்த நாட்டுக்த் துரோகியாக இருந்ததில்லை என்று டாக்டர் அம்பேத்கர் வலியுறுத்திக் கூறினார். நாட்டின் நலனே எப்போதும் என் இதயத்தில் குடிகொண்டு வந்திருக்கிறது. இந்தியாவின் நலன்களைப் பொறுத்தவரையில் நான் மகத்தான காந்திக்கு 200 மைல் முன்னதாக இருக்கிறேன். (டைம்ஸ் ஆப் இந்தியா, 2. 6. 1952 திங்கட்கிழமை பக்கம் 7, பத்தி 3 )

டாக்டர் அம்பேத்கரைக் கௌரவிப்பதற்கு நடத்தப்பட்ட இந்த விருந்தைப் பற்றி ஈவினிங் நியூஸ் ஆப் இந்தியா என்ற உட்பிரிவு எழுதும்போது அவரைப் பின்வருமாறு குறிப்பிட்டது:

## "ஒரு மாபெரும் மனிதர்"

நமது அரசியல் சாசனத்தின் பிரதம பிதாமகர்களில் ஒருவரான டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்குக் கௌரவ டாக்டர் பட்டம் அளிக்க இந்தியப் பல்கலைக்கழகங்களில் எதுவும் இதுவரை முன்முயற்சி எடுத்துக் கொள்ளாதது வியப்பாகவும் விந்தையாகவும், வேதனை யாகவும் உள்ளது. டாக்டர் அம்பேத்கர் படித்துப் பட்டம் பெற்ற பம்பாய் பல்கலைக்கழகம் கூட இது விஷயத்தில் அசட்டையாகவும் மெத்தனமாகவும் இருக்கிறது என்று சித்தார்த்தா கல்லூரியின் முதல்வரான யு.எஸ். பதங்கர் குற்றம் சாட்டினார்.

இன்றைய நிலைமையில் சட்டத்துறை டாக்டர் பட்டத்தை முதன் முதலில்வழங்கி டாக்டர் அம்பேத்கரைச் சிறப்பூட்டும் பேற்றினை கொலம்பியா பல்கலைக்கழகம் பெற்றுள்ளது. டாக்டர் அம்பேத்கர் இந்தப் பல்கலைக் கழகத்தின் ஒரு மாணவர் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

டி.டபிள்யூ.ஏ. விமானத்தின் மூலம் சென்ற திங்களன்று டாக்டர் அம்பேத்கர் அமெரிக்காவுக்குப் புறப்பட்டுச் சென்றார். அவர் அமெரிக்காவில் ஒரு சில வாரங்களே தங்குவார்; இச்சமயம் தமது கால்களுக்கு ஏதேனும் சிகிச்சை பெற முடியும் என்று அவர் நம்புகிறார்.

டாக்டர் அம்பேத்கர் அமெரிக்காவுக்குச் புறப்பட்டுச் செல்ல விருந்த தருணத்தில் டாக்டர் பதங்கரும் திரு. சிந்ரேயும் சி.சி. ஐயில் விருந்தளித்தனர். டாக்டர் அம்பேத்கரின் தேசபக்தி குறித்து எவருக்கும் எத்தகைய ஐயமும் இருந்ததில்லை. விருந்தில் அவர் பேசுகையில் அமெரிக்காவில் தங்கியிருக்கும்போது இந்தியாவைப் பற்றி இழிவாகப் பேசும் எண்ணம் தமக்கு ஒருபோதும் இருந்ததில்லை என்று குறிப்பிட்டார்.

ஒரு சுவராஸ்யமான உரையாடலின்போது பேசுகையில் மௌலான ஆசாத்தின் ஹிந்தி தமக்கு மிகவும் பிடித்திருப்பதாக டாக்டர் கூறினார். "இத்தகைய ஹிந்தியைத்தான் நாம் பின்பற்ற வேண்டும் என்று கேட்டுக் கொண்டால் அது பெரிதும் வரவேற்கத் தக்கதாகும், வெகுவாக சமஸ்கிருதமாக்கப்பட்ட ஹிந்தி விரும்பத்தக்க தல்ல மௌலனாவின் ஹிந்தியில் எத்தகைய மரபு சொற்களையோ அல்லது சமஸ்கிருத சொற்களையோ காணுவது அரிது. ஆனால் அதே சமயம் அது தூய்மையானதாக, பாராட்டத்தக்கதாக உயர்ந்ததாக இருப்பதைக் காணலாம்.

டாக்டர் அம்பேத்கரை ஏற்றிச் சென்ற விமானம் பம்பாயி லிருந்து நள்ளிரவில் புறப்பட்டுச் சென்றது. அவரது கையில் ஒரு மேலங்கியும், தலையில் தொப்பியும் இருந்தன. கழுத்தில் கருப்பு டை அணிந்திருந்தார். தம்மை வழியனுப்ப வந்திருந்தோரிடம் தமக்கே உரிய புன்னகையுடன் விடைபெற்றுக் கொண்டார். இவை யாவும் புகைப்படமெடுக்கபட்டு 1952 ஜூன் 2ஆம் தேதியில் பிரிபிரஸ் புல்லட்டினில் முதல் பக்கத்தில் பிரசுரிக்கப்பட்டன."

## கொலம்பியா பல்கலைக்கழகம் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரைக் கௌரவிக்கிறது.

நியூயார்க், ஜூன் 6, 1952. கொலம்பியா பல்கலைக்கழகம் நேற்று தனது 198ஆவது பட்டமாக டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்குக்

கௌரவப் பட்டமளித்து கௌரவித்தது; ஒரு மாபெரும் சமூக சீர்திருந்தவாதி மனித உரிமைகளை நிலைநாட்டும் வீரர் என்று அவரைப் பாராட்டியது.

கொலம்பியாவின் 17 பள்ளிக்கூடங்களையும் கல்லூரிகளையும் சேர்ந்த 6848 பட்டதாரிகள் தங்கள் படிப்பு முடிந்து பட்டங்கள் பெறுவதைக் காண வந்திருந்த பெருந்திரளான கூட்டத்தினர் முன்னர் டாக்டர் அம்பேத்கர் சட்டத்துறை கௌரவ டாக்டர் பட்டத்தைப் பெற்றார். டாக்டர் அம்பேத்கருடன் கௌரவிக்கப்பட்டவர்களில் கனடாவின் காவல்துறை அமைச்சர் லாஸ்டர் பி. பியர்சன், புகழ் பெற்ற பிரெஞ்சு பிறந்த வரலாற்று ஆசிரியர் டேனியல் மோர்ன்னெட், மஸறம் எட்டு அமெரிக்கப் பிரஜைகளும் அடங்குவர். (டைம்ஸ் ஆப் இந்தியா, 7.6.1952 சனிக்கிழமை, பக்கம் 6)

டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின் புகைப்படமும் அத்துடன் சட்டத்துறை டாக்டர் என்ற கௌரவப்பட்டம் பெற்ற கவிஞரும் ஹார்ட் போர்டு கனென்டிகட்டின் நிர்வாகியுமான திரு. வாலஸ் ஸ்டீவன்சின் புகைப்படமும் அத்துடன் இந்திய நிகழ்ச்சி சம்பந்தப் பட்ட செய்திகளும் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்பட்டன.

## "சட்டத்துறை டாக்டர்"

ஜூன் 5ஆம் தேதி நியூயார்க் கொலம்பியா பல்கலைக்கழகத்தி லிருந்து சட்டத்துறையில் கௌரவ டாக்டர் பட்டம் பெற்ற டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் இதே போன்று கௌரவ டாக்டர் பட்டம் பெற்ற கவிஞரும் ஹார்ட்போர்டு, கனென்டிகட்டினைச் சேர்ந்த ஆயுள் காப்பீடுக் கழகத்தின் நிர்வாகியுமான திரு. வாலஸ் ஸ்டீவன்சுடன் சேர்ந்து மேலே உள்ள படத்தில் காணப்படுகிறார்.

(டைம்ஸ் ஆப் இந்தியா, 13. 6. 1952, வாலஸ் ஸ்டீவன்சன் மற்றும் அம்பேத்கரின் புகைப்படத்துடன்)

இந்தச் சட்டத்துறை பட்டம் வழங்கும் அறிவிப்பு லத்தீன் மொழியிலும் ஆங்கிலத்திலும் உள்ளது; அப்போதைய துணை ஜனாதிபதியும் பல்கலைக்கழகத்தின் தலைவருமான மாண்புமிகு கிரேசன் கிர்க் அதனை வாசித்தார். அது வருமாறு:

## பீமராவ் ராம்ஜி அம்பேத்கருக்கு நியூயார்க்கிலுள்ள கொலம்பியா பல்கலைக்கழகத்தின் பாராட்டுப் பத்திரம்

*இந்தியாவில் பிறந்த பி.ஆர். அம்பேத்கர் மிகுந்த சிரமங்களுக் கிடையே கல்வி பயின்றார். இருபதாவது வயதில் பம்பாய் பல்கலைக் கழகத்தில் இளங்கலைஞர் (பி.ஏ) பட்டம் பெற்றார்; பின்னர் லண்டன் பல்கலைக்கழகத்தில் பொருளாதாரத்தில் டாக்டர் பட்டம் பெற்றார். கடந்த முப்பது ஆண்டுகளாக அவர் வழக்கறிஞராக இருந்து வருகிறார். பல்கலைக்கழகப் பேராசிரியர் சட்ட மேலவை உறுப்பினர்; அரசியல் சாசனத்தின் பிரமுகர், அமைச்சர், இந்தியாவின் தலைசிறந்த குடிமகன்களில் ஒருவர், மாபெரும் சீர்திருந்தவாதி, மனித உரிமைகளின் நேர்நிகரற்ற காவலர் என்பன போன்ற பெருமையையும் சீரும் சிறப்பையும் டாக்டர் அம்பேத்கர் பெற்றிருக்கிறார்.*

*அறங்காவலர்கள் எனக்கு அளித்துள்ள அதிகாரத்தைப் பயன் படுத்தி இந்தப் பல்கலைக்கழகம் சட்டத்துறை கௌரவ டாக்டர் பட்டம் பெற உங்களை மகிழ்ச்சியோடு அனுமதிக்கிறேன். இது சம்பந்தப்பட்ட எல்லா சலுகைகளையும் உரிமைகளையும் உங்களுக்கு அளிக்கிறேன்; இதன் அடையாளமாக இந்தப் பல்கலைக்கழகப் பட்டச் சான்றிதழை உங்களுக்கு வழங்குகிறேன்.*

*ஜூன் 5, 1952*

*(ஒப்பம்) கிரேசன் கிர்க்,*
*துணை ஜனாதிபதி மற்றும்*
*பல்கலைக்கழகத் தலைவர்*

## சுரடர்ஸ் யூனிவர்விடிடாடிஸ் கொலம்பிய இபோராசென்சிஸ்

ஓம்னிபஸ் எட் விங்குலிஸ் கேலிம் இன்ரெஸ்ட்
சலுடெம்ஹிஸ் லெட்டர்ஸ் டெஸ்டமர் நோஸ் யுனாசிமி
கான்சென்சு

*பீமராவ் ராம்ஜி அம்பேத்கர்*

ஆட் கிரேடும்

டாக்டரிஸ் இன் லெஜிபஸ்

ஹானோரியஸ் காசா பூரவெக்சிங்ஸி இக்யுதும்மையா இயுரா எட் பிரிவிலேஜியா க்யுயே அட் இஸ்டம் கட்டியினென்ட் டெடிஸ்ஸி எட் கன்செஸ்ஸிக் சே சின் சிவிஸ்ஸ் ரெய் பிளினிவ் டெஸ்டி மோணயம் சிகில்லோ ஹிவிவ்ஸ் யுனிவர்சிட்டிஸ் எட் பிரேசிசடிஸ் சிரோகிராபோ டிப்ளமோ ஹோஸ்ஸே முனியென்டம் குருவிம்ஸ்டாட்டம் நோவி எபேலிச்சி டை

மென்சிஸ் இவ்னி குவின்டோ,
அன்னோக்யு டாமினி (ஒப்பம்) கிரேசன் இர்க்
மில் லெஸ்ஸிமோ புதாப்பர் ஏசி செஸ்
நான் சென்டசிம்
குயின்ஸ்குவாஜெஸ்ஸிமோ செகண்டோ
கொலம்பியா பல்கலைக் கழகத்தின் முத்திரை[1]

---

1. கைர்மோடே, தொகுதி 10, பக். 280 - 288.

# (136)

## சம்மேளனத்துக்குக் கட்டிடம் கட்டு விப்பதில்தான் என் கவனமெல்லாம் பதிந்துள்ளது

*1952 செப்டம்பர் 28ஆம் தேதி மாலை 4 மணிக்கு பம்பாயில் நரே பூங்கா மைதானத்தில் (ஜிஐபிகர் தொழிற்சாலைக்குச் சாலைக்கு எதிரில்) தீண்டப்படாதோரின் கூட்டம் ஒன்றைக் கூட்டுவதெனத் தீர்மானிக்கப்பட்டது. அக்கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் பேச வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. இது சம்பந்தமாக ஒரு துண்டுப் பிரசுரம் வெளியிடப்பட்டது. தீண்டப்படாதோர் சம்மேளனச் செயலாளராக ஜே. ஜி. பதங்கர், மும்பாய் மகர் நியதி பஞ்சாயத்துச் சட்டத்தின் பொதுச் செயலாளரான எல். எப். ஹிண்ட் லேகர், தீண்டப் படாதோர் மேம்பாட்டுப் பொறுப்பான்மைக் கழகத்தின் செயலாளரான எஸ். ஏ. உப்ரியம், எம். எம். சசலேகர் ஜே. ஓ. சி. சமதா சைனிக் டால் ஆகியோர் இத்துண்டு பிரசுரத்தில் கையொப்பமிட்டிருந்தனர்.*

*தீண்டப்படாதவர்களால் மைதானம் நிரப்பி வழிந்தது. சரியாக மாலை 5.30 மணிக்கு டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் கூட்டத்தில் கலந்து கொண்டார். தீண்டப்படாதவர்கள் பலத்த கரகோஷத்துடன் அவரை வரவேற்றனர்.*

*தொடக்க உரை நிகழ்த்திய பிறகு கூட்டத்தில் உரையாற்றும்படி டாக்டர் அம்பேத்கரை உப்சியம் கேட்டுக் கொண்டார்.*[1]

சம்மேளனத்துக்கு ஒரு கட்டிடம் கட்டுவதில்தான் தற்போதைக்குத் தமது கவனமெல்லாம் ஆழ்ந்துபோயுள்ளது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். இருந்தாலும் நான் டில்லி செல்லுகிறேன். சில நாட்கள் அங்கேயே தங்கியிருப்பேன். பம்பாயில் நான் இல்லாத காரணத்தால் நிதி திரட்டும் பணி சுணக்கம் அடையக்கூடும் என்று அச்சம் தெரிவித்தார்.

---

1. ஜனதா, அக்டோபர் 4, 1952.

தாராளமாக நிதி உதவி செய்யும்படி தமது சமூகத்தைச் சேர்ந்தவர்களைச் கேட்டுக் கொண்ட டாக்டர் அம்பேத்கர் இது விஷயத்தில் பொது மக்கள் தமக்குப் பெரிதும் ஆதரவு நல்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

கடந்த சில மாதங்களில் ரூ. 22, 000/= திரட்டப்பட்டுள்ளது. கடன் வாங்கியாவது சங்கக் கட்டிடம் கட்ட வேண்டும் என்று ஒரு சமயம் டாக்டர் அம்பேத்கர் எண்ணினார். இப்போது அவர் தமது எண்ணத்தை மாற்றிக் கொண்டார். சம்மேளன உறுப்பினர்கள் வழங்கும் நிதியிலிருந்தே கட்டிடம் கட்டப்பட வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டார்!

---

1. டைம்ஸ் ஆப் இந்தியா செப்டம்பர் 29, 1951.

## (137)

# நவீன உலகின் தேவைகளை நிறைவேற்ற பல்கலைக்கழகப் படிப்பு அவசியம் என்பது ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்

*எல்பின்ஸ்டன் கல்லூரி மாணவர்களுக்கு ஆண்டு விழாக் கூட்டம் 1952 டிசம்பர் 16ஆம் தேதி நடைபெற்றபோது "இன்றைய மாணவர்களை எதிர்நோக்கும் பிரச்சினைகள்" என்பது குறித்து டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் உரையாற்றினார்.*

*இன்றைய உலகின் தேவைகளை நிறைவேற்றும் வகையில் பல்கலைக்கழகக் கல்வியைப் முறைமைப் படுத்துமாறும், பல்கலைக் கழகத்தை எழுத்தர்களுக்குப் பயிற்சி அளிக்கும் இடமாக அல்லாமல் அறிவொளி ஊட்டும் இடமாக மாற்றும்படி மாணவர்களை அவர் கேட்டுக் கொண்டார்.*[1]

---

*1. கீர், ப. 445.*

# (138)

# ஜனநாயகம் வெற்றிகரமாக செயல்படுவதற்கு அத்தியாவசியமான நிலைமைகள்

புனா மாவட்ட சட்ட நூலக உறுப்பினர்கள் பின்கண்ட நோக்கங் களுக்காக டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு அழைப்பு விடுத்திருந்தனர்;

1. காலஞ்சென்ற திரு. எல்.ஆர். கோகலேயின் உருவப்படத்தைத் திறந்துவைத்தல்.

2. மூத்த வழக்குறைஞர்களான திரு. ஏ.பி. சேத்னாவும், திரு. எச்.வி. துல்புலேயும், சட்ட நூலகத்தில் தனியாகப் பாதுகாத்து வைப்பதற்காக, நன்கொடையாக வழங்கிய நூல்கள் பிரிவைத் திறந்து வைத்தல்.

டாக்டர் பி.ஆர். அம்பேத்கரும் திருமதி எஸ். அம்பேத்கரும் இந்த அழைப்பினை ஏற்றுக் கொண்டனர்.

மாவட்ட மற்றும் குற்றவியல் அமர்வு மன்ற நீதிபதியான பி.சி. பாட் விழாவிற்குத் தலைமை தாங்கினார்.

சங்கீத கலாநிதி மாஸ்டர் கிருஷ்ணராவ் புலம்பரிகர் டாக்டர் அம்பேத்கரையும் திருமதி அம்பேத்கரையும் வரவேற்கும் பாடல் ஒன்றைப் பாடினார். இந்த வரவேற்புப் பாடல் சகோதர வழக்குறைஞர் களில் ஒருவரான எஸ்.ஜி. பாட்டால் இயற்றப்பட்டதாகும்.

துணைத் தலைவரான திரு. கே.எஸ். சௌபால் வரவேற்புரை நிகழ்த்தினார்.

கௌரவ செயலாளரான திரு. வி.பி.கோகட்டே நூலக அறிக்கையை வாசித்தார். காலஞ்சென்ற திரு. எஸ். கோகலேயின் உருவப் படத்தைத் திறந்து வைக்குமாறு, திரு. ஏ. பி. சேத்னாவும், எச்.

வி. துல்புலேயும் நன்கொடையாகத் தந்த நூல்கள் வைத்துள்ள பகுதிகளைத் திறந்து வைக்குமாறும் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரை திரு. பி.டி. பால் கேட்டுக்கொண்டார்.

பின்னர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் காலஞ்சென்ற திரு. எல்.ஆர். கோகலேயின் படத்தையும், மேலே குறிப்பிட்ட பகுதிகளையும் திறந்து வைத்தார்.

நிகழ்ச்சிக்குத் தலைமை வகிந்த திரு. பி. வி. பாட் பின்கண்டவாறு கூறினார்:

"சகோதரர்களே, சகோதரிகளே, நீதிமன்ற மற்றும் வழக்குறைஞர்களே, மன்ற உறுப்பினர்களே, மகிழ்வூட்டும் பணியை நான் ஆற்ற வேண்டியுள்ளது. இன்று நாம் எடுத்துக் கொண்ட விஷயம் பற்றி ஒரு சில வார்த்தைகள் பேசுமாறு பிரதம விருந்தினரைக் கேட்டுக் கொள்கிறேன். என் உடல் நலம் சரியில்லாததால் நீண்டதொரு உரை நிகழ்த்த இயலாமலிருப்பதற்காக நீங்கள் அன்பு கூர்ந்து என்னை மன்னிக்க வேண்டும். நாம் பேசுவதற்கு எடுத்துக் கொண்ட பொருள் பற்றி பிரதம விருந்தினரைப் பேசுமாறு இப்போது கேட்டுக் கொள்கிறேன்"

## டாக்டர் அம்பேத்கரின் உரை

தலைவர் அவர்களே, கனவான்களே,

எனக்கு உங்கள் அழைப்பிதழ் கிடைத்ததும் இந்த மாவட்ட நூலக உறுப்பினர்கள் எந்தப் பிரச்சினைகளில் பெரிதும் ஆர்வம் கொண்டுள்ளனர் என்பதைத் தெரிந்துக்கொள்ள விரும்பினேன்; ஏனென்றால் நான் இங்கு வந்து அவர்களுக்கு ஆர்வம் இல்லாத விஷயங்கள் குறித்து பேசக்கூடும். அவ்வாறு நேருமானால் எனது வருகை உங்களுக்கோ அல்லது எனக்கோ பயனற்றதாகி விடக் கூடும். உங்கள் செயலாளர் நான்கு விஷயங்கள் குறித்த பட்டியல் ஒன்றை எனக்கு அன்போடு அனுப்பினார். இவற்றில் எதை வேண்டுமானலும் நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் என்று அவர் கூறினார். அவருக்கு அவசர அவசரமாக பதில் எழுதினேன். இதனால் என்ன விஷயம் குறித்துப் பேசுவதற்கு நான் தேர்ந்தெடுத்துள்ளேன் என்பதை

அவருக்கு என்னால் தெரிவிக்க முடியவில்லை. நான்கு விஷயங்களில் ஒன்றைப் பற்றி பேசுவதற்கு நான் தேர்ந்தெடுப்பேன், அவ்வாறு அந்த நான்கு விஷயங்களில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கவில்லை என்றால் அவர் நிர்ணயித்துள்ள நான்கு விஷயங்களுக்கு அப்பால் நான் செல்ல மாட்டேன் என்று அவரிடம் பொதுப்படையாகக் கூறினேன். அவர் குறிப்பிட்ட விஷயங்களில் என்னைக் கவர்ந்த ஒன்று நாடாளு மன்ற ஜனநாயகம் பற்றியதாகும். அது குறித்துத்தான் பேச வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் பேசுவதற்குத் தேர்ந்தெடுத்துக் கொண்ட பொருள் நாடாளுமன்ற ஜனநாயகம் அல்ல. மாறாக நாடாளுமன்ற ஜனநாயகத்துடன் மிகவும் நெருக்கமாக சம்பந்தப் பட்ட ஒரு விஷயமாகும். இது என்னுடைய கண்ணோட்டத்திலும் நாட்டின் கண்ணோட்டத்திலும் மிக முக்கியமான பொருள். இப்போது நான் உரையாற்றப்போகும் பொருள் என் பாஷையில் கூற வேண்டு மானால் "ஜனநாயகம் வெற்றிகரமாக செயல்படுவதற்கு அவசியமான நிலைமைகள்" என்பதாகும். ஜனநாயக வடிவ அரசாங்கம் எத்தகைய தங்கு தடையுமின்றித் தொடர்ந்து செயல்படுவதற்கு அவசியமான நிலைமைகள் என்ன? இந்த விஷயம் பற்றித்தான் நான் ஒரு சில கருத்துக்களைக் கூறப் போகிறேன்.

## விஷயத்துக்கு வருவதற்கு முன்னர்

எடுத்துக்கொண்ட விஷயத்துக்கு வருவதற்கு முன்னர் பூர்வாங்கமாக ஒரு சில கருத்துக்களை முன்வைக்க விரும்புகிறேன்.

ஜனநாயகம் எப்போதுமே தனது வடிவத்தை மாற்றிக் கொண்டு வந்திருக்கிறது. இதுதான் எடுத்த எடுப்பில் நான் கூறவிருக்கும் கருத்தா கும். நாம் ஜனநாயகத்தைப் பற்றிப் பேசுகிறோம். ஆனால் ஜனநாயகம் எப்போதும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. கிரேக்கர்கள் அத்தகைய ஜனநாயகத்தை பற்றிக் குறிப்பிட்டார்கள். ஆனால் சுண்ணாம்பு, பாலடைக் கட்டியிலிருந்து எவ்வாறு மாறுபடு கிறதோ அவ்வாறே அதீனிய ஜனநாயகம் மாறுபடுகிறது என்பதை எல்லோரும் அறிவர். அத்தகைய ஜனநாயகம் மக்களில் 50 சதவீதத்தை அடிமைகளாகக் கொண்டதாகும். இவ்வாறு அடிமைகளாக இருப்பவர்களுக்கு அரசாங்கத்தில் இடமில்லை. நமது ஜனநாயகம் அதீன ஜனநாயகத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டது என்பதில்

ஐயமில்லை. உங்கள் கவனத்துக்கு நான் பூர்வாங்கமாகக் கொண்டுவர விரும்பும் இரண்டாவது விஷயம் எந்த ஒரு நாட்டிலும் ஜனநாயகம் ஒரே மாதிரியாக இருப்பதில்லை என்பதாகும். இங்கிலாந்தின் வரலாற்றை எடுத்துச் கொள்ளுங்கள். 1688 ஆம் வருடப் புரட்சிக்கு முன்னர் இருந்த இங்கிலாந்தின் ஜனநாயகமும் 1688ஆம் வருடப் புரட்சிக்கு பின்னர் வந்த இங்கிலாந்தின் ஜனநாயகமும் ஒரே மாதிரியானது என்று எவரும் கூறமுடியாது. இதேபோல் முதலாவது சீர்திருத்த மசோதா சட்டமாக்கப்பட்டபோது 1688க்கும் 1832க்கும் இடையே நிலவிய பிரிட்டிஷ் ஜனநாயகமும் 1832ஆம் வருடச் சட்டம் இயற்றப் பட்டபிறகு நிலவிய ஜனநாயகமும் ஒரே மாதிரியானது என்று யாரும் கூற முடியாது. ஜனநாயகம் தனது வடிவத்தை மாற்றிக் கொண்டே இருக்கிறது.

உங்கள் கவனத்திற்கு நான் கொண்டுவரவிரும்பும் மூன்றாவது விஷயம் ஒன்றுள்ளது. ஜனநாயகம் தனது வடிவத்தில் மாறிச் கொண்டிருப்பது மட்டுமின்றி, நோக்கங்களிலும் மாறிய வண்ணம் இருக்கிறது. பண்டைக்கால. பிரிட்டிஷ் ஜனநாயகத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அந்த ஜனநாயகத்தின் குறிக்கோள் என்னவாக இருந்தது? மன்னனைக் கட்டுப்படுத்த வேண்டும், மட்டுப் படுத்த வேண்டும், அவனுக்குள்ள தனி அதிகாரங்கள் என இப்போது அழைக்கப்படும் அதிகாரங்களை மன்னன் பயன்படுத்துவதைத் தடுக்க வேண்டும் என்பதே அதன் குறிக்கோளாக இருந்தது. சட்டம் இயற்றும் ஓர் அமைப்பாக நாடாளுமன்றம் இருந்தபோதிலும் "மன்னன் என்ற முறையில் சட்டங்கள் இயற்ற எனக்கு தனி அதிகாரம் உண்டு. எனவே நான் இயற்றும் சட்டம் செல்லுபடியாகும்" என்று கூறுமளவிற்கு மன்னன் சென்றான். மன்னனின் இவ்வாறான தன் முனைப்பான அதிகாரம்தான் ஜனநாயகம் தோன்றுவதற்குக் கதவு திறந்து விட்டது.

இன்று ஜனநாயகத்தின் குறிக்கோள் என்ன? இன்றைய ஜனநாயகத்தின் குறிக்கோள் யதேச்சாதிகார மன்னன் மீது கட்டுப்பாடு செலுத்துவதல்ல. மக்களுக்கு நல்வாழ்வு கிட்டச் செய்வதே குறிக்கோளாகும். ஜனநாயகத்தின் குறிக்கோளில் இது அடிப்படையான மாற்றத்தை ஏற்படுத்துகிறது. எனவேதான் நான்

எடுத்துக் கொண்ட விஷயத்திற்குத் தலைப்பு தருவதில் நவீன ஜனநாயகம் வெற்றி பெறுவதற்கு அவசியமான நிலைமைகள் என்ற சொற்களைப் பயன்படுத்தி இருக்கிறேன்.

## ஜனநாயகம் என்பதற்கு விளக்கம்

ஜனநாயகம் என்று கூறும்போது அதற்கு நாம் என்ன பொருள் கொள்கிறோம்? மேலே செல்வதற்கு முன்னர் இது குறித்து நமக்குத் தெள்ளத்தெளிவான புரிஉணர்வு வேண்டும். அரசியல் விஞ்ஞான எழுத்தாளர்கள், தத்துவ முனிவர்கள், சமூகவியலாளர்கள் முதலானோர் ஜனநாயகம் என்பதற்கு விளக்கம் தந்திருப்பது உங்களுக்குத் தெரியும். எனது கருத்தை விளக்குவதற்கு இவற்றில் இரண்டு அம்சங்களை மட்டும் எடுத்துக் கூற விரும்புகிறேன். அரசியல் சாசனம் குறித்து வால்டர் பேகேஹாட் எழுதியுள்ள புகழ் பெற்ற நூலை உங்களில் எவராது படித்திருப்பீர்களா என்பது எனக்குத் தெரியாது. இது ஜனநாயகம் பற்றி ஒரு தெளிவான கருத்தினை வழங்க எடுத்துக்கொண்ட முதல் முயற்சியாகும். வால்டர் பேகேஹாட் எழுதியுள்ள அந்த நூலை நீங்கள் படித்தால் விவாதத்தின் மூலம் அரசாங்கம் நடத்துவதே ஜனநாயகம் என்று அவர் விளக்கி இருப்பதைத் தெரிந்து கொள்ளலாம். இவ்வாறுதான் ஜனநாயகம் என்பதற்கு அவர் பொருள் கொள்கிறார். ஆபிரகாம் லிங்கன் ஜனநாயகத்துக்கு அளிக்கும் விளக்கத்தை எடுத்துக் கொள்ளுங்கள். தெற்கத்திய ராஜ்யங்களை வெற்றிகொண்ட பிறகு கெட்டிஸ்பர்கில் நிகழ்த்திய புகழ்பெற்ற சொற்பொழிவில் மக்களால் மக்களைக் கொண்டு நடைபெறும் மக்கள் அரசாங்கம் என்று ஜனநாயகத்துக்கு அவர் விளக்கம் தந்தார். ஜனநாயகம் என்பதற்கு மக்கள் என்ன பொருள் கொள்கிறார்கள் என்பதற்கு இன்னும் எத்தனையோ விளக்கங்கள் தர முடியும். என்னைப் பொறுத்தவரையில் ஜனநாயகம் என்பதற்கு வேறுப்பட்ட முறையில், ஸ்தூலமான முறையில் பொருள் கொள்கிறேன். "ஜனநாயகம் என்பது இரத்தம் சிந்தாமல் மக்களின் பொருளாதார, சமூக வாழ்க்கையில் புரட்சிகர மாற்றத்தைக் கொண்டுவரும் ஒரு வடிவம் என்பதுதான் ஜனநாயகத்துக்கு நான் அளிக்கும் விளக்கமாகும். இவ்வாறுதான் ஜனநாயகத்தை நான் காண்கிறேன். ஜனநாயகத்தை நடைமுறைப்படுத்துவோரால், மக்களின் சமூக, பொருளாதார வாழ்க்கையில் அடிப்படையான மாற்றங்களைக் கொண்டு வருவதை ஜனநாயகம் சாத்திய

மாக்குமானால், இரத்தம் சிந்தும் முறையைப் பின்பற்றாமல் மக்களும் அந்த மாற்றங்களை ஏற்றுக் கொள்வார்களானால் அதுதான் ஜனநாயகம் என்று கூறுவேன். எது ஜனநாயகம் என்பதை நிர்ணயிப்பதற்கு இதுதான் உண்மையான தேர்வாய்வாகும், உரைகல்லாகும். இது கடுமையான சோதனையாக இருக்கவேண்டும். ஒரு பொருளின் தரத்தை தெரிந்து கொள்ள வேண்டுமானால் அதனைக் கடுமையான சோதனைக்கு உட்படுத்த வேண்டும். இன்றைய உரையை பொறுத்த வரையில் ஜனநாயகத்துக்கு இவ்வாறுதான் பொருள் வரையறை செய்ய முடிவு செய்துள்ளேன். இத்தகைய ஜனநாயகம் எவ்வாறு வெற்றி பெற முடியும்? இதுதான் என் உரையின் பிரதான கருப்பொருளாகும். ஜனநாயகம் எனும் இந்தப் பொருள் குறித்து எத்தனையோ பேர் எழுதி இருக்கின்றனர். ஆனால் ஜனநாயகத்தை வெற்றி பெறச் செய்வதற்கு எத்தகைய நிலைமைகள் தேவை என்பது குறித்து இவர்களில் எவரும் உருப்படியான யோசனைகள் எவற்றையும் தெரிவிக்கவில்லை. இந்நிலைமையில் நாம் என்ன செய்ய வேண்டும்? வரலாற்றைப் படிக்க வேண்டும். உலகின் பல்வேறு பகுதிகளில் பல்வேறு காலகட்டம் எது என்பதைக் கண்டறிந்து நமது சொந்த முடிவுக்கு வரவேண்டும்.

## நிபந்தனை1

ஜனநாயகம் வெற்றிகரமாக செயல்பட வேண்டு மென்றால் அதற்கு முதல் நிபந்தனை சமுதாயத்தில் கடுமையான ஏற்றத்தாழ்வுகள் எவையும் இருப்பதாகாது என்பது என் கருத்து. ஒடுக்கப்பட்டவர்கள் ஒடுக்கப்பட்ட வர்க்கம் எதுவும் இருக்கலா காது. இவ்வாறே அனைத்துச் சலுகைகளும் அனுபவிக்கும் வர்க்கம் எதுவும் இருக்கக்கூடாது. அதே சமயம் அனைத்து சுமைகளையும் சுமக்க வேண்டிய வர்க்கமும் இருக்கக்கூடாது. சமுதாயத்தில் இத்ததைய தொரு நிலைமை, இத்தகைய பிரிவினை, இத்தகைய அமைப்பு முறை நிலவுவது இரந்தக்ளரிக்கான, புரட்சிக்கான நுண்மங்களை அந்த சமுதாயம் தன்னுள் பெற்றிருப்பதற்கு வழிவகை செய்யும். ஜனநாயகத்தால் இந்த நோயைக் குணப்படுத்துவது சாத்தியமற்றதாகிவிடும். மக்கள், தான் கூறுவதன் பொருளைப் புரிந்து கொள்ளவில்லை என்று லிங்கன் ஒரு சமயம் கூறினார். அதே லிங்கன் தமது கெட்டிஸ்பர்க் உரையில் பிளவுபட்ட ஒரு வீடு நிலைத்து நிற்க முடியாது என்று குறிப்பிட்டார். தெற்கு மாகாணங்களுக்கும் வடக்கு

மாகாணங்களுக்கும் இடையே நிலவும் சச்சரவைத்தான், மோதலைத் தான் இங்கு அவர் எடுத்துக்காட்டியுள்ளார். தெற்கு மாகாணங் களைச் சேர்ந்த நீங்களும் வடக்கு மாகாணங்களைச் சேர்ந்த நாங்களும் பிளவுப்பட்டிருந்தால் அந்நியப் பகைவன் ஒருவன் வரும்போது நாம் ஒன்றுபட்டு இருக்க இயலாது. இந்த அர்த்ததில் தான் பிளவுபட்ட வீடு ஒன்றுபட்டு இருக்க முடியாது என்று அவர் கூறினார். ஆனால் அவர் கூறிய வாசகம் மிக ஆழமான அர்த்தத்தைக் கொண்டுள்ளது என்று நான் கருதுகிறேன். ஒரு வர்க்கத்துக்கும் மற்றொரு வர்க்கத்துக்கும் இடையே நிலவும் கடுமையான வேறு பாடுகள் ஜனநாயகம் வெற்றி பெறுவதற்கு இடையூறாக உள்ள மிகப்பெரிய முட்டுக்கட்டை என்பதே இதன் பொருள் என்று நான் புரிந்து கொள்கிறேன். ஏனென்றால் ஜனநாயகத்தில் என்ன நடை பெறுகிறது? ஜனநாயகத்தில் ஒவ்வொருவரும் - அடக்கப்பட்ட வர்களும் ஒடுக்கப்பட்டவர்களும் உரிமைகள் பறிக்கப்பட்டவர் களும், வேலைச் சுமையை சுமப்பவர்களும் கூட அனைத்துச் சலுகை களையும் அனுபவிப்பவர்களைப்போலவே வாக்களிக்கும் உரிமை பெற்றுள்ளனர்; இந்நிலைமையில் சலுகைகள் பெற்றவர்கள் சலுகைகள் பெறாதவர்களைவிடக் குறைந்த எண்ணிக்கையில் இருக்கக் கூடும். எனினும் பெரும்பான்மையினர் முடிவே எதையும் தீர்மானிக்கும் சக்தி படைத்தது என்றிருப்பதால் சலுகைபெற்ற சிலர் தங்கள் சலுகைகளைத் தாங்களே விரும்பி தாங்களே முன்வந்து விட்டுக் கொடுக்க முன்வரவில்லை என்றால், அவர்களுக்கும் கீழ்நிலையில் உள்ளவர்களுக்கும் இடையிலான தூரம் ஜனநாயகத்தை அழித்தொழித்து முற்றிலும் வேறுபட்ட ஒன்றைக் கொண்டுவரும். எனவே உலகின் பல்வேறு நாடுகளின் ஜனநாயகத்தின் வரலாற்றை நீங்கள் அலசிப் பார்ப்பீர்களேயானால் இந்த சமூக ஏற்றத்தாழ்வுகள் நிலவுவதே ஜனநாயகம் தோல்வியுறுவதற்கான காரணங்களில் ஒன்று என்பதைத் தெள்ளத் தெளிவாகக் காண்பீர்கள்.

## நிபந்தனை II

ஜனநாயகம் வெற்றிகரமாக செயல்படுவதற்குத் தேவையான இரண்டாவது அம்சம் எதிர்க்கட்சி இருப்பதாகும்.

இந்த நாட்டில் மட்டுமின்றி இங்கிலாந்திலும் கூட கட்சி முறை அரசியலைக் கண்டிப்பவர்கள் பலர் இருப்பதைக் காண்கிறேன். நான்

இங்கு வருவதற்கு சற்று முன்னால் ஒரு சிறு நூலைப் படித்தேன்; இங்கிலாந்தில் நிலவும் கட்சி முறை அரசியல் பற்றி ஹன்சார்டு கழகம் வெளியிட்டுள்ள நூல் அது. கட்சி முறை ஒரு நல்ல முறைதானா, அது ஏற்றுக்கொள்ளக் கூடியதுதானா என்பது குறித்து ஒரு முழு அத்தியாயமே தரப்பட்டுள்ளது. இது சம்பந்தமாக பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. கட்சி முறைக்கு எதிராக இருப்பவர்களும் அதே போல் எதிர்க்கட்சிகள் இருந்துவரும் முறையை எதிர்ப் பவர்களும் இவர்கள் எல்லோரும் ஜனநாயகம் என்றால் என்ன என்பதை அறவே தவறாகப் புரிந்துக் கொண்டவர்களாகவே தோன்றுகிறது. ஜனநாயகம் என்பது எதைக் குறிக்கிறது? இதற்கு இங்கு நான் பொருள்வரையறை செய்யும் பணியில் இறங்கவில்லை. ஒரு கேள்வியைத்தான் இங்கு கேட்கிறேன். ஜனநாயகம் என்பது ஒருவகை ரத்து அதிகாரம் படைத்ததாக எனக்குத் தோன்றுகிறது. ஜனநாயகம் மரபுவழியான அதிகாரத்துக்கு அல்லது சர்வாதி காரத்துக்கு எதிரானது. ஜனநாயகம் என்பது நாட்டை ஆள்வோரின் அதிகாரத்துக்கு ஏதேனும் ஒரு கட்டத்தில் எவ்வாறேனும் ஒரு தடுப்பு இருக்க வேண்டும் என்பதைக் குறிக்கிறது. ஏதேச்சாதிகாரத்தில் இத்தகைய தடுப்பு ஏதும் இல்லை. ஒரு முறை தேர்ந்தெடுக்கப்பட்ட மன்னன் நாட்டை ஆள்வதற்கு மரபுவழிபட்ட உரிமையை அல்லது தெய்வீக உரிமையைப் பெற்றிருக்கிறான். ஒவ்வொரு ஐந்தாண்டுகளின் இறுதியிலும் அவன் தன் குடிமக்களிடம் சென்று நான் நல்லவன் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? கடந்த ஐந்தாண்டு காலத்தில் நான் நன்கு ஆட்சி செய்திருக்கிறேனோ? அப்படியென்றால் என்னை மீண்டும் தேர்ந்தெடுப்பீர்களா? என்று கேட்க வேண்டியதில்லை. மன்னனின் அதிகாரத்துக்கு முடிவு கட்ட எவருக்கும் ரத்து அதிகராம் இல்லை. ஆனால் ஜனநாயகத்தில் அதிகாரத்தில் இருப்பவர்கள் ஒவ்வொரு ஐந்தாண்டும் மக்களிடம் செல்ல வேண்டும் உங்கள் கதிப் போக்கை உருவாக்குவதற்கும் உங்கள் நலனை நிலை நாட்டுவதற்கும் உங்களை பாதுகாப்பதற்கும் அதிகாரம் ஒப்படைக்கப்பட நாங்கள் தகுதியானவர்கள்தானா என்று மக்களின் அபிப்பிராயத்தைக் கேட்க வேண்டும். இதற்கு வழிவகை செய்வதைத்தான் ரத்து அதிகாரம் என்கிறேன். ஐந்தாண்டுகளின் இறுதியில்தான் அரசாங்கம் மக்களிடம் செல்ல வேண்டும் இதற்கு மத்தியில் எவரும் அரசாங்கத்தின் அதிகாரம் பற்றி ஐயப்பாடு எழுப்பலாகாது. அரசாங்கம் மக்களிடம் ஐந்தாண்டுகால நீண்ட ரத்து அதிகாரத்துக்கு உட்பட வேண்டும் என்பது மட்டுமன்றி உடனடி ரத்து அதிகார முறையும் இருக்க

வேண்டும். நாடாளுமன்றத்தில் மக்கள் உடனடியாகத் தயாராகி அரசாங்கத்துக்குச் சவால் விடக் கூடிய நிலை இருக்க வேண்டும். ஆட்சி புரிவதற்கு எவருக்கும் நிரந்தரமான அதிகாரமில்லை. எந்த கட்சியும் மக்களின் அனுமதியோடு நடைபெறவேண்டுமானால் சட்டமன்றத்திலேயே அதற்கு அறைகூவல் விடுக்கலாம். எதிர்க்கட்சி இருப்பது எவ்வளவு அவசியம் என்பதை நீங்கள் காண்பீர்கள். அரசாங்கம் எப்போதும் விழிப்போடு இருக்க வேண்டும் என்பதையே இது காட்டுகிறது. அரசாங்கம் தான் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் தனது கட்சியைச் சேராதவர்களுக்கு நியாயப்படுத்திக் காட்ட வேண்டும். துரதிருஷ்டவசமாக நமது நாட்டில் நமது எல்லா செய்திப் பத்திரிகைகளும் ஏதேனும் ஒரு காரணத்துக்காக - விளம்பரங்கள் மூலம் கிடைக்கும் வருவாய்க்காக என்று நினைக்கிறேன் - எதிர்க்கட்சி களைவிட அரசாங்கத்துக்கு அதிக முக்கியத்துவம் தருகின்றன. ஏனென்றால், எதிர்க்கட்சிகளிடமிருந்து வருமானம் கிடைப்பதற்கு சாத்தியமில்லை. அவை அரசாங்கதிடமிருந்து வருமானம் பெறுகின்றன. இதனால் ஆளும் கட்சி உறுப்பினர்களின் சொற்பொழிவுகள் தினப் பத்திரிகைகளில் பத்திப் பத்தியாக வெளியிடப்படுவதைக் காண்கிறோம். அதே சமயம் எதிர்க்கட்சியினரின் சொற்பொழிவுகள் கடைசிப் பக்கத்தில் கடைசி பத்தியில் ஏனோ தானோவென்று பிரசுரிக்கப் படுகின்றன. ஜனநாயகத்தைப் பற்றி இங்கு நான் விமர்சிக்க வில்லை. ஒரு ஜனநாயகத்துக்கு என்ன இன்றியமையாதது என்பதைப் பற்றியே இங்கு கூறுகிறேன். ஜனநாயகத்துக்கு எதிர்க்கட்சிகள் இன்றியமையாதவையாகும். இங்கிலாந்தில் எதிர்க்கட்சி அங்கீகரிக்கப் பட்டிருப்பதோடு எதிர்க்கட்சித் தலைவருக்கு அக்கட்சியை நடத்துவதற்கு சம்பளமும் அளிக்கப்படுகிறது என்பது உங்களுக்குத் தெரியுமா? இவர் ஒரு காரியதரிசியைப் பெறுகிறார். சுருக்கெழுத்தர் மற்றும் எழுத்தாளர் தரப்படுகிறார்கள். காமன்ஸ் சபையில் அவருக்கு ஓர் அறை ஒதுக்கப்படுகிறது. அங்குதான் அவர் தமது பணியைச் செய்கிறார். இதே போல் கனடாவிலும் பிரதம மந்திரியைப் போலவே எதிர்க்கட்சித் தலைவர் சம்பளம் பெறுகிறார். ஏனென்றால் அரசாங்கம் தவறான பாதையில் செல்லுகிறதா என்பதைக் காட்டுவதற்கு யாரேனும் ஒருவர் இருக்க வேண்டும் என்பதை இரு நாடுகளின் ஜனநாயகமும் உணர்கிறது. இந்தப் பணி இடை விடாமலும் நிரந்தரமாகவும் செய்யப்பட வேண்டும். இதனால்தான் எதிர்க்கட்சித் தலைவருக்குப் பணம் செலவிடப்பட வேண்டியிருப்பது குறித்து அவர்கள் கவலைப்படவில்லை.

## நிபந்தனை III

ஜனநாயகம் வெற்றிபெறுவதற்கு மூன்றாவது நிபந்தனை ஒன்றும் உள்ளது. சட்டத்தை நடைமுறைப்படுத்துவதும் நிர்வாகத்திலும் சமத்துவப் போக்குக் கடைப்பிடிக்கப் பட வேண்டும் என்பதும்தான் அந்த நிபந்தனை. சட்டத்தின்முன் சமத்துவம் நிலவாத சந்தர்ப்பங்கள் அங்குமிங்கும் இருக்கலாம். இது குறித்து இந்த சந்தர்ப்பத்தில் எவரும் அலட்டிக் கொள்ள வேண்டிய தில்லை. ஆனால் நிர்வாகத்தில் சமத்துவமாக நடத்தப்படுவதுதான் முக்கியமானது. ஒரு கட்சி அரசாங்கம் அக்கட்சியின் உறுப்பினர்கள் ஆதாயம் பெறும் வகையில் நிர்வாகம் நடத்துவதை நீங்கள் பார்த்திருக்கலாம். இவ்வகையான நிர்வாகத்துக்கு எத்தனை எத்தனையோ உதாரணங்கள் கூற முடியும். உரிமம் இல்லாமல் ஒரு குறிப்பிட்ட பண்டத்தை வாங்கவோ விற்கவோ, கூடாது என்று ஒரு சட்டம் குறித்து எவரும் சர்ச்சையில் ஈடுபட முடியாது. ஏனென்றால் இது எல்லோருக்கும் பொருத்தக் கூடியது. இந்த சட்டத்தில் எத்தகைய பாரபட்சமான அம்சமும் இல்லை. எனினும் இதற்கும் மேலே சென்று பார்ப்போம். ஒரு குறிப்பிட்ட பண்டம் சம்பந்தமாக வியாபாரம் செய்வதற்கு உரிமம் வேண்டி சம்பந்தப்பட்ட அதிகாரியிடமோ அமைச்சரிடமோ ஒருவன் செல்லும்போது என்ன நடைபெறுகிறது என்று பார்ப்போம். அந்த ஆள் என்ன தொப்பி அணிந்திருக்கிறார் என்று அமைச்சர் முதலில் பார்ப்பார். அவன் என்ன வண்ணத் தொப்பி அணிந்திருக்கிறான்? அவரைக் கவரும் வகையான தொப்பிகளை அணிந்திருந்தால் அவன் அவரது கட்சியைச் சேர்ந்தவன் என்பது உறுதியாகிறது. இன்னொருவன் வேறு ஒரு வகையான ஆடை உடுத்தியிருந்தால் அவன் வேறொரு கட்சியைச் சேர்ந்தவன் என்பதைக் காட்டுகிறது. உரிமம் பெறுவதற்கு இவ்விருவருமே தகுதியானவர்கள்தான் என்றாலும் அமைச்சர் முதலாமவனுக்கு உரிமம் வழங்கச் செய்கிறார். ஏனெனில் அவன் அவரது கட்சியைச் சேர்ந்தவன். இரண்டாவது நபருக்கு உரிமம் மறுக்கப்படுகிறது. ஏனென்றால் அவன் அவரது கட்சியைச் சேர்ந்தவன் அல்ல. இவ்வாறு நிர்வாகத்தில் பாரபட்சம் காட்டப் படுகிறது. நேர்மை நிலைநாட்டப்படுவதில்லை. சிலருக்கு உரிமம் வழங்குவதும் மற்றவர்களுக்கு உரிமம் வழங்காதிருப்பதும் போன்றவை

சின்ன விஷயங்கள். மக்களின் மிகச் சிறு பகுதியினரையே அது பாதிக்கிறது. ஆனால் நாம் மேலே சென்று இவ்வகையான பாரபட்சம் நிர்வாகத்தில் தலைகாட்டினால் என்ன நேரும் என்பதைப் பார்ப்போம். ஒரு குறிப்பிட்ட கட்சியைச் சேர்ந்த ஓர் உறுப்பினர் ஏதோ ஒரு தவறு செய்கிறார் என்றும், அதற்கு நிறைய ஆதாரம் இருக்கிறது என்றும், எனவே அவர் மீது வழக்கு தொடரப்படுகிறது என்றும் வைத்துக்கொள்வோம். அப்போது என்ன நடைபெறுகிறது? அந்தக் குறிப்பிட்டப் பகுதியைச் சேர்ந்த கட்சித் தலைவர் மாவட்ட குற்றவியல்துறை நடுவரிடம் செல்கிறார். அவரிடம் பின்வருமாறு கூறுகிறார்: "இந்த நபர் மீது வழக்குத் தொடர்வது சரியல்ல. ஏனென்றால் இவர் எங்கள் கட்சியைச் சேர்ந்தவர். இதையும் மீறி நீங்கள் வழக்கு தொடர்ந்தால் அமைச்சரிடம் சென்று, அங்கிருந்து உங்களை வேறு இடத்திற்கு மாறுதல் செய்யும் நடவடிக்கை எடுப்பேன்." இவ்வாறு இருந்தால் நிர்வாகத்தில் எத்தகைய சீர்கேடும் குழப்பமும் ஏற்படும் என்பதை நீங்களே கற்பனை செய்து கொள்ளுங்கள். இவ்வாறுதான் அமெரிக்காவில் நடைபெற்றது. இதனை பதவி ஆதாயமுறை என்று கூறுவது உண்டு. அங்கு இது எவ்வாறு நடைபெற்றது? ஏதேனும் ஒரு கட்சி அதிகாரத்துக்கு வந்ததும் என்ன நடைபெறும் தெரியுமா? முந்திய கட்சியினர் வேலைக்கு அமர்த்தியிருந்த எழுத்தர்கள் சேவகர்கள் உட்பட அனைவரையும் வேலையிலிருந்து நீக்கிவிடுவர். தங்கள் கட்சி அதிகாரத்துக்கு வர உதவியர்களை அவர்களிடத்தில் அமர்த்தி விடுவர். அனைவரும் போற்றிப் பாராட்டும் அளவுக்கு ஒரு சிறந்த நிர்வாகத்தை அமெரிக்கா பல ஆண்டுக் காலம் பெற்றிருக்கவில்லை. இது ஜனநாயகத்துக்கு உதவிகரமாக இருக்காது என்பதை விரைவி லேயே அவர்களே உணர்ந்தனர். எனவே இந்தப் பதவி ஆதாய முறையை அவர்கள் ஒழித்துக் கட்டினர். இங்கிலாந்தில் நிர்வாகம் நேர்மையானதாகவும் பாரபட்சமற்றதாகவும் அரசியல் சார்பற்ற தாகவும் இருக்கவேண்டும் என்பதற்காக அரசியல் பணிகளையும் அரசுப் பணிகளையும் வேறுபடுத்தினர். அரசுப்பணி நிரந்தரமானது. அதிகாரத்தில் இருக்கும் அனைத்துக் கட்சிகளுக்கும் அது உரியது. அமைச்சரின் தலையீடின்றி அது நிர்வாகத்தை நடத்துகிறது. பிரிட்டிஷார் இங்கு இருந்த ஒரு சமயம் இத்தகைய தொரு நிலைமை நடைமுறையில் இருந்தது. இந்திய அரசாங்கத்தில் நான் உறுப்பினராக

இருந்தபோது நடைபெற்ற ஒருநிகழ்ச்சி எனக்கு நன்கு நினைவி லிருக்கிறது. வைசிராய் டில்லியில் இருக்கும்போது ஏதேனும் ஒரு தெருவுக்கோ அல்லது மன்றத்துக்கோ அவரது பெயர் இடப் பட்டிருக்கும். ஏதேனும் ஒரு தெருவுக்கோ அல்லது நிறுவனத்துக்கோ தமது பெயரைச் சூட்டிக் கொள்ளாத ஒரே கவர்னர் ஜெனரல் லின்லித்கோ பிரபுதான். அவரது தனிச் செயலாளர் என்னுடைய நண்பர். அப்போது நான் பொதுப்பணித்துறையில் இருந்தேன். என் பொறுப்பில் எத்தனையோ பணிகள் விடப்பட்டன. ஒருநாள் அவர் என்னிடம் வந்து பின்கண்டவாறு அமைதியாகக் கூறினார்: "என் அன்பான டாக்டர் அவர்களே. ஏதேனும் ஒரு நிறுவனத்துக்கு அல்லது பள்ளிக்கு லின்லித்கோ பெயரைச் சூட்ட நீங்கள் உதவ முடியுமா என்று அமைதியாகக் கேட்டார். எவர் எவர் பெயரோ இருக்கும்போது இவருடைய பெயர் இல்லாதிருப்பது தெள்ளத் தெளிவாகத் தெரிகிறது என்று கூறினார் அவர். இது பற்றி பரிசீலிக் கிறேன் என்று நான் கூறினேன். கோடைக்காலத்தில் டில்லி வரண்டு விடுகிறது. எனவே கோடையில் டில்லிக்கு தண்ணீர் வழங்குவதற்காக ஓர் அணை கட்டுவது சம்பந்தமாக அப்போது நான் விவாதித்துக் கொண்டிருந்தேன். என்னுடைய செயலாளரான பிரியார் ஓர் ஐரோப்பியர். அவரிடம் பின்வருமாறு கூறினேன். "திரு. பிரியார் அவர்களே, இதோ பாருங்கள் கவர்னர் ஜெனரலின் செயலாளர் என்னிடம் கூறிய விஷயம் இது. இதில் நாம் ஏனும் செய்யமுடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?" அவரது பதில் என்னவாக இருக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? அவரது பதில் இதுதான்: "ஐயா இதுபோன்ற காரியம் எதையும் நாம் செய்யக் கூடாது. எது எப்படி இருந்தாலும் இந்த நாட்டில் இது போன்ற காரியத்தை செய்வது அறவே சாத்தியமற்றது." அமைச்சரின் விருப்பத்துக்கு மாறாக எந்த அதிகாரியும் கூறுவது அறவே சாத்தியமற்றது என்பது என் நினைப்பு. ஆனால் அந்நாட்களில் இவ்வாறு செய்வது முற்றும் சாத்தியமாகவே இருந்தது. ஏனென்றால், நிர்வாகத்தில் அரசாங்கம் தலையிடக் கூடாது. கொள்கையை வகுத்துக் கொடுப்பதுடன் அரசாங்கத்தின் பணி முடிந்துவிட்டது. அது வேறு எவ்வகையிலும் குறுக்கிடவோ பாரபட்சம் காட்டவோ கூடாது என்று பிரிட்டனைப் போன்றே இந்தியாவில் உள்ள நாங்களும் முடிவு செய்திருந்தோம். இது மிகவும் அடிப்படையான விஷயமாகும். இதிலிருந்து நாங்கள் ஏற்கனவே விலகிசென்று வருகிறோம். இதுவரை நாங்கள் செய்துள் ளதை அறவே ஒழித்துக் கட்டிவிடுவோமோ என்று அஞ்சுகிறோம்.

## நிபந்தனை எண் IV

ஜனநாயகம் வெற்றிகரமாக செயல்படுவதற்கு நான்காவது நிபந்தனை அரசியல் சாசன நீதி முறையைக் கடைப்பிடிப்ப தாகும் என்பது என் கருத்தாகும். அரசியல் சாசனம் குறித்து ஏராளமானோர் மிகுந்த ஆர்வமாக உற்சாகமாக இருப்பதாகத் தோன்றுகிறது. ஆனால் என்னைப் பொறுத்த வரையில் அப்படி அல்ல. அரசியல் சாசனத்தை ரத்து செய்வதற்கு, அல்லது இன்னும் சொல்லப்போனால், அதனைத் திருத்தி எழுதுவதற்கு விரும்புவோர் அணியில் சேருவதற்கு நான் முற்றிலும் தயாராக இருக்கிறேன். ஆனால் வெறும் சட்ட விதிகளைக் கொண்ட ஓர் எலும்புக் கூட்டையே நாம் பெற்றிருக்கிறோம் என்பதை மறந்து விடுகிறோம். அந்த எலும்புக் கூட்டின் தசையை, அரசியல் சாசன நீதி முறைமை என்று நாம் அழைக்கிறோமே அதை இதில்தான் காண முடியும். எனினும் இங்கிலாந்தில் அது அரசியல் சாசனத்தின் மர பொழுங்குகள் என்று அழைக்கப்படுகிறது. அவற்றைப் பின்பற்ற மக்கள் தயராக இருக்கவேண்டும். இந்தக் காலத்தில் என் நினைவுக்கு வரும் ஒன்றிரண்டு உதாரணங்களைக் கூறுகிறேன். 13 அமெரிக்கக் காலனிகள் கலவரத்தில் இறங்கியபோது வாஸிங்டன்தான் அவற்றின் தலைவராக இருந்தார் என்பது உங்களுக்கு நினைவிருக்கும் என்று மட்டும் கூறுவது உண்மையில் அவரது நிலைமையை நுட்பமாக எடுத்துக் கூறுவதாகாது. அமெரிக்க மக்களுக்கு வாஸிங்டன் அவர்களது கடவுளாகவே இருந்தார். அவரது வாழ்க்கையையும் வரலாற்றையும் படித்துப் பார்த்தால் அரசியல் சாசனம் தயாரிக்கப் பட்ட பிறகு அவர் அமெரிக்காவின் முதலாவது ஜனாதிபதியாக தேர்ந்தெடுக்கப்பட்டார் என்பதை தெரிந்து கொள்வீர்கள். அவரது பதவிகாலம் முடிந்த பிறகு என்ன நடந்தது? இரண்டாம் முறையாக ஜனாதிபதி தேர்தலுக்கு நிற்க அவர் மறுத்து விட்டார். ஒரு தடவை அல்ல, இரண்டு தடவை அல்ல, பத்துத் தடவை ஜனாதிபதி பதவிக்குப் போட்டியிட்டிருந்தாலும் அவர் போட்டியின்றி ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பார் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. இரண்டு தடவை ஜனாதிபதி பதவிக்குப் போட்டியிட்ட தோடு அவர் நிறுத்திக் கொண்டார். ஏன் என்று கேட்டபோது அவர் பின்வருமாறு கூறினார்: "என் அன்பார்ந்த மக்களே, இந்த அரசியல் சாசனத்தை நாம் தயாரித்ததற்கான நோக்கத்தை நீங்கள் மறந்து விட்டீர்கள். மரபுவழியான மன்னராட்சியை நாம் விரும்பவில்லை.

தலைமுறை தலைமுறையான அரசரையோ அல்லது சர்வாதி காரியையோ நாம் நாடவில்லை. இங்கிலாந்தின் மன்னனிடம் விசுவாசமாக இருப்பதைக் கைவிட்டு இந்த நாட்டுக்கு வந்திருக் கிறீர்கள். ஆண்டுக்கு ஆண்டு என்னைத் தேர்ந்தெடுக்கிறீர்கள். அப்படியானால் உங்கள் கோட்பாடுகள் என்ன ஆவது? பிரிட்டிஷ் மன்னனுக்கு எதிராகக் கலவரம் செய்து அவனிடத்தில் என்னை வைப்பது சரிதான் என்று உங்களால் கூற முடியுமா? வாஷிங்டன் மேலும் கூறியதாவது. என்னிடம் நீங்கள் வைத்துள்ள அன்பும் பரிவும் பாசமும் விசுவாசமும் நான் ஜனாதிபதி தேர்தலுக்கு இரண்டாவது முறையாக நிற்க வேண்டும் என்று என்னை வலியுறுத்த உங்களை நிர்ப்பந்தித்தாலும், மரபுவழி அதிகாரம் கூடாது என்று கோட் பாட்டைக் கடைப்பிடிக்கும் நான் உங்கள் உணர்ச்சிகளுக்கு இரையாகக் கூடாது. முடிவில் இரண்டாவது முறையாக தேர்தலில் நிற்க அவரை இணங்கச் செய்துவிட்டனர். அவ்வாறே அவர் தேர்தலில் நின்றார். மூன்றாவது முறை அவர்கள் அவரை அணுகிய போது அவர்களது வேண்டுகோளை அவர் நிராகரித்துவிட்டார். மற்றொரு உதாரணத்தையும் இந்த சந்தர்ப்பத்தில் உங்களுக்குக் கூற விரும்புகிறேன். எட்டாம் எட்வர்டு வின்ட்சரை நீங்கள் அறிவீர்கள். அவரது வாழ்க்கை வரலாறு தற்போது டைம்ஸ் ஆப் இந்தியாவில் தொடர்ந்து பிரசுரிக்கப்பட்டு வெளிவருகிறது. அப்போது நான் வட்ட மேஜை மாநாட்டுக்குச் சென்றிருந்தேன். அச்சமயம் மன்னரின் திருமணம் பற்றி அங்கு ஒரு பெரிய சர்ச்சை நடைபெற்றுக் கொண்டிருந்தது. அது என்ன சர்ச்சை தெரியுமா? மன்னர் தாம் காதலிக்கும் ஒரு பெண்ணை திருமணம் செய்து கொள்ள விரும்பினார். அவ்வாறு அவர் திருமணம் செய்துகொண்டால் அந்தப் பெண் ராணியாக முடியாது. அது மட்டுமல்ல அவரும் அரசர் பதவியைத் துறக்க வேண்டியிருக்கும். மன்னரின் திருமணத்தை திரு. பால்ட்வினும் எதிர்த்தார். அவர் கூறினார்: “நீங்கள் அந்தத் திருமணத்தைச் செய்து கொள்ள வேண்டாம். நான் கூறுவதை நீங்கள் கேட்கவில்லை என்றால் நீங்கள் போக வேண்டியதுதான்.” நமது நண்பரான திரு. சர்ச்சில் எட்டாம் எட்வர்டை ஆதரித்து அவருக்கு ஊக்கமளித்தார். அச்சமயம் தொழிற் கட்சி எதிர்க் கட்சியாக இருந்தது. அவர்களுக்கும் பெரும்பான்மை இல்லை. எனினும் இந்தப் பிரச்சி னையைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு திரு. பால்ட்வினைத் தோற்கடித்தால் என்ன என்று அவர்கள் எண்ணினர். ஏனென்றால் ஏராளமான கன்சர்வேடிவ் உறுப்பினர்கள் தங்களது ராஜ விசுவாசம்

காரணமாக மன்னரை ஆதரிக்க விரும்பினர். தொழிற் கட்சியும் இதே நிலையை மேற்கொள்ளுவதைக் கண்டித்து பேராசிரியர் லாஸ்கி "ஹெரால்டு" பத்திரிகையில் தொடர்ச்சியாக பல கட்டுரைகள் எழுதியது என் நினைக்கு வருகிறது என்று அவர் கூறினார்: மன்னர் பிரதமரின் ஆலோசனையை ஏற்றுக் கொள்ள வேண்டும். அவ்வாறு பிரதமரின் ஆலோசனையை ஏற்றுக் கொள்ளவில்லை என்றால் பிரதமர் அவரை வெளியேற்ற வேண்டும். இதுவே நமது நடைமுறை மரபாக இருக்கும்போது மன்னரின் அதிகாரத்தை அதிகப்படுத்தக் கூடிய ஒரு பிரச்சினையில் திரு. பால்ட்வினைத் தோற்கடிப்பது தவறாகும். எதிர்க்கட்சி அவரது ஆலோசனைக்கு செவிமடுத்தது; அந்த வழியில் அது செல்லவில்லை. நடைமுறையி லுள்ள வழிமுறைகளை நாம் கடைப்பிடிக்க வேண்டும் என்று அவர்கள் கூறினர். பிரிட்டிஷ் வரலாற்றைப் படிப்பீர்களானால் இத்தகைய உதாரணங்கள் பலவற்றை நீங்கள் காணலாம். தங்களுக்குத் தற்காலிகமாக அதிகாரம் அளிக்கக்கூடிய ஏதேனும் ஒரு பிரச்சி னையை எடுத்துக் கொண்டு தங்களுடைய எதிராளிக்கு தீங்கு விளைவிக்கக் கூடிய எத்தனை எத்தனையோ வாய்ப்புகள் கட்சித் தலைவர்களுக்கு இருக்கும். ஆனால் அவர்கள் இதற்கு இரையாக மறுத்து விடுவார்கள். ஏனென்றால் இது அரசியல் சாசனத்துக்கு ஊறு விளைவிக்கும், ஜனநாயகத்தைச் சேதப்படுத்தும் என்பது அவர்களுக்குத் தெரியும்.

ஜனநாயகத்தின் செயல்பாட்டிற்கு மிக அவசியமானது என்று நான் கருதும் மற்றொரு விஷயம் இருக்கிறது. அதாவது ஜனநாயகத்தின் பெயரால் சிறுபான்மையினர் மீது பெரும்பான்மையினரின் கொடுங்கோன்மை இருக்கக் கூடாது என்பதுதான் அது. பெரும்பான்மையினரின் ஆட்சி நடைபெற்று வந்தாலும் சிறுபான்னைமயினர் பாதுகாப்பாக இருப்பதாக எப்போதும் உணர வேண்டும். அவர்கள் ஊறுபாட்டுக்கு உள்ளாகக் கூடாது. அவர்களுக்கு எத்தகைய தீங்கும் விளைவிக்கக் கூடாது. காமன்ஸ் சபையில் இது மிகப்பெருமளவில் மதிக்கப் படுகிறது. 1931ல் திரு. ராம்சே மக்டொனால்டு தொழிற்கட்சியை விட்டுவிலகி, தேசிய அரசாங்கம் அமைந்ததை உங்களில் மிகப் பெரும் பாலோர் அறிவீர்கள். 150 உறுப்பினர்களைக் கொண்டிருந்த தொழிற் கட்சி தேர்தல் வந்த போது மொத்த இடங்கள் 650ல் 50 இடங்களை மட்டுமே பிடிக்க முடிந்தது. அப்போது திரு பால்ட்வின் பிரதம

மந்திரியாக இருந்தார். அச்சமயம் நான் அங்கு இருந்தேன். கன்சர் வேடிவ்கள் மிகபெரும்பான்மை பெற்றிருந்த நாடாளுமன்றத்தில் தொழிற்கட்சி உறுப்பினர்கள் 50 பேர்தான் இருந்தனர். எனினும் பேசுவதற்கோ எதிர்ப்பு தெரிவிப்பதற்கோ அல்லது எவ்வகையான தீர்மானங்கள் கொண்டு வருவதற்கோ தங்களுக்கு உரிய உரிமைகள் எவையும் மறுக்கப்பட்டதாக அவர்கள் ஒருபோதும் புகார் தெரிவித்ததில்லை, இதையெல்லாம் நீங்கள் அறிவீர்கள். நமது நாடாளுமன்றத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். இங்கு எதிர்க்கட்சி உறுப்பினர்கள் அடிக்கடி கண்டனத் தீர்மானங்களையோ அல்லது நம்பிக்கையில்லாத் தீர்மானங்களையோ கொண்டுவருவதை நான் நியாயப் படுத்தவில்லை. இந்த ஒத்திவைப்புத் தீர்மானங்கள் அடிக்கடி கொண்டு வரப்பட்டு மூச்சுத்திணற வைக்கும் நிலைமையில் நாடாளு மன்றத்தில் பணியாற்றுவது பெரிதும் மகிழ்ச்சி அளிக்கும் விஷய மல்ல. அதே சமயம் ஒத்திவைப்புத் தீர்மானமோ, கண்டனத் தீர்மானமோ எதுவும் விவாதத்துக்கு அனுமதிக்கப் பட்டதில்லை என்பதை நீங்கள் கவனித்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். இது என்னை பெரிதும் வியப்பில் ஆழ்த்துகிறது. பிரிட்டிஷ் நாடாளுமன்ற விவாதங்களைப் படிக்கும்போது சபையை ஒத்திவைக்க வேண்டு மென்ற எந்தத் தீர்மானமும் சபாநாயகரால் நிராகரிக்கப் பட்டதை நான் காணவில்லை ஆனால் இது ஓர் அரசாங்க உத்தரவாக இருக்க வேண்டும். பம்பாய் சட்ட மன்ற உறுப்பினராக நான் இருந்தபோது. திரு. மொரார்ஜி தேசாய் திரு. முன்ஷி, திரு. கெர் போன்ற எங்கள் நண்பர்களில் சிலர் பதவியில் இருந்தனர். எந்த ஒரு ஒத்திவைப்புத் தீர்மானத்தையும் விசாரிப்பதற்கு அவர்கள் ஒருபோதும் அனுமதிக்க வில்லை. அப்போது சபாநாயகராக இருந்த எங்கள் நண்பர் திரு. மாவ்லங்கர் ஒத்திவைப்பு தீர்மானம் விதிமுறைப்படி இல்லை என்று நிராகரிப்பார் அல்லது அவர் அனுமதித்தால் அமைச்சர் அதற்கு ஆட்சேபம் தெரிவிப்பார். அமைச்சர் ஆட்சேபம் தெரிவித்தால் என்ன நடைபெறும் என்பது உங்களுக்குத் தெரியும். அமைச்சர் ஆட்சேபம் தெரிவித்தால் ஒத்திவைப்புத் தீர்மானத்தைக் கொண்டுவரும் உறுப்பினர் 30 அல்லது 40 பேரை அல்லது சட்டப் படி எத்தனை பேர் தேவையோ அத்தனை பேரைத் தமக்கு ஆதரவாகக் காட்ட வேண்டும். அவையில் சிறு சமூகங்களின் பிரதிநிதிகள் 4 அல்லது 6 பேர்களே இருப்பர். இத்தகைய சிறு சமூகத்தினர் தங்களுக்குள்ள குறைகளை எடுத்துரைக்க வாய்ப்பே கிட்டாது. இதனால் என்ன நிகழ்கிறது தெரியுமா? இந்த சிறு

பான்மையின மக்கள் நாடாளுமன்றத்தைச் சேர்ந்தவர்களிடம் வெறுப்பு உணர்வு கொள்கின்றனர். அரசியல் சட்டத்துக்குப் புறம்பான ஒரு புரட்சிகர உணர்வை வளர்த்துக் கொள்கின்றனர். எனவே, ஒரு ஜனநாயகம் செயல்படும்போது, அதற்கு அடிப் படையாக உள்ள பெரும்பான்மையினர் எதேச்சாதிகார முறையில் நடந்து கொள்ளக் கூடாது.

மற்றொரு விஷயத்தைக் கூறிவிட்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன். சமுதாயத்தில் தார்மிக ஒழுங்கு நிலவுவது. ஜனநாயகத்துக்குத் தேவை என்று கருதுகிறேன். என்ன காரணமோ நமது அரசியல் அறிஞர்கள் ஜனநாயகத்தின் இந்த அம்சத்தை ஒருபோதும் கணக்கிலெடுத்துக் கொள்வதில்லை. அறவியல் அரசியலிலிருந்து மாறுபட்ட ஒன்று. நீங்கள் அரசியலைக் கற்றுக் கொள்ளலாம். அறவியலின்றி அரசியல் செயல்பட முடியு மென்றாலும் அறவியலைப் பற்றி நீங்கள் எதுவும் தெரிந்து கொள்ள முடியாது. இது திகைப்பூட்டும் ஆய்வுப் பொருள் என்பது என் கருத்து. எப்படியிருந்தாலும் அரசியலில் என்னதான் நடைபெறுகிறது? ஜனநாயகம் என்பது ஒரு சுதந்திரமான அரசாங்கம் என்ற சொல்லப் படுகிறது. சுதந்திரமான அரசாங்கம் என்றால் என்ன? சுதந்திரமான அரசாங்கம் என்றால் சமூக வாழ்க்கையின் பரந்த அம்சங்களில் சட்டத்தின் குறுக்கீடு இன்றி மக்கள் செயல்படுவதைக் குறிக்கிறது; அல்லது சட்டம் இயற்றப்படவேண்டுமென்றால் அந்த சட்டம் வெற்றி பெறுவதற்குத் தேவையான நீதிமுறைமையை சமுதாயம் பெற்றிருக்க வேண்டும் என்று சட்ட கர்த்தா எதிர்பார்க்கிறார். ஜனநாயகத்தின் இந்த அம்சத்தைச் சுட்டிக் காட்டிய ஒரே நபர் லாஸ்கிதான் என்று நான் கருதுகிறேன். ஜனநாயகத்தில் தார்மிக ஒழுங்கு எப்பொழுதுமே இடம் பெற்றுள்ளது என்று அவர் தமது நூல்களில் ஒன்றில் திட்டவட்டமாகக் கூறியுள்ளார். தார்மிக ஒழுங்கு இல்லையென்றால் நமது சொந்த நாட்டில் அநேகமாக தற்போது நடைபெற்று வருவதுபோல் ஜனநாயகம் உடைந்து நொறுக்கிச் சிதறிப்போகும்.

கடைசியாக நான் சுட்டிக்காட்டவிரும்புவது ஜனநாயகத்துக்கு பொதுஜன மனச்சாட்சி தேவை என்பதாகும். ஒவ்வொரு நாட்டிலும் அநீதி நிலவினாலும் அந்த அநீதி சம அளவில் பரவி யிருக்கவில்லை என்பதில் எந்த ஐயமும் இல்லை. சில நாடுகளில்

அநீதியின் பிரதிபலிப்பு மிகவும் குறைவாக இருக்கும். வேறு சில நாடுகளில் இந்தப் பிரதிபலிப்பு மிக அதிகமாக இருக்கும். அநீதியின் பளுவில் முற்றிலும் நசுக்கப்படுபவர்களும் உண்டு. இங்கிலாந்தில் யூதர்களின் நிலையை இவ்வகையில் பிரதானமாகக் குறிப்பிடலாம். கிறித்தவர்கள் என்றும் செய்திராத கொடுமைக்கு ஆளானவர்கள் இந்த மக்களே ஆவர். தங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதியை அகற்று வதற்கு யூதர்கள் தன்னந்தனியாகப் போராட வேண்டியிருந்தது. எனினும் பிரிட்டிஷ் கிறித்தவர்கள் அவர்களுக்கு ஒருபோதும் உதவவில்லை. இன்னும் சொல்லப்போனால், அவர்கள் இதை விரும்பவே செய்தனர். இங்கிலாந்தில் யூதர்களுக்கு உதவிய ஒரே ஆள் மன்னர்தான். இது சாதாரணமானதாகத் தோன்றலாம். ஆனால் இதற்கான காரணமும் அசாதாரணமானதுதான். அந்தக் காரணம் இதுதான். பழைய கிறித்தவ சட்டப்படி யூதர்களின் குழந்தைகள் தங்கள் தந்தையரின் சொத்துக்கு உரிமை கொண்டாட முடியாது; அந்தத் தந்தை கிறித்தவனாக இல்லாமல் யூதனாக இருப்பதே இதற்கு ஒரே காரணம்; மன்னன் விருப்ப ஆவண வழி உடைமை பெறும் நபராக இருப்பதால் இறந்துபோன ஒரு யூதனின் சொத்தை அவன் பெற்றுவந்தான். இவ்வகையான ஏற்பாட்டை மன்னனும் விரும்பினான்; அதற்காக மிகுந்த மகிழ்ச்சியும் அடைந்தான். இறந்து போன யூதனின் குழந்தைகள் மன்னனிடம் சென்று விண்ணப்பித்துக் கொண்டபோது காலஞ்சென்ற தந்தையின் சொத்தில் ஒரு சிறு பகுதியை மன்னன் அவர்களுக்கு வழங்கினான்; எஞ்சியதைத் தானே எடுத்துக் கொண்டான். இவ்வாறு அநீதி, அக்கிரமம் நடைபெற்ற போதிலும் எந்த ஆங்கிலேயனும் யூதர்களுக்கு உதவ முன்வரவில்லை; இதனால் யூதர்கள் தங்கள் சுதந்திரத்திற்காக தாங்களாகவே தொடர்ந்து போராடி வந்தனர். மக்களின் மனச்சாட்சி வீறுகொண்டெழுந்ததன் விளைவே இது. மக்களின் மனச்சாட்சி என்பது என்ன? மக்கள் மனச்சாட்சி என்பது ஒவ்வொரு தவறு இழைக்கப்படும்போதும் மனம் கிளர்ச்சி அடைவதைக் குறிப்பிடுவது; இதனால் பாதிக்கப் படுவது யார் என்பது முக்கியமல்ல; ஒவ்வொருவருமே அந்தக் குறிப்பிட்ட தவறால் பாதிக்கப்படுகிறாரோ இல்லையோ, பாதிக்கப் படுபவருக்கு உதவ முன்வருகிறார். மிக அண்மைக்கால உதராணமாக தென்னாப்பிரிக்காவை எடுத்துக் கொள்ளுங்கள். அங்கு பாதிக்கப் பட்டிருப்பவர்கள் இந்தியர் இல்லையா? ஆனால் அதே சமயம் வெள்ளையர்கள் அங்கு பாதிக்கப்படவில்லை. எனினும், இந்த அநீதி துடைக்கப்படுவதற்கு வெள்ளையரான அருட்திரு ஸ்காட் தம்மால்

முடிந்த அனைத்தையும் செய்து வருகிறார். வெள்ளையர் இனத்தைச் சேர்ந்த ஏராளமான இளைஞர்களும் தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களின் போராட்டத்தில் ஈடுபட்டு வருகின்றனர் என்று அண்மையில் பத்திரிகைகளில் படித்தேன். இதுதான் மக்களின் மனச்சாட்சி என்பது. ஒரு விஷயம் கூறி உங்களை நான் அதிர்ச்சிக்கு உள்ளாக்க விரும்பவில்லை. எனினும் சில சமயங்களில் நாம் எவ்வளவு ஞாபகமறதி உள்ளவர்களாக இருக்கிறோம் என்பதைக் கூறித்தான் ஆகவேண்டும்.

தென்னாப்பிரிக்காவைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறோம். மக்கள் ஒதுக்கி வைக்கப்படுவதை பற்றி இவ்வளவு ஆவேசமாகப் பேசும் நாம் நமது ஒவ்வொரு கிராமத்திலும் தென்னாப்பிரிக்காவைக் கொண்டிருக்கவில்லையா? நிச்சயம் இருக்கவே செய்கிறது. நாம் போய்ப் பார்த்தால்தான் தெரியும். போராட்டத்தில் எல்லா இடங் களிலும் தென்னாப்பிரிக்கா இருக்கவே செய்கிறது. அப்படியிருந்தும் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேராத எவரும் தாழ்த்தப்பட்ட இனத் தவரின் பிரச்சினைகளை எடுத்துக் கொண்டு அதற்காகப் போராடுவதை மிக அரிதாகவே பார்க்கிறேன். இது ஏன்? ஏனென்றால் "மக்களின் மனச்சாட்சி இல்லை." நானும் என்னுடைய இந்தியாவும்தான் என்னுடைய முழு உலகமே. இதற்குள்தான் கட்டுப்பட்டிருக்கிறேன். இத்தகைய நிலைமையில் மற்றவர்கள் இழைக்கும் அநீதிக்கு உள்ளாகி யுள்ள சிறுபான்மையினரை இந்த அநீதியிலிருந்து விடுபட ஏனையோ ரிடமிருந்து எந்த உதவியும் பெற முடிவதில்லை. இது ஜனநாயகத்தை அபாயத்துக்கு உள்ளாக்கும் ஒரு புரட்சிகர மனப்பான்மையைத் தோற்றுவிக்கிறது. நான் ஏற்கனவே குறிப்பிட்டது போல் நான் கூறுவது எந்த அரசியல்வாதியும் எடுத்துத்தந்த கோட்பாடோ. சித்தாந்தமோ அல்ல, மாறாக பல்வேறு நாடுகளின் அரசியல் வரலாறுகளைப் படிப்பதன் விளைவாக என்னுள் ஏற்பட்ட தாக்கமே இது; ஜனநாயகத்தைப் பாதுகாப்பதற்கு இவை மிக அத்தியா வசியமானவை என்பதை உணர்கிறேன்.

சகோதரர்களே, சகோதரிகளே, இந்த அழைப்பை எனக்கு அளிப்பதற்கு அடிப்படையான காரணம் அல்லது நோக்கம் என்ன என்பதை நான் அறியேன். உங்கள் நிகழ்ச்சி நிரலில் புதிதாக ஏதேனும் சேர்க்க நீங்கள் விரும்பியிருக்கக்கூடும். நான் அந்தப் பணியை நிறைவேற்றி விட்டேன் என்று நினைக்கிறேன். ஆயினும் என்னைப்

பொறுத்த வரையில் இன்று மாலையில் நான் நிகழ்த்திய சொற் பொழிவுக்கு நான் எடுத்துக் கொண்ட பொருள் இந்த தேசத்திற்கு மிகந்த முக்கியத்துவம் வாய்ந்தது என்று கருதுகிறேன். இதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. நாம் சுதந்திரம் பெற்றுவிட்டோம் என்ற எண்ணத்தை எப்படியோ நாம் வளர்த்துக் கொண்டுவிட்டோம். பிரிட்டிஷார் இந்த நாட்டை விட்டுச் சென்று விட்டார்கள். நாம் ஓர் அரசியல் சாசனத்தைப் பெற்றுள்ளோம். அது நமக்கு ஜனநாயகத்தை வழங்குகிறது. நல்லது, இதற்கு மேலும் நமக்கு என்ன வேண்டும்? நமது கார்களில் அமர்ந்திருப்பதுபோல் நாம் மேற்கொண்டு எதுவும் செய்யாமல் ஓய்ந்திருக்க முடியாது. அரசியல் சாசனத்தை உருவாக்கிய துடன் நமது பணி முடிந்து விட்டது என்ற இந்த அசமந்த எண்ணம் நமக்கு ஏற்படக்கூடாது என்று எச்சரிக்கிறேன். உண்மையில் நமது பணி இன்னும் முடியவில்லை. அது இப்போதுதான் ஆரம்பமாகிறது. ஜனநாயகம் என்பது எங்கு வேண்டுமானாலும் விளையக் கூடிய ஒரு தாவரம் அல்ல என்பதை நீங்கள் மனதில் கொள்ள வேண்டும். அது அமெரிக்காவில் வளர்ந்திருக்கிறது. அது இங்கிலாந்தில் வளர்ந்திருக் கிறது. ஓரளவுக்குப் பிரான்சில் வளர்ந்திருக்கிறது. ஆம், இவை யெல்லாம் உதாரணங்கள். மற்ற இடங்களில் என்ன நடந்திருக்கிறது என்பதைக் காணும் தைரியத்தை இவற்றிலிருந்து நாம் ஓரளவு பெற முடியும். முதலாம் உலகப் போரின் விளைவாகவும் ஆஸ்திரிய ஹங்கேரி சாம்ராஜ்யம் உடைந்ததன் விளைவாகவும் சுய நிர்ணய உரிமை அடிப்படையில் ஆஸ்ட்ரியாவின் பிடியிலிருந்து விடுபட்ட சிறு தேசிய இனங்களை வில்சன் உருவாக்கினார் என்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். இவை யாவும் ஜனநாயக அரசியல் சாசனத்துடன் ஜனநாயக அரசாங்கமும் தொடங்கின. அவற்றின் அரசியல் சாசனத்தில் அடிப்படை உரிமைகள் இடம் பெறவும் வழிவகை செய்யப்பட்டன. வெர்சேல்ஸ் சமாதான உடன் படிக்கை கையெழுத்தாவதற்கு இவை யாவும் கதவு திறந்துவிட்டன. என் அன்பு நண்பர்களே, அந்த ஜனநாயகம் என்னவாயிற்று? அதன் எச்ச மிச்சங்கள் எவையேனும் இருப்பதை இப்போது நீங்கள் காண்கிறீர் களா? அவை யாவும் ஒழிந்துவிட்டன. அவை அனைத்தும் மறைந்து விட்டன. அவை ஏனைய நாடுகளின் ஆதிக்கத்தில் அல்லது கண் காணிப்பில் இருக்கக்கூடும். ஜனநாயகம் அங்கு இல்லை. மிக அண்மைக் காலத்து உதாரணங்களை எடுத்துக் கொள்ளுங்கள். சிரியா ஒரு ஜனநாயக அரசாங்கத்தைப் பெற்றிருந்தது. ஒரு சில ஆண்டுகளுக்குப் பிறகு ராணுவப் புரட்சி வெடித்து சிரியாவின்

ராணுவத் தளபதி சிரியாவின் ஆட்சியாளர் ஆனார்; அங்கு ஜனநாயகம் அஸ்தமித்துப் போயிற்று. மற்றோர் உதாரணத்தை எடுத்துக் கொள்ளுங்கள். எகிப்துக்கு என்ன நேர்ந்தது? 1922ஆம் ஆண்டு முதல் 30 வருடகாலம் அங்கு ஜனநாயகம் கொலு வீற்றிருந்தது. ஒரு நாள் இரவு பரூக் நாட்டைவிட்டு வெளியேற நேர்ந்தது. நகிப் எகிப்தின் சர்வாதிகாரியானார். அரசியல் சாசனத்தையும் ரத்து செய்தார்.

நம் முன்னால் உள்ள இந்த உதராணங்களை எல்லாம் பார்க்கும் போது நமது எதிர்காலம் குறித்து நாம் மிகவும் ஜாக்கிரதையாகவும் அக்கறையோடும் இருக்க வேண்டும் என்றே கருதுகிறேன். நமது ஜனநாயகத்தைப் பலப்படுத்தும் பாதையில் மிகவும் ஆக்க பூர்வமான சில நடவடிக்கைகளை நாம் எடுக்க வேண்டுமல்லவா என்பது பற்றி நாம் சிந்திக்க வேண்டும். இங்கு நான் முன்வைத்த சில கருத்துக்கள் மூலம் இந்தப் பிரச்சினை ஆரப்போடக் கூடிய பிரச்சினை இல்லை என்ற உணர்வை உங்களிடம் நான் ஏற்படுத்தி இருக்கிறேன் என்றால் அதற்காக் மகிழ்ச்சி அடைகிறேன். சகோதரர்களே, சகோதரிகளே, இனியும் உங்களை நீண்ட நேரம் காக்க வைக்க நான் விரும்பவில்லை. நான் கூறியவற்றை மிகுந்த ஆவலோடும் கவன மாகவும் செவிமடுத்துக் கேட்டமைக்காக உங்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்![1]

---

1. வழக்குரைஞரும் புனா மாவட்ட சட்ட நூலகத்தின் கௌரவப் செயலா ளருமான வி.பி. கோகட்டே எல்.எல்.பி. யால் பிரசுரிக்கப்பட்டு, 624 சதாசிவ பெத். புனாவில் உள்ள லோக காங்கிரச அச்சகத்தில் டி.டி. காங்கால் அச்சிடப்பட்ட பிரசுரம்.

# (139)

## அறிவுதான் மனித வாழ்க்கையின் அடித்தளம்

*1952 டிசம்பர் 24ஆம் தேதி கோலாப்பூர் ராஜாராம் கல்லூரியின் மாணவர்களிடையே அக்கல்லூரியின் வருடாந்தர கூட்டத்தில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் உரை நிகழ்த்தினார். அவர் தமது உரையின் போது பின்கண்டவாறு கூறினார்: "அறிவுதான் மனித வாழ்க்கையின் அடித்தளம். மாணவனின் அறிவுத் திறத்தை நிலைநாட்டுவதற்கும், அவனது அறிவை வளர்ப்பதற்கும் அனைத்து முயற்சிகளும் மேற்கொள்ள வேண்டும். தங்களது சிந்தனை கருத்தை வளர்க்குப்படியும் தாங்கள் பெற்ற அறிவுத் திறத்தை நன்கு பயன்படுத்திக் கொள்ளும்படியும் அவர் மாணவர்களைக் கேட்டுக் கொண்டார்".[1]*

---

*1. கீர், பக். 445 - 446.*

# (140)

# மாதர்களின் சமூக முன்னேற்றத்தில் அவர்களது தலைவர்கள் அக்கறை காட்டவில்லை

கோலாப்பூர் மாதர் அமைப்புகள் 1952 டிசம்பர் 25ஆம் தேதி டாக்டர் பி.ஆர் அம்பேத்கருக்கு வரவேற்பு நிகழ்ச்சி ஒன்றை ஏற்பாடு செய்திருந்தன. இந்த நிகழ்ச்சி ராஜாராம் அரங்கில் நடைபெற்றது. இந்த நிகழ்ச்சியில் ஏராளமான பெண்களும் ஆண்களும் கலந்து கொண்டனர். திருமதி. விமலாபாய் பாகல் வரவேற்புரை நிகழ்த்தினார். பல்வேறு மாதர் அமைப்புகள் டாக்டர் அம்பேத்கரையும் திருமதி மைசாகேப் அம்பேத்கரையும் வரவேற்றன. மேஜர் தாதாசாகேப் நிம்பல்கரும் டாக்டர் அம்பேத்கரையும் திருமதி அம்பேத்கரையும் வரவேற்றார்.

வரவேற்புக்குப் பதிலளித்து டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் பேசும் போது இந்து சட்டத் தொகுப்பு மசோதாவைக் குறிப்பிட்டுப் பின்வருமாறு கூறினார்.[1]

மாதர்களின் சமூக முன்னேற்றத்தில் பிரபல இந்திய மாதர் தலைவர்கள் எவரும் உண்மையில் அக்கறை காட்டவில்லை; இந்து சட்டத் தொகுப்பு மசோதா தற்போது கடுமையான் திராவகத்துடன் கலந்த பால் போல் இருக்கிறது. இந்து சட்டத் தொகுப்பு மசோதா சட்டமாக வேண்டும் என்று அவர்கள் விரும்பினால் உண்ணாவிரதம் இருப்பதற்கு இரண்டு கொழுத்த பெண்களை அவர்கள் தேடிப் பிடித்து கொண்டுவர வேண்டும்.

---

1. ஜனதா ஜனவரி 3, 1953.

# (141)

## கடுமையான நடவடிக்கைகள் எடுப்பேன்

சம்மேளத்தின் பெல்காம் மாவட்டக் கிளையின் சார்பில் 1952 டிசம்பர் 25ஆம் தேதி நிப்பானியில் 50,000 மக்கள்* கலந்து கொண்ட ஒரு பேரணி நடைபெற்றது. டாக்டர் அம்பேத்கர் இப் பேரணியில் உரையாற்றினார். அப்போது அவர் குறிப்பிட்டதாவது;

"பின்தங்கிய வகுப்பினர் அனுபவிக்கும் துன்பமும் துயரமும் பசியும் பட்டினியும் வறுமையும் பயங்கரமான விளைவுகளை ஏற்படுத்தும் இந்த சந்தர்ப்பத்தில் அவர் பிரெஞ்சுப் புரட்சியையும் ரஷ்யப் புரட்சியையும் நினைப்பூட்டினார்.

அடுத்த தேர்தல்களுக்குள் பின்தங்கிய இனத்தவர்களின் நிலைமை மேம்படவில்லை என்றால் தாழ்த்தப்பட்ட இனத்தவரின் சம்மேளனம் கடுமையான நடவடிக்கைகளை மேற்கொள்ளும், அவை அரசாங்கத்தை நிலைகுலையச் செய்யும், அரசாங்கம் தலை விரித்தாடும் என்று ஆளும் கட்சியினரை அவர் எச்சரித்தார்.

எனது மக்களின் இன்னல்கள், வேதனைகள், வாதனைகள் தீர இன்னும் இரண்டு வருடங்கள் காத்திருப்பேன் அல்லது அடுத்த தேர்தல்கள் வரை கூடக் காத்திருப்பேன். அதற்குள் பேச்சு வார்த்தைகள் மூலம் ஏதேனும் நம்முடன் உடன்படிக்கை ஏற்படவில்லை என்றால் கடுமையான நடவடிக்கைகளை மேற்கொள்வேன் என்று அவர் மேலும் கூறினார்.

இந்தியாவில் தீண்டாமை ஏதும் இல்லை என்று அண்மையில் நாகபுரியில் திரு. நேரு பேசியதற்கு மறுப்பு தெரிவித்தார்."

### தேர்தல் தோல்விகள்

ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் வேட்பாளர்கள் தேர்தலில் தோல்வியடைந்ததற்குக் கட்சி அமைப்பிலுள்ள பலவீனம்

---

* கீர், ப. 446.

காரணமல்ல, மாறாக நமக்குத் தோழர்கள் குறைவாக இருப்பதே காரணம் என்று அவர் கூறினார்.

நமது அமைப்பு பலவீனமாக உள்ளது என்று எவரேனும் நிரூபித்தால் அரசியலை விட்டே விலகத் தாம் தயாராக இருப்பதாக டாக்டர் அம்பேத்கர் சவால் விட்டார். நமது வேட்பாளர்கள் தாழ்த்தப்பட்ட மக்களிடமிருந்து நூறு சதவிகித வாக்குகளைப் பெற்றுள்ளனர் என்றார் அவர்.

கூட்டத்துக்கு தலைமை வகித்த சம்மேளனத்தின் பொதுச் செயலாளரான திரு. ராஜ்போஜ் பேசும்போது சம்மேளனத்தின் காரியக் கமிட்டி டில்லியில் பிப்ரவரி மாதம் கூடும் என்று அறிவித்தார்—பிடிஐ[1]

---

1. நேஷனல் ஸ்டாண்டர்டு, டிசம்பர் 27, 1952.

# உஸ்மானியா பல்கலைக்கழகம் டாக்டர் அம்பேத்கரைக் கௌரவித்தது

இந்திய அரசியல் சாசனத்தின் பிரதம சிற்பியான டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் நாட்டுக்கு ஈடு இணையற்ற சேவை புரிந்துள்ளார். அவரது அரிய சாதனையை அமெரிக்காவிலுள்ள கொலம்பியா பல்கலைக்கழகம் அங்கீகரித்துள்ளது; இந்தப் பல்கலைக்கழகத்தில் ஒரு சமயம் அவர் மாணவராக இருந்தார். கொலம்பியா பல்கலைக் கழகம்தான் ஒரு விசேடப் பட்டமளிப்பு விழா நடத்தி அவருக்கு எல்எல். டி. பட்டம் வழங்கிய முதல் பல்கலைக்கழகமாகும். நாட்டிலேயே ஹைதரபாத் உஸ்மானியா பல்கலைக்கழகம்தான் 1958 ஜனவரி 12ஆம் தேதி டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு டி. லிட் (இலக்கிய முனைவர்) பட்டம் வழங்கி கௌரவித்துள்ளது.

இந்தப் பட்டமளிப்பு விழா குறித்து ஹைதராபாத் டெக்கான் கிராணிக்கில் ஜனவரி 13, 1953ஆம் தேதி இதழில் பின்கண்டவாறு எழுதிற்று:

டாக்டர் அம்பேத்கர் மிகச் சிறந் வழக்குறைஞர்களில் ஒருவர்; அடக்கி ஒடுக்கப்பட்ட மக்களின் தீவிர ஆதரவாளர். இந்திய அரசியல் சாசனத்தைத் தயாரிப்பதில் பிரதான பங்கு வகித்தவர்.

"உஸ்மானிய பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழா விற்கான நிகழ்ச்சி நிரல்"

பல்கலைக்கழக வேந்தர் பின்வருமாறு கூறகிறார்:

"உஸ்மானியா பல்கலைக் கழகத்தின் இந்தப் பட்டமளிப்புப் பேரவை (1) இந்தியாவின் ஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் (2) திரு. எம். கே. வெள்ளோடி (3) டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஆகியோருக்கு கௌரவப் பட்டங்கள் வழங்குவதற்கும் மேலும் இந்தப் பட்டங்கள் பெறுவதற்குத் தகுதிபெற்ற இவர்களுக்கு

பட்டங்கள் வழங்குவதற்கும் கூட்டப்படுகிறது. அப்போது அவர்கள் இங்கு பிரசன்னமாக இருக்க வேண்டும்."

(7) அடுத்து துணைவேந்தர் சட்டமுறைப்படியான அழைப்பு களை வாசித்து மேற்கண்டவர்களுக்கு வழங்குவார்.

(8) ஒவ்வொரு அழைப்பையும் வாசித்து முடித்ததும் பல்கலைக் கழக வேந்தர் பட்டம் வழங்கி பின்வருமாறு கூறுவார்.

"உஸ்மானியா பல்கலைக்கழகத்தின் வேந்தர் என்ற முறையில் எனக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரத்தின் அடிப்படையில், உங்களது மேம்பட்ட நிலையையும் சாதனைகளையும் கணக்கிலெடுத்துக் கொண்டு நன்மதிப்புக்கு அடையாளமாக உங்களுக்கு....... பட்டத்தை வழங்குகிறேன்.

எட்டாவது பத்தியில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரைப் பற்றிக் காணப்படும் மேற்கோள் வருமாறு;

திரு. பல்கலைக்கழக வேந்தர் அவர்களே, டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு இலக்கியத்தில் டாக்டர் பட்டம் வழங்க வேண்டும் என்று பரிந்துரைக்கப் படுகிறது.

டாக்டர் அம்பேத்கர் 1893ஆம் ஆண்டில் பிறந்தார். ஆந்திரா விலும் பம்பாயிலும் கல்வி பயின்றார். பம்பாய் பல்கலைக்கழகத்தில் படித்துப் பட்டம் பெற்ற பிறகு மேற்படிப்புப் படிப்பதற்கு அமெரிக்கா வுக்கு சென்றார். 24ஆவது வயதில் 1917ல் தத்துவத்தில் டாக்டர் பட்டம் பெற்றார். இந்தியாவுக்குத் திரும்பியதும் பரோடா சமஸ்தானத்தில் சிறிது காலம் அமைச்சராகவும் பின்னர் பம்பாய் சைடென்ஹாம் கல்லூரியில் அரசியல், பொருளாதாரப் பேராசிரிய ராகவும் பணி புரிந்தார். திரும்பவும் அவர் வெளிநாடு சென்றார். இந்தத் தடவை இங்கிலாந்துக்குச் சென்றார். விஞ்ஞானத்தில் டாக்டர் பட்டம் பெறுவதற்கு லண்டன் பொருளாதாரத்துறைக் கல்லூரியில் சேர்ந்தார்; "ரூபாய் பிரச்சினை" என்ற பெயரில் அவர் எழுதிய ஆய்வ கட்டுரை உலகெங்கும் பொருளாதார வல்லுநர்களால் பெரிதும் போற்றிப் பாராட்டப்பட்டது.

அவரது அரசியல் வாழ்க்கை முன்னமே தொடங்கிவிட்டது. ஆனால் அவரது சட்டமன்ற வாழ்க்கை 1926ல் பம்பாய் சட்ட மன்றத்தில் நுழைத்த பிறகுதான் தொடங்கிற்று. இந்திய வாக்குரிமை குறித்து லோதியன் குழுவின் முன்னால் சாட்சியம் அளித்தார். இதே போல் ராயல் கமிஷன் முன்னால் இந்திய செலாவாணி பற்றியும், மற்றும் இதர பல கமிட்டிகள், கமிஷன்கள் முன்னால் வேறு பல முக்கிய பிரச்சினைகள் குறித்தும் சாட்சியம் அளித்தார். டாக்டர் அம்பேத்கர் தமது வாழ்நாளில் ஆரம்பம் முதலே அடக்கி ஒடுக்கி கொடுமைப்படுத்தப்பட்ட மக்கள் அனைவரின் தீவிர ஆதரவாளராக இருந்தார். இத்தகைய மக்கள் அவரது அனுதாபத்தை பெற்றனர். அவர் தாழ்த்தப்பட்டோர் சம்மேளனத்தின் நிறுவனத் தலைவரானார். தாழ்த்தப்பட்ட மக்களைப் பிரதிநிதித்துவப்படுத்த லண்டன் வட்ட மேஜை மாநாட்டுக்கு (1930 - 1932) அவர் அழைக்கப்பட்டார்.

1942 முதல் 1946 வரை வைசிராய் நிர்வாகக் கவுன்சிலில் தொழிலாளர் துறை உறுப்பினர் என்ற உயர் பதவி வகித்து வந்தார். 1947ல் இந்தியா சுதந்திரம் அடைந்தது. அவர் அமைச்சரவையில் சட்டத்துறைக்குப் பொறுப்பேற்றார். இந்திய அரசியல் சாசனத்தைத் தயாரிக்கும் பொறுப்பு அவரிடம் ஒப்படைக்கப்பட்டது. இது விஷயத்தில் அவர் ஆற்றிய மகத்தான பங்கு பிரசித்தி பெற்றது.

டாக்டர் அம்பேத்கர் நூல்கள் படிப்பதில் எல்லையற்ற ஆர்வமும் வேட்கையும் கொண்டவர். அவருக்கு ஏழு மொழிகள் தெரியும். அவர் தனிச்சிறப்புமிக்க நூலாசிரியர். ஏராளமான நூல்களை எழுதியுள்ளார். தீண்டப்படாதவர்களுக்காக காங்கிரசும் காந்தியும் செய்தது என்ன? சாதி ஒழிப்பு, சம்மேளனம் காணும் சுதந்திரம், பாகிஸ்தானும் இந்தியப் பிரிவினையும், ரானடேயும் காந்தியும் முதலான நூல்களை இவ்வகையில் குறிப்பிடலாம்.

திரு. பல்கலைக்கழக வேந்தர் அவர்களே, டாக்டர் பட்டம் பெறுவதற்கு நான் முன்மொழியும் டாக்டர் அம்பேத்கர் மிகவும் பிரபலமானவர், உயர் நிலையில் உள்ளவர்; அரும்பெரும் சேவைகள் புரிந்து வருபவர், மிகத் திறமை வாய்ந்தவர், வழக்கறிஞர்களில் ஒருவர், பிரபல சட்டமன்ற உறுப்பினர், இந்தியாவின் மிகவும் பின்தங்கிய, பெரிதும் கொடுமைப்படுத்தபட்டு வரும் மக்களின் தீவிர ஆதரவாளர், அவர்களது நல்வாழ்வுக்காக அல்லும் பகலும் பாடுபட்டு வருபவர்,

திரு. பி.ஆர். அம்பேத்கர் மீது நாம் கொண்டுள்ள எல்லையற்ற அன்புக்கும் மதிப்புக்கும் அடையாளமாக அவருக்கு கௌரவப் பட்டம் வழங்குமாறு உங்களை இப்போது பணிவன்போடு கேட்டுக் கொள்கிறேன்.

டாக்டர் பி.ஆர் அம்பேத்கருக்கு கௌரவப் பட்டம் பின்கண்ட முறையில் வழங்கப்பட்டது.[1]

உஸ்மானிய பல்கலைக்கழகம்

இலக்கியத்துறை

டாக்டர் பட்டத்தை

டாக்டர் அம்பேத்கருக்கு வழங்குகிறது

அவர் வகிக்கும் உயர் நிலையையும் அவர் புரிந்துள்ள மகத்தான சாதனை களையும் அங்கீகரித்து இந்தப் பட்டத்தை வழங்குகிறோம்.

ஹைதராபாத் - டெக்கான் பல்கலைக்கழக வேந்தர்

ஜனவரி 12, 1953.

---

1. கைர்மோட், தொகுதி II பக். 63 - 66.

## (143)

# பௌத்த கோட்பாடு ஏற்கப்படவில்லை என்றால் ஐரோப்பிய சர்ச்சை வரலாறு ஆசியாவிலும் எதிரொலிக்கும்

ஜப்பானிலுள்ள இந்திய - ஜப்பானியக் கலாசாரக் கழகங்களின் துணைத் தலைவரான திரு. எம்.ஆர். மூர்த்திக்கு சம்மேளனத்தின் பொதுச் செயலாளரும் உலக பௌத்தர்கள் மாநாட்டிற்குப் பிரதிநிதியுமான திரு. பி.என். ராஜ்போஜ், புது டில்லியில் 1953 பிப்ரவரி 15ஆம் தேதியன்று வரவேற்புக் கூட்டம் ஒன்றை நடத்தினர். இந்தக் கூட்டத்தில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் பேசும்போது இப்போதைய தலைமுறையும் சரி அல்லது வருங்காலத் தலைமுறைகளும் சரி பௌத்த மதத்தையோ அல்லது மார்க்சியத்தையோ ஏற்றுக் கொள்ள வேண்டிவரும் என்று கருத்துத் தெரிவித்தார்.

டாக்டர் அம்பேத்கர் மேலும் பேசும்போது உலகின் இன்றைய நிலைமையில் அதனை நான் ஆராய்ந்த போது மோதல் எந்த வடிவத்தில் தோன்றினாலும் அது பௌத்த கோட்பாடுக்கும் காரல் மார்க்சின் கோட்பாடுக்கும் இடையேதான் நடைபெறும் என்ற முடிவுக்கு வந்துள்ளேன்.

"இந்தக் கண்ணோட்டம் காரணமாகத்தான் ஜப்பானும் சீனாவும் ஏனைய கீழ்த்திசை நாடுகளும் என்னைக் கவர்ந்துள்ளன." என்றார் அவர்.

கீழைநாடுகள் மேலை நாடுகளைவிட ஏற்கனவே மிகுந்த முக்கியத்துவம் பெற்று வருகின்றன. ஆனால் பௌத்த சித்தாந்தம் கடைப்பிடிக்கப்படவில்லை என்றால் ஐரோப்பிய மோதல் வரலாறு ஆசியாவிலும் நிகழக்கூடும் என்று டாக்டர் அம்பேத்கர் அச்சம் தெரிவித்தார்.

பௌத்தத்தைத் தவிர ஏனைய மதங்கள் ஆன்மா, வழிபாடு போன்ற பிரச்சினைகளில்தான் ஆழ்ந்த கவனம் செலுத்தி வருகின்றன. ஆனால் அவை மனிதனை மறந்துவிட்டன. புத்தர் மட்டும்தான்

ஆன்மாக்களைப் பற்றித் தமது கருத்துகளைத் தெரிவித்தார்; இது பற்றிய விவாதங்கள் பயனற்றவை. ஆன்மாக்கள் இருப்பதை எவரும் நிரூபிக்க முடியாது. மனிதனைப் பற்றித்தான் நான் அக்கறை கொண்டுள்ளேன். மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையே நேர்மையை, நல்லெண்ணத்தை வளர்க்க வேண்டும் என்பதில்தான் நான் மிகுந்த ஆர்வம் கொண்டுள்ளேன்."[1]

---

1. பிரிபிரஸ் ஜர்னல், பிப்ரவரி 16, 1953.

## (144)

# மேல்தட்டு வர்க்கங்கள் எனப்படுபவை துடைத்தெறியப்படும்

தாழ்த்தப்பட்ட இனத்தவரின் தலைவரான டாக்டர் பி.ஆர். அம்பேத்கர். 1953 மே 2ஆம் தேதி பம்பாயில் இளைஞர், சங்கக் கூட்டத்தில் பேசினார்; மக்களிடம் சென்று, பரம்பரை பரம்பரையாக அவர்கள் வரித்துக் கொண்டுள்ள மூடநம்பிக்கைகளிலிருந்து அவர்களை மீட்கும்படி இளைஞர்களை அவர் கேட்டுக் கொண்டார்.

சித்தார்த்தர் கல்லூரியில் சட்டமன்றத்தின் கோடைகாலப் பள்ளியை அவர் திறந்து வைத்தார். வெறும் கல்வி ஆர்வம் மட்டும் நிலவுதற்காக அவர் வருத்தம் தெரிவித்தார். தற்போது நிலவும் பிரச்சினைகளில் ஒன்று அல்லது இரண்டைத் தெரிந்தெடுத்து அவற்றுக்கு விவேகமான முறையில் தீர்வு காணும் முயற்சியில் ஈடுபடும்படி இன்றைய இளைஞர்களுக்கு அவர் ஆலோசனை கூறினார்.

அந்நிய செல்வாக்கின் தாக்கத்தின் காரணமாக மாணவர் உலகில் எண்ணற்ற அரசியல் சித்தாந்தங்கள் ஊடுருவிப் பரவி யிருப்பது குறித்து அவர் மிகுந்த அச்சம் தெரிவித்தார்.

பயனுறுதியுடைய குறிக்கோள்களைக் கொண்ட ஒரு திட்டத்தைத் தயாரிக்கும்படியும், ஸ்தூலமான விளைவுகளை விரும்பினால் தத்துவம் அல்லது ஐரோப்பிய வரலாறு குறித்த விரிவுரைகளைத் தவிர்க்கும்படியும் அவர் கூட்டத்தினரைக் கேட்டுக் கொண்டார்.

மேல் தட்டு வர்க்கத்தினர் எனப்படுபவர்கள் இன்றைய நிலைமையை உடனடியாகவும், பாரபட்சமின்றியும் மதிப்பீடு செய்தாலன்றி அவர்கள் துடைத்தெறியப்படுவார்கள் என்று டாக்டர் அம்பேத்கர் எச்சரித்தார்.

மாணவர்கள் சிறுசிறு குழுவினர்களாக மக்களிடம் செல்ல வேண்டும். நேர்மையான வாழ்க்கை நடத்தும்படி அவர்களுக்குப்

போதிக்க வேண்டும். இதற்கான தருணம் வந்துவிட்டது. என்று அவர் குறிப்பிட்டார்.

இன்றைய சமுதாயத்தை சிதைந்துபோன ஒன்று என அவர் வருணித்தார்; தற்காலத்தில் வாழ்ந்தபடி பண்டைய சமுதாயத்தின் லட்சியங்கள் பின்பற்றப்படுகின்றன என்று அவர் வருத்தத்தோடு கூறினார்.

நமது வாழ்க்கைப் பாணியை உண்மையில் பிரதிபலிக்கும் கோட்பாடுகளிலிருந்தும், விதிமுறைகளிலிருந்தும் முற்றிலும் மாறு பட்ட, வேறுபட்ட ஓர் அரசியல் சாசனத்தை நாம் பெற்றுள்ளோம் என்று அவர் குறிப்பிட்டார்.

இளைஞர் பேரவையின் தலைவரான டாக்டர் பி. ஜி. கோகலே டாக்டர் அம்பேத்கரை வரவேற்றார்![1]

---

1. சண்டே ஸ்டாண்டர்டு, மே 3, 1953.

# (145)

## சாதிகளற்ற, வர்க்கங்களற்ற சமுதாயம் தோற்றுவிக்கப்பட்டாலொழிய இந்தியா முன்னேற முடியாது

மத்திய அரசாங்கத்தின் முன்னாள் சட்ட அமைச்சரான டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் பம்பாயில் 1953 மே 27ஆம் தேதி புதன் கிழமை பேசும்போது தமது வாழ்க்கையின் எஞ்சிய நாட்களை பௌத்த மதத்தைப் பிரபலப்படுத்துவதில் ஈடுபடுத்தப் போவதாகக் கூறினார்.

அகில இந்தியத் தாழ்த்தப்பட்டோர் சம்மேளனம் புத்தர் பிரானின் பிறந்த தினத்தைக் கொண்டாடுவதற்கு நரே - பூங்கா மைதானத்தில் ஏற்பாடு செய்திருந்த கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் பேசும்போது, சாதி முறையை வன்மையாகக் கண்டித்தார்; சாதிகளற்ற, வர்க்கங்களற்ற ஒரு சமுதாயம் தோற்றுவிக்கப்பட்டா லொழிய நாடு முன்னேற முடியாது என்று குறிப்பிட்டார்.

இந்தக் கூட்டத்தில் இந்துக்களும் பெரும் எண்ணிக்கையில் கலந்து கொண்டிருப்பது பற்றி அவர் மகிழ்ச்சி தெரிவித்தார்.

பௌத்தமதம் இந்தியாவில் துரிதமாகப் பரவும் என்பதில் தமக்கு எந்த ஐயமும் இல்லை என்று கூறினார்.

புத்தரின் பிறந்த தினத்தைக் கொண்டாடிய ஏனைய அமைப்பு களில் புத்தர் கழகமும், பௌத்த தர்ம பிரசார சமிதியும் அடங்கும்.

புத்தர் ஜெயந்தியை முன்னிட்டு புதன் கிழமை அன்று பம்பாயில் உள்ள இந்திய அரசாங்க அலுவலகங்கள் மூடியிருந்தன.

அஞ்சல்துறை விடுமுறையாகவும் அன்றைய தினம் அறிவிக்கப் பட்டிருந்தது.

அன்றைய தினம் பொது விடுமுறை தினமாக இல்லாததால் மாநில அரசாங்கத்தின் வங்கிகளும் அலுவலங்களும் வழக்கம்போல் திறந்திருந்தன.[1]

டாக்டர் அம்பேத்கர் பேசிய இந்தக் கூட்டம் பற்றிய சி. ஐ. டி. அறிக்கை வருமாறு:

"பம்பாய் பரேலிலுள்ள நரே பூங்காவில் புத்த தர்ம பிரசார் சமிதி சார்பில் 1953 மே 27ஆம் தேதி நடைபெற்ற கூட்டத்திற்கு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தலைமை வகித்தார். அங்கு குழுமியிருந்த கூட்டத்தில் (5,000 பேர்) அவர் பேசும்போது பல விஷயங்களில் இந்து மதத்துக்கும் பௌத்த மதத்துக்கும் இடையே ஏராளமான வேறுபாடுகள் உள்ளன. இத்தகைய நிலைமையில் தாழ்த்தப்பட்டோர் இந்து மதத்தில் இருந்தால் அவர்கள் தங்கள் நிலையை மேம்படுத்திக் கொள்ள முடியாது என்று கூறினார். பௌத்த மதத்துக்கு ஆதரவாக பிரசாரம் செய்யத் தாம் உறுதி பூண்டிருப்பதாகவும் அறிவித்தார்.[2]

---

1. நேஷனல் ஸ்டாண்டர்டு, மே 28, 1953.
2. பம்பாய் நகரம் எஸ். பி. மே 27, 1953.

# (146)

# என்னைப் பற்றிய விமர்சனத்தைப் படித்து ஏமாந்து விடாதீர்கள்

*"பம்பாய் சியானில் ராவ்லி முகாமில் தாழ்த்தப்பட்ட சாதியினர் மகிளா மண்டல் சார்பில் நடைபெற்ற கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் பேசினார்; இக் கூட்டத்துக்கு சுமார் 3,000 பேர் வந்திருந்தனர். புத்த ஜெயந்தி தினத்தில் தாம் நிகழ்த்திய சொற்பொழிவை சிலர் குறை கூறியுள்ளனர். இதை நீங்கள் பெரிதாக எடுத்துக் கொள்ள வேண்டாம் என்று கூட்டத்தினரை அவர் கேட்டுக் கொண்டார்."*[1]

*"1953 ஜூன் 3ஆம் தேதி பம்பாயில் தாழ்த்தப்பட்ட சாதியினர் மகிளா மண்டல் சார்பில் நடைபெற்ற ஒரு கூட்டத்தில் (3,000) டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் பேசினார். கடுமையான விமர்சனங்கள் வந்துள்ள போதிலும் தங்கள் விடுதலைத் திட்டத்தை மிகுந்த ஆர்வத்தோடு செயல்படுத்தும்படிக் கூட்டத்தினரைக் கேட்டுக் கொண்டார். சம்மேளனத்தின் கட்டிட நிதிக்குத் தனது முதல் தவணையாக ரூ 401 ஐ மண்டல் வழங்கிற்று."*[2]

---

*1. பம்பாய் நகரம் எஸ். பி. (I) சி. ஐ. டி. மே. 28, 1953.*

*2. பம்பாய் இரகசிய போலீஸ் அறிக்கையின் ஒரு பகுதி.*

# (147)

# "அரசியல் என்பது தேசிய வாழ்வின் ஆதியும் அந்தமும் அல்ல"

*1953 ஜூலை மற்றும் ஆகஸ்டு மாதங்களில் கல்லூரிப் பணிகளில் டாக்டர் அம்பேத்கர் முழுக்க முழுக்க ஈடுபட்டிருந்தார். ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் பெரும்பாலான நாட்கள் அவர் அவுரங்காபாத்திலேயே தங்கியிருந்தார். அங்கு ஹைதராபாத் ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் ஊழியர்கள் மற்றும் தலைவர்களின் கூட்டமொன்றில் பேசினார்.*

*அப்போது அவர் கூறியதாவது:*

*அரசியல் என்பது தேசிய வாழ்வின் ஆதியும் அந்தமும் அல்ல. இந்தியப் பிரச்சினையை அதன் அரசியல், சமூக பொருளாதார முதலிய அனைத்து அம்சங்களிலும் மிகுந்த ஊக்கத்தோடு ஆராய வேண்டும்; அடக்கப்பட்ட ஒடுக்கப்பட்ட மக்களின் உதாரணத்துடன் அயர்வு சோர்வின்றி பாடுபட வேண்டும் என்று அவர் வலியுறுத்தினார். இந்தக் கூட்டத்தில் அவர் தமது இனத்தவருக்கு எச்சரிக்கை ஒன்றை விடுத்தார். இந்து வழிபாட்டுத் தலங்களுக்கு யாத்திரைகள் மேற்கொள்வோர் சாதிபிரஷ்டம் செய்யப்படுவர் என்று கூறினார். அங்கு யாத்திரைகள் மேற்கொள்வதால் அவர்களுக்கு எந்த நன்மையும் கிட்டாது என்று குறிப்பிட்டார்.*[1]

---

*1. கீர், பக். 447 - 448.*

# (148)

# மத்திய அரசாங்கத்துக்கு எதிராகக் கூட அகில இந்திய நில சத்தியாக்கிரகத்தை நாம் மேற்கொள்வோம்

"ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் தலைவரான டாக்டர் பி.ஆர் அம்பேத்கர் புதுடில்லியில் 1953 நவம்பர் 16ஆம் தேதி அறிக்கை ஒன்றை விடுத்தார். அவுரங்காபாத் மாவட்டத்தில் நடத்திவரும் தங்கள் நில சத்தியாக்கிரகத்தைக் கைவிடும்படி அந்த அறிக்கையில் தமது கட்சிக்காரர்களைக் கேட்டுக் கொண்டார்."

சத்தியாக்கிரகிகள் விஷயத்தில் நல்லவிதமாக நடந்து கொண்டமைக்காக அவர் ஹைதராபாத் அரசாங்கத்தைப் பாராட்டினார்.

நிலத்தை சம்பந்தப்பட்டவர்களுக்கு திருப்பித் தரும்படி அரசாங்கம் உத்தரவுகள் பிறப்பித்துள்ளது. கம்யூனிஸ்டு நடவடிக்கைகள் நடைபெற்ற நாட்களின் போது பயிரிடுவதற்காகத் திருத்தப்பட்ட நிலங்களைத் தாழ்த்தப்பட்ட சாதியினருக்கு ஒதுக்கும் யோசனையை அது பரிசீலித்து வருகிறது.

"நியாயமான கோரிக்கைக்கு இது சரியான நடவடிக்கை என நான் கருதுகிறேன் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்."

1,700 சத்தியாகிரகளில் சுமார் 1,100 பேர் மாநில அரசால் விசாரனை ஏதுமின்றி நிபந்தனையற்று விடுதலை செய்யப்பட்டுள்ளனர். இதனை மிகவும் கனிவான நடவடிக்கை என்று கூறவேண்டும். டாக்டர் அம்பேத்கர் மேலும் கூறியதாவது: சில சத்தியாக்கிரகிகள் மரங்களை வெட்டிவிட்டதாகக் கேள்விப்பட்டேன். இதற்காக என் வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். நமது குறிக்கோள் சாகுபடிக்கு நிலம் பெறுவதுதானே தவிர மரங்களை வெட்டுவதல்ல.

இரண்டு தப்பெண்ணங்களை அகற்றுவதற்காகவே இந்த அறிக்கையை வெளியிடுவதாக டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

ஹைதராபாத் சமஸ்தானத்தில் நடைபெற்ற சத்தியாக்கிரகம் என்னால் அங்கீகரிக்கப்பட்டதல்ல என்று சம்மேளனத்தைச் சேர்ந்த சில உறுப்பினர்கள் கூறியுள்ளனர். இது தவறாகும். இந்த சத்தியாக் கிரகம் மிக நல்ல காரணங்களுக்காக என்னால் அங்கீகரிக்கப்பட்டதே யாகும்.

இந்தியா எங்கும் தாழ்த்தப்பட்ட இன மக்கள் நிலம் இல்லாமல், வேலை இல்லாமல் கொடிய வறுமை நிலையில் வாழ்ந்து வருகின்றனர். இந்நிலைமையில் ஹைதராபாத் அரசாங்கம் உழுது பயிரிடுவதற்கு அவர்களுக்கு முதலில் சிறிது தரிசு நிலத்தை வழங்கிற்று, ஆனால் அவ்வாறு நிலம் பெற்றவர்கள் நிலத்தை உழுது பயிரிட்டு மகசூலை எதிர்பார்த்துக் கொண்டிருந்த நிலைமையில் அந்த நிலத்தைத் திரும்ப எடுத்துக் கொண்டது. எனவே, இது விஷயத்தில் நாம் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

தாழ்த்தப்பட்ட இன மக்களின் நலனை முன்வைப்பது தலைவர் களின் தலையாய, இன்றியமையாத கடமையாகும். அந்த மக்களின் நலனுக்கு ஆபத்து ஏற்படும்போது எதுவும் செய்யாமல் இருப்பது ஒரு தலைவர் செய்யும் துரோகமாகும் என்று அவர் மேலும் கூறினார்.

டாக்டர் அம்பேத்கர் சொன்னார்: "நமது பொறுமை சோதிக்கப் படும்போது மத்திய அரசாங்கத்துக்கு எதிராகக்கூட நாம் ஓர் அகில இந்திய சத்தியாக்கிரகத்தைத் தொடங்குவோம். சீக்கியர்களால் இதைச் செய்ய முடிகிறபோது தாழ்த்தப்பட்ட இன மக்களால் ஏன் முடியாது?"

எனவே, சத்தியாக்கிரகத்துக்கு எதிர்ப்பு தெரிவிப்பவர்கள் சம்மேளனத்தை விட்டு வெளியேறுவது நல்லது என்று டாக்டர் அம்பேத்கர் மேலும் கூறினார்.

இரண்டாவது தப்பெண்ணம் ஹைதராபாத் சமஸ்தான தாழ்த்தப்பட்டோர் சம்ளேனத்தை மறுசீரமைபப்து சம்பந்தமான தாகும். இந்தக் கிளையை நான்கு தனிக்கிளைகளாக பிரிப்பது என்று சம்மேளனத்தின் காரியக் கமிட்டி முடிவு செய்திருப்பதாக அகில இந்திய சம்மேளனத்தின் பொதுச் செயலாளரான திரு. பி.என்.

ராஜ்போஜ் அறிக்கை வெளியிட்டிருப்பது உண்மைதான். இந்த முடிவு இறுதியானதாகும்.

ஸ்தாபனத்தின் இந்த விதமான பாணி ஹைதராபாத் சமஸ்தானத்துக்கு மட்டும் வகுக்கப்படவில்லை. மாறாக எங்கெல்லாம் இந்த சம்மேளனம் செயல்படுகிறதோ அந்த அடிப்படையில் நாடு முழுவதும் இது பின்பற்றப்படுகிறது. என்று அவர் மேலும் கூறினார். சம்மேளனத்தில் ஆணைகளை மீறுவோர் விஷயத்தில் நமது ஸ்தாபனம் இதுவரை ஏனோ தானோ என்ற போக்கையே கடைப்பிடித்து வந்திருக்கிறது. இனிமேல் இந்த ஆணைகளை மீறி செயல்படுவோர் விஷயத்தில் எத்தகைய இரக்கமும் காட்டப்பட மாட்டாது![1]

---

1. நேஷனல் ஸ்டாண்டர்டு நவம்பர் 17, 1953.

# (149)

# மதத்தின் பெயரால் பணம் வசூலித்து வீணாக செலவிடுவது குற்றமாகும்

*பம்பாய் ஜேவியார் கல்லூரி மைதானத்தில் 1954 ஜனவரி 24ஆம் தேதி நடைபெற்ற அகில இந்திய சாய் பக்தர்கள் விசேட மாநாட்டில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் எம்.ஏ., பி எச். டி. பார் அட்லா நிகழ்த்திய தொடக்க உரை.*

அவர் பேசியதாவது:

இந்த சந்தர்ப்பத்தில் சில வார்த்தைகள் பேசுவதற்கு எனக்கு வாய்ப்பளித்தமைக்காக என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதற்கு நான் உரிமை கொண்டாடும் தகுதி உள்ளவன் அல்ல. சாய் பாபாவின் பக்தர்கள் எனப்படுவோரின் அணியில் சேர்ந்தவன் அல்ல நான். சாய் பாபாவை சந்திக்கும் அல்லது காணும் வாய்ப்பை நான் பெறவில்லை. அவரைப் பற்றி நான் கேள்விதான் பட்டிருக்கிறேன். அவரை நன்கு அறிந்தவர்கள் எவரையேனும் இந்த சந்தர்ப்பதத்தில் பேசுவதற்கு அழைத்திருந்தால் நன்றாய் இருந்திருக்கும். ஆனால் என்னை அழைக்க வந்திருந்தவர்கள் இந்த நிகழ்ச்சிக்கு என்னை அழைக்க வேண்டும் என்ற தீர்மானம் ஒருமனதாக நிறைவேற்றப் பட்டதாகக் கூறினர். எனது உடல் நிலை தற்போது நல்ல நிலைமையில் இல்லை. என்னால் வர இயலாது என்று சுலபமாகக் கூறியிருக்கலாம். ஆனால் அவ்வாறு கூற எனது மனம் இடம் கொடுக்கவில்லை.

நான் ஏற்கனவே கூறியது போல் சாய்பாபாவைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது. அவரைப்பற்றி எனக்குத் தெரிந்த தெல்லாம் மற்றவர் கூற நான் கேள்விப்பட்டதுதான். பாபா சிறிது காலத்திற்கு முன்னர் அமரராகிவிட்டார்கள். அவர் ஏராளமான சீடர்களை விட்டுச் சென்றிருக்கிறார் என்பதைக் கேள்விப்பட்டேன். பாபா காலமாகி விட்டாலும் அவரது சீடர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது என்பதைத் தெரிந்து கொண்டேன். பலருக்கு அவர் மத குருவாக அறியப்பட்டிருந்தார்.

இந்தியாவில் மதம் பல்வேறு வடிவங்களில் எழுந்துள்ளது. மதம் அதன் மூல வடிவத்தில் மனிதனது ஆன்மா முத்தி பெறுவதற் கான ஒரு விஷயமாக இருந்தது. இதன் பின்னர் மதக் கண்ணோட் டத்திலும் நோக்கிலும் போக்கிலும் மிகப்பெரும் மாற்றம் ஏற்பட்டது. ஆன்மாவின் முக்திக்கு அதிக முக்கியத்துவம் தராமல் மனித ஜீவன்கள் பரஸ்பரம் ஒன்றன்பால் ஒன்று நடந்து கொள்ளும் முறை குறித்த தார்மிக நெறிகளுக்கு அதாவது மனித நேயத்துக்கு, மனித சகோதரத்துவத்துக்கு மிகுந்த முக்கியத்துவம் தருவதை இது குறித்தது. பின்னர் மூன்றாவது கட்டம் வந்தது. தங்கள் வாழ்க்கைத் தேவைகளை நிறைவேற்றக் கூடியவர்களை வழிபடுவதற்கு இது இட்டுச் சென்றது. சிலர் குழந்தைகளை விரும்பினர்; சிலர் பொன்னை விரும்பினார்; சிலர் பேரிடரில் இருந்து தப்புவதை விரும்பினர். மக்களின் இத்தகைய பௌதிக தேவைகளை எவன் பூர்த்தி செய்கிறானோ அவன் அவர்களது கடவுளாகிறான். அவனை அவர்கள் பூஜிக்கின்றனர். வணங்கு கின்றனர். நான்காவதாக சாமானிய மனிதர்களின் கண்ணோட் டத்துக்கு அப்பாற்பட்டு அற்புதங்கள் புரிபவன் கடவுளாகிறான். இந்தக் காட்சிகளை எல்லாம் இந்தியாவில் காண்கிறோம். இன்று இந்தியாவில் விக்கிரகங்களையும் சாதுக்களையும் சத்தியாக்கிரகங் களையும் அற்புதங்கள் புரிபவர்களையும் வழிபடாத எந்த மதமும் இல்லை. நமது மதத்துக்கு இப்போது ஆண்டவனும் இல்லை, அற நெறியும் இல்லை. இது மனித மனத்தின் மிகக் கீழான நிலை என்பதில் எனக்கு ஐயமில்லை; மதத்தை அதன் மிகவும் விழுமிய தூய வடிவத்துக்கு மாற்றுவது வருங்காலத் தலைமுறையினர் பணியாகும்.

இதற்கிடையே நிலைமையை உள்ளது உள்ளபடியே நாம் பார்க்க வேண்டும். மத விஷயத்தில் நாம் தவறான பாதையில் சென்று வருகிறோம். அது மட்டுமல்ல, மதத்தின் பெயரால் பணம் வசூல் செய்வதும், சமூக ரீதியாக நியாயம் ஏதுமற்ற காரியங்களுக்கு அவற்றை செலவிடுவதும் இப்போது ஒரு தொழிலாகி விட்டது. இன்று உலகில் வறுமையும் ஏழ்மையும் வெறுமையும் துன்ப துயரங்களும் தாண்டவமாடுகின்றன. இத்தகைய அவல நிலையில் மதத்தின் பெயரால் பணம் வசூல் செய்வதும், பிராமணர்களுக்கும் ஏனைய யாத்திரிகர்களுக்கும் அறுசுவை உணவளிக்க அதனை பூதா படியாக செலவிடுவதும் மன்னிக்க முடியாத குற்றமாகும்.

புத்தர் இந்தப் பிரச்சினையை நன்கு பரிசீலித்துள்ளார். அவர் தமது ஒழுக்க நெறி போதனையில் *பஞ்சசீலம், அஸ்தாங்க மார்க்கம்,*

*நிப்பனா* முதலியவற்றை கைக்கொண்டுள்ளார். இதல்லாமல், பத்து ஒழுக்க நெறிகளைப் பின்பற்றும்படியும் போதிக்கும்படியும் தமது சீடர்களுக்குப் போதித்தார். இவை வருமாறு (1) *பிரதன்யா*, (2) *சீலா*, (3) *நெகம்மா*, (4) *தானா*, (5) *வீர்வா*, (6) *காந்தி* (7) (சச்சா), (8) ஆதித்தான் (9) (மைத்ரி), (10) (உபெக்கா). பிரதன்யா என்பது விவேகம் *அவித்யாவால்* உண்டாகும் இருளைப் போக்கும் வெளிச்சம் அது. மோகா என்பது நவீன விஞ்ஞானம். சீலா என்பது தார்மிக உளப்பாங்கு, தீங்கு ஏதும் செய்யக்கூடாது என்ற மனோ நிலை, நல்ல குணமுடையவராக இருத்தல். நெகம்மா என்பது உலக சுகங்களைத் துறத்தல், தானா என்பது பிரதிபலன் எதுவும் எதிர்ப் பார்க்காமல். ஒருவர் தமது உடைமைகளை இரத்தம், உடல் உறுப்புகள் இன்னும் சொல்லப்போனால் உயிரையும் கூட வழங்குவதலாகும். வீர்யா என்பது நீங்கள் செய்வதற்கு மேற்கொண்ட எதையும் பின்வாங்கும் எண்ணம் அறவே இல்லாமல் உங்கள் முழுப்பலம் கொண்டு நிறைவேற்றுவதைக் குறிக்கிறது. காந்தி என்பது பொறுமையாகும். வன்மத்துக்கு எதிராக வன்மத்தைக் கையா ளாகாமல் இருப்பதை இது குறிக்கும். சச்சா என்றால் உண்மை என்று பொருள். எவரும் ஒருபோதும் பொய் பேசக்கூடாது. அந்த நபர் உண்மையையே பேச வேண்டும். உண்மையைத் தவிர வேறு எதுவும் பேசக் கூடாது. ஆதித்தான் என்பது குறிக்கோளை அடைவதில் காட்டும் அசைக்க முடியாத ஆணித்தரமான உறுதியைக் காட்டுகிறது. மைத்ரி என்பது அனைத்து ஜீவராசிகளிடமும் நேச உணர்வைப் காட்டுவதாகும். நண்பனிடம் மட்டுமின்றி பகைவனிடமும் மனிதர் களிடம் மட்டுமின்றி சகல ஜீவராசிகளிடமும் அன்பைப் பொழிவ தாகும். உபெக்கா ஒதுங்கிய நிலையை குறிக்குமே தவிர கருத்தின் மையைக் குறிக்காது. இத்தகைய மனோ நிலையில் விருப்புக்கோ வெறுப்புக்கோ இடமில்லை; இவர்கள் பலன்களைப் பற்றிக் கவலைப்படாமல் தங்கள் முயற்சியில் முனைந்து ஈடுபட்டிருப் பார்கள். இந்த நற்பண்புகள் ஒவ்வொருவராலும் அதிகப் பட்ச அளவுக்குப் பயன்படுத்தப்பட வேண்டும் என்று புத்தர் வலியுறுத்தினார். இதனால்தான் *பாலி* நூல்களில் அவை *பரமிதாஸ்* என அழைக்கப் படுகின்றன.

புத்தர் *தான பரமிதாவை* ஆதரித்து உபதேசம் செய்தாலும் முற்றிலும் தகுதியானவர்களுக்கே தானம் வழங்கப்பட வேண்டும் என்று வலியுறுத்தினார். தானம் வழங்குவோரை அது உயர்நிலைக்கு

உயர்த்தினாலும் அது எவருக்கு வழங்கப்படுகிறதோ அவரை அது வீழ்த்திவிடக் கூடாது. தானம் என்பது உதவிதான். வீழ்ந்து பட்டவர்களை எழுந்திருக்கச் செய்து வாழ்க்கை என்னும் சாலையில் ஒருநாள் அவர்கள் எவர் உதவியுமின்றி நடந்து செல்வதற்கு வழிவகை செய்கிறது.

நீங்கள் பெரிதும் மதித்துப் போற்றும் ஒரு புனிதரின் பெயரால் நிதி திரட்டியிருந்தால் *பரமிதாக்களில்* கூறப்பட்டுள்ள நடவடிக்கை களுக்கு அதனைப் பயன்படுத்த வேண்டும். இன்றைய உலகில் எங்கு பார்த்தாலும் பசிப் பிணியும் பட்டினியும் வறுமையும் வெறுமையும் அதிகாரமும் அறியாமையும் தாண்டவமாடுகின்றன. இத்தகைய நிலைமையில் தங்களை நன்கு பராமரித்துக் கொள்ளக்கூடிய, பாதுகாத்துக் கொள்ளக் கூடிய செல்வச் சீமான்களை உண்டு களிக்க உதவுவது கொடுமையிலும் கொடுமை. எனவே இத்தகைய உதவி, மருத்துவ மனைகளுக்கும் கல்விக்கும், சிறுவீத தொழிற்சாலைகளை அமைப்பதற்கும் அளிக்கப்பட வேண்டும். ஆதரவற்ற அனாதைகளும் கோர வறுமையில் வாடும் விதவைகளும் இதனால் பயனடைவார்கள். இவர்களுக்குச் சில தொழில்களைக் கற்றுக் கொடுத்தால் அவர்கள் உழைத்துச் சம்பாதித்துத் தங்களைப் பாதுகாத்துக் கொள்வார்கள். நான் கூறியதை நீங்கள் ஏற்றுக் கொள்வீர்களானால் உங்களை சுற்றி நடைபெறும் பல விஷயங்களிலிருந்து தெளிவு பெற்று நீங்கள் அவற்றைப் பின்பற்றுவீர்கள்.

உங்களுக்கு சிந்தனை விருந்தளித்திருக்கிறேன் என்று நம்பு கிறேன். நீங்கள் நிதி திரட்டினால் நான் தெரிவித்துள்ள முறையில் அதனைப் பயன்படுத்துங்கள். இது உங்களுக்கு நன்மை செய்யும் என்பது மட்டுமன்றி சாய் பாபாவின் பெயரையும் உயர்த்தும்."[1]

---

1. 1954 ஜனவரியில் பம்பாயில் நடைபெற்ற சாய் மாநாட்டில் விநியோகிக்கப்பட்ட சிறு பிரசுரத்தின் மறுபதிப்பு.

# (150)

## என் வாழ்க்கைத் தத்துவம்

ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு வாழ்க்கைத் தத்துவம் இருக்க வேண்டும். ஒவ்வொருவருக்கும் தங்கள் நடத்தையை மதிப்பிடும் ஓர்அளவுகோல் இருக்க வேண்டும். தத்துவம் என்பது இவ்வாறு மதிப்படும் ஓர் அளவுகோலேயன்றி வேறு அல்ல.

பகவத் கீதையில் கூறப்பட்டுள்ள இந்து சமூகச் சித்தாந்தத்தை நான் நிராகரிக்கிறேன். ஏனென்றால் அரசாங்க சித்தாந்தத்தின் திரிகுண கோட்பாட்டின் அடிப்படையில் அது அமைந்துள்ளது. இது உலக சித்தாந்தத்தின் மிக மோசமான உருத் திரிபு என்பது என் கணிப்பு. சாதி அமைப்பு முறையையும், படிப்படியான ஏற்றத்தாழ்வு முறையையும் இந்து சமூக அமைப்பின் சட்டமாக அது ஆக்கியுள்ளது.

எனது சமூக சித்தாந்தத்தை இரத்தினச் சுருக்கமாகப் பின்கண்ட மூன்று வார்த்தைகளில் கூறலாம். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம். எனது தத்துவத்தை பிரெஞ்சுப் புரட்சியிலிருந்து கடன் வாங்கியதாக யாரும் கூற வேண்டாம். அப்படி நான் எதுவும் செய்யவில்லை. எனது தத்துவம், சித்தாந்தம் மதத்தை அடிப்படையாகக் கொண்டதே யென்றி அரசியல் விஞ்ஞானத்தை ஆதாரமாகக் கொண்டது அல்ல. இவற்றை நான் எனது குருவான புத்தரின் போதனைகளிலிருந்து பெற்றுள்ளேன். அவரது தத்துவத்தில் சுதந்திரத்திற்கும் சமத்துவத் திற்கும் இடம் உள்ளது. ஆனால் வரைமுறையற்ற சுதந்திரம் சமத்துவத்தை அழித்துவிட்டது. பரிபூரண சமத்துவம் சுதந்திரத்திற்கு இடம் தரவில்லை. சுதந்திரமும் சமத்துவமும் மீறப்படாதிருப்பதற்கான பாதுகாப்பாகத்தான் எனது தத்துவத்தில் சட்டம் இடம் பெற்றுள்ளது. ஆனால் சுதந்திரம் அல்லது சமத்துவம் மீறப்படாதிருப்பதற்கும் சட்டம் உத்தரவாதமாக இருக்க முடியும் என்று அவர் நம்பவில்லை. ஒப்புரவுக்கு அவர் மிக உயர்ந்த இடம் தந்தார். சுதந்திரம் அல்லது சமத்துவம் மீறப்படாதிருப்பதற்காக ஒரே உண்மையான பாதுகாப்பாக அவர் அதைக் கருதினார். ஒப்புரவு என்பது சகோதரத்துவம் அல்லது மனிதநேயத்தின் மற்றொரு பெயராகும்; அதேபோல் மனிதநேயம் என்பது மதத்திற்கான வேறொரு பெயர் எனலாம்.

சட்டம் சமய சார்பற்றது; எவரும் அதை மீறலாம்; ஆனால் சகோதரத்துவம் அல்லது சமயம் புனிதமானது; எல்லோரும் அதற்கு மதிப்பும் மரியாதையும் தர வேண்டும். எனது தத்துவத்திற்குப் புனிதமான பணி உள்ளது. மதமாற்றம் செய்யும் பொறுப்பை நான் நிறைவேற்ற வேண்டும். திரிகுணா தத்துவத்தைப் பின்பற்றுபவர்களை அதைக் கைவிடச் செய்து தனது தத்துவத்தை ஏற்கும்படிச் செய்யவேண்டும். இந்தியர்களை இன்று இரண்டு வேறுபட்ட சித்தாந்தங்கள் ஆட்கொண்டுள்ளன. அரசியல் சாசனத்தின் முகப் புரையில் வகுத்துத் தரப்பட்டுள்ள அவர்களது அரசியல் லட்சியம் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் நிறைந்த வாழ்க்கையை உறுதி செய்கிறது. ஆனால் அவர்களது மதத்தில் இடம் பெற்றுள்ள அவர்களது சமூக லட்சியம் இவற்றை அவர்களுக்கு மறுக்கிறது.

டாக்டர் பி. ஆர் அம்பேத்கர்

*(1954 அக்டோபர் 3ஆம் தேதி அகில இந்திய வானொலியில் ஒலிப்பரப்பப்பட்ட உரை)*

# (151)

# நான் கௌதம புத்தர், கபீர், மகாத்மா பூலே ஆகியோரின் பக்தன், கல்வி, சுயமரியாதை, நற்குணம் ஆகியவற்றைப் போற்றுபவன்

டாக்டர் அம்பேத்கர் வைரவிழாக் கொண்டாட்டக் குழுவின் சார்பில் 1954 அக்டோபர் 28ஆம் தேதி மாலை 6.30 மணிக்குப் பம்பாய் நைகௌம் புரந்தரே விளையாட்டரங்கில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. சுமார் 25,000 பேர் கலந்து கொண்டனர். திரு. ஆர். டி. பண்டாரே தலைமை வகித்தார்.

திரு. சங்கர் ஆனந்த் உபஷாம் டாக்டர் அம்பேத்கருக்கு நிதி அளிப்பது சம்பந்தமான விவரங்களைக் கூறினார். 1952 ஏப்ரல் 14ஆம் தேதி டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு 60 வயது முடிவடைகிறது. இது சம்பந்தமான விழா 1952-லேயே நடைபெற்றிருக்க வேண்டும். அந்தத் தேதியில் விழாவை எங்களால் நடத்த முடியவில்லை. அதற்குப் பதில் தற்போது நடத்துகிறோம். இதுவரை சுமார் 93,000 ரூபாய் திரட்டி யுள்ளோம். செலவுகள்போக 88,000 ரூபாய் மிச்சமிருக்கிறது. பம்பாய் பெருநகரில் அவருடைய சமூகத்தைச் சேர்ந்தவர்களிடமிருந்து இந்த நிதி திரட்டப்பட்டுள்ளது. திரு. கங்கர் ஆனந்த் மேலும் கூறும்போது பம்பாய் நகருக்கு வெளியே உள்ள மக்கள் கட்டிட நிதிக்காகச் சுமார் 32,000 ரூபாய் திரட்டியுள்ளனர். இந்தத் தொகை மேலே கூறிய தொகையுடன் சேர்க்கப்படும்; ஆக, டாக்டர் அம்பேத்கரிடம் மொத்தம் 1 லட்சத்து 18 ஆயிரம் ரூபாய் வழங்கப்படும்.

கூட்டத்துக்குத் தலைமை தாங்கிய தலைவர் பண்டாரே பேசும் போது வியாசர், மனு, ஆப்பிரகாம் லிங்கன் இன்னும் சொல்லப் போனால் காரல் மார்க்ஸை விடக் கூட அம்பேத்கர் பெரியவர் என்று குறிப்பிட்டார். டாக்டர் அம்பேத்கருடன் ஒப்பிடக்கூடிய தலைவர் எவரும் இந்தியாவில் இல்லை என்றார் அவர். தேசப் பிரிவினை நிகழ்வதற்குப் பத்து ஆண்டுக்கு முன்னமே அதன் கோர விளைவுகளை எடுத்துரைத்தவர் டாக்டர் அம்பேத்கர்தான். அவர் தம் வாழ்நாள் முழுவதையும் அடக்கி ஒடுக்கி, பிரித்து வைக்கப்பட்ட

மக்களுக்காக அர்ப்பணித்தவர். கூட்டத் தலைவர் ஒரு லட்சத்து பதினெட்டாயிரம் ரூபாயை டாக்டர் அம்பேத்கரிடம் வழங்கிப் பேசும்போது, இந்தப் பணத்தைத் தமது சொந்த உபயோகத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளும்படிக் கேட்டுக்கொண்டார். டாக்டர் அம்பேத்கர் விருப்பம் தெரிவித்திருப்பது போல் கட்டிடம் கட்டுவதற்குத் தனியாக நிதி திரட்டித் தருவோம் என்று அவர் உறுதி கூறினார்.

இதற்கு டாக்டர் அம்பேத்கர் பதிலளித்துப் பேசும்போது தமக்கு வழங்கப்பட்டுள்ள இந்தப் பணம் ஒரு மண்டபம் கட்டுவதற்குப் பயன்படுத்திக் கொள்ளப்படும் என்று கூறினார். இதன் பொருட்டு ஏற்கனவே நிலம் வாங்கப்பட்டுள்ளது. அதில் வசிப்பவர்கள் அங்கி ருந்து வெளியேற்றப்பட்டு வருகிறார்கள் என்றார். அவர் மேலும் கூறியதாவது: சிறு வயது முதலே நான் மிகவும் திறமையாக இருந்த தாக நினைப்பது தவறு.எனது சமூகத்திலுள்ள ஏனைய சிறுவர்களைப் போலவே நான் சாதாரண பையனாகத்தான் இருந்தேன். என் பிறந்த தேதியை என் தந்தை சரியாகக் கணித்து வைக்கவில்லை. இதனால் எனது சரியான பிறந்த தேதி எது என்று தெரியவில்லை. என் வயது அறுபதுக்கு மேலோ அல்லது கீழோ இருக்கக்கூடும். நள்ளிரவு 12 மணிக்கு நான் பிறந்தேன் என்பது உண்மை. எனது பிறப்பின்போது எனது தாயார் தாங்க முடியாத வலியால் மிகவும் அவதிப்பட்டார். நான் பிறந்தபோது நட்சத்திரங்கள் மிகவும் மோசமாக இருந்தன. இதனால் என் அன்னை விரைவில் இறந்துவிடுவார் என்று சோதிடர் கூறினார். இதன் காரணமாக என் சகோதரரும் சகோதரிகளும் என்னைப் பெரிதும் வெறுத்து ஒதுக்கினர். என்னுடைய தாயின் மரணத்திற்குப் பிறகு எனது அத்தைதான் என்னை வளர்த்தார். இளம் வயதிலேயே மகாபாரதம், பகவத்கீதை போன்ற சமய நூல்களைப் படித்தேன். எனினும் கௌதம புத்தரைப் பற்றிய புத்தகம்தான் மற்றெல்லாவற்றையும் விட என்னை வெகுவாகக் கவர்ந்தது. அது முதல் நான் புத்தரைப் பின்பற்றுபவன் ஆனேன். இந்துக்கள் தமது நலனுக்காகப் புத்த மதத்தைப் பின்பற்றுவது நலம் என்ற எண்ணம் அப்போதே எனக்கு ஏற்பட்டது. கௌதம புத்தர், கபீர், மகாத்மா பூலே ஆகியோரின் பக்தனாகி கல்வி, சுயமரியாதை, நற்குணம் ஆகியவற்றைப் போற்றுபவன். என்னிடம் கெட்ட பழக்கங்கள் எதுவும் கிடையாது. ஆனால் படிப்பில் எனக்கு உயிர். எவரும் வாழ்க்கையில் முன்னேற வேண்டுமென்றால் கல்வி இன்றியமை

யாதது. எனவே இங்குக் கூடியிருப்போர் படித்துப் பட்டம் பெற்று தங்கள் வருவாயில் ஒரு பகுதியைத் தங்கள் சமூகத்துக்காகச் செலவிட வேண்டும். நமது சம்மேளனம் அதன் இலட்சியத்தை இன்னும் எட்டாததால் அதற்காக நீங்கள் பாடுபட வேண்டும். நமது இலட்சியத்தை நோக்கி நாம் முன்னேறி வருகிறோம். இதில் சுணக்கம் ஏதும் காட்டி னோமானால் நாம் வீழ்ந்து விடுவோம். தலைமைப் பதவிக்காகச் சச்சரவிட்டுக் கொண்டிராதீர்கள் என்று உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். எனது சமூகத்திற்காக சேவை செய்ய வேண்டும் என்று நான் விரும்பியதால் நான் அரசாங்க உத்தியோகத்துக்கு ஆசைப்பட வில்லை; என் வாழ்நாள் முழுவதும் இந்தக் கோட்பாட்டை உறுதியோடு பின்பற்றி வருகிறேன். ஏதேனும் அரசாங்க உத்தி யோகத்தை நான் ஏற்றிருந்தால் இப்போது ஓய்வூதியம் பெறுபவனாக இருப்பேன். 7 அல்லது 8 வருடங்களுக்கு அதிகமாக உங்களுக்கு நான் வழிகாட்டிக் கொண்டிருக்கப் போவதில்லை. என் வாழ்நாள் காலத் திலேயே எனது இஷ்டத்துக்கு நீங்கள் வர வேண்டும் என்று உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்." இவ்வாறு டாக்டர் அம்பேத்கர் பேசி முடித்தார்.

கூட்டம் இரவு 8.45 மணிக்கு முடிந்தது.

சுமார் 300 அமைப்புகளாலும் தனி நபர்களாலும் டாக்டர் அம்பேத்கரும் அவருடைய துணைவியாரும் மாலைகள் அணிவித்துக் கௌரவிக்கப்பட்டனர்![1]

---

1. காவல் துறை அறிக்கை, தொகுதி 1, பக். 421 - 422.

# (152)

# இந்தியாவில் பௌத்த இயக்கம்: ஒரு பூர்வாங்கக் கண்ணோட்டம்

## புத்தருக்கு வெளிநாட்டுப் பயண அனுமதி சீட்டோ அயல்நாட்டு நுழைவுரிமை சீட்டோ தேவையில்லை

*1954 டிசம்பர் 4ஆம் தேதி சர்வதேச பௌத்த மாநாடு ரங்கூனில் (பர்மா) நடைபெற்றது. டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் மாநாட்டில் பங்கு கொண்டார். மாநாட்டில் அவர் உரை நிகழ்த்தினார். அவர் தமது சொற்பொழிவின் விரிவடைந்த பகுதியை இரண்டு பாகங்களில் நினைவுக் குறிப்பு வடிவத்தில் தயாரித்துக் கொண்டு வந்திருந்தார். நினைவுப் குறிப்பின் முதல் பாகத்தில் இந்தியாவில் பௌத்த மதத்தைப் பிரசாரம் செய்யும் வேலைத் திட்டம் அடங்கியிருந்தது. நினைவுக் குறிப்பு Iஇல் டாக்டர் அம்பேத்கரே இரண்டு முக்கிய விஷயங்களை எடுத்துரைத்திருந்தார். அவை வருமாறு (1) புத்தரும் அவரது தம்மமும் என்ற தலைப்பில் புத்தரின் தத்துவத்தைப் பிரசுரிப்பது; (2) பௌத்த மதத்துக்கு மாறுவதற்காக சமயச்சடங்கு முறையை நிர்ணயித்து வெளியிடுவது. இரண்டாவது பாகம் தென்னிந்தியாவில் இந்திய பௌத்தர்களின் நிலைமையை எடுத்துரைக்கிறது - ஆசிரியர்கள்.*

**நினைவுக் குறிப்பு வருமாறு:**

### நினைவுக் குறிப்பு-1

## பர்மா பௌத்த சாசன கவுன்சிலில் எனது சொற்பொழிவின் விரிவடைந்த பதிப்பு

*1. இந்தியாவுக்கு வெளியே பௌத்த மதத்தைப் பரப்புவது சாசனாக் கவுன்சிலின் குறிக்கோள்களில் ஒன்றாக இருக்க வேண்டும். இவ்வகையில் இந்தியாவைத் தங்களது முயற்சிக்கான முதல் நாடாகத்*

தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். இந்தியாவைப் போல் வேறு எந்த நாடும் இந்த அளவுக்கு உருப்படியான பலனைத் தராது.

2. இதற்கான காரணம் தெளிவானது. இந்தியா பௌத்த மதத்தின் பிறப்பிடம். கி. மு. 543 லிருந்து கி. பி. 1400 வரை ஏறத்தாழ 2,000 ஆண்டுக்காலம் அது அங்கு செழித்து வளர்ந்தது. அங்கு பௌத்த மதம் மறைந்து போனாலும் புத்தரின் திருநாமம் அங்கு எல்லையற்ற மரியாதையோடு போற்றப்படுகிறது. அவரது மதம் பற்றிய நினைவுச் சின்னமும் பசுமையாக இருக்கிறது. இந்தியாவில் பௌத்த மதம் பட்டுப்போன ஒரு தாவரமாக இருக்கக்கூடும். ஆனால் அது தனது வேர்களை இழந்து மடிந்துபோய்விட்டதாக எவரும் கூற முடியாது. அவர் விஷ்ணுவின் அவதாரமாக இந்துக்களால் கருதப் படுகிறார். நெபுர்ச் னெரார் யூதர்களிடையே தமது கடவுளர்களுக்குச் செய்ய வேண்டியிருந்ததைப் போல் ஒரு புதிய தீர்க்கதரிசியின் பால் பயபக்தியை உண்டாக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. நாங்கள் செய்ய வேண்டியிருந்ததெல்லாம் அவருடைய மதத்தைத் திரும்பக் கொண்டு வருவதுதான். ஒரு பயனுள்ள முயற்சிக்கு இத்தகைய எளிய சூழ்நிலைமைகளை வேறு எந்த நாட்டிலும் காண முடியாது. மற்ற நாடுகளில் நீண்ட நெடுங்காலமாக வேரூன்றிப்போன மதங்கள் இருக்கின்றன. இந்நிலைமையில் அந்நாடுகளில் பௌத்தம் பயண அனுமதிச் சீட்டு இல்லாத அழையா விருந்தாளியாகத்தான் கருதப்படும். இந்தியாவைப் பொறுத்தவரையில் புத்தருக்குப் பயண அனுமதிச் சீட்டோ அல்லது நுழைவுரிமைச் சீட்டோ தேவையில்லை.

3. இந்து மதத்தைவிட்டுவெளியேறி பௌத்த மதத்தைத் தழுவ விரும்பும் பல பகுதியினர் இந்துக்களில் இருக்கின்றனர். தீண்டப்படா தவர்களையும் பின்தங்கிய வகுப்பினர்களையும் இவ்வகையில் முக்கியமாகக் குறிப்பிட்ட வேண்டும். படிநிலை அடிப்படையில் அமைந்த ஏற்றத்தாழ்வு சித்தாந்தத்தை இந்துமதம் கடைப்பிடிப்பதால் இம் மதத்தை அவர்கள் எதிர்க்கின்றனர். அறிவுத்துறை பெரிதும் வளர்ச்சி யடைந்துள்ள இன்றைய கட்டத்தில் இந்த வகுப்பினர் இந்து மதத்துக்கு எதிராகப் போர்க்கொடி தூக்கினார்கள். அவர்களது அதிருப்தியைப் பயன்படுத்திக் கொள்வதற்கு இது நல்லதொரு சந்தர்ப்பமாகும்.

கிறித்தவ மதத்தை விட பௌத்தத்தை அவர்கள் விரும்புவதற்கு மூன்று காரணங்கள் உண்டு:

(1) பௌத்தம் இந்தியாவுக்கு அந்நியமான ஒரு மதமல்ல.

(2) பௌத்த மதத்தின் மிக முக்கியமான சித்தாந்தம் சமூக சமத்துவமாகும்; இதைத்தான் அவர்கள் விரும்புகின்றனர்.

(3) பௌத்தம் பகுத்தறிவு சார்ந்த மதம்; அதில் மூட நம்பிக்கைகளுக்கு இடமில்லை.

(4) ஆரம்பக் கட்டத்தில் பௌத்த மதத்தில் சேருபவர்களில் பெரும்பாலோர் கீழ்த்தட்டு வர்க்கங்களைச் சேர்ந்தவர்களாக இருப்பார்கள் என்பதற்காக இயக்கத்தைத் தொடங்குவதில் எத்தகைய தயக்கமும் கூடாது. இந்தியாவில் கிறித்தவ சமயப் பணியாளர்கள் செய்த தவறை சசானா கவுன்சில் செய்யக் கூடாது. கிறித்தவ சமயப் பணியாளர்கள் பிராமணர்களை மத மாற்றம் செய்யும் முயற்சியோடு தங்கள் பணியைத் தொடங்கினர். முதலில் பிராமணர்கள் மதமாற்றம் செய்யப்பட்டால் இந்துக்களில் ஏனையோரை இந்துமதத்தின் பிடியில் கொண்டுவருவது கடினமல்ல என்பது அவர்களது உத்தியாக இருந்தது. பிராமணர்கள் முதலில் மதமாற்றம் செய்யப்பட்டால் பிராமணரல்லாதோரிடம் நாம் சென்று பிராமணர்கள் கிறித்தவ மதத்தை ஏற்றுக்கொண்டு விட்டார்கள். அதே போல் நீங்களும் ஏன் செய்யக்கூடாது; அவர்கள்தானே உங்கள் மதத் தலைவர்கள் என்று கூறி அவர்களை நம் பக்கம் இழுக்கலாம் அல்லவா என்பது அவர்களது திட்டம். கிறித்தவ சமயப் பணியாளர்களின் இந்தத் திட்டம் சில கிறித்தவர்களுக்கு எட்டிக்காயாகக் கசப்பாக இருந்தது. பிராமணர்களை ஏன் நம் பக்கம் கொண்டு வர வேண்டும்? அவர்கள் தான் சுளை சுளையாக எத்தனையோ சலுகைகளை அனுபவிக் கிறார்களே. இந்தியாவிலுள்ள கிறித்தவ சமயப் பணியாளர்கள் விரைவிலேயே தங்கள் தவறை உணர்ந்தனர். பிராமணர்களை மதமாற்றம் செய்வதில் நூற்றுக்கணக்கான ஆண்டுகளை வீண் விரயம் செய்தபிறகு தங்கள் கவனத்தைத் தீண்டப்படாதோர் பக்கம் திருப்பினர். இதற்குள் நாட்டில் பெரும் மாற்றம் ஏற்பட்டிருந்தது. தேச பக்த உணர்வு எங்கெங்கும் கொழுந்து விட்டெரிந்தது. கிறித்தவ சமயம் உட்பட அந்நியமானவை. அனைத்தும் நாட்டுக்கு விரோதமானவை

என்று கருதப்பட்டது. இதன் விளைவாக, தீண்டப்படாதோரில் ஒரு சிலரைத்தான் கிறித்தவ சமயப் பணியாளர்களால் மதமாற்றம் செய்ய முடிந்தது. கிறித்தவ சமய அமைப்புகள் எவ்வளவோ முயற்சி செய்த போதிலும் 400 ஆண்டுக் காலத்தில் இந்தியாவில் கிறித்தவ மக்கட் தொகை ஆச்சர்யப்படத்தக்க விதத்தில் மிகவும் குறைவாகவே இருந்தது. மதமாற்ற முயற்சியை அவர்கள் தீண்டப்படாதோர் மற்றும் பின்தங்கிய வகுப்பினர் விஷயத்தில் முதலில் மேற்கொண்டிருந்தால் அவர்கள் அனைவரையும் மதமாற்றம் செய்திருக்க முடியும்.

5. ரோமாபுரியில் கிறித்தவ மதம் அடியெடுத்து வைத்த வரலாற்றை இப்போது நாம் நோக்க வேண்டும். ஏனென்றால் இது நமக்கு நல்ல படிப்பினை அளிக்கக்கூடியதாய் இருக்கக்கூடும். "ரோம சாம்ராஜ்யத்தின் சிதைவும் வீழ்ச்சியும்" எனும் ஜப்பானின் நூலிலிருந்து ஒரு விஷயம் தெள்ளத்தெளிவாகிறது. அதாவது ரோமாபுரி மக்களின் மிகவும் கீழ்த்தட்டு வர்க்கத்தினரிடம்தான் கிறித்தவ மதம் முதலில் பரவிற்று என்பதுதான் அந்த விஷயம். மேல் தட்டு வர்க்கத்தினர் இதற்குப் பிறகுதான் வருகிறார்கள். கிறித்தவ மதத்தை ஏழைகளின், அடக்கி ஒடுக்கி மிதித்து துவைக்கப்பட்ட மக்களின் மதம் என்று கிப்பன் ஏளனம் செய்கிறார். எள்ளி நகையாடுகிறார். கிப்பனின் இந்தக் கருத்து மிகவும் தவறானதாகும். ஏழைக்களுக்குதான் மதம் தேவை என்பதை அவர் உணர்ந்துகொள்ளத் தவறிவிட்டார். மதம் - அது நல்ல மதமாக இருந்தால், நல்ல காலம் வரும் என்று நம்பிக்கையை ஏழைகளுக்கு அது ஊட்டுகிறது. அவர்களது எத்தனை எத்தனையோ வேதனைகள், வாதனைகளுக்கு மத்தியில் அவர்களுக்கு ஆக்கத்தையும் ஊக்கத்தையும் அளிக்கிறது. செல்வச் சீமான்கள் எல்லாம் பெற்றிருக்கின்றனர். எனவே அவர்கள் வாழ்வதற்கு எந்த நம்பிக்கையும் தேவையில்லை. தங்களுக்குள்ளே சொத்து சுகங்களையும் உடைமைகளையும் கொண்டு அவர்கள் வாழ்கின்றனர். இரண்டாவதாக மதம் - அது சரியான வகையைச் சேர்ந்ததாக இருந்தால் - மக்களை மேம்படுத்துகிறது. அவர்களை உயர்நிலைக்கு உயர்த்துகிறது.

6. இந்தியாவில் புத்த மதத்துக்குப் புத்துயிர் ஊட்டுவதற்கு எடுத்துக்கொள்ள வேண்டிய பூர்வாங்க நடவடிக்கைகள் விஷயத்துக்கு இப்போது வருவோம். இது சம்பந்தமாக என் மனத்தில் தோன்றியதை இங்குக் கூறுகிறேன்.

(i) பௌத்தம் பற்றிய நூலை அதாவது புத்த மதம் பற்றிய சிறு நூலைத் தயாரித்தல், புத்தமதத்துக்கு மாறியவர்களுக்கு இது பெரும் துணையாக இருக்கும். புத்தரின் போதனைகள் அடங்கிய ஒரு சிறு நூல் இல்லாதிருப்பது புத்த மதத்தைப் பரப்புவதற்கு பெரிதும் இடையூறாக இருக்கிறது. பாலி மொழியிலுள்ள 73 தொகுதிகளை சாமானியர்கள் படிக்க முடியும் என்று எதிர்ப்பார்க்க முடியாது. புத்த மதத்தை விடக் கிறித்தவ மதத்துக்கு ஒரு பெரிய அனுகூலம் இருக்கிறது. அதாவது ஏசு கிறிஸ்து மக்களுக்கு விடுத்து சென்ற செய்தி "பைபிள்" என்னும் ஒரு சிறு நூலில் அடங்கியுள்ளது. ஆனால் புத்த மதத்தைப் பரப்புவதற்கு இத்தகைய நூல் ஏதும் இல்லை. இந்த இடர்ப்பாடு அகற்றப் பட வேண்டும். புத்தரைப் பற்றிய நூல் முக்கியமாக அவரது சமூக மற்றும் அறநெறி போதனைகளை எடுத்துரைப்பதாக இருப்பது அவசியம். தியானம், ஆழ்ந்த சிந்தனை, அபிதம்மம் ஆகியவற்றிற்கு அதிக முக்கியத்துவம் அளிப்பதே இதனை நான் கூறுவதற்குக் காரணம். புத்தமதத்தை இந்தியர்களுக்கு இவ்வாறு படம் பிடித்துக்காட்டுவது நமது லட்சியத்துக்கு சாவுமணி அடிப்பதாகும்.

(ii) கிறித்துவ மதத்தில், போப் சாமானிய மக்கள் விஷயத்தில் ஞானஸ்நானம் என்ற ஏற்பாட்டை மேற்கொள்ளலாம். புத்தரின் அடிமட்ட சீடராவதற்கு உண்மையில் சமயச் சடங்கு ஏதும் இல்லை. பிக்குவாகி சங்கத்தில் சேருவதற்குத் தான் சடங்கு உள்ளது. கிறித்தவர்களிடையே இரண்டு சடங்குகள் உள்ளன

(1) கிறித்துவ மதத்தை ஏற்றுக் கொள்வதைக் காட்டும் ஞானஸ்நானம்.

(2) சமய குருவாகப் பதவியேற்கும் சடங்கு. புத்த மதத்தில் ஞானஸ்நானம் போன்ற சடங்கு ஏதும் இல்லை. பௌத்தரான பிறகு பலர் பௌத்த மதத்திலிருந்து கழன்று கொள்வதற்கு இதுவே பிரதான காரணம். ஒவ்வொரு சாமானியனும் பௌத்தன் என்று அழைக்கப் படுவதற்கு முன்னர் கிறித்தவ ஞானஸ்நானம் போன்ற

ஒரு சடங்கை நாம் புகுத்தக்கூடாது. வெறுமனே பஞ்சசீலத்தை ஓதுவது மட்டும்போதாது. ஒருவன் தான் இந்து என்ற நிலையிலிருந்து விடுபட்டு ஒரு புதிய மனிதன் ஆவதற்கு இதர பல அம்சங்களும் சேர்க்கப்பட வேண்டும்.

(iii) ஏராளமான அடிமட்ட போதகர்களை நியமிக்க வேண்டும்: அவர்கள் ஆங்காங்கு சென்று பௌத்தர்களுக்குப் போதிக்க வேண்டும். அவர்கள் புத்த தர்மத்தை எந்த அளவுக்குக் கடைப்பிடிக்கின்றனர் என்பதைக் கண்காணிக்க வேண்டும். அடிமட்ட போதகர்களுக்கு ஊதியம் வழங்க வேண்டும். அவர்கள் திருமணம் செய்துகொள்ள அனுமதிக்க வேண்டும். ஆரம்பத்தில் அவர்கள் பகுதி நேரப் பணியாளர்களாக இருக்காலம்.

(iv) பௌத்த சமயக் கல்விக்கூடம் ஒன்றை நிறுவ வேண்டும். போதகர்களாக விரும்புபவர்களுக்கு அங்கு பௌத்த தர்மத்தையும் ஏனைய சமயங்களைப் பற்றியும் போதிக்கலாம்.

(v) ஒவ்வொரு ஞாயிறன்றும் விகாரத்தில் கூட்டு வழிபாட்டுக்கு ஏற்பாடு செய்யலாம், இதனைத் தொடர்ந்து சமய சொற்பொழிவு நடத்தப்படலாம்.

7. இந்த ஆரம்ப கட்ட நடிவடிக்கைகளைத் தொடர்ந்து நமது பிரசார இயக்கத்துக்கு உதவும் வகையில் வேறு சில பணிகளைச் செய்வதும் அவசியமாக உள்ளது. இப்பணிகளைப் பிரம்மாண்ட அளவில் செய்ய வேண்டும். இது சம்பந்தமாகப் பின்கண்ட யோசனைகளை முன்வைக்கிறேன்:

I. பின்கண்ட நான்கு முக்கிய நகரங்களில் பிரம்மாண்டமான கோவில்களையும் விகாரங்களையும் கட்டுதல்: (1) சென்னை, (2) பம்பாய், (3) நாகபுரி, (4) டில்லி.

II. பின்வரும் நகரங்களில் உயர்நிலைப் பள்ளிகளையும், கல்லூரிகளையும் தொடங்குதல்; (1) சென்னை, (2) நாகபுரி, (3) கல்கத்தா, மற்றும் (4) டில்லி.

III. பௌத்தம் சம்பந்தப்பட்ட கட்டுரைகள் எழுதும்படி தூண்டுதல், முதல் மூன்று கட்டுரைகளுக்குப் பரிசுகள் வழங்குதல்; இதன் மூலம் பௌத்த நூல்களை படிக்கும்படி மக்களை தூண்டுதல். இந்துக்கள், முஸ்லீம்கள், கிறித்தவர்கள், ஆண்கள், பெண்கள் என யார் வேண்டுமானாலும் கட்டுரைகளை எழுதலாம்.

8. ஏதோ பெரிய அற்புதங்கள் நிகழ்கின்றன என்று எண்ணும் படியாக கோவில்கள் பிரம்மாண்டமானவை யாக இருக்க வேண்டும். உயர்நிலைப் பள்ளிகளும் கல்லூரிகளும் அருகருகே இருப்பது அவசியம். இளம் மக்களிடம் பௌத்த சூழ்நிலைமையைத் தோற்றுவிக்கும் வகையில் அவை அமைந்திருக்க வேண்டும். இவற்றில் கிட்டும் வருவாயை இதர சமயப்பணிகளுக்குப் பயன்படுத்தலாம். கிறித்தவ சமயப்பரப்பு அமைப்புகள் பள்ளிக் கூடங்கள் மற்றும் கல்லூரிகள் முதலியவற்றை நடத்துகின்றன; இவற்றிலிருந்து கிட்டும் உபரி வருமானத்தைத் தங்கள் நடவடிக்கைகளை நடத்துவதற்குப் பெரும்பாலான கிறித்தவ சமய அமைப்புகள் பயன்படுத்திக் கொள்கின்றன என்பன இங்கு நினைவில் கொள்ள வேண்டும்.

9. மேற்கண்ட பூர்வாங்க நடவடிக்கைகளை நாம் மேற்கொள்ள வேண்டும் என்பதற்காகவே மேலே கண்ட யோசனைகளை முன் வைக்கிறேன். இந்தியாவில் புத்த மதம் மறைந்து விடாமல் அதனை மீட்டு உயிர் பெறச் செய்ய வேண்டும். இதற்கு எத்தகைய முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதையும் நாம் ஆலோசிப்பது அவசியம்.

10. புத்தமதத்தின் சித்தாந்தங்கள் தவறானவை என்று தெரிய வந்ததால் அல்லது மெய்ப்பிக்கப்பட்டதால் அந்த மதம் இந்தியாவிலிருந்து மறைந்துவிடவில்லை. இந்தியாவிலிருந்து புத்த மதம் மறைந்து போனதற்கான காரணங்கள் வேறுபட்டவை. முதலாவதாக புத்தமதம் பிராமணர்களால் அடக்கி ஒடுக்கப்பட்டது. அசோக சக்கரவர்த்தியின் வாரிசான கடைசி மௌரிய சக்கரவர்த்தியை, புஷ்ய மித்ரா என்னும் பிராமணத் தளபதி படுகொலை செய்து, சிம்மாசனத்தைக் கைப்பற்றி, பிராமணியத்தை அரசாங்க மதமாகப் பிரசாரம் செய்தான், இந்தியாவில் புத்தமதம் ஒடுக்கப்படுவதற்கு இது வழி வகுத்தது. அது சீணிப்பதற்கான காரணங்களில் இதுவும் ஒன்றாக

இருந்தது. பிராமணியத்தின் எழுச்சி இந்தியாவில் புத்த மதம் நசுக்கப் படுவதற்கு வழிவகுத்தது என்றால், இந்திய நாட்டின் மீது முஸ்லீம் படையெடுப்பு, புத்த மதம் முற்றிலுமாக அழிவதற்கு இட்டுச் சென்றது; முஸ்லீம் படையெடுப்பாளர்கள் கொடிய வன்முறையைக் கையாண்டு விகாரங்களை அழித்தொழிந்தனர் பௌத்த பிட்சுகளைக் கொன்று குவித்தனர்.

11. புத்த மதத்துக்கு இஸ்லாமால் ஆபத்து ஏற்படவில்லை; பிராமணியத்தால்தான் ஆபத்து ஏற்பட்டது; அது புத்த மதத்தின் மிகவும் கொடிய வைரியாக வன்னெஞ்சப் பகைவனாக இருந்தது. பிராமணன், அவன் நிறம் எதுவாக இருந்தாலும், அவன் எந்த அணியில் இருந்தாலும் ஒரு பிராமணனாகவே இருந்தான். பிராம ணர்கள் படிமுறையிலான சமூக ஏற்றத்தாழ்வு நீடித்து நிலவ வேண்டும் என்று விரும்பியதே இதற்குக் காரணம். இந்தப் படிநிலை யிலான ஏற்றத்தாழ்வே பிராமணர்களை ஏனைய எல்லோரையும் விட உச்ச நிலையில் வைத்தது. பௌத்தம் சமத்துவத்தத்தில் நம்பிக்கை கொண்ட சித்தாந்தம். பௌத்தம் பிராமணியத்தின் அதிகாரத்தையும் செல்வாக்கையும் குறிவைத்துத் தாக்குகிறது. இதனால்தான் பிராம ணர்கள் புத்த மதத்தை எதிர்க்கின்றனர்; வெறுக்கின்றனர். புத்த மதத்துக்குப் புத்துயிரூட்டும் இயக்கத்துக்குத் தலைமை தாங்க பிராமணர்கள் அனுமதிக்கப்பட்டால் அவர்கள் தங்கள் அதிகாரத்தை, செல்வாக்கைப் பயன்படுத்தி அதனை அழிப்பதற்கு, நசுக்குவதற்கு அல்லது தவறான வழியில் இட்டுச் செல்லுவதற்கு முற்படுவார்கள். எனவே குறைந்தபட்சம் இயக்கத்தின் ஆரம்ப கட்டத்திலாவது அவர்களை அதிகாரத்திலிருந்து விலக்கி வைப்பது மிகவும் அவசியம். இது உகந்த முன்னெச்சரிக்கை நடவடிக்கையாக இருக்கும்.

12. இந்த யோசனைகள் யாவும் நிதிப்பிரச்சினையை எழுப்பு கின்றன. ஒளிவு மறைவின்றி வெளிப்படையாகக் கூறினால் இந்தப் பிரச்சினைக்கு இந்தியாவால் தீர்வு காண முடியாது. இது விஷயத்தில் உதவக் கூடியவர்கள் இந்தியாவிலுள்ள பௌத்தர்களே; ஆரம்பக் கட்டத்தில் அவர்கள் மிகவும் குறைந்த எண்ணிக்கையிலே இருப்பார்கள். எனவே, பௌத்த நாடுகளுக்கு வெளியே உள்ளவர்கள் தான் இந்தப் பொறுப்பை ஏற்க வேண்டும். அவர்கள் தங்கள் தானத்தை இத்திசை வழியில் திருப்பிவிட்டு இதனை எளிதாகச் செய்ய முடியும்.

(ஒப்பம்) பி.ஆர். அம்பேத்கர்.

## நினைவுக் குறிப்பு II

# தென்னிந்தியாவில் புத்தமத நிலை குறித்த அறிக்கை

1. தென்னிந்தியாவில் இந்திய பௌத்த சமுதாயத்தினரின் நிலை குறித்து நேரில் தெரிந்து கொள்வதற்காக அங்கு சுற்றுப் பயணத்தை மேற்கொண்டேன். ஜூலை 7ஆம் தேதி முதல் ஜூலை 14ஆம் தேதி வரை அங்கு இருந்தேன்.

2. பின்கண்ட இடங்களில் பௌத்த சமுதாயத்தினர் இருப்பதைக் கண்டேன்.

**அ. சென்னை நகருக்கு அருகில் இரண்டு மையங்கள் உள்ளன:**

(i) பெரம்பூர்
(ii) காஞ்சிபுரம் (செங்கல் பட்டு)

**ஆ. மதராஸ் மாநிலத்தின் உட்பகுதியில்:**

(i) பாலிகொண்ட (வட ஆற்காடு மாவட்டம்)
(ii) திரிபுரம் (வட ஆற்காடு மாவட்டம்)
(iii) வெள்ளத்தூர் (வேலூர் மாவட்டம்)
(iv) வானி வேடா (பானிபெத்)

**இ. மைசூர் மாநிலத்தில்:**

(i) கோலார் தங்கவயல்;
(ii) பிரஸர் நகர், கண்டோன்மெனட் பெங்களூர் நகரம்;
(iii) பெங்களூர் நகரில் மத்திய சிறைச் சாலைக்கு அருகில்.

தென்னிந்தியாவில் இந்த பௌத்த மையங்கள் 30/40 ஆண்டுகளாக இருந்து வருகின்றன. பிராமணர்களும் இந்துக்களும் சூழப்பட்டிருந் தாலும் புத்த மதத்தைப் பின்பற்றுவதில் அவர்களுக்குள்ள திட உறுதியை இது புலப்படுத்துகிறது.

4. தங்கள் சொந்த செலவில் இவர்கள் கட்டியுள்ள விஹாரங்கள் எளிமையான கட்டிட அமைப்புகளாகும்.

5. மைசூர் சமஸ்தானத்தின் ராஜபிரமுகரான மகாராஜாவை ஜூலை 8ஆம் தேதி சந்தித்தேன். பெங்களூரில் எங்கள் பணியை மேற்கொள்வதற்கு ஒரு சமயத்தைத் தொடங்கும் பொருட்டு அவருக்குச் சொந்தமான நிலத்தின் ஒரு பகுதியை எங்களுக்கு வழங்குமாறு கேட்டுக் கொண்டேன். 5 ஏக்கர் நிலத்தை வழங்க மனமுவந்து பரிவோடு ஒப்புக் கொண்டார். மேன்மை தங்கிய மகாராஜாவின் பிரத்தியேக செயலாளர் எழுதியுள்ள கடிதத்தை இத்துடன் இணைத்துள்ளேன். அன்பு கூர்ந்து இந்த விஷயத்தை இரகசியமாக வைத்திருங்கள். தானப் பத்திரம் இன்னும் எழுதப்படவில்லை.

6. இது எழில் மிக்க இடம்; அருமையான சுற்றுச்சூழல். இது விலை உயர்ந்ததும் கூட. எங்கள் மதக் குருக்களைப் பயிற்றுவிப்பதற்கு ஒரு பௌத்த சமயப் பள்ளியையும் அத்துடன் தென்னிந்தியாவில் புத்த மதத்தைப் பிரசாரம் செய்வதற்கான ஒரு மையத்தையும் நிர்மாணிப்பதற்கு இந்த நிலத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பது என் திட்டம்.

(ஒப்பம்) பி.ஆர். அம்பேத்கர்.

## (153)

## பாண்டுரங்கள் புத்தரே தவிர வேறு யாருமல்ல

புனா அருகே தேஹு சாலையில் புதிதாகக் கட்டுப்பட்டுள்ள புத்த விஹாரில் புத்தரின் உருவச் சிலையை 1954 டிசம்பர் 25ஆம் தேதி டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் திறந்து வைத்தார். பந்தர்பூரில் உள்ள சாமி விதோபாவின் திரு உருவம் உண்மையில் புத்தரின் திருஉருவமே யாகும் என்று அப்போது அவர் குறிப்பிட்டார். ஆண்டவர் பாண்டு ரங்கனின் பெயர் புண்டாலிக் என்பதிலிருந்துதான் வந்தது. புண்டாலிக் என்றால் தாமரை, தாமரை பாலி மொழியில் பாண்டுரங் என்று அழைக்கப்படுகிறது. ஆக பாண்டுரங்கன் புத்தரேயன்றி வேறு யாருமல்ல. புத்தமதத்தை அழித்தொழிப்பதற்கு பிராமணர்கள் உருவாக்கிய தேவர்களையும் தேவதைகளையும் வணங்கி வழிபட்ட சாமானிய மக்களின் தடுமாற்றப் போக்கே இந்தியாவிலிருந்து புத்தமதம் மறைந்து போனதற்கு அடிப்படை காரணம் என்றார் டாக்டர் அம்பேத்கர்.[1]

---

1 குபேர் அம்பேத்கர் - திறனாய்வு, பக்கம் 94.

# (154)

# பௌத்தமும் ஜைனமும் போதித்த அகிம்சை விஷயத்தில் வேறுபாடு உண்டு

*புதுடில்லி மகாபோதி கழகத்தின் சார்பில் 1956 பிப்ரவரி 5ஆம் தேதி புத்த விஹாரில் நடைபெற்ற கூட்டத்தில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து சில பகுதிகள்.*

கம்யூனிசத்துக்குப் பதிலளிக்க முடியாத எந்த மதமும் நிலைத்திருக்க முடியாது. கம்யூனிசத்துக்கு மாற்றாக இருக்கும் தகுதிபடைத்த ஒரே மதம் புத்த மதம்தான். எல்லா மதங்களையும் நம்புவதும் ஒவ்வொன்றிலுமிருந்து சிலவற்றை எடுத்துக்கொள்வதுமான போக்கு எனக்கு உடன்பாடானதல்ல. இத்தகைய போக்கை இந்தியாவில் நாம் காண்கிறோம். எவரும் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு அதனைப் பின்பற்ற வேண்டும்.

ஒரு மதம் இன்னொரு மதத்திலிருந்து வேறுபட்டிருக்கக்கூடும் பௌத்தம் போதித்த அகிம்சைக்கும் ஜைனம் போதித்த அகிம்சைக்கும் நிறைய வேறுபாடு உண்டு. ஜைனம் அகிம்சையை மிக உயர்ந்த அளவுக்கு கொண்டு சென்றுள்ளது.

மறுபிறப்பில் எனக்கு முழு நம்பிக்கை உண்டு. மறுபிறப்பு என்பது தடுக்கமுடியாது என்பதை விஞ்ஞானிகளுக்கு என்னால் நிரூபித்துக் காட்ட முடியும். என்னுடைய கருத்தில் இயற்கை சக்திகள் மாறியிருக்கின்றனவே தவிர மனிதன் மாறவில்லை.

---

# (155)

## புத்த மதத்தை நான் ஏன் விரும்புகிறேன்

எனக்கு ஒதுக்கப்பட்டுள்ள குறுகிய நேரத்தில், இரண்டு கேள்விகளுக்குப் பதிலளிக்குமாறு நான் கேட்கப்பட்டுள்ளேன். "புத்த மதத்தை நான் ஏன் விரும்புகிறேன்" என்பது முதல் கேள்வி; "இன்றைய சந்தர்ப்ப சூழ்நிலைகளில் அது உலகுக்கு எந்த அளவுக்குப் பயனுள்ளதாக இருக்கும்" என்பது இரண்டாவது கேள்வி.

வேறு எந்த மதமும் செய்யாத விதத்தில் புத்த மதம் மூன்று கோட்பாடுகளை இணைத்துப் பிணைத்துத் தருகிறது. எல்லா மதங்களும் கடவுளையும், ஆன்மாவையும், மரணத்திற்குப பிந்திய வாழ்க்கையையும் பற்றியே அலட்டிக் கொண்டிருக்கின்றன. புத்தமதம் அல்லது பௌத்தம் பிரக்ஞையை (மூடநம்பிக்கையையும் இயற்கைக்கு அப்பாற்பட்டதில் நம்பிக்கை வைப்பதையும் எதிர்ப்பதை) போதிக்கிறது. அது கருணையை (அன்பை) போதிக்கிறது. அது சமதாவை (சமத்துவத்தை) போதிக்கிறது. இந்த பூவுலகில் ஒரு நல்ல, மகிழ்ச்சிகரமான வாழ்க்கை நடத்துவதற்கு மனிதன் இதைத்தான் விரும்புகிறான். புத்த மதத்தின் இந்த மூன்று கோட்பாடுகளும் என்னைப் பெரிதும் கவர்கின்றன. இந்த மூன்று கோட்பாடுகளும் என்னை மட்டுமன்றி இந்த உலகம் முழுவதையும் கவரவேண்டும். ஆண்டவனோ, ஆன்மாவோ, சமுதாயத்தைக் காப்பாற்ற முடியாது.

உலகை அழிக்கும், குறிப்பாக அதன் தென்கிழக்கு ஆசியப் பகுதியைப் பாதிக்கும் மூன்றாவது அம்சம் ஒன்றும் உள்ளது. காரல் மார்க்சும் அவர் ஈன்றெடுத்த கம்யூனிசமும்தான் அந்த மூன்றாவது அம்சம். இதன் தாக்கம் கடுமையாக உள்ளது. மார்க்சியமும் கம்யூனிசமும் சமயசார்பற்ற விவகாரங்கள் சம்பந்தப்பட்டவை. இவை அனைத்து நாடுகளின் சமய சார்பு அமைப்பின் அடித் தளத்தையே ஆட்டம் காண செய்துள்ளன. சமய சார்பு அமைப்புக்கு இது முற்றிலும் இயல்பானதே. இன்றைய நிலைமை சமய சார்பற்ற அமைப்புடன் சம்பந்தப்படாது இருந்தாலும் அதன் அடித்தளத்தின் மீதுதான் சமயசார்பற்றவை அனைத்துமே அமைந்துள்ளன; சமயத்தின் அங்கீகாரத்தைப் பெற்றிருந்தாலொழிய சமய சார்பின்மை

அமைப்பு நீண்ட காலம் நீடிக்க முடியாது. சமயத்தின் அங்கீகாரம் கிடைப்பது அரிதே.

தென்கிழக்கு ஆசியாவிலுள்ள பௌத்தமத நாடுகளின் மனப் போக்கு கம்யூனிசத்தின் பக்கம் சாய்ந்திருப்பது எனக்கு மிகவும் வியப்பாக இருக்கிறது. பௌத்த மதம் என்பது என்ன என்பதை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை என்பதே இதன் பொருள். என்னைப் பொறுத்த வரையில் பௌத்த மதம் மார்க்சுக்கும் அவரது கம்யூனிசத்துக்கும் ஒரு மாபெரும் சவால் என்று கூறுவேன்.

ரஷ்ய பாணி கம்யூனிசம் இரத்தக் களறியான ஒரு புரட்சியின் மூலம் அதனைச் சாதிக்க முயல்கிறது. பௌத்த கம்யூனிசமோ, இரத்தம் சிந்தாத மனப்புரட்சியின் வாயிலாக அதனைக் கொண்டு வருகிறது. கம்யூனிசத்தைத் தழுவ ஆர்வத்தோடு இருப்பவர்கள், சங்கம் ஒரு கம்யூனிச அமைப்புதான் என்பதை மனதில் கொள்ள வேண்டும். அதில் தனிச் சொத்துடைமை ஏதும் இல்லை. வன்முறை மூலம் இது சாதிக்கப்படவில்லை. மன மாற்றத்தின் மூலமாகவே இது சாதிக்கப்பட்டது. எனினும் 2500 ஆண்டுகளாக அது நிலைத்து நின்று வருகிறது. ஒருக்கால் அது சிதைந்திருக்காலம்.ஆனால் அது இன்னமும் நிலைத்து நின்று வருகிறது. இது எவ்வாறு சாத்தியமாயிற்று? இந்தக் கேள்விக்கு ரஷ்யக் கம்யூனிசம் பதிலளிக்க வேண்டும். வேறு இரண்டு கேள்விகளுக்கும் அவர்கள் பதில் கூறியாக வேண்டும். முதலாவதாக எல்லாக் காலத்துக்கும் கம்யூனிச அமைப்பு முறை ஏன் தேவை? ரஷ்யர்கள் என்றும் செய்யமுடியாத பணியைச் செய்து முடித்திருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை. பணி முடிந்த பிறகு புத்தர் போதித்தது போல் அன்பைத் தொடர்ந்து, மக்களுக்கு ஏன் சுதந்திரம் அளிக்கவில்லை. எனவே தென்கிழக்கு ஆசிய நாடுகள் அவசரப்பட்டு ரஷ்ய வலையில் குதித்துவிடாதபடி ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அவ்வாறு குதித்தார்களானால் அவர்களால் ஒருபோதும் அதிலிருந்து தப்பி வெளியேற இயலாது. இப்போது அவர்கள் செய்ய வேண்டியது எல்லாம் புத்தரையும், அவரது வாழ்க்கையையும் அவரது போதனைகளையும் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். அவரது போதனைகளுக்கு ஓர் அரசியல் வடிவம் தர வேண்டும். சமுதாயத்தில் வறுமை நிலவுகிறது. அது எப்போதும் இருக்கத்தான் செய்யும். ரஷ்யாவில் கூட வறுமை

நிலவுகிறது. ஆனால் மனித சுதந்திரத்தைப் பலி கொடுப்பதற்கு அது ஒரு சாக்குபோக்காக இருக்கச் கூடாது.

துரதிருஷ்டவசமாக புத்தரின் போதனைகள் உரிய முறையில் அர்த்தப்படுத்திக் கொள்ளப்படவில்லை; புரிந்து கொள்ளப்பட வில்லை. அவரது போதனை பல சித்தாந்தங்களின், சமூக சீர்திருத் தங்களின் திரட்சிகளாகும். இது முற்றிலும் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டுள்ளது. பௌத்தம், அதாவது புத்த சமயம் ஒரு சமூக சுவிசேஷம், ஒரு சமூக போதனை என்பதையும், அதற்குப் புத்துயி ரளிப்பது என்பதையும் எக்காலத்திலும் மறக்க முடியாத ஒரு நிகழ்ச்சியாக இருக்கும் என்பதையும் உணர்ந்து கொள்ளும்போது புத்த சமயம் ஏன் எல்லோரையும் இவ்வாறு கவர்ந்திருக்கிறது என்பதை உலகம் புரிந்துகொள்ளும் .

26 அலிப்பூர் சாலை,
புதுடில்லி,
தேதி: மே, 12, 1956. (ஒப்பம்) பி.ஆர். அம்பேத்கர்

# (156)

# பௌத்த அலை இந்தியாவில் ஒருபோதும் ஓயாது

பிரபுத்தா பாரத் இதழில் 1956 மே 12ஆம் தேதி ஒரு கடிதம் பிரசுரிக்கப்பட்டிருந்தது. 2500 ஆவது புத்த ஜெயந்தியை இந்தியப் பௌத்தக் கழகத்தின் எல்லாக் கிளைகளும் கொண்டாட வேண்டும் என்று அதில் கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தது. இதன் பிரகாரம் 1956 மே 24ஆம் தேதி பம்பாய் நரே பூங்காவில் வரலாற்றுச் சிறப்புமிக்க ஒரு கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இக்கூட்டத்தில் சுமார் எழுபத்தைந்து ஆயிரம் பேர் கலந்து கொண்டனர். பம்பாய் மாகாணத்தின் முன்னாள் பிரதமர் திரு. பாலாசாகேப் கெர் கூட்டத்துக்குத் தலைமை தாங்கினார். புத்தரின் வாழ்க்கையையும் அவரது தம்மத்தையும் பற்றி அவர் உரையாற்றினார்.[1]

அவரது உரைக்குப் பிறகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் பேசும் போது 1956 அக்டோபரில் பௌத்தத்தைத் தாம் தழுவப் போவதாக அதாவது புத்த மதத்தில் சேரப் போவதாக அறிவித்தார். புத்த மதம் போதித்துள்ள அகிம்சை பற்றி பல தொடர் கட்டுரைகளை எழுதி யுள்ள வீர சாவர்க்கரை அவர் கடுமையாக சாடினார். மிகுந்த சீற்றத்தோடு அவர் கூறியதாவது:

சாவர்க்கர் உண்மையில் என்ன பேசினார் என்பது திட்ட வட்டமாகத் தெரிந்தால் அவருக்குப் பதிலளிப்பேன். இந்து மதத் தலைவர்களுக்கும் புத்த மதத் தலைவர்களுக்கும் இடையே மீண்டும் கடுமையான விவாதம் நடைபெறுவதாகத் தோன்றுகிறது. எங்களைக் கைதூக்கிவிடும் நோக்கம் கொண்டவர்களுக்குத்தான் எங்களை விமர்ச்சிக்க உரிமை உண்டு. என்னை விமர்சிப்பவர்கள் என்னை விட்டுவிடுங்கள். நானும் என் மக்களும் படுகுழியில் விழுவது பற்றி அவர்கள் கவலைப்பட வேண்டியதில்லை. என்னுடைய மக்கள் எனது ஆட்டு மந்தைகள், நான் அவர்களது மேய்ப்பன். இதனைப் பட்டவர்த்தனமாகவே கூறுகிறேன். நான் வேதாந்த சாஸ்திரங்களை

---

1. பிரபுத்தா பாரத், ஜூன் 2, 1956.

நன்கு அறிந்தவன். என் மக்கள் என்னைப் பின்பற்றுவார்கள். படிப் படியாக அவர்கள் உண்மையைப் புரிந்து கொள்வார்கள்.

சமதர்மத்தைப் பொறுத்தவரையில் புத்தமதம் இந்து மதத்தி லிருந்து வேறுபட்டது என்று குறிப்பிட்ட அவர் மேலும் கூறிய தாவது; "இந்து மதம் கடவுள் இருக்கிறார் என்று நம்புகிறது. புத்தமதத்துக்குக் கடவுள் இல்லை. இந்துமதம் ஆன்மா என்று ஒன்று இருக்கிறது என்று நம்புகிறது. புத்தமத சித்தாந்தத்தின்படி ஆன்மா இல்லை. இந்துமதம் சதுர்வர்ணத்தையும் சாதி அமைப்பு முறை யையும் ஏற்றுக் கொள்கிறது. ஆனால் புத்த மதத்தில் சதுர்வருணியத் துக்கும் சாதி அமைப்பு முறைக்கும் இடமில்லை. புத்த மதம் பற்றிய நமது நூல் விரைவில் வெளியிடப்படும் என்று தம்மைப் பின்பற்று பவர்களிடம் அவர் தெரிவித்தார். அவர் மேலும் கூறியதாவது, "புத்தமத அமைப்பிலுள்ள எல்லா ஓட்டைகளையும் அடைத்து விட்டேன். இப்போது அதனை வலுப்படுத்தி வருகிறேன். எனவே இந்தியாவில் பௌத்த அலை ஒருபோதும் ஓயாது. கம்யூனிஸ்டுகள் புத்தமதத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும். அப்போதுதான் மனிதகுலத்தைப் பீடித்திருக்கும் அவலநிலைகளை எவ்வாறு அகற்றுவது என்பதை அவர்கள் புரிந்து கொள்வார்கள்.

டாக்டர் அம்பேத்கர் தமது உரையில் தம்மை மோசசுடன் ஒப்பிட்டுக் கொண்டார். தமது மக்களை எகிப்திலிருந்து சுதந்திர நாடான பாலஸ்தீனத்துக்கு வழிநடத்திச் சென்றவர்தான் இந்த மோசஸ் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. எந்த மதமும் சீர்குலை வதற்கு மூன்று காரணங்கள் உள்ளன. நிலையான கோட்பாடுகள் இல்லாமை, பிறரைத் தம் பக்கம் ஈர்க்கும் நாவன்மை படைத்த பேச்சாளர்கள் இல்லாமை, எளிதில் புரிந்து கொள்ளக்கூடிய சித்தாந்தங்கள் இல்லாமை ஆகியவையே அந்த மூன்று காரணங்கள்; புத்தருக்கு ஒரு பிரம்மாண்டமான கோவில் கட்டப்போவதாகவும் அவர் அறிவித்தார்.

இவ்வாறு முடிந்தது பம்பாயில் அவருடை கடைசி சொற்பொழிவு[1]

---

1. கீர் பக். 492 - 93.

# (157)

# இந்தியாவில் ஜனநாயகத்துக்குள்ள வாய்ப்பு வளங்கள்*

நான் பேசுவதற்குத் தரப்பட்டுள்ள பொருள் இந்தியாவில் ஜனநாயகத்துக்குள்ள வாய்ப்பு வளங்கள் யாவை என்பதாகும். தங்கள் நாடு ஏற்கனவே ஜனநாயகத்தைப் பெற்றுவிட்டதாக பெரும்பாலான இந்தியர்கள் மிகுந்த பெருமிதத்தோடு பேசுகின்றனர். ராஜிய முறையில் இந்தியாவைக் கௌரவிப்பதற்காக நடத்தப்படும் விருந்தில் அமர்ந்து பேசும்போது அயல்நாட்டினரும் மாபெரும் இந்தியப் பிரதமரைப் பற்றியும், மாபெரும் இந்திய ஜனநாயகத்தைப் பற்றியும் வானளாவப் புகழ்ந்து பேசுகின்றனர்.

இதிலிருந்து குடியரசு இருக்குமிடத்தில் ஜனநாயகமும் இருக்கும் என்று எத்தகைய வாதத்துக்கும் இடம் தராமல் கருதப்படுகிறது. இதே போல், வயது வந்தோர் வாக்குரிமை அடிப்படையில் மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் நாடாளுமன்றம் இருக்குமிடத்தில் ஒவ்வொரு சில ஆண்டுகளுக்குப் பிறகு தேர்ந்தெடுக்கப்படும் நாடாளுமன்றத்தில் மக்கள் பிரதிநிதிகளால் சட்டங்கள் இயற்றப்படும்போது, வேறு விதமாகச் சொன்னால் ஜனநாயகம் ஓர் அரசியல் கருவியாகக் கருதப்பட்டு அந்த அரசியல் கருவி எங்கு இருக்கிறதோ அங்கு ஜனநாயகம் இருக்கும் எனலாம்.

இந்தியாவில் ஜனநாயகம் இருக்கிறதா அல்லது இல்லையா? உண்மை என்ன? ஜனநாயகத்தைக் குடியரசுடனும் நாடாளுமன்ற அரசாங்கத்துடனும் இணைத்துப் பேசும் குழப்பம் நீடிக்கும்வரை இந்தச் கேள்விக்கு ஆக்கப் பூர்வமாகப் பதிலளிக்க முடியாது.

ஜனநாயகம் என்பது குடியரசிலிருந்தும் அதேபோல் நாடாளு மன்ற அரசாங்கத்திலிருந்தும் முற்றிலும் மாறுபட்டது. ஜனநாயகத்தின் வேர்கள் அரசாங்கவடிவத்திலோ, நாடாளுமன்ற அல்லது இதர வடிவங்களிலோ பொதிந்திருக்கவில்லை. ஜனநாயகம் என்பது

---

* வாய்ஸ் ஆஃப் அமெரிக்கா, மே 20, 1956.

அரசாங்க வடிவத்திற்கு அப்பாற்பட்டது. இது முக்கியமாக இணைந்து வாழும். ஒரு வகையான பாணி. ஜனநாயகத்தின் வேர்களை சமூக உறவு முறையிலும், சமுதாயத்தின் அடித்தளமாக விளங்கும் மக்களது ஒன்றிணைந்த வாழ்க்கை முறையிலும்தான் தேடிக் காணவேண்டும்.

சமுதாயம் என்னும் சொல் எதைக் குறிக்கிறது? இரத்தினச் சுருக்கமாகக் கூறினால் நாம் சமுதாயத்தைப் பற்றிப் பேசும்போதே அதன் இயல்பைக் கொண்டே அதைப் புரிந்து கொள்கிறோம். இந்த ஒற்றுமையை ஒட்டித் தோன்றும் இயல்புகள் போற்றுதற்குரிய பொதுநல நோக்கும் ஆக்கமும் மக்களின் லட்சியங்களில் விசுவாசமும் பரஸ்பர பரிவும், ஒத்துழைப்பும் கொண்டவையாகும்.

இந்திய சமுதாயத்தில் இந்தக் குறிக்கோள்களைக் காண முடியுமா? இலட்சியங்களை எதிர்பார்க்க இயலுமா? இந்திய சமுதாயம் வெறும் தனிநபர்களைக் கொண்டதல்ல. அது எண்ணற்ற ஜாதிகளைக் கொண்டுள்ளது; அவை தமது வாழ்க்கையில் தனித் தன்மை வாய்ந்தவை; தம்முள் பகிர்ந்து கொள்வதற்கு பொது அனுபவத்தை அவை பெற்றிருக்க வில்லை; பந்தம், பாசம், பரிவு என்னும் பிணைப்பு எதுவும் அவற்றிடம் இல்லை. இந்த எதார்த்த உண்மைக்கு மேல் விவாதிப்பதற்காக விஷயம் ஏதும் இல்லை. சாதி அமைப்புமுறை இருந்து வருவது சமுதாய இலட்சியங்களோ ஜனநாயகமோ இல்லை என்பதைக் காட்டுவதாகும்.

இந்திய சமுதாயம் சாதி அமைப்பு முறையில் பெரிதும் முற்றிப் போயிருக்கிறது. இதனால் எல்லாமே சாதி அடிப்படையில்தான் நடைபெறுகின்றன. இந்திய சமுதாயத்துக்குள் நுழைந்து பாருங்கள்; சாதியை அதன் அப்பட்டமான அந்த சுயம்பிரகாசமான வடிவத்தில் நீங்கள் காண்பீர்கள். ஓர் இந்தியன் இன்னொரு இந்தியனுடன் அமர்ந்து உண்ணவோ, திருமணம் செய்து கொள்ளவோ முடியாது; ஏனென்றால் அவன் அல்லது அவள் அவனது அல்லது அவளது சாதியைச் சேர்ந்தவர்கள் அல்லர். ஓர் இந்தியன் இன்னொரு இந்தியனைத் தொடமுடியாது. ஏனென்றால் அவன் அல்லது அவள் அவனது அல்லது அவளது சாதியைச் சேர்ந்தவனல்ல அல்லது சேர்ந்தவளல்ல. அரசியலில் புகுந்து பாருங்கள். அங்கேயும் சாதி வெறி தலைவிரித்தாடுவதைப் பார்ப்பீர்கள். ஓர் இந்தியன் தேர்தலில்

எவ்வாறு வாக்களிக்கிறான்? அவன் தனது சொந்த ஜாதியைச் சேர்ந்தவனுக்கே வாக்களிக்கிறான். வேறு யாருக்கும் அல்ல. இந்திய தேசிய காங்கிரஸ்கூட இந்தியாவில் வேறு எந்தக் கட்சியும் செய்வதை விட சாதியை தேர்தல் காரியத்துக்குப் பயன்படுத்திக் கொள்கிறது. தொகுதிகளின் சமூக இயல்பை மனத்தில் கொண்டு அதன் வேட்பாளர்கள் பட்டியலைப் பாருங்கள். அதில் நீங்கள் என்ன காண்பீர்கள்? ஒரு தொகுதியில் எந்த சமூகத்தினர் அல்லது சாதியினர் அதிக எண்ணிக்கையில் இருக்கிறார்களோ அந்த சமூகத்தை அல்லது சாதியைச் சேர்ந்தவர்களையே காங்கிரஸ் தனது வேட்பாளர்களாக நியமிப்பதைக் காண்பீர்கள். சாதிகள் இருந்து வருவது குறித்து வெளிக்கு காங்கிரஸ் மண்ணுக்கும் விண்ணுக்குமாகக் குதித்துக் குரல் எழுப்பினாலும் உண்மையில் அது சாதி அமைப்பு முறையை வானளாவத் தூக்கிப் பிடித்து ஆதரித்து வருவதைப் பார்க்கலாம்.

தொழில் துறைக்குள் நுழைந்து பாருங்கள். அங்கு என்ன காண்பீர்கள்? மிக அதிகமாக ஊதியம் பெறுபவர்கள் அனைவரும் அந்தத் தொழிலை நடத்தும் தொழிலதிபரின் சாதியை சேர்ந்தவர் களாக இருப்பதைப் பார்ப்பீர்கள். ஏனையோர் ஏணியின் மிக அடித் தட்டில் மிகவும் பரிதாபமான முறையில் ஒட்டிக் கொண்டிருப்பதைக் காண்பீர்கள். வணிகத் துறையைச் சென்று பாருங்கள். அங்கும் இதே காட்சியைத்தான் காண்பீர்கள். அந்த வாணிக மாளிகை முழுவதும் ஒரு குறிப்பிட்ட சாதியின் கூடாரமாக இருப்பதையும், மற்றவர்கள் உள்ளே பிரவேசிக்கக் கூடாது என்று எழுதப்பட்ட பலகை அங்கு கதவுகளில் தொங்குவதையும் பார்ப்பீர்கள்.

தானதருமத் துறையை எடுத்துக் கொள்ளுங்கள். ஒன்று அல்லது இரண்டு விதிவிலக்குகள் தவிர இந்தியாவில் அறக்கொடை முழுவதும் வகுப்புவாத சாயம் பூசப்பட்டதாக இருப்பதைக் காண்பீர்கள். ஒரு பார்சி இறந்தால் அவன் தனது பணத்தைப் பார்சிகளுக்கே விட்டுச் செல்கிறான். ஒரு ஜைன மதத்தவன் இறந்தால் அவன் தனது பணத்தை ஜைனர்களுக்கே விட்டுச் செல்லுகிறான். ஒரு மார்வாடி இறந்தால் அவன் தனது பணத்தை மார்வாடிகளுக்கே விட்டுச் செல்லுகிறான். ஒரு பிராமணன் இறந்தால் அவன் தனது பணத்தைப் பிராமணர்களுக்கே விட்டுச் செல்கிறான். ஆக இவ்வாறு சமூகத்தில் அடி மட்டத்தில் இருப்பவர்களுக்கு அரசியலிலோ தொழில்துறையிலோ, வணிகத் துறையிலோ, கல்வித் துறையிலோ கதவுகள் திறந்து விடப்படாமல் மூடப்பட்டே உள்ளன.

சாதி அமைப்பு முறையில் பெரிதும் தீங்கு விளைவிக்கக்கூடிய ஜனநாயகத்துக்குக் குழித்தோண்டக் கூடிய வேறு சில விசேட அம்சங்களும் உள்ளன. இவற்றில் ஒன்று படிநிலையிலான ஏற்றத் தாழ்வு எனப்படுகிறது. சாதிகள் அவற்றின் அந்தரங்கத்தில் சமத்துவ மானவை அல்ல. அவை ஒன்றின் மேல் ஒன்று ஏறியிருக்கின்றன. அவை பரஸ்பரம் ஒன்றன் மீது ஒன்று போட்டியும் பொறாமையும் கொண்டுள்ளன. அது ஏறுமுகமான காழ்ப்பாகவும் இறங்குமுகமான வெறுப்பாகவும் உள்ளது. சாதி அமைப்பின் இந்த அம்சம் மிகவும் ஆபத்தான விளைவுகளை ஏற்படுத்தக்கூடியதாக உள்ளது. அது விருப்பார்வமுள்ள, பயனுள்ள ஒத்துழைப்பை அழிக்கிறது.

சாதியும் வர்க்கமும் ஓர் அம்சத்தில் வேறுபடுகின்றன. சாதி அமைப்பு முறையில் போல் வர்க்க அமைப்பு முறையில் முற்றிலும் ஓரம் கட்டும் போக்கு இல்லை. இது சாதி அமைப்பு முறையிலுள்ள இரண்டாவது தீய அம்சமாகும். இத்துடன் ஏற்றத்தாழ்வு மனப் பான்மையும் சேர்ந்து கொள்கிறது. இரண்டு சாதிகளிடையே செயலூக்கமும் பிரதிபலிப்பும் ஒருதரப்பாக அமைந்திருப்பதில் இது வெளிப்படக் காணலாம். மேல்சாதி அங்கீகரிக்கப்பட்ட ஒரு வழியில் செயல்படுகிறது. வேறுபட்ட ஒரு சாதியிலிருந்து உத்வேகம் பெறவும் அதற்கு ஈடாக உத்வேகம் அளிக்கவும் நியாயமான வாய்ப்பு கிட்டாது போது அது சிலரை எஜமான்களாகவும் மற்றவர்களை அடிமை களாகவும் பேணிப் பயிற்று வித்து வளர்கிறது. பல்வேறு வகையான வாழ்க்கை அனுபவங்களை சுதந்திரமாகப் பரிமாறிக் கொள்வது நிறுத்தப்படும் போது ஒவ்வொரு கட்சியின் அனுபவமும் அதன் அர்த்தத்தை இழக்கிறது. அது சமுதாயத்தை சலுகைபெற்ற வர்க்க மாகவும் அடிமைப்பட்ட வர்க்கமாகவும் பிரிக்கிறது. இத்தகைய பிரிவினை சமூக நசிவைத் தடுக்கிறது.

சாதி அமைப்பு முறைக்கு மூன்றாவது இயல்பு ஒன்று இருக்கிறது. ஜனநாயகத்தின் ஆணிவேர்களையே, அடிவேர்களையே வெட்டித் தள்ளும் ஒரு தீமையை அது தன்னுள் கொண்டுள்ளது; அதாவது ஒரு குறிப்பிட்ட சாதி ஒரு குறிப்பிட்ட தொழிலைத்தான் செய்ய வேண்டும் என்பது. சமுதாயம் நிலையான முறையில் நிறுவப்பட்டுள்ளது. என்பதில் ஐயமில்லை. அனைவரும் இயல்பாகவே தங்களுக்குள்ள தகுதிக்கும் திறமைக்கும் ஏற்றபடியும் மற்றவர்களுக்குப் பயனுள்ள முறையிலும் பணியாற்றுவதற்கு வழிவகை செய்யப்பட்டுள்ளது.

இந்தத் தகுதிகளையும் திறமையையும் கண்டறிவதும் சமூகத்துக்குப் பயனுள்ள முறையில் அவர்களைப் பயற்றுவிப்பதும் சமுதாயத்தின் கடமையாகும். ஆனால் மனிதனிடம் எல்லையற்ற ஆற்றல்கள் குவிந்தள்ளன. அவை அவனது பண்புகளை விரித்துரைக்கின்றன. ஒரு சமுதாயம் ஜனநாயககப் பூர்வமானதாக இருக்க வேண்டுமென்றால் அந்த தனிநபரின் அனைத்து ஆற்றல்களையும் பயன்படுத்திக் கொள்வதற்கு அது வழிவகுக்க வேண்டும். சமுதாயத்தை அடுக்கு களாக பிரிப்பது தனிநபரின் வளர்ச்சியையும் வேண்டுமென்றே குன்றச் செய்வதாகும். இவ்வாறு செய்வது ஜனநாயகத்தை வேண்டு மென்றே குன்றச் செய்யும் நடவடிக்கையாகவே இருக்கும்.

சாதி அமைப்பு முறைக்கு எவ்வாறு முடிவு கட்டுவது? இதற்குக் குறுக்கே நிற்கும் முதல் இடையூறு, படிநிலை முறையிலமைந்த ஏற்றத்தாழ்வாகும். இதுவே சாதி அமைப்பு முறையின் உயர்நிலையாக் உள்ளது. மக்கள் இரண்டு வர்க்கத்தினராக அதாவது மேல்தட்டு வர்க்கத்தினர் கீழ்த்தட்டு வர்க்கத்தினர் என்ற முறையில் பிரித் திருந்தால் கீழ்த்தட்டு வர்க்கத்தினரை ஒன்று சேர்த்து மேல்தட்ட வர்க்கத்தினர் எதிர்த்துப் போராடுவது எளிதாக இருக்கும். ஆனால் ஒரே சீராக கீழ்த்தட்டு வர்க்கத்தினர் இல்லை. மாறாக கீழ்த்தட்டு வர்க்கத்தினர் மிகவும் கீழ்த்தட்டு வர்க்கத்தினர் என்று அவர்கள் பிரிந் திருக்கிறார்கள். கீழ்த்தட்டு வர்க்கத்தினர் மிகவும் கீழ்த்தட்டு வர்க்கத் தினருடன் சேரமுடியாது. ஏனென்றால் மிகவும் கீழ்த்தட்டு வர்க்கத்தினரை உயர்த்துவதில் தான் வெற்றி பெற்றால் தனக்கும் தனது சாதிக்கும் தரப்பட்டுள்ள உயர் நிலையை இழக்க நேரிடும் என்று கீழ்த்தட்டு வர்க்கத்தினன் அச்சமடைகிறான்.

இரண்டாவது இடையூறும் ஒன்று உள்ளது. பொது நன்மை எது என்று தெரிந்து கொள்ள முடியாததால் இந்திய சமுதாயம் ஒன்றுபட்ட நடவடிக்கை எடுக்க முடியாததுதான் அது. வாழ்க்கையின் முடிவு பற்றி அறிந்திருப்பதில்தான் சமுதாயத்தின் சீரமைப்பு சார்ந்துள்ளது என்று பிளாட்டோ கூறுகிறார். வாழ்க்கையின் முடிவை நாம் தெரிந்து கொள்ளவில்லை என்றால், அதன் சிறப்பை நாம் அறிந்திருக்கவில்லை என்றால் விபத்தின் பிடியில்தான், சலனத்தின் பிடியில்தான் நாம் இருப்போம். முடிவின் நன்மையை நாம் அறிந்திருந்தாலொழிய, தெரிந்திருந்தாலொழிய நாம் எத்தகைய சாத்தியக் கூறுகளை மேம்படுத்த வேண்டும் என்பதை விவேகமான

முறையில் தீர்மானிப்பதற்கு நம்மிடம் வழிகாட்டும் கோட்பாடு எதுவும் இருக்காது. இங்குள்ள கேள்வி என்னவென்றால் சாதிச் சேற்றில் மூழ்கிப் போயுள்ள இந்திய சமுதாயம் தனது முடிவான இலட்சியத்தை எட்ட முடியுமா என்பதுதான். ஒரு நியாயமான, நேர்மையான, நல்லிணக்கமான சமூக அமைப்பில் தவிர வேறு எதிலும் இது சாத்தியமல்ல. சாதிஅமைப்பு முறையில் நல்லிணக்க மான சமூக அமைப்பு இருக்க முடியுமா? எல்லா இடங்களிலும் தவறான மதிப்பீடுகளாலும் தவறான கண்ணோட்டங்களாலும் இந்தியர்களின் மனம் திசைதிருப்பப்பட்டுள்ளது. தவறான திசையில் இட்டுச் செல்லப்பட்டுள்ளது. ஒழுங்கு முறையற்ற பிளவுபட்ட ஒரு சமுதாயம் ஏராளமான வேறுபட்ட முன்மாதிரிகளையும் தரங் களையும் நிர்ணயிக்கிறது. இத்தகைய நிலைமைகளில் ஓர் இந்தியன் சாதி விஷயத்தில் முரண்பாடற்ற உறுதியான நிலையை மேற் கொள்வது சாத்தியமல்ல.

கல்வி, சாதியை ஒழித்துக்கட்ட முடியுமா? முடியும் என்றும், முடியாது என்றும் கூறலாம். தற்போதுள்ளதுபோல் கல்வி கற்பிக்கப் படுமானால். சாதியின் மீது கல்வியால் எத்தகைய தாக்கத்தையும் ஏற்படுத்த முடியாது. எப்போதும் போலவே அது இருக்கும். பிராமண சாதியை இதற்குத் தெள்ளத் தெளிவான உதாரணமாகக் கூறலாம். இவர்களில் நூறு சதவீதத்தினர் கல்விகற்றவர்களாக இருக்கின்றனர். இன்னும் சொல்லப்போனால் இவர்களில் பெரும்பாலோர் உயர் கல்வி கற்றவர்களாக உள்ளனர். அப்படியிருந்தும் ஒரு பிராமணர் கூட சாதிக்கு எதிராக குரல் எழுப்பவில்லை. இன்னும் உண்மையைக் கூறினால் மேல் ஜாதியைச் சேர்ந்த கல்வி கற்ற ஒரு பிராமணன்தான் கல்வி கற்பதற்கு முன்னை விட சாதி அமைப்பு முறை நீடிக்க வேண்டும் என்பதில் கண்ணும் கருத்துமாக இருக்கிறான். ஏனென்றால் அவன் முன்னிலும் பெரிய உத்தியோகம் பெறுவதற்கு அவனுக்கு அது கூடுதல் வாய்ப்பினை அளிக்கிறது.

இந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால் சாதியை ஒழிப்பதற்கு கல்வி உதவிகரமாக இல்லை என்பது புலனாகும். இதுதான் கல்வியைப் பொறுத்தவரையில் அதன் பாதகமான அம்சம் ஆனால் இந்திய சமுதாயத்தின் கீழ்த்தட்டு வர்க்கத்தினருக்கு கல்வி பயனுள்ளதாக இருக்கும். அது அவர்களது எதிர்ப்பு உணர்ச்சியை அதிகப்படுத்தும் ஆனால் அவர்கள் அறியாமையில் ஆழ்ந்து கிடக்கும் இன்றைய நிலை

மையில் அவர்கள் சாதி அமைப்பு முறையின் ஆதரவாளர்களாக இருக்கின்றனர். அவர்களது கண்கள் திறக்கப்பட்டதும் சாதி அமைப்பு முறையை எதிர்த்துப் போராட அவர்கள் தயாராக இருப்பார்கள்.

தற்போது கடைப்பிடிக்கப்பட்டுவரும் கொள்கையில் ஒரு தவறு இருக்கிறது; அது என்ன? கல்வி பரந்த அளவில் தரப்பட்டாலும் அது இந்திய சமுதாயத்தில் சரியான, உரிய பகுதியிலிருந்து தரப்படவில்லை. சாதி அமைப்பு முறை நிலைக்க வேண்டும், நீடிக்க வேண்டும் என்பதில் இந்திய சமுதாயத்தில் சில பகுதியினர் ஆழ்ந்த அக்கறை கொண்டுள்ளனர். ஏனென்றால் இது அவர்களுக்குப் பல அனுகூலங்களை அளிக்கிறது. ஆதலால் இத்தகையோர்க்கு நீங்கள் கல்விக்கு வழி செய்து கொடுத்தால் இதனால் சாதி அமைப்புமுறை பலப் படவே செய்யும், வலுப்படவே செய்யும். அதே சமயம் சாதி அமைப்பு முறை ஒழிவதில் அக்கறை கொண்ட இந்திய சமுதாயத்தின் மிகவும் கீழ்த்தட்டு மக்களுக்கு கல்வி வசதி செய்து தந்தால் சாதி அமைப்பு முறை சுக்குநூறாக உடைந்து நொறுங்கும். இன்றைய நிலைமையில் கல்விக்கு இந்திய அரசாங்கமும் அமெரிக்கப் பவுண்டேஷனும் வகைதொகையின்றி வழங்கும் உதவி சாதி அமைப்பு முறையை வலுப்படவே செய்யும். செல்வந்தரை மேலும் செல்வந்தராகவும் ஏழையை மேலும் ஏழையாகவும் ஆக்குவது வறுமையை ஒழிப்பதற்கான சரியான மார்க்கம் அல்ல. சாதி அமைப்பு முறையை ஒழிப்பதற்கு கல்வியைப் பயன்படுத்துவதற்கும் இது பொருந்தும். சாதி அமைப்பு முறையை என்றென்றைக்குமாக நிலைநாட்டுவதற்கு விரும்பு பவர்களுக்குக் கல்வி வசதி செய்து தருவது இந்தியாவில் ஜனநாயகத்தை வளர்த்து வலுப்படுத்தவதற்கு உதவாது, மாறாக, அது இந்தியாவில் நமது ஜனநாயகத்தை மிகுந்த இடர்களுக்கு, இடுக்கண்களுக்கு உள்ளாக்கவே செய்யும்.

26, அலிபூர் சாலை,
புதுடில்லி,
தேதி: மே 20, 1956.

(ஒப்பம்) பி.ஆர். அம்பேத்கர்

---

# (158)

# பௌத்த தம்மம் உலகின் ரட்சகனாகத் திகழும்

புத்த மதத்திற்குத் தாம் மாறுவதை புதுடில்லியிலிருந்து அறிக்கை மூலம் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் பிரகடனம் செய்தார்.

அந்த அறிக்கை வருமாறு:

26, அலிப்பூர் சாலை,
சிவில் லைன்ஸ், டில்லி,
செப்டம்பர் 23, 1956

புத்த மதத்தில் நான் சேருவதற்கான தேதியும் இடமும் இப்போது இறுதியாக முடிவு செய்யப்பட்டு விட்டன. நாகபுரியில் துஷ்ஷெரா நாளன்று* அதாவது 1956 அக்டோபர் 14ஆம் தேதி அது நடைபெறும். மதமாற்ற வைபவம் காலை 9 மணிக்கும் 11 மணிக்கும் இடையே நடைபெறும். அன்றைய தினம் மாலையில் கூட்டத்தில் நான் உரை நிகழ்த்துவேன்.

டாக்டர் பி. ஆர். அம்பேத்கர்,
செப்டம்பர் 23, 1956.

இது சம்பந்தமான நிகழ்ச்சி நிரலின் முழு விவரமும் பிரபுத்ர பஷத் வார இதழில் பிரசுரிக்கப்பட்டது. புத்த மதத்துக்கு மாறுபவர்கள் 19 வயதுக்கு மேற்பட்டவர்களாக இருக்க வேண்டும் என்று அறிவிக்கப்பட்டது.[1] இந்த மதமாற்ற நிகழ்ச்சியை ஏற்பாடு செய்யும் முழுப் பொறுப்பும் இந்திய பௌத்த கவுன்சிலின் நாகபுரி கிளையிடம் ஒப்படைக்கப்பட்டது. இதன்படி கமிட்டியின் செயலாளரான திரு. டபிள்யூ. எம். கோட்போலே துண்டு பிரசுரம் ஒன்றை வெளியிட்டார். அது வருமாறு:-

---

* அசோக விஜயதசமி

1. பிரம்மபுத்தா பாரத், செப்டம்பர் 29, 1956.

## வெகுஜன மத மாற்றம்

*1956 அக்டோபர் 14ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை விஜயதசமி தினத்தன்று காலை 8 மணி அளவில் நாகபுரியில் நடைபெறும் ஒரு வைபவத்தில் டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் புத்தமதத்தைத் தழுவுவார். பர்மாவைச் சேர்ந்தவரும் தற்போது இந்தியாவில் இருப்பவருமான வணக்கத்திற்குரிய பிஷு சந்திரமணி மகா கேரா இந்த நிகழ்ச்சியை நடத்தி வைப்பார்.*

*புத்த மதத்தில் சேர, விரும்புபவர்கள் இதே வைபவத்தில் அதனைச் செய்யலாம். அவர்கள் சுத்தமான வெண்ணாடைகள் அணிந்திருக்கவேண்டும்.*

## நிதி வழங்க வேண்டுகோள்

*அறச் செயலார்ந்த இந்த வைபவத்தில் லட்சக்கணக்கில் மக்கள் கலந்து கொள்வார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்த மாபெரும் நிகழ்ச்சியை நடத்தும் பொறுப்பை பாரதீய பௌத்த ஜன சமிதியின் ஸ்தல கிளையிடம் வணக்கத்திற்குரிய பாபா ஒப்படைத்துள்ளார். இந்தக் கிளைக்கு மக்கள் முடிந்த எல்லா உதவிகளையும் செய்வார்கள் என்று நம்பப்படுகிறது. நிதி உதவி செய்பவர்கள் சம்பந்தப்பட்ட சமிதியிடமிருந்து ரசீதுகள் பெறவேண்டும். வெளி ஊர்களில் இருப்பவர்கள் பண அஞ்சல் மூலம் நிதி உதவி செய்யலாம்.*

*இந்த வைபவத்தை நடத்துவதில் பங்கு கொள்ளவிரும்புபவர்கள் கீழே கையெழுத்திடுள்ளவரை 1956 செப்டம்பர் 30ஆம் தேதியன்றோ அல்லது அதற்கு முன்னரோ சந்திக்கலாம்.*

டபிள்யூ எம். கோட்போலே,
*செயலாளர்,*
*பாரதீய பௌத்த ஜன சமிதி,*
*(நாகபுரி கிளை) கோதான் மான்ஷன்,*
*நாகபுரி.*[1]

*தேதி,*
*செப்டம்பர் 21, 1956.*

*1. வாமன்ராவ் காட்போலே, ப. 266.*

டாக்டர் பி.ஆர் அம்பேத்கர் வணக்கத்திற்குரிய பிக்கு சந்திர மணிக்கு எழுதிய கடிதத்தில் இந்த மதமாற்ற நிகழ்ச்சியை நடத்தித் தரும்படிக் கேட்டுக் கொண்டார். அந்தக் கடிதம் வருமாறு:-

26, அலிப்பூர் சாலை,
டில்லி,
செப்டம்பர் 24, 1956.

அருட்திரு பிக்கு சந்திரமணி,
குஷேனரா, கோரக்பூர் மாவட்டம்,
உத்தரப்பிரதேசம்,
அருட்டிரு பான்ட்டே

நானும் என் மனைவியும் புத்த மதத்தைத் தழுவ முடிவு செய்திருப்பதை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம். இந்த சமயச் சடங்கு 1956 அக்டோபர் 14ஆம் தேதி நாகபுரியில் நடைபெற விருக்கிறது. இந்த சடங்கு நடைபெறும் நேரம் காலை 9 மணி முதல் 11 மணி வரை என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இந்த சடங்கை நீங்கள் நடத்தித் தர வேண்டும் என்பது எங்களது பெருவிருப்பம். நீங்கள் தற்போது இந்தியாவிலுள்ள மிகவும் மூத்த பௌத்த சந்நியாசி என்ற முறையில் இந்த சடங்கை நீங்கள் நடத்துவது மிகவும் உசிதமாக இருக்கும் என்று நம்புகிறோம்.

இப்போதைய உங்களது உடல் நிலையில் நீங்கள் நாகபுரிக்கு வருவதில் உள்ள சிரமத்தை நாங்கள் உணர்கிறோம். நீங்கள் குஷனாராவிலிருந்து நாகபுரிக்கு விமானம் மூலமோ அல்லது ரயில் மூலமோ வருவதற்கு ஏற்பாடு செய்கிறோம். மேலும் நாகபுரியில் நீங்கள் தங்குவதற்கு வேண்டிய சகல வசதிகளையும் செய்து தருகிறோம். குஷனாராவிலிருந்து நாகபுரிக்கு உங்களை அழைத்து வர யாரையேனும் அனுப்புகிறோம். எங்கள் அழைப்பை உங்களால் ஏற்றுக் கொள்ள முடியுமா என்பதை அன்பு கூர்ந்து தெரிவியுங்கள்

உங்கள் அன்புள்ள
(ஒப்பம்) பி.ஆர் அம்பேத்கர்[1]

அன்பு வணக்கங்கள்,

1. கைர்மோட் தொகுதி 12, ப. 48.

இந்த நிகழ்ச்சியை ஒட்டி பிரபுத்த பாரத், 1956 அக்டோபர் 12 ஆம் தேதி ஒரு சிறப்பு மலர் வெளியிட்டது.

இந்த நிகழ்ச்சியில் எல்லோரும் கலந்து கொள்ளலாம் என்று தெரிவிக்கப்பட்டது. ஆனால் சந்தாத் தொகை ஒரு ரூபாய் செலுத்தி உறுப்பினராகும்படி குழு அவர்களைக் கேட்டுக் கொண்டது. செலவை ஏற்றுக் கொள்வது நாகபுரி மக்களின் பொறுப்பாகும். வரவேற்புக் குழு உறுப்பினர் கட்டணம் ரூ.25. எவர் வேண்டுமானாலும் வரவேற்புக் குழுவில் இடம் பெறலாம்.

மத மாற்றத்துக்குப் பதிவு செய்துகொள்வது 1956 அக்டோபர் 12 ஆம் தேதி ஆரம்பமாவதாக அறிவிக்கப்பட்டது. மதமாற்றம் நடைபெறும் இடத்தில் கூட அலுவலகம் செயல்படும். பதிவு செய்துகொண்ட பிரதிநிதிகள் அனைவருக்கும் தலா இரண்டு நுழைவுச் சீட்டுகள் வழங்கப்பட்டன; மதமாற்றம் நடைபெறும் மண்டபத்திற்குள் செல்லுவதற்கு இவை பயன்படும்.

வெள்ளை நிற அரைக் கால்சட்டையும் அதே போல் வெள்ளை நிற சட்டையும் அணிந்து வருமாறு தொண்டர்களுக்குத் தெரிவிக்கப் பட்டது. நாகபுரிக்கு வெளியே இருந்து வரும் தொண்டர்களுக்கு வழிகாட்டும் பொறுப்பு திரு. கே.வி. உம்ரே. திரு. சச்சிதானந்த மங்கே, திரு. ஆர்.ஆர். பட்டீல் ஆகியோரிடம் ஒப்படைக்கப்பட்டது.

மக்களின் வேண்டுகோளின் பேரில் மக்களை பம்பாயிலிருந்து நாகபுரிக்குக் கொண்டுவர ஒரு விசேட ரயில் வண்டியை ரயில்வே நிர்வாகம் ஏற்பாடு செய்தது. இந்த ரயில் 1956 அக்டோபர் 12 ஆம் தேதி இரவு 9.15 மணிக்கு பம்பாய் வி.டி. யிலிருந்து புறப்படுவதாக இருந்தது. அவ்வாறே ரயில்வே அதிகாரிகள் ஓர் அறிவிப்பையும் வெளியிட்டனர். எனினும் நாகபுரிக்குச் செல்லும் எல்லா ரயில் வண்டிகளிலும் கூட்டம் நிரம்பி வழிந்தது. இந்த ரயில் நின்ற ஒவ்வொரு ரயில் நிலையத்திலும் மேன்மேலும் பெருந்திரளான மக்கள் ஏறினர்.

நாகபுரியில் இந்த மக்கள் அனைவரும் தங்குவதற்கு பள்ளிக் கூடங்களில் ஏற்பாடு செய்யப்பட்டது. நாகபுரி தெற்கு அம்பசாரி சாலையில் அம்மைப்பால் கழகத்துக்கு அருகிலுள்ள திறந்தவெளி மைதானத்தில் மதமாற்ற நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப்பட்டது. தரையில் மூங்கில் விரிப்புகள் போடப்பட்டிருந்தன; மைதானம் எங்கும் சுமார்

3000 மின்சார பல்புகள் பொருத்தப்பட்டிருந்தன. பெண்களுக்கு தனி இடம் ஒதுக்கப்பட்டிருந்தது![1]

"திரு. ரெராம் கௌடேயும் திரு. டபிள்யூ.எம். கோட்போலேயும் ஒரு துண்டு வெளியீட்டை வைத்திருந்தனர். மதமாற்ற நிகழ்ச்சியின் விவரங்கள் அதில் தரப்பட்டிருந்தன.

**சனிக்கிழமை 13 - 10 - 1956**

| | |
|---|---|
| மாலை 5-8 | பரித்ரான் |
| 8-10 | சொற்பொழிவு திரு.டி. வாலிசின்ஹா, பொதுச்செயலாளர், மகாபோதி கழகம். |

புத்தரின் வாழ்க்கையையும் இந்தியாவில் உள்ள புகழ் பெற்ற பௌத்த தலங்களையும் பற்றிய ஒளி விளக்கக் கண்காட்சி.

**ஞாயிறு 14 - 10 - 1956 (அசோக விஜயதசமி)**

| | |
|---|---|
| காலை 8-11 | டாக்டர் பி. ஆர். அம்பேத்கர், திருமதி மைசாகேப் அம்பேத்கர் மற்றும் ஏனையோரை மதமாற்றம் செய்யும் நிகழ்ச்சி, நடத்துபவர் வணக்கத்துக்குரிய சந்திரமணி மகாஸ்தவீர், |
| காலை 11-11.25 | புத்தர் சிலையை வழங்குதல் டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு கல்கத்தா மகா போதி கழகம். |
| மாலை 6-7 | சொற்பொழிவு -திரு. டி. வாலிசின்ஹா, பொதுச்செயலாளர், மகாபோதி கழகம். |
| இரவு 8-11 | யுகியாத்ரா அவுரங்காபாத், மிலிந்த கல்லூரி நடத்தும் மராத்தி நாடகம். |

1. நவ்யுக், அக்டோபர் 21, 1956.

**திங்கள் 15 - 10 - 1956**

| | |
|---|---|
| *காலை 8-11* | *சொற்பொழிவு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்* |
| *இரவு 8-10* | *ஒளிவிளக்கக் கண்காட்சி* |

**அக்டோபர் 14, 1956:**

*மக்கள் அதிகாலையில் எழுந்து தீக்ஷா பூமி நோக்கி ஊர்வல மாகச் சென்றனர்; ஊர்வலத்தில் கோஷங்களை முழங்கிய வண்ணம் சென்றனர். 2 முதல் 2.5 லட்சம் மக்கள் குழுமியிருந்தனர். காலை 7 மணிக்குள் பந்தலில் பாதி நிரம்பி இருந்தது. இந்த வைபவத்தை நடத்தும் பொறுப்பு நாகபுரி மற்றும் பம்பாய் 'சமதா சைனிக் டாலி' டம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. இந்த நிகழ்ச்சியின் போது 10 முதல் 11 காவல்துறையினர்தான் பாதுகாப்புக்கு வந்திருந்தனர். பத்திரிகை யாளர்களுக்கு விசேட ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இந்தியாவி லிருந்தும் வெளிநாடுகளிலிருந்தும் பத்திரிகை நிருபர்கள் வந்திருந்தனர். மதம் மாறும் நோக்கத்துடன் வந்திருந்தவர்களின் எண்ணிக்கை மிக அதிகமாக இருந்ததால் அனுமதி சீட்டுகள் அனைத்தும் தீர்ந்து விட்டன. எனவே அனுமதியின்றி எல்லோருமே இந்த நிகழ்ச்சியில் கலந்து கொள்ளலாம் என்று அமைப்பாளர்கள் அறிவிக்கும்படியான நிலைமை ஏற்பட்டது.*

**மதமாற்றச் சடங்கு:**

*காலை 9.30 மணிக்கு மகாஸ்தவீர் பிக்கு சந்திரமணியுடன் டாக்டர் பி.ஆர் .அம்பேத்கர் மதமாற்ற சடங்கு நடைபெறும் இடத்துக்கு வந்து சேர்ந்தார். அந்த நேரத்திற்குள் சுமார் 5 லட்சம் முதல் 6 லட்சம் மக்கள் அங்கு திரண்டு வந்திருந்தனர். இந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்ட ஏனைய பிக்குகள் பின்வருமாறு:-*

*(1) தெரோ பன்னாட்டிஸ், சாஞ்சி விகார், போபால்.*

*(2) வணக்கத்துக்குரிய பிக்கு எச். சித்தாத்திஸ்ஸா, இலங்கை.*

*(3) வணக்கத்துக்குரிய எம்.சௌகரத்னா, சாரநாத், காசி.*

*(4) பிக்கு ஜி. பிரத்னியானந்த், புத்த விகார், லட்சுமணபுரி*

*(5) நெர் ஷிரம்னெர், தம்மோத்ய விகார், மேற்குவங்கம்*

*(6) அருட்டிரு பரம்சாந்தி.*

*குமாரி இந்துதாய் வரலேயின் வரவேற்பு கீதத்துடன் நிகழ்ச்சி ஆரம்பமாயிற்று. இந்த சந்தர்ப்பத்தில் டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கரின் தந்தையான ராம்ஜி மலோஜி சுபேதாருக்கு பாராட்டுரைகள் மலைபோல் குவிந்தன.*

*பின்னர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரும் மைசாகேபும் புத்தரின் திருவுருவச் சிலைக்கு முன்னால் கூப்பிய கரங்களுடன் நின்றனர். மகாஸ்தவீர் சந்திரமணி திரிசரணத்தையும் பஞ்சசீலத்தையும் பாலி மொழியில் பின்கண்டவாறு பாராயணம் செய்தனர்;*

*நமோ தஸ்ஸ பகவதோ அரஹதோ சம்ம சம்புத்தாச*

*நமோ தஸ்ஸ பகவதோ அரஹதோ சம்ம சம்புத்தாச*

*நமோ தஸ்ஸ பகவதோ அரஹதோ சம்ம சம்புத்தாச*

**இதன் பொருள்:**

*(புனிதரை, தகை சான்றவரை முற்றிலும் ஞானம் பெற்றவரைப் போற்றுவோம்!)*

*புத்தம் சரணம் கச்சாமி*

*தம்மம் சரணம் கச்சாமி*

*சங்கம் சரணம் கச்சாமி*

*துதியம்பி புத்தம் சரணம் கச்சாமி*

*துதியம்பி தம்மம் சரணம் கச்சாமி*

*துதியம்பி சங்கம் சரணம் கச்சாமி*

*ததியம்பி புத்தம் சரணம் கச்சாமி*

*ததியம்பி தம்மம் சரணம் கச்சாமி*

*ததியம்பி சங்கம் சரணம் கச்சாமி*

## இதன் பொருள்

*(நான் புத்தரைப் பின்பற்றுகிறேன்*

*நான் தம்மத்தைப் பின்பற்றுகிறேன்*

*நான் சங்கத்தைப் பின்பற்றுகிறேன்*

*இரண்டாம் தடவை நான் புத்தரைப் பின்பற்றுகிறேன்*

*இரண்டாம் தடவை நான் தம்மத்தைப் பின்பற்றுகிறேன்*

*இரண்டாம் தடவை நான் சங்கத்தைப் பின்பற்றுகிறேன்*

*மூன்றாம் தடவை நான் புத்தரைப் பின்பற்றுகிறேன்*

*மூன்றாம் தடவை நான் தம்மத்தைப் பின்பற்றுகிறேன்*

*மூன்றாம் தடவை நான் சங்கத்தைப் பின்பற்றுகிறேன்)*

## பஞ்சசீலம்:

1. *பானாதிபாதா வெரமணீ - சிக்காபதம் சமாதியாமி*
2. *அதின்னாதனா வெரமணீ - சிக்காபதம் சமாதியாமி*
3. *காமேசு மிச்சாகாரா வெரமணீ - சிக்காபதம் சமாதியாமி*
4. *முசாவாத வெரமணீ - சிக்காபதம் சமாதியாமி*
5. *சுராமெரய - மஜ்ஜா- பமாதத்தானா வெரமணீ- சிக் காபதம் சமாதியாமி.*

## இதன் பொருள்:

(1. *உயிர் ராசிகளைக் கொல்வதில்லை என்ற விதியைச் கடைப் பிடிக்க நான் உறுதிபூணுகிறேன்.*

2. *வழங்கப்படாத எதையும் எடுத்துக் கொள்வதில்லை என்ற விதியைக் கடைப்பிடிக்க நான் உறுதிபூணுகிறேன்.*

3. *பாலின ஒழுங்கீனத்தில் ஈடுபடுவதில்லை என்ற விதியைக் கடைப்பிடிக்க நான் உறுதிபூணுகிறேன்.*

4. *பொய் பேசுவதில்லை என்ற உறுதியைக் கடைப்பிடிக்க நான் உறுதிபூணுகிறேன்.*

5. மயக்க வெறியூட்டும் குடிப்பழக்கத்திலும் மருந்து பழக்கத் திலும் ஈடுபடுவதில்லை என்று நான் உறுதி பூணுகிறேன்.)

இவ்வாறு மகாஸ்தவீர் சந்திரமணி தீக்சை அளித்து டாக்டர் பாபா சாகேபையும் மைசாகேப் அம்பேத்கரையும் புத்த மதத்தில் இணைத்தார்.

இதனைத் தொடர்ந்து டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் புத்தர் சிலைக்கு மாலை அணிவித்து அதன் முன்னால் மூன்று முறை தலை வணங்கினார்.

ஏனையோரை மதம் மற்றும் சடங்கு காலை 10 மணிக்குத் தொடங்கிற்று. இந்து மதத்தைத் துறந்து புத்தமதத்தைத் தழுவ விருப்பமுள்ளவர்கள் எழுந்து நின்று கைகளைக் கட்டிக் கொண்டு தன்னைக் தொடர்ந்து திரிசரணையும் பஞ்சசீலத்தையும் ஒப்புவிக்க வேண்டும். என்று டாக்டர் பி.ஆர் அம்பேத்கர் பிரகடனம் செய்தார். இந்தப் பிரகடனத்தைத் தொடர்ந்து கூட்டம் முழுவதும் எழுந்து நின்றது. டாக்டர் பி. ஆர். அம்பேத்கர் அவர்களுக்கு தீக்சை அளித்து அவர்களைப் புத்த மதத்தில் இணைத்துக் கொண்டார்.

இந்த சடங்கின் ஒரு பகுதியாக கூட்டத்தினரை 22 சூளுரைகளை எடுத்துக் கொள்ளச் செய்தார். அவை வருமாறு:

1. பிரம்மா, விஷ்ணு, மகேஸ்வரனிடம் எனக்கு நம்பிக்கை இல்லை; அவர்களைத் தொழுது வழிபடவும் மாட்டேன்.

2. ராமன், கிருஷ்ணனிடம் எனக்கு நம்பிக்கை இல்லை; அவர்கள்ளத் தொழுது வழிபடவும் மாட்டேன்

3. கௌரி, கணபதி மற்றும் இதர இந்து மத தெய்வங் களிடமும் பெண் தெய்வங்களிடமும் எனக்கு நம்பிக்கை இல்லை, அவர்களைத் தொழுது வழிபடவும் மாட்டேன்.

4. கடவுள்களின் அவதாரத் தத்துவத்தில் எனக்கு நம்பிக்கை இல்லை.

5. மகான் புத்தர், விஷ்ணுவின் அவதாரம் என்று நான் நம்பவில்லை, நம்பவும் மாட்டேன்.

6. நான் ‘சிராத்தம்’ செய்ய மாட்டேன். ‘பிண்டதானமும்’ தரமாட்டேன்.*

7. புத்தரின் சித்தாந்தங்களுக்கும் போதனைகளுக்கும் மாறான முறையில் எவ்வகையிலும் செயல்படமாட்டேன்

8. பிராமணர்களைக் கொண்டு எந்த சமய சடங்குகளையும் செய்யமாட்டேன்.

9. மனிதகுலத்தின் சமத்துவத்தில் நான் நம்பிக்கை கொண்டுள்ளேன்.

10. சமத்துவத்தை நிலைநாட்டப் பாடுபடுவேன்.

11. புத்தர் போதித்த எண்வழி மார்க்கத்தைப் பின்பற்றுவேன்.

12. புத்தர் வகுத்துத் தந்த ‘பத்து பரமிதாக்களை’ நான் பின்பற்றுவேன்.

13. அனைத்து ஜீவராசிகளிடமும் பரிவோடும் பாசத்தோடும் நடந்து கொள்வேன். அவற்றை அன்போடு பேணி வளர்ப்பேன்.

14. நான் திருடமாட்டேன்.

15. நான் பொய் சொல்லமாட்டேன்.

16. சிற்றின்ப பாவங்களை செய்ய மாட்டேன்.

17. மது அருந்த மாட்டேன்.

18. பிரத்னியா(விவேகம்) சீல் (சீலம்) காருண்யா (கருணை) ஆகிய மூன்று புத்தமதக் கோட்பாடுகளுக்கு இணங்க என் வாழ்க்கையை நடத்த நான் முயல்வேன்.

---

* ஒருவர் இறந்தபிறகு இந்துமதத்தில் செய்யப்படும் சடங்குகள்

19. மனிதகுலத்தின் வாழ்வுக்கும் வளத்துக்கும் பாதகம் விளை விக்கும், மனிதர்களைப் பாகுபடுத்திப் பார்த்து அவர் களைக் கீழ்த்தரமாக நடத்தும் எனது பழைய இந்து மதத்தை விட்டு புத்த மதத்தை இப்போது தழுவுகிறேன்.

20. புத்த தம்மன் *சத்தம்மம்* என்று உறுதியாக நம்புகிறேன்.

21. நான் ஒரு புதிய வாழ்க்கையில் அடியெடுத்து வைப்பதாகக் கருதுகிறேன்

22. புத்தரின் போதனைகளின்படி இனி நடப்பதென இப்போது முதல் உறுதி மேற்கொள்கிறேன்.

"இறுதியில் அகில இந்திய மகாபோதி கழகத்தின் பொதுச் செயலாளரான திரு. வாலி சின்ஹா டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு புத்தர் சிலையைப் பரிசளித்தார்.

புத்த மதத்தைத் தழுவிய பிரமுகர்கள் வருமாறு:- ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் பொதுச் செயலாளரான ராஜபாவ் கோப்ராகாடே என்ற பார்; பிடி; ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் பம்பாய் மாநிலத் தலைவரான பி.கே. என்ற தாத சாகேப் கெய்க்வாட், பம்பாய் பிராந்திய ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் தலைவரான ஆர். டி. பண்டாரே, சாந்தாபாய் தானி, சி.என். மொகித்தே, ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தின் குஜராத் கிளையின் தலைவரான ஜி.டி. பார்மர், கே.கே. பார்மர், டி.ஜி. ஜாதவ், சரோஜினி ஜாதவ், வி.ஆர். ரான்னபஸ் புனா; எம்.எம். சசலேகர், ஹரிதாஸ் அவாலே, சதானந் ஃபுல்ஜெலே, அஹோத்தே, வி.எஸ். பாகரே, எஸ்.ஏ. உப்ஷியாம், பி.எஸ். மோரே, பி.எச் வரலே, தோந்திராம், பகரே, யஷ்வந்தராவ் அம்பேத்கர், (டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின் புதல்வர்) முகுந்தராவ் அம்பேத்கர், பி.சி. காம்ளே முதலியோர்.

நீதிபதி பவானி சங்கர் நியோகி பௌத்த சமிதியின் செயலாளரான வி. எம். குல்கர்னி, ஔரங்காபாத் மிலிந்த் கல்லூரியின் முதல்வரான திரு. எம்.பி. சிட்னிஸ். திரு. பி.எஸ். கபீர் ஆகியோரும் புத்த மதத்துக்கு மாறினர்.

டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்குப் பாராட்டுத் தெரிவித்து வந்திருந்த பல்வேறு கடிதங்கள் மதமாற்ற சடங்கு முடிவடைந்ததும் வாசிக்கப்பட்டன. இந்தக் கடிதங்களை எழுதியவர்களில் பின்வருவோரும் அடங்குவர். பர்மாவின் பிரதம மந்திரி யு பி.ஸ்வே, பர்மாவின் முன்னாள் பிரதமர் யு - நு, கொழும்புவைச் சேர்ந்த எச்.டபிள்யூ. அமர் சூர்யா, கல்கத்தாவைச் சேர்ந்த டாக்டர் அரவிந்த பருவா, ரங்கூனைச் சேர்ந்த மஹாதெரோ யு - பன்னாலோக் முதலியோர். இந்த நிகழ்ச்சி காலை 11 மணிக்கு முடிவடைந்தது.

அக்டோபர் 14ஆம் தேதி மாலை ஔரங்காபாத் மிலிந்த் கல்லூரி மாணவர்கள் 'யுக் யாத்ரா' என்ற நாடகத்தை அரங்கேற்றினர்;[1]

## டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தாம் மதம் மாறியது சம்பந்தமான சொற்பொழிவை 1956 அக்டோபர் 15ஆம் தேதி நிகழ்த்தினார்

அவர் கூறியதாவது :

எனது பௌத்த சகோதரர்களே, எங்கள் அழைப்பை ஏற்று இங்கு வந்திருப்பவர்களே,

நேற்றும், இன்று காலையும் மதமாற்ற சடங்கு நடைபெற்ற இடத்தின் முக்கியத்துவத்தைப் புரிந்து கொள்வது சிந்தனையாளர்களுக்கு அநேகமாகக் கடினமாக இருக்கக்கூடும். அவர்களது அபிப்பிராயத்திலும் எனது அபிப்பிராயத்திலும் நேற்று நடைபெற்ற மதமாற்ற நிகழ்ச்சி இன்றும், இன்று நடைபெற்ற நிகழ்ச்சி நேற்றும் நடைபெற்றிருக்க வேண்டும். இந்தப் பொறுப்பை நாங்கள் ஏன் ஏற்றுக் கொண்டோம், இதற்கு அவசியம் என்ன, இதன் விளைவுயாது என்பதைத் தெரிந்து கொள்வது இன்றியமையாதது. இதைப் புரிந்து கொண்டால்தான் எங்கள் பணியின் அடித்தளம், அஸ்திவாரம் வலுவாக இருக்கும். இந்தப் புரிதல் நிகழ்ச்சி ஏற்கனவே நடைபெற்றிருக்க வேண்டும். ஆனால் சில விஷயங்கள் நிச்சயமற்று இருப்பதால் இவ்வாறு இயல்பாகவே நடைபெறுகிறது. இந்த சமயச்

1. பிரபுத்த பாரத் - 1956 அக்டோபர் 27ஆம் தேதியிட்ட அம்பேத்கர் புத்த தீட்ச சிறப்பிதழ்.

சடங்கைப் பொறுத்தவரையில் என்ன நடைபெற வேண்டுமோ அது நடைபெற்றுள்ளது. எனினும் நாட்கள் மாறிவிட்டதால் எதுவும் கெட்டு போய் விடவில்லை.

பலர் பின்வரும் கேள்வியை என்னிடம் கேட்டனர்: இந்த வைபவம் நடைபெறுவதற்கு நாகபுரியை நீங்கள் ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்? இந்த விழா ஏன் வேறு ஏதேனும் ஊரில் நடைபெறவில்லை? ஆர்.எஸ்.எஸ்.ஸின் (ராஷ்ட்ரிய சுவயம் சேவக் சங்) ஒரு பெரிய பட்டாளம் நாகபுரியில் இருப்பதால் அவர்களைத் திக்குமுக்காடச் செய்யவே இந்த விழா இந்நகரில் ஏற்பாடு செய்யப் பட்டதாக சிலர் கூறுகின்றனர் இது உண்மை அல்ல. இந்தக் காரணத்துக்காக இந்த விழா நாகபுரியில் நடைபெறவில்லை. எங்கள் பணி பிரம்மாண்டமானது. வாழ்க்கையின் ஒவ்வொரு நிமிடமும் அதற்கு மிக முக்கியமானது. எனது மூக்கை சொரிந்து கொண்டு சகுனம் சரியாக இல்லை என்று கூற எனக்கு நேரம் கிடையாது.

இந்த இடத்தைத் தெரிந்தெடுத்தற்கான காரணம் வேறு. இந்தியாவில் புத்த மதத்தைப் பற்றிப் பிரசாரம் செய்தவர்கள் நாகா மக்களே என்பதை பௌத்த வரலாற்றைப் படிப்பவர்கள் தெரிந்து கொள்வார்கள். நாகர்கள் ஆரியர்களின் உக்கிரமான பகைவர்கள்; ஆரியர்களுக்கும் ஆரியல்லாதவர்களுக்கும் இடையே பல உக்கிரமான போர்கள் நடைபெற்றுள்ளன. நாகர்களை ஆரியர்கள் சுட்டெரித்த நிகழ்ச்சிகளை புராணங்களில் படிக்கலாம். அகஸ்தியரால் ஒரே ஒரு நாகரை மட்டும் காப்பாற்ற முடிந்தது. அவரது வழித் தோன்றியவர்களே நாங்கள். மிகக் குரூரமான அடக்குமுறை, ஒடுக்குமுறையைச் சகித்துக் கொண்டு வந்த நாகா மக்களுக்கு இதிலிருந்து, மீள ஒரு மாமனிதர் தேவைப்பட்டார். அந்த மாமனிதரை அவர்கள் கௌதம புத்தரில் கண்டனர். எனவே, அவர்கள் மகான் புத்தரின் போதனைகளை இந்தியா முழுவதிலும் பரப்பினர். அப்படிப்பட்ட நாகர்கள் நாங்கள். நாகா மக்களின் பிரதான உறைவிடம் நாகபுரியிலும் அதனைச் சுற்றிலுமே அமைந்திருந்தது. அதனால்தான் இந்த நகரம் நாகபுரி என்று அழைக்கப்படுகிறது. நாகர்களின் நகரம் என்று இதற்குப் பொருள். இந்த இடத்திலிருந்து சுமார் 27 மைல் தொலைவில் ஒரு குன்று இருக்கிறது. நாகார்ஜூன் குன்று என்பது அதன் பெயர். இதற்கு அருகில் ஓடும் நதியின் பெயர் நாகா நதி என்பதாகும். இங்கு வசிக்கும் மக்கள் காரணமாகவே இந்த நதி

இப்பெயரைப் பெற்றது. நாகா மக்கள் வாழும் பிரதேசத்தின் வழியாகப் பிரவகித்துச் செல்லும் நதி நாகா நதியாகும். இந்த இடத்தை அதாவது நாகபுரியைத் தேர்ந்தெடுத்ததற்கான பிரதான காரணம் இதுதான். இதைத் தவிர வேறு எவரையும் சினம் கொள்ளச் செய்யும் நோக்கம் ஏதும் எனக்கு அறவே இல்லை. அதுவும் ஆர்.எஸ்.எஸ். பிரச்சினை என் மனதில் துளிகூட இடம் பெறவில்லை. இந்த ரீதியில் எவரும் இதனை அர்த்தப்படுத்திக் கொள்ளக்கூடாது.

எதிர்த்தரப்பினருக்கு இது விஷயத்தில் வேறு காரணங்கள் இருக்கக்கூடும். எதிர்ப்பைக் காட்டுவதற்காக இந்த இடம் தேர்ந் தெடுக்கப்படவில்லை என்பதை ஏற்கனவே விளக்கியிருக்கிறேன். இந்தப் பணியைத் தொடங்கியதற்காகப் பலர் என்னை குறை கூறி யுள்ளனர். பத்திரிகைகளும் என்னைத் தாக்கி எழுதியுள்ளன. சிலருடைய விமர்சனம் மிகவும் கடுமையாக உள்ளது. பரிதாபத் துக்குரிய தீண்டப்படாத என் சகோதரர்களை நான் தவறான பாதையில் இட்டுச் செல்லுகிறேன் என்பது அவர்களது கருத்து. இன்று தீண்டப்படாதவர்களாக உள்ளவர்கள் என்றென்றும் தீண்டப் படாதவர்களாக இருப்பார்கள் என்றும் தற்போது பெற்றுள்ள உரிமைகளை அவர்கள் இழப்பார்கள் என்றும் கூறி அவர்கள் எங்கள் மக்களை தவறான பாதையில் இட்டுச் சென்று வருகின்றனர்; வழக்கமான பாதையையே பின்பற்றுங்கள் என்று எங்களில் கல்வி யறிவில்லாதவர்களுக்குப் போதனை செய்து வருகின்றனர். இளைஞர்கள், முதியவர்களில் சிலரை வழிதவறச் செய்யக்கூடும். மக்களின் உள்ளங்களில் ஏதேனும் ஐயங்கள் ஏற்படுமானால் அந்த ஐயங்களை அகற்றுவது நமது கடமையாகும். இவ்வாறு அவர்களது ஐயங்களை அகற்றுவது நமது இயக்கத்தின் அடித்தளத்தை, அஸ்தி வாரத்தைப் பலப்படுத்தும், வலுப்படுத்தும்.

இறைச்சி உண்ணக்கூடாது என்ற ஓர் இயக்கம் கடந்த காலத்தில் நம் மத்தியில் இருந்து வந்தது. தீண்டத்தக்கவர்கள் இதனைத் தங்கள் தலையில் விழக்கூடிய ஓர் இடிபோல் கருதினர். உயிரோடிருக்கும் எருமையின் பாலை அவர்கள் குடிக்கலாம். எருமை இறந்த பிறகு அதன் உடலை நம் தோள்களில் நாம் சுமந்து செல்ல வேண்டும் என்பது விசித்திரமான பழக்கம் அல்லவா. இறந்து போன உங்கள் தாயை சுமந்து செல்ல எங்களை ஏன் அனுமதிக்க மறுக்கிறீர்கள் என்று அவர்களை நாம் கேட்கிறோம். இறந்தபோன எருமையை அவர்கள் நமக்குத் தருவது போல் காலமான தங்கள்தாயை

அவர்கள் நமக்குத் தர வேண்டும். சிறிது காலத்துக்கு முன்னர் யாரோ ஒருவர் 'கேசரி'யில் பின்வருமாறு எழுதினார்: சில கிராமங்களில் ஆண்டுதோறும் 50 கால்நடைகள் இறக்கின்றன; அவற்றின் இறைச்சி ஒருபுறமிருக்க அவற்றின் தோல், கொம்புகள், எலும்புகள், வால்கள் முதலியவற்றின் விற்பனையிலிருந்து 500 ரூபாய் வரை சம்பாதிக்க முடியும். இதனை அவர்கள் இழக்கப் போகிறார்களா? உண்மையில் இத்தகைய பிரசாரத்துக்குப் பதிலளிக்க வேண்டிய அவசியம் என்ன? இத்தகைய பிரசாரத்துக்கு நமது சாகேப் (தலைவர்) பதிலளிக்க வில்லை என்றால் அவர் வேறு என்னதான் செய்யப் போகிறார் என்று நமது மக்கள் கேட்கின்றனர்.

ஒரு சமயம் ஒரு கூட்டத்தில் பேசுவதற்காக சங்கம்னருக்குச் சென்றிருந்தேன். அங்கு விருந்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அச்சமயம் 'கேசரி' பத்திரிகையிலிருந்து ஒரு நிருபர் அங்கு வந்திருந்தார். அவர் எனக்கு ஒரு துண்டு காகிதம் அனுப்பி அதில் பின்வருமாறு கேட்டிருந்தார்: இறந்து போன பிராணிகளைச் சுமந்து செல்ல வேண்டாம் என்று உங்கள் மக்களுக்கு நீங்கள் ஆலோசனை கூறி வருகிறீர்கள். பாவம், அவர்கள் எவ்வளவு பரிதாபத்துக் குரியவர்கள்! அவர்களது பெண்களுக்கு உடுக்க சேலை இல்லை; அணிய ரவிக்கை இல்லை, உண்ண உணவில்லை, வீடுவாசல் நிலம்புலம் இல்லை. இவ்வாறு இருக்கும்போது தோல், இறைச்சி, சாணம் முதலியவற்றிலிருந்து வருடம் 500 ரூபாய் வருமானம் கிடைப்பதை விட்டு விட்டு வரும்படி நீங்கள் அவர்களுக்குப் பரிந்துரைக் கிறீர்கள். இது உங்கள் மக்களுக்குப் பெரும் இழப்பு இல்லையா?"

நான் கேட்டேன்: "உங்கள் கேள்விக்கு நான் எங்கு பதிலளிக்க வேண்டும்? இங்கே இந்த நடைக்கூடத்தில் பதிலளிக்கட்டுமா, அல்லது கூட்டத்தில் பதிலளிக்ககட்டுமா? மக்கள் மத்தியில் பதிலளிப்பதுதான் சாலச்சிறந்தது." அந்த நபரிடம் நான் மேலும் கேட்டேன்: "இது மட்டும்தானா அல்லது வேறு ஏதேனும் கேட்க நீங்கள் விரும்புகிறீர்களா?" அவர் சொன்னார்: "இதற்குப் பதில ளித்தால் போதும் அவ்வளவு தான்." அந்த நபரை நான் கேட்டேன். "உங்களுக்கு எத்தனை குழந்தைகள்? நீங்கள் எத்தனை பேர் இருக்கிறீர்கள்?" அவர் கூறினார்: "எனக்கு ஐந்து குழந்தைகள் இருக்கறார்கள். என் சகோதரனுக்கு ஐந்து அல்லது ஏழு குழந்தைகள் இருக்கிறார்கள்." நான் சொன்னேன்: அப்படியானால் உங்கள் குடும்பம்

பெரிது. எனவே நீங்களும் உங்கள் உறவினர்களும் கிராமத்தில் இறந்துபோன எல்லா விலங்குகளையும் சுமந்து சென்று 500 ரூபாய் சம்பாதிக்கலாம் இல்லையா? இதனை நீங்கள் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இத்தோடு வருடம் 500 ரூபாய் வருமானம் கிடைக்க நான் ஏற்பாடு செய்கிறேன். என்னுடைய மக்களுக்கு உணவு, உடை. உறைவிடம் கிடைக்க வேண்டும் என்பதில் மிகுந்த அக்கறை கொண்டுள்ளேன். அப்படியிருக்கும் போது நீங்கள் ஏன் இந்த அனுகூலத்தைப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது? ஏன் இதை நீங்கள் செய்யக்கூடாது? இதனை நாம் செய்தால் நாம் பயனடை வோம். இதனை நீங்கள் செய்தால் இது உங்களுக்கு அனுகூலமாக இருக்காதா? செத்த பிராணிகளை சுமந்து செல்லுங்கள்."

நேற்று ஒரு பிராமண இளைஞன் என்னிடம் வந்தான்; அவன் கேட்டான்; "நாடாளுமன்றத்திலும் மாகாண சட்ட மன்றங்களிலும் உங்களுக்கு தனி இடங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. அவற்றை ஏன் துறக்கிறீர்கள்?" நான் சொன்னேன்: "நீ ஒரு மஹராகி நாடாளு மன்றத்திலும் சட்ட மன்றங்களிலும் உள்ள இடங்களை நிரப்பு கிறீர்கள். பணித்துறைகளிலுள்ள காலி இடங்கள் நிரப்பட்டு வருகின்றன. இந்த இடங்களுக்கு எத்தனை எத்தனையோ, பிராமணர் களும் ஏனையோரும் விண்ணப்பித்து வருகிறார்கள். பணித் துறைகளில் நடப்பது போல் பிராமணர்களாகிய நீங்கள் மஹர்களாகி இந்த ஒதுக்கப்பட்ட இடங்களை ஏன் நிரப்பக்கூடாது?"

நாங்கள் அடைந்துள்ள இழப்புக்காக நீங்கள் ஏன் அழுகிறீர்கள் என்பதுதான் அவர்களிடம் நான் கேட்கும் கேள்வி. மனித ஜீவன்களுக்கு அருமையிலும் அருமையானது விலைமதிப்பற்ற சுயமரியாதையே தவிர பொருளாதார ஆதாயமோ அனுகூலமோ அல்ல. நற்பண்பும் நற்குணமும் படைத்த ஒரு பெண்மணி ஒழுக்கக்கேடால் என்ன பலன் கிடைக்கும் என்பதை நன்கு அறிவார். எங்கள் பம்பாயில் விலைமாதர்கள் வசிக்கும் ஒரு வட்டாரம் உள்ளது. இங்குள்ள பெண்கள் காலை 8 மணிக்கு எழுந்திருக் கிறார்கள்; அருகிலுள்ள உணவுவிடுதியில் காலை சிற்றுண்டி கொண்டு வரும்படி பணிக்கிறார்கள் (பெண்கள் பேசும் குரலில் இங்கு டாக்டர் அம்பேத்கர் பேசுகிறார்) " ஓ சுலைமான் ஒரு தட்டுக் கொத்துக்கறியும் (கீமா) ரொட்டியும் கொண்டுவா. அவ்வாறே சுலைமான் தேநீர், கேக்கோடு கொத்துக்கறியைக் கொண்டு வருகிறார்.

ஆனால், என் தாழ்த்தப்பட்ட சகோதரிகளுக்குச் சாதாரண ரொட்டியும் சட்னியும் கூடக் கிடைப்பதில்லை. அப்படியிருந்தும் அவர்கள் அன்பும் பண்புமிக்க விழுமிய வாழ்க்கை நடத்துகிறார்கள்.

நாங்கள் தன்மானத்துக்காகவும் சுயமரியாதைக்காகவும் போராடி வருகிறோம். மனிதனை முழுநிறைவான நிலைக்கு இட்டுச் செல்ல நாங்கள் தயாராகி வருகிறோம். அதன் பொருட்டு எத்தகைய தியாகமும் செய்ய சித்தமாக இருக்கிறோம். இந்தப் பத்திரிகை யாளர்கள் (அவர்களைச் சுட்டிக்காட்டி, கடந்த நாற்பது ஆண்டு களாக என்னை அதலகுதலப்படுத்தி வருகிறார்கள். இன்றைய நாள் வரை அவர்கள் என்னைப் பற்றி எவ்வளவு இழித்தும் பழித்தும் பேசி வருகிறார்கள் தெரியுமா! இப்போதாவது இதைப் பற்றிச் சிந்திக்கும் படி அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்; இந்தச் சிறுபிள்ளைத் தனத்தைக் கைவிட்டு விவேகத்துடன் நடந்து கொள்ளும்படி அவர்களை வேண்டிக்கொள்கிறேன்.

புத்த மத்துக்கு மாறிய பிறகும்கூட எனக்குரிய அரசியல் உரிமைகளை நான் பெறுவேன் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. (அம்பேத்கர் வாழ்க என்று இடிமுழக்கம் போன்ற கோஷங்கள் ஒலிக்கின்றன). என் மரணத்திற்குப் பிறகு என்ன நடக்கும் என்பதை என்னால் கூற இயலாது. தற்போதைய நிலைமையில் நாம் அதிகம் போராட வேண்டும். பௌத்தத்தைத் தழுவியதால் சிரமங்கள் இருக்கவே செய்யும். அவற்றை எவ்வாறு தவிர்க்க வேண்டும், எத்தகைய முயற்சிகளையும், வாதங்களையும் நாம் மேற்கொள்ள வேண்டும் என்பதைப் பற்றி நான் முற்றிலும் சிந்தித்துக் கொண்டுதான் இருக்கிறேன். எனது பையில்* நிறைய தீர்வுகள் இருக்கின்றன. அவை என்ன என்பதை நான் நன்கு அறிவேன். நான் பெற்ற இந்த உரிமைகள் மக்களுக்காகப் பெற்றவையாகும் இந்த உரிமைகள் பெற்ற ஒருவர் அவற்றை நிச்சயம் பாதுகாக்கவே செய்வார். இந்த உரிமைகளையும் வசதிகளையும் பெற்றவனாக நான் இருந்தால், அவற்றை மீண்டும் பெறும் நம்பிக்கை எனக்கு உண்டு. ஆதலால், இப்போது நீங்கள் என்

---

* "பை" என்ற சொல்லை டாக்டர் அம்பேத்கர் பயன்படுத்தவில்லை, அதற்குப் பதிலாக 'என் சட்டைப் பையில்' என்ற சொற்களைத்தான் அவர் பயன்படுத்தினார். மதமாற்ற வைபவத்தில் நேரில் கலந்து கொண்டவர்கள் இவ்வாறு கூறுகின்றனர் . மத மாற்றம் நடைபெற்ற சில ஆண்டுகளுக்குப் பிறகு கூட மக்கள் இந்த சொற்றொடரையே பயன்படுத்தி வந்தனர்- ஆசிரியர்கள்.

மீது தொடர்ந்து நம்பிக்கை வைக்க வேண்டும். எதிர்ப் பிரசாரத்தில் அணுவளவும் உண்மை இல்லை.

ஒரு விஷயம் குறித்து நான் வியப்படைகிறேன். எங்கு பார்த்தாலும் பரந்த அளவில் விவாதம் நடைபெற்று வருகிறது. ஆனால் நான் ஏன் புத்த மதத்தைத் தழுவினேன் என்று எவருமே என்னிடம் கேட்கவில்லை. வேறு மதத்தைத் தழுவாமல் இந்த மதத்தை மட்டும் நான் ஏன் தழுவினேன்? எந்த மதமாற்ற இயக்கத்திலும் இது மிக முக்கியமான அடிப்படையான கேள்வியாகும். மதம் மாறும்போது எந்த மதத்துக்கு மாறவேண்டும், அதனை ஏன் தழுவ வேண்டும் என்பதை அடிப்படையான கேள்வியாக எடுத்துக் கொள்ள வேண்டும். 1935இல் இயோலில் ஒரு தீர்மானத்தை நிறை வேற்றி இந்து மதத்தை நிராகரிக்கும், புறக்கணிக்கும் இயக்கத்தை நாங்கள் தொடங்கினோம். நீண்ட நாட்களுக்கு முன்பே நான் ஒரு பிரதிக்கினை எடுத்திருந்தேன். நான் ஓர் இந்துவாகப் பிறந்தாலும் ஓர் இந்துவாகச் சாகமாட்டேன் என்பதுதான் அந்தப் பிரதிக்கினை. அதனை நான் நேற்று நிறைவேற்றிக் காட்டினேன். இதற்காக நான் பெருமகிழ்ச்சியடைகிறேன். மிகவும் இரும்பூதெய்துகிறேன். நரகத்தி லிருந்து விடுபட்டதாக உணர்கிறேன். கண்ணைமூடிக் கொண்டு என்னைப் பின்பற்றுபவர்களை நான் விரும்பவில்லை. பௌத்தத்தைத் தழுவ விரும்புபவர்கள் நன்கு தெரிந்து, புரிந்து, உணர்ந்து அதனை ஏற்க வேண்டும். அவர்களது மனச்சான்று அந்த மதத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

மனித குலம் முன்னேறுவதற்கு மதம் முற்றிலும் இன்றியமை யாதது. காரல் மார்க்ஸைப் படித்த பிறகு சமய மறுப்பாளர் குழு ஒன்று உருவாயிற்று என்பதை நான் அறிவேன். சமயம், மதம் பயனற்றது, வீணானது என்பது அவர்களது கருத்து. அவர்கள் மதத்துக்கு முக்கியத்துவம் தருவதில்லை அதனை மதிப்பதில்லை. காலையில் அவர்கள் காலையுணவு உண்பார்கள். அதில் ரொட்டி, பாலேடு வெண்ணெய், கோழி இறைச்சி முதலியவை இருக்கும்; பின்னர் மதியம் முழுச் சாப்பாடு, ஆழ்த்த தூக்கம்; அடுத்துத் திரைப்படங்கள் பார்த்தல், இத்யாதி. இதுதான் அவர்களது வாழ்க்கைக் கோட்பாடு. இவைதான் நடைமுறைத் திட்டம். என்னுடைய கருத்து - என் தந்தை ஏழையிலும் ஏழை; இத்தகைய உயர் இன்ப வாழ்க்கையை நான் கனவிலும் எண்ணிப் பார்க்க முடியாது. என்னுடைய வாழ்க்கை போன்ற மிகவும் சிரம வாழ்க்கையை எவரும் ஒருபோதும் வாழ்ந் திருக்க முடியாது. எனவே சுகபோகங்கள் இல்லை என்றால் ஒரு

மனிதனுடைய வாழ்க்கை எவ்வளவு கடினமானதாக, மிகுந்த இன்னல் நிறைந்ததாக இருக்கும் என்ற உணர்வு எனக்கு இருந்தது. பொருளாதார உயர்வுக்கான, மேம்பாட்டுக்கான இயக்கம் எவ்வளவு அவசியம் என்பது எனக்குத் தெரியும். அத்தகைய இயக்கத்துக்கு நான் எதிரி அல்ல. மனிதன் பொருளாதார ரீதியில் முன்னேற வேண்டும்.

ஆனால் இந்த விஷயத்தில் ஒரு முக்கியமான தனித்தன்மையைக் காண்கிறேன். எருமைக்கும் காளைக்கும் மனிதனுக்கும் இடையே வேறுபாடு இருக்கிறது. காளைக்கும் எருதுக்கும் தினமும் தீவனம் தேவைப்படுகிறது. மனிதனுக்கும் உணவு தேவை. ஆனால் இவை இரண்டுக்கும் இடையே ஒரு வேறுபாடு இருக்கிறது. எருமைக்கும் காளைக்கும் மனம் என்று ஒன்று இல்லை; மனிதனுக்கு உடலும் அத்துடன் மனமும் இருக்கிறது. எனவே இவை இரண்டைப் பற்றியும் அக்கறை கொள்ள வேண்டும். மனம் வளர்க்கப்பட வேண்டும். அது பண்படுத்தப்பட வேண்டும். அது பண்படுத்தப்படுவதற்கு உள்ளாக வேண்டும். உணவைத் தவிர, மனிதனுக்கும் பண்பட்ட மனதுக்கும் இடையே எந்த ஒட்டும் உறவும் இல்லை என்று வாதிக்கும் நாட்டுடனோ, மக்களுடனோ எத்தகைய சம்பந்தமும் வைத்துக் கொள்ள நான் விரும்பவில்லை. ஏனைய மக்களுடன் மனிதன் உறவு வைத்துக்கொள்ள வேண்டுமென்றால் ஆரோக்கியமான உடலும் அதே போன்று ஆரோக்கியமான பண்பட்ட மனமும் இருப்பது அவசியம். இல்லையென்றால் மனித குலம் முன்னேறிவிட்டதாகக் கூற முடியாது.

மனிதனது உடல் அல்லது உள்ளம் அதாவது மனம் ஏன் அவல நிலையில் உள்ளது? அவனது உடல் நோய்வாய்ப்பட்டதாக இருப்பதோ அல்லது அவனது மனம் உற்சாகமற்று இருப்பதோ இதற்கான காரணங்களாகும். மனதில் உற்சாகம் இல்லையென்றால் முன்னேற்றம் சாத்தியமில்லை. அவனுக்கு இந்த உற்சாகம் ஏன் இருப்பதில்லை? முன்னேறுவதற்கு எத்தகைய வாய்ப்பும் இல்லாதிருப்பதோ அல்லது அவனுக்கு நம்பிக்கை இல்லாதிருப்பதோ முதல் காரணமாகும். இவ்வாறிருக்கும்போது அவன் எவ்வாறு உற்சாகமானவனாக இருக்க முடியும்? அவன் சீர்குலைந்தவனாக இருக்கிறான். தனது உழைப்புக்கு நல்ல பலன் கிடைக்குபோது அவன் உற்சாகமடைகிறான். இல்லை என்றால் என்ன நடக்கும்? ஒரு பள்ளிக் கூடத்தில் ஆசிரியர் பின்வருமாறு கூப்பாடு போடுகிறார்: "ஏய், யார்

இவன்? இவன் ஒரு மஹர். இந்தக் கேடுகெட்ட மஹர் பரீட்சையில் முதல் வகுப்பு பெறுவானா? அவன் ஏன் முதல் வகுப்பு பெற விரும்புகிறான்? அவன் மூன்றாம் வகுப்பு பெற்றால் போதாதா? முதல் வகுப்பு பெறுவது பிராமணனுக்குள்ள தகுதி. இப்போதுள்ள சந்தர்ப்ப சூழ்நிலைமைகளில் இந்தப் பையன் எவ்வாறு உற்சாகம் பெறுவான்? எவ்வாறு முன்னேறுவான்? உற்சாகத்துக்கான ஆணி வேர் மனதில் பொதிந்துள்ளது, எவனது உள்ளமும் உடலும் ஆராக்கியமாக இருக்கின்றனவோ, எவன் தைரியசாலியாக இருக்கிறானோ, துன்ப துயரங்கள் மலை போல் அலைமோதினாலும் அவற்றை எல்லாம் வெற்றிகரமாகச் சமாளிக்க முடியும் என்று எவன் திடநம்பிக்கை கொண்டிருக்கிறானோ அவனிடம்தான் உற்சாகம் கரை புரண்டோடும்; அவன்தான் அருஞ்செயல் புரிவான். இத்ததைய விசித்திரமான சித்தாந்தம் இந்து மதத்தில் நிலை கொண்டுள்ளது; இது ஒருபோதும் உற்சாகத்தைத் தோற்றுவிக்காது. சந்தர்ப்ப சூழ்நிலைமைகள்தான் மனிதனை உற்சாகமற்றவனாக ஆக்குகின்றன என்பது ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக உறுதிசெய்யப்பட்டு வந்திருக்கிறது. இத்தகையவர்கள் தோற்றுவிக்கப்படும்போது அவர்கள் அதிகப்பட்சம் எழுத்தர் பணியை மேற்கொண்டு தங்கள் வயிற்றை நிரப்புகின்றனர். வேறு என்ன நடைபெறும்? இந்த எழுத்தர்களைப் பாதுகாப்பதற்கு ஒரு பெரிய எழுத்தர் தேவைப் படுகிறார்.

மனிதனது ஆர்வத்துக்கு, உற்சாகத்துக்கு அடித்தளமாக இருப்பது மனம். ஆலைகளின் உரிமையாளர்களைப் பற்றி நீங்கள் அறிவீர்கள். அவர்கள் தங்கள் ஆலைகளில் நிர்வாகிகளை நியமிக்கிறார்கள். அங்கு நடைபெற வேண்டிய பணிகளை அவர்கள் தங்கள் நிர்வாகிகளைக் கொண்டு செய்துகொள்கிறார்கள். ஆலைகளின் உரிமையாளர்கள் கெட்ட பழக்க வழக்கங்களில் ஈடுபடுகிறார்கள். அவர்களது மனங்கள் பண்பட்ட முறையில் வளர்க்கப்படுவதில்லை. எங்கள் மனங்களில் உணர்ச்சி ஆர்வத்தைத் தோற்றுவிக்க நாங்கள் ஓர் இயக்கத்தைத் தொடங்கினோம். அப்போதுதான் எங்கள் படிப்பு ஆரம்பமாகும், இடுப்புத் துணியைக் கட்டிக் கொண்டுதான் நான் என் படிப்பைத் தொடங்கினேன். பள்ளிக் கூடத்தில் குடிப்பதற்குத் தண்ணீர் கூட எனக்கு கிடைக்கவில்லை. பள்ளிக் கூடத்தில் தண்ணீர் இல்லாமலேயே பல நாட்களைக் கழித்தேன். பம்பாயில் எல்பின்ஸ்டன் கல்லூரியில்கூட இதே நிலைமைதான் நிலவியது. சூழல் இவ்வாறு

இருக்குமானால் எத்தகைய நிலைமை தோற்றுவிக்கப்படும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? எழுத்தர்கள்தான் உருவாக்கப் படுவார்கள்.

டில்லி நிர்வாகக் கவுன்சிலில் நான் இடம் பெற்றிருந்தபோது லின்லித்கோ பிரபுதான் வைசிராயாக இருந்தார். அவரிடம் நான் இவ்வாறு கூறினேன்: "வழக்கமான செலவினத்தோடு, முஸ்லீம்களின் கல்விக்காக நீங்கள் அலிகார் பல்கலைக்கழகத்துக்கு மூன்று லட்ச ரூபாய் செலவிடுகிறீர்கள். இதே போன்று காசி இந்து பல்கலைக் கழகத்துக்கும் மூன்று லட்ச ரூபாய் வழங்குங்கள். ஆனால் நாங்கள் இந்துக்களும் அல்ல, முஸ்லீம்களும் அல்ல. எங்களுக்கு நீங்கள் ஏதேனும் செய்ய நினைத்தால் அவர்களுக்குச் செய்வதை விட ஆயிரம் மடங்கு அதிகம் செய்யவேண்டும். அது வேண்டாம், முஸ்லீமு களுக்குச் செய்யப்படும். அளவாவது குறைந்த பட்சம் எங்களுக்குச் செய்யுங்கள். இதற்கு லின்லித்கோ பிரபு பின்வருமாறு கூறினார்.: "நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்களோ அதை எழுதிக் கொடுங்கள்." அவ்வாறே நான் ஓர் அறிக்கை தயாரித்தேன். அந்த அறிக்கை இன்னும் என்னிடமே உள்ளது. ஐரோப்பியர்கள் மிகவும் பரிவிரக்கம் கொண்டவர்கள். எனது யோசனையை அவர்கள் ஏற்றுக் கொண்டனர். ஆனால் எந்த நோக்கத்துக்காக செலவிட வேண்டும் என்ற பிரச்சினை எழுந்தது. நமது சிறுமிகள் கல்வி கற்றவர்கள் அல்ல. எனவே அவர்கள் கல்வி கற்பதற்கு ஏற்பாடு செய்து தரப்படவேண்டும். அவர்களுக்கு உணவு வசதி செய்து தரவேண்டும். இதன் பொருட்டு பணம் செலவிடப்பட வேண்டும் நமது பெண்களுக்குக் கல்வி வசதி செய்து தந்து, அவர்கள் படித்தவர்களானால் பல்வேறு உணவு வகைகளைத் தயாரிப்பதற்கு என்ன வசதி இருக்கிறது? அவர்கள் கல்வி கற்பதன் இறுதிப் பலன் என்ன? அரசாங்கம் இதர துறைகளுக்குப் பணம் செலவிடுகிறது; கல்விக்கு செலவிடாமல் நிறுத்திக் கொள்கிறது. எனவே, ஒரு நாள் லின்லித்கோ பிரபுவிடம் சென்றேன்; கல்விக்காக அரசாங்கம் பணம் செலவிடுகிறது. அவரிடம் நான் பின்வருமாறு கூறினேன்; "நீங்கள் கோபப்படவில்லை என்றால் உங்களிடம் ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். நான் ஐம்பது பட்டதாரிகளுக்கு இணையானவன். இல்லையா?" இதை அவர் ஒப்புக் கொண்டார். அவரிடம் மீண்டும் கேட்டேன். "இதற்கு என்ன காரணம்?" அவர் சொன்னார்: "அந்தக் காரணம் எங்களுக்குத் தெரியாது. நான் சொன்னேன்:" நான்

ரொம்பவும் படித்திருக்கிறேன். நான் நினைத்தால் அரச சிம்மா சனத்திலேயே உட்கார முடியும். இத்தகையவர்கள்தான் எனக்கு வேண்டும் ஏனென்றால் இங்கிருந்து ஒட்டுமொத்தமாக நமது கண் காணிப்பையும் நாம் மேற்கொள்ள முடியும். நமது மக்கள் பாதுகாக்கப்பட வேண்டுமென்றால், இத்தகைய கூரிய நோக்கு கொண்ட மனிதர்கள் படைக்கப்பட வேண்டும். ஒரு சாதாரண எழுத்தர் என்ன செய்யமுடியும்? நான் கூறியதை அந்தக் கணத்திலேயே லின்லித்கோ பிரபு ஏற்றுக் கொண்டார். மேற்படிப்புக்காகப் பதினாறு பேர் இங்கிலாந்துக்கு அனுப்பட்டனர். சில மண் பானைகள் வாணலில் பாதி வேக வைத்துச் சுடப்படுவதும், சில பானைகள் முற்றிலும் வேக வைத்து சுடப்படுவதும் உண்டல்லவா, இதேபோல் அந்தப் பதினாறு பேர்களில் சிலர் பாதி வேக வைத்துக் சுடப் பட்டவர்களாயும், சிலர் முழுவதுமாக வேக வைத்துச் சுடப்பட்டவர்களாயும் இருந்தனர். இது வேறுபட்ட விஷயம்! பின்னாளில் சி. ராஜகோபாலாச்சாரி இந்த மேற்கல்வி திட்டத்தையே ரத்து செய்துவிட்டார்.

இந்த நாட்டில் இத்தகையதோர் நிலைமை நிலவவே செய்கிறது; இது வரவிருக்கும் ஆயிரக்கணக்கான ஆண்டுகாலத்துக்கு நம்மை உற்சாகமற்றவர்களாக ஆக்கவே செய்யும். இப்படிப்பட்டதோர் நிலைமை நிலவும் வரை நமது முன்னேற்றத்தில் நமக்கு ஆர்வம் இருக்காது. இந்து மதத்தில் நாம் இருக்கும் வரை இது விஷயத்தில் நம்மால் எதுவும் செய்ய இயலாது. மனுஸ்மிருதியில் சதுர்வருணம் இடம் பெற்றுள்ளது. இந்த சதுர்வருண அமைப்பு முறை மனித குலத்தின் முன்னேற்றத்துக்கு மிகவும் தீங்கு விளைவிக்கக் கூடியது. சூத்திரர்கள் குற்றேவல் பணிகளை மட்டுமே செய்ய வேண்டும் என்று மனு ஸ்மிருதியில் கூறப்பட்டுள்ளது. அப்படிப்பட்டவர்களுக்கு ஏன் கல்வி வேண்டும்? பிராமணன் கல்வி கற்க வேண்டும், க்ஷத்திரியன் ஆயுதமேந்த வேண்டும், வைசியன் வாணிகம் செய்ய வேண்டும், சூத்திரன் குற்றேவல் புரிய வேண்டும். இவ்வகையில் யார் பயனடை வார்கள்? பிராமாணன், க்ஷத்திரியன், வைசியன் ஓரளவு பயனடை வார்கள். ஆனால் சூத்திரர்கள் விஷயம் என்ன? இந்த மூன்று வருணத்தாரைத் தவிர இதர சாதியினரிடம் உற்சாகம் இருக்குமா? இந்த சதுர்வருண அமைப்பு முறை தற்செயலானதல்ல. இது ஒரு வழக்கமல்ல; இது சமய அமைப்பு.

இந்து மதத்தில் சமத்துவத்துக்கு இடமில்லை. ஒரு சமயம் நான் திரு. காந்தியிடம் சென்றிருந்தேன். அவர் சொன்னார்: "நான் சதுர் வருண அமைப்பில் நம்பிக்கை வைத்திருக்கிறேன்." நான் கேட்டேன்: "உங்களைப் போன்ற மகாத்மாக்கள் சதுர்வருணத்தை நம்பு கிறீர்களா? அது சரி இந்த சதுர்வருணம் என்பது என்ன? அது எவ்வாறு அமைந்திருக்கிறது? (இப்போது டாக்டர் அம்பேத்கர் தனது உள்ளங் கையைத் தட்டையாக வைத்துக் கொண்டு விரல்களை ஒன்றன் மீது ஒன்றாக வைத்துக் காட்டினார்.) சதுர்வருணம் உயரமாக இருக்கிறதா அல்லது தட்டையாக இருக்கிறதா. சதுர்வருணம் எங்கிருந்து தொடங்குகிறது, எங்கு முடிவடைகிறது? காந்திஜி இதற்கு பதிலளிக்க வில்லை. என்ன பதிலளிக்க முடியும்? எங்களைப் பாடழிவு செய்தவர்களும் இந்து மதத்தால் அழிந்தொழிய வேண்டும். இந்து மதத்தை அவசியமின்றி நான் குற்றம் சாட்டவில்லை. இந்து மதத்தால் எவரும் வாழ்வு வளம் பெற மாட்டார்கள். அந்த மதமே ஒரு சீரழிந்த மதமாகும்.

நமது நாடு ஏன் அந்நியர் ஆட்சியின் கீழ் வந்தது? 1945 வரை ஐரோப்பா போர்களில் மூழ்கிப்போயிருந்தது. எத்தனை படை வீரர்கள் கொல்லப்பட்டார்களோ அத்தனைப் படை வீரர்கள் ராணுவத்துக்குப் புதிதாகச் சேர்க்கப்பட்டனர். நாம் போரில் வெற்றி பெற்றுவிட்டோம் என்று அச்சமயம் யாராலும் கூற முடியவில்லை. நமது நாட்டில் எல்லாமே அறவே மாறுபட்டதாக, வேறுபட்டதாக இருந்தது. க்ஷத்திரியர்கள் கொல்லப்பட்டால் அவ்வளவுதான். நாம் ஒழிந்தோம். ஆயுதங்கள் பெற்றிருக்கும் உரிமை நமக்கு இருந்திருந்தால் இந்த நாடு அடிமைப்பட்டிருக்காது. எவராலும் இந்த நாட்டை வெல்ல முடியாது.

இந்து மதத்தில் இருப்பதன் மூலம் எவரும் எவ்வகையிலும் வளமுற இயலாது, நலமுற முடியாது. இந்து மதத்தில் அடுக்கமைவு முறை நடைமுறையில் இருந்துவருவதால் உயர் வருணத்தவர்களும் சாதியினரும்தான் நலமுறுகின்றனர், வளம் பெறுகின்றனர், ஆனால் மற்றவர்களின் நிலை என்ன? கதி என்ன? ஒரு பிராமணப் பெண் குழந்தை பெற்ற கணமே அவருடைய கண்கள் உயர்நீதிமன்ற நீதிபதி பதவி எங்கு காலியாக இருக்கிறது என்று சல்லடைப் போட்டு துலாவுகின்றன. இதற்கு மாறாக, நமது தோட்டிப் பெண் ஒரு குழந்தையை ஈனும்போது எங்கு தோட்டி வேலை காலியாக

இருக்கிறது என்றுதான் அவருடைய கண்கள் தேடுகின்றன. இத்தகைய ஒரு விசித்திரமான, வேதனையான, வாதனையான அமைப்புமுறை நிலவுவதற்கு இந்துமதத்தின் வருண-அமைப்பு முறையே காரணம். இதிலிருந்து எந்த முன்னேற்றத்தை நாம் காணமுடியும்? புத்த மதத்தில்தான் வாழ்வு வளத்தையும் நலத்தையும் எய்த முடியும்.

புத்த மதத்தில் 75 சதவீத பிக்குகள் பிராமணர்கள், 25 சதவீதத்தினர் சூத்திரர்களும் ஏனையோரும். ஆனால் பகவான் புத்தர் சொன்னார்: "ஓ பிக்குகளே நீங்கள் பல்வேறு நாடுகளிலிருந்தும் சாதிகளிலிருந்தும் வந்திருக்கிறீர்கள். நதிகள் அவற்றின் மாகாணங்களில் பெருக்கெடுத்துச் செல்லும்போது தனியாகவே அவ்வாறு செல்கின்றன. ஆனால் அவை கடலில் கலந்து விடும்போது தமது தனித் தன்மையை இழந்து விடுகின்றன; ஆறும் கடலும் ஒன்றாகி விடுகின்றன. பௌத்த சங்கம் ஒரு மகா சமுத்திரம் போன்றது. இந்த சங்கத்தில் அனைவரும் சமத்துவமானவர்கள். நதிகள் சமுத்திரத்தில் கலந்து விடும்போது எது கங்கையின் நீர், எது மகாநதியின் நீர் என்று இனம் காண முடியாது. இதே போன்றுதான் நாம் புத்த சங்கத்தில் சேர்ந்து விடும்போது நாம் நமது சாதியை இழந்து விடுகின்றோம். அனைவரும் சரிசமத்துவமாகிவிடுகிறோம். இத்தகைய சமத்துவத்தை ஒரேயொரு மாமனிதர்தான் போதித்தார். அந்த மாமனிதர்தான், மேதைதான் புத்தர் பிரான் (பலத்த கரகோஷம்).

"மதம் மாறுவதற்கு ஏன் நீங்கள் இவ்வளவு காலத்தை எடுத்துக் கொண்டீர்கள் என்று சிலர் கேட்கிறார்கள்? இத்தனை காலமாக நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்? இது முக்கியமான கேள்வி. ஒரு மதத்தின் மீது பற்று கொள்ளச் செய்வது எளிதான காரியமன்று. இது தனியொரு மனிதனின் பணியல்ல. மதத்தைப் பற்றிச் சிந்திக்கும் எவரும் இதைத் தெரிந்து கொள்ளவே செய்வர். என்னைப் போன்று இவ்வளவு பொறுப்பேற்றிருப்பவர் உலகில் யாரும் இல்லை. எனக்கு நீண்ட நெடுங்கால வாழ்க்கை கிடைக்குமானால், திட்டமிட்ட என் பணியை நிச்சயம் நிறைவேற்றுவேன். (டாக்டர் பாபசாகேப் அம்பேத்கர் நீண்ட நெடுங்கலாலம் வாழ்க என்ற கோஷங்கள் எண் திக்கும் எதிரொலிக்கின்றன.)

மஹர் ஒரு பௌத்தராவதால் அப்படி என்ன நடத்துவிடப் போகிறது என்று சிலர் கூறுவார்கள். அப்படிச் சொல்லாதீர்கள்

என்று அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். இது அவர்களுக்கு ஆபத்தானது. மேல் தட்டில் உள்ளவர்களும் செல்வந்தர்களும் மதத்தின் அவசியம் பற்றி உணர மாட்டார்கள். இவர்களில் அதிகாரி களாக இருப்பவர்களுக்கு வசிப்பதற்கு மாடமாளிகைகள் இருக்கின்றன; அவர்களுக்கு சேவை செய்வதற்கு வேலைக்காரர்கள் இருக்கிறார்கள்; அவர்களுக்குப் பணமும் பந்தாவும், செல்வமும் செல்வாக்கும் அந்தஸ்தும் மரியாதையும் இருக்கின்றன. இவ்வகையைச் சேர்ந்த வர்கள் மதத்தைப் பற்றி நினைப்பதற்கோ அல்லது அது குறித்து கவலைப்படுவதற்கோ அவசியமில்லை.

மதம் ஏழைகளுக்கு அவசியமானது. மதம் ஒடுங்கப்பட்ட மக்களுக்கு அவசியமானது. ஒரு மனிதன் நம்பிக்கையை ஆதாரமாக கொண்டுதான் வாழ்கிறான். வாழ்க்கையின் ஆணிவேர், அடிவேர் நம்பிக்கையில்தான் பொதிந்துள்ளது. இந்த நம்பிக்கை இழக்கப் படுமானால் வாழ்க்கை என்ன ஆவது? மதம் நம்பிக்கையை அளிக்கிறது. ஒடுக்கப்பட்ட மக்களுக்கு, ஏழை எளிய மக்களுக்கு ஒரு செய்தியைக் கூறுகிறது - பயப்படாதீர்கள், வாழ்க்கை நம்பிக்கை அளிப்பதாகவே இருக்கும், இது உறுதி என்று - இதனால்தான் ஏழைகளும் அடக்கி ஒடுக்கப்பட்டவர்களும் மதத்தை அரவணைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

கிறிஸ்துவ மதம் ஐரோப்பாவில் பிரவேசித்தபோது ரோமா புரியும் அதன் அண்டை நாடுகளும் மிகவும் அவல நிலையில் இருந்தன. மக்களுக்குப் போதிய உணவு கிடைக்க வில்லை. அச்சமயம் ஏழை எளிய மக்களுக்கு கிச்சடி வழங்கப்பட்டன. யார் கிறிஸ்துவைப் பின்பற்றுபவர்களாக மாறினார்கள்? ஏழை எளிய மக்களும் ஒடுக்கப் பட்ட மக்களும்தான். ஐரோப்பாவின் ஏழை மக்களும் அடித்தட்டு வர்க்க மக்களும் கிறித்தவர்களானார்கள். கிறிஸ்தவ மதம் பிச்சைக் காரர்களின் மதம் என்று நிப்பன் கூறினார். ஆனால் இதே கிறிஸ்துவ மதம் ஐரோப்பாவிலுள்ள அனைவரது மதமாக எப்படி ஆயிற்று என்ற கேள்விக்குப் பதிலளிக்க அவர் உயிரோடில்லை. அவர் உயிரோடு இருந்திருந்தால் இதற்கு அவர் பதிலளிக்க வேண்டியிருந் திருக்கும்.

புத்தமதம் என்பது மஹர்கள் மங்கர்களின் மதம் என்று சிலர் கூறுவார்கள். பிராமணர்கள் கௌதமரை "போ கௌதம்" என்று அழைப்பார்கள். 'போ கௌதம்' என்றால் 'அரே கௌதம்' என்று

பொருள். இவ்வாறாக பிராமணர்கள் புத்தர் பெருமானை நையாண்டி செய்தார்கள். ராமர், கிருஷ்ணன், சங்கரர் போன்றோரின் உருவச் சிலைகளை அயல்நாடுகளில் விற்பனைக்கு வைத்தால் எத்தனை சிலைகள் விற்பனையாகும் என்பது அவர்களுக்குத் தெரியவில்லை. ஆனால் அதே சமயம் புத்தர் பிரானின் சிலைகளை விற்பனைக்கு வைத்தால் ஒரு சிலை கூட எஞ்சியிருக்காது (பலத்த கரவொலி) இந்தியா இருக்கட்டும், வெளிநாடுகளில் சென்று பாருங்கள். உலகிற்குத் தெரிந்த பெயர் புத்தர் பிரானின் பெயராகத்தான் இருக்கும். இவ்வாறு இருக்கும்போது இந்த மதத்தைப் பரப்புவதை யாரால் எப்படி தடுக்க முடியும்!

நாங்கள் எங்கள் பாதையில் செல்லுகிறோம், நீங்கள் உங்கள் பாதையில் செல்லுங்கள். நாங்கள் ஒரு புதிய பாதையைக் கண்டு பிடித்துக் கொள்வோம். இது எங்களுக்கு மிகுந்த நம்பிக்கை யூட்டுவதாக உள்ளது. இது மேம்பாட்டுக்கும் முன்னேற்றத்துக்கும் இட்டுச் செல்லும் பாதை. இது புதிய பாதை அல்ல. இந்தப் பாதை எங்கிருந்தும் இரவல் பெறப்பட்டதல்ல. இது இங்கிருந்த பெறப் பட்டதே. இது முழுக்க முழுக்க இந்தியப் பாதை. புத்த மதம் இந்தியாவில் 2000 ஆண்டுகளாக நிலைத்திருந்து வருகிறது. உண்மையைக் கூறுவதானால் பௌத்தத்தை ஏன் முன்னரே தழுவாமல் போய் விட்டோம் என்று வருந்துகிறோம். புத்தர்பிரான் போதித்த கோட்பாடுகள், சித்தாந்தங்கள் அமரத்துவம் வாய்ந்தவை. ஆனால் புத்தர் இப்படியெல்லாம் உரிமை கொண்டாட வில்லை. காலம் மாறு படுவதற்கு ஏற்ப மாற்றம் செய்வதற்கு வழிவகை செய்யப்பட்டுள்ளது. இத்தகைய தாராளப் போக்கை வேறு எந்த மதத்திலும் காண முடியாது.

புத்தமதம் சிதைவுறுவதற்கு பிரதான காரணம் முஸ்லீம்களின் படையெடுப்புகளேயாகும். முஸ்லீம்கள் தங்கள் படையெடுப்புகளின் போது புத்தர் பிரானின் உருவச்சிலைகளை அழித்து சிதைத்தனர். இதுவே புத்த மதத்தின் மீது தொடுக்கப்பட்ட முதல் தாக்குதலாகும். இந்தப் படையெடுப்புகளுக்கு அஞ்சி புத்தபிக்குகள் தப்பிச் சென்றனர். சிலர் திபேத்துக்குச் சென்றனர். சிலர் சீனாவுக்கு சென்றனர். சிலர் வேறு எங்கோ சென்றனர். எந்த ஒரு மதத்தையும் பாதுகாப்பதற்குப் பொது மக்கள் ஆதரவு தேவை. வடமேற்கு எல்லைப்புறத்தில் ஒரு கிரேக்க மன்னர் ஆண்டு வந்தார். அவர் பெயர் மிலிந்தா. இந்த மன்னர்

எப்போதும் விவாதத்தில் ஈடுபடுவது வழக்கம். விவாதங்களில் பங்கேற்பது அவருக்குத் தனி மகிழ்ச்சி அளித்து வந்தது. வாதிடும் திறமையுள்ளவர்கள் என்னிடம் வந்து வாதிக்கலாம் என்று இந்துக் களிடம் அவர் கூறுவது வழக்கம். அவர் வாதத்தில் பலரை வாயடைக்கச் செய்துவிட்டார்.

ஒரு சமயம் புத்த மதத்தைச் சேர்ந்தவர்களுடன் வாதிக்கலாம் என்று அவர் எண்ணினார். எனவே, புத்த மதத்தைச் சேர்ந்த வாதத் திறமையுள்ள எவரையேனும் அழைத்து வரும்படி கூறினார். எனவே பௌத்தர்கள் இந்த விவாதத்தில் கலந்து கொள்ளும்படி நாக சேனனைக் கேட்டுக் கொண்டனர். நாகசேனன் ஒரு படித்த மேதை, பிராமணர். நாகசேனனுக்கும் மிலிந்தாவுக்கும் இடையே என்ன விவாதம் நடைபெற்றது என்பது ஒரு நூலின் மூலம் உலகுக்குத் தெரிய வந்துள்ளது. 'மிலிந்த பன்ஹா' என்பது அந்த நூலின் பெயர். மிலிந்தா ஒரு கேள்வி கேட்டார். மதம் ஏன் சிதைந்து வருகிறது? நாகசேனன் இதற்குப் பதிலளித்து மூன்று காரணங்களை கூறினார்.

முதல் காரணம்: ஒரு குறிப்பிட்ட மதம் போதிய பக்குவ மடையாததாக இருப்பதாகும். அந்த மதத்தின் அடிப்படை சித்தாந் தங்கள் ஆழமானவையாக இருப்பதில்லை. அது ஒரு லௌகிக மதமாகிறது. இத்தகைய மதம் குறுகிய காலமே நிலைத்து நிற்க முடியும்.

இரண்டாவதுகாரணம்: நன்கு படித்த பிரசாரகர்கள் ஒரு மதத்தில் இல்லையென்றால் அந்த மதம் சீணிக்கிறது என்பதாகும். நன்கு கற்றுணர்ந்தவர்கள் மதத்தின் தத்துவத்தை திறத்தோடு தரத் தோடு போதிக்க வேண்டும். எதிர்த்தரப்பினருடன் வாதிடுவதற்கு போதகர்கள் தாயராக இல்லையென்றால் அப்போது அந்த மதம் சிதைகிறது.

மூன்றாவது காரணம்: மதமும் மத சித்தாந்தங்களும் படித்தவர் களுக்கு மட்டுமே இருந்து வருவதாகும். சாமானிய மக்களுக்கு கோவில்களும் புண்ணிய ஸ்தலங்களும் உள்ளன. அவர்கள் அங்கு சென்று இயற்கை கடந்த தெய்வீக சக்தியை வணங்கி ஆராதிக்கின்றனர்.

நாம் புத்த மதத்தைத் தழுவும்போது இந்தக் காரணங்களை எல்லாம் மனத்திற்கொள்ள வேண்டும். பௌத்த மத சித்தாந்தங்கள்

லௌகிகமானவை என்று எவரும் கூற முடியாது. 2500 ஆண்டு களுக்குப் பிறகும் இன்று புத்த மதத்தின் அனைத்து சித்தாந்தங் களையும் உலகம் முழுவதும் போற்றுகிறது. அமெரிக்காவில் 2000 பௌத்த நிறுவனங்கள் உள்ளன. 3 லட்ச ரூபாய் செலவில் இங்கிலாந்தில் ஒரு புத்தர் கோவில் கட்டப்பட்டுள்ளது. ஜெர்மனியிலும் 3 ஆயிரம் முதல் 4 ஆயிரம் பௌத்த அமைப்புகள் உள்ளன. புத்தரின் கோட்பாடுகள், சித்தாந்தங்கள் சாகாவரம் பெற்றவை. எனினும் இது கடவுளின் மதம் என்று புத்தர் உரிமை கொண்டாடவில்லை. தம்முடைய தந்தை ஒரு சாதாரண மனிதர் என்றும் அவ்வாறே தானும் சதாரணமானவர் என்றும் புத்தர் கூறினார். உங்களுக்கு விருப்ப மிருந்தால் இந்த மதத்தை ஏற்றுக் கொள்ளுங்கள். இந்த மதம் உங்கள் பகுத்தறிவுக்கு ஒத்ததாக இருந்தால் இதனை ஏற்றுக் கொள்ளுங்கள். இத்தகைய பெருந்தகைமை வேறு எந்த மதத்திலும் அனுமதிக்கப் படவில்லை.

புத்த மதத்தின் மூல அடித்தளம் எது? புத்தரின் மதத்துக்கும் ஏனைய மதங்களுக்கும் இடையே மிகப்பெரும் வேறுபாடு உள்ளது. மற்ற மதங்கள் மனிதனை கடவுளுடன் சம்பந்தப்படுத்து வதால்அவற்றில் மாற்றங்கள் செய்வது சாத்தியமில்லை. கடவுள் இயற்கையைப் படைத்தார் என்று இதர மதங்கள் போதிக்கின்றன. கடவுள் அனைத்து வானத்தையும் காற்றையும் சந்திரனையும் சூரியனையும் மற்றும் இதர பலவற்றையும் படைத்தார். நாம் செய்வதற்கு கடவுள் எவற்றையும் விட்டு வைக்கவில்லை. எனவே நாம் கடவுளை வழிபட வேண்டும் என்று அவை கூறுகின்றன. மரணத்திற்கு பிறகு கடவுளின் தீர்ப்பு நாள் ஒன்று உள்ளது. அனைத்தும் அந்த தீர்ப்பையே பொறுத்துள்ளது என்று கிறித்துவ மதம் கூறுகிறது. ஆனால் புத்த மதத்தில் ஆண்டவனுக்கோ, ஆன்மாவுக்கோ இடம் ஏதும் இல்லை. உலகெங்கும் துயரம் நிலவுகிறது. 90 சதவீத மக்கள் துயரத்தில் சிக்கி அவதிப் படுகின்றனர். அல்லுறுகின்றனர் என்று புத்தர் கூறினார். இந்த அழுத்தப்பட்ட, பரிதாபத்துக்குரிய மக்களை துயரத்திலிருந்து விடுவிப்பதே புத்த மதத்தின் தலையாய பணியாகும். புத்தர் கூறியவற்றிலிருந்து மாறு பட்ட எதையும் கார்ல் மார்க்ஸ் கூறிவிடவில்லை. புத்தர் குறுக்கு மறுக்காக சுற்றி வளைத்து எதையும் சொல்லவில்லை.

சகோதரர்களே, நான் சொல்ல வேண்டிய அனைத்தையும் சொல்லி விட்டேன். எல்லா அம்சங்களிலும் இந்த புத்த மதம் முழு

நிறைவானது. எத்தகைய இழுக்கும் வழுவுமற்றது. அதே சமயம் இந்து மதக் கோட்பாடுகளோ எத்ததைய ஆர்வத்தையும் உத்வேகத்தையும் தோற்றுவிக்க முடியாதவை. பட்டம் பெற்ற அல்லது படித்த ஒரு நபரை நேற்றுவரை ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக எங்கள் சமூகம் உருவாக்கவில்லை. இங்கு ஒரு விஷயத்தை தயக்க மயக்கமின்றிக் கூற விரும்புகிறேன். நான் படித்த பள்ளிக் கூடத்தில் கூட்டிப் பெருக்கிச் சுத்தம் செய்யும் ஒரு பெண்மணி இருந்தார். அவர் மராத்தா. அவர் என்னைத் தொடமாட்டார். வயதானவர்களை மாமா என்று அழைக்கும்படி என்தாய் என்னிடம் கூறுவார். அவ்வாறே தபால் காரரை மாமா என்று அழைப்பேன் (பலத்த சிரிப்பு). என் குழந்தைப் பருவத்தில் பள்ளியில் படிக்கும்போது ஒரு நாள் எனக்கு மிகவும் தாகமாக இருந்தது. இதை எனது வகுப்பு ஆசிரியரிடம் கூறினேன். ஆசிரியர் என் பாதுகாப்புக்காக பணியாளரை அழைத்தார். என்னை குழாய் இருக்குமிடத்துக்கு அழைத்துச் செல்லும்படி அவனிடம் கூறினார். குழாய் இருக்குமிடத்துக்கு நாங்கள் சென்றோம். பணியாள் குழாயைத் திறந்தான் நான் தண்ணீர் குடித்தேன். பொதுவாகப் பள்ளிக் கூடத்தில் நான் குடிப்பதற்குக் தண்ணீர் கிடைக்காது. பின்னாளில் மாவட்ட நீதிபதியாகப் பணியாற்றும் வாய்ப்பு கிடைத்தது. ஆனால் அவ்வகையான பணியில் என்னால் நீடித்திருக்க முடியவில்லை. அப்போது எனக்கு ஒரு பிரச்சினை ஏற்பட்டது. என் சகோதரர்களின் நல்வாழ்வுக்கான, நலனுக்கான பணியை யார் மேற்கொள்வது என்பதே அந்தப் பிரச்சினை எனவே, நான் பார்த்து வந்த உத்தியோக பந்தத்திலிருந்து என்னை விடுவித்துக் கொண்டேன்.

ஒரு தனிநபர் என்ற முறையில் இந்த நாட்டில் நான் சாதிக்க முடியாதது எதுவும் இல்லை (கரகோஷம்). வைசியர், க்ஷத்ரியர், பிராமணர் ஆகியோரைப் பற்றி உங்கள் மனதில் உள்ள கருத்துகள் எவ்வாறு சரிந்து விழுந்து அழிக்கப்படும் என்பதே இப்போதைய உண்மையான பிரச்சினை. எனவே இந்த மதத்தைப் பற்றிய விவரங்களை எல்லா அம்சங்களிலும் உங்களுக்குத் தருவது எனது கடமையாகும். இது சம்பந்தமாக பல நூல்களை எழுதி, உங்களது ஐயங்களையும் ஊசலாட்டங்களையும் போக்குவேன். இந்தப் பிரச்சினையில் நீங்கள் முழு அளவுக்குத் தெளிவும் விளக்கமும் பெற எல்லா உதவிகளையும் செய்வேன். குறைந்த பட்சம் தற்போதைக்கு என் மீது நம்பிக்கை வையுங்கள்.

ஆனால் அதே சமயம் உங்களது பொறுப்பும் மிகப்பெரியது. மற்றவர்கள் உங்களை மதித்துப் போற்றும் வகையில் உங்களது

நடத்தை இருக்க வேண்டும். மதம் என்பது நமது கழுத்தைச் சுற்றிக் கட்டப்பட்டுள்ள ஒரு பிணம் என்று நினைக்காதீர்கள். புத்தமதத்தைப் பொருத்த வரையில் நமது இந்திய நாடு அதற்கு அந்நியமல்ல. எனவே புத்த மதத்தை மிகச் சிறந்த முறையில் பின்பற்ற நாம் உறுதி பூண வேண்டும். மஹர் மக்கள் புத்த மதத்துக்கு அவக்கேட்டைக் கொண்டு வந்து விட்டார்கள் என்ற பழிச்சொல்லுக்கு நாம் ஆளாகக் கூடாது; இது விஷயத்தில் நாம் உருக்கு உறுதியோடு இருக்க வேண்டும். இதனை நாம் சாதித்தோமானால் நம் தேசமும் நாமும் ஆக்க வளமுறுவோம்; செழித்தோங்குவோம்; அதுமட்டுமல்ல உலகம் முழுவதற்குமே இந்த நற்பேறு கிட்டும். நீதி நிலைநாட்டப் பட்டாலொழிய உலகில் சமாதானம் நிலவாது.

இந்தப் புதிய பாதை மகத்தான பொறுப்புகள் நிறைந்தது. நாம் சில உறுதிகளைப் பூண்டுள்ளோம். சில விருப்பங்களை வெளியிட்டுள்ளோம் என்பதை இளம் மக்கள் மனதில் கொள்ள வேண்டும் அவர்கள் சுயநலப் போக்கு கொண்ட சோம்பேறிகளாகி விடக் கூடாது. இந்த நோக்கத்துக்காக நமது வருவாயில் குறைந்த பட்சம் 20 ல் ஒரு பங்கையாவது வழங்குவது எனத் தீர்மானிக்க வேண்டும். என்னுடன் உங்கள் அனைவரையும் அழைத்துச் செல்ல விரும்பு கிறேன். ஆரம்பத்தில் ததாகட் ஒரு சில நபர்களுக்கு தீக்சை தந்தார். இந்த மதத்தை பரப்ப முழுமூச்சோடு பாடுபடுங்கள் என்று அவர் களை வலியுறுத்தினார். இதனைத் தொடர்ந்து யாஷாவும் அவருடைய நாற்பது நண்பர்களும் புத்த மதத்தை தழுவினர். யாஷா பெரிய செல்வந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர். இந்த மதம் எப்படி இருக்கிறது என்பதை மகான் புத்தர் அவர்களிடம் பின்வருமாறு எடுத்துரைத்தார்: இந்த மதம் *பகுஜன் ஹிதே, பகுஜன் சுகே, லோகானுகம்பே, தம்மா அதி கல்யாணம், மதிய கல்யாணமா பர்யவாசன் கல்யாணம்.* "ததகாதா அப்போதைய நிலைமைகளுக்கு ஏற்ப தமது மதத்தை எப்படிப் போதிப்பது என்பதைத் தீர்மானித்தார். இப்போது இதற்கான செயல் திட்டத்தை நாம் வகுக்க வேண்டும். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு ஒவ்வொருவரும் மற்றவருக்கு தீட்சை அளிக்க வேண்டும். ஒவ்வொரு பௌத்தருக்கும் தீட்சை அளிக்கும் உரிமை உண்டு என நான் பிரகடனம் செய்கிறேன்![1]

---

1. 1956 அக்டோபர் 27ஆம் தேதி அம்பேத்கர் தீட்சை என்ற தலைப்பில் பிரபுத்த பாரத் சிறப்பு இதழில் பிரசுரிக்கப்பட்டிருந்த மராத்தி உரை-ஆசிரியர்களால் இது ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது.

இவ்வாறு பௌத்தர்களதும் அழைப்பார்களதும் இடி முழக்கம் போன்ற கையொலிகளுக்கிடையே டாக்டர். பி.ஆர் அம்பேத்கர் உரையை முடித்தார்.

## ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடிற்று

இந்திய மகாபோதி கழகத்தின் பொது செயலாளராக, அருட்திரு டி. வாலிசின்ஹா நிகழ்ச்சியில் பங்கெடுத்துக் கொள்ளும்படி விசேடமாக அழைக்கப்பட்டிருந்தார். மதமாற்ற வைபவத்தை நேரில் கண்டு அது குறித்து அவர் செய்துள்ள வருணனை பௌத்தத்தைத் தழுவுவதில் பாபாசாகேபின் ஆதரவாளர்கள் காட்டிய எல்லையற்ற ஆர்வத்தைக் காட்டுவதாக உள்ளது. இந்த வரலாற்றுச் சிறப்புமிக்க நிகழ்ச்சியைப் பற்றி அருட்திரு டி. வாலிசின்றா கூறுவதாவது;

> "1956 அக்டோபர் 14ஆம் தேதி நவ இந்தியாவின் வரலாற்றில் ஒரு மறக்க முடியாத தினமாகும். ஏனென்றால் இந்த தினத்தில் தான் டாக்டர் அம்பேத்கரும் அவருடைய 50,000 ஆதர வாளர்களும் *திரிசரணத்தையும் பஞ்சசீலத்தையும்* பாராயணம் செய்து பகிரங்கமாக புத்த மதத்தை தழுவினர். மகாராஷ்டிரா பிரதேசத்தைச் சேர்ந்த நாகபுரி நகரில் 14 ஏக்கர் காலி நிலத்தில் இந்த மாபெரும் நிகழ்ச்சி நடைபெற்றது. இந்த வைபவத் துக்காக அங்கு ஒரு பிரம்மாண்டமான பந்தல் போடப் பட்டி ருந்தது. இதில் கலந்து கொள்வதற்கான அழைப்பைப் பெறும் பேற்றினை பெற்றேன். அங்கு திரண்டிருந்த ஒரு பெரிய ஜனசமுத்திரம் *திரிசரணத்தையும் பஞ்சசீலத்தையும்,* வார்த்தைக்கு வார்த்தை சொல்லுக்கு சொல் பாராயணம் செய்யும் நேர் நிகரற்ற காட்சி இன்னும் என் மனத்தில் பசுமரத்து ஆணிபோல் ஆழப் பதிந்துள்ளது. எல்லையற்ற ஆர்வமும் உற்சாகமுமிக்க இத்தயை ஒரு ஜனசமுத்திரத்தை என் வாழ்நாளில் நான் கண்டதே இல்லை. 14ஆம் தேி காலையும் அதற்கு முந்திய நாள் இரவும் 'பகவான் புத்தருக்கு ஜே' என்ற கோஷங்கள் இடி முழக்கம் போன்று விண்ணைப் பிளந்தன. ஆடவர்களும் பெண்களும் குழந்தைகளும் சிலர் தம் கைகளில் பால்மணம் மாறாத பச்சிளம் குழந்தைகளுடனும் சிலர் கரங்களில் பௌத்த

கொடிகளுடனும் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் கூட்டம் கூட்டமாக, அணிஅணியாக வற்றாத வரையாத வெள்ளம் போல் திரண்டு வந்து கொண்டிருந்தனர். பந்தலுக்குள் இடம் பெறுவதற்குக் காத்தவண்ணம் ஆயிரக் கணக்கானோர் சாலை யோரங்களில் குழுமியிருந்தனர். நாங்கள் நகரத்தைச் சுற்றிப் பார்த்தோம். எங்கு பார்த்தாலும் ஊர்வலங்களுக்குப் பின்னர் ஊர்வலங்களாக கூட்டம் நடைபெறும் இடத்துக்குச் சென்று கொண்டிருந்தன. நாங்கள் சிரமத்தோடு அங்கு சென்றடைந்த போது எங்கள் கார் மேடைக்குப் பின்னால் போய் நிற்பதற்காக ஏராளமான தொண்டர்கள் கூட்டத்தை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தனர். மேடையிலிருந்து நான் சுற்றும் முற்றுப் பார்த்தபோது என் முன்னால் ஓர் பிரம்மாண்டமான ஜன சமுத்திரம் அலைமோதிக் கொண்டிருப்பதைப் பார்தேன். இது ஓர் அற்புதமான காட்சியாகும். எனக்குத் தெரிந்தவரை மதமாற்றம் இவ்வளவு பிரம்மாண்ட அளவில் எங்கும் நடை பெற்றதை நான் பார்த்ததில்லை. டாக்டர் அம்பேத்கர் உடல் நலம் பாதிக்கப்பட்டிருந்தார். எனினும் அவர் உணர்ச்சி பொங்க ஒரு மணிநேரத்துக்கும் அதிகமாகப் பேசினார். அப்போது தாம் புத்த மதத்தை தழுவியதற்கான காரணத்தை அவர் புட்டுப் புட்டு வைத்தார். அவர் கூடியிருந்த மக்களுக்கு ஐந்து போதனைகளை அருளினார். அவர் கூறியதை மக்கள் அப்படியே திரும்பக் கூறினர். இந்த ஒலி நீண்ட தூரம் வரை பிரதிபலித்தது. புத்தரின் உருவச் சிலையை டாக்டர் அம்பேத்கருக்கு வழங்க மகாபோதிக் கழகத்தின் சார்பில் அவருக்கு மாலை அணிவித்தபோது எங்களது 70 ஆண்டுக்கால முயற்சி வெற்றி பெற்றதை உணர்ந்தேன் அப்போது எல்லையற்ற மகிழ்ச்சியால் என் கண்கள் குளமாயின. என் கன்னங்களில் கண்ணீர் வழிந்தோடியது![1]

---

1. வாலிசின்ஹா டி. டாக்டர் அம்பேத்கரும் பௌத்தத்துக்கு அவர் வழங்கிய பங்கும் - தொகுப்பு ஹோட்டி லால் நிம், சித்தார்த்த கல்வி மற்றும் கலாசாரக் கழகம். ஆக்ரா 1969 பக். 94 - 95.
மறுபதிப்பு டாக்டர் புஷி ப. 326.

# டாக்டர் அம்பேத்கரின் மதமாற்றம் இந்தியாவில் மீண்டும் புத்த சாசனத்தை நிலைநாட்டுவதை நோக்கமாக கொண்டதாகும்

இதே போன்று பர்மா உச்ச நீதி மன்றத்தின் நீதிபதியான யு சான் ஹிதுான் டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தார். புத்த மதத்துக்கு மாறியமைக்காக தமது வாழ்த்துச் செய்தியில் அவரைப் பாராட்டியிருந்தார். 'புத்தரும் அவருடைய தம்மமும்' என்ற நூலை அவர் எழுதி வருவதையும் சிலாகித்திருந்தார். அந்தச் கடிதம் வருமாறு:

என் அன்பார்ந்த டாக்டர் அம்பேத்கர்,

இந்தியாவில் புத்த சாசனத்தை மீண்டும் நிலைநாட்டுவதற்கு நீங்கள் ஆற்றிவரும் மகத்தான பணிக்காக உங்களுக்கு என் மனமார்ந்த பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த ஜெயந்தி ஆண்டில் நீங்கள் புரிந்துள்ள என்றென்றும் மறக்க முடியாத சாதனைக்காக பர்மாவிலுள்ள பௌத்தர்கள் அனைவரது உள்ளங்களும் உங்களை ஆராதிக்கின்றன. புத்தரின் தாயகத்தைச் சேர்ந்த லட்சோப லட்சக் கணக்கான மக்கள் அவர் ஏற்றி வைத்த விளக்கின் ஒளியில் உங்கள் தலைமையில் மீண்டும் திரும்பிவர ஆரம்பித்திருப்பதை அறிய புத்த சாசன கவுன்சிலும் பர்மா பௌத்தர்களும் எல்லையற்ற மகிழ்ச்சியும் பெருமிதமும் அடைகின்றனர். இந்தியாவின் அனைத்துப் பகுதி களிலும் புத்த சாசனம் மீண்டும் நிலை நாட்டப்படும் என்று நாங்கள் நம்புகிறோம்.

நீங்கள் ஆரம்பித்து வைத்த பணியை தொடர்ந்து மேற் கொள்வதில் மூன்றாவது டபிள்யூ எப்பி மாநாடு பர்மாவில் நடைபெற்றபோது என் பங்கை சிறிதளவு ஆற்ற முடிந்தது. கடந்த மாதம் 28ஆம் தேதி சட்டா சங்னகயானா குகையில் மகாதொஸ் முன்னிலையில் மிகச் சிறப்பாக நடைபெற்ற ஒரு விழாவில் சுமார் 5000 தமிழர்கள் சம்பிரதாய முறையில் புத்த மதத்தை ஏற்றுக் கொண்டனர். காபினட் அமைச்சர்களும் பௌத்தத் தலைவர்களும், ரங்கூனிலுள்ள ஏராளமான தமிழர்களும், ரங்கூனிலும் பர்மாவின் ஏனைய பகுதிகளி லுள்ளவர்களும் உங்கள் தலைமையை ஏற்க மிகுந்த ஆர்வத்தோடு வருகின்றனர்.

முன்னமேயே உங்களுக்குக் கடிதம் எழுதாமைக்காக மிகவும் வருந்துகிறேன். அதற்காக ஆயிரக்கணக்கில் என் மன்னிப்புகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். சட்ட பணியிலும், வெளி நாடுகளில், அதிலும் குறிப்பாக ஜப்பானில் புத்த மதத்தைப் பிரசாரம் செய்யும் பணியுடன் சம்பந்தப்பட்ட சட்டா சங்கயானா நடவடிக்கை களிலும் இதர நடவடிக்கைகளிலும் நான் மும்முரமாக ஈடுபட்டிருந்தேன். ஜப்பானில் பௌத்தத்தை நிலைநாட்டுவதற்கு ஒரு கழகத்தைத் தோற்றுவிக்க செல்வாக்கு மிக்க ஏராளமான பௌத்தத் தலைவர்களைத் திரட்டியிருக்கிறேன் என்பதை அறிய நீங்கள் பெரிதும் மகிழ்ச்சி அடைவீர்கள் என்று நம்புகிறேன். பர்மாவைச் சேர்ந்த சுமார் 15 மகாதெரஸ்கார்களுடன் 1957 மே மாதம் மூன்று கேந்திரங்கள் அமைக்கப்படவிருக்கின்றன. மோஜியிலும் ஐயோஷிரா விலும் ஏற்கனவே கட்டிடப் பணிகள் ஆரம்பமாகி நடந்து வருகின்றன. ஜப்பானியக் கழகத்திலிருந்து ஒரு தூதுக்குழு ஏற்கனவே இங்கு வந்துள்ளது. கடந்த மாதம் 27ஆம் தேதியிலிருந்து அது அன்றாடம் என்னுடன் விவாதித்து வருகிறது.

புத்த மதத்தைப் பற்றி நீங்கள் எழுதும் நூலை பிரசுரிப்ப தற்காகும் செலவை ஏற்பதைப் பொறுத்தவரையில், ஆசியா பவுண் டேஷனிலிருந்து என்னால் நிதி உதவி பெற முடியவில்லை. பிரதி நிதிகள் மாற்றலாகிச் சென்றதே இதற்குக் காரணம். நீங்கள் இங்கு இருந்த போது உங்களுடன் பேச்சு வார்த்தைகள் நடத்திய பிரதிநிதி விரைவிலேயே மணிலாவுக்கு மாற்றப்பட்டார். புதிய பிரதிநிதி இவ்வகையான விஷயங்களில் அதிகம் அக்கறை கொண்டவராக இருப்பதாகத் தெரியவில்லை. இது விஷயத்தில் என்னால் ஏதேனும் செய்ய முடியும் என்று நம்புகிறேன். ஆனால் விரைவில் இதற்கு சந்தர்ப்பம் கிடைக்கும் என்று நான் நம்பவில்லை.

எளிதான போட்டிகள் மூலம் மாணவர்களுக்கு உபகாரச் சம்பளங்கள் வழங்குவதைப் பொறுத்தவரையில் இந்த யோசனையை கோட்பாட்டளவில் ஏற்றுக் கொள்வதற்கு புத்த சாசன கவுன்சிலின் முக்கியமான உறுப்பினர்களை சம்மதிக்க வைத்துள்ளேன். எனவே, கவுன்சிலிடம் முன்வைக்கப்பட்டிருந்த ஒரு விரிவான திட்டத்தை நீங்களோ அல்லது திருமதி அம்பேத்கரோ எங்களுக்கு அனுப்ப வேண்டும்.

இந்திய ஜெயந்தி குழுவின் அழைப்பின் பேரில் யூநு, பிரதம நீதிபதி யு தெய்ன் மாங் ஆகியோரும் நானும் மொத்தம் ஒன்பது பேர் புது டில்லியில் நடைபெறும் ஜெயந்தி விழாவில் கலந்து கொள்ள வருகிறோம். பர்மாவிலிருந்து சுமார் 10 பேர்கள் அடங்கிய பிரதிநிதிக் குழுவுக்குத் தலைமை தாங்கி 4வது டபிள்யூ எப்பி மாநாட்டில் கலந்து கொள்ள காட்மண்டுக்குப் புறப்படுகிறேன். என் மனைவியும் என்னுடன் வருகிறார். லும்பினியிலிருந்து புதுடில்லிக்குப் புறப்பட்டுச் செல்லுவோம். இந்த மாதம் 22ஆம் தேதி வாக்கில் புதுடில்லியில் இருப்போம் என்று எதிர்ப்பார்க்கின்றோம்.

திருமதி அம்பேத்கருக்கும் உங்களுடைய ஏனைய சகோதரர் களுக்கும் என்னுடைய அன்பான விசாரிப்புகள்.

தம்மாவிலுள்ள உங்கள் அன்பார்ந்த
(ஒப்பம்) யு சான் ஹிதூன்,
நீதிபதி, உச்சநீதிமன்றம்,
பர்மா ஒன்றியம் ரங்கூன்

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்,
எம். ஏ. பிஎச்.டி., டி.எஸ். ஸி., எல்.எல். டி., டி. லிட்டரேச்சர்,
பார் - அட் - லா
சட்ட அமைச்சர்,
உறுப்பினர், மாநிலங்கள் அவை,
26, அலிபூர் சிவில் லைன்ஸ்,
புதுடில்லி, இந்தியா.[1]

# (159)

## புத்தரா அல்லது கார்ல் மார்க்ஸா

காட்மண்டில் உலக பௌத்த கவுன்சில் மாநாட்டுக்கு சற்று முன்னர் 1956 நவம்பர் 26ஆம் தேதி டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் உரையாற்றுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. நேபாள மன்னரின் அரண்மனையில் இந்த சொற்பொழிவு நிகழ்த்தப்பட்டது. மனு தர்மத்தை அடிப்படையாகக் கொண்ட இந்து மதம் அதிகாரப் பூர்வமாக கோலோச்சும் நேபாளத்தில் புத்த மதத்தைப் பற்றிப் பிரசாரம் செய்வது என்பது ஒரு புரட்சிகர நிகழ்ச்சியாகும்.

உலக பௌத்த கவுன்சிலின் தலைவரான டாக்டர் ஜி.பி. மலால் சேகர் "புத்த மதத்தில் அகிம்சை" என்ற தலைப்பில் பேசும்படி டாக்டர் பி.ஆர். அம்பேத்கரைக் கேட்டுக் கொண்டார். அவரும் இதற்கு ஒப்புக் கொண்டார். எனினும் புத்தரா அல்லது காரல் மார்க்ஸா என்னும் தலைப்பில் பேசும்படி மாநாட்டுப் பிரதிநிதிகள் பெரும்பாலோர் வலியுறுத்தினர். உலக பௌத்த கவுன்சிலின் முன்னாள் தலைவரும் பர்மா ஒன்றிய உச்ச நீதிமன்றத்தின் நீதிபதியுமான யு சான் ஹிதூன் தமது துணைவியாருடன் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரை மேடைக்கு அழைத்துச் சென்றார்; மாநாட்டுக்கு வந்திருந்த அனைத்துப் பிரதி நிதிகளும் அவருக்கு உரிய மரியாதை செலுத்தினர்.

நேபாள மன்னர் மகேந்திர வீர் விக்ரம் சாதியோ மேடையில் விசேடமாக அலங்கரிக்கப்பட்ட ஓர் ஆசனத்தில் அமர்ந்திருந்தார். மதிப்பிற்குரிய சந்திரமணி மகாஸ்தவீர், ஜி.பி. மலால்சேகர், மதிப்பிற்குரிய அம்ருதானந்த மகாஸ்தவிர் மற்றும் யு சான் ஹிதூன் ஆகியோரும் மேடையை அலங்கரிந்தனர். முதலில் மதிப்பிற்குரிய சந்திரமணி திரிசரனையும் பஞ்சசீலத்தையும் அனைவருக்கும் வழங்கினார். டாக்டர் ஜி.ப. மலால்சேகர் டாக்டர் பி.ஆர் அம்பேத்கருக்கு மாலை அணிவித்து அவரை வரவேற்றார். கூட்டத்தில் உரையாற்றும் படி அவரைக் கேட்டுக் கொண்டார்.[1]

---

1. பிக்ஷு சுமேதா. பக். 126-127.

டாக்டர் அம்பேத்கர் உரையாற்றினார். அப்போது அவர் கூறினார்.

தலைவர் அவர்களே, பெருமதிப்புக்குரியோர்களே, கனவான்களே,

மாநாட்டில் கலந்து கொள்வதற்காக நேபாளத்துக்கு வந்தவன் ஒரு பிரதிநிதி எவ்வாறு பங்கேற்க வேண்டுமோ அவ்வாறு மாநாட்டின் நடவடிக்கைகளில் பங்கேற்க இயலாமைக்கு வருந்துகிறேன். நான் இங்கு வந்திருந்த போதிலும் நான் மிகவும் உடல் நலம் குன்றியவன் என்பதையும் மாநாட்டு நடவடிக்கைளின் அழுத்தங்களை தாங்க இயலாதவன் என்பதையும் பெரும்பாலான பிரதிநிதிகள் அறிந் திருப்பார்கள் என்று நிச்சயம் நம்புகிறேன். எனவே நான் மாநாடுகளில் பொதுவாக பங்கு கொள்ளாததற்கு அவற்றின் மீது எனக்குள்ள மரியாதை குறைவு காரணமல்ல; மாறாக எனது சொந்த நிலைமை காரணமாகத்தான் பொதுவாக மாநாடுகளில் நான் பங்கேற்பதில்லை. இன்று காலை நடைபெற்ற மாநாட்டில் இவ் வாறாக கலந்து கொள்ளாததால்தான் இதற்கு ஈடு செய்யும் வகையில் இன்று பிற்பகலில் உங்கள் மத்தியில் பேசுமாறு கேட்டுக் கொள்ளப் பட்டிருக்கிறேன் என்று நினைக்கிறேன். இதற்கு ஒப்பு கொண்டுள்ளேன். ஆனால், இப்போதும் கூட எனக்கு ஆச்சரியம் காத்திருக்கிறது. இங்கு பேசுவதற்கு முன்னர் எனக்குப் போதிய அறிவிப்பு தரப்படவில்லை. நீங்கள் என்ன விஷயம் பற்றிப் பேசப்போகிறீர்கள் என்று என்னிடம் கேட்டார்கள். பௌத்தத்தில்அகிம்சை என்னும் பொருள் பற்றிப் பேசப் போகிறேன் என்று கூறினேன். பௌத்தரும் கம்யூனிசமும் என்னும் பொருள் பற்றி நான் பேச வேண்டும் என்று மாநாட்டிற்கு வந்திருப்போரில் பெரும்பாலோர் விரும்புகிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டேன். முதலாவது பொதுக் கூட்டத்தில் பேசும் போது போகிற போக்கில் இதைக் குறிப்பிட்டேன். பேசப்போகும் பொருள்பற்றி மாற்றிக் கொள்ள நான் தயாராக இருந்தேன். ஆனால் இத்தகைய மிகவும் விரிந்து பரந்த ஒரு பொருள் பற்றிப் பேசுவதற்கு அந்தக் கணத்தில் நான் தயார் நிலையில் இல்லை. உண்மையைக் கூறுவதானால் இது பாதி உலகைத் தன் பிடியில் வைத்துக் கொண்டுள்ள விஷயம். பௌத்த நாடுகளில் ஏராளமான மாணவர்கள் இதன் பிடியில் சிக்கி உள்ளனர். இந்த விஷயத்தின் பிந்திய அம்சத்தை நான் மிகுந்த கவலையோடு நோக்குகிறேன். கம்யூனிசம் வழங்கும் வாழ்க்கை முறையை விடச் சிறந்த வாழ்க்கை

முறையை பௌத்தம் வழங்குகிறது என்பதை பௌத்த நாடுகளில் உள்ள இளம் தலைமுறையினரால் உணர முடியவில்லை என்றால் பௌத்தத்தின் கதி அதோ கதிதான். அது ஒரு தலைமுறை அல்லது இரண்டு தலைமுறைக்கு மேல் நீடிக்காது. எனவே, பௌத்தத்தில் நம்பிக்கை உள்ளவர்கள் இளம் தலைமுறையினரைச் சமாளிப்பதும் பௌத்தம் கம்யூனிசத்துக்கு ஒரு மாற்றாக இருக்க முடியும் என்பதை அவர்களுக்கு எடுத்துரைப்பதும் அவசியம். அப்போதுதான் அது நிலைத்து நிற்க முடியும் என்று பௌத்தம் நம்பிக்கை கொள்ள முடியும். இன்று ஐரோப்பாவின் பெரும்பாலான மக்களும் ஆசியாவின் பெரும்பாலான இளம் மக்களும் மார்க்ஸ் ஒருவர்தான் நாம் வழிபடக்கூடிய ஒரே தீர்க்கதரிசி என்ற முடிவுக்கு வந்துள்ளனர் அவர்கள் பௌத்த சங்கத்தின் பெரும்பகுதி மஞ்சள் ஆபத்தே தவிர வேறல்ல என்று கருதுகின்றனர். இதனை பிக்குகள் கவனத்தில் கொள்ள வேண்டும். கார்ல் மார்க்சுடன் ஒப்பிடும் அளவுக்கு அவர்கள் தங்களைச் சீர்திருத்திக் கொள்ள வேண்டும்; அப்போது பௌத்தம் அதனுடன் போட்டியிட முடியும்.

இப்போது இந்த முன்னுரையுடன் பௌத்தத்திலும் மார்க்சியத் திலும் அல்லது கம்யூனிசத்திலும் இடம் பெற்றுள்ள சில முக்கிய அம்சங்களை உங்களுக்கு எடுத்துரைக்கப் போகிறேன். பௌத்தத் துக்கும் மார்க்சியத்துக்கும் இடையே எங்கு லட்சிய ஒற்றுமைகள் உள்ளன, எங்கு வேறுபாடுகள் இருக்கின்றன, என்பது குறித்து சில முக்கியமான விஷயங்களை உங்களிடம் கூறப்போகிறேன். மூன்றா வதாக குறிக்கோளை எய்துவதில் பௌத்த வாழ்க்கை முறை நிலை யானதா அல்லது கம்யூனிச வாழ்க்கை முறை நிலையானதா? குறிப்பிட்டதொரு பாதை ஒரு நிலையான பாதையாக இருக்கப் போவதில்லை என்றால் அது உங்களைக் காட்டுக்கு இட்டுச் செல்லுகிறது. என்றால் அது உங்களை அராஜகத்துக்கு அழைத்துச் செல்லுகிறது. என்றால் அந்தப் பாதையைப் பின்பற்றுவதில் அர்த்தமில்லை, பயன்இல்லை. ஆனால் நீங்கள் பின்பற்ற வேண்டும் என்று கேட்டுக்கொள்ளப்பட்ட பாதை தாமதமானதாக, சுற்றி வளைத்து அழைத்து செல்லக்கூடியதாக, சிரமங்கள் நிறைந்ததாக இருந்தாலும் அது உங்களைப் பத்திரமான இடத்துக்கு இட்டுச் செல்லும். நீங்கள் கடைப்பிடிக்கும் லட்சியங்கள் அங்கு உங்களுக்கு உதவிகராக இருக்கும். உங்கள் வாழ்கையை நிரந்தரமாக வடி வமைத்துக் கொள்ள துணை நிற்கும். எனவே, அவசரப்பட்டு குறுக்கு

வழிகளில் செல்லுவதைவிட மெதுவாக செல்லும் பாதையில், சுற்றி வளைத்துச் செல்லுவது எவ்வளவோ நல்லது என்பது என் கருத்து. வாழ்க்கையில் குறுக்கு வழியில் செல்லுவது எப்போதுமே அபாயகரமானது, மிகவும் ஆபத்தானது.

சரி, இனி விஷயத்துக்கு வருவோம். கம்யூனிசை சித்தாந்தம் என்பது என்ன? அது எதிலிருந்து தொடங்குகிறது. ஏழைகள் செல்வந்தர்களால் சுரண்டப்படுகின்றனர். அவர்களிடம் சொத்து இருப்பதே இதற்குக் காரணம். அவர்கள் மக்களை அடிமைப் படுத்துகின்றனர். அவ்வாறு அவர்கள் அடிமைப்படுத்துவது ஏழைகளைத் துன்ப துயரத்திலும் துக்கத்திலும் வறுமையிலும் ஆழ்த்துகிறது. இதுதான் கார்ல்மார்க்சின் அடிப்படைத் தத்துவம். அவர் சுரண்டல் என்னும் சொல்லை இங்கு பயன்படுத்துகிறார். இதற்கு கார்ல் மார்க்ஸ் கூறும் பரிகாரம், தீர்வு, மருந்து என்ன? வறுமையை போக்குவதற்கும், ஒரு குறிப்பிட்ட வர்க்கம் துன்ப துயரங்கள் அனுபவிப்பதற்கும் முடிவு கட்ட தனியார் சொத்துரிமையை ஒழித்துக்கட்டுவது ஒன்றுதான் வழி என்று கார்ல் மார்க்ஸ் கூறுகிறார். எவரும் தனிச் சொத்துகள் வைத்திருக்கக் கூடாது, ஏனென்றால் தனிச் சொத்துரிமையால்தான் ஒருவன் எதையும் தனதாக்கி கொள்கிறான்; உரிமையின்றி சொத்துகளைக் கையாளுகிறான், அல்லது மோசடி செய்கிறான். கார்ல் மார்க்ஸின் மொழியில் கூறுவதனால் தொழிலாளர்கள்தான் உபரி மதிப்பை உற்பத்தி செய்கின்றனர். ஆனாலும் அவர்கள் உற்பத்தி செய்யும் உபரி மதிப்பு அவர்களுக்குக் கிடைப்பதில்லை. இது உடைமை உரிமையாளனால் அபகரித்துக் கொள்ளப்படுகிறது. உழைக்கும் மனிதனின் முயற்சியால் உற்பத்தி செய்யப்படும் உபரி மதிப்பை உடைமையாளன் ஏன் அபகரித்துக் கொள்கிறான் என்ற கேள்வியைக் காரல் மார்க்ஸ் கேட்டார். இதற்கு ஒரே உடைமையாளன் அரசாங்கம்தான் என்பதே இதற்கு அவரது பதில். இதனாலேயே பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் இருக்க வேண்டும் என்ற சித்தாந்தை அவர் வலியுறுத்தினார். இது கார்ல் மார்க்ஸ் முன்வைத்த மூன்றாவது முன்மொழிவாகும். அரசாங்கம் சுரண்டப்பட்ட வர்க்கங்களாலன்றி சுரண்டும் வர்க்கங்களால் நிர்வகிக்கப்படக் கூடாது. அதாவது பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் நிலவ வேண்டும். இவைதான் கார்ல் மார்க்சின் அடிப்படையான கருத்துகள். ரஷ்யாவில் கம்யூனிசத்துக்கு இவைதான் ஆதார அடிப்படையாக, அடித்தளமாக அமைந்தன.

இவை மேலும் விரிவுப் படுத்தப்பட்டு கூடுதல் அம்சங்கள் சேர்க்கப்பட்டன என்பதில் ஐயமில்லை. எனினும் இவைதான் அடிப்படையான பிரச்சினைகள்.

இப்போது ஒரு கணம் பௌத்தத்ர துக்குச் செல்லுவோம். கார்ல் மார்க்ஸ் தெரிவித்த கருத்துகள் குறித்து புத்தர் என்ன சொல்லுகிறார் என்று பார்ப்போம். நான் ஏற்கனவே கூறியது போல் ஏழைகள் சுரண்டப் படும் விஷயத்திலிருந்துதான் கார்ல் மார்க்ஸ் தொடங்குகிறார். இது பற்றி புத்தர் என்ன சொல்லுகிறார்? அவர் எங்கிருந்து தொடங்கு கிறார்? அவர் தமது மதத்தின் கட்டமைப்பை எழுப்பியுள்ள அடித் தளம் என்ன? புத்தரும் 2000 ஆண்டுகளுக்கு முன்னர் இதையேதான் கூறினார். அவர் சொன்னார் உலகில் துக்கம் இருக்கிறது. 'சுரண்டல்' என்னும் சொல்லை அவர் பயன்படுத்தவில்லை. ஆனால் *துக்கம்* எனப் படுவதன் மீதுதான் அவர் தமது மதத்துக்கான அஸ்திவாரத்தை இட்டார். உலகில் *துக்கம்* இருக்கிறது. *துக்கம்* என்னும் சொல் பல்வேறு வகைகளில் அர்த்தம் செய்து கொள்ளப்படுகிறது என்பதில் ஐயமில்லை. மறுபிறவி, வாழ்க்கை சக்கரம் இதுதான் துக்கம் எனப் பொருள்கொள்ளப்படுகிறது. இதை நான் ஏற்பதற்கில்லை. வறுமை என்னும் பொருளில் *துக்கம்* என்னும் சொல் பௌத்த நூல்களில் பல இடங்களில் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது என கருதுகிறேன். எனவே, அடித்தளம் என்பதைப் பொறுத்த வரையில் உண்மையில் எத்தகைய கருத்து வேறுபாடும் இல்லை என்பது தெள்ளத் தெளிவு.

அடித்தளம் பெறுவதற்குப் பௌத்தர்கள் கார்ல் மார்க்சிடம் செல்வது அவசியமற்றது, தேவையற்றது. இந்த அடித்தளம் ஏற்கனவே இருக்கிறது. அது நன்கு இடப்பட்டுள்ளது. புத்தர் தமது முதல் விளக்கப் பேருரையான *தர்மசக்கர பரவர்த்தன சுத்தத்தை* எங்கு தொடங்கு கிறாரோ அங்குதான் அந்த அடித்தளம் உள்ளது. எனவே கார்ல் மார்க்ஸால் கவரப்பட்டிருப்பவர்களுக்கு ஒன்று சொல்லுகிறேன். *தர்மசக்கர பரவர்த்தன சுத்தத்தை* படியுங்கள். அதில் புத்தர் என்ன சொல்லுகிறார் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். இந்தப் பிரச்சினையில் நீங்கள் போதிய அளவு திருப்தியடைவீர்கள். புத்தர் தமது மதத்துக்கான அடித்தளத்தை கடவுள் மீதோ அல்லது ஆன்மா மீதோ அல்லது இவைபோன்ற வேறு எந்த இயல்நிலை கடந்தவற்றின் மீதோ இடவில்லை. மக்களின் துன்ப துயரங்கள் மீதே அவர் தலையாய முக்கிய கவனம் செலுத்தினார். எனவே மார்க்சியம்

அல்லது கம்யூனிசத்தைப் பொறுத்தவரையில் பௌத்தம் அதனைப் போதிய அளவில் பெற்றுள்ளது. மார்க்ஸ் சொன்னதை புத்தர் மார்க்ஸ் பிறப்பதற்கு 2000 ஆண்டுகளுக்கு முன்பே சொன்னார்.

சொத்து என்னும் விஷயத்தைப் பொருத்த வரையில் புத்தர் கோட்பாட்டுக்கும் கார்ல் மார்க்ஸ் போதித்த கோட்பாட்டிற்கும் இடையே நெருங்கிய உறவும் ஒருமைப்பாடும் இருப்பதைக் காண்பீர்கள். சுரண்டல் நடப்பதைத் தடுப்பதற்கு உற்பத்தி சாதனங்கள், அதாவது சொத்து அரசிடம் இருக்க வேண்டும் என்று கார்ல் மார்க்ஸ் கூறினார். நிலம் அரசாங்கத்துக்குச் சொந்தமாக இருக்க வேண்டும், தொழில் துறை அரசுக்கு சொந்தமாக இருக்க வேண்டும், அப்போதுதான் எந்தத் தனி உடைமை உரிமையாளரும் குறுக்கிட்டு தொழிலாளி தனது உழைப்பின் ஆதாயங்களைக் கொள்ளையடிக்க முடியாது, அபகரிக்க முடியாது. இதைத்தான் மார்ச்சியம் கூறியுள்ளது.

இனி நாம் சங்க விஷயத்துக்கு, பௌத்த சங்க விஷயத்துக்கு வருவோம். பௌத்த துறவிகளுக்கு புத்தர் வகுத்துத்தந்த வாழ்க்கை நியதிகளைப் பரிசீலிப்போம். புத்தர் வகுத்தளித்த விதிகள் என்ன? எந்தத் துறவியும் சொந்தமாக சொத்து ஏதும் வைத்திருக்க கூடாது என்று அவர் கூறினார். கொள்கை ரீதியில்கூறினால் எந்தத் துறவியும் சொந்த சொத்து வைத்திருக்கலாகாது. இது சம்பந்தமாக இங்கும் அங்கும் சில பிரழ்வுகள் இருக்கலாம். சில நாடுகளில் துறவிகள் சொத்துகள் வைத்திருப்பதைப் பார்த்தேன். எனினும் பெரும்பாலான சந்தர்ப்பங்களில் துறவிகள் சொத்துகளை வைத்திருக்கவில்லை. உண்மையில் சங்கத்துக்கு வகுத்துக் தரப்பட்டுள்ள விதிமுறைகள், ரஷ்யாவில் கம்யூனிஸ்டுகள் வகுத்துத் தந்துள்ள விதிமுறைகளை விடக் கடுமையானவை. இதனை விவாதத்திற்கு அப்பாற்பட்ட ஒரு விஷயமாகவே எடுத்துக் கொள்கிறேன். இது குறித்து இதுவரை எவரும் விவாதிக்கவில்லை, எந்த முடிவுக்கும் வரவில்லை.

சங்கத்தைத் தோற்றுவிக்கும் போது இதில் புத்தருக்கு என்ன நோக்கம் இருந்தது? இதை ஏன செய்தார்.? புத்தர் இந்த மதத்தைப் பரப்பிக் கொண்டிருந்த வேளையில் *பரிவ்ராஜாகள்* புத்தருக்கு முன்னரே அதில் இருந்தனர். *பரிவ்ராஜாகள்* என்றால் வீடுவாசல் இல்லாதவன், தனது வீட்டை இழந்தவன் என்று பொருள். ஆரியர்கள்

காலத்தில் ஆரிய இனத்தைச் சேர்ந்த பல்வேறு குலமரபுக் குழுக்கள், எல்லா குலமரபுக் குழுக்களையும் போலவே, தங்களுக்குள் சச்சரவிட்டுக் கொண்டிருந்தன. சில குலமரபுக் குழுக்கள் தாங்கள் வதியும் இடங்களை இழந்து குறிக்கோளின்றி அலைந்து திரிந்து கொண்டிருந்தன. இந்த நாடோடிகள்தான் *பரிவ்ராஜாகள்* என்று அழைக்கப்பட்டனர். இந்நிலையில் இந்த *பரிவ்ராஜாகளுக்கு* புத்தர் மாபெரும் உதவி செய்தார்; அவர்களை ஓர் அமைப்பாக ஒன்று திரட்டினார். அவர்களுக்கு வாழ்க்கை விதிகளைத் தயாரித்துக் கொடுத்தார். *விநயாபிடிகத்தில்* இடம் பெற்றிருந்தவையே இந்த விதிகள். இந்த வழிகளின்படி ஒரு பிக்கு எந்த சொத்தும் வைத்திருக்க அனுமதிக்கப்படவில்லை. பௌத்த விதிகளின்படி ஒரு பிக்கு ஏழு பொருள்கள் மட்டுமே வைத்திருக்க அனுமதிக்கப்படுவார். ஒரு சவர கத்தி, தண்ணீர் குடிப்பதற்கு ஒரு சொம்பு, மூன்று சிவராக்கள், தையல் வேலைக்கு ஊசி முதலியவையே அவை. தனியார் சொத்துரிமையை மறுப்பதுதான் பொதுவுடைமை தத்துவத்தின் சத்தும் சாரமும் என்றால் தனியார் சொத்துரிமைப் பற்றி விநயா பிடிகத்தில் காணப்படுவது போன்ற மிகக் கடுமையான விதி வேறு ஏதேனும் இருக்க முடியுமா என்று நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். அப்படி ஒரு விதி இருப்பதாகத் தெரியவில்லை. எனவே தனியார் சொத்துடைமை எதுவும் இருக்காது என்று கம்யூனிசத் தத்துவத்தில் இடம் பெற்றுள்ள விதி எந்த இளம் மக்களையாவது கவர்ந் திழுக்குமானால் அத்தகைய விதி புத்தரின் தத்துவத்தில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். இங்குள்ள ஒரே கேள்வி தனியார் சொத்துடைமையை மறுக்கும் விதி சமுதாயத்தில் எந்த அளவுக்கு நடைமுறைப்படுத்தப்படும் என்பதேயாகும். இது கல்வி சூழ்நிலை யையும், காலத்தையும், சந்தர்ப்பத்தையும் மனித சமுதாயத்தின் வளர்ச்சிப் போக்கையும் பொறுத்திருக்கிறது. எனினும் சித்தாந்தத்தை பொறுத்தவரையில் தனியார் சொத்துரிமையை ரத்து செய்வதில் தவறேதும் இருக்கிறதா என்றால், இருக்காது. ஏனென்றால் பௌத்த சங்கத்தை அமைப்பதில் இந்த சலுகையை ஏற்கனவே அளித்துள்ளது.

இப்போது இந்த விஷயத்தின் இன்னொரு அம்சத்துக்கு வருவோம்-கம்யூனிசத்தைக் கொண்டுவரும் பொருட்டு எத்தகைய வழிமுறைகளைக் கடைப்பிடிக்க கார்ல் மார்க்சோ கம்யூனிஸ்டுகளோ விரும்புகின்றனர்? இது முக்கியமான கேள்வி. துக்கம் இருந்து வருவதை அங்கீகரிப்பது, சொத்துரிமையை ஒழிப்பது என்ற அடிட்

படையில் அமைந்த கம்யூனிசத்தைக் கொண்டு வருவதற்கு வன்முறை யையும் பகைவர்களைக் கொல்லுவதையும் வழிமுறையாக கடைப் பிடிக்க கம்யூனிஸ்டுகள் விரும்புகின்றனர். இதில்தான் புத்தருக்கும் கார்ல் மார்க்சுக்கும் இடையேயான அடிப்படை வேறுபாடு அமைந்துள்ளது. குறிப்பிட்ட கோட்பாடுகளைக் கடைப்பிடிக்கும் படி மக்களை தூண்டுவதற்கு புத்தர் கடைப்பிடிக்கும் வழி ஒழுக்க போதனையும் அன்புமாகும். எதையும் அன்பு வெல்லுமே தவிர அதிகாரம் வெல்லாது என்ற சித்தாந்தத்தை, போதனையை எதிராளிக்கு ஊட்டி அவனைத் தன் பக்கம் ஈர்க்க அவர் விரும்பு கிறார். இங்குதான் ஓர் அடிப்படையான வேறுபாடு நிலவுகிறது. புத்தர் வன்முறையை அங்கீகரிக்க மாட்டார். கம்யூனிஸ்டுகள் அங்கீகரிப்பர். இதன் மூலம் கம்யூனிஸ்டுகள் உடனடியாகப் பலன் பெறுவார்கள் என்பதில் ஐயமில்லை. ஏனென்றால் மனிதர்களை ஒழித்துக்கட்டும் வழிமுறைகளை நீங்கள் கைக்கொள்ளும் போது, உங்களை எதிர்ப்பதற்கு அவர்கள் உயிரோடு இருப்பதில்லை.

உங்கள் சித்தாந்தம் போல் நீங்கள் நடந்து கொள்ளுங்கள்; காரியம் சாதிப்பதற்கான வழிமுறைகளை உங்கள விருப்பம் போல் கடைப்பிடியுங்கள். நான் ஏற்கனவே கூறியதுபோல் புத்தரின் வழி நீண்ட வழி. மனச்சோர்வூட்டுகிற வழி என்றுகூட சிலர் கூறலாம். ஆனால் இதுதான் நிச்சயமான, சத்தியமான வழி என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. என்னுடைய கம்யூனிஸ்டு நண்பர்களைச் சந்திக்கும்போது இரண்டு அல்லது மூன்று கேள்விகளுக்குப் பதிலளிக்கும்படி எப்போதும் அவர்களை கேட்டுக் கொள்வேன். ஆனால் அவர்களால் என் கேள்விகளுக்குப் பதிலளிக்க முடியாது என்பதைப் பச்சையாக பட்டவர்த்தனமாக நான் கூறியாக வேண்டும். பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் எனப்படுவதை வன்முறை மூலம் தான் அவர்கள் உருவாக்குகின்றனர். செல்வம் படைத்த அனைவரையும் அவர்கள் ஓட்டாண்டியாக்குகின்றனர். அவர்களது அரசியல் உரிமையைப் பறிக்கின்றனர். சட்ட மன்றத்தில் அவர்கள் இடம் பெற முடியாது; வாக்களிக்கும் உரிமை அவர்களுக்கு இருக்காது. அவர்கள் நாட்டின் இரண்டாந்தர பிரஜைகளாகவே இருப்பார்கள். ஆளப்படு பவர்களாக இருப்பார்கள்; ஆட்சியில் அல்லது அதிகாரத்தில் பங்குகொள்ள கூடியவர்களாக இருக்க மாட்டார்கள். சர்வாதிகாரம் என்பது மக்களை ஆள்வதற்கு ஒரு சரியான முறை என்று நீங்கள நினைக்கிறீர்களா? என நான் கேட்கும் போது அவர்கள் என்ன பதில்

சொல்லுகிறார்கள் தெரியுமா? "இல்லை நாங்கள் அப்படி நினைக்கவில்லை; சர்வாதிகாரத்தை நாங்கள் விரும்பவில்லை." அப்படியானால் நீங்கள் எப்படி அதை அனுமதிக்கிறீர்கள் என்று நாம் கேட்டால் அதற்கு அவர்கள் என்ன பதில் கூறுகிறார்கள் என்று நினைக்கிறீர்கள். இது இடைக்கால கட்டம், இதில் சர்வாதிகாரம் இருந்தாக வேண்டும் என்கின்றனர். நாம் தொடர்ந்து அது சரி இந்த இடைக்கால கட்டம் என்பது எத்தனை ஆண்டுகள்? இருபது ஆண்டுகளா? நாற்பது ஆண்டுகளா, ஐம்பது ஆண்டுகளா? என்று கேட்கிறோம். பதில் இல்லை. பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் எப்படியோ தானாகவே மறைந்துவிடும் என்று அரைத்த மாவையே அரைப்பதுபோல் பதிலளிக்கின்றனர்.

நல்லது. அவர்கள் கூறுவது போல் சர்வாதிகாரம் அஸ்தமித்து விடும் என்றே வைத்துக் கொள்வோம். இங்கு நான் ஒரு கேள்வி கேட்கிறேன். சர்வாதிகாரம் மறைந்து விடும்போது என்ன நடைபெறும்? அதனிடத்தில் எது இடம் பெறும்? மக்களுக்கு ஏதேனும் ஒரு வகையான அரசாங்கம் தேவையில்லையா? இதற்கு அவர்களிடமிருந்து பதில் இல்லை.

பிறகு மீண்டும் புத்தரிடம் செல்லுகிறோம். அவருடைய தம்மம் பற்றிய இந்தக் கேள்வியைக் கேட்கிறோம். அவர் என்ன கூறுகிறார்? மனிதனது மனத்தையும் உலகத்தின் மனத்தையும் மாற்றினாலொழிய உலகத்தை சீர்படுத்த முடியாது என்று புத்தர் உலகுக்குச் கூறியது மிகப் பெரிய விஷயமாகும். மனம் மாறினால், கம்யூனிச அமைப்பு முறையை மனம் ஏற்றுக் கொண்டால், அதனை விசுவாசத்தோடு நேசித்தால், அது நிரந்தரமாகி விடுகிறது. மனிதனைக் கட்டுப்பாட்டில் வைத்திருப்பதற்கு ஒரு படைவீரனோ அல்லது காவல்துறை அதிகாரியோ தேவையில்லை. ஏன்? இதற்கான பதில் இதுதான். புத்தர் மனச்சான்றை ஊக்குவித்து நீங்கள் சரியான வழியில் செல்லுவதற்கு வழிகாட்டும் காவலாளியாக அதை மாற்றியிருக்கிறார். மனம் மாற்றப்பட்டு எந்த ஒரு விஷயமும் நிரந்தரமாகிவிடும் போது எத்தகைய இடர்ப்பாடும் ஏற்படுவதற்கு வாய்ப்பில்லை.

கம்யூனிச அமைப்பு வன்முறையை அடிப்படையாகக் கொண்டது. நாளைய தினம் ரஷ்யாவில் சர்வாதிகாரம் தோல்வியடைந்து அதன் தோல்விக்கான அறிகுறிகளை நாம் காணும் போது என்ன நடக்கும்?

கம்யூனிச அமைப்புக்கு என்ன நேரும் என்பதை உண்மையிலேயே நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். நாட்டின் சொத்தைக் கபளீகரம் செய்து கொள்வதற்கு ரஷ்ய மக்கள் தங்களுக்குள் சச்சர விட்டுக் கொண்டு கொடிய ரத்தக்களறியில் ஈடுபடுவார்கள். இவ்வாறுதான் அதன் விளைவு இருக்கும். ஏன்? ஏனென்றால் அவர்கள் தாங்களாகவே முன்வந்து கம்யூனிச அமைப்பு முறையை ஏற்றுக் கொள்ளவில்லை. இதற்கு அவர்கள் கீழ்ப்படிந்து நடந்து கொள்கிறார்கள். ஏனென்றால் தாங்கள் தூக்கிலிடப்பட்டு விடுமோ என்ற அச்சம் அவர்களுக்கு. இத்தகைய அமைப்பு ஆழ வேரூன்ற முடியாது. இந்தக் கேள்விகளுக்குக் கம்யூனிஸ்டுகள் பதிலளிக்க இயலவில்லை என்றால் அவர்களது அமைப்பு என்னவாகும்? வன்முறை மறைந்து விடும்போது அதனைப் பின்பற்றுவதில் பயனேதும் இருக்காது. ஏனென்றால் மனம் மாறாத போது வன்முறை தேவை. முடிவாக ஒன்று சொல்ல விரும்புகிறேன். புத்த மதத்தில் நான் காணும் மிக முக்கியமான அம்சம் அது ஒரு ஜனநாயக அமைப்பு முறை என்பதேயாகும். வஜ்ஜிகளை வெற்றிக் கொள்ள அஜாத சத்ரு விரும்புகிறார் என்று அவரது பிரதமர் புத்தரிடம் சென்று கூறிய போது வஜ்ஜிகள் தங்களுடைய தொன்னெடுங்கால மரபுகளையும் பழக்க வழக்கங்களையும் பின்பற்றிவரும் வரை அவர்களை ஒருபோதும் உங்கள் மன்னரால் வெற்றி கொள்ள முடியாது என்று புத்தர் அவனிடம் கூறினார். தாம் சொன்னதன் பொருளை என்ன காரணத்தினாலோ புத்தர் விளக்கிக் கூறவில்லை. வஜ்ஜிகள் நடத்தி வரும் ஜனநாயகக் குடியரசு முறையிலான அரசாங்கத்தை மனதில் வைத்தே அவர் இவ்வாறு கூறியிருக்கிறார் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. அவர் சொன்னார்: வஜ்ஜிகள் தங்கள் ஆட்சி முறையை கடைப்பிடித்து வரும் வரை அவர்களை எவரும் வெல்ல முடியாது. புத்தர் ஒரு மாபெரும் ஜனநாயகவாதி என்பதிலும் அணுவளவும் ஐயமில்லை.

எனவே ஜனாதிபதி என்னை அனுமதித்தால் பின்வருமாறு கூறுவேன். நான் அரசியல் துறை மாணக்கனாக இருந்துள்ளேன். பொருளாதாரத் துறை மாணவனாக இருந்துள்ளேன். பொருளா தாரத் துறைப் பேராசிரியராக இருந்துள்ளேன். கார்ல் மார்க்ஸையும் கம்யூனிசத்தையும் பற்றி ஆராய்வதில் நான் நிறைய நேரத்தைச் செலவிட்டுள்ளேன். அதேசமயம் புத்தரின் தம்மத்தைப் படிப்பதிலும் பெரிதும் ஆழ்ந்து ஈடுபட்டுள்ளேன். இரண்டையும் ஒப்பிட்டுப்

பார்த்த பிறகு, ஒரு திட்டவட்டமான தீர்மானமான முடிவுக்கு வந்தேன். உலகை இன்று ஒரு மாபெரும் பிரச்சினை எதிர்நோக்கு கிறது. உலகில் துக்கம் நிலவுகிறது. அந்தத் துக்கம் அகற்றப்பட வேண்டும் என்பதே அந்தப் பிரச்சினை. இதற்கு புத்தர் தெரிவித்துள்ள யோசனைகள்தான், பரிகாரம்தான் மிகவும் பாதுகாப்பானது, ஆரோக்கியமானது, இதுவே சிறந்தது என்ற திட்டவட்டமான முடிவுக்கு வந்தேன்.

ஆகவே, புத்தரின் இந்தப் போதனைகளுக்கு அதிக கவனம் செலுத்தும்படி பௌத்த நாடுகளைச் சேர்ந்த இளம் தலைமுறை யினருக்கு நான் ஆலோசனை கூறுகிறேன். முடிவாக இன்னொன்றும் இங்கு சொல்ல விரும்புகிறேன். ஒரு பௌத்த நாட்டில் தம்மதத்துக்கு ஏதேனும் ஆபத்து ஏற்படுமானால் அதற்கான குற்றச்சாட்டை பிக்குகள் மீதுதான் சுமத்த வேண்டும்: ஏனென்றால் தங்களுக்கு வழங்கப்பட்டுள்ள கடமைகளை அவர்கள் முழு அளவுக்கு நிறை வேற்றவில்லை என்று கூறுகிறேன். புத்தரின் போதனை எங்கே? பிக்கு தனது துறவு மடத்தில் தங்கியிருக்கிறார். ஒரு வேளை சாப்பிடுகிறார், ஆமாம், ஒரு வேளைதான், அமைதியாக அமர்ந்திருக்கிறார். அநேகமாக அவர் படித்துக் கொண்டிருக்கலாம். பெரும்பாலும் அவர்கள் ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பதையே நான் காண்கிறேன். மாலையில் மெல்லி சையை அனுபவிக்கிறார். மதத்தைப் பரப்பும், பிரசாரம் செய்யும் முறையல்ல இது.

என் அருமை நண்பர்களே, யாரையும் குறைகூற, யார்மீதும் குற்றம் சாட்ட நான் விரும்பவில்லை; ஆனால் மதம் சமுதாயத்தை புத்தெழுச்சி கொள்ளச் செய்வதற்கான ஒரு ஆன்மிக சக்தி என்றால் அதனை மக்கள் செவிகளில் அடிக்கடி ஒலிக்கச் செய்ய வேண்டும். ஒரு குழந்தை தனது பள்ளிக் கூடத்தில் எத்தனை ஆண்டுகள் செலவிட வேண்டும்? நீங்கள் உங்கள் குழந்தையை தினமும் பள்ளி கூடத்துக்கு அனுப்புகிறீர்கள். பிறகு அதனை அழைத்து வந்து விடுகிறீர்கள். அக்குழந்தை கல்வி கற்றபடி வளரும் என்று எதிர்ப் பார்க்கிறீர்கள். அந்தக் குழந்தை ஒவ்வொரு நாளும் பள்ளிக்கூடம் செல்லுகிறது. ஐந்து மணிநேரம் அங்கு உட்கார்ந்திருக்கிறது. இடைவிடாது படிக்கிறது. பிறகுதான், ஆம், பிறகுதான், அறிவு எனப்படுவதை, கல்வி எனப்படுவதை ஓரளவு தெரிந்து கொள்கிறது. இங்கு துறவி மடம் என்பது அரசல்ல. பிக்குகள் ஏதேனும் ஒரு விஷயம் குறித்து

பேருரைகள் நிகழ்த்துவதில்லை. அல்லது தார்மிக போதனை அளிப்பதில்லை. இத்தகைய காட்சியை நான் என்றும் பார்த்ததில்லை

நான் இலங்கை சென்றிருந்தேன். பிக்குகள் எவ்வாறு சமய சொற்பொழிவாற்றுகிறார்கள் என்பதைக் காண்பதற்கு நான் மிகுந்த ஆவலோடு இருந்தேன். தாங்கள் '*பனா*' பெற்றிருப்பதாக என்னிடம் கூறினார்கள். அவர்கள் பயன்படுத்திய *பனா* என்னும் சொல்லுக்கு '*வனகா*' என்று பொருள் என்பதை பின்னர் தெரிந்து கொண்டேன். அவர்கள் 11 மணிக்கு என்னை ஓரிடத்துக்கு அழைத்துச் சென்றார்கள். இந்த மேஜையை போன்று அது சதுர வடிவிலுள்ள ஒரு சிறு இடம். நான் தரையில் அமர்ந்து கொண்டேன். ஒரு பிக்கு அழைத்து வரப் பட்டார் பல ஆண்களும் பெண்களும் தண்ணீர் கொண்டுவந்து அவரது பாதங்களைக் கழுவினர். பின்னர் அவர் உள்ளே வந்து அமர்ந்தார். அவர் தம்முடன் ஒரு விசிறி கொண்டு வந்திருந்தார். அப்புறம் பாருங்கள். அவர் என்ன சொன்னார் என்பது அந்த ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். சிங்கள மொழியில் அவர் போதனை செய்திருப்பார் என்று நினைக்கிறேன். அவரது போதனை இரண்டு நிமிடங்கள் கூட இருக்காது. இரண்டு நிமிடங்களுக்குப் பிறகு அவர் அங்கிருந்து கிளம்பி விட்டார்.

கிறித்துவத் தேவாயலயத்துக் சென்று பாருங்கள் அங்கு என்ன நடைபெறுகிறது? ஒவ்வொரு வாரமும் அங்கு கூடுகிறார்கள். வழிபாடு செய்கிறார்கள். திருச்சபை சமய குரு பைபிளிலிருந்து ஏதோ ஒரு பொருள் பற்றி உபதேசம் செய்கிறார். அவர்கள் என்ன செய்ய வேண்டும் என்று ஏசு கூறினார் என்பதை எடுத்துரைக்கிறார். உள்ளடக்கத்திலும் சரி, வடிவத்திலும் சரி கிறிஸ்துவ மதம் 90 சதவிகிதம் புத்த மதத்திலிருந்து பெறப்பட்டதேயாகும் என்பதை அறியும்போது அநேகமாக நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். ரோமாபுரிக்கு செல்லுங்கள். அங்குள்ள பிரதான கிறித்தவ தேவாலயத்தைப் பாருங்கள். பெருட்டிலுள்ள *விஸ்வ கர்மா* எனப் படும் பெரிய கோவில்தான் உங்கள் நினைவுக்கு வரும்.

விஷாபிக்னே என்பவர் சீனாவில் வாழ்ந்து வந்த ஒரு சமயப் பரப்பாளர். அவர் புத்த மதத்தைப் பற்றி ஒரு நூல் எழுதியுள்ளார். புத்த மதத்துக்கும் கிறித்துவ மதத்துக்கும் இடையே எவ்வாறு இவ்வளவு ஒத்த தன்மை வந்தது என்று மிகுந்த வியப்பு தெரிவித்துள்ளார். புத்த

மதம் கிறிஸ்துவ மதத்தைப் பகடி செய்துவிட்டது என்று கூற அவர் துணியவில்லை. அதேபோல் கிறிஸ்துவ மதம் புத்த மதத்தைப் பகடி செய்து விட்டது என்றும் அவர் சொல்லவில்லை. இது போகட்டும் இப்போது காலம் மாறி விட்டது. பௌத்த மக்களிடையே நமது மதத்தைப்பற்றி பிரசாரம் செய்வதற்கு கிறித்தவர்களின் சில வழி முறைகளை நாம் பின்பற்றலாம். புத்தரின் *தம்மம்* நிலை குலையாது மலைபோல் அப்படியே உள்ளது; நாம் தவறான வழியில் சென்று விடாதபடி காவல்துறையினரைப் போல் நாம் மிகுந்த விழிப்போடு இருக்க வேண்டும். இத்தகைய விழிப்புணர்ச்சி இல்லையென்றால் புத்த மதம் மிகவும் சீர்கெட்ட நிலைக்கு வந்துவிடும். இப்போதும் கூட பௌத்த நாடுகளிலேயே அதன் நிலைமை சீர்கெட்டுப் போயிருப் பதைக் காண்கிறேன். ஆனால் அதே சமயம் அதன் செல்வாக்கு அப்படியே நிலைத்து நிற்கிறது. இதில் கிஞ்சித்தும் ஐயமில்லை.

நான் பர்மாவுக்கு சென்றிருந்தபோது நிகழ்ந்த ஒரு சம்பவத்தை உங்களுக்குக் கூற இப்போது விரும்புகிறேன். நான் பர்மா சென்றிருந்தேன். ஒரு மாநாட்டில் கலந்து கொள்வதற்காக அங்கு நான் சென்றிருந்தேன். அங்குள்ள கிராமங்களை எவ்வாறு புனரமைக்க போகிறோம் என்பதைக் காட்டுவதற்காக என்னை பல இடங்களுக்கு அழைத்துச் சென்றனர்கள். எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. அவர்களுடன் சென்றேன். அவர்களது தெருக்கள் நேராக இல்லாமல் வழக்கம் போல் வளைந்தும் நெளிந்தும் குருக்குமுறுக்குமாக இருந்தன. திட்ட மிட்ட முறையில் எதுவும் இல்லை. எனவே கமிட்டியினர் இரும்பு கம்பங்களை ஒட்டு கயிர்களை கட்டி இந்தத் தெரு இப்படித்தான் போக வேண்டும் என்று காட்டியிருந்தனர். பல இடங்களில் குழுவினர் திட்டமிட்டிருந்த பாதை தனியாருக்கு சொந்தமான நிலத்தின் வழியாக செல்வதைக் கண்டேன். அங்கு சென்றதும் என்னுடன் வந்தவர்களைக் கேட்டேன்: "இந்த நிலத்தை நீங்கள் எடுத்துக் கொள்ளப் போகிறீர்களே அதற்கு உங்களிடம் பணம் இருக்கிறதா?" அவர்கள் சொன்னார்கள் "யாரும் பணம் கேட்க மாட்டார்கள், உங்களுக்குத் தேவையென்றால் அதை எடுத்துக் கொள்ளுங்கள் என்றுதான் கூறுவார்கள்." என்ன இது, பெரிய ஆச்சரியமாக இருக்கிறதே! இழப்பீடு தறாமல் எவரிடமிருந்தாவது துண்டு நிலத்தை ஒருவர் எடுத்துக் கொண்டால் அந்தப் பகுதி ஒரே ரணகளமாகிவிடுமே. அப்படியிருக்க இது ஒரே வியப்பாக இருக்கிறதே! இது ஏன்? பர்மியர்கள் தங்கள் சொத்து விஷயமாக

இவ்வளவு அலட்சியமாக இருக்கிறார்களே இது ஏன்? இதற்காக அவர்கள் ஏன் எவ்வகையிலும் கவலைப்படவில்லை? சர்வம் அநித்யம் என்று புத்தர் போதித்தே இதற்குக் காரணம். நீங்கள் காணும் எல்லாமே நிலையற்றவை. இந்த நிலையற்றவைக்காக ஏன் சச்சரவு விட்டுக் கொள்ள வேண்டும்? உங்களுக்கு நிலம் வேண்டுமென்றால் சரி எடுத்துக் கொள்ளுங்கள்.

இந்தப் பிரச்சினையை நான் எந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்க விரும்பினேனோ அதைத்தான் செய்துள்ளேன். கம்யூனிஸ்டுகளின் வெற்றிகளைக் கண்டு மயங்கி விடாதீர்கள். புத்தரைப் போல் நாம் விழிப்படைவோமானால் அன்பு, நீதி, நல்லெண்ணம் என்னும் வழிமுறைகளைப் பின்பற்றி இதே சாதனையை நம்மாலும் புரிய முடியும் என்பதில் எனக்குப் பரிபூரண நம்பிக்கை உண்டு.

சீமாட்டிகளே, கனவான்களே, நான் மேற்கொண்டு பேச வேண்டும் என்று எண்ணவில்லை. அவ்வாறு செய்ய வேண்டும் என்ற அவசியமும் எனக்கு இல்லை. உங்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றி!

---

# பின் இணைப்பு- 1

## டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின் மதமாற்ற அறிவிப்பு பற்றி காந்திஜியின் கட்டுரைகள்

*1935 அக்டோபர் 26ஆம் தேதியிட்ட ஹரிஜன் இதழில் "இறுதிக் கட்டத்தில்" என்ற தலைப்பில் பாபுஜி ஒரு கட்டுரை எழுதியிருந்தார் அதில் அவர் கூறியிருந்தாவது;*

"ஓர் இந்துவாக இறப்பதைவிட வேறு ஏதேனும் மதத்தை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருப்பதாக டாக்டர் அம்பேத்கர் அச்சுறுத்தியிருப்பதற்கு பதிலளிக்கும் வகையில், *கவிதா* விஷயம் ஒருபுறம் இருந்தாலும், தீண்டாமை அதன் இறுதிக் கட்டத்தில் இருக்கிறது என்று நான் கூறியிருப்பது ஏற்க முடியாதது என்று சிலர் தயக்கமின்றிக் கூறுகின்றனர். உண்மையைக் கூறினால் *கவிதாவே* என் கூற்றை ஆதரிக்கிறது. *கவிதா* தான் தோன்றியது முதலே உண்மையாகத்தான் இருந்து வருகிறது. இவ்வாறிருக்க சமூக ஆர்வ மிக்க ஒருவன் தனக்குள்ள வரையறைகளைத் தெரிந்து கொள்ளாமல் உள்ளூர் பள்ளிக் கூடத்துக்குத் தங்கள் குழந்தைகளை அனுப்பும்படி கவிதா தாழ்த்தப்பட்டோர்களைத் தூண்டி விட்டான்; கவிதா சுவர்ணாக்கள் சிலர் இதை எதிர்ப்பது தெரிந்தும் அவன் இவ்வாறு செய்துவிட்டான். வேறு சில இடங்களில் நடைபெற்றது போலவே இங்கும் தாழ்த்தப்பட்டோர் தங்கள் குழந்தைகளைப் பொதுப் பள்ளிக் கூடங்களுக்கு அனுப்புவதற்கு தங்களுக்குள்ள உரிமையை வெற்றிகரமாக நிலைநாட்டுவார்கள் என்று அவன் நம்பினான். ஆனால் காலத்தின் மாற்றத்தைத் தாங்கள் ஏற்றுக் கொள்ள முடியாது என்பதை கவிதா *சவர்ணாக்கள்* காட்டினர்."

"ஒரு சில ஆண்டுகளுக்கு முன்னர் நடைபெற்றிருந்தால் கவிதா சம்பவம் எவர் கவனத்தையும் கவர்ந்திருக்காது. அச்சமயம் ஒரு சில சீர்திருத்தவாதிகளே இருந்தனர். அந்த ஒரு சிலரும் பட்டணங்களிலும் நகரங்களிலும் இருந்தனர். ஆனால் இப்போதோ அவர்களது எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. ஒவ்வொரு கிராமத்துக்கும் இத்தனை பேர் என்ற நிர்ணயம்

ஏதேனும் இருக்கும் போலிருக்கிறது. ஒரு சில ஆண்டுகளுக்கு முன்னர் எந்தக் காரணத்தைக் காட்டியும் தீண்டாமையை எதிர்க்கும்படி தாழ்த்தப்பட்டோரை தூண்ட முடியாமல் இருந்தது. *சவர்ணாக்களின்* சமய வளர்ச்சி போன்றே இதுவும் இவர்களது சமய உணர்ச்சியாக இருந்தது. ஒவ்வொரு வாரமும் தீண்டாமைக்கு எதிரான இயக்கத்தின் முன்னேற்றம் பற்றி இந்த பத்திரிகையில் எழுதி வந்தோம். இவ்வகைகளில் முன்னேற்றம் வியக்கத் தக்கதாக இருந்தாலும் பல இடங்களில் பெரும்பலான *சவர்ணாக்களிடம்* இன்னும் அது தாக்கத்தை ஏற்படுத்தவில்லை என்பதையே இது காட்டுகிறது. *சவர்கணாக்களின்* இயக்கங்கள் உருவாவதற்கு முன்னர் இன்னும் எவ்வளவோ செய்ய வேண்டி யுள்ளது என்பதை சீர்திருத்தவாதிகளுக்கும் தாழ்த்தப் பட்டோருக்கும் எச்சரிப்பது அவசியம்.

“கவிதா துயர நிகழ்ச்சியை விளம்பரப்படுத்தியவர்கள் *சவர்ணா* சீர்திருத்தவாதிகள்தான் என்பதையும் அவர்கள்தான் அதற்கு அகில இந்திய முக்கியத்துவத்தை அளித்தார்கள் என்பதையும் இங்கு குறிப்பிட்ட வேண்டும். *சவர்ணாக்களின்* மனச்சாட்சியை நான் தட்டியெழுப்பினேன். என்றாலும் அது தாழ்த்தப்பட்டோரை சீற்றமடையச் செய்தது. கவிதா தாழ்த்தப் பட்டோரேகூட தங்கள் உரிமைகளுக்காக இனியும் போராட விரும்பவில்லை என்பதை நான் வெட்கத் தோடு குறிப்பிட விரும்புகிறேன். *சவர்ணாக்களின்* அடாவடி தனத்துக்கு அவர்கள் அடங்கி ஒடுங்கி பணிந்து போய் விட்டனர். அவர்களுக்கு உதவ எத்தனையோ பேர் முன்வந்த போதிலும் அவர்கள் கவிதாவை விட்டு வெளியேற விரும்ப வில்லை. இத்தனைக்கும் அவர்கள் வேறு எங்கேயேனும் மானம் மரியாதையோடு உழைத்து தங்கள் வயிற்றை நிரப்பிக் கொள்ள முடியும். தங்களது பாதுகாப்பில் கவிதாவை விட்டு வெளியேறும் படி அவர்களைத் தூண்டுவதற்கு சீர்திருத்தவாதிகள் எடுத்துக் கொண்ட முயற்சி பலிக்கவில்லை.

“ஒரு மதத்தின் உள்ளார்ந்த குறைபாடு காரணமாக அன்றி, அதன் பல ஆதரவாளர்கள் கடைப்பிடிக்கும் நியாயமற்ற போக்கு காரணமாக நடைபெறும் மதமாற்றம் நியாயப் படுத்தப் பட்டாலும் இப்போதைய நிலைமையில் அது உத்தேசிக்கப்

பட்ட குறிக்கோளை, லட்சியைத்தைத் தோற்கடிக்கவே செய்யும். டாக்டர் அம்பேத்கர் போன்ற வல்லவர்கள், நல்லவர்கள் பிரிந்து செல்வது தாழ்த்தப்பட்டோர்களின் பாதுகாப்பைப் பலவீனப்படுத்தவே செய்யும். இந்துவல்லாத தாழ்த்தப் பட்டோர்கள் எவ்வளவு பிரபலமானவர்களாக இருந்தாலும் இந்து தாழ்த்தப்பட்டோர்களுக்கு உதவ இயலாது என்பதை நாம் அறிவோம். உண்மையில் தற்போது அவர்கள் ஏற்றுக் கொண்ட மதத்தில் கூட தற்போது தனித்து ஒதுக்கப்பட்ட வர்களாகவே இருந்து வருகின்றனர். தீண்டாமையின் இந்திய வகையான பிடி இந்திய மக்கள் விஷயத்தில் இவ்வாறு அமைந்துள்ளது.

"டாக்டர் அம்பேத்கரின் நியாயமான சீற்றம் சீர்திருத்த வாதியை சோர்வடையச் செய்யக் கூடாது. மாறாக அவரது முயற்சியை மேலும் தூண்டி ஊக்குவிக்கட்டும். தீண்டாமையை எதிர்த்துப் போராடுவோரின், பாடுபடுவோரின் எண்ணிக்கை பெரிதும் அதிகரித்திருப்பது உண்மை என்றாலும் காலம் காலமாக இருந்து வரும் இந்தக் கொடுமையை, தீமையை எதிர்த்துப் போராடுவோரின் இந்த எண்ணிக்கை போது மானதல்ல. என்றாலும் தீண்டாமை எதிர்ப்பு இயக்கம் அடைந்துள்ள பரிமாணங்களைக் கொண்டு பார்க்கும்போது அதில் நெறி தவறிய நிகழ்ச்சி ஏதேனும் நடத்தால் உலகம் முழுவதன் கவனத்தைக் கவரும் நிலைமையில் இருக்கும் போது, அது அதன் கடைசிக் கட்டத்தில் இருக்க முடியாது. மனித குலம் இனியும் தீண்டாமையைச் சகித்துக் கொண்டிருக்காது."[1]

## II

1936 மார்ச் 21ஆம் தேதியிட்ட *ஹரிஜனில்* பிரசுரிக்கப் பட்ட ஒரு கட்டுரையில் பாபுஜி பின்கண்டவாறு கூறியுள்ளார்:

1. இந்திய அரசாங்கம் வெளியிட்ட மகாத்மா காந்தியின் தொகுப்பு நூல்கள், பிரசுரப் பிரிவு, தகவல் மற்றும் ஒலிபரப்பு அமைச்சகம், புது டில்லி, தொகுதி LX II பக்கங்கள் 64-65. மறுபதிப்பு, பக். 299-301.

"கட்டாய மதமாற்றம் என்னும் வெடிகுண்டை இந்து சமுதாயத்தின் மீது டாக்டர் அம்பேத்கர் வீசியதிலிருந்து அந்த உத்தேச நடவடிக்கையை அவர் கைவிடும்படிச் செய்ய தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. டாக்டர் அம்பேத்கரின் அச்சுறுத்தலைப் படித்த செய்திப் பத்திரிகைகளை வாசிக்கக் கூடிய தாழ்த்தப்பட்டோரிடையேகூட பிரதிபலிப்பு களை ஏற்படுத்தியுள்ளது. உத்தியோகங்கள், உபகார சம்பளங்கள் போன்றவற்றைத் தருமாறு அவர்கள் இந்து அமைப்புகளை அல்லது சீர்திருத்தக்காரர்களை அணுக ஆரம்பித்துள்ளனர். அது மட்டுமின்றி இந்தக் கோரிக்கைகள் மறுக்கப்படுமானால் தாங்கள் வேறொரு மதத்துக்கு மாற நேரிடும், அந்த மதத்தின் பிரதிநிதிகள் தங்களுக்கு எல்லா உதவிகளும் செய்வதாக உறுதி கூறியுள்ளனர் என்றும் கூறத் தொடங்கியுள்ளனர்.

தங்கள் மூதாதையர்களின் மதம் பற்றி அக்கறை கொண்டுள்ளவர்களுக்கு இது கெடுகுறியான, மிகுந்த கவலை அளிக்கக்கூடிய ஒரு விஷயம் என்பதில் ஐயமில்லை, ஆனால் இந்து மதத்திலோ அல்லது வேறு எந்த மதத்திலோ நம்பிக்கை இழந்தவர்களிடம் இது எந்தப் பிரதிபலிப்பையும் ஏற்படுத்தாது. மதம் என்பது பண்டமாற்றுப் பொருள் அல்ல. இது எந்த ஒரு மதத்தையும் பின்பற்றும் ஒவ்வொரு தனிநபரும் தீர்மானிக்க வேண்டிய விஷயம். இது எந்த வடிவத்திலும் வாங்கவோ விற்கவோ கூடியதல்ல. ஆன்மா, மதம் போன்றவை ஒருவரது இரத்தத்தைக் கொண்டுதான் வாங்க முடியும். எனவே, எந்த தாழ்த்தப்பட்டோரும் இந்து மதத்தைக் கைவிட விரும்பினால் அவ்வாறு செய்வதற்கு அவனுக்கு முழு உரிமை உண்டு.

ஒவ்வொரு சீர்திருத்தவாதியும் ஆத்ம பரிசோதனை செய்து கொள்ள வேண்டும். அவனது செயல் அல்லது அவனது அண்டை அயலார்களின் செயல் மதமாற்றத்துக்கு வழி செய்ததா? அவ்வாறு வழி செய்தது என்றால், அது தவறானதாக இருக்கும் பட்சத்தில், அது மாற்றப்படவேண்டும்.

தங்களை சனாதனிகள் என்று கூறிக்கொள்ளும் ஏராளமான இந்துக்களின் நடத்தை இந்தியாவெங்கனும் ஹரிஜனங்களுக்கு மிகுந்த தொந்தரவும் தொல்லையும் கொடுப்பதாக உள்ளது

என்பது ஏற்றுக் கொள்ளப்பட்ட, ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மை. ஏற்கனவே சென்றவர்களைவிட ஏராளமான ஹரிஜனங்கள் இந்து மதத்தைவிட்டுச் செல்லவில்லை என்பது அதிசயமாகும். இந்து மதத்தின் பேரால் எத்தனை எத்தனையோ துன்ப துயரங்களுக்கும், இழிப்புகளுக்கும், பழிப்புகளுக்கும் ஆளான போதிலும் லட்சோப லட்சக்கணக்கான ஹரிஜனங்கள் இன்னும் அதனை அரவணைத்து வருகின்றனர். இந்து மதத்தின் மீது அவர்கள் வைத்துள்ள ஆழ்ந்த விசுவாசம் பற்றி இன்னும் எவ்வளவோ கூறலாம்.

ஹரிஜனங்களின் இந்த அதியற்புத விசுவாசமும் அவர்களது வருணிக்க இயலாத பொறுமையும், ஒவ்வொரு இந்துவைப் போலவே அவர்களும் நடத்தப்பட வேண்டிய அவசியத்தை, பொறுப்பை ஒவ்வொரு சாதி இந்துவுக்கும் அளித்தன. எனவே, *சவர்ணாக்கள்* இந்துப் பிணைப்பிலிருந்து வெளியேற விரும்பு பவர்களை அவர்களுக்கு லஞ்சம் கொடுத்தோ வேலை வாய்ப்புகள் அளித்தோ அல்லது உபகாரச் சம்பளங்கள் வழங்கியோ அவர்களது வழியில் குறுக்கிடக் கூடாது. மற்றொரு புறம் வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் ஹரிஜனங்களுக்கு முழுமையான நீதி வழங்கப்பட வேண்டும் என்று வலியுறுத்த வேண்டும். உண்மையில் ஹரிஜனங்களின் தேவைகளை சீர்த்திருந்தவாதிகள் முன்னுணர்ந்து இருக்க வேண்டும். அவர்கள் முறையீடு செய்யத் தொடங்கும் வரை காத்திருக்கக் கூடாது. தீண்டாமையை ஒழிப்பதற்கு, அகற்று வதற்குப் பாடுபடும் மிகப்பெரிய அமைப்பு ஹரிஜன சேவக் சங்கமாகும். தகுதிவாய்ந்த மாணவர்களுக்கு உபகாரச் சம்பளங்கள் அளிப்பதில் அது மிகவும் பரந்த கொள்கையைக் கடைப்பிடிக்கிறது. எத்தனை பேர் முடியுமோ அத்தனை ஹரிஜனங்களை அது வேலைக்கு அமர்த்திக்கொள்கிறது. எனினும் வேலையில்லாத ஹரிஜனங்களுக்கு வேலை தேடித் தரும் ஓர்அமைப்பாக அது செயல்படவில்லை. பொதுவாகக் கூறுவதானால் வேலைதேடும் ஹரிஜனங்களுக்கு அவர்கள் அதற்குத் தகுதியானவர்களாக இருந்தால், வேலை கிடைப்பதில் எந்த சிரமும் இல்லை. குடிப்பதற்கும் வீட்டு உபயோகத்துக்கும் போதிய தண்ணீர் கிடைக்காதது, பொதுப்பள்ளிக் கூடங் களிலும் ஏனைய கல்வி நிலையங்களிலும் இடம் கிடைக்காதது,

கிராமங்களில் அடிக்கடி நடைபெறும் நச்சரிப்புகள், சிறு தொல்லைகள், இவை எல்லாவற்றுக்கும் மேலாக கோவில் களில் இவர்களது வழிபாட்டுக்கு தடை இருப்பது போன்றவை தான் ஆயிரக்கணக்கான ஹரிஜனங்களுக்கு ஏற்பட்டுள்ள மிகப்பெரிய சிரமங்கள், தொல்லைகளாகும். இவை யாவும் ஏராளமான ஹரிஜனங்களின் வாழ்க்கையில் காணப்படும் கண்கண்ட எதார்த்தங்களாகும். அவர்கள் மிகப்பெருமளவில் மொத்தமாக இந்துமதத்தைக் கைகழுவுகிறார்கள் என்றால் இந்த இயலாமைகள், ஆற்றல் கேடுகள் முதலியவற்றால் அவர்கள் இந்து சமுதாயத்தின் குஷ்டரோகிகள் என இகழப்படுவதே, கறைப் படுத்தப்படுவதே இதற்குக் காரணம். இந்து மதம் மிகவும் ஆபத்தான, கொந்தளிப்பான சோதனைப் பாதையையில் சென்று கொண்டிருக்கிறது. தனிநபர்களின் மதமாற்றங் களாலோ அல்லது வெகு ஜன மத மாற்றங்களாலோ கூட அது அழியாது. மாறாக சவர்ண இந்துக்கள் எனப்படுவோர் ஹரிஜனங்களுக்குப் பாபகரமான முறையில் அடிப்படையான நீதியை மறுப்ப தாலேயே அது அழிந்துபடும். எனவே மதமாற்ற அச்சுறுத்தல் ஒவ்வொன்றும், சவர்ணாக்கள் தக்க சமயத்தில் விழித்துக் கொள்ளவில்லை என்றால் விபரீதமான விளைவுகளைத்தான் ஏற்படுத்தும் என்று அவர்களுக்குத் தரப்படும் எச்சரிக்கையாகும்.

"பொறுமையற்ற, சகிப்புத்தன்மையற்ற ஹரிஜனங்களுக்கு ஒரு வார்த்தை. உதவி நாடி அவர்கள் இந்து அமைப்புகளையோ தனி நபர்களையோ அணுகும்போது அச்சுறுத்தல் பாணத்தைப் பயன்படுத்தக் கூடாது. அவர்கள் தங்கள் தரப்பின் நியாயத்தின் மீது நம்பிக்கை வைத்திருக்க வேண்டும். எவரும் செவிமடுத்துக் கேட்கும்படியானதாக அது இருக்க வேண்டும். மதமாற்றம் என்ன பயனை அளிக்கும் என்பது பெரும்பாலான ஹரிஜனங் களுக்குத் தெரியாது. சவர்ணாக்கள் சுயநலவெறியோடு இழைத்து வரும் கொடுமைகளை அவர்கள் மௌனமாக சகித்துக் கொண்டு வருகின்றனர். அவர்கள் முறையீடு செய்தாலும் செய்யா விட்டாலும் இந்து சீர்திருத்தக்காரர்கள் அவர்கள் பால் மிகுந்த அக்கறை காட்ட வேண்டும், கவனம் செலுத்த வேண்டும். இழிவுப்படுத்தப்படுவதைத் தெரிந்து கொள்ளும் அளவுக்கும் உணர்ந்து கொள்ளும் அளவுக்கும் விஷய ஞானம் உள்ளவர்களாக அவர்கள் இருக்க வேண்டும்.

அதே போல் மதமாற்றம் என்பது என்ன என்பதைத் தெரிந்து கொண்டவர்கள் தங்களது பண்டைய மதத்தைக் கைவிட்டுச் செல்ல மனமில்லாதவர்களாக இருப்பார்கள். தங்களுக்குத் தேவையான உதவி பெற இவர்கள் தகுதியுடையவர்களாவர்; அல்லது மதத்தின்பால் சார்பில்லாதவர்கள் இந்து அரவணைப்பில் தொடர்ந்து இருந்து வருவதற்காக, சவர்ண இந்துக்களிடமிருந்து எத்தகைய உதவியும் கோராதவர்களாக இருக்கக் கூடும். எனவே மதமாற்ற அச்சுறுத்தல் காரணமாக எத்தகைய பொருளாதார உதவியும் நாடாதிருக்கும்படி விவேக மிக்க ஹரிஜனங்களை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். அதே சமயம் சீர்திருத்தக்காரர்களும் எக்காரணம் கொண்டும் அச்சுறுத்தலுக்குப் பணிந்துவிடக் கூடாது; சவர்ணா இந்துக்களிடமிருந்து ஹரிஜனங்களுக்கு நீதியும் நியாயமும் கிடைக்க அவர்கள் இடைவிடாது பாடுபட வேண்டும்.[1]

---

1. இந்திய அரசாங்க வெளியீடு மகாத்மா காந்தியின் தொகுப்புநூல்கள் பிரசுர பிரிவு,தகவல் ஒலிபரப்பு, அமைச்சகம், புதுடில்லி, தொகுதி LXII, ப. 281. மறுபதிப்பு, பக்கங்கள் 306-308.

# பின் இணைப்பு- II

## சமதா சைனிக் தளத்தின் அமைப்பு விதிகள் சைனிக்கின் பிரமாணம்

1. சமதா சைனிக் தளத்தில் சேரும் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த நான் அனைத்து ஒடுக்குமுறையிலிருந்தும், சுரண்டலிலிருந்தும் எனது வகுப்பினரை விடுவிக்கும் விழுமிய லட்சியத்துக்காக நேர்மையாக, தீரத்தோடு, கட்டுப்பாட்டோடு, உறுதியோடு போரிடும் ஒரு போராளியாக இருப்பேன் என்று ஆணை மொழியும் உறுதி மொழியும் மேற்கொள்கிறேன்.

எனது வகுப்பையும் இனத்தையும் சேர்ந்த மக்களின் நியாயமான, மனித நேய உரிமைகளைப் பாதுகாப்பதற்கு எஸ்.எஸ்.டி. தலைமையில் முன்செல்ல எப்போதும் தயாராக இருப்பேன்.

பலவீனம் காரணமாகவோ, கோழைத்தனம் காரணமாகவோ அல்லது தீயநோக்கத்தோடோ இந்த ஆணைமொழியை நான் மீறினால், என் மக்களின் நலன்களைக் காட்டிக் கொடுத்தால் தளம் என்ன தண்டனை விதிக்கிறதோ அதனை ஏற்கத் தயராக இருக்கிறேன்.

---

சமதா சைனிக் தளத்தின் மாநாடு கான்பூரில் 30, 1944ல் ஜனவரி நடைபெற்றது. திரு. பி.கே. கெய்க்வாட் மாநாட்டின் தலைவராக இருந்தார். டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் மாநாட்டில் பங்கெடுத்துக் கொண்டதோடு சொற்பொழிவு ஆற்றவும் செய்தார். இந்த மாநாட்டில் சில தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இம்மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட ஆறாம் எண் தீர்மானத்தின்படி சமதா சைனிக் தளத்தின் அமைப்பை உருவாக்குவது சம்பந்தமான விதிமுறைகளை வகுக்க தாதாசாகேப் கெய்க்வாட் என்ற திரு. பி.கே. தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது. திரு. எம்.எம். சசலேகர், எஸ்.பி. ஜாதவ், ஆர்.ஆர். பட்டேல், கே.என். வால்மீகி, ஏ.எல். கொசாரே, பி.எல். லலிங்கர் ஆகியோர் குழுவின் உறுப்பினர்களாக இருந்தனர். (ஜனதா : தேதி ஜனவரி 6, 1945.)

குழுவின் தீர்மானப்படி சமதா சைனிக் தளத்தின் அமைப்பு விதிகளின் நகல் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின் அங்கீகாரத்திற்காக 1944, டிசம்பர் 8ஆம் தேதி அவருக்கு அனுப்பி வைக்கப்பட்டது. (கைர் மோட், தொகுதி 9, பக்கம் 405). 1944 டிசம்பர் 13ஆம் தேதி டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அதைப் பெற்றுக் கொண்டார். "உங்கள் கடிதமும் சமதா சைனிக் தளத்தின் நகல் அமைப்பு விதிகளும் 1944, டிசம்பர் 13ஆம் தேதி கிடைக்கப் பெற்றேன்." (அதே நூல் பக்கம். 407)

# சமதா சைனிக் தளத்தின் அமைப்பு விதிகள்

## I. பெயரும் அமைப்பும்:

(1) இந்த ஸ்தாபனத்தின் பெயர் எஸ்.எஸ்.டி.யில் குறிப்பிட்ட படி இனிமேல் சமதா சைனிக் தளம் என இருக்கும்.

(2) சமதா சைனிக் தளம் அகில இந்திய ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்துடன் இணைக்கப்படும். சம்மேளனத்தின் நிர்வாகக் கவுன்சிலின் பரிந்துரையின் பேரில் ஒவ்வொரு நகரத்திலும், மாகாணத்திலும் சமதா சைனிக் தளத்தின் நடவடிக்கைகளை மேற்பார்க்க சம்மேளனத்தின் தலைவர் சம்மேளனப் பிரதிநிதி ஒருவரை நியமிப்பார். சமதா சைனிக் தளம் ஒவ்வொரு நகரத்திலும் மாகாணத்திலும் ஒரு மேற்பார்வையாளரின் வழிகாட்டுதலில் செயல்படும். இந்த மேற்பார்வையாளர் நியமிக்கப்படுபவர் ஆவார்.

## II. குறிக்கோள்களும் நோக்கங்களும்:

(1) இனம், மதம், ஜாதி, பால் அல்லது வகுப்பு ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்துள்ள அனைத்து ஏற்றத்தாழ்வு களையும் அகற்றுவதற்குப் பாடுபடுவதும் அனைவருக்கும் சுதந்திரம், சமத்துவம், என்ற அடிப்படையில் அமைந்த ஒரு சமுதாயத்தை நிர்மாணிப்பதற்குப் பாடுபடுவதும் சமதா சைனிக் தளத்தின் குறிக்கோளாக இருக்கும்.

(2) இந்தக் குறிக்கோளை எய்துவதற்கு:

(1) தாழ்த்தப்பட்ட இனங்களைச் சேர்ந்த இளைஞர்களை சமதா சைனிக் தளம் ஒன்றுபடுத்தி தனது பாதையின் கீழ் கொண்டுவர வேண்டும்.

(2) தாழ்த்தப்பட்ட வகுப்பினரிடையே குறிப்பாக இளைஞர் களிடையே அனைத்து சமூக, கலாசார நடவடிக்கை களையும் ஏனைய நடவடிக்கைகளையும் சமதா சைனிக் தளம் ஊக்குவித்து வளர்க்க வேண்டும். அவர்கள்

மனதில் சுய மரியாதை உணர்வையும் சுய சார்பு உணர்வையும் மற்றும் சுய தியாக உணர்வையும் இது ஊட்டி வளர்க்கும்.

(3) சமதா சைனிக் தளம் தனது குறிக்கோள்களையும் நோக்கங்களையும் வளர்த்து வலுப்படுத்த உதவும் அனைத்து அமைப்புகளுடனும் இயக்கங்களுடனும் ஒத்துழைக்க வேண்டும்.

## III. உறுப்பினர்களின் தகுதி;

மேற்கண்ட நோக்கங்களையும் குறிக்கோள்களையும் ஏற்கும் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த 18 வயதுக்கு மேற்பட்ட எவரும் வருடச் சந்தாத் தொகையாக பன்னிரண்டு அணா செலுத்தி சமதா சைனிக் தளத்தில் சேரலாம்.

## IV. பயிற்சி:

(1) சமதா சைனிக் தளப் பயிற்சி உடல் வகை, அறிவு வகை, மற்றும் ராணுவ வகையைச் சேர்ந்ததாக இருக்கும்.

(2) பயிற்சி முகாம்கள்,பள்ளிக் கூடங்கள், வகுப்புகள், சொற்பொழிவுகள், விவாதங்கள், நூலகங்கள் மற்றும் அந்தந்தக் காலத்திற்கேற்றவை எனக் கருதப்படும் இதர நடவடிக்கைகளை சமதா சைனிக் தளம் அவ்வப்போது ஏற்பாடு செய்யும்.

(3) அகில இந்திய சமதா சைனிக் தளத்தின் கிளைகள் எல்லா இந்திய மாகாணங்களிலும் செயல்படும். இந்திய சமஸ்தானங்களிலும் எங்கொல்லாம் சாத்தியமோ அங்கெல்லாம் கிளைகள் நிறுவப்படும்.

ஒவ்வொரு மாகாணக்குழுவும் தனது மாவட்டக் குழுக்களையும் ஒவ்வொரு மாவட்டக் குழுவும் தனது நகரத்தில் நகர மற்றும் கிராமக் குழுக்களையும் அமைக்கும்.

(4) ஒரு நகரத்தில் அல்லது கிராமத்தில் நடைபெறும் சமதா சைனிக் தளத்தின் பொதுச்சபை அவையவற்றின் தகுதிப் பிரகாரம் நகர அல்லது கிராமக் குழுக்களைத் தேர்ந் தெடுக்கும்; ஒவ்வொரு குழுவிலும் 5 உறுப்பினர்களும் ஒரு தலைவரும், இரண்டு செயலாளர்களும் இருப்பர். மேலும் கீழ்க்கண்ட முறையில் மாவட்ட மாநாட்டுக்கான பிரதி நிதிகளும் தேர்ந்தெடுக்கப்படுவர்: - 1 முதல் 25 உறுப்பினர் களுக்கு ஒரு பிரதிநிதி; 25 முதல் 50 உறுப்பினர்களுக்கு இரண்டு பிரதிநிதிகள் இத்யாதி

(5) மாவட்ட மாநாடு 10 உறுப்பினர்களையும் ஒரு தலைவரையும் இரண்டு செயலாளர்களையும் தேர்ந் தெடுக்கும். மற்றும் மாகாண மாநாட்டுக்கான பிரதிநிதி களும் பின்கண்ட முறையில் தேர்ந்தெடுக்கப்படுவர்:-

மாவட்ட மாநாட்டுக்கு 5 பிரதிநிதிகள், மாகாண மகாநாட்டுக்கு ஒரு பிரதிநிதி. மாவட்டப் பிரதிநிதிகள் ஐந்துக்குமேல் பத்துவரை; மாகாண மாநாட்டுக்கு இரண்டு பிரதிநிதிகள்.

(6) மாகாண மாநாடு தகுதி அடிப்படையில் 20 உறுப்பினர் களையும் ஒரு தலைவரையும், இரண்டு செயலாளர் களையும் அகில இந்திய மாநாட்டுக்கான ஒரு பிரதிநிதி யையும் தேர்ந்தெடுக்கும். மாகாண மாநாட்டுக்கான இத்தகைய பிரதிநிதிகளின் எண்ணிக்கை ஒவ்வொரு மாகாணத்திலும் உள்ள மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் 5 சதவிகிதத்துக்கு மேல் இருக்கக் கூடாது.

(7) சமதா சைனிக் தளத்தின் அகில இந்திய மாநாடு ஓர் அகில இந்தியக் கவுன்சிலைத் தேர்ந்தெடுக்கும்; ஒரு தலைவர், ஒரு துணைத் தலைவர், ஒரு பொதுச் செயலாளர், இரண்டு கூட்டு செயலாளர்கள் மற்றும் ஒவ்வொரு மாகாணத்தி லிருந்தும் அகில இந்திய மத்தியக் கமிட்டியால் தேர்ந் தெடுக்கப்பட்ட ஓர் உறுப்பினர் ஆகியோர் இதில் இடம் பெறுவர்.

(8) அகில இந்திய சமதா சைனிக் தளத்துடன் இணைய கட்டணமாக வருடம் ரூ 25-ம் தங்கள் வருடாந்தர மொத்த வருமானத்தில் 5 சதவிகிதமும் அளிக்க வேண்டும்.

(9) சமதா சைனிக் தளத்தின் ஓர் அகில இந்திய மாநாடு ஒவ்வோர் ஆண்டும் குறைந்த பட்சம் ஒரு முறையாவது கூட வேண்டும்.

## V. அமைப்பு முறை

1. (a) 12 (பன்னிரண்டு சைனிக்குகள் ஒரு செக்ஷன்)

   பன்னிரண்டு சைனிக்குகள் ஒரு செக்ஷனாக இருப்பர். இத்தகைய செக்ஷனால் தேர்ந்தெடுக்கப்படும் இரண்டு தலைவர்கள் செக்ஷன் தலைவர் ஒன்று, செக்ஷன் தலைவர் இரண்டு என்று அழைக்கப்படுவர்.

2. (b) 24 (2 செக்ஷன்கள் - பிளாட்டூன்)

   இத்தகைய இரண்டு செக்ஷன்கள் ஒரு பிளாட்டூனாகின்றன. செக்ஷன் தலைவர்களால் தேர்ந்தெடுக்கப்படும் பிளாட்டூன் தலைவர் பிளாட்டூன் தலைவர் என அழைக்கப்படுவர்.

3. (c) 96 (நான்கு பிளாட்டூன்கள் ஒரு கம்பெனி)

   இத்தகைய நான்கு பிளாட்டூன்கள் ஒரு கம்பெனி என அழைக்கப்படும். பிளாட்டூன் தலைவர்களால் தேர்ந்தெடுக்கப்படும் கம்பெனி தலைவர்கள் கம்பெனி கமாண்டர் எனப்படுவார்.

4. (d) 384 ( நான்கு கம்பெனி கமாண்டர்கள்- ஒரு பட்டாலியன்)

   இத்தகைய நான்கு கம்பெனி கமாண்டர்கள் ஒரு பட்டாலியனை உருவாக்குவர். பட்டாலியன், கம்பெனி கமாண்டர்களால் தேர்ந்தெடுக்கப்படும் தலைவர் லெப்டினெண்ட் என்று அழைக்கப்படுவார்.

5 (e) 1152 (மூன்று பாட்டாலியன் - ஒரு ரெஜிமெண்ட்)

   இத்தகைய மூன்று பட்டாலியன்கள் ஒரு ரெஜிமெண்டை தோற்றுவிக்கும்; லெப்டினெண்டுகளால் தேர்ந்தெடுக்கப்படும் தலைவர் ஜி. ஓ. சி. எனப்படுவர்.

6. (f) எல்லா மாவட்டங்களையும் மாகாணங்களையும் சேர்ந்த இத்தகைய 2500 ஜி. ஓ. சி.கள் ஒரு டிவிஷனை உருவாக்கும். இந்த டிவிஷனுக்கு தேர்ந்தெடுக்கப்படும் தலைவர் அகில இந்திய கமாண்டர் - இன். சீப் என அழைக்கப்படுவார்.

**தளத்தின் கூட்டம்:**

(1) கோரம்:- ச. ச. தளம் குறைந்த பட்சம் ஆறு மாதங்களுக்கு ஒரு முறை கூட வேண்டும்; அதன் அமைப்பு முறைக்கு ஏற்ப அவ்வப்போது விதி முறைகளை வகுத்துக் கொள்ள வேண்டும்.

(2) ஆறு மாதங்களுகசு ஒரு முறை கூடும் கூட்டத்தேதிகளை தலைவர் நிர்ணயிப்பார். அவர் உசிதமாக கருதும் தேதியிலும் மற்றும் உறுப்பினர்களில் மூன்றிலொரு பங்கினர். எழுத்துப் பூர்வமாகக் கேட்டுக் கொள்ளும் தேதியிலும் கூட்டங்கள் கூட்டப்படும்; இத்தகைய வேண்டுக்கோள் வந்த இருபது நாட்களுக்குள் விசேடக் கூட்டம் கூட்டப்படும்.

(3) ஆறுமாதங்களுக்கு ஒருமுறை கூடும் கூட்டத்துக்கு 15 நாள் முன் அறிவிப்பும் விசேடக் கூட்டத்துக்கு பத்து நாள் முன் அறிவிப்பும் தந்து இத்தகைய கூட்டம் நடைபெறும் நேரம், இடம் விவாதித்து முடிவு செய்யப்படும். பொருள் முதலிய வற்றை உறுப்பினர்களின் சுற்றுக்கு விடப்பட வேண்டும்.

(4) ஒரு கூட்டத்தில் எந்த சமயத்திலும் ஆரம்பம் முதல் கடைசிவரை மொத்த உறுப்பினர்களில் மூன்றிலொரு பங்குக்கும் குறைவானவர்கள் கலந்து கொண்டால் கூட்டத் தலைவர் தம் உசிதம் போல் அந்தக் கூட்டத்தை மறுநாளைக்கோ அல்லது வேறொரு நாளைக்கோ குறிப்பிட்ட நேரத்துக்கு ஒத்திவைக்கலாம். இத்தகைய கூட்டத்தில் விவாதிக்கப்படவிருந்த விஷயத்தை இந்த ஒத்திவைப்புக் கூட்டத்தில் விவாதிக்கலாம். இதற்குக் கோரம் இருக்க வேண்டும்; இல்லையென்றால் கோரம்

இருந்தாலும் இல்லாவிட்டாலும் வேறு எந்த ஒத்தி வைப்புக் கூட்டத்திலும் இது குறித்து விவாதிக்கலாம்.

(5) ஒவ்வொரு கூட்டத்துக்கும் தலைவரோ அல்லது அவர் வரவில்லை என்றால் உப தலைவரோ தலைமை வகிக்கலாம். துணை தலைவரும் வரவில்லை என்றால் கூட்டத்துக்கு வந்திருப்போரில் ஒருவர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் படலாம்.

(6) எல்லாப் பிரச்சினைகளும் கூட்டத்துக்கு வந்திருக்கும் உறுப்பினர்களின் பெரும்பான்மையோரின் வாக்குகளால் தீர்மானிக்கப்படும்; வாக்குகளின் எண்ணிக்கை சரி சமமாக இருந்தால் தலைவர், துணைத்தலைவர், அல்லது கூட்டத்தலைவரின் இறுதி வாக்கால் முடிவு செய்யப்படும்

## VII. நடைமுறைப் பணிகள்:

| | | |
|---|---|---|
| திங்கள் | : | அறநெறி |
| செவ்வாய் | : | விளையாட்டுகள் மற்றும் உடற்பயிற்சி |
| புதன் | : | ராணுவ உடற்பயிற்சி |
| வியாழன் | : | விளையாட்டுகள் மற்றும் உடற்பயிற்சி |
| வெள்ளி | : | முதலுதவி பயிற்சி |
| சனி | : | ராணுவ உடற்பயிற்சி |
| ஞாயிறு | : | அரசியல் மற்றும் சமூக போதனை |

## VII. கட்டுப்பாடு:

எந்த ஒரு சைனிக்கோ அல்லது அதிகாரியோ புகைப் பிடித்தல், மது அருந்தல், சட்டப்படியான ஆணை களுக்குக் கீழ்ப்படியாமை, வேறு ஏதேனும் குறும்பு செய்தல் போன்ற குற்றங்கள் செய்தால் ஒரு தடவை எச்சரிக்கை செய்யப்படுவார்; இவ்வாறு எச்சரிக்கை

செய்தும் இத்தகைய ஒழுங்கீனத்தை அவர் தவிர்க்க வில்லை என்றால் அவரது சீருடைகளும் அவரது பதவி அந்தஸ்தும் திரும்பப் பெறப்படும். தளத்திலிருந்தும் அவர் நீக்கப்படுவார்.

## IX. சீருடை:

உடை சம்பந்தமாக சைனிக்குகளும் தளஅதிகாரிகளும் பின்கண்ட விதிகளைக் கடைப்பிடிக்க வேண்டும்:

| | | |
|---|---|---|
| சைனிக் | : | அரை காக்கிச் கால் சட்டை |
| | | அரை காக்கிச் சட்டை |
| | | மடிப்புத் தொப்பி |
| | | ஊதா நிற பாதரட்சைகள் அல்லது பதானி குறுங்காலுறைகள் (மிதியடிகள்) |
| | | பிரம்பு (4 ½ அடி நீளம்) |
| அதிகாரியல்லாதோர் | : | அறை காக்கி கால் சட்டை |
| | | அரை காக்கி சட்டை |
| | | பழுப்பு வண்ணக் காலணி |
| | | கம்பளி காக்கி குறுங்காலுறைகள் காக்கி தொப்பி |
| | | ஒரு பிரம்பு, சீழ்க்கை, காக்கி கட்டுத்துணி |
| உயர் அதிகாரி | : | மேலே கண்டவற்றுடன் புஷ்கோட் |

## X. தளத்தின் நிதிகள்;

(1) தளத்தின் எல்லா நிதிகளும் அகில இந்திய ஷெட்யூல்டு ஜாதிகள் சம்மேளனத்தாலும் ஜி. ஓ. சி. யாலும் நியமிக்கப் பட்ட மேலாளரால் அங்கீகரிக்கப்பட்ட வங்கியிலோ அல்லது வங்கிகளிலோ சமாதான சைனிக் தளத்தின் பெயரில் பாதுகாப்பாகப் போட்டுவைக்கப்படும். ஜி. ஓ. சி.

யும் தளத்தின் பொதுச் செயலாளரும் இதனை நிர்வகிப்பர், பயன்படுத்துவர்.

(2) சமதா சைனிக் தளத்தின் எல்லாக் கிளைகளும் அவை யவற்றின் மாகாணங்களிலோ அல்லது மாவட்டங் களிலோ உள்ள வங்கிகளில் எதையேனும் தேர்ந்தெடுத்து அவற்றில் சமதா சைனிக் தளத்தின் பெயரில் எல்லா நிதிகளையும் சேமித்து வைக்க வேண்டும். பொது சபையால் அங்கீகாரம் அளிக்கப்பட்ட மூன்று பேர் இந்த நிதிகளை நிர்வகிக்க வேண்டும்.

## XI. கொடி:

சமதா சைனிக் தளத்தின் கொடி நான்கு அடி நீளமும் 2 ½ அடி அகலமும் கொண்டதாக இருக்கும். கொடி முழுவதும் நீல நிறமுள்ளதாக இருக்கும்; உச்சி இடதுபுற மூலையில் வெண்மை நிறத்தில் 11 நட்சத்திரங்கள் பொறிக்கப்பட்டிருக்கும். கொடியின் மத்தியில் வெள்ளை நிறத்தில் சூரிய உருவம் பொறிக்கப்பட்டிருக்கும். சூரியனுக்கும் கீழே நீல வண்ணத்தில் எஸ். சி. எப். என்ற எழுத்துகள் எழுதப்பட்டிருக்கும் கொடியின் அடியில் வலது மூலையில் எஸ். எஸ். டி. என்னும் எழுத்துகள் வெள்ளை நிறத்தில் இடம் பெற்றிருக்கும்.

இந்தக் கொடி சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம், என்னும் இலட்சியத்தையும் நமது இலட்சியத்தை எய்த நடைபெறும் போராட்டத்தையும் பிரதிபலிக்கும்.

---

# பின் இணைப்பு - III

## "மனந்திறந்த கூற்று"

1944 செப்டம்பர் 22ஆம் தேதி மாலை டாக்டர் அம்பேத்கருக்கு சென்னை நகரசபை பாராட்டுரை ஒன்று வாசித்தளித்தது. இதன் மூலம் சென்னை தன்னை கௌரவித்துக் கொண்டது எனலாம். நூற்றாண்டு நூற்றாண்டு காலமாக சாதாரண குடிமை உரிமைகள் பறிக்கப்பட்ட ஒரு மாபெரும் சமுதாயத்தின் நேர்நிகரற்ற தலைவராகத் திகழ்பவர் டாக்டர் அம்பேத்கர். தமது அரும்பெரும் சாதனைகள் மூலம் அஞ்சா நெஞ்சமிக்க தலைவர் என்று புகழ் பெற்றவர். சின்னஞ்சிறு விஷயங்களில் நிலவும் கட்சி வேறுபாடு களைக் கடந்து எல்லோரது மதிப்புக்கும் மரியாதைக்கும் உரியவர் டாக்டர் அம்பேத்கர். இத்தகைய நனி சிறந்த தலைவருக்கு நகர சபை வரவேற்புரை வாசித்தளிப்பதை ஓர் அரசியல் கட்சி - காங்கிரஸ் - எதிர்ப்பதும் அதன் உறுப்பினர்கள் அந்த நிகழ்ச்சியில் கலந்து கொள்ளாது பகிஷ்கரிப்பதும் மிகவும் வருந்தத்தக்கதாகும். காங்கிரசின் இத்தகைய விபரீதமான விந்தையான போக்கு ஒன்றும் புதிதோ, வியக்கத்தக்கதோ அல்ல. சர்வாதிகார முறைகளால் வழிகாட்டப் பட்ட ஒரு கட்சி, பொது வாழ்க்கையில் தகைமை, பண்பு நலம் ஆகியவற்றை போற்றிப் பாராட்டுவதிலிருந்தும் வெகுதூரம் விலகி நிற்கும். ஒரு கட்சி ஏனைய அரசியல் தலைவர்கள் பால் தனக்குள்ள பகைமையை, வெறுப்பைக் காட்டும் வாய்ப்பை கைவிடும் என்று எவரும் எதிர்ப்பார்க்க முடியாது. எனினும் சூரியனை எங்கேயாவது முறம் கொண்டு மூடிவிட முடியுமா? முடியாதல்லவா! அதே போல் அம்பேத்கருக்கு அளிக்கப்பட்ட வரவேற்பும் மிகச் சிறப்பாக அமைந்தது.

தமக்கு அளிக்கப்பட்ட நகர சபை வரவேற்புக்கு டாக்டர் அம்பேத்கர் பதிலளித்துப் பேசினார். அவரது உரை வாய்மையும் நேர்மையும் கரவின்மையும் மிக்கதாக, உணர்ச்சிப் பிழம்பாக அமைந்திருந்தது. அவர் தெரிவித்த கருத்துகளும் நமது தேச மக்கள் பெரும்பாலோரின் இதயத் துடிப்பை வெளிப்படுத்துவதாக இருந்தன. அரசியல் சீர்திருந்தங்கள் பரிசீலிக்கப்பட்டுவரும் கட்டத்தில் தேச சுதந்திரம் வலியுறுத்தப்பட்டு வரும் சந்தர்ப்பத்தில் பல்வேறு

அம்சங்களை உரிய முறையில் கணக்கில் எடுத்துக் கொள்வதும் அவசியம். இத்தகைய சூழ்நிலையில் கடந்த காலப் படிப்பினைகளைக் கணக்கிலெடுத்துக் கொள்வது முற்றிலும் இயல்பே. இந்தப் படிப் பினைகளைக் குறிப்பிட்டு டாக்டர் அம்பேத்கர் கூறியதாவது: இந்த நாட்டில் எது எப்படியிருந்தாலும் பிராமணர்கள்தான் ஆளும் சமூகத்தினராக உள்ளனர். அவர்கள்தான் முன்னுக்கு வந்துள் ளார்கள். வேறு யாருமல்ல. ஏழு மாகாணங்களில் ஒவ்வொன்றிலும் பிராமணர்கள்தான் பிரதம மந்திரிகளாக இருக்கின்றனர், அமைச்ச ரவைகளிலும் பாதிப்பேர் பிராமணர்கள். இந்த நாட்டில் ஒரே ஒரு சமூகம்தான் ஆளும் சமூகமாக இருந்து வருகிறது என்பதை தேர்தல்கள் மெய்ப்பித்துள்ளன. பிராமண சமூகம்தான் அது. அமைச்சரவையில் ஏதேனும் மாற்றம் ஏற்படும்போதுகூட ஒரு பிராமணன்தான் பிரதம மந்திரியாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார் என்பதை நமது வாசகர்கள் கவனத்தில் கொள்ள வேண்டும். இவ்வாறு ஓர் அமுராத் இடத்துக்கு இன்னொரு அமுராத்தான் வரவேண்டும் என்ற மரபு அழுத்தம் திருத்தமாகக் கடைப்பிடிக்கப் பட்டு வருகிறது. காங்கிரஸ் நாடாளுமன்றக் குழுவை அமைக்கும் முறைகூட ஆளும் வர்க்கத்திடம்தான் அதிகாரம் இருக்க வேண்டும் என்பதை உறுதி செய்யும் சூழ்ச்சியாகவே இருக்கிறது. காங்கிரஸ் வேட்பாளர்களைத் தேர்ந்தெடுப்பதில்கூட இறுதி அதிகாரம் படைத்தவை மாகாண காங்கிரஸ் கமிட்டிகளல்ல, நாடாளுமன்றக் குழுவின் தலைவருக்குத்தான் இதில் இறுதி அதிகாரம் உள்ளது. இன்னும் சொல்லப்போனால் மாகாணக் கமிட்டிகளின் தலைவர் களும்கூட இந்த விஷயத்தில் எதுவும் செய்ய முடியாது. திரு.ராஜகோபாலச்சாரி போன்ற காங்கிரஸ் உறுப்பினர்தான் இந்தப் பரிந்துரைகளின் அடிப்படையில் நாடாளுமன்ற போர்டின் இறுதி அங்கீகாரத்தைப் பெறமுடியும். இத்தகைய சூழ்நிலைமைகளில் பிராமணரல்லாதவர்கள், அவர்கள் என்னதான் பெரிய படிப்புகள் படித்துப் பட்டங்கள் பெற்றிருந்தாலும், அடக்க ஒடுக்கமானவர்கள், பணிந்து போகக்கூடியவர்கள என்பதை நிரூபிக்கவில்லை என்றால் வேட்பாளர்களாக நியமிக்கப்படக்கூட வாய்ப்பற்றவர்களாக இருப்பதில் வியப்பு என்ன இருக்கிறது? இந்திய சட்ட மன்றத்தில் காங்கிரஸ் எதிர்க்கட்சித் தலைவராக இருந்த டாக்டர் ராமலிங்க ரெட்டி போன்றவர் வேட்பாளராகத் தேர்ந்தெடுக்கப்படாததும் அதே சமயம் காங்கிரஸ் தஸ்தாவேஜுகளில் பெயரும் புகழும் மறைந்து கிடந்த நூற்றுக்கணக்கானோர் திடீரென வெளிச்சத்துக்கு

வந்து வேட்பாளர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதும் நம் நாட்டு மக்களை வியப்பிலாழ்த்துமா?

வேட்பாளர்களைத் தேர்ந்தெடுப்பதிலும்கூட அதிகாரம் நாடாளுமன்ற குழுக்களிடம்தான் உள்ளது. இவ்வாறிருக்கும்போது பிரதமர்களைத் தேர்ந்தெடுக்கும் விஷயம் முற்றிலும் ஒரு சிலர் கைகளில் ஒப்படைக்கப்பட்டிருப்பதில் வியப்பு என்ன இருக்கிறது? இயல்பாகவே எல்லாப் பிரதம அமைச்சர்களும் பிராமணர்கள். திரு. ராஜகோபாலச்சாரி, திரு. பண்டித பந்த, திரு. பர்தோலாய், பண்டிட் சுக்லா முதலானோர் குறிப்பிட்ட இனத்தைச் சேர்ந்தவர்கள். எனவே அவர்கள் தங்கள் பங்குக்கு அமைச்சரவையில் குறைந்த பட்சம் 50 சதவிகிதம் ஆளும் இனத்தைச் சேர்ந்ததாக இருக்கும்படிப் பார்த்துக் கொண்டனர்.. நீங்கள் வாக்குரிமையை எவ்வளவு வேண்டுமானாலும் விஸ்தரிக்கலாம். நீங்கள் வயதுவந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கலாம். வளர் இளம் தலைமுறையினருக்குக்கூட வாக்குரிமை அளிக்கலாம். நீங்கள் குழந்தைகளுக்குக்கூட வாக்குரிமை அளிக்கலாம். எனினும் முன்னிலைக்கு வருவது ஆளும் இனமாகவே இருக்கும். அமைச்சரவைகளில் ஏறத்தாழ ஐம்பது சதவிதத்தினர் பிராமணர்களாக இருப்பது மட்டுமன்றி, எல்லையற்ற அதிகாரமும் செல்வாக்கும் படைத்த இலாகாக்கள் அனைத்தும் அவர்கள் வசமே இருக்கும். நமது ராஜதானியையே எடுத்துக் கொள்ளுங்கள். இங்கு என்ன பார்க்கிறோம்? நிதி, காவல்துறை, அரசுப் பணிகள், வருவாய்த் துறை, மருத்துவம், பொது சுகாதாரம், தொழில் துறை, சமய அறக்கட்டளைகள் முதலிய அனைத்தும் அவர்கள் வசமே உள்ளன. இது ஒரு புறமிருக்க, பிராமணரல்லாத அமைச்சர்களுக்கும் முஸ்லீம் அமைச்சர்களுக்கும் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த அமைச்சர்களுக்கும் ஏதோ எலும்புத் துண்டுகள் போல் ஒரு சில இலாகாக்கள் அளிக்கப்படுகின்றன; இவற்றில் கூட பிரதமரின் அதிகாரமே கொடிகட்டிப் பறக்கிறது. அவற்றின் மீது அவர் நேரடி அதிகாரம் செலுத்துவதோடு என்ன கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதையும் அவரே நிர்ணயிக்கிறார். எல்லா அதிகாரங்களும் ஒரு சிறு சமூகத்தின் பிரதிநிதிகளின் கைகளில் குவிந்திருக்கும். இந்த நடைமுறை இதர ஆறு மாகாணங்களிலும் கடைப் பிடிக்கப்படுகிறது. ஆக ஜனநாயகக் கட்சி என்ற போர்வையில் பேஷ்வாஸ் வர்க்கத்து வழித்தோன்றல்களின் ஆட்சிதான் நடைபெறுகிறது. இந்தக் கொள்கையின் தவிர்க்க முடியாத விளைவாக ஏனைய தேசிய

இனங்கள் அடிமைப்படுத்தப்பட்டு வருகின்றன. இதற்கு ஈனஸ்வரத்தில் எதிர்ப்புக்குரல் எழுப்புவர்கள்கூட பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் உதவி கொண்டு அடக்கப்பட்டு, ஒடுக்கப்பட்டு வருகின்றனர். இந்த ராஜதானியில் ஹிந்தி எதிர்ப்பாளர்களை ஒடுக்குவதற்கும், மத்திய மாகாணத்திலும் பம்பாயிலும் வித்யா மந்திரை நிறுவுவதற்கும் குற்றவியல் திருத்தச் சட்டத்தை அமல்படுத்துவதற்கு மேற்கொள்ளப் பட்ட கொடிய ஒடுக்குமுறை ஜனநாயகம் என்ற பெயரால் நடக்கும் அட்டூழியத்தைத் தோலுரித்துக் காட்டுகின்றன.

எனவே, டாக்டர் அம்பேத்கர் விடுத்துள்ள எச்சரிக்கை சரியானதும் அவசியமானதுமாகும். ஒரு நாட்டிலுள்ள ஆளும் வர்க்கத்துக்குப் பொறுப்பு உணர்வு இருக்க வேண்டும் அப்போது தான் இந்த நாட்டை ஆளும் பொறுப்பை அந்த வர்க்கத்தின் பொறுப்புணர்வின் அடிப்படையில் தீர்மானிக்கப்பட வேண்டும் என்பதை நாம் அனைவரும் மறந்து விட்டோம். ஆளும் வர்க்கத்தின் கண்ணோட்டம் யாது? அதன் சித்தாந்தம் என்ன? அது எதில் நம்பிக்கை வைத்துள்ளது? இந்தக் கேள்விகளுக்குப் பதில் அளித்து டாக்டர் அம்பேத்கர் திட்டவட்டமாக தெள்ளத் தெளிவாகக் கூறுவதாவது: படிநிலையில் அமைந்த ஏற்றத் தாழ்வை ஆதரிக்கும் நாட்டில் இருந்தால், நீங்கள் இன்னொரு மனித ஜீவனைத் தொடக் கூடாது என்ற சித்தாந்தத்தை அது கொண்டிருந்தால், ஒரு குறிப்பிட்ட வர்க்கத்துக்குத்தான் கல்வி கற்கும் உரிமை உண்டு, மற்றவர்களுக்கு அந்த உரிமை இல்லை என்று அது நம்பினால், குறிப்பிட்ட வர்க்கத்துக்குதான்கல்வி உண்டு மற்றவர்களுக்கு அந்த உரிமை இல்லை என்று அது எண்ணினால், ஒரு வர்க்கத்துக்குத்தான் செல்வ செழிப்போடு, வளத்தோடு, நலத்தோடு வாழ உரிமை உண்டு, மற்ற வர்க்கத்துக்கு அடிமையாக வாழவும் அந்த அடிமைத்தனத்திலேயே செத்து மடியவும்தான் உரிமை உண்டு என்று ஆளும் வர்க்கம் கருதினால் என்ன நடைபெறும்? ஒரு தேசிய அரசாங்கம் அமைக்கப் பட்டு அது ஆளும் வர்க்கத்தின் கைகளுக்கு மாறினால் இத்தகைய ஒரு தேசிய அரசாங்கம் இப்போதைய இந்திய அரசாங்கத்தை விட அது சிறப்பானதாக இருக்கும் என்று நீங்கள் கருதுகிறீர்களா? இந்த ஐயங்கள் ஒன்றும் கற்பனையானவை அல்ல. மாறாக அவை கடந்த காலத்தின் மிகவும் கசப்பான, வெறுப்பூட்டும் அனுபவங்களையும் இன்றைய மாசடைந்த துயரார்ந்த எதிர்ப்புகளையும் அடிப் படையாகக் கொண்டவை. ஆளும் வர்க்கத்துக்கு வெகுஜனங்களின் ஆதரவு, அனுதாபம் மிகவும் குறைவு, ஒரு வகையில் அறவே இல்லை

என்று கூடக் கூறலாம். இந்த உண்மையை மூடி மறைப்பதில் அர்த்தமில்லை. புகழார்ந்த டாதோஷின் சொற்களில் கூறுவதானால் சொல் வன்மை வாய்ந்த அவர்களது பேச்சாளர்கள் ஒரு பர்க் அல்லது கோப்டென் பாணியில் உணர்ச்சி பொங்க, தேனொழுகப் பேசலாம். ஆனால் அவர்களது செயல்கள் நாவன்மைமிக்க அவர்களது பேச்சுகளைப் பொய்யாக்கி விடும் கல்வியில் அவர்களுக்குள்ள ஆர்வம் அவர்களது சொந்த இனத்தில் கிட்டும் வாய்ப்பு வசதிகளைப் பொறுத்து ஒரு வரையறைக்குப்பட்டதால் உத்தியோகமும் வேலைகளும் அவர்களது உற்றார் உறவினர்களுக்கு மிகவும் பயனளிக்கக் கூடியவையாதலால், வேலைகளுக்காகவும் உத்தி யோகங்களுக்காகவும் அவர்களது போராட்டம் மிகவும் உக்கிர மானதாக இருக்கும். அவர்களது சுயாட்சி கோரிக்கையும் அதற்காக அவர்கள் நடத்தும் போராட்டமும் அவர்களது ஆட்கள் அதிகாரத்தில் இருப்பதற்கு உதவும் வகையில் மிகவும் தீவிரமாக இருக்கும். இத்தகைய நிலை ஏற்பட வாய்ப்பில்லாத பட்சத்தில் அவர்கள் ஓர் அந்தர் பல்டி அடிப்பார்கள்; 93வது பிரிவை அமல்படுத்த வேண்டும் என்று கோருவார்கள். தற்போதைய வங்காள அமைச்சரவையைப் பதவி இறக்கம் செய்த 93வது பிரிவின் படி அரசாங்கம் அமைக்க வழிவகுக்கும்படி டாக்டர் சியாம பிரசாத் முகர்ஜி வலியுறுத்தியதன் மூலம் அவர் தமது சொந்தக் கருத்துகளையோ அல்லது விருப்பத்தையோ அவர் இவ்வகையில் எவ்விதத்திலும் வெளிப்படுத்தவில்லை. அவர் இவ்வகையில் எவ்விதத்திலும் விதி விலக்கல்ல. எதிர்கால அரசியலைப்புச் சட்டத்தை உருவாக்கும் போது பல்வேறு தேசிய இனங்களும் இந்த உண்மைகளை கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும்; இந்தியாவின் அரசியல் எதிர்காலம் அடிமைத்தனம் எனும் சாக்கடலின் பழத்தை நமக்கு வழங்குவதாக இருக்கக்கூடாது. ஆளும் வர்க்கத்தை மீண்டும் பதவியில் அமர்த்தி மீண்டும் அதிகார வர்க்க ஆட்சிக்கு வழிவகுக்கக்கூடாது. டாக்டர் அம்பேத்கர் தமது ஒளிவுமறைவற்ற, தெள்ளத் தெளிவான உரையின் மூலம் இந்தியாவின் சுதந்திரத்துக்கும் ஒளிமயமான அதன் எதிர்காலத்துக்கும் ஒரு மகத்தான சேவை புரிந்துள்ளார். அதற்காக அவருக்கு நமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்."[1]

---

1. லிபரேட்டர் 23. - 9 - 1944 தேதியிட்ட இதழ்
மறுபதிப்பு கைர்மோட் தொகுதி 9,பக். 344-348.

